டாக்டர் பாபாசாகேப்

# அம்பேத்கர் :

## பேச்சும் எழுத்தும்

நூல் தொகுப்பு :

தொகுதி 18



டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர்

தோற்றம்: ஏப்ரல் 14, 1891 பரிநிர்வாணம் : டிசம்பர் 6, 1956

''சமூக ஜனநாயகமும் பொருளாதார ஜனநாயகமும் அரசியல் ஜனநாயகத்தின் நரம்பும் நாளமும் ஆகும்; இந்த நரம்பும் நாளமும் உறுதியாக இருந்தால்தான் உடல் வலு மிக்கதாக, ஆரோக்கியமானதாக இருக்கும். ஜனநாயகம் என்பது சமத்துவத்துக்கு மற்றொரு பெயர். நாடாளுமன்ற ஜனநாயகம் சுதந்திர தாகத்தை, விழைவை கிளர்த்தி விட்டது என்பதில் ஐயமில்லை. ஆனால் சமத்துவத்துக்கு ஆதரவாக ஒருபோதும் தலையசைத்தது கூட இல்லை. சமத்துவத்தின் முக்கியத்துவத்தை அது உணரத் தவறிவிட்டது. அது மட்டு மல்ல, சுதந்திரத்துக்கும் சமத்துவத்துக்கும் இடையே ஒரு சமநிலையைத் தோற்றுவிப்பதற்குக் கூட அது, எத்தகைய முயற்சியையும் எடுத்துக் கொள்ளவில்லை. அதன் விளைவாக சுதந்திரம் சமத்துவத்தை விழுங்கி ஏப்பம் விட்டுவிட்டது; அது மட்டுமன்று, இன்னும் எத்தனை எத்தனையோ ஏற்றத் தாழ்வுகள் தோன்றவும் வழிவகுத்து விட்டது.''

*- டாக்டர் பாபா சாகேப் அம்பேத்கர்,*
தொழிலாளர்களும் நாடாளுமன்ற ஜனநாயகமும்

This Volume XVIII in Tamil forms the First part of the English Edition Volume 10 Part I of Dr. Babasaheb Ambedkar - Writings and Speeches - published by the Education Department, Government of Maharashtra, 1991.

முதற் பதிப்பு : நவம்பர், 2000
சக ஆண்டு, ஐப்பசி



விலை : ரூ. 40/-
நூலகப் பதிப்பு: ரூ. 125—

வெளியீட்டாளர் :

டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்
சமூக நீதி மற்றும் அதிகாரமளிப்பு அமைச்சகம்,
இந்திய அரசு,
15, ஜன்பத் சாலை,
புதுடில்லி.

விற்பனை நிலையம்:

நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிமிடெட்.,
41 B, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
அம்பத்தூர், சென்னை - 98.

அச்சிட்டோர்:

பாவை பிரிண்டர்ஸ் (பி) லிமிடெட்.,
142, ஜானி ஜான் கான் ரோடு,
ராயப்பேட்டை, சென்னை - 600 014.
தொலைபேசி: 8532441, 8532973.

# ஆலோசனைக்குழு

திருமதி மேனகா காந்தி
சமூக நீதி மற்றும் அதிகாரமளிப்பு அமைச்சு -
இணை அமைச்சர் (தனிப் பொறுப்பு)
இந்திய அரசு

டாக்டர் பிந்தேஸ்வர் பாதக், பிஎச்.டி., டி.லிட்.,
செயல் துணைத் தலைவர்,
டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்,
புதுடில்லி

திரு. கிரிஷன்லால்
இயக்குநர்,
டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷன்,
புது டில்லி.

நிர்வாகப் பதிப்பாளர் (தமிழ்) :
டாக்டர் எஸ். பெருமாள், எம்.ஏ., எம்.பில்., பிஎச்.டி.,

ஆங்கில நூல் தொகுப்பாளர் :

திரு. வஸந்த் மூன்
*மும்பை*

தமிழ் நூல் பதிப்பாளர் :

*டாக்டர் எஸ். பெருமாள்*

மொழிபெயர்ப்பாளர்கள் :

*திரு. ரா. ரங்கசாமி (மாஜினி)*
*திரு. ஏ.எஸ். மணி*
*முனைவர் அ. இளங்கோவன்*

ஒப்புநோக்கியோர் :

*டாக்டர் எஸ். பெருமாள்*
*திரு. ரா. ரங்கசாமி (மாஜினி)*

பிழைதிருத்த உதவி:

*திரு. ரா. ரங்கசாமி (மாஜினி)*
*திரு. கே. நீலகண்டன்*

## அணிந்துரை

மனிதர்கள் தமது ஆதிக்க பலத்தை நிலைநாட்டுவதற்கு வன்முறையை மேற்கொள்ள நேரிடுகின்றது. தமது பலத்தால் தங்களை எதிர்ப்பவர்களை வெற்றி கொண்டு ஆதிக்கத்தை நிலைநாட்டுகின்றனர். இதன் விளைவாகச் சமூகத்தில் அமைதி யின்மை ஏற்படுகின்றது. இதனாலேயே மக்கள் பலவகைப் பிரிவினராகப் பிரிந்து எண்ணற்ற சாதியினராயினர். மனிதர் கள் சிலபோது தமது அறிவுபலத்தாலும், செல்வ வளத் தாலும், அதிகார பலத்தாலும் தமது செல்வாக்கை நிலைநாட்ட முயல்கின்றனர். இதனால் சமூகத்தில் ஏழை, பணக்காரன், வசதிமிக்கவர், வசதியற்றவர், தூய்மையானவர், தூய்மை யற்றவர், அழகானவர்கள், விகாரமானவர்கள், பண்பட்ட வர்கள், பண்படாதவர்கள், உயர் சாதியினர், தாழ்ந்த சாதி யினர் என்னும் ஏற்றத்தாழ்வுகள் மலிந்தன. மக்களிடையே இத்தகைய வேறுபாடுகளால் இடைவெளி உள்ளவரையில் சமூக அமைதி என்பது ஏற்பட முடியாது.

இன்றளவும் இந்திய மக்கள் நால்வகை சாதியினராக பிரிந்துள்ளனர். இந்திய அரசியலமைப்புச் சட்டப்படி வருண முறையின் கட்டுக்கோப்பு நெகிழ்ந்துள்ள போதிலும், வேறுபாடுகள் முழுமையாக உடைத்தெறியப்படவில்லை. ஜனநாயக நெறிகளில் நம்பிக்கையுள்ளோர் இந்த சாதி முறையை நீக்கப் பெரிதும் பாடுபட வேண்டும்.

டாக்டர் அம்பேத்கர் நூல்களின் தமிழாக்கம், படிப்போரைச் சிந்திக்க வைத்து இந்திய அரசியலமைப்புச் சட்டத்தின் அடிப்படையில் புதியதொரு சமுதாயம் அமைவதற்கு உதவக் கூடியதாகும்.

நல்வாழ்த்துக்கள்!

மேனகா காந்தி
(திருமதி மேனகா காந்தி)
சமூக நீதி மற்றும் அதிகாரமளிப்பு
அமைச்சக இணை அமைச்சர்
(தனிப் பொறுப்பு)

புதுடில்லி

# தமிழ் நூல் பதிப்பாசிரியர் உரை

மகாராஷ்டிர மாநில அரசு வெளியிட்டுள்ள டாக்டர் பாபா சாகேப் அம்பேத்கர் பேச்சும் எழுத்தும் தொகுப்பு வரிசை பத்தாவது தொகுதியின் முதல் பகுதியும், மூன்றாவது பகுதியும் தமிழில் பதினெட்டு, இருபது, இருபத்தொன்றாவது தொகுதிகளாக வெளிவருகின்றன. டாக்டர் அம்பேத்கர் அவர்கள் 1942-இல் வைஸ்ராய் கவுன்சில் உறுப்பினராக நியமனம் பெற்று, தொழிலாளர் நலத்துறையின் பொறுப் பேற்றுப் பேசிய உரைகளும் விவாதங்களின்போது அளித்த வினா-விடைகளும் இந்தத் தொகுதிகளில் இடம் பெற்றுள்ளன.

தொழிலாளர் நலன்களுக்காகவும், வசதிகளுக்காகவும் டாக்டர் அம்பேத்கர் வகுத்தளித்த சட்டங்களும் அவற்றை நிறைவேற்றுவதற்காக நடத்திய மாநாடுகளும் இன்றளவும் நின்று பயன்தரக் கூடியவையாக உள்ளன. பொருளாதார ஜனநாயகமும், அரசியல் ஜனநாயகமும் உயிரோட்ட முள்ளதாக விளங்க வேண்டுமானால் சமூக ஜனநாயகமும் அவற்றின் ஒரு அங்கமாக இருக்க வேண்டுமென்பதை டாக்டர் அம்பேத்கர் தொடர்ந்து வலியுறுத்தி வந்துள்ளதை இந்தத் தொகுதிகளில் காணலாம். இந்தக் கண்ணோட்டத்தில் அவர் வகுத்தளித்த திட்டங்கள் இந்திய நாட்டுத் தொழிலாளர் வாழ்வில் அமைதியானதொரு மாற்றத்தை ஏற்படுத்தியுள்ளன.

டாக்டர் அம்பேத்கரின் சீரிய சிந்தனைகளும், தீர்க்கதரிசன மான திட்டங்களும் மக்களைச் சென்றடைவதற்கு அவற்றைத் தமிழ் உட்பட இந்திய மொழிகளில் மொழி பெயர்த்தளிக்கும் மகத்தான பணியை மேற்கொண்டுள்ள இந்திய அரசும், நூல் வெளியீட்டுத் திட்டத்தை நிறைவேற்றி வரும் சமூகநீதி மற்றும் அதிகாரமளிப்பு அமைச்சகத்தின் டாக்டர் அம்பேத்கர் பவுண்டேஷனும் நன்றிக்குரியவர்கள்.

முன் தொகுதிகளைப் போலவே இந்தத் தொகுதிகளை யும் மிகுந்த பொறுப்புணர்வுடன் மொழி பெயர்த்துள்ள மொழிபெயர்ப்பாளர்கள் மற்றும் ஒப்புநோக்குவோர், சரிபார்ப்போர் ஆகியோர் பாராட்டுக்குரியவர்கள்.

**எஸ். பெருமாள்**
தமிழ் நூல் பதிப்பாசிரியர்.

# பொருளடக்கம்

பக்கம்

பக்கம்

பக்கம்

# 1

# டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் வாழ்க்கைக் குறிப்பு

## [1]வைஸ்ராய் கவுன்சில் உறுப்பினர்கள் யார், எவர்

முப்பது ஆண்டுகளுக்கு முன்பு, கல்வி திறந்து விட்டிருந்த பொன்னான பாதையை மகர் வகுப்பைச் சேர்ந்த ஓர் இளைஞர் கண்டார். தீண்டப்படாதவர்கள் என்று பிரகடனப்படுத்தப்பட்டிருக்கும் தாமும் தம்மைச் சேர்ந்தவர்களும் அருகில் வந்தாலே புனிதத் தன்மை போய்விடும் என்று கருதும் சமுதாய அமைப்பிற்கு எதிராக போராடுவதே தமது வாழ்நாளின் பணி என்னும் முடிவு எடுத்தவர் அவர். இன்று வைஸ்ராயின் நிர்வாகக் கவுன்சிலில் தொழிலாளர் நலத் துறைக்குப் பொறுப்பு வகிக்கும் அமைச்சர் அந்தஸ்துள்ள உறுப்பினராக உள்ளவர் டாக்டர் பீம்ராவ் ராம்ஜி அம்பேத்கர். ஆயினும் இந்தியாவில் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் என்று கருதப் படும் லட்சோப லட்சக்கணக்கான மக்களுக்காகப் பாடுபடுவது தான் தமது முதல் கடமை என்று இன்னமும் அவர் கருதுகிறார்; இவர்களின் விடுதலைக்காக அவர்களை வழிநடத்திச் செல்லும் தமது பணிக்குக் குறுக்கே எந்த சொந்த நலன்களோ, விருப்பு வெறுப்புகளோ வரக்கூடாது என்று அவர் கருதுகிறார்.

இந்து சமுதாய அமைப்பிற்கு எதிரான அவரது தாக்குதல் களையும் சாதி இந்துத் தலைவர்களிடம் அவருக்குள்ள கருத்து வேறுபாடுகளையும் தெரிந்தவர்கள், மிகவும் கசப்புணர்வு கொண்ட மனிதர் அவர் என்பதைப் புரிந்துகொள்வர். தீண்டாமைக்கு எதிரான தமது புனிதப் போருக்குத் தம் வாழ்க்கையின் பெரும்பகுதியை ஈடுபடுத்திக் கொண்டிருக்கும் அவர் பல்வேறு நலன்களில் அக்கறை கொண்டுள்ளதையும், பல்வேறு விஷயங்களை ஆய்ந்து அவற்றில்

---

1. இந்தியத் தகவல் ஏடு, மார்ச் 1, 1943 பக்கங்கள் 194-195. 'பிரபலமானவர்கள்' என்ற தலைப்பில் இந்தக் கட்டுரை பிரசுரமாகியது. கட்டுரையின் ஆசிரியர் பெயர் அதில் கொடுக்கப்படவில்லை - ஆசிரியர்.

மிகவும் மேன்மை பெற்றிருப்பதையும் பற்றி அவரது பின்னணி யையும் வாழ்க்கைப் பயணத்தையும் அவர் கூறக்கேட்டவர்களுக்கு ஆச்சரியமாக இருக்கும்.

ஒருவர் பின்வருமாறு இயல்பாகவே கேட்பார்; இந்தத் தீண்டப் படாதவரால் எந்தவிதக் கல்வியையும் எவ்வாறு பெற முடிந்தது? இதற்கான பதில் எளிதானது. அவரது வகுப்பினர் அதாவது மகர்கள், உழவர்கள், கிராம சேவகர்கள், படைவீரர்கள் பீஹாரின் துசாத்கள் அவர்களின் மாகாணத்திற்கு செய்தது போலவும், மதராஸின் பறையர்கள் அந்த மாகாணத்திற்குச் செய்தது போலவும் கிழக்கிந்தியக் கம்பெனியின் பம்பாய் ராணுவத்திற்கு இவர்கள் (மகர்கள்) ஆட்களை அனுப்பித்தந்தனர். இவ்வாறு ராணுவத்தில் சேர்ந்த சிப்பாய்களுக்கு அங்கு கல்வி அளிக்கப்பட்டது. டாக்டர் அம்பேத்கரின் தந்தையார் சுபேதார் ராம்ஜி மலோஜி அம்பேத்கர் ஒருசமயம் ராணுவப் பள்ளியில் ஆசிரியராக இருந்தவர்.

## துவக்கக் கல்வி

1892ல் மகர்களை ராணுவத்தில் சேர்த்துக் கொள்வதை நிறுத்தியிராவிடில், சுபேதாரின் மகனும் ராணுவத்தில் பணியாற்றி யிருப்பார்; ஆனால் விஷயங்கள் வேறுமாதிரி ஆயின. கல்வியின் மதிப்பை உணர்ந்திருந்த சுபேதார். தமது பிள்ளைகள் கல்விபெற அவரால் அதிகபட்சம் முடிந்ததைச் செய்தார். இதற்குக் கடுமை யான முயற்சி தேவைப்பட்டது. ஒரு மகரின் குழந்தைகளைச் சேர்த்துக்கொள்ள பள்ளிகள் மறுத்தன. தமது சொந்த மாவட்டமான ரத்னகிரியைவிட்டு சதாரா சென்றார்; பின்பு பம்பாய் சென்று அங்கு நிரந்தரமாகக் குடியேறினார். தமது இருமகன்களில் யாரைப் பள்ளிக்கு அனுப்ப இயலும் என்பதை ஒரு கட்டத்தில் அவர் முடிவு செய்ய வேண்டியிருந்தது. இப்பொழுது தாழ்த்தப்பட்ட வகுப் பினரின் தலைவராகத் திகழும் தமது இளைய மகனை அனுப்புவ தென்று முடிவு செய்தார்.

தீண்டப்படாதவராக இருப்பதென்றால் என்ன என்பதை இந்த இளைஞர் ஆரம்பத்திலேயே தெரிந்திருந்தார். 1893ம்[1] ஆண்டு அவர் பிறந்தார். அவர் பிறந்தது ஓரளவு ஜனநாயக சூழ்நிலைமை

1. டாக்டர் அம்பேத்கரின் வாழ்க்கை வரலாற்று ஆசிரியர்களின் கூற்றுப்படி, அவர் ஆரம்பக் கல்வி பயின்ற சதாராவில் உள்ள பள்ளியின் பதிவேட்டில் அவரது பிறந்த தேதி 1891 ஏப்ரல் 14 என்று குறிக்கப்பட்டிருக்கிறது.

நிலவிய 'மாவ்' என்ற ராணுவத்தளத்தில். குழந்தைப் பருவத்தில் அவர் பம்பாய் மாகாணத்திற்குச் சென்றார். வகுப்பறையில் ஒரு ஓரத்தில் கீழே விரித்து உட்காருவதற்கு ஒரு சாக்குத்துணியை எடுத்துக் கொண்டு சதாராவிலுள்ள பள்ளிக்குச் சென்றதை அவர் நினைவு கூருகிறார்; பள்ளியின் வேலைக்காரர் அந்தத் துணியைத் தொட மாட்டார்; சிறுவனான அம்பேத்கர் அதைத் தன்னுடன் தினமும் எடுத்துச் செல்ல வேண்டும். பள்ளியிலிருந்த தண்ணீர்க் குழாயை அவர் தொடக்கூடாது; அவருக்காக அந்தக் குழாயைத் திறந்துவிடப் பள்ளிப் பியூன் இருந்தால்தான் அவர் தமது தாகத்தைத் தீர்த்துக் கொள்ள முடியும். எந்த சலவைத் தொழிலாளியும் இவர்களின் உடைகளைத் துவைக்க மாட்டார் என்பதால், வீட்டில் உள்ள அவரது சகோதரிகளே குடும்பத்தின் துணிமணிகளைத் துவைத்துக் கொண்டனர்; தங்களின் சகோதரர்களின் தலைமுடியையும் அவர்களே வெட்டிவிட்டனர்.

ஒரு சம்பவம் அவரது நினைவில் மிகத் தெளிவாகப் பதிந்துள்ளது. ஒருசமயம், அவர், அவரது மூத்தசகோதரர், சிறுவனான மைத்துனன் ஆகிய மூவரும் ரயில்பாதைக்கு அப்பாலுள்ள ஒரு பட்டணத்தில் அவரது தந்தையைச் சந்திக்கப் புறப்பட்டனர். அவர்களது கடைசி கட்டப்பயணத்தில் எந்த வண்டிக்காரரும் அவர்களை ஏற்றிச்செல்ல ஒப்பவில்லை. கடைசியாக வண்டியை அவர்களே ஓட்டிச்செல்ல கட்டணம் தரவேண்டியதாயிற்று. வழியில் பசியாற தயார்செய்து எடுத்துச் சென்ற உணவு அருந்தத் தண்ணீர் இல்லாததால் உண்ண முடியாமல் வீணாயிற்று. அவர்களுக்கு எவரும் தண்ணீர் கொடுக்க முன்வரவில்லை.

### பரோடா மன்னரின் உதவி

உரியகாலத்தில் பள்ளிப்படிப்பை முடித்த பி.ஆர்.அம்பேத்கர் பம்பாயிலுள்ள எல்பின்ஸ்டன் கல்லூரியில் சேர்ந்தார். பல்கலைக் கழகத்தில் அவரது படிப்பு பாதி முடிந்திருந்த நிலையில் அவரது தந்தைக்குப் பணத்தட்டுப்பாடு ஏற்பட்டது; பட்டப் படிப்பை முடிக்காமலிருந்த இந்த இளைஞரைப் பரோடா மன்னரிடம் ஒரு நண்பர் அழைத்துச் சென்றார். அவரது பட்டப்படிப்பை முடிப்பதற்கு அந்த மன்னர் உதவித்தொகை வழங்கி உதவினார்.

பட்டப்படிப்பை முடித்துவிட்டு பரோடா மன்னருக்கு நன்றி தெரிவிக்க பி.ஆர்.அம்பேத்கர் சென்றபோது ஓர் அதிசயம்

காத்திருந்தது; கடல் கடந்து சென்று மேற்கல்வி பெறப் போக முடியுமா என அவரிடம் மன்னர் கேட்டார். தயக்கமின்றி அந்த உதவியை உற்சாகத்துடன் பி.ஆர்.அம்பேத்கர் ஏற்றுக்கொண்டார். நியூயார்க்கிலுள்ள கொலம்பியா பல்கலைக்கழகத்திற்குப் போவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டது. அமெரிக்காவிற்குக் கப்பல் பயணம் மேற்கொள்வதற்குக் காத்திருந்த மாதங்களில், அவரது மூதாதையர் மேற்கொண்ட தொழிலில் ஈடுபடும்படி அம்பேத்கருக்கு மன்னர் ஆலோசனை கூறினார். மன்னர் அவரைப் பரோடா சமஸ்தான ராணுவப்படையில் ஒரு லெப்டிணென்டாக அவரை ஆக்கினார்.

கொலம்பியா பல்கலைக்கழகத்தில், பொருளாதாரம், சமூக இயல், அரசியல், அறநெறிச் சித்தாந்தம் ஆகிய துறைகளில் பயின்று முதுகலை பட்டம் பெற்றதோடு, சித்தாந்தத்தில் முனைவர் பட்டமும் பெற்றார். 1917ல் அவர் லண்டன் சென்று, இந்தியா அலுவலகத்திலுள்ள நூலகத்தில் ஆய்வுப் பணியை மேற்கொண்டார். கிரேஸ் இன்னிலும் அவர் பதிவுசெய்து கொண்டார்.

இந்தியாவிற்குத் திரும்பியதும், தமக்கு உதவி நல்கிய மன்னருக்குச் சேவை செய்ய முன்வந்தார். பரோடாவின் தலைமைக் கணக்கர் அலுவலகத்தில் ஒரு தற்காலிகப் பணியாளராக நியமிக்கப் பட்டார்.

## பரோடா அனுபவம்

வெளிநாடுகளில் பலஆண்டுகள் இருந்த அம்பேத்கர் பல நண்பர்களை - இந்தியர்கள், ஐரோப்பியர்கள், அமெரிக்கர்கள் - பெற்றார். இந்த நண்பர்கள் அவரைத் தீண்டாதாராக நடத்தவில்லை. சமூக அடிமட்டத்தில் உள்ளவர்களில் தாம் ஒருவர் என்ற எண்ணம் அவர் மனத்திலிருந்து அகன்றது. ஆனால் பரோடாவில் அவர் பணியைத் துவக்கச் சென்றதும், அந்த வேதனை உணர்வு மீண்டும் ஏற்பட்டது. ஒரு மகரான அவர் எங்கு தங்குவது? விடுதி நடத்தும் ஒரு பார்ஸிக்காரரைத் தான் தங்குவதற்கும் உணவு அருந்துவதற்கும் அனுமதிக்கும்படி ஒப்புக்கொள்ளச் செய்தார். அதிர்ஷ்ட வசமாக அப்போது அங்கு வேறு யாரும் தங்கியிருக்கவில்லை. ஆனால் பத்து நாட்களுக்குப்பின் அங்குவந்துதங்கிய பல பார்ஸிகள் 'எங்கள் சமூகத்திற்காக ஒதுக்கப்பட்டுள்ள இந்த விடுதியில் தங்கி அதை ஏன் களங்கப்படுத்துகிறீர்கள்' என்று கேட்டனர். அன்று மாலையே அந்த விடுதியை விட்டு நீங்க வேண்டும் என்றும் கூறினர்.

தமக்குப் புகலிடம் அளிக்கும்படி அவர் இரு நண்பர்களை - ஒருவர் இந்து, மற்றவர் கிறிஸ்தவர் - வேண்டினார். ''நீங்கள் எங்கள் இல்லத்திற்கு வந்தால் எனது வேலைக்காரர் வீட்டை விட்டு போய் விடுவார்.'' என்று முதலாவது நண்பர் கூறினார். இரண்டாவது நபரோ இதுவிஷயமாகத் தமது மனைவியைக் கலந்தாலோசிக்க வேண்டு மென்றார். முதல் நண்பரும் அவரது மனைவியும் வைதீக பிராமண வகுப்பைச் சேர்ந்தவர்கள் என்பதையும், மற்றவர் சாதிக் கட்டுப் பாட்டிலிருந்து இன்னமும் மீளாதவர் என்பதையும் அறிந்த டாக்டர் அம்பேத்கர் பம்பாய்க்குத் திரும்புவதென முடிவு செய்தார்.

அங்கு, சைடன்ஹாம் வணிகவியல் கல்லூரியில் அரசியல் பொருளாதாரப் பேராசிரியராக ஆனார். ஆனால், இங்கிலாந்துக்கு மீண்டும் சென்று தமது கல்வியைப் பூர்த்தி செய்ய வேண்டுமென்ற ஏக்கம் கொண்டிருந்தார். தமது சம்பளத்தோடு மேலும் வருவாயை அதிகரிக்க தனியாக மாணவர்களுக்குக் கல்வி போதித்து வந்தார். மிகவும் சிரமத்தோடு தம்மால் முடிந்த அளவு ஒவ்வொரு பைசாவை யும் சேமித்து வந்தார். ஒன்று அல்லது இரண்டு ஆண்டுகளில் லண்டன் பொருளாதார பள்ளியில் சேர்ந்தார். 'ரூபாயின் பிரச்சினை'' என்ற பொருளில் ஆய்வுரையை அளித்து லண்டனின் மிகவும் மதிப்பு மிக்க 'டாக்டர் ஆப் சையின்ஸ்' என்ற பட்டத்தைப் பெற்றார்; பாரிஸ்ட ராகவும் ஆனார்; தொடர்ந்து ஒரு ஜெர்மன் பல்கலைக்கழகத்தில் பயில வேண்டுமென்ற அவரின் ஆசை பான் நகருக்கு அவரை இட்டுச் சென்றது; ஆனால், நாணய மாற்றுவிகிதத்தின் வீழ்ச்சி காரண மாக அங்கு பட்டம் ஏதுவும் பெறாமலே அவர் இந்தியாவிற்குத் திரும்ப வேண்டியதாயிற்று.

இப்பொழுது அரசாங்கத்திலோ அல்லது பல்கலைக்கழகத் திலோ பணிபுரிவதை விட வழக்கறிஞராகச் செயல்படுவது நல்லது என்று அவர் முடிவு செய்தார்; ஏனென்றால் அதன்மூலம் தீண்டப் படாதவர்களுக்குப் பாடுபட மிகுந்த வாய்ப்பும் நேரமும் கிடைக்கும்.

## தாழ்த்தப்பட்ட வகுப்பினரோடு நெருக்கமான உறவு

தாம் வாதாடும் வழக்குகளுக்குக் குறிப்புகள் தந்து உதவக் கூடிய சாதி இந்து வழக்கறிஞர்களின் இனவேற்றுமை முன்னேற் றத்திற்குத் தடங்கலாக இருக்கலாம் என்ற அவரது பயத்திற்கு இட மில்லாமல் போயிற்று. சிவில் வழக்கு மேல்முறையீட்டுத் துறை யில் அவருக்கு நல்லமுன்னேற்றம் ஏற்பட்டது. பம்பாய், நாக்பூர்

பல்கலைக்கழகங்களும் பம்பாய் உயர்நீதிமன்றமும் சட்டப் படிப்புத் தேர்வுக்கு அவரைத் தேர்வாளராக நியமித்தன. பம்பாயிலுள்ள அரசுச் சட்டக் கல்லூரியில் சிறிது காலம் பேராசியராகவும் முதல்வ ராகவும் பணியாற்றினார். நீதிமன்ற உயர் பதவிகளை ஏற்றால் பரபரப்பான அரசியல் சூழ்நிலையிலிருந்து விடுபட்டு, மகிழ்ச்சி கரமான சுகபோக வாழ்க்கை வாழலாம் என்று அவரிடம் சபலத்தை ஏற்படுத்த முயன்றனர். ஆனால் இத்தகைய ஆலோ சனைகளை அவர் உதறித் தள்ளினார்.

தீண்டப்படாத பாரிஸ்டரும் பேராசிரியருமான அவர் பத்து ஆண்டுகள் பரேல் பகுதியில் பம்பாய் மேம்பாட்டு இலாகாவின் சௌல்கள் ஒன்றில் வாழ்ந்து வந்தார். இந்த சௌல்கள் பெரிய ஐந்து மாடிக் கட்டிடங்கள்; ஒவ்வொன்றிலும் ஒற்றை அறை கொண்ட 100 குடியிருப்புகள் இருந்தன. எந்த நவீன வசதிகளும் இல்லாதவை. ஒவ்வொரு மாடியிலும் ஒரு கழிப்பறையும், குளிப் பதற்கு, துணி துவைக்க, பாத்திரம் தேய்க்க ஆகியவற்றிற்கு ஒரு குழாயும் மட்டுமே இருந்தன. இந்த குடியிருப்புகளில் வாழ்ந்து வந்தவர்களில் பெரும்பாலோர் மில் தொழிலாளர்கள்; அவர்கள் ஒவ்வொருவரின் மாத வருமானம் ரூ. 25/-

இத்தகைய அவல நிலைமையில் வாழ்ந்துவந்த டாக்டர் அம்பேத்கர், பம்பாயின் தொழிலாளர்களின் வாழ்க்கை பற்றிய நேரடியான அனுபவத்தைப் பெற்றார். நூற்றுக்கணக்கான மில் தொழிலாளர்கள் தம்மை நேரில் அறிவார்கள் என்பதிலும், அவர்கள் தமது ஆலோசனையைப் பெற்றனர் என்பதிலும் அவர் பெருமிதம் கொண்டார். பல தொழிலாளர்களின் நம்பிக்கையை அவர் பெற்றார்; தீண்டாமைக்கு எதிரான தமது இயக்கத்தில் தாழ்த்தப் பட்ட வகுப்பினர்பால் தமது தலைமையை நிலைநாட்டினார்.

## தீண்டாமைக்கு எதிரான இயக்கம்

தீண்டாமைக்கு எதிரான இயக்கத்தில் நிகழ்ந்த இரண்டு மிக முக்கிய நிகழ்ச்சிகள் குறிப்பிடத்தக்கவை. முதலாவது, (கொலாபா மாவட்டம்) மஹத் என்ற இடத்தில் சௌதார் குளத்தில் தண்ணீர் எடுக்கத்தங்களுக்குள்ள உரிமையை நிலைநாட்ட தாழ்த்தப்பட்ட வகுப்பினர் பெருமளவில் கலந்து கொண்ட ஆர்ப்பாட்டத்தை அவர் நடத்தினார். தீண்டப்படாதவர்கள் தண்ணீர் எடுத்தபோது, மண்டைகள் உடைந்தன; போலீஸ் பாதுகாப்பைக் கோரும்

*நிர்ப்பந்தத்திற்கு ஆளானார் டாக்டர் அம்பேத்கர்; ஆனால் தீண்டப் படாதவர்கள் தங்கள் கோரிக்கையை நிலைநாட்டினர். அதைவிட முக்கியமானது. மிகுந்த ஒற்றுமை உணர்வும் தாங்களும் மேன்மை மிகு மனிதர்களே என்ற அந்தஸ்து உணர்வும் அவர்களிடையே விழிப்பை ஏற்படுத்தியதாகும். இது விடிவுகாலத்தை நோக்கிய பாதையில் மேலும் அவர்களை இட்டுச் செல்வதாக அமைந்தது.*

*அவர்களின் இந்தவெற்றியால் உந்தப்பட்டு, நாசிக் நகரில் உள்ள மிகவும் புனிதமான கோவிலில் நுழையும் உரிமைக்காக போராடுவதெனத் தீண்டப்படாதவர்கள் முடிவு செய்தனர். காலாராம் ஆலய நுழைவிற்காக அவர்கள் ஐந்து ஆண்டுகள் சத்தியாக்கிரகம் செய்தனர். மாபெரும் வருடாந்திரத் திருவிழாவில் யாத்திரிகர் களைத் தடுத்தனர்; அந்த விழாவே நடைபெற முடியாத அளவுக்கு அது சென்றது; இதுவரையிலும் அவர்களுக்கு அனுமதி மறுக்கப் பட்டிருந்த கோயில் குளப்படித்துறையில் அவர்கள் நீராடினர்; அதன் மூலம் புனித கோதாவரி நீரை அவர்கள் 'அசுத்தமாக்கினர்.'' இப்போராட்டத்தில் பெரும் எண்ணிக்கையில் பெண்கள் சிறை சென்றனர். கோவிலில் நுழைய தீண்டப்படாதவர்களுக்கு உரிமை கொடுக்கப்படவில்லையாயினும், சத்தியாக்கிரகம் வாபஸ் பெற்ற போது தாங்கள் ஒன்றுபடமுடியும் என்பதை அவர்கள் நிலை நாட் டினர். இந்து மதத்திலிருந்து தங்கள் உறவை முடிவாகத் துண்டித்துக் கொள்ளப்போவதான அவர்களின் பயமுறுத்தல் சாதி இந்துக்களுக்கு ஒரு அதிர்ச்சியை ஏற்படுத்தியது.*

## *அரசியல் நடவடிக்கைகள்*

*தீண்டப்படாதவர்களின் தலைவராக டாக்டர் அம்பேத்கர் அரசியலில் பிரபலமடைந்தார். 1926ல் பம்பாய் சட்டமன்ற மேல் அவைக்கு அவர் நியமிக்கப்பட்டார்; இதற்கு பதினோரு வருடங் களுக்குப் பிறகு, தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் பிரதிநிதியாக பம்பாய் நகரிலிருந்து பம்பாய் சட்டமன்றத்திற்குத் தேர்ந்தெடுக்கப்பட்டார். லண்டனில் நடைபெற்ற மூன்று வட்டமேசை மாநாடுகளிலும் கூட்டு நாடாளுமன்றக் குழுவிலும் அவருடைய மக்களுக்காகப் போராடினார். 1935 ஆம் வருட இந்திய அரசாங்க சட்டத்திற்கு அடிப்படையாக அமைந்த சட்டநகலை இந்தக் கூட்டுக்குழுதான் தயாரித்தது.*

*அவரது அரசியல் வாழ்வில் மிக முக்கியமாகக் குறிப்பிட*

வேண்டிய நிகழ்ச்சி, புதிய அரசியலமைப்புச் சட்டத்தின்கீழ் பாது காப்புகள் பற்றி திரு. காந்தியுடன் அவருக்கேற்பட்ட மோதல் தான். ஷெட்யூல்டு வகுப்பினருக்குச் சில பாதுகாப்புகள் வழங்க பிரிட்டிஷ் அரசு செய்ய உத்தேசித்திருந்த ஏற்பாட்டிற்கு எதிராகக் கண்டனம் தெரிவிக்க சாகும் வரையிலான உண்ணாவிரதத்தைத் திரு. காந்தி துவங்கினார். அந்தப் போராட்டத்தின் விளைவாக டாக்டர் அம்பேத்கருக்கும் திரு. காந்திக்கும் இடையே புனா ஒப் பந்தம் கையெழுத்தாயிற்று. இதன்படி புதிய அரசியலமைப்புச் சட்டத்தின்கீழ், மாகாண சட்டசபைகளில் கீழ்ச்சபைக்கான தேர்தல் களில் தீண்டப்படாதவர்களுக்கு இட ஒதுக்கீடு அடிப்படையில் கூட்டுத் தொகுதிகள் மூலம் தேர்தல்கள் நடத்த இருவரும் ஒப்புக் கொண்டனர்.

இந்த புதிய சட்டத்தின்படி நடந்த முதல் தேர்தலில், அவ ருடைய சொந்த மாகாணமான பம்பாயில் அவருடைய ஆதரவாளர் களை அணி திரட்டினார்; மத்திய மாகாணங்களில் இப்பணி ஓரளவு நடைபெற்றது. பம்பாயில் அவருடைய சுதந்திர தொழி லாளர் கட்சி, ''ஷெட்யூல்டு வகுப்பினருக்கு'' ஒதுக்கப் பட்ட 15 இடங்களில் 11 இடங்களில் வெற்றி பெற்றது. ரத்னகிரி மாவட் டத்தில் அவரது கட்சி நிறுத்திய சாதி இந்து வேட்பாளர்கள் தாழ்த்தப் பட்ட வகுப்பினருக்கு ஒதுக்கப்படாத இரு இடங்களைக் கைப்பற் றினர். மத்திய மாகாணங்களில், வெற்றி பெற்ற தாழ்த்தப்பட்ட வகுப்பினரைச் சேர்ந்த பெரும்பாலான வேட்பாளர்கள் காங்கிரஸ் காரர்களல்லாதவர்கள்; டாக்டர் அம்பேத்கரைப் பின்பற்றியவர்கள்.

## தீண்டாமை என்ற இழுக்கு

தேசிய முக்கியத்துவம் வாய்ந்தவராகத் திகழ்ந்த போதிலும், தீண்டாமை என்ற இழுக்கிலிருந்து டாக்டர் அம்பேத்கர் தப்ப வில்லை. தீண்டப்படாதவர்களின் சில குறைகள் பற்றி ஆராயும் குழுவில் அவர் பணியாற்றியபோது, கந்த்தேஷ் மாவட்டத்திற்குச் சென்றார். சாலிஸ்கான் என்ற இடத்தில் அங்குள்ள மகர்கள் அவ ருக்கு வரவேற்பளித்தனர். ரயில் நிலையத்தில் நெடுநேரம் காத் திருந்தபின்பு, ஒரு டோங்கா குதிரைவண்டி அமர்த்தப்பட்டு, மகர் களின் குடியிருப்புகளான மகர்வாடாவுக்கு அழைத்துச் செல்லப் பட்டார். டோங்கா ஓட்டுபவர் மிகவும் அனுபவமற்றவராக இருந்தார்; ஒருபாலத்தில் குதிரை தடுமாறியதால் நடைபாதையில் இருந்த கல்மீது டாக்டர் அம்பேத்கர் தூக்கி எறியப்பட்டு பலத்த

காயமடைந்தார். பயணத்திற்கு ஒரு டோங்காவைப் பெறுவதில் தீண்டப்படாதவர்கள் மிகவும் கஷ்டப்பட வேண்டியிருந்தது என்பதையும், எந்த டோங்கா வண்டியோட்டியும் அவரை டோங்காவில் அழைத்துச் செல்லமுன்வராததால் தனது தலைவருக்கு ஏற்படக் கூடிய ஆபத்தையும் பொருட்படுத்தாமல் மகர்களில் ஒருவரே வண்டி ஓட்டிவந்தார் என்பதையும் அவர் பின்பு அறிந்து கொண்டார்.

1934ல், பல்வேறு இடங்களைச் சுற்றிப் பார்க்கும் உல்லாசப் பயணத்தின்போது, டாக்டர் அம்பேத்கரும் அவரது உடன் ஊழியர்களும், நிஜாம் சமஸ்தானத்தில் உள்ள தௌலத்தாபாத் கோட்டைக்கு வந்தனர். உடலெல்லாம் தூசிபடிந்த நிலையில் கோட்டையைச் சென்றடைந்ததும், முன்பின் யோசிக்காமலேயே, சுத்தம் செய்து கொள்வதற்காக அங்கிருந்த குளத்திலிருந்து தண்ணீர் எடுத்தனர். கோட்டையைச் சுற்றிப் பார்க்க அனுமதி வாங்கிக் கொண்டிருந்த போது, ஒருவயதான முகமதியர் சத்தம் போட்டுக் கொண்டே ஓடி வந்தார். ''தேத்கள் (தீண்டப்படாதவர்கள்) குளத்தைத் தீட்டுப்படுத்தி விட்டார்கள்'' என்று கத்தினார். நிலைமை மோசமடைந்தது; முகமதியர்களின் போக்கைக் கண்டு எரிச்சலடைந்த டாக்டர் அம்பேத்கர், ''இதைத்தான் உங்கள் மதம் போதிக்கிறதா? ஒரு தீண்டப்படாதவர் முகமதியனாகி விட்டால் இந்தக் குளத்திலிருந்து தண்ணீர் எடுக்கக்கூடாது என்று அவரைத் தடை செய்வீர்களா?'' என்று கேட்டார். இது கூட்டத்தினரின் வாயை அடைத்தது; ஆனால், ஆயுதம் தாங்கிய ஒரு படைவீரர் உடன் வந்ததும் கோட்டையைச் சுற்றிப்பார்க்க இவர்கள் அனுமதிக்கப்பட்டனர். அந்தப் படை வீரர் வேறு எங்கும் தண்ணீரை இவர்கள் 'தீட்டுப்படுத்தி விடாமல்'' பார்த்துக் கொண்டார்.

சாதியும் தீண்டாமையும் இந்துக்கள் தோற்றுவித்தவையாயினும், இந்தியாவின் முகமதியர்களும் பார்ஸிகளும் கிறிஸ்தவர்களும் இந்துக்களின் தடைக் கட்டுப்பாடுகளிலிருந்தும் பழக்க வழக்கங்களிலிருந்தும் முற்றிலுமாக விடுபடவில்லை என்பதை டாக்டர் அம்பேத்கருக்கு அவரது வாழ்க்கை அனுபவம் எடுத்துக் காட்டியது. மனிதர்களில் ஒதுக்கி வைக்கப் பட்டவர்களுக்கு மதிப்பு மிக்க தனது செல்வ வளத்தை மறுக்காத தோழமை உணர்வை தமது நீண்ட நெடும் போராட்டத்திற்குப் பின் நூல்கள் என்னும் பொது உலகில் அவர் கண்டார்.

## இலக்கியப் பணிகள்

டாக்டர் அம்பேத்கரை அவரது இல்லத்தில் சந்தித்த எவரும் அவரது புத்தக அலமாரிகளிலும் அவரைச் சுற்றியுள்ள மேஜைகளிலும் பல்வேறுவிதமான நூல்கள் நிறைந்திருப்பதைக் கண்டு பிரமிக் காமலிருக்கமாட்டார்கள். எல்லாவிதமான நூல்களும், அதுவும் மிக முக்கியமாக அரசியலமைப்புச் சட்டம், அரசியல், பொருளாதாரம், சமூக இயல் ஆகியவை பற்றிய நூல்கள், அவருக்கு பெரிதும் பிடித்திருந்தன. 'ரூபாய் நாணயம் பற்றிய பிரச்சினை'', 'பிரிட்டிஷ் இந்தியாவில் மாகாண நிதிநிலை'', 'சாதி ஒழிப்பு'' ''கூட்டு அமைப்பா, சுதந்திரமா'', 'பாகிஸ்தான் பற்றிய சிந்தனைகள்'' ஆகியவை அவர் இயற்றிய நூல்களில் அடங்குவன.

தீண்டப்படாதவர்களை அரசியல் ரீதியில் தட்டி எழுப்ப பல மராத்திச் செய்தித்தாள்களை அவர் நடத்தி வந்தார். 'மூக் நாயக்'' (ஊமைகளின் தலைவர்) என்ற செய்தித்தாளை 1919[1]ல் அவர் தொடங்கினார். தமது படிப்பைத் தொடர ஐரோப்பாவிற்கு அவர் சென்றபோது அந்த இதழ் வெளிவருவது நின்றுவிட்டது. 1923ல்[2] 'பகிஷ்கிரதபாரத்'' இதழைத் ('ஒதுக்கி வைக்கப்பட்ட இந்தியா'') துவக்கினார். 'ஒதுக்கப்பட்ட இந்தியாவின்'' வகுப்பினர்களுக்கு மட்டும் பொருந்தியதாக அது இருக்கக் கூடாது என்று உணர்ந்த அவர் சில ஆண்டுகளுக்குப் பின் அதன் பெயரை 'ஜனதா'' (''மக்கள்'') என்று மாற்றினார்.

## மதத்தின்பால் அவரது கண்ணோட்டம்

மதத்தின்பால் டாக்டர் அம்பேத்கர் கொண்டிருந்த கண்ணோட்டம் பற்றி ஒரு வார்த்தை அவசியம் சொல்ல வேண்டும். சதுர்வருணங்களையும் பெரும் எண்ணிக்கையிலான தீண்டப்படாதவர்களையும், ஒதுக்கப்பட்டவர்களையும் கொண்டுள்ள இந்து சமூக அமைப்பு இந்தியா முழுவதன் பலவீனங்களுக்கு ஓர் ஊற்றுக் கண்ணாக இருந்து வருகிறது என்றும், அதன் அரவணைப்பில், கட்டுக்கோர்ப்பில் இருக்கத் தாம் விரும்பவில்லை என்றும் அவர் கருதுகிறார்.

---

1. 1920 என்று இருக்க வேண்டும் - ஆசிரியர்.
2. 1927 என்று இருக்க வேண்டும் - ஆசிரியர்.

சில ஆண்டுகளுக்கு பின்பு, 'ஜாத்பட் தோடக் மண்டல்' என்ற ஒரு சீர்திருத்த இந்து அமைப்பு தனது ஆண்டு மாநாட்டிற்குத் தலைமை தாங்கும்படி அவரை அழைத்தது. ஒரு இந்து என்றமுறையில் தாம் ஆற்றப்போகும் கடைசி உரையாக இது இருக்கும் என்று தமது தலைமை உரைநகலில் அவர் குறிப்பிட்டிருந்தார். மண்டலைச் சேர்ந்தவர்களுக்கு இது ஏற்புடையதாக இல்லாததால் பின்னால் மாநாடே ரத்து செய்யப்பட்டது. அந்த மாநாட்டில் ஆற்றப்படவிருந்த தலைமை உரையை, 'சாதி ஒழிப்பு'' என்ற தலைப்பில் தனி நூலாக அவர் வெளியிட்டார். சாதி பற்றிய அவரது பார்வையை இந்த உரை எடுத்துக்காட்டுகிறது.

ஒரு இந்துவாகத் தொடர்ந்து இருக்கப் போவதில்லை என்பதில் அவர் உறுதியாக இருந்தாலும், வேறு பல மதங்களின் போதனைகளை அவர் கற்றறிந்தார்; அவற்றுள் புத்த மதம், சீக்கிய மதம், கிருஸ்தவ மதம் ஆகியவை அடங்கும். வேறொரு மதத்தில் சேரப்போவதை அவர் இன்னமும் அறிவிக்கவில்லை. தீண்டப்படாதவர்களுக்கு அவர் இன்னமும் தேவைப்படுகிறார் என்பதை உணர்கிறார். அவரது மதமாற்றம் தீவிரமான விளைவுகளை ஏற்படுத்தும். அவரது மதமும் சரி, அவரைப் பின்பற்றுபவர்களில் ஒவ்வொருவரின் மதமும் சரி, ஒவ்வொரு மனிதனும் தானாகவே முடிவு செய்ய வேண்டிய விஷயமாகும். இந்த விஷயத்தில் டாக்டர் அம்பேத்கர் தமது செல்வாக்கை மற்றவர்கள் மீது திணிக்க விரும்பவில்லை. தீண்டப்படாதவர்களின் தலைமையை மற்றவர்களிடம் ஒப்படைத்து, பொதுவாழ்விலிருந்து ஓய்வுபெறும்போது, உலகிற்கு அவரது முடிவைக் கூறுவார். இப்போதைக்கு அவரது புனிதப் போராட்டம் தொடர வேண்டும்.



# 2

## [1]வைஸ்ராய் கவுன்சிலில் தொழிலாளர் நலத்துறை உறுப்பினராக நியமனம்

*(வைஸ்ராய் கவுன்சில் உறுப்பினராக 1942 ஜூலை 20ம்தேதி டாக்டர் அம்பேத்கர் பதவி ஏற்றார். தொழிலாளர் நலத் துறையின் பொறுப்பேற்றுக் கொள்ளும்படி அவர் கோரப்பட்டார். இது விஷய மாக மன்னர் பிரான் அலுவலகம் வெளியிட்ட நியமனக் கடிதம் கீழ்வருமாறு : ஆசிரியர்.)*

### ஜார்ஜ் R.I.

கடவுள் அருளால் கிரேட் பிரிட்டன், அயர்லாந்து, கடல் கடந்து உள்ள பிரிட்டிஷ் டொமீனியன்களின் மன்னரும் சமயத்தின் காவலரும் இந்தியாவின் சக்கரவர்த்தியுமான ஆறாம் ஜார்ஜ்.

நமது நம்பிக்கைக்கும் அதிநேசத்திற்கும் பாக்கியப்பட்ட பீமராவ் ராம்ஜி அம்பேத்கர் டாக்டர் ஆப் சையன்ஸ், பாரட்லா அவர்களுக்கு அனுப்பிய நியமனக் கடிதம்.

### வாழ்த்துக்கள்!

இந்த நியமனப் பத்திரத்தில் கையெழுத்திட்டு, எமது பிரியம் உள்ள வரையில் மேற்படி பீமராவ் ராம்ஜி அம்பேத்கர் என்னும் தங்களை இந்தியாவின் எமது கவர்னர்-ஜெனரலின் நிர்வாகக் கவுன்சில் உறுப்பினராக நியமிக்கிறோம்.

---

1. கைமோட் சி.பி. ''டாக்டர் பீம்ராவ் ராம்ஜி அம்பேத்கர்'' (மராத்திய மொழியில் வாழ்க்கை வரலாறு), தொகுப்பு 9, 1987, பக்கம் 113 (பம்பாயில் உள்ள மகாராஷ்டிர ராஜ்ய சாகித்ய சங்க்ருதி மண்டல் வெளியிட்டது)

   தேசிய பாதுகாப்பு கவுன்சில் உறுப்பினராக டாக்டர் அம்பேத்கர் ஏற்கெனவே நிய மனம் பெற்றிருந்தார் - 1941 ஜூலை 21 தேதி வெளியிடப்பட்ட அரசாங்க ஆணை யைப் பார்க்கவும். - ஆசிரியர்.)

II. தாங்கள் அலவலகப் பணிகளில் சேர்ந்த தருணம் முதல் இந்த நியமனம் அமுலுக்கு வரும் என்று பணிக்கிறோம்.

ஏசுபெருமானின் ஆயிரத்து தொள்ளாயிரத்து நாற்பத்து இரண்டாம் ஆண்டு ஜுலை ஒன்பதாம் நாளிலும் எமது ஆட்சியின் ஆறாவது ஆண்டிலும் செயின்ட ஜேம்ஸில் உள்ள எமது அரண்மனையில் இந்த நியமனப் பத்திரம் வழங்கப்படுகிறது.

மேன்மைதங்கிய மன்னர்பிரான் உத்தரவின் பேரில்
ஒப்பம் எல்.எஸ். அமெரி

# [1]தொழிலாளர்களுக்கான சட்டங்கள் ஒரேசீராக அமைவதன் அவசியம்

*(1942 ஆகஸ்ட் 7ம்தேதி புதுடில்லியில் நடைபெற்ற கூட்டுத் தொழிலாளர் மாநாட்டில், இந்திய அரசாங்கத்தின் தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்[2] மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் ஆற்றிய உரையின் முழு வாசகம் கீழே தரப்படுகிறது.)*

இந்த முத்தரப்பு தொழிலாளர் மாநாட்டிற்கு உங்களை வரவேற்பதில் மிக்கமகிழ்ச்சியடைகிறேன். எங்கள் அழைப்பைத் தயக்கமின்றி ஏற்றுக் கொண்டதற்கும் இன்று காலையில் இங்கு வந்து கலந்து கொள்வதில் தாங்கள் எடுத்துக்கொண்ட சிரமத்திற்கும் நானும் இந்திய அரசும் எங்களின் நன்றி உணர்வை போதுமான அளவு தெரிவிப்பது சிரமம். தாங்கள் கொண்டுள்ள இந்த இணக் கத்தைப்போல் இந்த மாநாட்டை வெற்றிகரமாக ஆக்குவதிலும் அதன் நோக்கங்களை நிறைவேற்றுவதிலும் அதே மாநிலங்களின் மனமார்ந்த ஒத்துழைப்பு கிடைக்கும் என்று நம்புகிறேன்.

உங்களை அதிகம் காக்கவைக்க நான் விரும்பவில்லை; கடுமையான நெருக்கடிநிலை நிலவும் நாட்கள் இவை. ஒவ்வொரு வரும் அவர்களின் பணியிடத்திற்கு எவ்வளவு விரைவில் செல்ல முடியுமோ அவ்வளவு விரைவில் செல்ல வேண்டும். எனவே, இந்த சந்தர்ப்பத்தில் எந்த நீண்ட உரையையும் நான் ஆற்றப் போவ தில்லை. இந்த மாநாட்டின் முக்கியத்துவம் பற்றி உங்களின் கவனத் திற்குக் கொண்டு வரவும் அதன் நோக்கங்களையும் லட்சியங்களை யும் எடுத்துக் கூறவும் சில முக்கிய விஷயங்களை மட்டும் குறிப் பிடுவதோடு நிறுத்திக் கொள்வேன்.

## இரு சிறப்பு அம்சங்கள்

இந்திய அரசாங்கத்தொழிலாளர் சார்பில் இதுவரை மூன்று தொழிலாளர் மாநாடுகள் நடந்துள்ளன என்பது தாங்கள் அனை

1. இந்தியத் தகவல் ஏடு, செப்டம்பர் 15, 1942.
2. அமைச்சர் அந்தஸ்துள்ள பதவி - ஆசிரியர்.

வரும் அறிந்ததே. முதலாவது மாநாடு 1940 ஜனவரி 22, 23 தேதி களிலும் இரண்டாவது மாநாடு 1941 ஜனவரி 27, 28 தேதிகளிலும் மூன்றாவது மாநாடு 1942 ஜனவரி 30, 31 தேதிகளிலும் நடை பெற்றன. எனவே அந்த வரிசையில் இந்த மாநாடு நான்காவதாகும். முந்தியவற்றிலிருந்து இந்த மாநாட்டை வேறுபடுத்திக் காட்டும் விசேட அம்சங்களை சில வார்த்தைகளில் கூறினால், இந்த மாநாட் டின் முக்கியத்துவத்தைத் தாங்கள் புரிந்து கொள்வீர்கள். முதலாவ தாக, முந்தின மாநாடுகள் முறையாக குறிப்பிட்ட காலங்களில் நடந்த போதிலும், நிரந்தரத்தன்மை என்பது இந்தமாநாடுகளது திட்டத் தின் பகுதியாக இருக்கவில்லை. ஒருசீராக இயங்குவதில் இடைவெளி இருந்திருக்கலாம். எந்தவிதிமுறை அல்லது நடைமுறை அல்லது புரிவுணர்வுக்கோ குந்தகம் இல்லாமல் அந்த கருத்தே கைவிடப் பட் டிருக்கலாம். இந்த மாநாடு அதன் திட்டத்தின் ஒரு பகுதியாக நிரந்தரத் தன்மையைக் கொண்டுள்ளது. நாம் ஏற்படுத்தவிருக்கும் ஸ்தாபன அமைப்பு ஒரு நிரந்தரக்குழுவின் நிரந்தரத் தன்மையை யும், முறையாக இயங்குவதையும் பெற்றிருக்கும்; நாம் கோரும் போது இயங்கத் தயாராக இருக்கும்.

இந்த மாநாட்டின் இந்த அம்சத்தை விட அதிக முக்கியத் துவம் வாய்ந்த இரண்டாவது அம்சத்தைத் தங்களது சிறப்பு கவனத் திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். மாநாட்டில் கலந்து கொள் பவர்கள் யார் யார் என்பது பற்றியது அது. முந்திய மாநாடுகளில் அரசுப் பிரதிநிதிகள் மட்டுமே - மத்திய மாநில அரசுகள், சில சமஸ்தான அரசாங்கங்களின் பிரதிநிதிகள் மட்டுமே - கலந்து கொண் டனர். மிக முக்கியமானவர்கள், அவசியமானவர்கள் - அதாவது முதலாளிகளும் அவர்களிடம் வேலை செய்யும் தொழிலாளர்களும் இந்த மாநாடுகளில் பிரதிநிதித்துவம் பெறவில்லை. முதலாளிகளை யும் தொழிலாளர்களையும் பிரதிநிதித்துவப்படுத்தும் ஸ்தாபனங் களோடு தொடர்பு ஏற்படுத்தவும். அவற்றைக் கலந்து ஆலோ சனை பெறவும் அக்கறை எடுத்துக் கொள்ளப்பட்டது என்பதில் ஐயமில்லை. உதாரணமாக எனது மதிப்பு வாய்ந்த சகாவான மாண்புமிகு சர்.ஏ.ராமசாமிமுதலியார், அவர் தொழிலாளர் நலத் துறை உறுப்பினராக இருந்தபோது, கல்கத்தாவுக்கு வருகை தந்தார். அச்சமயம் தொழிலாளர், முதலாளிகளின் பிரதிநிதிகளைச் சந்தித்தார்.

அதேபோல், இந்தமாநாடு கூடுவதற்கு மூலகாரணமாக இருந்தவரும், எனது மதிப்பிற்குரிய சகாவுமான மாண்புமிகு சர் பிரேஷ்கான் நூன், அவ்ர் தொழிலாளர் நலத்துறை உறுப்பினராக இருந்தபோது, முதலாளிகள் மற்றும் தொழிலாளர்களின் பிரதிநிதி களைச் சந்தித்து ஆலோசனை பெறும் வாய்ப்புகளை ஏற்படுத் தினார். எனினும் தொழிலாளர் மாநாடுகளின் வரலாற்றில் முதல் தடவையாக இந்தக் கூட்டு மாநாட்டின் கட்டுக்கோப்பிற்குள் முதலாளிகளதும், தொழிலாளர்களதும் பிரதிநிதிகள் நேருக்குநேராக சந்திக்கும்படிச் செய்யப்பட்டிருக்கின்றனர். எனது கருத்தில், மாநாட் டின் இந்த அம்சம் சம்பந்தப்பட்ட அனைவரின் குறிப்பாகத் தொழி லாளர் பிரதிநிதிகளின் மிக நல்ல வரவேற்பினைப் பெறவேண்டும். இந்தியாவில் உள்ள தொழிலாளர்கள் பற்றிய தனது அறிக்கை யில் விட்லி கமிஷன் இந்தியாவில் தொழிற்சாலைகள் கவுன்சில் நிரந்தரத் தன்மை கொண்ட அமைப்பாக நிறுவப் பட வேண்டும் என்ற யோசனையை முன்வைத்ததிலிருந்து இந்த யோசனையை நடை முறைப்படுத்த வேண்டுமென்று தொழிலாளர்களின் பிரதிநிதிகள் கிளர்ச்சி செய்து வந்துள்ளனர். பல்வேறு காரணங்களால், தொழிற் சாலைகள் கவுன்சில் அமைக்கும் குறிக்கோளை நிறைவேற்றுவது சாத்தியமில்லாது போயிற்று. இந்த யோசனையை நடைமுறைப் படுத்த முடிவு செய்யும்படி இந்த மாநாட்டைக் கேட்டுக்கொள் வதன் மூலம் அந்தக் குறிக்கோளை எய்தும் பாதையை இம்மாநாடு வகுக்கும் என்பது பற்றி எந்த சந்தேகமும் இருக்க முடியாது; அந்த இலக்கை நோக்கி அழைத்துச் செல்லும் பாதையில் பெரிய அளவு முன்னேற்றத்தை இது குறிக்கிறது என்று நான் சொன்னால் அது மிகைப்படுத்தப்படுவதாக நீங்கள் கருத மாட்டீர்கள் என்று உறுதி யாக நம்புகிறேன்.

### தொழிலாளர் சம்பந்தமான சட்டங்கள்

இந்த மாநாட்டின் நோக்கங்களையும் குறிக்கோள்களையும் பற்றி ஓரிரு வார்த்தைகள் இப்பொழுது சொல்லப் போகிறேன். முந்தின மாநாடுகளில் கலந்துகொண்ட உங்களில் சிலர் இந்த மாநாடுகள் நடைபெறுவதற்கான முக்கிய காரணங்களில் ஒன்று, தொழிலாளர்கள் சம்பந்தமான சட்டங்களில் காணப்படும் வேறு பாட்டுத் தன்மையிலிருந்து எழும் அபாயத்தைத் தெரிவிக்க வேண்டு மென்ற மேலான விருப்பம் என்பதைப் புரிந்து கொள்வீர்கள்.

தொழிலாளர் சட்டங்களை இயற்றுவதற்கு மாகாணங்களுக்கு அளிக்கப்பட்ட சுதந்திரத்தின் விளைவாகவே நாட்டிற்கு இந்த அச்சுறுத்தல் ஏற்பட்டுள்ளது.

இந்திய அரசாங்கம் ஓர் ஒன்றிணைந்த அரசாங்கமாக இருக்கும் வரை தொழிலாளர் சட்டங்கள் ஒரே தன்மை கொண் டவையாக இருப்பதில் சிரமம் ஏதும் இல்லை. ஆனால் கூட்டாட்சி அரசியல் சட்டத்தை ஏற்படுத்திய இந்திய சர்க்காரின் 1935 ஆம் ஆண்டுச் சட்டம் தொழிலாளர் சம்பந்தமான சட்டங்களை மத்திய அரசும் மாகாண சர்க்கார்களும் இயற்றலாம் என்று நிர்ணயித்த தால் அது மிக மோசமான நிலைமையை ஏற்படுத்தியது. ஒரு மத்திய சட்டம் இல்லையென்றால், ஒவ்வொரு மாகாணமும் தனக்கு விருப்பமான ஆனால் அடுத்துள்ள மாகாணங்களின் சட்டங்களி லிருந்து மாறுபட்ட சட்டத்தை இயற்றக்கூடும் என்று அஞ்சப் பட்டது. பொதுவான, தேசிய முக்கியம்வாய்ந்த நோக்கத்திற்குப் பதிலாக, மாகாண சௌகரியங்கள் ஆதிக்கம் செலுத்துவதை இது ஊக்குவிக்கும் என்றும் கருதப்பட்டது.

## மூன்று முக்கிய நோக்கங்கள்

இந்தப் போக்கை மாற்றுவதற்கான மிக அவசியமான திருத்தத்தை அமைக்கவும், தொழிலாளர் சம்பந்தப்பட்ட சட்டங் கள் ஒரே தன்மை கொண்டவையாக இருக்க வேண்டுமென்ற ஆரோக்கியமான கோட்பாட்டிற்கு மரியாதையளிக்கும் போக்கை வளர்க்கவும் இம்மாநாடுகளில் கோரப்பட்டது. இந்த மாநாட்டைக் கூட்டுவதில் தொழிலாளர் சட்டங்கள் ஒரேதன்மை கொண்டவை யாக இருக்க வேண்டுமென்ற முந்திய மாநாடுகளின் லட்சியத்தைக் கைவிட நான் கோரப்போவதில்லை. இந்த மாநாடு பரிசீலிக்கும் நோக்கங்களில் ஒன்றாக அது இருக்கும். இத்தோடு மேலும் இரு நோக்கங்களைச் சேர்க்க நான் விரும்புகிறேன். அதாவது, தொழிற் சாலைகளில் (முதலாளிகளுக்கும் தொழிலாளர்களுக்குமிடையே ஏற்படும்) சச்சரவுகளைத் தீர்த்துவைக்க ஒரு வழிமுறையை அமைத்துக் கொடுப்பதும், தொழிலாளர்களுக்கும் முதலாளிகளுக்கும் இடையே ஏற்படும் அகில இந்திய முக்கியம் வாய்ந்த எல்லா விஷயங்கள் பற்றி விவாதிப்பதும் அந்த இருநோக்கங்கள் ஆகும். ஆக, மாநாட்டின் முன் மூன்று முக்கிய நோக்கங்களும் குறிக்கோள் களும் இருக்கும்:

1. தொழிலாளர் சட்டங்களில் ஒன்றுபட்ட தன்மையை வளர்ப்பது;

2. தொழிற்சாலைத் தகராறுகளைத் தீர்க்க வழிமுறை களை வகுப்பது;

3. முதலாளிகளுக்கும் தொழிலாளர்களுக்கும் இடையே யான அகில இந்திய முக்கியத்துவம் வாய்ந்த விஷ யங்கள் பற்றி விவாதிப்பது.

முதல் விஷயத்தைப் பொறுத்தவரை, நம்முடைய குறிக் கோள்களில் அதை ஏன் உட்படுத்தியிருக்கிறோம் என்பதை சொல்ல வேண்டியது அவசியமில்லை. பலநிர்வாக, மாகாண எல்லைகளை கொண்ட இந்தியா போன்ற ஒரு பெரிய நாட்டிற்குத் தொழிலாளர் சட்டங்கள் ஒருமித்த தன்மை கொண்டவையாக இருக்க வேண் டும் என்பது ஒரு முக்கியான விஷயமாகவே எப்போதும் இருந்து வரும் என்பது தெளிவு. எனவே சென்ற காலத்தில் போலவே வருங்காலத்திலும் அது கவனத்தைத் தொடர்ந்து ஈர்க்கும்.

## தொழில் தகராறுகள்

தொழில்தகராறுகளைப் பொறுத்தவரை, யுத்தத்தின்போது தொழிலாளர்களும் முதலாளிகளும் பொறுப்புணர்ச்சியோடு நடந்து கொண்டனர். இக்கால கட்டத்தில் நடைபெற்றவேலை நிறுத்தங் களின் எண்ணிக்கை விரிவான அளவிலோ அல்லது கவலைப்படும் அளவிலோ இல்லை. இந்த ஆண்டின் துவக்கத்தில் தொழிற்சாலை களில் கிளர்ச்சி அதிகரிக்கும் போக்கு இருந்தது. இந்தியப் பாதுகாப்பு விதி81 ஏயின் கீழ் தகராறுகளை மத்தியஸ்தத்திற்கு விடும் வழிமுறை வகுக்கப்பட்டது. சமீப மாதங்களில் இந்தப் போக்கு சற்றுக் குறைந் துள்ளது. இந்த வழிமுறை திறமையும் நம்பகமானதுமான ஏற்பாடு என்று நிரூபணமாகும் என்று நாம் நம்புகிறோம். தொழில் தகராறு களைத் தீர்த்து வைப்பதற்கு ஒரு வழிமுறையை ஏற்படுத்துவதை நாம் பிரேரபிக்க போவது இந்த மாநாட்டின் நோக்கங்களில் ஒன்றாகும்.

நமது நோக்கங்கள், குறிக்கோள்களில் ஒன்றாக கடைசி விஷயமாக நாம் வகுத்திருப்பதில் நாம் பரந்த அளவிலான வார்த்தை களை வேண்டுமென்றே உபயோகித்திருக்கிறோம். இதனால், தொழி

லாளர், முதலாளிகள் சம்பந்தப்பட்ட எந்த முக்கியமான விஷயத்தையும் மாநாடு விவாதிப்பதைத் தவிர்க்கமுடியாதுபோகும். ''அகில இந்திய முக்கியத்துவம் வாய்ந்த விஷயங்கள்'' என்னும் சொற்றொடரைப் பரந்த அளவில் உபயோகிக்கும் அளவுக்கு எங்கள் மனதில் என்ன இருந்ததை உங்களுக்குச் சொல்ல விரும்புகிறேன். தொழிலாளர் நலன் பற்றிய எல்லா விஷயங்களையும் மற்றும் தொழிலாளர்களிடையே உற்சாகத்தை ஊட்டி வளர்ப்பதையும் இதில் உட்படுத்த நாங்கள் விரும்புகிறோம். இந்த நோக்கம் கடைசி விஷயமாக வைக்கப்பட்டிருந்தாலும் அது மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்தததாகக் கருதப்பட வேண்டும் என்பதை நான் கூறத் தேவையில்லை. இதை மிகவும் அவசரமானதாக நாம் கருதுகிறோம். யுத்தத்தின் அவசியங்களால் எழுந்ததே இந்த அவசரம் என்பதை நான் சொல்ல வேண்டியதில்லை.

## தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கான யுத்தம்

இப்போதைய யுத்தம் தேவைகளைப் பூர்த்தி செய்யும் யுத்தமாகும். தேவைகளை நிறைவேற்றுவது என்பது தொழிற்சாலைகளில் அமைதி நிலவுதையே பொறுத்துள்ளது. தொழிற்சாலைகளில் அமைதியை ஏற்படுத்துவது இன்று நமக்குள்ள ஒரு அவசரமான பிரச்சினையாகும். தொழிற்சாலைகளில் அமைதி நிலவுவது இரு விஷயங்களைப் பொறுத்தது என்று நான் சொன்னால் அது தவறாக இருக்கமுடியாது. முதலாவதாக, தொழிற் தகராறுகளை விரைவாக தீர்த்து வைப்பதற்கான ஓர் அமைப்பு தயாராக இருப்பதைப் பொறுத்துள்ளது அது. இரண்டாவதாக, தொழில்துறையில் வேலைசெய்பவர்களிடையே பதற்றநிலையை ஏற்படுத்தக்கூடிய எல்லா நிலைமைகளையும் நேரம் தவறாது போக்குவதைப் பொறுத்துள்ளது. தொழிற்சாலைகளில் தகராறுகளுக்கு இட்டுச் செல்லாத சிறிய பிரச்சினைகள் அதிக எண்ணிக்கையில் உள்ளன. ஆனால் அவை பதற்றத்தை ஏற்படுத்தக்கூடிய பெரிய பிரச்சினைகள். இவ்வாறு பதற்றத்தை ஏற்படுத்தக்கூடிய விஷயங்களில் பெரும்பான்மை யானவை. சமூக நலனைப் பாதிக்கும் விஷயங்கள் எனலாம். இத்தகைய பிரச்சினைகளை அணுகுவதற்கு நம்மிடம் எந்த ஏற்பாடும் இல்லை. இதுபோன்ற விஷயங்களை அமைதியாகவும் திருப்திகரமாகவும் தீர்த்து வைப்பதற்கு சர்க்காருக்கு ஆலோசனை வழங்க ஒரு அமைப்பை உடனடியாக ஏற்படுத்துவது அவசியம் என்பதுதான் பிரதானமாக இந்த மாநாட்டைக் கூட்டியதற்கான காரணம்.

## நம்முன் உள்ள பணி

இத்தகையது இந்த மாநாட்டின் முக்கியத்துவம்; இத்தகையவையே அதன் நோக்கங்களும் குறிக்கோள்களும். இம்மாநாட்டின் முன் உள்ள கடமையைப் பொறுத்தவரை, நமது நிகழ்ச்சி நிரல் மிகச்சுருக்கமாக இருப்பதாக நீங்கள் கருதலாம். அதிக விஷயங்கள் அதில் இல்லை என்றும் நினைக்கலாம். இத்தகைய ஒரு மாநாட்டைப் பற்றிய திட்டத்தையும், அதனுடைய அமைப்பு எவ்வாறு இருக்க வேண்டும் என்பதைப் பற்றியும் நாம் ஒப்புக் கொள்கிறாமா என்ற அடிப்படை பிரச்னை மீது ஒரு முடிவு எடுக்கும் வரை நாம் இப்பொழுது முன்வைத்துள்ள நிகழ்ச்சி நிரலை விட வேறு எதையும் உங்கள் முன் நாங்கள் வைத்திருக்க முடியாது. நிலைமை இதுவாக இருப்பதால் நான் இப்பொழுது செய்யக் கூடியது கீழ்க்கண்ட விஷயங்கள் பற்றி முடிவு எடுக்கும்படி உங்களுக்கு அறைகூவல் விடுப்பதுதான்:

1. தொழிலாளர் மாநாட்டை குறைந்த வருடத்திற்கு ஒரு முறைகூடும். ஒரு நிரந்தர ஸ்தாபனமாக அமைத்தல்,

2. இந்த மாநாட்டின் நிரந்தர ஆலோசனைக்குழுவை அமைத்தல்; எப்பொழுதெல்லாம் அரசாங்கம் அழைக்கிறதோ அப்பொழுதெல்லாம், இந்த ஆலோசனைக்குழு அதன்முன் வைக்கப்படும் விஷயங்கள் பற்றி அரசுக்கு ஆலோசனை வழங்குதல்;

3. இந்த அமைப்புகளை நிறுவுவதற்கான வழிமுறைகளை பொதுவான முறையில் வகுத்தல்.

இந்த அமைப்புகளை நிறுவுவது சம்பந்தப்பட்டவரை, இம்மாதிரியான முக்கூட்டு மாநாட்டிற்கு மிகவும் பொருத்தமானது என்று நாங்கள் கருதுகிற திட்டத்தை உங்கள் முன் வைக்க விரும்புகிறோம். இரு அமைப்புகளை நிறுவ வேண்டுமென்று நாங்கள் முன்மொழிகிறோம்:

1. ஒரு விரிவடைந்த தொழிலாளர் மாநாடு, 2. ஒரு நிரந்தர ஆலோசனைக் குழு.

மத்திய சர்க்கார், மாகாண சர்க்கார், சமஸ்தான சர்க்கார், முதலாளிகள், தொழிலாளர்கள் ஆகியவர்களின் பிரதிநிதிகளைக்

கொண்டதாக இருக்கும் விரிவடைந்த மாநாடு. பொதுவாக ஒவ்வொரு மாகாணமும், ஒவ்வொரு பெரிய சமஸ்தானமும் இதில் பிரதிநிதித்துவம் பெற உரிமை பெற்றிருக்கும். பிரதிநிதித்துவம் பெறாத சமஸ்தானங்களின் சார்பில் மன்னர்களின் சபை நியமிக்கும் ஒருவர் அவற்றைப் பிரதிநிதித்துவப்படுத்துவார். தொழிலாளர்கள் மற்றும் முதலாளிகளின் முக்கிய அமைப்புகளுக்கும் பிரதிநிதித்துவம் அளிக்கப்படும். தொழிலாளர்களின் பல்வேறு பிரிவினர் போதுமான பிரதிநிதித்துவம் பெறவில்லையென சர்க்கார் கருதினால் அவர்களின் பிரதிநிதிகளை நியமனம் செய்ய அரசாங்கத்துக்கு உரிமையுண்டு. விரிவடைந்த மாநாடு சம்பந்தப்பட்டவரை, சர்க்கார் பிரதிநிதிகளுக்குச் சம எண்ணிக்கையில் முதலாளிகளுக்கும் தொழிலாளர்களுக்கும் பிரதிநிதித்துவத்தை உறுதி செய்வது சாத்தியமாக இருக்காது.

## நிரந்தர ஆலோசனைக் குழு

நிரந்தர ஆலோசனைக் குழுவை நிறுவுவதில் மிகுந்த கண்டிப்பும் கட்டுப்பாடும் கடைப்பிடிக்கப்படும் என்பதை உங்கள் முன் வைக்கப்போகிற தீர்மானத்தின் வாசகத்திலிருந்து தெரிந்து கொள்வீர்கள்; பிரதிநிதித்துவம் பின்வருமாறு அமைந்திருக்க வேண்டுமென நாங்கள் பிரேரேபிக்கிறோம் :

1. இந்திய அரசாங்கத்தின் பிரதிநிதிகள், 2. மாகாணங்களின் பிரதிநிதிகள், 3. சமஸ்தானங்களின் பிரதிநிதிகள் 4. முதலாளிகளின் பிரதிநிதிகள் 5. தொழிலாளர்களின் பிரதிநிதிகள். மத்திய சர்க்காரின் தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அதன் தலைவராக இருப்பார்.

சர்வதேச சங்கத்தின் சார்பில் நிறுவப்பட்ட நிர்வாகக்குழு அமைக்கப்படுவதற்கு அடிப்படையாக அமைந்த கோட்பாடுகளை சாத்தியமான அளவு நிரந்தர ஆலோசனைக்குழுவை அமைப்பதற்கான யோசனையாக முன்வைக்கிறோம். சர்வதேசத் தொழிலாளர் அலுவலகத்தின் நிர்வாகக்குழுவை அமைப்பதில் மூன்று கோட்பாடுகள் அடிப்படையாகக் கொள்ளப்பட்டுள்ளன என்று என் மனதிற்குத் தோன்றுகிறது. முதலாவது, அரசுப் பிரதிநிதிகளுக்கும், அரசு சாராத பிரதிநிதிகளுக்கும் சமத்துவப் பிரதிநிதித்துவம் வழங்குதல். ஷரத்து 7, பிரிவு 1ல் இதற்கு வழிவகை செய்யப்பட்டுள்ளது.

இதன்படி, 32 பிரதிநிதிகளில் 16 பேர் அரசாங்கங்களைப் பிரதி நிதித்துவப்படுத்துவர்; 16பேர் முதலாளிகளையும் தொழிலாளர் களையும் பிரதிநிதித்துவப்படுத்துவர்; இந்தக் கோட்பாட்டைப் பின்பற்றி நாங்கள் 10 இடங்களை அரசாங்கத்துக்கும் 10 இடங் களைத் தொழிற்சாலைகளுக்கும் வழங்குகிறோம்.

சர்வதேசத் தொழிலாளர் அலுவலகம் பின்பற்றும் இரண் டாவது கோட்பாடு முதலாளிகளுக்கும் தொழிலாளர்களுக்கும் இடையே சம எண்ணிக்கையில் பிரதிநிதித்துவம் அளிப்பதாகும். அதே ஷரத்தில் இதற்கு வழிவகைசெய்யப்பட்டுள்ளது; அதன்படி அரசுசாராத 16 இடங்கள் முதலாளிகளுக்கும் தொழிலாளர்களுக்கும் சமமாகப் பிரித்து கொடுக்கப்படுகின்றன. இக்கோட்பாட்டைப் பின்பற்றி, தொழில்துறைக்கு ஒதுக்கப்பட்ட 10 இடங்களை தொழி லாளர்களுக்கும் முதலாளிகளுக்கும் நாங்கள் சமமாகப் பிரித்துக் கொடுக்கிறோம்.

## மூன்றாவது கோட்பாடு

சில குறிப்பிட்ட நலன்களுக்குப் பிரதிநிதித்துவம் அளிப்பது சர்வதேச தொழிலாளர் நிறுவனம் பின்பற்றும் மூன்றாவது கோட்பாடு. இதை 7வது ஷரத்தில் காணலாம்; இந்த ஷரத்தின் பிரிவு (2) -இன்படி 16 இடங்களில் ஐரோப்பா - அல்லாத நாடு களுக்கு 6 இடங்கள் ஒதுக்கப்படுகின்றன. பிரிவு (4) - இன்படி முத லாளிகளின் ஒதுக்கீட்டிலிருந்து இரண்டு இடங்கள் ஐரோப்பா அல்லாத நாடுகளுக்கு ஒதுக்கப்படுகின்றன. முதலாளிகளுக்குக் கொடுக்கப்படும் கோட்டாவிலிருந்து ஒன்றும், தொழிலாளர் களுக்குக் கொடுக்கப்படும் கோட்டாவிலிருந்து ஒன்றும் மத்திய சர்க்காரின் தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் நியமனம் செய் வதற்கு வழிவகை செய்வதன் மூலம் இந்தக் கோட்பாட்டை நாங்கள் கடைப்பிடிக்க விரும்புகிறோம். முதலாளிகள், தொழிலாளர்களின் பிரதான ஸ்தாபனங்களால் பிரதிநிதித்துவப்படுத்துவதைத் தவிர ஏனைய சிலநலன்களுக்கு ஓரளவு பிரதிநிதித்துவம் அளிப்பதை இது உத்திரவாதம் செய்யும். இந்த யோசனைகளில் அடங்கியுள்ள நியாயமும் நேர்மையும் உங்களைக் கவரும் என்றும், இந்த யோசனைகளுக்குத் தங்களின் ஒப்புதலை அளிப்பதில் சிரமம் எதுவும் இருக்காது என்றும் நம்புகிறேன்.

இந்த அமைப்புகளை மத்தியில் உருவாக்கிக் கொண்டிருக் கிறோம். ஆனால் மத்திய சர்க்காரை விட மாகாண சர்க்கார்களைப் பற்றித்தான் தொழிலாளர் அதிகம் அக்கறை கொண்டிருக்கிறார்கள் என்பதைத் தாங்கள் நன்கு அறிவீர்கள்; மத்தியில் அமைக்கப்படும் அமைப்புக்கு கீழ்மட்டத்திலிருந்து ஆதரவு தேவைப்படும்; எனவே இத்தகைய அமைப்புகளை உருவாக்க மாகாண அரசாங்கங்கள் மத்திய அமைப்பு சமாளிக்கும் விஷயங்கள் குறித்து ஆவன செய்ய விரும்பினால் இந்தப் பொதுவான விஷயம் பற்றிய எந்த யோசனை யையும் நாங்கள் உற்சாகத்துடன் வரவேற்போம் என்று மத்திய அரசாங்கம் சார்பில் வாக்குறுதி அளிக்கிறேன்.

## விரிவடைந்த தொழிலாளர் மாநாடும் நிரந்தர குழுவும் அமைத்தல்

முக்கூட்டுத் தொழிலாளர் மாநாட்டில், ஒரு விரிவடைந்த தொழிலாளர் மாநாட்டையும் ஒரு நிரந்தரக்குழுவையும் நிறுவுவதென ஒரு தீர்மானம் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டது.

மத்திய, மாகாண அரசுகள், சில சமஸ்தானங்கள், தொழி லாளர்களின் எல்லா முக்கிய ஸ்தாபனங்கள் ஆகியவற்றின் பிரதி நிதிகளாக மாநாட்டில் 50 பேர் கலந்து கொண்டனர்; மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் மாநாட்டைத் துவக்கி வைத்தார்.

முதலாளிகள் மற்றும் தொழிலாளர்களின் பிரதிநிதிகள் மாநாட்டின் குறிக்கோள்களுக்கு முழு ஆதரவு அளித்தனர்.

அகில இந்திய தொழிற்சங்கக் காங்கிரசின் தலைவர் திரு. வி.வி.கிரி தொழிலாளர் மாநாடு என்ற இந்த அமைப்பு உருவாக்கப் பட்டதை வரவேற்றார். விவாதங்களில் தீவிரமாக ஈடுபடுவதோடு மட்டுமல்லாமல், தொழிலாளர் முன்னேற்றம் பற்றிய பிரச்சினை யிலும் தொழிற்சாலைகளில் சுமூக நிலையை ஏற்படுத்துவதிலும் அது அக்கறை கொள்ளும் என்று நம்பிக்கை தெரிவித்தார்.

இந்தியத் தொழிலாளர் சம்மேளனத்தின் தலைவரான திரு. ஜம்னாதாஸ் மேத்தா, இந்த மாநாட்டு அமைப்பு, குறிப்பாக இந்த நெருக்கடியான காலகட்டத்தில், தொழிற்சாலைகளில் சுமூக

நிலையையும் திருப்தியையும் ஏற்படுத்த பாடுபட வேண்டுமென்று சொன்னார்.

இரண்டு அகில இந்தியத் தொழில் அதிபர்கள் சங்கங்களின் தலைவர்களான சர்.ஏ.ஆர்.தலாலும் திரு. ஸ்ரீராமும் தத்தம் பிரதிநிதி குழுக்களுக்குத் தலைமை வகித்தனர். சமஸ்தான மன்னர்கள் சபையின் பிரதிநிதிகளும் ஹைதராபாத், பரோடா, குவாலியர் ஆகியவற்றின் பிரதிநிதிகளும் விவாதங்களில் பங்குகொண்டனர். இந்திய சமஸ்தானங்கள் பங்கேற்றதை எல்லாப் பிரதிநிதிகளும் முழுமனதாக வரவேற்றனர்.

விரிவடைந்த மாநாடு 44 உறுப்பினர்களைக் கொண்டதாக இருக்கும் இந்திய சர்க்காரின் தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அதன் தலைவராக இருப்பார். பல்வேறு அரசாங்கங்களை 22 உறுப்பினர்கள் பிரதிநிதித்துவப்படுத்துவர்; 11 பேர் தொழிலாளர்களையும் 11 பேர் தொழிலதிபர்களையும் பிரதிநிதித்துவப் படுத்துவர்.

இதேம்மாதிரி நிரந்தரக்குழு 20 உறுப்பினர்களைக் கொண்டதாகவும் தொழிலாளர் நலத்துறை உறுப்பினரைத் தலைவராகக் கொண்டதாகவும் இருக்கும்; ஒருபக்கம் சர்க்காரின் பிரதிநிதிகளும் மறுபக்கம் தொழிலதிபர்கள் - தொழிலாளர்களின் பிரதிநிதிகளும் சம எண்ணிக்கையில் இருப்பர். மாநாட்டுக்குத் தலைமைதாங்கிய மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர், தொழிலதிபர்கள் மற்றும் தொழிலாளர்களுடைய எல்லா அமைப்புகளின் பிரதிநிதிகளும் அத்தகைய ஸ்தாபனங்களின் ஒப்புதலுடன் நியமிக்கப் பட வேண்டும் என்ற கோட்பாட்டை இந்திய அரசாங்கத்தின் சார்பில் ஏற்றுக் கொண்டார்.



# 4

# [1]இந்திய மண்ணியல் மதிப்பாய்வு நிறுவனப் பயன்பாட்டுக் கிளையின் ஆலோசனைக் குழுவுக்கு ஓர் உறுப்பினரைத் தேர்ந்தெடுத்தல்

*டாக்டர்.பி.ஆர்.அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): ஐயா, பின்கண்ட தீர்மானத்தை முன்மொழிகிறேன்;*

> மண்ணியல் மதிப்பாய்வு நிறுவனப் பயன்பாட்டுக் கிளையின் பணிகள் சம்பந்தப்பட்ட பிரச்சினைகள் பற்றி ஆலோசனை வழங்க இந்திய அரசாங்கம் அமைத்துள்ள ஆலோசனைக் குழுவில் செயல்படுவதற்கு, மாண்பு மிகு தலைவர் ஆணையிடும்முறையில், சட்டமன்ற உறுப்பினர் ஒருவரைத் தேர்ந்தெடுக்க இந்த சட்டமன்றம் நடவடிக்கை மேற்கொள்கிறது.''

*தலைவர் (மாண்புமிகு சர். அப்துல் ரஹீம்): முன்மொழிவு விவாதத்திற்கு முன்வைக்கப்படுகிறது:*

> 'இந்திய மண்ணியல் மதிப்பாய்வு நிறுவனத்தின் பயன்பாட்டுக் கிளையின் பணிகள் சம்பந்தப்பட்ட பிரச்சினைகள் பற்றி ஆலோசனை வழங்க இந்திய அரசாங்கம் அமைத்துள்ள ஆலோசனைக் குழுவில் செயல்படுவதற்கு மாண்புமிகு தலைவர் ஆணையிடும் முறையில் சட்டமன்ற உறுப்பினர் ஒருவரை தேர்ந்தெடுக்க இந்த சட்டமன்றம் நடவடிக்கை மேற்கொள்கிறது.''

*[2]மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: மதிப்பிற்குரிய என் நண்பருக்கு என்னுடைய கன்னி உரையைக்கேட்கும் வாய்ப்பு கிட்டவில்லை என்பது உண்மைதான். எனது வாழ்நாளில் பல உரைகளை ஆற்றியிருக்கிறேன். ஒரு கன்னி உரையை ஆற்றுவதற்கு அஞ்சுவேன் என நான் நினைக்கவில்லை.*

*இந்தத் தீர்மானத்தை ஆதரித்து நான் பேசாததற்குக் காரணம் இந்த சபைக்கு இந்தத் துறை தெரியப்படுத்தத் தயாராக இல்லாத ஒரு மூடிமறைக்கப்பட்ட விஷயம் ஏதோ இருக்கிறது என்று எனது நண்பர் சுட்டிக் காட்டினார். இந்தத் தீர்மானம் குறித்து நானோ,*

---

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, செப்டம்பர் 14, 1942, பக்கம் 76.
2. மேற்படி, பக்கங்கள் 78-79.

அல்லது இந்திய அரசாங்கமோ வெட்கப்படக்கூடிய எதுவும் இருப்பதாக நான் நினைக்கவில்லை என மதிப்பிற்குரிய உறுப் பினருக்கு நான் உறுதியளிக்க முடியும்.

இந்தத் தீர்மானத்தை நான்முன்மொழிந்தபோது இத்தகைய தீர்மானங்கள் பற்றி எவ்வாறு முடிவுசெய்யப்படுமோ அவ்வாறே இதுவும் முடிவு செய்யப்படும் என்று நான் நினைத்தேன். எனது நண்பர் இந்த விஷயங்களை எழுப்புவார் என்று கிஞ்சித்தேனும் தோன்றியிருந்தால் இந்தப் பிரச்சினைகள் பற்றி விவரங்களுடன் வந்திருப்பேன்.

*மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர்:* இந்த அவையின் நடை முறையை தாங்கள் அறிந்திருக்க வேண்டும்.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:* நான் அவைக்கு புதியவன், இந்த அவை சற்று அதிகம் பெருந்தன்மை காட்டுமென எதிர்பார்க் கிறேன்; இந்தத் தீர்மானத்தை விவாதிக்க அனுமதிக் கும் முன் எனது நண்பரிடம் தகவல்கள் இருந்தால் இந்த விவாதம் பின்பு ஒரு தேதிக்கு ஒத்திவைக்கப்படலாம் என்பது என் யோசனை. அப்பொழுது எனது நண்பர் விரும்பும் தகவல்களை நான் அளிக்க முடியும்.

*திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரஹீம்):* கனம் உறுப்பினர் (திரு. நியோகி) ஒரு கேள்வியை எழுப்புவதன் மூலம் அவர் விரும்பும் தகவல்களைப் பெறமுடியும். இந்தத் தீர்மானம் ஒத்திவைக்கப்பட வேண்டும் என்பது அவையின் விருப்பம் என்று நான் ஊகிக்கிறேன்.

(குரல்கள் ''ஆம்'')

விவாதம் ஒத்திவைக்கப்படுகிறது.



# 5

## இந்தியாவில் உள்ள நிலைமை

*தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரஹீம்):* தீர்மானத்தின் மீது அவை விவாதத்தைத் துவங்கும்.

> 'இந்தியாவில் தற்போது உள்ள நிலைமை பற்றி பரிசீலனை செய்ய வேண்டும்.''

★ ★ ★

[1]*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்):* ஐயா, கடந்த இரண்டு அல்லது மூன்று நாட்களாக பிரேரனையின் மீது நடந்துகொண்டிருக்கும் விவாதம் இந்த அவையின் உறுப்பினர்கள் இரண்டு திட்டவட்டமான கருத் தோட்டங்களை கொண்டிருக்கிறார்கள் என்பதைக் காண்பிக்கிறது. காங்கிரஸ் உறுப்பினர்களை கைது செய்ததும் திடீரென வெடித்த பலாத்கார இயக்கத்தை நசுக்க அரசாங்கம் எடுத்த நடவடிக்கை நியாயமற்றது என்பது ஒரு கருத்தோட்டம். அரசாங்கம் எடுத்த நடவடிக்கை முற்றிலும் நியாயமானது என்று அவையின் ஒரு பகுதி கருதுகிறது. இம்மாதிரியான நிலைமையில் அவையின் ஒரு பகுதி எடுத்த நிலையை மற்றபகுதி மறுதலிக்கிறது என்ற காரணத்திற் காக, இந்த விவாதத்தில் தாங்கள் தலையிடுவது அவசியமற்றது என அரசாங்கம் கூறமுடியும். ஆனால் உறுப்பினர் கூறியதிலிருந்து, அரசாங்க உறுப்பினர்கள், குறிப்பாக நிர்வாகக் கவுன்சிலில் அங்கம் வகிக்கும் இந்திய உறுப்பினர்கள், இந்த விஷயத்தை அப்படியே விடுவதை அனுமதிப்பது சரியாக இருக்காது என்று எனக்குத் தோன்று கிறது. அவையின் ஒரு பகுதி மீது பொறுப்பை சுமத்துவதை விட, உறுப்பினர்கள் தங்கள்மீது சுமையை எடுத்துக்கொள்ள வேண்டியது மிக அவசியம் என்று நான் கருதுகிறேன்; எனவே, நடவடிக்கை நியாயமற்றது என்று கருதும் அவையின் ஒரு பகுதி எழுப்பிய சில விஷயங்களை எடுத்து கொள்ள விழைகிறேன். எழுப்பப்பட்ட முக்கிய விஷயங்கள் இரு வகையானவை; சிலவிஷயங்கள் அவற் றின் முக்கியத்துவத்திலும் தன்மையிலும் குறிப்பிடத்தக்கவை; சில

---

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, செப்டம்பர் 18, 1942, பக்கம் 281-287.

*விஷயங்கள் பொதுவான முக்கியத்துவத்திலும் தன்மையிலும் குறிப் பிடத்தக்கவை; சில விஷயங்கள் பொதுவான முக்கியத்துவம் மட்டு மன்றி பொதுவான விஷயங்கள் பற்றியும் பேசுவது விரும்பத்தக்க தாயினும், நேரம் மிகக் குறைவாக இருப்பதால், பதிலளிப்பதற்கு எழுப்பப்பட்ட சில குற்றச்சாட்டுகளைத்தான் ஒருவர் தேர்ந்தெடுக்க வேண்டும். எனவே சர்க்காருக்கு எதிரான குற்றச்சாட்டுகள் குறித்து எனது கருத்துக்களை தெரிவிக்க விரும்புகிறேன். சர்க்காரை விமர் சிப்பவர்கள், காங்கிரஸ் உறுப்பினர்களை சர்க்கார் கைது செய்தது நியாயமல்ல என்று கூறினர்; அவர்களது வாதத்தை நான் சரியாகப் புரிந்து கொண்டேன் என்றால், அவர்களது வாதம்: காங்கிரஸ் அகிம்சையில் நம்பிக்கை வைத்துள்ள ஸ்தாபனம், காங்கிரஸை சுயமாக இயங்க அனுமதித் திருந்தால் பலாத்காரம் தோன்றுவதை தடுத்து நிலைமையை கட்டுப் படுத்தியிருக்கமுடியும் என்பதாகும். அகிம்சை என்ற கோட்பாட்டைப் பொறுத்தவரை கடந்த இரண்டு ஆண்டுகளாக காங்கிரஸுக்கும் காரியக் கமிட்டி உறுப்பினர்களுக் கும் என்ன நேர்ந்தது என்பதை இந்த வாதத்தை முன்வைக்கும் உறுப்பினர்கள் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை என்று எனக்குத் தோன்றுகிறது. கடந்த இரண்டு மூன்று ஆண்டுகளில் காங்கிரஸின் கூட்ட நடவடிக்கைகளைப் படித்துப் பார்த்தபோது, காங்கிரஸ் பிரகடனப்படுத்தும் அகிம்சை என்ற கோட்பாட்டில் பயங்கரமான சரிவு ஏற்பட்டுள்ளது என்ற கருத்து எனது மனதில் பதிந்தது. அகிம்சை ஆழமாகக் குழிதோண்டி புதைக்கப்பட்டு விட்டது. இவ்வாறு கூறுவதில் எனக்கு எந்தத் தயக்கமும் இல்லை.*

*அவைக்கு சில உண்மைகளை எடுத்துக் கூறுகிறேன். ஐயா! 1939 டிசம்பர் 22ம்தேதி, சட்டமறுப்பு என்ற அச்சுறுத்தலை காங்கிரஸ் முதலில் வெளியிட்டது. 1940 மார்ச் 19ல், காங்கிரஸின் வருடாந்தர மகாசபை ராம்ஹாரில் நடைபெற்றது. அந்த வருடாந் தரப் பொதுசபைக் கூட்டத்தில் திரு. காந்தி சர்வாதிகாரியாக ஆக்கப் பட்டார். போராட்டத்தை தலைமை தாங்கி நடத்தும் முழுப் பொறுப்பும் அவருக்கு அளிக்கப்பட்டது. இந்த தீர்மானத்தின்படி, திரு.காந்தி தலைமை தளபதி ஆனார். ஆனால் 1940 ஜூன் 22ம் தேதி, அதாவது மூன்று மாதங்களுக்குள், பிரதான தளபதி பொறுப் பிலிருந்து திரு.காந்தி அகற்றப்பட்டார். அகிம்சைதான் தங்களது வழிகாட்டுநெறி என்ற கோட்பாட்டைக் காரியக் கமிட்டி ஏற்க மறுத்தது; திரு.காந்தி தமது ராஜிநாமாவைச் சமர்ப்பிக்க வேண்டிய தாயிற்று.*

டாக்டர். பி.என்.பானர்ஜி (கல்கத்தா புறநகர் பகுதி: முகமதியரல்லாத நகரப் பகுதி): அது யுத்தம் சம்பந்தமாக.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: தயவுசெய்து என்னை இடைமறிக்காதீர்கள்.

1940 டிசம்பர் 15ல் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி பம்பாயில் கூடியது. திரு. காந்தியை மீண்டும் பிரதான தளபதியாக்கும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது; போராட்டத்தை நடத்தும் படியும் அவரைத் தீர்மானம் கேட்டுக் கொண்டது. 1941 டிசம்பர் வரை திரு. காந்தி தொடர்ந்து தளபதியாக இருந்தார். 1941 டிசம்பரில் ஒரு காரியக்கமிட்டிக் கூட்டம் பர்டோலியில் நடைபெற்றது. திரு. காந்தியை மீண்டும் அந்தப் பதவியிலிருந்து நீக்கும் தீர்மானம் நிறைவேறியது. டிசம்பர் 1941ல் ஏற்பட்ட நிகழ்வின் முக்கிய அம்சத்தை இந்த அவையின் உறுப்பினர்கள் நன்கு அறிந்திருக்கவில்லை என்று நினைக்கிறேன். ஒருபுறம் திரு. காந்திக்கும் அகிம்சையில் முழு நம்பிக்கைகொண்ட அவரை பின்பற்றுபவர்களுக்கும், மற்றொரு புறம் அகிம்சையில் நம்பிக்கையில்லாத காரியக்கமிட்டியின் மற்ற உறுப்பினர்களுக்கும் இடையே கருத்து வேறுபாட்டால் பிளவு ஏற்பட்டது. வார்தாவில் கூடிய அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தின் முன் அதன் முடிவுக்காக இந்தப் பிரச்சினை வைக்கப்பட்டது. இந்தப் பிரச்சினை மீது ஒரு முடிவு எடுக்கும்படி திரு. காந்தி செய்வார் என்று இந்தியாவில் ஒவ்வொருவரும், குறிப்பாக காரியக் கமிட்டி உறுப்பினர்கள் எதிர்பார்த்தனர்; அதாவது பர்டோலியில் நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தை வாபஸ் பெற செய்வது அல்லது அவரால் அது முடியவில்லையெனில் அவர் ராஜினாமா செய்வார் என எதிர்பார்த்தனர். வார்தாவில் அந்தத் தீர்மானம் அங்கீகாரத்திற்காக அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி முன்வந்த போது, மிகவும் ஆச்சரியப்படத்தக்க ஒரு காரியத்தை திரு.காந்தி செய்தார். அகிம்சையின் காவலரான அவர் இந்தத் தீர்மானத்தை வாக்கெடுப்புக்கு விடுமாறு வற்புறுத்த வேண்டாமென தம்மைப் பின்பற்று வோருக்கு ஆணையிட்டார். அதுமட்டுமல்ல; காங்கிரஸ் காரியக் கமிட்டியுடன் தம்மை இணைத்துக் கொண்டு பிரதான தளபதியாகத் தொடர்ந்து இருந்து வந்தார். காங்கிரஸ் முன்னாலேயே - திரு. காந்தியின் முன்னாலேயே - பலாத்காரம் என்ற உணர்வு

காங்கிரஸை ஆட்கொண்டது; இந்த விஷயத்தில் இதைவிட வேறு நல்ல ருசு எவரால் அளிக்க முடியும் என்பது எனக்குத் தெரியாது.

மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் தெரிந்து கொண்டிராத மற்றொரு விஷயமும் இருக்கிறது என நினைக்கிறேன்; அதுபற்றி கொஞ்சம் விவரங்களை அளிக்க விரும்புகிறேன். காங்கிரஸ் காரியக் கமிட்டி உறுப்பினர்கள் அநேகமாக எல்லோரும் - எப்படியும் அவர்களில் மிகப் பெரும்பான்மையோர் இந்தக்கோட்பாட்டின் மீது அக்கறையற்றவர்களாக ஆகிவிட்டனர் என்பது உண்மை மட்டுமல்ல; திட்டமிட்ட பலாத்கார இயக்கத்திற்காக காங்கிர சுக்கு உள்ளேயே ஒரு முயற்சி இருந்தது என்பதைக் காட்டுவதற்கு போதுமான ருசு உள்ளது.

*சர்தார் சாந்த் சிங்:* யுத்தத்தைப் பொறுத்தவரை......

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** தயவுசெய்து எனக்கு தடங்கல் ஏற்படுத்தாதீர்கள்.

*சர்தார் சாந்த் சிங்:* தவறான விஷயங்களை நீங்கள் கூறு கிறார்கள்.

***மதிப்பிற்குரிய சில உறுப்பினர்கள்:*** அது உண்மை அல்ல. அதற்கு ருசு இல்லை.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:*** தவறான எந்த விஷயத்தையும் நான் கூறவில்லை. ஒரு சான்று பற்றி அவையில் இதுவரை குறிப்பிடவில்லை; அதைப் பற்றி குறிப்பிட விரும்பு கிறேன்.

திரு. ஜெயப்பிரகாஷ் நாராயணன் காவலில் வைக்கப்பட் டிருந்த தியோலி பாதுகாப்பு முகாமில் ஒரு நிகழ்ச்சி நடந்தது. திரு.ஜெயப்பிரகாஷ் நாராயணன் தமது மனைவியாருக்கு சிறைக்கு வெளியே ரகசியமாக அனுப்ப முயன்ற சில ஆவணங்களைக் கைப்பற்றுவதில் அந்தப் பாதுகாப்பு முகாமின் கண்காணிப்பாளர் வெற்றிபெற்றார் என்பதை இந்த அவை அறிந்திருக்கலாம். இந்த சம்பவம் 1941 டிசம்பரில் நிகழ்ந்தது; காங்கிரஸுக்கு உள்ளே -

காரியக் கமிட்டிக்கு உள்ளே என்ன நடந்து கொண்டிருந்தது என்பதைத் தெரிந்து கொள்ள விரும்பும் எவரும் அந்த ஆவணம் பற்றி மிக அதிக கவனத்தைச் செலுத்தியாக வேண்டும். அந்த ஆவணம் நான்கு, ஐந்து விஷயங்களை வெளிப்படுத்துகிறது. முதலாவதாக, திரு.ஜெயப்பிரகாஷ் நாராயணனின் வார்த்தைகளையே இங்கு உபயோகிக்கிறேன். திரு. காந்தி நடத்தி வந்த சத்தியாக்கிரகம், பெரும்பாலான காங்கிரஸ்காரர்கள் ஏற்றுக்கொண்ட அந்த சத்தியாக்கிரகம் மதியீனமான ஒரு கேலிக்கூத்தாகும்; அது விவேகமற்றது, பொருளற்றது. இரண்டாவதாக, தனது லட்சியத்தை அடைய காங்கிரஸ் விரும்பினால், தார்மிக வெற்றிகளை அடையும் முயற்சியை விட்டு விட்டு அரசியல் வெற்றிகளை அடைய முயல வேண்டும் என்று திரு. ஜெயப்பிரகாஷ் நாராயணன் கருதினார். திரு. காந்திக்கு எதிரான தாக்குதலாகும் அது. அந்த ஆவணம் வெளிப்படுத்தும் இரண்டாவது உண்மை என்னவெனில், அகிம்சையில் நம்பிக்கை இல்லாத, ஆனால் வன்முறையில் நம்பிக்கை கொண்ட சில கட்சிகள் இந்தியாவில் உள்ளன என்பதாகும். இவை எல்லாம் காங்கிரஸுக்குள் செயல்படுகின்றன; அவை: இந்தியக் கம்யூனிஸ்டுக் கட்சி, வங்காளத்திலுள்ள புரட்சிகர சோஷலிஸ்டுக் கட்சி, காங்கிரஸ் சோஷலிஸ்டுக் கட்சி, இந்துஸ்தான் சோஷலிஸ்டுக் குடியரசுச் சங்கம். இந்த அமைப்புகளெல்லாம் ஒரே ஸ்தாபனமாக இணைக்கப்பட வேண்டுமென்பது திரு.ஜெயப்பிரகாஷ் நாராயணனின் திட்டமாக இருந்தது; இந்த ஒன்றுபட்ட ஸ்தாபனம் காங்கிரஸுக்குள் செயல்படும் ரகசியக் கட்சியாக இருக்க வேண்டும்; அது தலைமறைவாக பணியாற்ற வேண்டும். இந்த ரகசியக் கட்சி காங்கிரஸுக்கு உள்ளே இருக்க வேண்டுமென்பது மட்டுமல்லாமல், அதன் கொள்கையை செயல் படுத்துவதற்கான நிதியை பெறுவதற்காக அரசியல் கொள்ளைகளை நடத்த வேண்டும் என்றும் திரு. ஜெயப்பிரகாஷ் நாராயணன் யோசனை கூறினார். நான் குறிப்பிட்ட இரண்டு விஷயங்கள், அகிம்சைக் கோட்பாட்டை பெயரளவில் மட்டும், உதட்டளவில் மட்டும் கூறிவரும் காங்கிரஸை நம்ப முடியாது என்ற உண்மையை நியாய உணர்வு படைத்தவர்களை ஒத்துக்கொள்ள செய்ய முடியா தெனில், நியாயமான ஒரு மனிதரை நம்பவைக்க இதைவிட வேறு நல்ல அத்தாட்சி இருக்க முடியுமா என்பதை நான் அறியேன். ஐயா! அரசாங்கம் நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டிய நிர்ப்பந்தத்துக்கு உள்ளான சூழ்நிலைமைகளில் இதுவும் ஒன்றாகும்.

என்னுடைய இந்தக் கன்னி உரையில் நான் குறிப்பிட்டுக் கூற விரும்பும் இரண்டாவது விஷயத்திற்கு வருகிறேன். அன்று நிலவிய சூழ்நிலைமைகளில் அடக்குமுறை நியாயப்படுத்தப்படலாம் என்றாலும், அடக்குமுறையோடு நிறுத்திக் கொள்வது சர்க்காரின் கடமையாக இருக்க முடியாது என்றும், சில ஆக்க பூர்வமான நடவடிக்கைகளை சர்க்கார் அவசியம் எடுத்திருக்க வேண்டும் என்றும் எதிர்க்கட்சி உறுப்பினர்கள் கூறினர். ஆக்கபூர்வமான நடவடிக்கைகள் பற்றி அவையின் பல்வேறு பகுதிகள் கூறியவற்றை ஒருவர் பரிசீலிக்க வேண்டுமெனில், அளிக்கப்பட்ட ஆலோசனைகள் விசித்திரமானதாகவும் குழப்பத்தை அளிக்கும் கதம்பமாகவும் உள்ளதைக் கண்டு ஆச்சரியப்படாமல் இருக்க முடியாது. எனவே அவற்றில் ஒன்றே ஒன்றை தேர்ந்தெடுக்கிறேன்; திட்டவட்டமானதாகவும் பரிசீலிக்கக் கூடியதாகவும் அது தோன்றுகிறது. இன்றைய சர்க்கார் மாற்றப்பட்டு, புனரமைக்கப்பட்டு ஒரு தேசிய சர்க்காராக செயல்பட வேண்டுமென்று ஆலோசனை அளிக்கப்பட்டது. இந்த ஆலோசனை பற்றி நான் வலியுறுத்திக் கூற விரும்பும் விஷயத்தை அவைமுன் எடுத்துக் கூறுவதை சாத்தியமாக்க, இன்றைய சர்க்கார் எத்தகையது, அதன் தன்மை என்ன என்பதைக் கூறத் துவங்கினால் உசிதமாக இருக்கும். மதிப்பிற்குரிய உறுப்பினர்களுக்கு தெரிந்திருப்பதுபோல், இந்திய அரசாங்க சட்டத்தின் 33வது பிரிவு கூறுவது என்னவெனில், இந்தியாவின், சிவில் மற்றும் ராணுவ சர்க்காரைக் கண்காணித்து வழிநடத்தி கட்டுப்படுத்தும் அதிகாரத்தை கவர்னர்-ஜெனரலின் நிர்வாக சபைக்கு அளிக்கிறது. நான் ஓரளவுக்கு அரசியல் சட்ட சம்பந்தமான வழக்கறிஞர். நான் என்னை ஒரு நிபுணன் என்று உரிமை கொண்டாடவில்லை; ஆனால் அரசியல் சட்ட விவகாரத்தில் என்னை ஒரு மாணவன் என்று கூறமுடியும்; இந்த 33வது பிரிவைப் பரிசீலித்து, அமுலில் உள்ள பிற நாடுகளின் அரசியல் சட்டங்களோடு ஒப்பிட்டு, எந்த தன்மையான சர்க்காரை இந்திய மக்கள் விரும்புகிறார்கள் என்பதையும் ஓரளவு கணக்கில் கொண்டு பார்த்தால், அளவற்ற முக்கியத்துவம் வாய்ந்த இரு குணாம்சங்களை உடைய சர்க்காரை இந்தப் பிரிவு அளிக்கிறது எனக் கூறுவதில் எனக்கு தயக்கம் எதுவுமில்லை. இந்த சர்க்கார் பெற்றுள்ள ஒரு குணாம்சம் என்னவெனில் அது யதேச்சாதிகாரத்தை முற்றிலுமாக விலக்குகிறது. இந்த அரசாங்கம் பெற்றுள்ள மற்றொரு குணாம்சம் அது கூட்டுப்பொறுப்பை ஏற்படுத்துகிறது; இந்திய மக்களுக்கு மிகவும் உகந்ததாகும் இது...

*மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர்:* இது நடைமுறைப் படுத்தப்படுகிறதா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* அந்த விஷயத்துக்கு வருகிறேன். சட்டத்தில் இதற்கு போதுமான வழிவகை செய்யப் பட்டுள்ளது. அரசாங்கத்தின் பொறுப்பு கவர்னர்-ஜெனரல் என்ற ஒருவருக்கு அளிக்கப்படவில்லை. கவர்னர்- ஜெனரலின் நிர்வாக சபைக்கு அதிகாரம் அளிக்கப்பட்டுள்ளது.

திரு. ஜம்னாதாஸ் எம்.மேத்தா பம்பாய் மத்திய பிராந்தியம்: முகமதியரல்லாத கிராமப் பகுதி: இந்த அதிகாரம் இந்தியா மந்திரியின் உத்தரவுகளுக்கு உட்பட்டது.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:* அதற்கு வருகிறேன். அதுபற்றிக் கூறப்போகிறேன். நிலைமை என்னவெனில் நிர்வாகக் கவுன்சிலின் ஒவ்வொரு உறுப்பினரும் கவர்னர்-ஜெனரலின் சகாவாகும். அந்த உண்மையை ஒருபோதும் மறக்கக்கூடாது; மறக்கக் கூடியதுமல்ல; எனவே, நான் கூறுவது என்னவெனில், யதேச்சாதிகாரத்தை ஒதுக்குகிற ஜனநாயகத் தன்மை கொண்ட, சம்பிரதாயத்தை அடிப்புடையாகக் கொள்ளாமல் சட்டப்படி நிர்வாகத்திற்கு கூட்டுப்பொறுப்பை அளிக்கும் ஒரு சர்க்காரை இந்தியர்கள் விரும்புகிறார்கள் என்றால், நான் இந்த அவைக்கு கூற விரும்புவது இதுதான். நாம் இப்பொழுது பெற்றிருப்பதைவிட மேலும் நல்ல சர்க்கார் அமைப்பை நீங்கள் அமைக்க முடியாது. இந்த அரசாங்கத்துக்கு எதிராகச் சொல்லப்படுவது என்னவென்பதை நான் அறிவேன். அது அப்படியே இருக்கலாம். இந்த சர்க்கார் வைஸ்ராயின், இந்தியா மந்திரியின் ரத்து அதிகாரத்திற்கு உட்பட்டது எனக் கூறு கிறார்கள்.

திரு. ஜம்னாதாஸ் மேத்தா: ரத்து அதிகாரம் மட்டும் அல்ல - உத்தரவுகளும் இதில் அடங்கும்.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* அதை நான் ரத்து அதிகாரம் என்று கூறுகிறேன்; நீங்கள் அதை உத்தரவுகள் என்று அழைக்கலாம். நான் ஓர் அரசியல் சட்ட நிபுணனாதலால், அரசியல் சட்டரீதியான பதத்தையே உபயோகிக்க விரும்புகிறேன்.

**மதிப்பிற்குரிய ஓர் அங்கத்தினர்:** வெள்ளை மாளிகையிலிருந்து வரும் எஜமானன் குரல்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** நான் கூறியது என்னவெனில், இந்த அரசாங்கம் ஒரு சுதந்திர அரசாங்கம் அல்ல. இது, இந்தியா மந்திரியின் ரத்து அதிகாரத்திற்கு உட்பட்டதுதான். வைஸ்ராயின் ரத்ததிகாரத்தைப் பொறுத்தவரை, இந்தியாவின் பாதுகாப்பு, அமைதி சம்பந்தப்பட்ட விஷயங்களில் மட்டுமே அது பயன்படுத்தப்படும் என்று சுட்டிக்காட்ட விரும்புகிறேன். அது பொதுவான ரத்ததிகாரம் அல்ல. நாட்டின் அன்றாட நிர்வாகத்தில் தலையிடும் ரத்ததிகாரம் அல்ல அது.

**சர்தார் சாந்த் சிங்:** நான் ஒருகேள்வி கேட்கலாமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இப்பொழுது நீங்கள் எந்தக் கேள்வியையும் கேட்கக் கூடாது; எனக்கு மிகக் குறைந்த நேரமே உள்ளது; வாதத்திற்காக, ரத்து அதிகாரம் இருக்கிறது என்பதை நான் ஒப்புக் கொள்கிறேன். அரசியலமைப்புச் சட்டங்கள் பற்றி நான் நிறையப் படித்திருக்கிறேன்; எனவே ரத்ததிகாரத்தைப் பற்றி நான் பயப்படவில்லை.

**சர்தார் சாந்த் சிங்:** நான் ஒரு சட்ட சம்பந்தமான கேள்வியைக் கேட்டுக் கொண்டிருக்கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** பிறகு என்னிடம் நீங்கள் கேட்கலாம். இப்பொழுது ஒரு சொற்பொழிவற்ற எனக்கு நேரமில்லை.

ரத்து அதிகாரம் இருக்கிறது என்பதை முற்றிலுமாக ஒப்புக் கொள்ள நான் தயாராக இருக்கிறேன்; ரத்து அதிகாரம் இருக்கத்தான் செய்கிறது. ரத்து அதிகாரம் பற்றி அதிகம் கவலைப்படும் மதிப்பிற்குரிய உறுப்பினர்களுக்கு எனது கேள்வி இதுதான்: ரத்து அதிகாரத்தின் முக்கியத்துவம் என்ன? ரத்து அதிகாரத்தின் முக்கியத்துவம் என்ன? ரத்து அதிகாரம் என்றால் என்ன பொருள்? நான் திட்டவட்டமாகக் கூறுகிறேன்: ஏனெனில் அரசியல் சட்டம் சம்பந்தமான பிரச்சினை பற்றி பேசும் மதிப்பிற்குரிய உறுப்பினர்களின் மனதிலே நிறைய குழப்பம் இருப்பதை காண்கிறேன். யதேச்சதிகார அரசுக்கும்

ஒரு பொறுப்பான அரசுக்கும் என்ன வித்தியாசம். ஹிட்லரின் கீழ் ஜெர்மனியில் இருப்பதற்கும் பிரிட்டனில் நிலவும் சர்க்காருக்கும் என்ன வித்தியாசம்? இதற்கு தெளிவான பதில் ... (குறுக்கீடு).

*தலைவர் (மாண்புமிகு அப்துல் ரஹீம்):* அமைதி, அமைதி. மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் இவ்வாறு குறுக்கீடு செய்து கொண்டிருக்கக் கூடாது.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* தெளிவான பதில் இதுதான். அதைத் திட்டவட்டமான முறையில் கூற விரும்புகிறேன் - சர்வாதிகார சர்க்காருக்கும் பொறுப்பான சர்க்காருக்கும் உள்ள வித்தியாசம் - அதை மீண்டும் கூறி வலியுறுத்த விரும்புகிறேன் - என்னவெனில் சர்வாதிகாரத்தில் ரத்து அதிகாரம் இல்லை; பொறுப் பான சர்க்காரில் ரத்து அதிகாரம் இருக்கிறது. இதுதான் உண்மை. அரசியல் சட்டத்தைப் புரிந்து கொள்ள விரும்புகிறவர்களும் அரசியல் சட்டங் களை உருவாக்க விரும்புகிறவர்களும் இதை மனதில் கொள்ளட்டும். ஒரே ஒரு கேள்வி, சர்ச்சையைக் கிளர்த்தக் கூடிய ஒன்றே ஒன்று. இம்மாதிரியான வாக்குவாதத்தை நான் முற்றிலுமாக புரிந்து கொள்ள முடியும் - ரத்து அதிகாரம் யாரிடம் இருக்க வேண்டும்? இந்தியா அமைச்சரிடமிருக்க வேண்டுமா அல்லது வைஸ்ராயிடம் இருக்க வேண்டுமா அல்லது வேறு எந்த அமைப்பிடமாவது இருக்க வேண் டுமா? இதுதான் சர்ச்சைக்குரிய ஒரே விஷயமாக இருக்க முடியும். ரத்து அதிகாரத்தைப் பொறுத்த வரை, பொறுப்புத் தன்மையில் நம்பிக்கை கொண்டவர்களி டையே, ஜனநாயக சர்க்கார் பற்றி நம்பிக்கையுள்ளவர்களிடையே எந்தவிதமான கருத்து வேறுபாடும் இருக்க முடியாது என்று கூறு கிறேன். எனவே, எழும்கேள்வி இதுதான்: இந்தியா மந்திரியிடம் ரத்து அதிகாரத்தை நாம் வைத்து கொள்ள வில்லையெனில், நாம் வேறு எந்த இடத்தில் வைத்திருக்க வேண்டும்? இந்தியா மந்திரிக்குள்ள ரத்து அதிகாரத்தை நீங்கள் மாற்றவிரும்பினால், அது சரியாக வைக்கப்பட வேண்டிய ஒரு இடம் சட்டமன்றமே என்று நான் படிக்கிறேன். ரத்து அதிகாரத்தை வைக்க வேறு எந்த இடமும் இல்லை.

*சர் சையது ராஸா அலி:* (ஐக்கிய மாகாணங்களின் நகரங்கள், முகமதியர் நகர் பகுதி) சட்டமன்றம் பற்றி மாண்புமிகு எனது நண்பர் கடைசியில் நினைத்தது பற்றி நான் மகிழ்ச்சியடைகிறேன்!

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:* எவை கேள்வி இதுதான்: அது ஒரு எளிமையான கேள்வி என்றும் கருதுகிறேன். இன்று நிலவும் சட்டமன்றத்திற்கு ரத்து அதிகாரத்தை நாம் மாற்ற முடியுமா? (பண்டிட் லட்சுமி காந்த மைத்ராவின் குறுக்கீடு). தங்க ளுக்கு அரசியல் அமைப்புச் சட்டத்தைப் போதிக்க முடியாது. இதற்காக ஒரு வகுப்பைத் தொடங்க வேண்டியிருக்குமோ என்று அஞ்சுகிறேன். சட்டக் கல்லூரியில் அரசியல் அமைப்புச் சட்டம் பற்றிப் போதிப்பதில் ஐந்து ஆண்டுகள் செலவழித்தேன். என் மனதில் எழும் கேள்வி இதுதான்: சட்டமன்றத்திற்கு ரத்து அதி காரத்தை மாற்ற முடியுமா? இன்றைய சட்டமன்றக் கண்ணோட் டத்திலிருந்து இந்தக் கேள்வியை நான் பரிசீலிக்க வேண்டும்; ஏனெனில் பிரிட்டிஷ் சர்க்கார் அதிகாரத்தை உடனே துறக்க வேண்டும் என்பதுதான் இன்றைய கோரிக்கை. கேள்வியென்ன வெனில் இந்த ரத்து அதிகாரத்தை நாம் இதனிடம் ஒப்படைக்கக் கூடிய தகுதி இந்த சட்டமன்றத்திற்கு இருக்கிறதா?

இந்த சட்டமன்றத்தின் இயைபு என்ன? அதன் குணாம்சம் என்ன? இந்த அவையை அவமதிக்கும் எதையும் நான் சொல்ல வில்லை என்று நான் நினைக்கிறேன்; காலப்போக்கின் வேகத்தைக் கணக்கில் கொண்டால் இந்த அவை உயிர் பிரியும் நிலையில் உள்ளது என்பதுதான் உண்மை.

*சர்தார் சாந்த் சிங்:* அது அப்படித்தான் எப்பொழுதும் உள்ளது.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:* இது மூன்று ஆண்டுகளுக்கு தேர்ந்தெடுக்கப்பட்டது; ஆனால் இது அநேகமாக ஒன்பது ஆண்டுக்காலம் நீடித்து இருந்து வருகிறது. இந்த அவை யின் உறுப்பினர்களுக்கு அவர்களைத் தேர்ந்தெடுத்ததொகுதிகள் அளித்த அதிகாரம் எந்தஅளவு நேரடியாகவும் புதிதாகவும் இருப்ப தாகக் கருத முடியும் என்பது எனக்குத் தெரியவில்லை; கால ஓட்டத் தில் இந்த அவை சாரமற்றதாக ஆகாமலிருக்குமா என்பது பற்றி எதுவும் கூற நான் விரும்பவில்லை; ஆனால், மேலே சென்று சபையின் இயைபு பற்றிப் பரிசீலிக்கத் துவங்கலாம்.

*தலைவர் (மாண்புமிகு சர். அப்துல் ரஹீம்):* மாண்புமிகு உறுப்பினர் அவருக்கான நேரத்தை ஏற்கனவே தாண்டிவிட்டார்.

பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா (ராஜதானிப் பிரிவு - முகமதியரல்லாத கிராமப் பகுதி) : மாண்புமிகு உறுப்பினர் கூறுவது சபையின் முன் உள்ள பிரேரணைக்கு எந்தவிதத்திலும் சம்பந்தப் பட்டதல்ல.

மாண்புமிகு டாக்டர்.பி.ஆர்.அம்பேத்கர்: ஐயா! எனக்கு கொடுத்த நேரம் முடிந்துவிட்டது என்று தாங்கள் கருதினால்...

தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரஹீம்): எல்லாக் கட்சி களின் ஒப்புதல் பேரில்தான் நேர அளவு நிர்ணயிக்கப்பட்டது. அதை நான் அமுல் நடத்தியாக வேண்டும்.

திரு. ஜம்னாதாஸ் மேத்தா: சபையை ஏன் கூட்டினீர்கள்? (மேலும் சில குறுக்கீடுகள் இருந்தன).

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: விஷயம் என்ன வெனில்,. ஒன்று ரத்து அதிகாரத்தை அதனிடம் ஒப்புவிப்பதற்கு தகுந்த போதுமான பிரதிநிதித்துவம் பெற்றதல்ல இந்த அவை என்பதை ஒப்புக்கொள்ள வேண்டும்; அல்லது நாட்டின் தேசிய வாழ்வில் இடம்பெற்ற எல்லோரும், போதுமான எண்ணிக்கை யில் இந்துக்கள், போதுமான எண்ணிக்கையில் முகமதியர்கள், போதுமான எண்ணிக்கையில் தாழ்த்தப்பட்ட வகுப்பினர், மற்றும் பிற பகுதியினர் ஆகியவர்களை தன்னகத்தே கொண்ட வகையில் யுத்த காலத்தில் இந்தச் சட்டமன்றத்தைப் புனரமைக்கும் பணியில் நாம் ஈடுபட முடியுமா என்பதை நீங்கள் பரிசீலிக்க வேண்டும். எனவே தேசிய சர்க்கார் வேண்டுமென்ற கோரிக்கை குழப்பமான சிந்தனையின் விளைவுதான் என்று கூற விரும்புகிறேன்; மிகவும் ஜீவாதாரப் பிரச்சினை என்று நான் கருதும் வகுப்பு உடன்பாடு என்பதைத் தவிர்க்க வேண்டும் என்ற பெரும்பாலானவர்களின் விருப்பத்தின் விளைவுதான் என்று கூற விரும்புகிறேன். புதிய அரசியல் அமைப்புச் சட்டத்தின் கீழ் அமைக்கப்படும் நிர்வாகத் தின் மீது ரத்து அதிகாரத்தைப் பிரயோகிக்கத் தகுதி வாய்ந்தது எனக் கருதும் வரையில் இந்த அவையை புனரமைப்பது இந்த வகுப்பு உடன்பாட்டை நாம் எய்தும் வரை சாத்தியமில்லை ஐயா! எனக்கு அளித்த நேரம் முடிந்து விட்டதால் இந்த விஷயத்தை மேலும் வளர்த்த முடியாது; நான் என் இருக்கையில் அமர்கிறேன்.



# 6

## [1]இந்திய மண்ணியல் நிறுவனப் பயன்பாட்டுக்கிளையின் ஆலோசனைக் குழுவிற்கு ஒரு உறுப்பினரைத் தேர்ந்தெடுத்தல்.

*திரு. தலைவர் (மாண்புமிகு சர். அப்துல் ரஹீம்): செப்டம்பர் 14ம் தேதி திங்களன்று மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர் முன் மொழிந்த தீர்மானம் பற்றி மேலும் பரிசீலிப்பதற்கு சில தகவல் களைத் தம்மால் கொடுக்க முடியுமாதலால் இந்தக் கோரிக்கை ஒத்திவைக்கப் படலாமென்று டாக்டர் அம்பேத்கர் அப்பொழுது கூறினார்.*

*மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): ஐயா! திருத்தங்களை எவ்வாறு கையாள தாங்கள் உத்தேசித்திருக்கிறீர்கள்? திருத்தங்கள் முன்வைக்கப்பட்டால் நன்றாக இருக்கும்; அப்பொழுது விவாதிக்கவிருக்கும் தீர்மானத் துடன் திருத்தங்களை பற்றியும் நான் பேசமுடியும்.*

*திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரஹீம்): திருத் தங்களைப் பிரேரேபிக்க விரும்பும் உறுப்பினர்கள் திருத்தங்களை இப்பொழுது முறையாக முன்வைக்கட்டும். அப்போது தீர்மானத் தையும் திருத்தங்களையும் விவாதத்திற்கு அவையின் முன்வைக்க முடியும்.*

*திரு. ஹெச்.ஏ. சத்தார். எச்.ஈஸாக் சேட்: 'தீர்மானத்திலுள்ள 'ஒரு பிரதிநிதி'' என்ற வார்த்தைகளுக்குப் பதிலாக 'நான்குபிரதி நிதிகள்'' என்ற வார்த்தைகள் இருக்க வேண்டும்.*

*திரு. தலைவர் (மாண்புமிகு சர். அப்துல் ரஹீம்): திருத்தம் முன்வைக்கப்படுகிறது:*

---

1. *மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி* III, *1942 செப்டம்பர் 21, பக்கங்கள் 339-42.*

'தீர்மானத்தில் உள்ள, 'ஒரு பிரதிநிதி' என்ற வார்த்தை களுக்குப் பதிலாக 'நான்கு பிரதிநிதிகள்'' என்ற வார்த்தைகள் இருக்க வேண்டும்.''

*பண்டிட் லட்சுமிகாந்த மைத்ரா (ராஜதானிப் பிரிவு: முகமதியரல்லாத கிராமப்புறம்):* ஐயா! நான் பின்கண்ட திருத் தத்தைப் பிரரேபிக்கிறேன்:

''தீர்மானத்தில், 'ஒரு பிரதிநிதி' என்ற வார்த்தைகளுக்கு பதிலாக, 'மூன்று பிரதிநிதிகள்' என்ற வார்த்தைகள் இருக்க வேண்டும்.''

*தலைவர் (மாண்புமிகு சர்.அப்துல் ரஹீம்):* திருத்தம் பிரேரேபிக்கப்படுகிறது:

'தீர்மானத்தில் 'ஒரு பிரதிநிதி என்ற வார்த்தைகளுக்குப் பதிலாக 'மூன்று பிரதிநிதிகள்' என்ற வார்த்தைகள் இருக்க வேண்டும்.''

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:* தீர்மானமும் திருத்தங்களும் இரண்டு கேள்விகளை எழுப்புகின்றன. சென்ற தடவை நான் தீர்மானத்தை முன்மொழிந்தபோது, மதிப்பிற்குரிய எனது நண்பர், திரு.நியோகி, இந்தியாவின் மண்ணியல் மதிப்பு ஆய்வு நிறுவனத்தின் பயன்பாட்டுக்கிளை பற்றி கொடுக்க வேண்டிய சில தகவல்களைப் பற்றி கேட்டார். மதிப்பிற்குரிய திரு. நியோகி இது சம்பந்தமான ஒரு கேள்வியை எழுப்பியதும் அவையின் ஞாபகத்தில் இருக்கும். பயன்பாட்டுக்கிளை சம்பந்தப்பட்ட தகவல் களை என் பதிலில் அளித்தேன்; இந்தக் கிளை பற்றி மேலும் அதிக விவரங்களை மதிப்பிற்குரிய எனது நண்பரும் இந்த சபையின் பிற உறுப்பினர்களும் விரும்புகிறார்களா என்பது எனக்குத் தெரியாது. இந்த சபைக்கு என்னால் கொடுக்க முடியாத சில தகவல்கள் இருக்கலாம் என்று தோன்றுகிறது; அப்பொழுது கொடுக்க முடியாததற்குக் காரணம் பிரதான கேள்விக்குப் பதிலாகக் கொடுக்க முடியாமல் போயிற்று; அல்லது அன்று கேட்கப்பட்ட துணைக் கேள்விகளின் பிரத்தியேக தன்மையின்காரணமாகவும் இது இருக்கலாம். அன்று அவைக்கு நான் தெரிவிக்க முடியாமல் போன சில தகவலை இப்பொழுது அளிக்க விழைகிறேன்.

தகவல் பற்றி முதலில் நான் குறிப்பிட விரும்புவது பயன்பாட்டுக் கிளையின் கடமைப் பற்றியது. இதை அன்று நான் குறிப்பிடவில்லை. பயன்பாட்டுக்கிளையின் விதிமுறைகளின்படி அதற்குமூன்றுகடமைகள் உள்ளன என்பதை அவைக்குத் தெரிவிக்க விரும்புகிறேன். முதலாவதாக, தாதுப்பொருட்களின் படிமங்கள் இருப்பதாகக் கண்டறிய தேவையான களப்பணிகளைச் செய்வது; இரண்டாவதாக, தேவையான இடத்தில் சுரங்கம் தோண்டும் பூர்வாங்கப் பணிகளைத் துவக்குவது, மூன்றாவதாக, கனிமங் களை சுத்திகரிப்பது, உருக்கிப் பிரித்து எடுப்பது, மற்றும் உற்பத்தி சம்பந்தப்பட்ட இதர பிரச்னைகளுக்குத் தீர்வு காண்பதற்காக பரி சோதனை பணிகளை மேற்கொள்வது. இந்தியாவின் கனிம வளங் களை நன்கு பயன்படுத்திக்கொள்வதற்கு இது உதவியாக இருக்கும். இவைதான் பயன்பாட்டுக் கிளையின் பணிகள். அடுத்து, பயன் பாட்டுக் கிளையின் வேலைத் திட்டத்தைப் பொறுத்தவரை, அது ஆறு தலைப்புகளில் வருகிறது என்பதை சபைக்கு தெரிவிக்க விரும்புகிறேன்: 1. மேவாரில் உதயப்பூர் சமஸ்தானத்திலுள்ள ஸாவர் ஈயம் மற்றும் துத்தநாக சுரங்கங்களை மீண்டும் திறப்பது; 2. ராஜபுதனத்தின் மைக்கா சுரங்கங்களை அபிவிருத்தி செய்வது; 3. பலுச்சிஸ்தானின் கந்தகப் படிமங்களைப் பயன்படுத்திக் கொள்வது; 4. வங்காளத்திலும் மத்திய மாகாணங்களிலும் உலோக வகை தரும் தாதுப் பொருட்கள் பற்றிப் பரிசீலிப்பது: 5. பீஹாரிலுள்ள படிவுகள் ப்ற்றிப் பரிசீலிப்பது; 6. தாதுக்கள் (ரத்தினக்) கற்கள், உப்புகள் மற்றும் இவை போன்ற ஏனைய பொருள்களைக் கண்டறிவது.

மதிப்பிற்குரிய நண்பர் திரு. நியோகி தகவல் தெரிந்து கொள்ள விரும்பிய மூன்றாவது விஷயம், இந்த பயன்பாட்டுக் கிளைக்கும் விஞ்ஞானம் மற்றும் தொழில்துறை ஆய்வு வாரியத்துக்கும் இடையே உள்ள உறவு பற்றியது. விஞ்ஞான-தொழில்துறை ஆய்வு வாரியம் மூன்று விஷயங்களைக் கவனிக்கிறது; அதாவது, கண்டுபிடிப்புகள், கனரக ரசாயனப்பொருள்கள், இயற்கையாக தோன்றுகிற உப்புகள், பயன்பாட்டுக்கிளை தாதுப்பொருட்களைக் கண்டுபிடிப்பது, அவற் றின் தரத்தைப் பரிசோதிப்பது போன்ற பணிகளில் ஈடுபடுகிறது. இவற்றின் செயல்பாடுகள் வித்தியாசமானவை என்பது இதிலிருந்து தெளிவு. அதே சமயத்தில், விஞ்ஞான, தொழில்துறை ஆய்வு வாரியத் துக்கும் பயன்பாட்டுக்கிளைக்கும் இடையே இடையுறவு உள்ளது;

இந்த இடையுறவு பின்கண்டவாறு அமைந்துள்ளது: இந்திய மண்ணியல் மதிப்பீட்டாய்வு நிறுவனத்தின் பொறுப்பாளராக உள்ள டாக்டர் பாக்ஸ், விஞ்ஞான தொழில்துறை ஆய்வு வாரியத்தின்கீழ் இயங்கும் கனரக ரசாயனங்கள் குழுவின் தலைவராக இருக்கிறார். மறுபுறத்தில் விஞ்ஞான, தொழில்துறை ஆய்வு வாரியத்தின் இயக்குநர், மண்ணியல் மதிப்பீட்டாய்வு நிறுவனத்தின் பயன்பாட்டுக் கிளைக்கான ஆலோசனைக் குழுவின் உறுப்பினராக உள்ளார்; இரண்டாவதாக, இந்த ஏற்பாட்டால் இரு இலாக்காக்களுக்கும் இடையே பரஸ்பர பரிமாற்றம் ஏற்படுத்தப்பட்டுள்ளது என்பதை அவை தெரிந்து கொள்ள முடியும்.

மதிப்பிற்குரிய நண்பர் எழுப்பிய வேறு இரு பிரச்சினைகள் உள்ளன. சர்க்காரின் நடவடிக்கைகள் பற்றிய விமர்சனம் சம்பந்தப் பட்டவை அவை. இந்தியாவின் தாதுப் பொருள் வளங்களைப் பற்றி கவனக் குறைவு இருப்பதாக அவர் குறை கூறினார்; இரண்டாவதாக, பர்மாவிலிருந்து வந்த அகதிகளுக்கு வேலைவாய்ப்புக் கள் அளிப்பதற்காகவே பயன்பாட்டுக்கிளை துவக்கப்பட்டது என்ற கருத்தையும் அவர் வெளியிட்டார். இப்பொழுது, ஐயா! முதல் கேள்வியைப் பொறுத்தவரை, இந்தியாவின் தாதுப்பொருள்களின் வளங்களை அபிவிருத்தி செய்யும் பிரச்சினை முன்பே எடுத்துக் கொள்ளப்படாததற்காக மதிப்பிற்குரிய எனது நண்பர் வருந்துவதைப் போலவே, நானும் வருந்துகிறேன். ஆனால், இப்பொழுது போல், ஒருதிட்டத்தை மேற்கொள்வதற்கு, பயன்பாட்டுக்கிளை அமைக்கும் திட்டத்தை இந்தியா எடுத்துக்கொண்டிருப்பது போல் ஒருதிட்டத்தை மேற்கொள்வதற்கு மூன்று பிரதான கஷ்டங்கள் இருந்தன என்பதை எனது நண்பர் புரிந்துகொண்டிருப்பார் என்று நினைக்கிறேன். இந்தக் காலகட்டம் வரை இந்திய மண்ணியல் மதிப்பாய்வு நிறுவனம் சுரங்கங்கள் துறையில் கல்வித் தகுதி பெற்ற அதிகாரபூர்வ ஊழியர்களைப் பெற்றிருக்கவில்லை என்பதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். துரதிருஷ்வசமாக இங்கிலாந்தின் மண்ணியல் மதிப்பாய்வு நிறுவனத்தின் செயல்பாடுகளை இந்திய மண்ணியல் மதிப்பாய்வுக் கழகம் பின்பற்றியது; அதாவது சுரங்கங்களை மேற்பார்வையிடும் கண்காணிப்பாளர்களாக மட்டுமே அதுசெயல்பட்டது; இந்தியாவின் தாதுவளங்களை அபிவிருத்தி செய்யும் பணியில் ஈடுபடும் திறமையாளர்களைக் கொண்ட தொழில் நுட்ப அமைப்பாக அது செயல்பட வில்லை. இரண்டாவதாக, தாதுப்பொருட்களின் படிவங்களை வெளிக் கொண்டு வருவதில்

உள்ள இடர்ப்பாடுகள் காரணமாக, தாது வளங்களை பயன்படுத்து வதில் ஓரளவு தயக்கம் இருந்து வருகிறது. நாட்டில் சுரங்கங்களைத் தோண்டும்பணி நீண்டகாலமாக வழக்கொழிந்து போனதால் ஏற்றுமதி செய்வதற்கான மேங்கனீஸ், மைக்கா போன்றவை தவிர, பிற தாதுப் பொருட்களை நாடு அவ்வளவாகப் பெற்றிருக்கவில்லை என்ற ஒரு பொதுவான எண்ணம் இந்தியாவில் பரவியிருந்தது. அவைக்கும் எனது மதிப்பிற்குரிய என் நண்பருக்கும் நான் கூறக் கூடியது இதுதான்: இந்தப் பிரச்சினையை இப்பொழுது நான் எடுத்துக் கொண்டிருப்பதற்கு நீண்ட காலத்திற்கு முன்பே கையாண் டிருக்க வேண்டுமென்று நாம் வருந்தும் அதேசமயம் எதுவும் செய்யாமல் இருப்பதை விட காலதாமதமாகவேனும் செய்வது உகந்ததல்லவா என்பதைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

பர்மிய அகதிகளை வேலைக்கு அமர்த்தியிருக்கும் பிரச் சினையைப் பொறுத்தவரை, இந்த விஷயத்தில் உண்மையிலேயே நமக்கு வேறு எந்த மார்க்கமும் இல்லை என்பதை மதிப்பிற்குரிய நண்பருக்கும் அவைக்கும் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். என் நண்ப ருக்கு ஏற்கனவே நான் தெரிவித்ததுபோல அதிகாரபூர்வ சுரங்கப் பணியாளர்கள் இல்லாததால் நாம் கஷ்டத்தில் இருந்தோம். உதாரணமாக ஈயம், துத்தநாகம் போன்றவற்றின் சுரங்கங்களை விரிவான அளவில் வைத்திருக்கும் நாடு பர்மாமட்டுமே. சுரங்கப் பொறியாளர்கள் பெருமளவில் பயற்சிபெற்ற நாடும் பர்மாதான். இதனால், பர்மா அதிகளுக்கு வேலைவாய்ப்பு அளிப்பதற்காக இந்தத் திட்டத்தை நாம் துவக்கினோம் என்று சொல்வதைவிட, இந்த பர்மா அகதிகளின் சேவையை நாம் உபயோகப்படுத்த முடிந்ததே என்று கூறுவதுதான், சரியான விளக்கமாக இருக்கும் என்று கருதுகிறேன்; இதனால்தான் இந்தத் திட்டத்தை நாம் மேற்கொள்ள முடிந்தது; இந்தியாவின் யுத்தமுயற்சியில் இது ஒன்று என்று மட்டுமல்லாமல், இந்தியாவின் எதிர்காலத்திற்கு பயன் படும் சிறந்த விஷயங்களில் ஒன்றாகவும் இதுவிளங்கும் என்பதில் எனக்கு சந்தேகம் கிடையாது.

ஐயா! திருத்தங்கள் விஷயத்தை எடுத்துக்கொண்டால், இந்தத் திருத்தங்கள் கொண்டு வரப்பட்டுள்ளதைப் பற்றி நான் உண்மை யில் மகிழ்ச்சியடைகிறேன். பயன்பாட்டுக்கிளை பற்றி நான் கொடுத்த விவரங்கள் எல்லாம் மிகத் திருத்தமாக இருப்பதால், தூற்ற வந்த வர்கள் துதிபாடும் நிலையில், வழிபாடு செய்யும் நிலையில் இருக்கிறார்கள். ஆனால் ஆலயம் மிகச் சிறிய ஒன்று; வழிபாடு செய்

பவர்களின் உற்சாகத்தை நான் வரவேற்றபோதிலும், சுவாசிப் பதற்கு இடமில்லாமல் இந்தச் சிறிய ஆலயத்தில் அதிகக் கூட்டம் சேர்வதை நான் அனுமதிக்க முடியாது. இந்தத் திருத்தங்களை என் னால் ஏற்றுக்கொள்ள இயலாமைக்காக வருந்துகிறேன்.

*சர். சையது ராஸா அலி (ஐக்கிய மாகாணங்களின் நகரங்கள்):* ஆலயத்திற்கு நுழையக்கூட நீங்கள் அனுமதி மறுப்பீர்களா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இந்தத் திருத் தங்களை எதிர்க்க வேண்டியிருப்பதற்காக வருந்துகிறேன். இந்தத் திட்டம் உருவாக்கப்பட்டதற்கான காரணங்களை கறாராக சபைக்கு எடுத்துச் சொல்வேன். இந்தத் திருத்தங்களை பிரேரேபித்த மதிப்பிற்குரிய உறுப்பினர்களின் கவனத்திற்கு கொண்டுவர நான் விரும்புவது, இந்தக் குழு ஒரு நிர்வாகக்குழு அல்ல என்பதை மனத்தில் கொள்ளவேண்டும் என்பதே. முடிவுகளை எடுக்கும் குழுவல்ல இது. எனவே இந்த குழுவில் செய்யப்படும் எதுவும் இந்த அவையை கட்டுப்படுத்தாது. இது ஒரு ஆலோசனைக்குழு தான். இந்தக் குழுவின் நோக்கம் தொழில்மற்றும் வணிக நிபுணர் களை ஒன்றாகக் கொண்டுவருவதுதான். இந்தக் குழுவின் பிரதான நோக்கம் இதுதான். இந்தக்குழுவின் இயைபு இந்தப் பிரதான குறிக்கோளை அடைவதை கணக்கில் கொண்டு திட்டமிடப் பட்டது. இப்பொழுது திட்டமிட்டபடி இந்தக் குழுவில் 16 உறுப் பினர்கள் இருப்பர். 5 நிபுணர்களும் அவர்களோடு வாணிக, தொழில்துறைப் பிரதிநிதிகள் ஐவரும் குழுவில் இடம் பெற்றி ருப்பர். மண்ணியல் மதிப்பாய்வு நிறுவனத்தின் இயக்குநர் இதில் இடம்பெறுகிறார். விஞ்ஞான, தொழில் ஆய்வு வாரியத்தின் இயக் குநர் இந்தியச் சுரங்க- உலோகத் தொழில் கழகத்தின் பிரதிநிதி ஒருவர், இந்தியச் சுரங்க அமைப்பு, இந்தியச் சுரங்க சம்மேளனப் பிரதிநிதிகள் இருவர் குழுவில் இருப்பர். அடுத்து, வாணிக, தொழில் துறைப் பிரதிநிதிகளாக, இந்திய வாணிகக் கழகங்கள் சம்மேளனத் திற்கு 2 இடங்கள் கொடுத்திருக்கிறோம். எஃகு தொழில்துறைக்கு இரண்டு இடங்கள் தந்துள்ளோம். வாணிகத் துறையின் செயலாளர் குழுவில் வாணிகத்துறையைப் பிரதிநிதித்துவப்படுத்துவார். எந்த தாதுப்பொருள்களைத் தாங்கள் அபிவிருத்தி செய்யப்போகிறோம் என்பதை வர்த்தக, தொழிற்சாலை பிரதிநிதிகளிடம் எடுத்துரைக்கக் கூடிய நிபுணர்களையும் அதேபோன்று இவற்றை வியாபார ரீதியில் தாங்கள் எப்படிப் பயன்படுத்தப் போகிறோம் என்பதை

நிபுணர்களிடம் விளக்கிக்கூறக்கூடிய தொழில் துறை, வாணிகத் துறைப் பிரதிநிதிகளையும் ஒருசேரக் கொண்டு வருவதே இந்தக் குழுவின் நோக்கம் என்பதை இதிலிருந்து அவை தெரிந்து கொள்ள முடியும்.

இப்பொழுது ஐயா, பிரதான நோக்கம் இது என்பதை அவை மனத்தில் கொண்டால் நாட்டின் பொதுக் கருத்தைப் பிரதி நிதித்துவப் படுத்துபவர்கள் எனப்படுவோர் யாரையும் குழுவில் கொள்வதற்கு இடமில்லை என்பதைத் தெளிவுபடுத்த விரும்புகிறேன்.

டாக்டர். பி.என். பானர்ஜி: (கல்கத்தா புறநகர்: முகமதிய ரல்லாத நகர்ப்புறம்): பொதுமக்களின் பிரதிநிதிகளைக் குறிப்பிடு கிறீர்களா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம். பொது மக்களின் பிரதிநிதிகளையே குறிப்பிடுகிறேன். அடுத்து நான் வாதிக்க விரும்புவது, இந்தக் குழு ஏற்கனவே பெரியதாக இருக் கிறது. திட்டமிட்டபடி ஏற்கனவே 14 உறுப்பினர்கள் அதில் இருக் கிறார்கள். மேலும் 4 பேர்களைச் சேர்க்கவேண்டும் என்ற திருத் தத்தை நான் ஏற்றுக்கொண்டால், குழுவில் 18 பேர்கள் இருப் பார்கள்; இன்னொன்றையும் கணக்கில் கொள்ளவேண்டும். இந்த அவையிலிருந்து நான்கு உறுப்பினர்களை நான் அனுமதித்தால், மேல்சபை குறைந்தது மூன்று பேரையாவது கோரும். அப்படியாயின் குழு 21 உறுப்பினர்கள் கொண்டதாக இருக்கும். அப்போது எந்தப் பணியை ஆற்ற வேண்டுமென்று கோரப்படுகிறதோ அந்தப் பணியைச் செய்யஇயலாத அளவுக்கு முடியாததாகிவிடும். இந்தக் குழு எளிதில் நிர்வகிக்க முடியாததாகி விடும்.

அவையின் கவனத்தை ஈர்க்க நான்விரும்பும் அடுத்த விஷ யத்துக்கு வருகிறேன்; தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் 4 உறுப்பினர்களை நியமிக்க இந்தக்குழுவின் அமைப்பு வகை செய்துள்ளது. இந்த அதிகாரத்தை பயன்படுத்துவது பற்றி எந்தக் குறிப்பிட்ட நிலைக்கும் என்னைக் கட்டுப்படுத்திக் கொள்ளாமல், சபையின் ஓர் உறுப்பினர் நியமனம்மூலம், அதில் இடம்பெறுவது முற்றிலும் சாத்தியம் என்று நினைக்கிறேன். அவைமுன் நான் வைத்த வாதங்களைக் கணக்கில் கொண்டு, இந்தத்திருத்தங்களை என்னால் ஏற்றுக்கொள்ள இயலாது என்று கூற வருந்துகிறேன்.



# 7

# [1]யுத்தத்தில் வெற்றிபெற இந்தியத் தொழிலாளர்கள் ஏன் உறுதிபூண்டுள்ளனர்

*அகில இந்திய வானொலியின் பம்பாய் நிலையத்திலிருந்து டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் ஆற்றிய உரை*

''இது புதிய நாஜி அமைப்பிற்கு எதிரான யுத்தம் என்கிற போது, பழைய அமைப்பிற்கு ஆதரவான யுத்தம் என்று இதற்கு அர்த்தமல்ல என்பதை தொழிலாளர் அறிவர். பழைய அமைப்பிற்கும் நாஜி அமைப்பிற்கும் எதிரான யுத்தமே இது. சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் ஆகியவை வெறும் கோஷங்களாக அல்லாமல் வாழ்க்கையின் யதார்த்தங்களாகத் திகழும் புதிய அமைப்பை ஏற்படுத்துவதுதான் இந்த யுத்தத்திற்குத் தரப்படும் விலையாக இருக்கும் என்பதையும் தொழிலாளர் அறிவர்'', என்று அகில இந்திய வானொலி பம்பாய் நிலையத்திலிருந்து ''இந்த யுத்தத்தில் வெற்றி பெற ஏன் இந்தியத் தொழிலாளர்கள் உறுதிபூண்டுள்ளனர்'' என்ற தலைப்பில் ஆற்றிய உரையில் இந்திய சர்க்காரின் தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் குறிப்பிட்டார்.

டாக்டர் அம்பேத்கர் ஆற்றிய உரையின் முழுவாசகம் வருமாறு:

தொழிலாளருடன் சம்பந்தப்பட்டவர்கள், அவர்கள் நலனில் அக்கறை கொண்டவர்கள் பலர் உரை நிகழ்த்தவிருக்கிறார்கள். இந்த வானொலி உரைகளின் வரிசையில் இன்றிரவு நான் ஆற்றும் இந்த உரை முதலாவதாகும். என் உரையின் பொருள் பொதுத் தன்மையுடையது. அடுத்து தொடர்ந்து வரிசையாக நிகழ்த்தப்படவிருக்கும் உரைகளுக்கு இதுமுன்னிலையாக இருக்கும். உரைக்கு நான் தேர்ந்தெடுத்துக்கொண்ட தலைப்பு, 'இந்த யுத்தத்தில் வெற்றி

1. இந்தியத் தகவல் ஏடு, 1943 ஜனவரி 10 தேதி, பக்கம் 16-19.

பெற ஏன் இந்தியத் தொழிலாளர்கள் உறுதிபூண்டுள்ளனர்' என்பதாகும். எல்லோருடைய கவனத்தையும் ஈர்க்கும் ஒரு விஷயம் இதில் உள்ளது. யுத்தத்தின்பால் இந்தியத் தொழிலாளர்கள் கொண்டுள்ள கண்ணோட்டம் பற்றியதாகும் அது. இந்தியாவில் இப்பொழுது யுத்த முயற்சிக்கு எதிராக ஒத்துழையாமை இயக்கம் சூடுபிடித்திருக்கும் நிலைமையில் யுத்தத்தை நடத்துவதில் இந்தியத் தொழிலாளர் தீவிரமாக ஒத்துழைப்பை நல்கிவருகின்றனர். இதுபற்றி எத்தகைய ஐயப்பாட்டுக்கும் இடமில்லை. இதைச் செய்வதனின்று அவர்களைத் திசைதிருப்ப பல முயற்சிகள் நடைபெற்றுக் கொண்டிருந்தபோதிலும், தொழிலாளர் தங்களின் ஒத்துழைப்பை அளித்துக் கொண்டுவருகின்றனர்; அதில் உறுதிபூண்டுள்ளனர்.

## தொழிலாளர் விரும்புவது என்ன?

யுத்தத்தின்போது, பல நன்மைகளைத் தொழிலாளர் பெற்றுள்ளனர்; இன்னும் பலவற்றை அடைவர் என்பது நிச்சயம். நான் அண்மையில் எடுத்துக்காட்டியது போல, சட்டத்தின் மூலம் தொழிலாளர் பாதுகாப்பைப் பெற்றுள்ளனர். தொழிலாளர் நலன்களுக்காக பல்வேறு நடவடிக்கைகளை மேற்கொள்ளும்படி முதலாளிகளை மத்திய சர்க்கார் நிர்ப்பந்தித்துள்ளது. இதன்மூலம் தொழிலாளர்கள் பாதுகாப்பையும் பந்தோபஸ்தையும் சிலபல உரிமைகளையும் பெற்றனர். யுத்தமுயற்சியை தீவிரப்படுத்த அனைத்தையும் செய்ய தொழிலாளர் உறுதிபூண்டிருப்பதற்கு இத்தகைய உடனடி நன்மைகளைப் பெற்றிருப்பது மட்டுமே காரணமல்ல. இந்த உறுதிக்கு அடிப்படையாக அமைந்துள்ள தேவையான நல்ல சூழ்நிலைகளைப் பெற்றுக் கொள்வதோடு தொழிலாளர் திருப்தியடையவில்லை. தொழிலாளர் விரும்புவது என்னவெனில், நல்ல வாழ்க்கை நிலைமைகள். நல்ல வாழ்க்கை நிலைமைகள் என்று தொழிலாளர் கருதுவது என்ன என்பதை விளக்குகிறேன்.

## சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம்

தொழிலாளர் சுதந்திரத்தை விரும்புகின்றனர். இதில் புதியது எதுவும் இல்லாமலிருக்கலாம். சுதந்திரம் பற்றி தொழிலாளர் கண்ணோட்டத்தில் புதியது என்ன? கட்டுப்பாடு இல்லாதது என்ற எதிர்மறையான கண்ணோட்டமல்ல சுதந்திரம் பற்றிய தொழிலாளர்களின் கண்ணோட்டம். வாக்குஅளிக்கு உரிமையை மக்களுக்கு அங்கீகரிப்பதுடன் மட்டும் சுதந்திரம் பற்றிய தொழிலாளர்

கண்ணோட்டம் முடிவடைந்து விடுவதில்லை. அவர்களது கண் ணோட்டத்தில் சுதந்திரம்என்பது ஆக்கப்பூர்வமானது; மக்களால் ஆன அரசாங்கம் என்ற கருத்தை அது உள்ளடக்கியுள்ளது. மக்க ளாலான அரசாங்கம் என்பது, தொழிலாளர் கருத்துப்படி, நாடாளு மன்ற ஜனநாயகம் என்று ஆகாது. நாடாளுமன்ற ஜனநாயகம் என்பது ஒரு அரசுவடிவம். அதில் மக்களின்பங்கு என்னவெனில் தங்களின் எஜமானர்களுக்கு வாக்களித்து, ஆட்சி செலுத்துவதை அவர்களிடம் விட்டுவிடும் அமைப்பாகும். அத்தகைய அரசாங்க அமைப்பு, தொழிலாளர் கருத்தில், மக்களாலான அரசு என்பதைக் கேலிக்கூத்தாக்குவதாகும். மக்களாலான அரசு பேருக்கு மட்டுமின்றி யதார்த்தமாகவும் இருக்க வேண்டும் என்று தொழிலாளர் விரும்பு கின்றனர். இரண்டாவதாக, தொழிலாளர் கருத்துப்படி சுதந்திரம் என்பதில் சமசந்தர்ப்பத்திற்கான உரிமைகளையும், ஒவ்வொரு தனி நபரின் தேவைகளுக்கு ஏற்ப அரசின் கடமையும் உட்படும்.

தொழிலாளர் சமத்துவத்தை விரும்புகின்றனர். தொழி லாளர் சமத்துவம் என்று கூறுவது சட்டத்தில், அரசுப் பணிகளில், ராணுவத்தில், வரிவிதிப்பில், வாணிகம், தொழில்களில் எல்லா விதமான தனி உரிமைகளும் ரத்து செய்யப்பட வேண்டும் என்ப தாகும்; உண்மையில் சமத்துவமின்மைக்கு இட்டுச் செல்லும் எல்லா வழிமுறைகளும் நீக்கப்பட வேண்டும்.

தொழிலாளர்கள் சகோதரத்துவத்தை விரும்புகின்றனர். சகோ தரத்துவம் என்பதை சர்வவியாகமான மனிதநேய சகோதரத்துவம் என அவர்கள் கருதுகின்றனர்; உலகில் சமாதானம், மனிதன்பால் நல்லெண்ணம் என்ற அடிப்படையில் எல்லா வர்க்கங்களையும் எல்லா நாடுகளையும் ஐக்கியப்படுத்துவது அதன் லட்சியம்.

### நாஜிகளின் புதிய அமைப்பு

தொழிலாளரின் லட்சியங்கள் இவை. அவை புதிய அமைப் பின் அடிப்படை; அது அமைக்கப்பட்டால்தான் மனித சமுதா யத்தை நாசத்தினின்று காப்பாற்றமுடியும். நேசநாடுகள் யுத்தத்தில் தோற்றால் இந்தப் புதியஅமைப்பை ஏற்படுத்தமுடியுமா? அதுதான் தலையாய கேள்வி; இதிலிருந்து நழுவவுது அல்லது தவிர்ப்பது நாசத்தை விளைவிக்கும் என்று தொழிலாளர்கள் அறிவர். கைகட்டிக் கொண்டு சோம்பேறித்தனமாக உட்கார்ந்து கொண்டு போராட மறுத்தால் இந்தப் புதிய அமைப்பை ஏற்படுத்த முடியுமா? நேச

நாடுகள் வெற்றி பெறுவதுதான் இத்தகைய புதிய அமைப்பைத் தோற்றுவிப்பதற்கான ஒரேநம்பிக்கை என்பதைத் தொழிலாளர்கள் உணர்ந்துள்ளனர். நேசநாடுகள் தோற்றாலும் நிச்சயம் ஒருபுதிய அமைப்புவரும்; ஆனால் அது நாஜி அமைப்பைவிட வேறு எதுவாகவும் இருக்காது. அந்த ஆட்சியில் சுதந்திரம் நசுக்கப்படும், சமத்துவம் மறுக்கப்படும், ஆபத்தான சித்தாந்தம் என்று சகோதரத்துவம் அகற்றப்படும்.

நாஜிகளின் புதிய அமைப்பு என்பதன் முழுமை இத்துடன் முடிவதில்லை. நாஜி ஏற்பாட்டில் சில பகுதிகள் பற்றி ஒவ்வொரு இந்தியனும் - அவனுடைய மதம், அவனது சாதி, அவனது அரசியல் நம்பிக்கை இவை எதுவாக இருந்தாலும் - அதன் அபாயத்தைப் பற்றிக் கவலையுடன் சிந்திக்க வேண்டும். அதன் மிக முக்கிய பாகம் வருண இன அடிப்படையில் மனிதவர்க்கத்தை வகை பிரிப்பதாகும். நாஜிஆட்சிமுறையில் இஃதுதான் பிரதான கோட்பாடாகும். ஜெர்மன் இனத்தை மிக உன்னதமான மனித இனமாக நாஜிகள் கருதுகின்றனர். மற்ற வெள்ளையர் இனத்தவர்களையும் ஜெர்மன் இனத்திற்கு கீழாகவே வைக்கின்றனர். பழுப்பு இனத்தாரை - இதில் இந்தியர்களும் உட்படுவர் - தர வரிசையில் கடைசியில் வைக்கின்றனர். இந்த அளவுக்குக் கேவலப்படுத்துவது போதாது என்பது போல், எல்லாப் பழுப்புநிற இனத்தவர்களும் ஜெர்மன் மற்றும் வெள்ளை இனத்தாருக்கு அடிமைகளாக இருக்க வேண்டும் என்றும் நாஜிகள் பிரகடனப்படுத்தியுள்ளனர். அவர்களுக்குக் கல்வி வசதி அளிக்கக்கூடாது; எந்த சுதந்திரமும் - அரசியல் அல்லது பொருளாதார சுதந்திரம் - அவர்களுக்கு வழங்கப்படக் கூடாது என்பது நாஜிகளின் சித்தாந்தம்.

## நேரடி அபாயம்

இந்தியர்களுக்குக் கல்வியும் அரசியல் சுதந்திரமும் அளித்ததற்காக ஹிட்லர் தனது மெயின்காம்ப் என்ற நூலில் பிரிட்டிஷ் அரசாங்கத்தை ஆத்திரத்துடன் கண்டித்திருப்பது நன்கு அறிந்த ஒன்றே. நாஜி சித்தாந்தம் இந்தியர்களின் விடுதலைக்கும் சுதந்திரத்திற்கும் நேரடி அபாயமாகும். இந்த உண்மையைக் கணக்கில் கொண்டால், நாஜிசத்தை எதிர்த்து போராட ஏன் இந்தியர்கள் கட்டாயம் முன்வர வேண்டுமென்பதற்கு மிகப் பலமான காரணம் இருக்கிறது என்பதைப் புரிந்து கொள்ளலாம். நாஜி ஆட்சி அமைப்பை, தொழிலாளர்கள் தங்கள் மனத்தில் கொண்டுள்ள

புதிய ஆட்சிஅமைப்போடு ஒப்பிடும் எவரும், நேச நாடுகளுக்கு ஆதரவாகப் போராடி, நாஜிசத்தை அழித்தொழிக்க தொழிலாளர் உறுதிபூண்டிருக்கும் நிலை, எந்த புத்திசாலி மனிதனும் எடுக்க வேண்டிய நிலைதான் என்பதை பற்றி சந்தேகம் கொள்ள முடியாது. எனினும், இத்தகைய ஒரு கண்ணோட்டத்தை மேற்கொள்ள மறுக் கும் நபர்களும் இருக்கிறார்கள்.

நாஜி வெற்றி பற்றியோ அதையடுத்து ஏற்படும் புது நாஜி ஆட்சி அமைப்பு பற்றியோ தங்களுக்குக் கவலையில்லை என்று நினைக்கும் சிலர் உள்ளனர். ஆனால் நாட்டில் இத்தகையோர் அதிகம் இல்லை என்பது அதிர்ஷ்டவசமானது. இத்தகைய கருத்துக் கொண்டவர்கள் தங்களைப் பற்றியே அக்கறை கொள்ளாதவர்கள். அவர்களைப் பெரிதாக யாரும் எடுத்துக் கொள்வதில்லை. அதிருப்தி யடைந்துள்ள அரசியல்வாதிகள் அவர்கள்; அவர்கள் நினைக்கிற படி நடக்க அனுமதிக்காவிடில் அவர்கள் திருப்தியடைய மாட் டார்கள். அவர்களது தாரக மந்திரம் 'எல்லாம் எனக்கே அல்லது நாசகமாகப் போகட்டும்.''

யுத்தங்கள் தவறு என்று வாதிக்கும் அமைதிவாதிகள் உள் ளனர். ஏராளமான மனித முயற்சியினால் மனிதர்கள் கட்டி வளர்த்த மனித நாகரிகத்தை கெடுத்து நாசமாக்கியதற்கும், உலகத் திலுள்ள எல்லாக் கஷ்டங்களுக்கும் பிரதானமாக யுத்தங்களே காரணம் என்று அவர்கள் வாதிக்கின்றனர். அது உண்மைதான். அப்படிஇருந்தும் அமைதிவாதத்தை வாழ்க்கையின் கோட்பாடாக ஏற்க தொழிலாளர்கள் மறுக்கின்றனர். தாக்கப்படும்போது போராட மறுப்பதால் மட்டும் யுத்தங்களை ஒழித்து விட முடியாது. பலாத்கார சக்திகளுக்கு சரணடைவதன்மூலம் கிடைக்கும் சமாதானம், சமா தானமே அல்ல. அது ஒரு தற்கொலைச் செயலாகும். அதற்கு எந்த நியாயத்தையும் காண்பது கடினம். ஒரு கண்ணியமான மனித வாழ்க்கையை பாதுகாப்பதற்கு உன்னதமானதும் தேவை யானதுமான எல்லாவற்றையும் அநாகரிகத்திற்கும் காட்டுமிராண்டித் தனத்திற்கும், தியாகம் செய்வதாகும் அது.

யுத்தத்தை ஒழிப்பதற்குத் தொழிலாளர்களுக்குள்ள வழி சரணடைவதல்ல. தொழிலாளர்கள் கருத்துப்படி இரண்டு விஷ யங்கள்மட்டுமே யுத்தத்தை ஒழிக்கும்; ஒன்று யுத்தத்தில் வெல்வது; மற்றது நியாயமான சமாதானத்தை ஏற்படுத்துவது. தொழிலாளர் பார்வையில் இரண்டும் சம அளவில் முக்கியமானவை. யுத்தம்

தோன்றுவது மனிதனின் ரத்த தாகத்தால் அல்ல. தோற்றவர்கள் மீது ஜெயித்தவர்கள் கேவலமான சமாதானத்தை அடிக்கடி சுமத்து வதில் யுத்தத்தின் தோற்றுவாயைக் காணலாம். யுத்தம் நடந்து கொண்டிருக்கும்போது, அமைதியாளரின் கடமை நழுவுவதோ அல்லது போராட மறுப்பதோ அல்ல என்பது தொழிலாளர்களின் கருத்து. யுத்தம் நடக்கும்போது மட்டுமல்லாமல் சமாதான விதி முறைகள் உருவாக்கப்படும்போதும் தீவிரமாக செயல்படுவதும் விழிப்பாக இருப்பதும் அமைதிவாதியின் கடமை என்று தொழி லாளர்கள் நம்பு கின்றனர். சரியான காரியத்தைச் சரியான நேரத்தில் செய்யத் தவறுகிறார் அமைதிவாதி. யுத்தம் நடந்து கொண்டிருக்கும் போது அதற்கு எதிராக அமைதிவாதி தீவிரமாகச் செயல்படுகிறார். யுத்தம் முடிந்து சமாதானம் மேற்கொள்ளப்படும்போது அவர் செயலற்றும் அக்கறை யற்றும் பேசுகிறார். இந்த விதத்தில் இரண்டை யும், யுத்தத்தையும் சமாதானத்தையும் அவர் இழந்து விடுகிறார். இந்த யுத்தத்தில் போராட தொழிலாளர்கள் விரும்புகிறார்கள் என்றால், அமைதி வாதம் யுத்தத்தை ஒழிப்பதற்கான தொழிலாளர் கள் வழியல்ல என்பதால்தான்.

## பிரெஞ்சுப் புரட்சியை நினைவுகூருவோம்

வெற்றியைத் தொடர்ந்து புதிய அரசியல் அமைப்பு ஏற்படும் என்பதற்கு உத்திரவாதம் எதுவும் இல்லை என்று கூறும் அவ நம்பிக்கையாளர்கள் இருக்கின்றனர். இந்த அவநம்பிக்கைக்கு ஒருவேளை இடம் இருக்கலாம். தொழிலாளர்களுக்கு ஒரு சிறந்த தான நாட்டின் புதியஅரசியல் அமைப்புக்கான வேர்கள் பிரான்ஸ் நாட்டின் புரட்சியில் இருக்கின்றன. பிரெஞ்சு புரட்சி இரு கோட்பாடு களை முன்வைத்தது சுயாட்சி என்ற கோட்பாடும் சுயநிர்ணய உரிமைக் கோட்பாடும் சுயாட்சி என்ற கோட்பாடு, மற்றவர்களால் மன்னர்கள், சர்வாதிகாரிகள் அல்லது சலுகைபெற்ற வர்க்கங்கள் யாராக இருந்தாலும் அவர்களால் ஆட்சி செலுத்தப்படுவதற்குப் பதிலாக மக்கள் தங்களாலேயே ஆட்சி செய்யப்பட வேண்டும் என்ற அபிலாஷையை வெளிப்படுத்துகிறது; பொதுவான லட்சியங் களாலும் நோக்கங்களாலும் ஒன்றுபடுத்தப்பட்ட மக்களின் அபி லாஷையை வெளிப்படுத்துகிறது. அதுதான் ‘ஜனநாயகம்’ என்று அழைக்கப்படுகிறது. பொதுவான லட்சியங்களாலும் நோக்கங் களாலும் ஒன்றுபடுத்தப்பட்ட மக்களின் அபிலாஷை எதுவோ அதன்படி தங்களின் அரசியல் அந்தஸ்தை எந்தவித வெளி நிர்பந் தமும் இல்லாமல் முடிவு செய்யும் உரிமைதான் சுயநிர்ணய உரிமை;

அது சுதந்திரம், பரஸ்பரம் சார்ந்திருப்பது அல்லது உலகத்தின் மற்ற மக்களுடன் இணைந்து இருப்பது எதுவானாலும் இதுதான் தேசியவாதம் எனப்படும். மனித சமுதாயத்தின் நம்பிக்கை இந்த கோட்பாடுகள் நிறைவேறுவதை மையமாகக் கொண்டிருக்கிறது. துரதிருஷ்டவசமாக, சுமார் 140 ஆண்டுகள் முடிந்தபின்பு இந்த கோட்பாடுகள் வேரூன்றி வளரத் தவறிவிட்டன. பழைய ஆட்சி முறை அதனுடைய எல்லா அப்பட்டமான தன்மையிலோ அல்லது இந்த இரு கோட்பாடுகளுக்கு போலித்தனமான சலுகைகளை அளித்தோ தொடர்ந்து உலகில் சுயாட்சி அரசுகளோ அல்லது சுய நிர்ணய உரிமையோ இல்லாமல் போயிற்று. இதெல்லாம் நிச்சயமாக உண்மைதான். ஆனால் தொழிலாளர் மேற்கொண்ட கண்ணோட் டத்திற்கு எதிரான வாதமல்ல இது; புதிய அரசியல் அமைப்பை ஏற்படுத்துவதற்குப் பூர்வாங்க நிபந்தனை நாஜிச சக்திகள் மீது வெற்றி பெறவேண்டும் என்பதே தொழிலாளர்களின் கண்ணோட்டம். இதற்கு அர்த்தம் என்னவெனில், தொழிலாளர் அதிகம் உஷா ரோடு இருக்க வேண்டும் என்பதே ஆகும். நாஜிகள் மீது வெற்றி பெறுவதோடு யுத்தம் முடிந்து விடக் கூடாது; அதேபோல் பழைய ஆட்சி அமைப்பு, அது எங்கிருந்தாலும் அதன்மீது வெற்றி பெறாமல் சமாதானம் கூடாது.

## தொழிலாளர்களும் தேசியமும்

தொழிலாளர்களை மிக அதிகமாக எதிர்ப்பவர்கள் நிச்சய மாக தேசியவாதிகளே. இந்திய தேசியத்திற்கு முரணான, அதற்கு தீங்கான கண்ணோட்டத்தை தொழிலாளர்கள் கொண்டுள்ளனர் என்று தொழிலாளரை அவர்கள் குற்றம் சாட்டுகிறார்கள். இரண் டாவது ஆட்சேபனை, இந்தியாவின் சுதந்திரம் பற்றி எந்த வாக்குறுதி யும் பெறாமலேயே, யுத்தத்திற்காக போராட தொழிலாளர்கள் ஒப்புக்கொண்டனர் என்பது. இந்தப் பிரச்சினைகள் அடிக்கடி எழுப்பப்படுகின்றன; மிக அக்கறையுடன் வாதிடப்படுகின்றன; எனவே இவர்களைப் பற்றித் தொழிலாளர்கள் என்ன நினைக் கிறார்கள் என்பதை எடுத்துக் கூறுவது அவசியம்.

தேசியத்தைப் பொறுத்தவரை, தொழிலாளர்களின் கண் ணோட்டம் மிகத் தெளிவானது. தேசியத்தை போலித்தன்மை வாய்ந்ததாக ஆக்க தொழிலாளர்கள் தயாராக இல்லை. தேசியம் என்றால் புராதன காலத்தை பூஜிப்பது, தோற்றுவாயில் ஸ்தல தன்மையில்லாத, வடிவம் இல்லாத எல்லாவற்றையும் தள்ளி

விடுவது - எனில், தேசியத்தைத் தனது கோட்பாடாக தொழிலாளர் ஒப்புக்கொள்ள முடியாது. கடந்த காலத்தின் சித்தாந்தத்தைத் தற்காலச் சித்தாந்தமாகத் தொழிலாளர்கள் ஏற்பதற்கில்லை. தொடர்ந்து விரிவடைந்துவரும் மனித உணர்வு கடந்த காலத்தின் கரத்தால் குரல்வளை பிடித்து நசுக்கப்படுவதை தொழிலாளர்கள் அனுமதிக்க முடியாது; இன்றைக்கு அதற்கு எந்த அர்த்தமும் கிடையாது; எதிர்கால நம்பிக்கையும் கிடையாது. ஸ்தலப் பிரத்தியேகத்தன்மை என்ற குறுகிய சட்டைக்குள் வட்டத்திற்குள் அதனை அமுக்கி விடுவதை அனுமதிக்கவும் முடியாது. மற்ற நாடுகளின் அனுபவத்தை வழிகாட்டியாகக் கொண்டும், நமது குறைகளை சீர்செய்தும், மக்களின் வாழ்க்கையை வலுப்படுத்தவும், அரசியல் வாழ்க்கையை மாற்றிப் புனரமைக்கவும் தொழிலாளர்கள் தொடர்ந்து வற்புறுத்த வேண்டும். மக்களின் வாழ்க்கையைப் புனர்நிர்மானித்து வடிவமைப்பதற்குத் தேசியம் குறுக்கே நின்றால், அப்பொழுது தேசியத்தைத் தொழிலாளர்கள் மறுதலிக்க வேண்டும்.

தொழிலாளரின் கோட்பாடு சர்வதேசியமாகும். எனினும் தொழிலாளர்கள் தேசியத்தில் அக்கறை கொண்டுள்ளனர். ஏனெனில் ஜனநாயகத்தின் சக்கரம் - பிரதிநிதித்துவம் வாய்ந்த நாடாளுமன்றம், பொறுப்பான நிர்வாகம், அரசியல்சட்ட சம்பிரதாயங்கள் ஆகியவை - தேசியஉணர்வால் ஐக்கியப்பட்டுள்ள ஒரு சமுதாயத்தில் நன்றாகச் செயல்படுகிறது. தொழிலாளர்களுக்குத் தேசியம் என்பது தங்களது லட்சியத்தை அடையும் ஒரு வழிதான். அவ்வாறில்லாமல், வாழ்க்கையின் அத்தியாவசிய கோட்பாடுகள் என்று தொழிலாளர்கள் எவற்றைக் கருதுகிறார்களோ அவற்றைத் தியாகம் செய்ய அவர்கள் ஒப்புக்கொள்ளக்கூடிய இறுதி லட்சியமாக அது ஆகிவிட முடியாது.

### சுதந்திரம்: ஒரு தவறான அணுகுமுறை

சுதந்திரத்தைப் பொறுத்தவரை, அதன் முக்கியத்துவத்தைத் தொழிலாளர்கள் உணர்கின்றனர். ஆனால் சுதந்திரம் பற்றி ஒரு தவறான அணுகுமுறையும், அதன் முக்கியத்துவம்பற்றி தவறான கருத்தும் உள்ளது என்றும் தொழிலாளர்கள் நினைக்கின்றனர். ஒரு நாட்டின் சுதந்திரம் ஐய நிலையிலான எந்தக் குறிப்பிட்ட தன்மை கொண்ட சர்க்கார் அல்லது சமூக அமைப்புடன் முடிச்சுப் போட்டுக் கொள்வதில்லை. பெயரளவிலான சுதந்திரம் உள் அடிமைத்தனத்தையே தோற்றுவிக்கும்.

சுதந்திரம் என்பது ஒருநாடு வெளி நிர்ப்பந்தம் இல்லாமல் அதன் அரசாங்க வடிவத்தையும் அதன் சமூக அமைப்பையும் நிர்ணயிக்க அதற்குள்ள சுதந்திரத்தைக் குறிக்குமே தவிர வேறல்ல. எத்தகைய அரசாங்கம் அமைக்கப்படுகிறது, எத்தகைய சமுதாயம் நிர்மாணிக்கப்படுகிறது என்பதைப் பொறுத்துத்தான் உள்ளது சுதந் திரத்தின் மதிப்பு. எந்த நோக்கத்துக்காக உலகம் இன்று போராடிக் கொண்டிருக்கிறதோ அந்த நோக்கத்துக்கு எதிராக அரசாங்க வடிவமும் சமுதாய அமைப்பும் இருக்குமாயின் அந்த சுதந்திரத் திற்கு மதிப்பு அதிகம் இல்லை. புதியஇந்தியா என்ற கோஷத்துக்கு அதிக முக்கியத்துவமும், 'இந்தியாவை விட்டு வெளியேறு' என்ற கோஷத்துக்குக் குறைந்த முக்கியத்துவமும் இருக்க வேண்டுமென்று தொழிலாளர்கள் கருதுகின்றனர். புதிய அரசியல் அமைப்புக் கொண்ட இந்தியாவை நிறுவ வேண்டும் என்ற அறைகூவல் சுதந் திரம்வேண்டும் என்ற அறைகூவலை விட அதிகம் வலுமிக்கதாக இருக்கும். ஒரு புதிய இந்தியாவில் ஒரு புதிய அரசியல் அமைப்பு என்ற கருத்தோட்டம் விடுதலை பெறவேண்டும் என்ற உறுதியைப் பெரிதும் பலப்படுத்தும். எதற்காக சுதந்திரம், யாருக்காக சுதந்திரம் என்றெல்லாம் இப்போது கேட்கப்படும் பல இக்கட்டான, தர்ம சங்கடமான கேள்விகளுக்கு இது முற்றுப்புள்ளி வைக்கும்.

இரண்டாவதாக, யுத்த முயற்சிக்கு ஆதரவளிப்பதற்காக உடனடியாக சுதந்திரம் பெற வேண்டுமென்று ஒரு நிபந்தனை போடுவதை புரிந்து கொள்ள தொழிலாளர்களுக்கு கஷ்டமாக உள்ளது. சில நபர்களின் கண்ணோட்டத்தில் இந்த நிபந்தனை ஒரு திடீர்மாற்றத்தைக் குறிக்கிறது. விடுதலைபெற இந்தியாவிற்குள்ள உரிமையைக் கபளீகரம் செய்ய ஏதேனும் திடீர் சதி நடக்குமானால் இந்த நிபந்தனையை நியாயப்படுத்த முடியும். அவ்வாறு சதி நடை பெற்றுவருவதற்கான சான்று ஏதும் இல்லை. ஒருக்கால் அத்தகைய சதி ஏதாவது இருக்குமானால், சதிகாரர்கள் யாராக இருந்தாலும் நிச்சயம் வெற்றிபெற முடியாது. மக்களின் ஐக்கிய பலத்துடன் இந்தியா சுதந்திரம் கோரினால், சுதந்திரத்திற்கான அதன் உரிமையை யாரும் மறுக்க முடியாது. இந்தியாவின் சுதந்திரம் இன்னமும் ஊசலாடிக் கொண்டிருக்கிறது என்றால் அதற்குக் காரணம் இந்தியர் களிடையே உள்ள ஒற்றுமையின்மைதான். இந்திய சுதந்திரத்தின் எதிரிகள் இந்தியர்களே தவிர வேறு எவர்களும் அல்ல.

## தொழிலாளர்களும் யுத்தமும்

இந்த யுத்தத்தில் என்ன சம்பந்தப்பட்டுள்ளது என்பதை முழுமையாகப் புரிந்துகொண்ட பின்பே யுத்தத்தின்பால் தொழிலாளரின் கண்ணோட்டம் உருவாயிற்று. உலகத்திலிருந்து யுத்தம் ஒழிக்கப்பட வேண்டுமெனில் யுத்தத்தையும் சமாதானத்தையும் அவசியம் வெல்ல வேண்டுமென்பதைத் தொழிலாளர் புரிந்து கொண்டுள்ளனர். நாஜிகளைத் தோற்கடித்து ஒரு புதிய நாஜி அரசியல் அமைப்புக்கான சாத்தியப்பாடுகளை அழித்தால் மட்டும் போதாது என்பதையும், இது பழைய அமைப்பிற்கான போர் அல்ல என்பதையும் தொழிலாளர்கள் அறிவார்கள். ஒரு புதிய அமைப்பை உருவாக்குவதே இந்த யுத்தத்திற்குத் தரப்படும் விலையாக இருக்கும் என்பதையும் அவர்கள் உணர்ந்திருக்கிறார்கள். சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் வெறும் கோஷங்களாக இல்லாமல் வாழ்க்கையின் யதார்த்தமாகத் திகழும். ஆனால் இந்த கேள்விகளுக்கெல்லாம் மேலான கேள்வி, இந்தப் புதிய அமைப்பு எப்படி யதார்த்தமாகும் என்பதாகும். இந்தக் கேள்வி பற்றி தொழிலாளர்கள் உறுதியாக உள்ளனர். இந்த லட்சியங்களெல்லாம் நிறைவேற வேண்டுமானால், அதற்கு அடிப்படையான நிபந்தனை உண்டு. யுத்தத்தில் வெற்றி பெறுவதுதான் அந்த நிபந்தனை என்று தொழிலாளர்கள் வலியுறுத்துகின்றனர்.

## இன்றைய யுத்தத்தின் இரு அம்சங்கள்

இந்தயுத்தத்தால் ஏராளமான நல்ல பலன்கள் கிட்டும் சாத்தியப்பாடுகள் உள்ளன. ஒரு புதிய அமைப்பை தோற்றுவிப்பதை அது உறுதி செய்கிறது. இந்த யுத்தம் மற்ற யுத்தங்களிலிருந்து மாறுபட்டது என்பதைத் தொழிலாளர்கள் காண்கின்றனர். மற்றயுத்தங்களிலிருந்து வேறுபடுத்தும் இரு அம்சங்கள் உள்ளன. முதலாவதாக முந்திய யுத்தங்களில் போல, உலகின் பிரதேசங்களை மிகவும் பலம் வாய்ந்த நாடுகளிடையே பங்கு போட்டுக் கொள்வதற்கான யுத்தமல்ல இது. இந்த யுத்தத்தில், உலகின் பிரதேசங்களை பங்குபோட்டுக் கொள்வது ஒரே காணமாக இல்லை. எத்தகைய அரசு வடிவங்கள் மற்றும் அமைப்புகளின் கீழ் மனித சமுதாயம் வாழப்போகிறது என்பதுபற்றிய தத்துவார்த்த மோதல் இந்த யுத்தத்தில் இருக்கின்றன. இரண்டாவதாக, மற்ற யுத்தங்கள்

போல் இந்த யுத்தம் வெறும் யுத்தம் மட்டுமல்ல. எதிரியை முறி யடித்து அவனது தலைநகர்நோக்கி முன்னேறி, சமாதானத்தை திணிப்பது மட்டுமல்ல இந்த யுத்தத்தின் நோக்கம். இந்த யுத்தம், யுத்தமாக இருப்பதோடு ஒரு புரட்சியுமாகும்; வாழ்க்கையில் அடிப் படை மாற்றத்தை கொண்டு வந்து புனரமைக்கும் புரட்சியாகும். இந்த அர்த்தத்தில் இது ஒரு மக்கள் யுத்தமாக இருக்க முடியும். அப்படி இல்லாமலிருந்தால்தான் அதை ஒரு மக்கள் யுத்தமாக மாற்ற முடியும், மாற்ற வேண்டும்.

இந்த உண்மைகளின் பின்னணியில் இந்த யுத்தம் பற்றியும் அதன் பலனைப் பற்றியும் தொழிலாளர்கள் அக்கறையில்லாமல் இருக்கமுடியாது. சென்றகாலத்தில் புதிய அமைப்பை ஏற்படுத்து வதற்கான முயற்சிகள் மீண்டும் மீண்டும் முறியடிக்கப்பட்டன என்பதைத் தொழிலாளர்கள் அறிவர். அதற்குக் காரணம், ஜனநாயகம் அமைக்கப்பட்டபின், அது பிற்போக்காளர் கரங்களில் விடப் பட்டதேயாகும். எதிர்காலத்தில் இம்மாதிரி தவறு மீண்டும் செய்யப் படாமல் இருப்பதை உலக மக்கள் கவனித்து கொள்வார்களே யானால், இந்த யுத்தத்தில் போராடியும் புதிய அரசியல் அமைப்பை நிறுவி அதனை உலக ஜனநாயகத்திற்குப் பாதுகாப் பானதாக ஆக்க முடியும்.

### சரியான தலைமை

நாட்டிற்கு ஒரு தலைமை தேவைப்படுகிறது; யார் வழி காட்டமுடியும் என்பதுதான் கேள்வி. நாட்டிற்குத் தேவைப்படும் தலைமையை அதற்கு அளிப்பதற்குத் தொழிலாளர்களுக்குத் திறமை உள்ளது என்று துணிந்து கூறுவேன். மற்ற விஷயங்களோடு, சரியான தலைமைக்குத் தேவைப்படுபவை லட்சியநோக்கும் சுதந்திரமான சிந்தனையும். மேல்மட்டத்தினருக்கு லட்சியநோக்கு இருப்பது சாத்தியமே; ஆனால் சுதந்திரமான சிந்தனை சாத்தியமில்லை. நடுத்தரவர்க்கத்தைப்பொறுத்தவரை, லட்சியநோக்கும் சுயசிந்தனை யும் சாத்தியமில்லை. மேல்தட்டினருக்கு உள்ள தாராளப்போக்கு மத்தியதரவர்க்கத்திற்குக் கிடையாது; ஏனெனில் லட்சியநோக்கை வரவேற்று வளர்க்க தாராளப்போக்கு அவசியம். புதிய அரசியல் அமைப்புக்கான வேட்கை மத்தியதர வர்க்கத்திடம் இல்லை; அந்த நம்பிக்கையில்தான் தொழிலாளர் வாழ்கின்றனர். எனவே தங்களின்

அரசியல் லட்சியத்தை அடைய இந்தியர்கள் பின்பற்றிய சென்ற காலத்தின் நியாயமான, பாதுகாப்பான வழிகளை திரும்பக் கொண்டு வருவதில், தொழிலாளர்களுக்கு ஒரு தெளிவான பொறுப்பு உள்ளது. இந்தியாவுக்கும் இந்தியர்களுக்கும் தொழிலாளரின் தலைமை என்பது போராடுவதற்கும் ஐக்கியத்தை ஏற்படுத்துவதுமாகும். இந்த வெற்றியின் பலன்கள் சுதந்திரமும் புதிய சமூக அமைப்புமாகும். இத்தகைய வெற்றியை ஈட்ட எல்லோரும் போராட வேண்டும். வெற்றியின் பலன்கள் எல்லோருக்குமான மூதாதையர்கள் வழி சொத்தாக இருக்கும். அந்த சொத்தைப் பகிர்ந்து கொள்வதற்கு ஒரு ஐக்கிய இந்தியாவுக்குள்ள உரிமைகளை மறுப்பதற்கு யாரும் இருக்க முடியாது.



# 8

## [1]காகிதக் கட்டுப்பாட்டு ஆணை

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் : (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்):* மதிப்பிற்குரிய திரு.பாஜோரியா இந்த ஒத்திவைப்புத் தீர்மானத்தைக் கொண்டு வந்ததற்கு நான் உண்மை யிலேயே மிக மகிழ்ச்சியடைகிறேன்; இந்த நாட்டில் காகித நிலைமை பற்றிய உண்மைகளை இந்த அவையின் முன்பு வைக்க இது அரசுக்கு வாய்ப்பளிக்கிறது. ஐயா! இந்த அவையில் ஆற்றப் பட்ட உரைகளில், அரசாங்கம்பற்றி மிகக் கடுமையான விஷ யங்கள் கூறப்பட்டன. உணர்ச்சியற்றதாக, சுயநலம் வாய்ந்ததாக, கடின உள்ளம் கொண்டதாகச் அரசாங்கம் இருப்பதாக அதன்மீது குற்றம் சாட்டப்பட்டது; கல்வி நிறுவனங்களுக்கு எந்த முக்கியத் துவமும் கொடுக்கப்படவில்லை என்று கூறப்பட்டது. எக்காரணங் களால் இந்த ஆணையை அரசாங்கம் ஏன் பிறப்பிக்க வேண்டி வந்தது என்பது பற்றிய விவ ரங்களையும், நிலைமையை உடனடி யாகவும் எதிர்காலத்திலும் தளர்த்துவதற்காக சர்க்கார் எடுத்துக் கொண்ட நடவடிக்கைகளையும் அவையில் எடுத்துரைக்க விரும்பு கிறேன்.

அரசு வெளியிட்ட ஆணையின் தன்மை பற்றி சில தவறான கருத்துக்கள் எழுந்துள்ளன என்பதுபற்றி அவைக்கு சுட்டிக் காட்டி விட்டு துவங்க விரும்புகிறேன். அரசாங்கத்தால் பிறப்பிக்கப்பட்ட ஆணை உண்மையில் காகித உற்பத்தியில் 90 சதவிகிதத்தை சர்க்கார் உரிமை கொண்டாடுகிறது என்பதையே காட்டுகிறது என உறுப் பினருக்குப்பின் உறுப்பினர் எழுந்து கருத்துத் தெரிவித்தனர். இது முற்றிலும் தவறான கருத்து என்பதை அவைக்குத் தெரியப்படுத்த விரும்புகிறேன். காகிதக் கட்டுப்பாட்டு அதிகாரி வெளியிட்ட ஆணை தேவைக்கோரிக்கை ஆணையல்ல. காகித உற்பத்தியாளர் கள் அவர்கள் உற்பத்தி செய்யும் காகிதத்தில் 90 சதவிகிதத்தைச் சர்க்காரிடம் ஒப்படைக்கக் கட்டுப்பட்டவர்கள் என்று அந்த ஆணை குறிப்பிடுகிறது. இந்த ஆணையை ஒரு குறிப்பிட்ட நிலையில் காகித

---

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுப்பு I, 1943 பிப்ரவரி 11, பக்கம் 128-131.

இருப்பைக் கட்டுப்படுத்தும் ஆணை என்று கூறலாம். நான் தெரியப்படுத்தும் வித்தியாசம் உண்மையான வித்தியாசம் என்று அவைக்குக் கூற விரும்புகிறேன்; இப்போதைய ஆணை கூறுவதெல்லாம், காகித உற்பத்தியாளர்கள் அவர்களின் உற்பத்தியில் 10 சதவிகிதத்திற்கு மேல் பொதுமக்களிடம் விற்பனை செய்யக் கூடாது என்பதே. மாறாக 90 சதவிகித காகிதத்தை, சர்க்காரிடம் ஒப்படைக்க வேண்டுமென்று அதுகூறவில்லை. அது அடிப்படையான மிக உண்மையான தனித் தன்மைகொண்டது என்று நான் கருதுகிறேன்; இதை அவை கவனத்தில் கொள்ள வேண்டும்.

*பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா (ராஜதானிப் பிரிவு: முகமதியரல்லாத கிராமப்புறம்):* நடைமுறையில் வித்தியாசம் என்ன?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** 10 சதவிகிதத்திற்கு மேலும் சர்க்கார் விடுவிக்கலாம்.

**பாபூர் பைஜ்நாத் பஜோரியா :** எவ்வாறு?

**டாக்டர் பி.என். பானர்ஜி:** சர்க்காருக்கு எப்பொழுது விவேகம் உதிக்கிறதோ அப்பொழுது?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆணை எப்படியுள்ளதோ அப்படியே கூறினேன். ஆணைக்குப் பொருள் விளக்கம் கொடுத்துக் கொண்டிருக்கவில்லை நான். ஆணையின் ஷரத்துக்களை வரிசைக் கிரமமாக விளக்கிக் கொண்டிருக்கிறேன்.

(ஒரு குறுக்கீடு இருந்தது, பல உறுப்பினர்கள் பேசிக் கொண்டிருந்தனர்.)

*தலைவர் (மாண்புமிகு சர். அப்துல் ரஹீம்):* ஒழுங்கு, ஒழுங்கு.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவை கவனத்திற் கொள்ளவேண்டுமென்று நான் விரும்பும் இரண்டாவது விஷயம், இந்த ஆணை காகிதமில்களிடம் வழங்கப்பட்டுள்ளது. அது சரக்குச் சேமிப்பாளர்களிடம் சேர்ப்பிக்கப்படவில்லை. ஏற்கனவே இவர்கள் சேமிப்புக் கிடங்குகளில் அதிகமான கையிருப்புகளை வைத்திருக்

கிறார்கள். இரண்டாவதாக, இந்த ஆணை பிறப்பிக்கப்படும் முன்பு சேமிப்பாளர்களிடம் சேமிக்கப்பட்ட, அவர்களால் பதுக்கி வைக்கப் பட்டுள்ள காகித சேமிப்பிலிருந்து பெற்று தமது தேவையைப் பொதுமக்கள் பூர்த்தி செய்து கொள்வது இன்னமும் சாத்தியம். இந்த ஆணை பற்றி அவைக்கு ஞாபகப்படுத்த விரும்பும் மூன்றாவது விஷயம் இதுதான்: இந்த ஆணையின்படி, 10 சதவிகிதத்திற்கு மேல் விற்பனைசெய்ய காகிதக்கட்டுப்பாட்டு அதிகாரி மில்களை அனுமதிக்க முடியும். நவம்பர் 5 ஆம் தேதி பிறப்பிக்கப்பட்ட ஆணை இருந்தபோதிலும், பொதுமக்களின் தேவைக்கு 10 சதவிகிதத் திற்கு மேல் காகிதத்தை விடுவிப்பது சாத்தியம் என்று காகிதக் கட்டுப் பாட்டு அதிகாரி காண முடியுமென்றால், இந்த ஆணையின்படி அவர் அனுமதிப்பது சாத்தியம். அதற்குத் தடை எதுவுமில்லை. கட்டுப்பாடு, இடைஞ்சல் எதுவும் கிடையாது. அவ்வாறு செய்வ தற்கு இன்னமும் வழிஇருக்கிறது. சர்க்கார் வெளியிட்ட ஆணை யில் உண்மையில் சம்பந்தப்பட்டது என்ன என்பதை அவைக்கு விளக்கி கூறிவிட்டதால், இந்த ஆணையை வெளியிட சர்க்காரை நிர்ப்பந்தித்த உடனடியான சூழ்நிலைமைகளை இந்த அவைக்குத் தெரிவிக்க விரும்புகிறேன்.

சுருக்கமாக, உண்மைகள் இவையே. முதல் ஆறு மாதங் களில் - அதாவது ஏப்ரல் முதல் செப்டம்பர்வரை, மத்திய எழுது பொருள்கள் அலுவலகம் முன்வைத்த காகிதத்திற்கான நமது தேவை 34,000 டன்கள் ஆகும். மத்திய எழுதுபொருள்கள் அலுவல கத்தின் சார்பில் சர்க்காருக்கு 16,000 டன் காகிதத்தை மில்கள் ஏற் கெனவே ஒப்புவித்துள்ளன என்று தெரியவந்தது. 25,900 டன் வழங்க வேண்டுமென்று காகிதமில்களோடு நாம் ஒப்பந்தம் செய்துள் ளோம் என்பதை அவை கவனத்தில் கொள்ளவேண்டும். கொஞ்சம் கணிதத்தை அவை பயன்படுத்தினால், நம்முடைய மதிப்புகளின் படி முதல் ஆறு மாதங்களுக்கு நம்முடைய ஒப்பந்தப்படி காகித மில்களிலிருந்து கிடைக்க வேண்டியது 9,000 டன்கள் மட்டுமே என்பதைக் காணமுடியும்; இன்னமும் ஆறுமாதங்கள் கடக்க வேண்டும். இதன் விளைவாக, சர்க்கார் செய்தது இதுதான்: கடந்த 6 மாதங்களில் தெரியவந்த சூழ்நிலைகளின் வெளிச்சத்தில், தன் மதிப்பீட்டை சர்க்கார் மாற்றியமைத்தது. சர்க்கார் செய்த இரண் டாவது விஷயம் என்னவெனில், காகிதத் தேவைக்கான கோரிக்கை பற்றிய வழிமுறையை வலுப்படுத்தியது; இந்த ஆணை பிறப்பிக்கப்

படும் முன்பு, சர்க்கார் சார்பில் காகிதத்திற்கான தேவையை முன் வைப்பதற்கு இரு வழிமுறைகள் இருந்தன என்பதை அவைக்குத் தெரிவிக்க விரும்புகிறேன்; ஒன்று மத்திய எழுதுபொருள் அலுவலகத் தின் கோரிக்கை - இது மத்திய சர்க்கார், மற்றும் வங்காளம், ஒரிஸ்ஸா, அஸ்ஸாம், வடமேற்கு எல்லை மாகாணம், மத்திய மாகாணங்கள் சார்பில் மற்றது மத்திய எழுதுபொருள் அலுவலகம் அல்லாத கோரிக்கை; மத்திய எழுதுபொருள் அலுவலகத்திற்கு உட்படாத மாகாணங்கள் மேற்படி மத்திய அலுவலகத்திற்கு அப்பால் சுதந்திரமாக வைக்கப்படுபவை - இந்திய சமஸ்தானங்கள், பாதுகாப்பு அச்சகம், வினியோக இலாகா, அரசு ரயில்வேக்கள் அல்லாதவை. சர்க்காருக்கு தேவையான காகிதத்திற்கான கோரிக் கையை இந்த இரு சுதந்திரமான முறைகளில் வைப்பது, காகிதத் தின் மொத்த தேவையைக் கறாராகக் கணிப்பதில் பல சிரமங்களை ஏற்படுத்தியது. இதனால், எடுக்கப்பட்ட முதல் நடவடிக்கை தேவைக்கு இருவழிகளில் உள்ள முறையை ஒரே முறையாக உறுதிப் படுத்துவதாகும்; மொத்த விஷயமும் மத்திய எழுது பொருள்களின் அலுவலகத்திடம் ஒருமுகப்படுத்தப்பட்டுள்ளது.

அவையிடம் ஏற்கனவே நான் தெரிவித்தபடி, காகிதத்தை அளவுக்கு அதிகமாக உபயோகிப்பதன் ஒப்பந்த அளவைவிட நடைமுறையில் அதிகமாக எடுத்துக்கொண்டதன் காரணமாக நெருக்கடிபோன்ற நிலைமை ஏற்பட்டுள்ளதைத் தெரிந்து கொண் டதும், நாங்கள் மதிப்பீட்டை மாற்றி அமைத்து, கோரிக்கை வைப்பதை மையப்படுத்தினோம்; அக்டோபர் இறுதியில் உள்ள நிலைமைப்படி நிர்ணயிக்கப்பட்ட புள்ளி விவரங்கள் வருமாறு:

| | டன்கள் |
|---|---|
| மத்திய எழுதுபொருள்கள் அலுவலகத்தின் கோரிக்கை அடுத்த ஆறு மாதத்திற்கு, அக்டோபர் முதல் 1943 மார்ச் வரை நிர்ணயிக்கப்பட்டுள்ளது | 32,000 |
| மத்திய எழுதுபொருள்கள் அலுவலகமில்லாத கோரிக்கை | 9,500 |
| மொத்தம் | 41,500 |

அந்த ஆண்டு மில்களின் உற்பத்தியை அடிப்படையாகக் கொண்டு, அக்டோபர் - மார்ச் இடைப்பட்ட காலத்தில், மில்கள் 47,575 டன் உற்பத்தி செய்யும் என்று கணக்கிடப்பட்டது; சர்க்காரின் தேவையான 41,500 டன் மில்களின் ஆறுமாத உற்பத்தியில் 87 சதவிகிதமாகும். குத்துமதிப்பாக அது 90 சதவிகிதம்; எனவேதான் 90சதவிகிதம் என்ற அளவை ஆணை கொண்டிருந்தது. நவம்பரில் இந்த ஆணையைப் பிறப்பிக்கவேண்டியது ஏன் அவசியமாயிற்று என்று அவை புரிந்து கொள்ளும். காகித உற்பத்தியை அதிகரிக்க என்ன நடவடிக்கைகளை சர்க்கார் எடுத்துள்ளது என்பதை அவைக்கு தெரிவிக்க விரும்புகிறேன்.

காகிதமில்கள் உற்பத்தியை அதிகரிப்பதை சாத்தியமாக்க அதிகப்படியான யந்திரங்களை இறக்குமதி செய்வதில் உதவுவது சர்க்காருக்கு சாத்தியமல்ல என்பதை அவை புரிந்துகொள்ளும் என்பது நிச்சயம். கப்பலில் கொண்டு வருவதன் கஷ்டம் நன்கு தெரிந்ததே; இதுவிஷயத்தில் ஏதாவது செய்வது என்பது சர்க்காரின் அதிகாரங்களுக்கு அப்பாற்பட்டது. எனவே, நமக்கு கிடைக்கக் கூடிய வசதிகளுக்கு உட்பட்டு காகித உற்பத்தியை அதிகரிக்க நாம் செய்யக் கூடியவற்றை நாம் திட்டமிடவேண்டும்; சர்க்கார் மேற்கொண்டுள்ள மூன்று விஷயங்கள் பற்றி அவையின் கவனத்தை ஈர்க்க விரும்புகிறேன்; உற்பத்தியை அதிகரிக்க, சர்க்கார் செய்த பயனுள்ளவை என்று குறிப்பிடக்கூடிய மூன்று நடவடிக்கைகள் பற்றி சபை யின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். காகித உற்பத்தி அதிகாரி ஒருவரை சர்க்கார் நியமித்துள்ளது; எந்த வழிகள் மூலம் காகித உற்பத்தியை அதிகரிக்க முடியும் என்பதை கண்டறிய வேண்டியது அவருடைய பணி...

**மதிப்பிற்குரிய ஓர் அங்கத்தினர்:** அந்தக் கனவான் யார்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு. பார்க்கவா. இரண்டாவதாக, அத்தியாவசியமில்லாத உயர்ரக காகிதத்தை நிறுத்திவிட்டு சர்க்காரின் தேவைகளை சுலபமாக நிறைவேற்றக் கூடிய சாதாரண ரகங்கள் சிலவற்றை உற்பத்தி செய்வதுடன் சர்க்கார் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டது. மூன்றாவதாக, ஒவ்வொரு குறிப்பிட்ட மில்லும் தன்னிடமுள்ள யந்திரங்கள், உபகரணங்களுக்கு ஏற்ப எந்த ரகமான காகிதத்தை அதிக அளவில் உற்பத்தி செய்ய முடியும் என்பதைக் கண்டறிய அவை ஒவ்வொன்றுடனும் நேரடியாகத் தொடர்பு கொண்டுள்ளோம்.

நிலைமையைத் தளர்த்துவதற்காக சர்க்கார் மேற்கொண்ட நடவடிக்கை, காகிதத்திற்கான பல்வேறு இலாக்காக்களின் கோரிக் கைகள் மீது தேவைக் குறைப்பை திணிப்பது, தன்னிச்சையாக குறைப்பைத் திணிப்பது, இந்தத்தேவைக் குறைப்புகள் வருமாறு: மாகாண மற்றும் சமஸ்தானங்களின் தேவைகள் தன்னிச்சையாக (அவற்றைக் கலந்து கொள்ளாமல்) 10 சதவிகிதம் குறைக்கப்பட்டது; இது 950 டன்னை மிச்சப்படுத்தும். மத்தியசர்க்காரைப் பொறுத்த வரை, காகிதத்தைபயன்படுத்தும் பல்வேறு இலாக்காக்கள் அளித்த வரவுசெலவு திட்டத்தை அவற்றின் மதிப்பீட்டிலிருந்து திருத்தி கணிசமான அளவு குறைக்கப்பட்டுள்ளது. மதிப்பீடுகளை மாற்றி அமைப்பதில் சர்க்கார் என்னசெய்துள்ளது என்பதை எடுத்துக்காட்ட கீழ்க்கண்ட புள்ளி விவரங்களை அவையின் முன் வைக்கிறேன். பொதுத்துறை சார்ந்த இலாக்காக்களின் ஆரம்ப மதிப்பீடு 11400 டன்னாக இருந்தது; ஆறுமாதகாலத்திற்கு அது 4600 டன்னாக குறைக்கப்பட்டது. பாதுகாப்பு இலாக்காவின் ஆரம்ப மதிப்பீடு 15,000 டன்னாக இருந்தது. அது 10,000 டன்னாக குறைக்கப்பட்டது. கிழக்கிந்தியக்குழு வழங்கீட்டுக் கவுன்சிலின் முதல்மதிப்பீடு 9400 டன்னாக இருந்தது; அது 7900 டன்னாகக் குறைக்கப்பட்டது; வினியோக இலாக்காவின் தேவை 3100 டன்னிலிருந்து 4500 டன் னாக உயர்த்தப்பட்டது; இது தொழிற்சாலைகளுக்கு உபயோகப் படுத்தப்படும் வர்த்தகக் காகிதம். இலாக்காக்களின் ஆரம்ப மதிப்பீடு, நான் குறிப்பிட்டிருந்தபடி, 39,100 டன்; ஆனால் திருத்தி அமைக்கப்பட்ட மதிப்பீடு 27,600 டன்னாகும். நான் ஏற்கனவே சுட்டிக்காட்டியபடி, மாகாணங்கள் மற்றும் சமஸ்தானங்களின் தேவைகளை குறைப்பதன்மூலம் 950 டன் மிச்சப்படுத்தப்பட்டது என்பதை அவை தயவு செய்து கவனத்தில் கொள்ள வேண்டும். அத்துடன் பல்வேறு இலாக்காக்களின் மதிப்பீடுகளை மாற்றியமைத்த தால் 11900 டன் பெறமுடிந்தது. மொத்தம் மிச்சமானது 12850 டன். இப்பொழுது இந்தியாவில் பயன்படுத்தப்படும் காகிதத்தோடு இதை ஒப்பிட்டுப் பாருங்கள். திட்டவட்டமான புள்ளி விவரங் கள் இல்லை; அம்மாதிரி புள்ளிவிவரங்களை பெறுவதும் சாத்திய மல்ல. ஆனால் சர்க்கார் கொடுத்திருப்பதுபோல் இத்தகைய புள்ளி விவரங்கள் காண்பிப்பது என்னவெனில், இந்தியாவில் வருடத் திற்குப் பயன்படுத்தப்படும் காகிதம் சுமார் ஒருலட்சம் டன்; 6 மாதத் திற்கு அது 50,000 டன் ஆகிறது. அச்சகக் கண்காணிப்பாளர் வெளி யிட்ட ஆணையின்படி ஏற்கனவே 10 சதவிகிதம் பொதுமக்களுக்காக ஒதுக்கப்பட்டுள்ளது என்பது சபையின் கவனத்தில் இருக்கும். அது பொதுமக்களுக்கு 5,000 டன்னை அளிக்கிறது. இப்பொழுது மீதப்

படுத்தப்பட்ட அல்லது நான் எடுத்துக்காட்டியபடி குறைக்கப் பட்டதெனில் மிச்சமாகும் 12,850 டன்னையும் சேர்த்தால், மொத்தம் விடுவிக்கப்படும் காகிதம் 17,850 டன்; சமாதானகாலத்தில் பொது மக்கள் உபயோகத்தில் இது 33 சதவிகித்மாகிறது என்பதை அவை காணமுடியும்.

திரு. தலைவர் (மாண்புமிகு சர்.அப்துல் ரஹீம்): மாண்புமிகு உறுப்பினரின் நேரம் கடந்து கொண்டிருக்கிறது; வேறுவழி இல்லை.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்: வீணடிப்பை தவிர்ப்பதற்காக நாங்கள் எடுத்துள்ள நடவடிக்கைகள் பற்றி அடுத்துக் குறிப்பிட விரும்பினேன். எனது நேரம் ஆகிக் கொண் டிருப்பதால், இந்த விவரங்களுக்குள் நான் போக விரும்பவில்லை. அவையின்கருத்து அதுவானால் நான் அவற்றைப் பத்திரிகை களுக்கு அனுப்ப முடியும்.

மதிப்பிற்குரிய அவைக்கு அடுத்துநான் குறிப்பிட்டுக் கூறப் போவது, அடுத்த ஆண்டிற்கு நாம் என்ன செய்யப் போகிறோம் என்பதாகும். அடுத்த ஆண்டிற்கு மதிப்பீடு 70,000 டன். அதில் நாம் செய்துள்ளது இது; காகிதம் தேவைப்படும் ஒவ்வொரு இலாகா விற்கும் நாங்கள் கோட்டாவை நிர்ணயித்துள்ளோம். உதாரணத் திற்கு, செய்தி ஒலிபரப்புக் கட்டுப்பாட்டு அதிகாரியிடம் 260 டன் னுக்கு மேல் அவருக்கு கிடைக்காது என்று கூறியுள்ளோம். எதிர்-பிரசாரத்துறை இயக்குனர் அலுவலகத்திற்கு 100 டன்தான் கிடைக் கும்; தேசிய போர்முனைக்கு 350 டன் கிடைக்கும். பொதுச் செய்தித் துறைக்கு 300 டன். எனக்கு நேரம் கிடைத்திருந்தால், மற்ற விவரங் களையும் அவைக்கு அளித்திருக்க முடியும். அவைக்கு நான் கூற விரும்புவதெல்லாம் என்னவெனில், சர்க்கார் மெத்தனப்போக் கோடு நடந்துகொள்கிறது என்று கூறுவது நியாயமாகாது. மிச்சப் படுத்துவதற்கு போதுமான வாய்ப்பு இன்னமும் இருக்கலாம் என்பதை நான் மறுக்கவில்லை; மேற்கொண்டு எவ்வாறு சிக்கனம் கையாளப்படலாம் என்று பல்வேறு யோசனைகள் வழங்கிய அவை உறுப்பினர்களுக்கு நான் மிகவும் கடமைப்பட்டுள்ளேன். நட வடிக்கை எடுக்கப்படுவதற்காக இந்த யோசனைகளை சம்பந்தப் பட்டவர்களுக்கு நிச்சயமாக அனுப்பிவைப்பேன். சாத்தியமான நடவடிக்கைகளை சர்க்கார் எடுத்து வருகிறது என்று மதிப்பிற் குரிய உறுப்பினர்கள் திருப்தி கொள்வார்கள் என்று நம்புகிறேன்.

# 9

## [1]தொழிலாளர்களுக்கு கிராக்கிப்படி வழங்கப்படுவது பற்றிய அறிவிப்பு

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்):* ஐயா! திரு.மேத்தா கொண்டுவந்த தீர் மானம் இரண்டு விஷயங்களை எழுப்பகிறது. ஒருவிஷயம் என்ன வெனில், சென்றதடவை கிராக்கிப்படி மிகக் குறைவானதாகவும் போதுமானதற்றதாகவும் உள்ளது என்பது. இந்தத் தீர்மானம் தவறான கருத்தை அடிப்படையாகக் கொண்டது என்று கூறு வதற்காக வருந்துகிறேன்.

ஐயா! இந்திய சர்க்கார் அறிவித்த கிராக்கிப்படிகள் மிகக் குறைவாகவும் போதுமானதாக இல்லாமலும் இருக்கிறதென்பது திரு.மேத்தா எழுப்பியுள்ள முதல்பிரச்சினை. இருப்பதைப் பொறுத்த வரை, இது சம்பந்தமாக சர்க்கார் இறுதியான எந்த முடிவிற்கும் வரவில்லை என்பதை அவை கருத்தில் கொள்ள வேண்டும். பிப்ரவரி 23ம் தேதிய அறிவிப்பு மூலம் வெளியிட்ட புள்ளி விவ ரங்கள் மாற்ற முடியாதவையோ அல்லது அதிகரிக்கப்பட முடி யாதவையோ அல்ல.

*பண்டிட்லட்சுமிகாந்த மைத்ரா (ராஜதானிப் பிரிவு: முகமதிய ரல்லாத புறநகர்) :* இது தற்காலிகமானதா?

*மாண்புமிகு டாக்டர்.பி.ஆர். அம்பேத்கர்:* இருக்கலாம்: இந்த புள்ளிவிவரங்களின்படி போதுமான கிராக்கிப்படி அளிக்கப்பட வில்லை என்று வாதாடமுடியும். ஆனால் நான் ஏற்கனவே கூறியது போல் இது இறுதியானது ஒன்றும் அல்ல. நிலைமை இன்னமும் நிலையற்றதாக உள்ளது; இப்பொழுது சர்க்கார் பரிசீலிக்க வேண்டிய விஷயம், கிராக்கிப்படி எந்த உருவை எடுக்கும் என்பதாகும்; அதாவது பணமாகவா அல்லது உணவுப் பொருள்கள் வழங்குவதன் மூலமாகவா? கிராக்கிப்படியை நிர்ணயிக்கும் முன்பு இந்த விஷ யத்தை சர்க்கார் முடிவு செய்ய வேண்டும். இந்த விஷயம் பற்றி நான்

தாழ்மையாகக் கூறிக்கொள்வது யாதெனில், சீர்செய்ய முடியாத, மாற்ற முடியாத, திருத்த முடியாத எந்த முடிவையும் சர்க்கார் எடுக்க வில்லை என்பதாகும்.

பண்டிட் லட்சுமி காந்த மைத்ரா: நன்னடத்தைக்கு சலுகைப்படி இருக்கிறதா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: தபால் இலாகா வில் இத்தகைய சலுகைகொடுக்கப்பட்டுள்ளது என்று நினைக் கிறேன். நிர்ணயக்கப்பட்டிருக்கும் கிராக்கிப்படி குறைவானது, போதுமானதாக இல்லை என்பதைப் பொறுத்தவரை அதற்கு இன்னமும் வழி இருக்கிறது. சரியான சமயத்தில் அது பரிசீலிக்கப் படலாம்.

இரண்டாவது குற்றச்சாட்டை, அதாவது தொழிற்சங்கங் களின் பிரதிநிதிகளை கலந்தாலோசிக்கவில்லை என்பதை எடுத்துக் கொண்டால், முதலாவதாக தொழிலாளர்களுடன் தொடர்பு ஏற் படுத்திக் கொள்ளும் விஷயத்தில் சில கஷ்டங்கள் உள்ளன என்பதை கவனத்தில் கொள்ள வேண்டியது அவசியம் என்று நினைக்கிறேன். கஷ்டம் இதுதான். மதிப்பிற்குரிய எனது நண்பர் திரு. ஜம்னாதாஸ் மேத்தா அறிந்துள்ளதுபோல், ரயில்வேக்கள் சம்பந்தப்பட்டவரை, பல சங்கங்கள் உள்ளன. இந்த சங்கங்கள் எல்லாம் சேர்ந்து ஒரு சம்மேளனத்தை அமைந்துள்ளன. இதனால் ரயில்வேயில் உள்ள தொழிலாளர்களுடன் தொடர்புஏற்படுத்தி, கலந்தாலோசிக்கும் சந்தர்ப்பம் வரும்போதெல்லாம், அவர்களின் கருத்தை அறியவும் கலந்து கலந்தாலோசிக்கவும் சர்க்காருக்கு எளிதாகிறது. சர்க்கார் இதைச் செய்துகொண்டிருக்கிறது என்று திரு.ஜாம்னதாஸ் மேத்தா ஒப்புக்கொள்வார் என்று நினைக்கிறேன். உண்மையில் இது சம்பந்த மாக ஒருநடைமுறை ஏற்கனவே ஏற்படுத்தப்பட்டுள்ளது, இந்த நடைமுறை ஒழுங்காகப் பின்பற்றப்பட்டு வருகிறது; ரயில்வே வாரியமும் ரயில்வேஊழியர்களின் சம்மேளனமும் பொதுவான அக்கறை உள்ள விஷயங்களை விவாதிக்க வருடத்திற்கு இரு தடவை சந்திக்கின்றன. ஐயா! அடுத்து, மத்திய சர்க்காரின்கீழ், தபால், தந்தி இலாகா ஊழியர்கள் இருக்கிறார்கள். மத்திய சர்க்காரின் தபால், தந்தித் தொழிலாளர்களைப் பிரதிநிதித்துவப்படுத்தும் சங்கங்கள் பன்னிரண்டு உள்ளன என்று அறிகிறேன். அவற்றில் நான்கு உயர் அதிகாரிகளைப் பிரதிநிதித்துவப்படுத்துகின்றன;

எட்டு சங்கங்கள் தொழிலாளர்களைப் பிரதிநிதித்துவப்படுத்து கின்றன. துரதிருஷ்டவசமாக, ஒரே அமைப்பு, பல்வேறு தபால்-தந்தித் தொழிலாளர்கள் சங்கங்கள் இணைந்த சம்மேளனம் எதுவும் இல்லை; இதனால் ரயில்வே வாரியம், ரயில்வே சிப்பந்தி கள் கூட்டமைப்போடு ஒருவகையான தொடர்பை ஏற்படுத்திக் கொள்ள சாத்தியப் படுவதுபோல், இவர்களுடன் தொடர்பு ஏற் படுத்திக் கொள்வது சாத்தியமில்லாது போகிறது. ஆனால் ஒரு உண்மையைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்; கஷ்டங்கள் இருந்த போதிலும், எந்த நடவடிக்கை எடுக்கும்முன் தபால்-தந்தித் தொழி லாளர்களுடன் அரசாங்கம் தொடர்பு கொண்டு வருகிறது. 'டெலி கிராப் ரெவ்யூ' என்ற சஞ்சிகையின் 1943 ஜனவரி இதழிலிருந்து ஒரு சிறிய பத்தியை சபைக்குப் படித்துக் காட்ட விரும்புகிறேன்; தபால்-தந்தித் தொழிலாளர்களுடன் தொடர்பை ஏற்படுத்திக் கொள்ள தபால்-தந்தி இலாகா மேற்கொண்ட முயற்சிகளை அது குறிப்பிடுகிறது. ரெவ்யூ கூறுவது இதுதான்:

> ''தபால், தந்தித் துறையின் தலைமை இயக்குநர் தமது அண்மைய கல்கத்தாவின் வருகையின்போது பல்வேறு அங்கீ கரிக்கப் பட்ட சங்கங்களின் பிரதிநிதிகளை 1942 டிசம்பர் 10ம் தேதி கிராக்கிப்படி பிரேரணையை விவாதிக்க ஒரு கூட்டு மாநாட்டிற்கு அழைத்திருந்தார். மாநாட்டில் பிரதிநிதிகள் இந்த பிரச்சினையில் ஒரு ஒன்றுபட்ட நிலையை முன்வைக்க முடியவில்லை. அடுத்து, கல்கத்தா தபால் கிளப்பின் தாராபாட் ஹாலில் 1942 டிசம்பர் 12ம்தேதி ஒன்றாகச் சந்தித்து, கிராக்கிப்படிக்கான பரஸ்பரம் ஒப்புக்கொள்ளும் புதிய திட் டத்தை வகுத்தனர். இந்த இதழில் பிறிதோர் இடத்தில் அது பிரசுரிக்கப் படுகிறது.''

திரு. ஜம்னாதாஸ் மேத்தா: அந்தத்திட்டத்தில் அவர்கள் என்ன கோரினார்கள்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தலைமை இயக்குனரை அவர்கள் மறுபடியும் சந்தித்தனர். 1942 டிசம்பர் 18ம் தேதி மீண்டும் மாநாட்டில் பிரதிநிதிகள் தலைமை இயக்குனரைச் சந்தித்து தங்களின் திட்டத்தை அவரிடம் சமர்ப்பித்தனர்.

திரு. ஜம்னதாஸ் மேத்தா: அவர்கள் கோரியது என்ன?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்: அது ஒரு நீண்ட விஷயம், அது முழுவதையும் படிக்க எனக்கு நேரம் இல்லை என்பதற்காக வருந்துகிறேன். மதிப்பிற்குரிய எனது நண்பர் விரும்பி னால், அவரது பார்வைக்காக நான் அதை அவருக்கு அனுப்பி வைக்க முடியும். நான் சொல்ல விரும்பும் விஷயம் இதுதான்: தபால்-தந்தி இலாகாத் தொழிலாளர் சம்பந்தப்பட்டவரை, அறிவிப்பு வெளியிடப்படுவதற்கு முன்பு, சர்க்காருக்கும் அவர்களுக்கு மிடையே எந்த கலந்தாலோசனையும் நடைபெறவில்லை என்று கூற முடியாது.

ஐயா! அடுத்து இருப்பது மத்திய சர்க்காரின் எழுத்தர்கள் என்று அழைக்கப்படுவோரைப் பற்றியது. இந்த ஊழியர்களைப் பொறுத்தவரை, சங்கம் எதுவும் இல்லை. சங்கம் எதுவும் இல்லாத தால், அவர்களது கூட்டமைப்பும் எதுவும் இல்லை. இருப்பது ஏதோ சில ஸ்தாபனங்கள். முதலாவதாக, இம்பீரியல் தலைமைச் செயலக ஊழியர்கழகம்; இரண்டாவதாக, டப்தாரி மற்றும் ஆவணம் வகைப் படுத்துவர் கழகம்; மூன்றாவதாக, பொதுத்தலைமையக ஊழியர் கழகம். இவற்றுடன் அரசு அவ்வப்போது கலந்தலோசனை நடத்து கிறது என்பதை அறிய அவை மகிழ்ச்சியடையும் என்று நம்பு கிறேன். இந்த அமைப்புகள் தங்களின் பிரதிநிதிகளை மத்திய சர்க்கா ரிடம் அனுப்பி வைத்தன. மாண்புமிகு உள்துறை உறுப்பினரும் நிதி உறுப் பினரும் அறிவிப்பு வெளியிடப்படும்முன்பு அவர் களுக்கு பேட்டி அளித்தனர். நான் ஆரம்பத்தில் குறிப்பிட்டது போன்று அதாவது எந்தக் குற்றச்சாட்டுகளின் அடிப்படையில் திரு.ஜம்னாதாஸ் மேத்தா இந்தத் தீர்மானத்தைக் கொண்டு வந்தாரோ அந்தக் குற்றச்சாட்டுகள் உண்மை அல்ல என்று நான் கூறியது முற்றிலும் நியாயமே என்று கருதுகிறேன். எத்தகைய நடவடிக்கை களை மேற்கொள்வதற்கு முன்பும் கூடியமட்டும் தொழிலாளர் களைக் கலந்தாலோசிக்கும் போக்கை அரசு எப்போதுமே கடைப் பிடித்து வருகிறது என்பதை அவையின் கவனத்துக்குக் கொண்டுவர விரும்புகிறேன்.



# 10

## [1]இந்திய நிதி மசோதா

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): ஐயா, தொழிலாளர் நலத்துறை அக்கறை கொள்ளக்கூடிய சில விஷயங்கள் பற்றி, குறைபாடுகளை அல்லது விடுபட்டுப்போன செயல்கள் பற்றி விவாதத்தின்போது மதிப் பிற்குரிய உறுப்பினர்கள் அளித்த விமர்சனத்திற்குப் பதிலளிக்க நான் எழுந்துள்ளேன். சர் பிரடெரிக் ஜேம்ஸ் எழுப்பிய விஷயங் களிலிருந்து நான் துவங்குகிறேன். தொழிலாளர் நலத்துறை சம்பந்தப்பட்ட வரை அவர் விசேஷ கவனம் செலுத்தியது இரு விஷயங்கள் என்பதை அவை அறியும். முதல் விஷயம் காகிதம் பற்றியது. காகிதத்தை உபயோகிப்பதில் சர்க்கார் ஊதாரிதனமாக இருந்தது என்று அவர் குற்றம் சாட்டினார். ஒவ்வொரு வழியிலும் அவர் குறிப்பிட்ட வீணடிப்புக்குச் சர்க்கார்தான் பொறுப்பு என்றும் சர் பிரடெரிக் ஜேம்ஸ் கூறினார். ஐயா! இந்தக் கூட்டத் தொடரி லேயே, ஒரு ஒத்திவைப்புத் தீர்மானத்தின் மீது காகிதம் பற்றிய விஷயம் முன்பு விவாதிக்கப்பட்டது என்பதை அவை ஞாபகத்தில் கொண்டிருக்கும். அப்போது சர்க்கார் சார்பில் நான் பதில் அளித் தேன். சர்க்கார் அளித்த பதிலில் மதிப்பிற்குரிய நண்பர் சர். பிரடெரிக் ஜேம்ஸ் திருப்தியடையவில்லை என்பதும், அதே விஷயத்தை மீண்டும் எழுப்பியிருக்கிறார் என்பதும் மிகத் தெளிவாகத் தெரிகிறது. அவர் இதை மீண்டும் எழுப்பியிருப்பதை நான் குறை கூறப் போவ தில்லை; காகிதத்தைச் சேமித்து வைப்பதில் சர்க்கார் என்ன செய்து வருகிறது என்பதை விளக்கிக்கூற அது எனக்கு மற்றொரு சந்தர்ப் பத்தை அளித்திருப்பதற்காக மகிழ்ச்சியடைகிறேன். விவாதத்திற் குள்ள விஷயத்தை எடுத்துக் கொள்வதற்கு முன் ஒன்றைக் கூற விரும்புகிறேன்; அதாவது காகிதப் பற்றாக்குறை பற்றி அள வுக்கு அதிகமான கவலையை அவை வெளிப்படுத்திக் கொண்டிருக் கிறது என்று எனக்குத் தோன்றுகிறது; இந்த விஷயத்தில், அதிக கவலை கொள்வது தேவை என்று என்னால் ஒத்துக்கொள்ள முடிய வில்லை. பிரிட்டனிலும் இந்தியாவிலும் வெளியிடப்பட்ட*

---

*1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, 1943 மார்ச் 16, பக்கம் 1130-34.*

பிரசுரங்கள் பற்றிய சில புள்ளி விவரங்களை மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் முன்வைக்க விரும்புகிறேன். ஐயா, 1939ல் பிரிட்டனில் பதினைந்தாயிரம் நூல்கள் வெளியிடப்பட்டன; 1940ல் பதினோராயிரம் வெளிவந்தது. 1941ல் பதினாலாயிரம் வெளிவந்தது. காகிதப் பற்றாக்குறை என்ற விஷயம் பற்றி நாம் கவலைப் படாமலில்லை. ஏற்கெனவே நான் கூறியதுபோல், பற்றாக்குறை இருக்கிறது, ஆனால் நான் வற்புறுத்திக் கூற விரும்புவது, மிக நெருக்கடியான நிலை என்று கூறக்கூடியதாக அது இல்லை என்பதே யாகும்.

ஐயா! மேலும், இந்திய சர்க்காருக்கு எதிராக ஊதாரித் தனம் என்ற கூற்றச்சாட்டை ஆதாரப்படுத்த சர் பிரடெரிக் ஜேம்ஸ் இரண்டு உதாரணங்கள் கூறியது அவை ஞாபகத்தில் கொண்டிருக்கும். வெஸ்ட் டர்ன் கோர்ட் கட்டிடத்தில் வாடகைக்கு குடியிருப்பவர்களுக்கு கொடுக்கப்பட்ட வாடகை ரசீதை சென்ற தடவை இந்த விஷயம் விவாதிக்கப்பட்டபோது சர் பிரடெரிக் ஜேம்ஸ் காட்டினார். அவர் வாதம், வாடகைதாரர்களுக்கு அளிக்கப்பட்ட வாடகை ரசீது மிகப் பெரிய அளவில் இருந்தது; அதில் கொடுக்கப் பட்டிருந்த விவரங்கள் தேவையில்லாதவை; எப்படியும் யுத்த காலத்தில் அவற்றை குறைத்திருக்கலாம். இப்பொழுது கல்கத்தா கெஜட்டின் மங்கிப்போன பழைய பிரதியை கொண்டுவந்து காண்பித்து, யுத்த காலத் தின்போது தவிர்க்கப்பட்டிருக்கக் கூடிய சில தகவல்கள் அதில் பிரசுரமாகியுள்ளது என்று சுட்டிக்காட்டினார்.

*சர் எப்.இ.ஜேம்ஸ் (சென்னை: ஐரோப்பியர்):* இந்தச் சந்தர்ப்பத்தில் ஒரு நிமிடத்திற்கு நான் குறுக்கீடு செய்யலாமா? நான்காண்பித்த கல்கத்தா கெஜட்டின் பிரதி கல்கத்தாவிலிருந்து இப்பொழுதுதான் பெற்றுவந்ததாகும்; அது இந்த ஆண்டு பிப்ரவரி இதழ் என்று நினைக்கிறேன்.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:* மதிப்பிற்குரிய எனது நண்பருக்கு நான் கடமைப்பட்டிருக்கிறேன். இங்கு நான் சுட்டிக்காட்ட விரும்புவது இதுதான்:

சர் பிரடெரிக் ஜேம்ஸ் ஒரு வழக்கறிஞராக இருந்திருப்பாரே யானால், அவர் முன்வைத்த விஷயங்களுக்கு சாட்சியங்களாக இந்த விஷயங்களையும் கொண்டு வந்திருக்க மாட்டார். வாடகை ரசீது சம்பந்தப்பட்டவரை, அது எந்தத் தேதியில் அச்சிடப்பட்டது என்பது

தெளிவு. இந்த ரசீது 1938ல் அச்சிடப்பட்டது; அதைத் தூக்கி எறியாமல், அந்த ரசீதை உபயோகப்படுத்துவதற்காக சர்க்காரை கண்டிக்காமல் பாராட்டியிருக்க வேண்டும். அந்த ரசீதுப் புத்தகங்களின் இருப்பு இந்திய சர்க்காரிடம் உள்ளது; அந்த ரசீதை மாற்றியமைக்கும் தேவைகளை ஒதுக்கி வைத்துவிட்டு, காகிதத்தைச் சேமித்து வைப்பதற்காக பழைய கையிருப்பை இந்திய அரசாங்கம் பயன்படுத்தியிருப்பதைப் பார்க்கிறோம்.

*சர் எப்.இ. ஜேம்ஸ்:* அவற்றைக் குப்பையில் போடவில்லை என்று சொல்ல வருகிறீர்கள், அப்படித்தானே.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* ஐயா, இனி கெஜட் பிரச்சினையைப் பொறுத்தவரை, சர்.பிரடெரிக் ஜேம்ஸ் ஒரு தவறு செய்துவிட்டார் என்று நினைக்கிறேன்; காரணம், கெஜட்டின் முக்கியத்துவத்தை அவரால் புரிந்துகொள்ளமுடியவில்லை. கெஜட் பயனுள்ள தகவல்களை, அதிலும் குறிப்பாக சர்க்காருக்கு பயனளிக்கும் தகவல்களை தாங்கி வருவது. பல வழக்குகளில் ருசுவாக கொடுக்கக்கூடியது கெஜட்தான்: சில சந்தர்ப்பங்களில் நீதிமன்றங்களில் கெஜட் முக்கிய சான்றாக முன் வைக்கப்படுகிறது. எதிரி நிறுவனங்களின் பட்டியல், உரிமைப் பத்திரங்கள் முதலியவற்றை இவ்வகையில் குறிப்பிடலாம். முதலியவை கெஜட்டில்தான் வெளியிடப்படுகின்றன. அத்தாட்சிச் சட்டத்தின்படி சில விஷயங்களை நிரூபிப்பதற்கு முதன்மையான ஒரே ஆதாரம் கெஜட்தான். சர்க்கார் காகிதத்தில் சிக்கனத்தைப் பொறுத்தவரை, வேறு ஏதாவது செய்யலாம் என்றால் இதுவிஷயத்தில் நாம் தொடக்கூடிய கடைசி விஷயம் கெஜட்தான்: இதுபற்றி என்னுடன் உடன்படமாட்டாரா என்று சர் பிரடெரிக் ஜேம்ஸை கேட்கிறேன்.

*சர் எப்.இ.ஜேம்ஸ்:* என்னுடையவாதம் என்னவெனில், மத்திய கெஜட்டில் பிரசுரிக்கப்படும் முக்கியமற்ற விஷயங்களைப் பரிசீலிக்க வேண்டியது அவசியம் என்பதைப் பரிசீலிக்க வேண்டும் என்று சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இந்திய சர்க்கார் சட்டம், வகுத்துள்ளபடி ஒவ்வொரு மாகாண சர்க்காரும் அதனுடைய மாகாண கெஜட்டை அவசியம் பிரசுரிக்க வேண்டும். ஐயா, மதிப்பிற்குரிய அங்கத்தினரின் வாதத்தை எதிர்கொள்ள சொற்சிலம்பம் எதையும் நான் செய்யப் போவதில்லை. காகிதத்தைச்

சிக்கனப்படுத்த இந்திய சர்க்கார் எடுத்துள்ள நடைமுறைக்கு சாத்தியமான நடவடிக்கைகள் பற்றி குறிப்பிட விரும்புகிறேன். முதலாவதாக கெஜட்விஷயத்தை எடுத்துக் கொள்கிறேன். மதிப்பிற் குரிய எனது நண்பர் சர்.பிரடெரிக் ஜேம்ஸையும் இந்த விஷயத் தில் அக்கறை கொண்டுள்ள மற்ற ஏனைய மதிப்பிற்குரிய உறுப் பினர்களையும் நான் கேட்டுக்கொள்வது இதுதான் ஆகஸ்டு 29ம் தேதிய இந்திய சர்க்காரின் கெஜட் பாகம் II, பகுதி 1ஐயும் ஒப்பு நோக்குங்கள். கெஜட்டின் இந்த இரு இதழ்களையும் அவையும் மதிப்பிற்குரிய உறுப்பினர்களும் ஒப்புநோக்கும் சிரமத்தை எடுத்துக் கொள்வார்களேயாயின், கெஜட்டில் முன்பு 1½ பத்திக்குள் எடுத்துக் கொண்ட விஷயம் இப்பொழுது அரைபத்திக்குள் குறுக்கப்பட் டுள்ளது என்பதைக் காணலாம்; அவ்வளவு இடம் சிக்கனப்படுத்தப் பட்டுள்ளது. பக்க ஓர இடமும் குறைக்கப் பட்டுள்ளது.

டாக்டர் பி.என். பானர்ஜி (கல்கத்தா புறநகர்ப் பகுதி முகமதியரல்லாத நகர்ப்புறம்): கண்பார்வை குறைபாடுள்ளவர் கள் விஷயத்தில் என்ன செய்வது?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: எல்லோரை யும் நான் திருப்திபடுத்த முடியாது. சர். பிரடெரிக் ஜேம்ஸ் இப் பொழுது எழுப்பியுள்ள விஷயத்தை பொறுத்தவரை, இந்திய கெஜட்டில் இந்திய சர்க்கார் வெளியிட்ட அறிவிப்புகளைப் பயன் படுத்துவது விரும்பத்தக்கதும் சாத்தியமானதுமில்லையா என்றும், தங்கள் சொந்த கெஜட்களில் அவற்றை தங்கள் உபயோகத்துக்கு மீண்டும் வெளியிடாமல் இருக்கலாமல்லவா என்றும் மாகாண சர்க்கார்களுக்கு மத்திய சர்க்கார் சுற்றறிக்கை அனுப்பியுள்ளது என்பதை அவருக்குத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அடுத்து, ஐயா, இந்திய தகவல் ஏட்டைப் பொறுத்தவரை, அதன் அளவை பாதியாகக் குறைக்க வேண்டுமென்று ஆணை களை ஏற்கனவே பிறப்பித்துள்ளோம்.

படிவங்கள் பிரச்னையை எடுத்துக்கொண்டால், யுத்தகாலத் தில் 149 படிவங்களை தாற்காலிகமாக நிறுத்தி வைத்து விட்டோம்; 190 படிவங்களை முற்றிலுமாக ரத்து செய்து விட்டோம். இரண் டாவதாக, 1941லிருந்து படிவங்களின் அளவும் குறைக்கப்பட்

டுள்ளது; 1942 ஜூலைக்குபின் அச்சிடப்பட்ட படிவங்களில் தேவை யற்ற எந்த இடமும் அனுமதிக்கப்படவில்லை. இந்திய சர்க்காருக்கு அளிப்பதற்கு மதிப்பிற்குரிய உறுப்பினர்களிடம் ஏதேனும் யோசனை கள் இருந்தால், அவற்றைச் சமர்ப்பித்தால் அவற்றுக்கு முக்கிய கவனம் அளிப்பேன் என்றும் கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

அடுத்து, ஐயா! பிரசுரங்களைப் பொறுத்த வரை, மிகவும் அத்தியாவசியம் என்று கருதப்படுவதைத் தவிர வேறு எதுவும் பிரசு ரிக்கப்படுவதில்லை என்று அவைக்கு உறுதியளிக்கிறேன். எந்த ஒரு பிரசுரத்தையும் வெளியிடுவது அவசியமா என்பதை நிர்ண யிக்க, வெளியீடுகள் பற்றி இந்திய சர்க்கார் மூன்று வேறுபட்ட கட்டுப்பாடுகளை பின்பற்றி வந்துள்ளது. முதலாவதாக, அச்சு-எழுதுபொருள் கட்டுப்பாடு அதிகாரியின் பரிசீலனையைக் குறிப்பிட வேண்டும். அச்சடிப்பதற்காக அவர் முன்வைக்கப்படும் ஆணை களை அப்படியே யந்திரமாக அவர் நிறைவேற்றக் கூடியவரல்ல. அவர் முன்வைக்கப்படும் எந்த வெளியீட்டையும் பரிசீலித்து அதன் அத்தியாவசியத்தை நிர்ணயிக்கும் அதிகாரத்தை அவருக்கு இப் பொழுது நாங்கள் வழங்கியுள்ளோம். அவர் ஒப்புக்கொள்ள மறுத்து ஆட்சேபித்தால், விஷயம் தொழிலாளர் நலத்துறை செயலாளருக்கு அனுப்பப்படுகிறது. தொழிலாளர் நலத்துறையும் அச்சுக் கட்டுப் பாடு அதிகாரியும் அந்த வெளியீடு அத்தியாவசியமான வெளி யீடல்ல என்றுகருதினால், விஷயம் ஒரு குழுவுக்கு அனுப்பப்படு கிறது; அதன்முடிவு இறுதியானதாகக் கருதப்படும். ஐயா, இடம் விடுவதிலும், ஓரம் விடுவதிலும் இதர விஷயங்களிலும் காகி தத்தை உபயோகிப்பதில் அதிகமாக சிக்கனத்தை கையாள வேண்டு மென்று அச்சகத்தார்களுக்கும் நாங்கள் உத்திரவிட்டிருக்கிறோம். இந்திய சர்க்கார் எடுத்துள்ள நடவடிக்கைகளின் பட்டியல் மனதில் பதியும் அளவுக்கு பெரியதாக இல்லாமலிருந்தபோதிலும், சிக்க னத்தை ஏற்படுத்த ஒரு முக்கிய முயற்சி இது என்று உறுதியாகக் கூறுகிறேன். பழமொழி கூறுவதுபோல், ஹன்னிபாலின் யானை வாத்தின் நடையை கற்றுக்கொள்ளும் என்று ஒருவரும் எதிர்பார்ப் பதில்லை. இந்திய சர்க்காராயினும் அல்லது வேறுஎந்த சர்க்கா ராயினும் அது ஒரு மிகப் பெரிய மிருகம். நகருவதில் மெதுவாக உள்ளது; நடையின் பாணியிலும் அது மெதுவாக உள்ளது; வாத்தின் நடையை அது கற்றுக்கொள்ள வேண்டும் என்று எதிர்பார்க்க முடியாது; இருந்தபோதிலும் இந்திய சர்க்கார் வாத்தின் நடையை

கற்றுக்கொண்டுள்ளது. அப்படியே கற்றுக்கொள்ளவில்லை என்றால் கற்றுக்கொள்ளத் தயாராக உள்ளது என்பதை அவை ஒப்புக் கொள்ளும் எனக் கருதுகிறேன்.

சர் எப்.இ. ஜேம்ஸ்: அது இன்னமும் பாலிய பருவத்தில் தான் உள்ளது.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஐயா, இப்பொழுது மதிப்பிற்குரிய எனது நண்பர் சர்.பிரடெரிக் ஜேம்ஸ் காகிதத்தில் சிக்கனம் கொண்டுவரும் விஷயம் பற்றி வழங்கிய திட்டவட்டமான யோசனையை எடுத்துக் கொள்கிறேன். இது சம்பந்தமாக இங்கிலாந்தில் ஒரு குழு நியமிக்கப்பட்டுள்ளது என்றும் அரசு அதிகாரம் பெற்ற ஒரு கணக்காளர், பதிப்பகத்தின் பிரதிநிதி ஒருவர், அச்சகத் துறையின் பிரதிநிதி ஒருவர் ஆகியோர் அக் குழுவில் இடம்பெற்றிருக்கின்றனர் என்றும் அவர் கூறினார். ஐயா! இங்கிலாந்தில் இந்தக் குழு இயங்கும் பாங்கு, தன்மை பற்றி எந்த விவரங்களையும் அவர் நமக்கு கொடுக்கவில்லை; சிக்கனத்தை கொண்டுவர இந்தக் குழு கையாண்ட எந்தக் கோட்பாடுகளையும் அவர் குறிப்பிடவில்லை. எனவே இந்தக் கட்டத்தில், அவர் முன் வைத்த யோசனையை ஏற்றுக் கொள்ளத் தயார் என்று கூறுவது எனக்கு சாத்தியமல்ல; எனினும் நாங்கள் எடுத்துள்ள நடவடிக்கை கள் அவர் ஆலோசனை கூறிய வழிமுறைகளில் அநேகமாக அமைந்துள்ளன என்பதை அவர் நிச்சயம் ஏற்றுக் கொள்வார் என நம்புகிறேன். நாங்கள் எடுத்துள்ள நடவடிக்கை அச்சகக் கட்டுப் பாட்டு அதிகாரிக்கு ஆலோசனை கூற வணிக அச்சகத்துறை நிபுணர் என்ற ஓர் அதிகாரியை நியமிப்பதாகும். இந்த விஷயத்தில் நிதி இலாகாவின் அங்கீகாரத்தை அண்மையில் நாங்கள் பெற்று விட்டோம்; விரைவில் அந்த அதிகாரி நியமிக்கப்படுவார். இங்கி லாந்திலுள்ள குழு செய்து வருவதாகக் கூறப்படும் பணியை இந்த அதிகாரியால் செய்ய முடியும் என நம்புகிறேன்.

டாக்டர்.பி.என்.பானர்ஜி: அவர் ஒரு இந்தியரா அல்லது ஐரோப்பியரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இப்பொழுது தான் நிதி அங்கீகாரத்தைப் பெற்றுள்ளோம்.

**திரு. ஜம்னாதாஸ் எம். மேத்தா:** அவர் பொருட்டு ஏற்படும் செலவை விட அதிகமாக அவர் மீதப்படுத்துவாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இவ்வாறு நடைபெறும் என நாம் நம்புவோம். ஊகிப்பதிலோ, நம்புவதிலோ தீங்கு எதுவும் இல்லை. காகிதம் சம்பந்தமாக நான் சொல்ல வேண்டியதெல்லாம் இவ்வளவுதான்.

சர் பிரடெரிக் ஜேம்ஸ் எடுத்துக்கொண்ட இரண்டாவது விஷயம் சிம்லாவில் அதிகாரிகள் குடும்பங்களுக்கு குடியிருப்பு வசதிகள் செய்து தருவது பற்றியதாகும். குடியிருப்பு சம்பந்தப்பட்ட வரை, இது இந்திய சர்க்காரை எதிர்நோக்கும் மிகச் சிக்கலான விஷயம். ஒருவேளை அதனிடம் இருந்த குடியிருப்பு வசதிகள், தனது ராணுவ தேவைக்காக கோரிப் பெறப்பட்டு கட்டுப்பாட்டை ஏற்படுத்தி கொள்ளக்கூடிய குடியிருப்பு வசதிகள் ஆகியவற்றை யுத்த முயற்சியின் விளைவாக இந்திய சர்க்கார் நியமிக்க வேண்டி வந்த அதிகாரிகளோடு ஒப்பிட்டால் சிறிதும் போதாது. யுத்த முயற்சிகளை முழுவதுமாக நடத்த வேண்டுமென்றால் வீட்டு வசதிக்கு முன்னுரிமை அளிக்க வேண்டும் என்பதையும் அவர் ஒப்புக்கொள்வார். முன்னுரிமையைப் பொறுத்தவரை, அதிகாரி களுக்கு என்பதோடு ஒப்பிட்டால், குடும்பங்கள் இரண்டாவது இடத்தைத்தான் எடுத்தாக வேண்டும். கணவனையும் மனைவியை யும், தந்தைகளை பிள்ளைகளையும் பிரிப்பது எவ்வாறு மனோ நிலையை பாதிக்கக்கூடும் என்பதையும் யுத்த முயற்சிக்காகத் தேவைப்படும் அதிகாரிகளின் மனநிலையை இலகுவாக்க வேண் டியது பற்றியும் இந்திய சர்க்கார் அறிந்திருக்கிறது. இத்தகைய ஏற்பாடு எத்தகைய துயரத்தையும் போக்குவதற்காக, தங்களின் பணியிடங்களை விட்டு போகமுடியாத அதிகாரிகளின் மனைவி மார்களுக்கு குடியிருக்க வசதி செய்வதற்காக, சிம்லாவில் மூன்று குடியிருப்பு வீடுகளைத் திறக்க இந்திய சர்க்கார்ஏற்பாடு செய் துள்ளது. இந்த மிகக் கடுமையான பிரச்னை விஷயத்தில் இந்திய சர்க்காரின் நல்லெண்ணத்திற்கு இதை எடுத்துக்காட்டாக சர் பிரடெரிக் ஜேம்ஸ் ஏற்றுக் கொள்வார் என்று நம்புகிறேன்.

அடுத்து ஐயா, மதிப்பிற்குரிய எனது நண்பர் சர் ஜம்னா தாஸ் மேத்தா எழுப்பிய மூன்றாவது விஷயத்திற்கு வருகிறேன்.

**திரு. ஜம்னாதாஸ் எம்.மேத்தா:** தயவுசெய்து மன்னிக்கவும்.

*மாண்புமிகு டாக்டர்.பி.ஆர்.அம்பேத்கர்:* தாங்கள் வீரப் பெருந்தகை பட்டத்தை நோக்கிச் சென்று கொண்டிருப்பீர்களென நம்புகிறேன். நான் கூறியதைத் திரும்பப் பெறப்போவதில்லை; மன்னிப்பு கோரப்போவதும் இல்லை. இது எதிர்பார்க்கக் கூடியது என்று மட்டும் நான் சொல்ல முடியும்.

*மௌலானா ஜாபர் அலிகான் (கிழக்கு மத்திய பஞ்சாப்):* வரவிருக்கும் நிகழ்ச்சிகள் அவற்றின் நிழல்களை முன்கூட்டியே காட்டுகின்றன.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* விவாதத்தின் போது திரு. ஜம்னாதாஸ் மேத்தா இங்கிலாந்தில் நடைபெற்றுக் கொண்டிருக்கும் அல்லது உடன் நடைபெறவிருக்கிற குடியேற்ற நாட்டுத் தொழிற்சங்கக் காங்கிரசின் மாநாடு பற்றிக் குறிப்பிட்டு அந்த மாநாட்டில் இந்தியத் தொழிலாளர் பிரதிநிதித்துவப்படுத்தப் பட வில்லை என்று குறை கூறினார். ஐயா, இந்த முக்கியத் தொழி லாளர் மாநாட்டில் இந்தியத் தொழிலாளர்கள் பிரதிநிதித்துவம் பெறவில்லையென திரு. ஜம்னாதாஸுக்கு இருக்கும் வருத்தத் தையும் கவலையையும் நான் பகிர்ந்து கொள்கிறேன். ஆனால் தொழிலாளர் நலத்துறை எந்த விதத்திலும் இந்த துரதிருஷ்டவச மான நிலைக்குப் பொறுப்பில்லை என்று திரு.ஜெம்னாதாஸ் மேத்தாவுக்குத் தெரிவிக்க விரும்புகிறேன். இந்த மாநாட்டைக் கூட்டியவர்கள் தொழிலாளர் நலத்துறையைக் கலந்தாலோசிக்க வில்லை என்று அவருக்குக் கூறவும் நான் விரும்புகிறேன். எங்களைக் கலந்தாலோசிக்காததால், இந்த விஷயத்தில் எங்களால் எதுவும் செய்ய முடியவில்லை என்பதைத் திரு. ஜம்னாதாஸ்மேத்தா ஒத்துக்கொள்வார் என்று உறுதியாக நம்புகிறேன். கலந்தாலோசிப் பதில் அவர்கள் ஏன் எங்களை விட்டுவிட்டார்கள் என்றும், இந்த மாநாட்டிற்காகப் பணியாற்றி வருபவர்கள் நன்கு அறிந்துள்ள இந்த நாட்டின் தொழிலாளர் இயக்கத்தின் தலைவர்களை ஏன் நேரடியாக கலந்தாலோசிக்கவில்லை என்பதையும் நான் புரிந்து கொள்ள முடியும்.

எந்தத் துறையையும் போலவே, தொழிலாளர் நலத்துறை யும் தனது நலனையும் தொழிலாளர் நலனையும் பாதுகாக்கும் விஷயத்தில் உஷாராக இருக்கிறது என்பதை திரு.மேத்தா ஒப்புக் கொள்வார் என்று நினைக்கிறேன். ஐயா, இத்துடன் என் உரையை முடித்துக் கொள்கிறேன்.



# 11

## [1]தொழிலாளர் நலத்துறையின் நிலைக்குழுவிற்கு உறுப்பினர்கள் தேர்வு

மாண்புமிகு டாக்டர்.பி.ஆர்.அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): ஐயா, பின்கண்டவாறு பிரேரேபிக்கிறேன்:

> ''மாண்புமிகு தலைவர் ஆணையிடுகிறபடி, தொழிலாளர் நலத்துறை சம்பந்தப்பட்டவிஷயங்களில் ஆலோசனை வழங்கு வதற்கான நிலைக் குழுவில் செயல்பட மூன்று அதிகார சார்பற்ற உறுப்பினர்களைத் தேர்ந் தெடுக்க இந்த அவை முற்படுகிறது.''

திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரஹீம்): தீர்மானம் பிரரேபிக்கப்படுகிறது :

> ''மாண்புமிகு தலைவர் ஆணையிருட்டிக்கின்றபடி தொழிலாளர் நலத் துறை சம்பந்தப்பட்ட விஷயங்களில் ஆலோசனை வழங்குவதற்கான நிலைக்குழுவில் செயல்பட மூன்று அதிகார சார்பற்ற உறுப்பினர்களை தேர்ந்தெடுக்க இந்த அவை முற்படுகிறது.''

டாக்டர் பி.என். பானர்ஜி (கல்கத்தா புறநகர்: முகமதிய ரல்லாத நகர்புறம்): ஐயா! பல்வேறு இலாகாக்களுடன் இணைக்கப் பட்டுள்ள பல நிலைக்குழுக்கள் இருக்கின்றன; ஆனால் மூன்று உறுப்பினர்கள் மட்டுமே கொண்ட நிலைக்குழு எதுவுமில்லை. இந்த அவையால் தேர்ந்தெடுக்கப்படும் சிறு எண்ணிக்கைக்கு காரணம் எதுவாக இருக்கும்? ஒன்று தொழிலாளர் இலாகா ஒரு முக்கியமான இலாகாவாக இல்லாமலிருக்கலாம்; அல்லது எந்த விஷயத்தையும் விவாதிக்க இந்த நிலைக் குழுவின் கூட்டம் கூட்டப்படாமலோ இருக்கலாம் அல்லது அபூர்வமாகக் கூட்டப்படலாம். தொழிலாளர் இலாகா முக்கியமான ஒரு இலாகாதானே? டாக்டர் அம்பேத்கர் போன்ற ஒரு புகழ்பெற்ற மனிதரின் பொறுப்பில் அது உள்ளது. முன்பு அது ஒரு முக்கியமற்ற இலாகாவாக இருந்தபோதிலும்

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுப்பு II, 1943 மார்ச் 20, பக்கம் 1278-80.

அவர் பொறுப்பில் அது இருக்கும் வரையில் இப்பொழுது அது ஒரு முக்கிய மற்ற இலாகாவாக இருக்கக்கூடாது. அது ஒரு முக்கிய இலாகாவாக இருக்க வேண்டுமானால், நிலைக்குழு அதிக எண் ணிக்கையில் உறுப்பினர்களைக் கொண்டதாக இருக்க வேண்டும். நிதித்துறை நிலைக் குழுவைப் பாருங்கள், ரயில்வேயின் பொது நிதிநிலைக்குழுவைப் பாருங்கள். பொதுக் கணக்குக் குழுவைப் பாருங்கள். இவற்றில் எந்தக் குழுவின் உறுப்பினர் எண்ணிக்கை யும் மூன்றுக்கு அதிகமாகவே உள்ளது. இந்தக் குழு அடிக்கடி கூடுவ தில்லை என்று கேள்விப்படுகிறேன்; அது உண்மையா என்பது எனக்குத் தெரியாது; அது கூடினாலும், அதிகமான விஷயங்கள் அதன்முன் வைக்கப்படுவதில்லை. அது அப்படியாயின், இந்தக் குழுவின் பயன் மிகவும் குறையும். எனவே, இந்தக் குழு உறுப் பினர்களின் எண்ணிக்கையை எட்டாக உயர்த்தும்படி சர்க்காரைக் கேட்டுக் கொள்கிறேன். தாங்கள் விரும்பினால், மற்ற அவைக்கு கொடுக்கப்பட்டுள்ள எண்ணிக்கையையும் அதிகரிக்கலாம்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஐயா, எனது இந்தத் தீர்மானம் இந்த அவையில் இவ்வளவு அக்கறையை எழுப்பியுள்ளது கண்டு மிக்க மகிழ்ச்சியடைகிறேன். நான் புரிந்து கொண்டபடி, எண்ணிக்கை மூன்று என்பது முக்கியத்துவம் கருதியோ அல்லது வேறு எந்த காரணத்தையோ அடிப்படையாகக் கொண்ட தல்ல. அது ஒரு வழக்கமான எண்ணிக்கை என்று எனக்குக் கூறப் பட்டது; இந்த வழக்கத்திலிருந்து மாறுபடுவது என்பது விதிவிலக்கே யன்றி, நியமம் அல்ல.

ஐயா, இப்பொழுது எண்ணிக்கை மூன்றாக நிர்ணயிக்கப் பட்டதற்கு இந்தக் குழுவிற்கு சர்க்கார் குறைந்த மரியாதை அளிப் பதே காரணம் என்று என் நண்பர் டாக்டர் பானர்ஜியா எழுப்பிய விஷயத்துக்கு வருகிறேன். இந்தக் கூற்று உண்மையை அடிப்படை யாகக் கொண்டதல்ல. நான் கூறுவதை அவை கவனத்தில் கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்; 1940ல் இந்தக் குழுவின் இரு கூட்டங்கள் நடைபெற்றன; மிக முக்கியமான விஷயங்கள் குழுவின் முன் வைக்கப்பட்டன. உதாரணமாக 1940ல் நடந்த கூட் டங்களில், பின்கண்ட விஷயங்கள் பரிசீலனைக்கு வைக்கப்பட்டன: தொழிலாளர் மாநாட்டின் முடிவுகள், தொழில்நுட்ப பயிற்சி பரிசீலனை குழுவின் அறிக்கை, திறமை வாய்ந்த கைவினைஞர் களுக்கு பயிற்சியளிக்கும் திட்டம், டில்லியில் வீட்டுவசதி ஆகியவை. 1941ல் ஒரு கூட்டம் நடந்தது; தொழிலாளர் நலத்துறை அமைச்சர்

களின் இரண்டாவது மாநாட்டின் முடிவுகள் பெவின் பயிற்சித் திட்டத்தின் கீழ் தொழில்நுட்பப் பயிற்சியில் ஏற்பட்ட முன்னேற்றம் ஆகியவை அதன்முன் வைக்கப்பட்ட விஷயங்களில் உட்படும். 1942ல் ஒரு கூட்டமும், அதற்குப்பின் நடந்த ஒத்திவைக்கப்பட்ட கூட்டமும் நடைபெற்றன. மூன்றாவது தொழிலாளர் நலத்துறை அமைச்சர்களின் மாநாட்டு நடவடிக்கைகள், சில விஷயங்கள் பற்றி முதலாளிகள், தொழிலாளர் சங்கப் பிரதிநிதிகள் அளித்த கருத்து களின் சுருக்கம், டில்லியிலும் சிம்லாவிலும் குடியிருப்புகள் கட்டிக் கொடுக்கும் திட்டம், தொழிற்சங்கங்களுக்கு அங்கீகாரம் அளிப்பது பற்றி ஆலோசனை, பெவின் பயிற்சித் திட்டத்தின்கீழ், தொழில் நுட்ப பயிற்சியில் ஏற்பட்ட முன்னேற்றம், தேசிய சேவை (தொழில் நுட்ப ஊழியர்கள்) அவசரச் சட்டம், 1940 - ஆகியவை குழுவின் முன்னால் வைக்கப்பட்ட விஷயங்கள். தொழிலாளர் நலன் சம்பந்தப் பட்ட முக்கியமான விஷயங்கள் குழுவின் முன்னால் வைக்கப்பட வில்லை என யாரும் கூறமுடியாது என்று உறுதியாக நம்புகிறேன்.

அடுத்து, அவை முன் கூற விரும்புவது, தொழிலாளர் இலாகா வுக்கு ஆலோசனை வழங்குவதற்கான குழு இது மட்டுமல்ல என்பதாகும். இதுபோக, விரிவடைந்த மாநாட்டை அமைத்துள் ளோம்; மத்திய, மாகாண சர்க்கார்கள், மேலும் சமஸ்தானங்கள், முதலாளிகள், தொழிலாளர்கள் ஆகியோரின் பிரதிநிதிகள் பரந்த அளவில் இதில் இடம் பெற்றுள்ளனர். மதிப்பிற்குரிய டாக்டர் பானர்ஜி கோரியபடி இவ்வளவு விரிவான அதிகரிப்புக்குத் தேவை ஏதும் இல்லை. இதற்கும் மேலாக தொழிலாளர் நிலை ஆலோ சனைக்குழு உள்ளது. இந்த சூழ்நிலையில், குழுவில் உள்ளவர் கள் எண்ணிக்கை அதிகரிப்பதற்கான தேவை எதுவும் இருந்தால், விரிவடைந்த மாநாடு அமைக்கப்பட்டுள்ளதாலும், தொழிலாளர் நிலைக் குழு இருப்பதாலும், இந்தக் கோரிக்கை கணிசமான அளவு பலவீனப்பட்டுள்ளது என்று கருதுகிறேன். என்றாலும் மதிப்பிற்குரிய எனது நண்பர் குழுவின் உறுப்பினர் எண்ணிக்கை அதிகரிக்கப்பட வேண்டுமென்று தீவிரமாகக் கருதினால், எண் ணிக்கையை எட்டாக உயர்த்த - இந்த அவைக்கு ஐந்தும், மேலவைக்கு மூன்றும் - தயாராக இருக்கிறேன். அவையிலுள்ள எனது நண்பர்களை இது திருப்தி செய்யும் என நான் நம்புகிறேன்.

திரு. எச்.ஏ. சத்தார் எச். எஸ்ஸாக் சேட்: (மேல் கடற்கரை, நீலகிரி): இந்தக் குழுவின் உறுப்பினர்கள், விரிவடைந்த மாநாட்டின்

உறுப்பினர்களாகவும் இருப்பார்களா என்பதை மாண்புமிகு உறுப்பினர் தயவுகூர்ந்து சொல்வாரா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* அவர்களில் சிலர் திருவாளர்கள் மேத்தாவும் ஜோஷியும் விரிவடைந்த மாநாடு, நிலைக்குழு ஆகிய இரண்டிலும் உறுப்பினர்கள்.

**திரு. எச்.ஏ. சத்தார் எச். எஸ்ஸாக் சேட்:** அவர்கள் விரிவடைந்த மாநாட்டின் கௌரவ உறுப்பினர்களா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இல்லை. அவர்கள் தங்கள் ஸ்தாபனங்களைப் பிரதிநிதித்துவப்படுத்துகின்றனர்.

**மௌல்வி முகமது அப்துல் கனி:** (திர்குத் பிராந்தியம்: முகமதியர்): ஐயா, யுத்த நிலைமைகளின் காரணமாக, இந்தத் தொழிலாளர் குழு மிகுந்த முக்கியத்துவம் பெற்றுள்ளது. அது தொழிலாளர் சம்பந்தப்பட்ட விஷயங்களைப் பரிசீலிக்கிறது. மேலும் மாண்புமிகு உறுப்பினர் சுட்டிக்காட்டியதுபோல், இந்தக் குழு மற்ற பல முக்கிய விஷயங்களையும் கட்டிடம் பற்றியும், பரிசீலிக்கிறது...

**திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரஹீம்):** மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் ஏற்கெனவே பதிலளித்து விட்டார். இப்போது தீர்மானம் வருமாறு:

> "மாண்புமிகு தலைவர் ஆணையிடுகிறபடி தொழிலாளர் நலத்துறை சம்பந்தப்பட்ட விஷயங்களில் ஆலோசனை வழங்குவதற்கான நிலைக் குழுவில் செயல்பட ஐந்து அதிகார சார்பற்ற உறுப்பினர்களை தேர்ந்தெடுக்க இந்த அவை முற்படுகிறது."

தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.



# 12

## [1]இந்திய தேயிலைக் கட்டுப்பாடு (திருத்த) மசோதா

மாண்புமிகு டாக்டர்.பி.ஆர்.அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்:) ஐயா! மதிப்பிற்குரிய எனது நண்பர் திரு. ஜோஷி கூறியவற்றின் காரணமாக, அவர் எழுப்பிய விஷயங்கள் பற்றி சர்க்காரின் நிலையை நான் எடுத்துரைக்கவேண்டும் என்பது சரியானதே. ஒரு அர்த்தத்தில், திரு.ஜோஷியின் கூற்றுகள் பொருந் தாதவையாகத் தோன்றலாம். நாம் தேயிலைக் கட்டுப்பாடுச் சட்டம் பற்றி விவாதித்துக் கொண்டிருக்கிறோம். தொழிலாளர் களின் நிலைமைகளைப் பற்றி பரிசீலிக்கும் எந்த ஷரத்துகளும் இதில் இடம்பெறமுடியாது என்பது தெளிவு. ஆனால், இதை ஒரு பரந்த கண்ணோட்டத்தில் பார்த்தால், வினியோகம் - தேவை பற்றிய சட்டங்களை தற்காலிகமாக நிறுத்திவைக்க வேண்டுமென்று அரசு கோரப்படும்போது, தொழிலாளர்மீது அக்கறை கொண்டவர்கள் அவர்களின் நலன்கள் பாதுகாக்கப்பட வேண்டுமென்று கேட்பது நியாயம் என்று ஒப்புக்கொண்டாக வேண்டும். இந்தக் கண்ணோட் டத்திலிருந்துதான், சர்க்கார் தரப்பிலிருந்து பதில் அவசியப்படு கிறது என்று கூறிகிறேன்.

ஐயா! திரு.ஜோஷி குறிப்பிட்ட முதல் விஷயம் என்ன வெனில், தொழிலாளர்களுக்கான ராயல் கமிஷன் அறிக்கை கொடுத்து 12 ஆண்டுகளுக்குமேல் ஆகிவிட்டன என்றும், அந்தக் கமிஷனின் சிபாரிசுகளைப் பொறுத்தவரை இந்திய சர்க்கார் நடைமுறையில் எதுவும் செய்யவில்லை என்றும் கூறினார். இந்த விஷயம் பற்றி அலசி ஆய்வுசெய்ய நியமிக்கப்பட்ட ராயல் கமிஷன் செய்துள்ள சிபாரிசுகளைப் பரிசீலிக்க 12 ஆண்டுகள் என்பது எந்த சர்க்காருக்கும் ஒருநீண்டகாலமே. ஆனால், நான் சுருக்கமாக குறிப் பிடப்போகும் விவரங்களிலிருந்து இந்திய சர்க்கார் மீது மிகக் கடுமையான குற்றச்சாட்டை சுமத்த முடியாது என்பதை திரு.

---

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுப்பு II, 1943 மார்ச் 23, பக்கம் 1370-73.

ஜோஷியும் இந்த அவையும் புரிந்துகொள்ள முடியும். தேயிலைத் தோட்டங்கள் சம்பந்தப்பட்டவரை, தொழிலாளர்கள் சம்பந்தமாக ஐந்து சிபாரிசுகளை ராயல் கமிஷன் செய்தது. முதலாவது என்ன வெனில், அஸ்ஸாம் தொழிலாளர் குடிபெயர்வு சட்டம் நிறைவேற்றப் பட வேண்டும் என்பது. இரண்டாவது சிபாரிசு அங்கு வேலை செய்யும் தொழிலாளர்களின் ஊதியத்தை நிர்ணயம்செய்ய ஊதிய குழுமம் அமைக்கப்படவேண்டும் என்பது. மூன்றாவது சிபாரிசு, குடிநீர், சுகாதாரம், சாக்கடைவசதி, வைத்திய வசதிகள், குடியிருப்பு ஆகியவை சம்பந்தமான விதிமுறைகளை வகுத்தளிக்கும் அதிகாரம் கொண்ட தொழிலாளர் நலனுக்கான ஒரு சுகாதார அமைப்பு வசதி யான வட்டாரங்களில் நியமிக்கப்பட வேண்டும் என்பது. நான்காவது சிபாரிசு, தொழிலாளர்களுக்கு காலம் தவறாமல் ஊதியம் கொடுப்பது, கொடுக்கப்பட்ட முன்பணத்தை பிடிப்பது ஆகியவைப் பற்றிய விதிமுறைகள் தோட்டத் தொழிலாளர்களுக்கும் வகுக்கப் பட வேண்டுமென்பது. கடைசி சிபாரிசு, பூங்காக்களில் பொதுமக்கள் சென்றுவர வழி செய்யும் விதிமுறைகள் ஆக்கப்பட வேண்டு மென்பது.

சிபாரிசுகள் செய்யப்பட்டதும் நோக்கத்தை வீணாக்காமல் அவற்றை செயல்படுத்த வேண்டிய சரியான அதிகாரிகள் யார் என்பதை கண்டுபிடிப்பதற்காக இந்திய சர்க்கார் பரிசீலித்தது; குடி பெயர்வு சட்டத்தை ரத்து செய்துவிட்டு பதிலாக வேறு ஒரு சட்டம் செய்ய வேண்டுமென்ற முதலாவது சிபாரிசை தவிர மற்றவை சட்டரீதியாக அடிப்படையில் ஸ்தலமட்டத்தில் கவனிக்கப்பட வேண்டியவை என்ற முடிவுக்கு வந்தது. இந்தச் சிபாரிசுகளை பொறுத்தவரை பொறுப்பை பிரித்துக் கொடுக்கும் விஷயத்தில் இந்திய சர்க்கார் மேற்கொண்ட கண்ணோட்டம் சரியானதல்ல என்று யாரும் கருத முடியும் என்று இந்தியத் தொழிலாளர் சம்பந்தமாக ராயல்கமிஷன் சிபாரிசுகள் பற்றி நான் நினைக்கவில்லை. இந்திய சர்க்கார் எடுத்த இந்த முடிவிற்கு ஏற்ப, இந்த மற்ற சிபாரிசுகளை பரிசீலித்து ஆவன செய்ய ஸ்தல சர்க்கார், அஸ்ஸாம் சர்க்காருக்கு உடனே அனுப்பியது; மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் அறிந்துள்ளது போல், காலத்தை வீணாக்காமல், சட்டத்தை நிறைவேற்ற ஆவன செய்தது; தொழிலாளர்கள் பற்றி ராயல் கமிஷன் செய்த முதல் சிபாரிசின்படி நிறைவேற்றப்பட்ட இந்த சட்டம் சட்டங்களின் பட்டி யலில் இடம்பெற்றுள்ளது. ஐயா, துரதிருஷ்டவசமாக, அஸ்ஸாம் ஸ்தல சர்க்கார் இந்த விஷயத்தில் ஏன் நடவடிக்கை எடுக்கவில்லை என்பதற்கான காரணங்கள் எனக்குத் தெரியாது. இந்தச் சிபாரிசுகள்

செய்யப்பட்டதேதியிலிருந்து இந்த அவையில் திரு.ஜோஷி இருந்திருக்கிறார் என்றாலும், இந்த விஷயத்தை அவர் எடுத்தாகவோ, எடுத்துக்கொண்டதாகவோ எனக்குத் தோன்றவில்லை. ஐயா, இந்த விஷயத்தில் இந்திய சர்க்கார் செயல்பட்டது என்று நான் கூறிக் கொள்ள முடியும். தேயிலைக் கட்டுப்பாடு சட்டம் நீட்டிக்கப் படுவதற்காக 1938ல் சட்டமன்றத்திற்கு வந்தபோது இந்திய சர்க்கார் முன்முயற்சி எடுத்து தோட்டத் தொழிலாளர் வாழ்க்கை நிலைமைகள் பற்றி ஆய்வுசெய்ய அணுகியது. தொழிலாளர் இலாகா பிரதிநிதிகளுக்கும் தோட்ட முதலாளிகளின் பிரதிநிதிகளுக்குமிடையே ஒரு மாநாடு கூட நடைபெற்றது என்பதை மதிப்பிற்குரிய என் நண்பர்கள் திரு. கிரிப்பித்தும் சர். பிரடெரிக் ஜேம்ஸும் ஞாபகப்படுத்திக் கொள்ள முடியும்.

**மௌலானா ஜாபர் அலிகான்:** இந்த விஷயத்தில் ஆவன செய்யாததற்காக அஸ்ஸாம் சர்க்கார் மீது ஏன் இந்திய சர்க்கார் நடவடிக்கை எடுக்கவில்லை?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அந்த சமயத்தில் இந்த இலாகாவிற்கு பொறுப்பாக இருந்த உறுப்பினர் இந்தக் கேள்விக்கு நல்ல பதிலளித்திருக்க முடியும். நான் நேற்றுத்தான் வந்தேன்; அதனால் எனக்கு அதுபற்றி எதுவும் தெரியாது. இந்தச் சிபாரிசுகள் என்னவாயின, விசாரிப்பதற்காக நேரம் வரவில்லையா என்று நான் கூறத் தயாராக இல்லை. ஐயா! இந்த விஷயங்கள் பற்றி முடிவு செய்ய நேரம் அநேகமாக வந்தபோது, புதிய அஸ்ஸாம் சர்க்கார், அப்பொழுது அது காங்கிரஸ் சர்க்கார், இந்த விஷயத்தை எடுத்துக் கொள்வது என்று முடிவுசெய்தது; ஒரு தீர்மானத்தின்மூலம் 1939 மே 23ம்தேதி ஒரு குழுவை நியமித்தது. தாங்கள் முதலில் அனுப்பிய ஆணையின் நிபந்தனைகளின்படி இவற்றை கவனித்துக் கொள்ளும், அதிகாரத்தை ஸ்தல சர்க்காருக்கு வழங்கியுள்ளதால், அஸ்ஸாம் சர்க்கார் எடுத்த இந்த நடவடிக்கையின் விளைவாக, களத்திலிருந்து இந்திய சர்க்கார் பின்வாங்கிக்கொள்ள வேண்டியதாயிற்று. மதிப்பிற்குரிய எனது நண்பர் திரு.ஜோஷி இந்த விஷயம் பற்றிக் குறிப்பிட்டதால், சரியான காரணம் என்ன என்று கூறநான் தயாரில்லை; ஆனால், அந்தக்குழு உறுப்பினர்களிடையே கருத்து வேறுபாடு இருந்தது; அது அநேகமாக ஒரு மோதலாக வளர்ந்தது; இதன் விளைவு குழுவின் பணிகள் தற்காலிகமாக நிறுத்தி வைக்கப் பட்டன. இறுதியில் அஸ்ஸாம் சர்க்கார் எந்த நடவடிக்கையையும் எடுக்கவில்லை. அவர்கள் செய்ததெல்லாம் நடந்தது என்ன என்பது

குறித்தும், ஏன் தற்காலிகமாகப் பதவி நீக்கம் செய்யப்பட்டது என்பது பற்றியும் ஒரு அறிவிப்பை வெளியிட்டதுதான். இது நடந்தது ஜூலை கடைசியில். சில மாதங்கள் கழித்து யுத்தம் பிரகடனப்படுத்தப் பட்டது என்பது எல்லாருக்கும் தெரியும். இந்த சூழ்நிலையில் யாரும், ஸ்தல சர்க்காரோ மத்தியசர்க்காரோ எந்தவித விசாரணையும் ஆரம் பித்திருப்பது சாத்தியமில்லை. தன்பக்கத்தில் எந்தவித செயலாற்றா மைக்கும் இந்திய சர்க்காரை உண்மையில் பொறுப்பாக்க முடியாது என்பதை இந்த சூழ்நிலைகள் திரு.ஜோஷியை முற்றிலுமாக நம்ப வைத்திருக்கும் என நான் உறுதியாக நம்புகிறேன்.

பிரதான கேள்வியைப் பொறுத்தவரை அதாவது தொழி லாளர் நலன்களைப் பாதுகாக்க வேண்டிய அவசியத்தை சர்க்கார் உணர்கிறதா இல்லையா என்பதைப் பொறுத்தவரை, இந்தப் பிரச்சினை தலையாய முக்கியத்துவம் வாய்ந்தது என்று சர்க்கார் கருதுகிறது எனக் கூறுவதன் மூலம் ஆரம்பிக்கிறேன். தோட்டத் தொழிலாளர் பணி நிலைமைகள் பற்றி நான் எடுத்துக் கொள்ள விரும்பவில்லை. தினசரி தாள்களில் பல்வேறு புள்ளி விவரங் களை நாம் பார்க்கிறோம். சிலோனில் இப்போது சம்பளங்கள் பற்றிய புள்ளி விவரங்கள், அஸ்ஸாம் தேயிலைத் தோட்டங்களில் சம்பளங்கள் சம்பந்தமான புள்ளி விவரங்கள் ஆகிய இந்த புள்ளி விவரங்கள் எவற்றுக்கும் சர்க்காரின் இணக்கத்தைத் தெரிவிக்க நான் தயாராக இல்லை. நம்மிடம் திட்டவட்டமான விவரங்கள் இல்லை. இந்த விஷயத்தில் இதுவரை எத்தகைய ஆய்வும் செய்யப் பட வில்லை. ஒருவிஷயத்தை நான் கூறமுடியும்; தேயிலைத் தோட் டங்களின் நிலைமைகள் முறைப்படுத்தப்படாதவை; அவை இடத் திற்கு இடம் பெருமளவு மாறுபாடுடையவை. பொதுப்படையான, ஒன்றுபட்ட வேலைநிலைமைகள் இல்லை. இந்த நிலைமையைத் தான் சகித்துக் கொள்ள முடியும் என்று இந்திய சர்க்கார் கருத வில்லை. பாரபட்சமற்ற விசாரணை மூலம் கிடைக்கக்கூடிய போதுமான விவரங்கள் நம்முன் கொண்டு வரப்பட்டாலொழிய எந்த சட்டத்தையும் இயற்ற நம்மால் முடியாது என்பதும் தெள்ளத் தெளிவு. எந்த முயற்சியையும் தடைசெய்ய இந்திய சர்க்கார் கூறும் சால்ஜாப்பு அல்ல இது. தொழிலாளர்கள் கூறிய ராயல் கமிஷன் விதித்த நிபந்தனைகளில் இதுஒன்று என மதிப்பிற்குரிய நண்பர் திரு.ஜோஷியே ஞாபகப்படுத்திக்கொள்ள முடியும். பல்வேறு பரிந்துரைகளை முன் வைக்கும்போது ராயல் கமிஷன் ஒரு ஷரத்தை சேர்த்திருந்தது; அதாவது, இந்தப் பரிந்துரைகளைச் செயல்படுத்து வதற்கு முன்பு, தோட்டங்களில் நிலவும் நிலைமைகள் பற்றி திட்ட

வட்டமான ஒரு விசாரணை நடத்தப்படவேண்டும் என்று அது கூறிற்று. ஐயா, இந்த விசாரணை நடத்தப்பட வேண்டும் என்பது பற்றி இந்திய சர்க்காருக்கு எந்த சந்தேகமும் இல்லை. சர்க்கார் சார்பில் பேசும்போது, தேயிலைத் தோட்டங்களில் சரியான நல் வாழ்வு விதிமுறைகள் அமல்படுத்தப்பட வேண்டும் என்று சர்க்கார் கருதுகிறது என்று கூற நான் தயாராக இருக்கிறேன். இதிலிருந்து தப்பித்துக் கொள்ள முடியாது. மதிப்பிற்குரிய எனது நண்பர் திரு. ஜோஷி கூறியதை நான் முற்றிலுமாக ஆதரிக்கிறேன். சிலோனில் நியாயமான சம்பள விகிதங்களைப் புகுத்துவது அவற்றை இந்தியா வில் தொழிலாளரின் நேர்மையான சம்பள விகிதங்களை அமுலுக்கு கொண்டு வராததற்கு நிபந்தனையாகவோ அல்லது முன்மாதிரி யாகவோ இந்திய சர்க்கார் கருத முடியாது. எங்கெல்லாம் தொழி லாளர் மீது கட்டுப்பாடுகள் திணிக்கப்பட்டிருக்கின்றனவோ அங் கெல்லாம் தொழி லாளர்களுக்கு நியாயமான வேலை நிலைமைகள் அளிக்கப்படுவதற்கு பல்வேறு அவசரச் சட்டங்கள் மூலம் இந்திய சர்க்கார் வகை செய்துள்ளது. இந்த விஷயங்கள் தேயிலைத் தோட்டத் தொழிலாளர் விஷயத்திலும் நிச்சயம் அமுல்படுத்தப்பட வேண்டும் என்று இந்திய சர்க்கார் கருதுகிறது. சென்ற காலத்தில் தேயிலைத் தோட்டங்களின் நிலைமை எவ்வாறு இருந்திருந்தாலும், அங்குள்ள இன்றைய நிலைமையில், ஒரு குழுமம் அவற்றின்மீது சுமத்தும் சம்பள விகிதங்களின் சுமையை அவை தாங்கிக் கொள்ள முடியும் என்பதையும் மறுக்க முடியாது.

எனவே, இப்பொழுது எழும் ஒரே பிரச்னை இதுதான்: இன்றைய நிலைமையில் ஒரு விசாரணையை நாம் நடத்த முடியுமா? இரண்டு பிரச்சினைகள் மீது அதாவது நியாயமான நிலைமைகள் ஏற்படுத்தப்பட வேண்டும் என்பதில் எனது நண்பர் திரு.ஜோஷிக் கும் இந்திய சர்க்காரைப் பிரதிநிதித்துவப்படுத்தும் எனக்கு மிடையே கருத்து வேறுபாடு எதுவுமில்லை. தேயிலைத் தோட்டங் களில் ஒருபெரும்பகுதி இந்தியாவின் மேற்கத்திய எல்லையில், அஸ்ஸாமிலும் வங்காளத்திலும் உள்ளது என்பதை எனது நண்பர் திரு.ஜோஷியும் பிற உறுப்பினர்களும் நன்கு அறிவர். இந்த பிரதேசங் கள் எதிரியின் தாக்குதலுக்கு உட்படக்கூடியவை என்பதும் தெள்ளத் தெளிவானதே. அங்கு எந்த விசாரணையையும் துவக்கினால், அது அமைதிக்குலைவு நிலையை ஏற்படுத்தலாம். எனவே, மீதமுள்ள ஒரேகேள்வி, தென் இந்தியாவில் உள்ள தேயிலைத் தோட்டங் களில் இந்த விசாரணையை நாம் ஆரம்பிக்கலாமா என்பதே. வடக்கு, தெற்கு இந்தியாவில் தேயிலைத் தோட்டங்கள் எவ்வாறு

பிரிந்து கிடக்கின்றன என்பதை அவைக்கு கூற நான் விரும்பு கிறேன். என்னிடம் உள்ள புள்ளி விவரங்கள் 1941ம் ஆண்டுக் கானவை. அவற்றின்படி பரப்பளவு வட இந்தியாவில் 607,000 ஏக்கர்; தென் னிந்தியாவில் 163,132 ஏக்கர்; தேயிலைத் தோட்டங்களில் வேலைக்கு அமர்த்தப்பட்டுள்ள தொழி லாளர்களின் எண்ணிக்கை யைப் பொறுத்தவரை, வட இந்தியாவில் அமர்த்தப்பட்டுள்ள தொழிலாளர்களின் எண்ணிக்கை 773,969; தென்னிந்தியாவில் அமர்த்தப்பட்டுள்ள தொழிலாளர் எண்ணிக்கை 144,385 மட்டுமே.

சர்.எப்.இ.ஜேம்ஸ்: (சென்னை, ஐரோப்பியர்): இது தேயிலையை மட்டும் குறிக்கிறது, இல்லையா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஆம்.நாம் தேயிலையை பற்றி மட்டுமே பேசிக்கொண்டிருக்கிறோம். நான் அளித்த இந்த புள்ளி விவரங்களிலிருந்து, தென்னிந்தியாவில் உள்ள தேயிலைத் தோட்டங்களின் அளவு வட இந்தியாவின் தேயிலைத் தோட்டங்களின் அளவில் ஒரு சிறுபாகமே என்பது தெளிவு.

மௌலானா ஜாபர் அலிகான்: அஸ்ஸாமில் தேயிலை பயிரிடப்படும் பரப்பளவு எவ்வளவு?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்: நான் வடக்கு, தெற்கு பற்றியே பேசிக்கொண்டிருக்கிறேன். அஸ்ஸாமை தனியாக எடுத்துக்கொள்ளவில்லை. வடஇந்தியாவில் உட்படுத்தப்பட்டுள் ளது அஸ்ஸாம். தென்னிந்தியாவில் உள்ள தொழிலாளர்களின் எண்ணிக்கை, நாடு முழுவதிலுமுள்ள தேயிலைத்தோட்டங்களில் வேலைசெய்யும் தொழிலாளரின் மொத்த எண்ணிக்கையில் ஒரு மிகச் சிறிய பாகமே என்பது புள்ளி விவரங்களிலிருந்து தெளிவு. இத்தகைய அரைகுறையான, குறுகிய தன்மைகொண்ட விசாரணையை மேற்கொள்வதால், நாட்டுக்கோ அல்லது தொழிலாளர்களுக்கோ எந்தவிதமான பலனும் விளையும் என்று இந்திய சர்க்காருக்குத் தோன்றவில்லை யுத்தம்ஏற்படுத்தியுள்ள நிலைமையில் மொத்தத் தேயிலைத்தோட்டஅளவில் மிகக்குறைவாக உள்ள பரப்பில் ஒரு விசாரணையைத் துவக்குவது சாத்தியமல்ல.

திரு.தலைவர்: (மாண்புமிகு சர் அப்துல் ரஹீம்): இந்தத் தீர்மானத்தைப் பொறுத்தவரை தொழிலாளர் பிரச்சினை அதில் தற் செயலாக எழுந்ததுதான் என்பதை உணரும்படி மாண்புமிகு உறுப் பினரைக் கேட்டுக்கொள்கிறேன்.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:* இதற்குமேல் சொல்வதற்கு எனக்கு வேறு எதுவுமில்லை.

*டாக்டர் சர். ஜியா வுத்தீன் அகமது:* தேயிலையை உற்பத்தி செய்யாது இருக்க தேயிலைத் தோட்டமுதலாளிகளுக்கு கணிசமான தொகை அளிக்கப்பட்டதா? இதனால் நுகர்வோர் பாதிக்கப்பட்டிருக் கிறார்களா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* வாணிகத்துறைச் செயலாளர் பதிலளிக்க வேண்டிய விஷயம் இது.

*மதிப்பிற்குரிய சில உறுப்பினர்கள்:* இப்போது தீர்மானம் முன்வைக்கப்படலாம்.

*திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரஹீம்):* தீர்மானம் இதுதான்: 'தீர்மானம் இப்பொழுது முன்வைக்கப்பட்டுள்ளது''

தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.



# 13

## [1]போர்க் காயங்கள் (இழப்பீட்டுக் காப்பீடு)

## மசோதா

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): ஐயா, பின்கண்ட மசோதாவை முன்மொழி கிறேன்:*

*'போர்க்காயங்களுக்கு உள்ளான தொழிலாளர்களுக்கு இழப்பீடு வழங்கும் பொறுப்பை முதலாளிகள் மீது சுமத்தவும், இந்தச்சுமையை ஈடுசெய்ய முதலாளிகளின் காப்பீட்டிற்கு வகை செய்யவுமான மசோதா கீழ்க்கண்டவர்கள் கொண்ட தெரிவுக் குழுவுக்கு அனுப்பப்படுகிறது. சர் வித்தல் என்.சந்தவர்க்கர், திரு. எம்.என் ஜோஷி, திரு.ஜம்னாதாஸ் மேத்தா, திரு.டி.எல். ஜோஷி, திரு.காதிர் முகமது சபன், திரு.ஸி.ஸி.மில்லர், திரு.இ.ஐ.சி.குவில்ட் மௌலானா ஜாபர் அலிகான், திரு.யூசுப் அப்துல்லா ஹருன், ஹாஜி சௌதுரி முகமது இஸ்மாயில் கான், திரு.எச்.ஏ. சத்தார் எச்.எஸ்ஸாக்சேட், திரு. அமேந்திர நாத் சட்டோபாத்யாயா, திரு. ஆர்.ஆர். குப்தா, மற்றும் தீர் மானத்தை முன்மொழிபவர்; இந்தக் குழுவின் கூட்டம் நடைபெற, அதில் கலந்து கொள்ளும் உறுப்பினர்களின் எண்ணிக்கை ஐந்தாக இருக்க வேண்டும். இக்குழு சிம்லாவில் கூடுவதற்கு அதிகாரம் அளிக்கப்படுகிறது''*

***திரு.தலைவர்*** *(மாண்புமிகு சர்.அப்துல்ரஹீம்): மாண்புமிகு உறுப்பினர் பெயர்களைக் கொடுத்துள்ளாரா?*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *ஐயா, பட்டியலை இப்பொழுது அளிக்கிறேன்:*

***திரு.தலைவர்*** *(மாண்புமிகு சர்.அப்துல்ரஹீம்): பெயர்கள் ஏற்கனவே கொடுக்கப்பட்டிருக்க வேண்டும்.*

---

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுப்பு II, மார்ச், 1943, பக்கம் 1649-51.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, மதிப்பிற்குரிய உறுப்பினர்களுக்கு இந்த மசோதாவை சிபாரிசு செய்ய அவையின் அதிக நேரத்தை எடுத்துக் கொள்ள எனக்கு அவசியம் ஏற்படும் என நான் நினைக்கவில்லை. இந்த மசோதாவின் பிரதான ஷரத்துக்கள் மூன்று. முதலாவதாக, போர்க்காயங்களால் பாதிக்கப்பட்ட தொழிலாளர்களுக்கு இழப்பீட்டுத் தொகை கொடுப்பதை இந்த மசோதா சாத்தியமாக்குகிறது. இரண்டாவது இத்தகைய இழப்பீட்டுத் தொகையை கொடுக்க வேண்டிய பொறுப்பு முதலாளிகளைச் சேர்ந்தது என இந்த மசோதா நிர்ணயித்துக் கூறுகிறது; மூன்றாவது, தங்கள் மீது சுமத்தப்படும் இந்தப் பொறுப்புக்கு ஈடுசெய்ய முதலாளிகளை காப்பீடு செய்யுமாறு நிர்ப்பந்திக்கிறது இந்த மசோதா.

இப்பொழுது, இழப்பீட்டு பிரச்சினையை எடுத்துக் கொண்டால், அவையின் கவனத்தை ஈர்க்க நான் விரும்பிய விஷயம் என்னவெனில், இந்த மசோதா ஒரு இணைக்கப்பட்ட நடவடிக்கையாகும். இது தொழிலாளர் இழப்பீட்டுச் சட்டத்துடன் இணைக்கப்பட்டுள்ளது. ஐயா, போர்க்காயங்கள் அவசரச் சட்டத்திற்கும் இந்த மசோதாவுக்கும் இடையேயுள்ள சம்பந்தம் பற்றி ஏற்கனவே நான் குறிப்பிட்டிருப்பதை மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் ஞாபகப்படுத்திக் கொண்டால், 1941 ஆம் வருட போர்க்காயங்கள் அவசரச்சட்டம், இழப்பீட்டுத் தகுதிபெறும் காயங்கள் எவை என்று வரையறுத்துக் கூறியிருப்பது தெரியவரும். அத்தகைய காயங்கள் அவசரச் சட்டத்தில் வகைப்படுத்தப்பட்டுள்ளன. இன்றைய மசோதா செய்வது என்னவெனில், போர்க்காயங்கள் அவசரச் சட்டத்தில் தகுதிபெறும் காயங்கள் என்று விவரிக்கப்பட்டவற்றின் இலக்கையும் எல்லையையும் பிரதானமாக அங்கீகரிப்பதுதான். இந்த மசோதாவுக்கும் தொழிலாளர் இழப்பீட்டுச் சட்டத்திற்குமுள்ள சம்பந்தம் பற்றிய பிரச்சினையைப் பொறுத்தவரை, போர்க்காயங்களால் பாதிப்பிற்குள்ளானவருக்கு இந்த மசோதாவில் நிர்ணயிக்கப்பட்ட இழப்பீட்டு தொகை, தொழிலாளர் இழப்பீட்டுச் சட்டத்தில் நிர்ணயிக்கபட்ட விகிதங்களை கிட்டத்தட்ட பின்பற்றுகிறது என்ற உண்மையிலிருந்து மதிப்பிற்குரிய உறுப்பினர்களுக்குத் தெளிவாகியிருக்கும்.

ஐயா, மசோதாவைக் கொண்டுவருவதன் நோக்கம் இதுதான்: போர்க் காயங்கள் அவசரச் சட்டம் 1941ஆம் ஆண்டு நிறைவேற்றப்பட்டபோது, ஒரு கேள்வி எழுந்தது; அந்தக் கேள்வி, சாரமுள்ளதும் முக்கியத்துவம் வாய்ந்ததுமாகும்; துரதிருஷ்டவசமாக இந்த அவசரச் சட்டத்தின்படி தகுதிபெறும் காயங்களை ஒரு தொழிலாளி

பெற்றால், அவருக்குக் கொடுக்கப்படும் தொகை, துயர் துடைப்பு உதவியா அல்லது இழப்பீட்டுத் தொகையா என்பதுதான் கேள்வி. துயர்துடைப்பு உதவிக்கும் இழப்பீட்டுக்கும் இடையே உள்ள வேறுபாடு மிகத் தெளிவானது. துயர் துடைப்பு என்பது ஒரு போர்க் காயத்தின் காரணமாக ஏற்பட்ட இயலாமையால் வழக்கமாகப் பெறும் சம்பளத்தை பெறுவதிலிருந்து தடுக்கப்படுவதால் ஏற்படும் கஷ்டங்களிலிருந்து வெளிவர உதவி செய்வது மட்டுமே. இழப்பீடு என்பது, தொழிலாளர் இழப்பீடு சட்டத்தின்படி, அவர் அடையும் நஷ்டத்தை முற்றிலுமாக ஈடுசெய்வதற்கு கொடுக்கப்படும் தொகை யை நிர்ணயிப்பதை குறிக்கிறது. இந்தக்கேள்வ எழுப்பப்பட்ட போது, இங்கிலாந்தில் நிலவிய நிலைமைகளைப் பற்றி விசாரிக்கப் பட்டது; அப்பொழுது பல்வேறு வகை போர்க் காயங்கள் சட்டம், 1936 என்று அழைக்கப்பட்ட சட்டத்தை பிரிட்டிஷ் பாராளுமன்றம் இயற்றியுள்ளது பற்றி தெரியவந்தது. இந்த பிரிட்டிஷ் சட்டத்தின் ஷரத்துக்களை ஆராய்ந்தபொழுது, இந்தச் சட்டம் இடர்காப்பு உதவி மட்டுமல்லாமல் இழப்பீட்டு தொகையைக் கொடுப்பதையும் அனுமதிக்கிறது என்று தெரிந்தது. பிரிட்டிஷ் சட்டத் தொகுப்பில் வகுக்கப் பட்டுள்ள இந்தக் கோட்பாட்டை இந்திய சர்க்கார் பின் பற்றுவது விரும்பத்தக்கதல்லவா என்றகேள்வி இயல்பாகவே எழுந்தது. இரண்டாவதாக, போர்க்காயங்கள் அவசரச் சட்ட ஷரத்துக் கள் போது மானவை அல்ல என்றும், யுத்தக்கால அமைதிக்குலைவு ஏற்பட்டுள்ள வட்டாரங்களில் பணியாற்றும் தொழிலாளர்கள் அவர் கள் பணியில் ஸ்திரத்தன்மையுடன் வேலைசெய்வதற்காக இழப் பீட்டு தொகை அவசியம் கொடுக்கப்பட வேண்டும் என்றும் அதில் குறிப்பிட்டிருந்தனர். இந்த இரு கண்ணோட்டங்களிலிருந்து முதலில் கருதிய துயர்துடைப்பு என்னும் கோட்பாட்டிற்குப் பதில் தொழிலாளர்களுக்கு இழப்பீடுதொகை கொடுக்கப்படவேண்டு மென்ற கோட்பாட்டை இந்திய சர்க்கார் ஏற்றுக்கொண்டது.

போர்க்காயங்கள் அவசரச் சட்ட ஷரத்துக்களை பரிசீலித்த போது, ரூ.24 மட்டத்தில், போர்க்காயங்கள் அவசரச் சட்டத்தின்கீழ் கொடுக்கப்பட்ட தொகை துயர்துடைப்பு மட்டுமல்லாமல் இழப் பீட்டுத் தொகையுமாகும் என்று தெரிந்தது. எனவே ரூபாய் 24க்கு மேல் சம்பளம் பெறும் தொழிலாளர்களுக்கு ஒரு அதிகப்படியான தொகை கொடுக்கப்பட வேண்டியது அவசியமாகிறது; இந்த அதிகப் படியான தொகை இழப்பீட்டுத் தொகையாகும்; அதாவது, அவசரச் சட்டத்தின்கீழ் பெறும் தொகையுடன் இந்த அதிகப்படி தொகை

யுடன் சேர்ந்து இழப்பீடுத் தொகையாகவும் ஆகிறது. இந்தச் சட்டம் ஒரு துணை நடவடிக்கையாகும்; போர்க் காயங்கள், அவசரச் சட்டத்துக்குத் துணையான நடவடிக்கை இது; 1941 ஆம் வருடப் போர்க்காயங்கள் அவசரச் சட்டத்தின் ஷரத்துக்களை இது வளப் படுத்துகிறது.

இந்த மசோதா எவ்வாறு போர்க்காயங்கள் அவசரச் சட்டத் துடனும் தொழிலாளர் ஈட்டுறுதியச் சட்டத்துடனும் இணைக்கப் பட்டது என்பதை அவைக்கு விளக்கியபி , இந்தத் துணைச் சட் டத்தை இந்திய சர்க்கார் கொண்டு வருவதற்கான காரணத்தை விளக்கியபின், இந்த மசோதாவின் இரண்டாவது பிரதான அம்சத்தை விளக்க முற்படுகிறேன்; அதாவது, இந்த இழப்பீடுக்கு முதலாளி களைப் பொறுப்பாக்குவதாகும். போர்க்காயங்கள் அவசரச் சட்டத் தின் ஷரத்துக்களின் கீழ், துயர்துடைப்புத் தொகைக்குப் பொறுப் பேற்றுக்கொண்ட சர்க்கார், இந்த மசோதா பொருந்தக் கூடியவர் களுக்கு இழப்பீடுத் தொகைக்கும் இத்தகைய பொறுப்பை அது ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று கூறப்படலாம். இந்தப் பொறுப்பைச் சர்க்கார் ஏற்றுக்கொள்வது சாத்தியமல்ல என்பது தெளிவு; இந்த விஷயத்தின் சூழ்நிலையில் அது எதுவாகவேணும் ஆகலாம்; இந்தியா இப்பொழுது இருப்பதுபோல் இருந்தால், இதனால் எந்தப் பொறுப்பும் ஏற்படாமல் இருக்கலாம் அல்லது நிலைமை மேலும் மோசமடைந்தால், பொறுப்பு திட்டவட்ட மில்லாது போகும்; இந்திய சர்க்காரின் ஆற்றல் திறனைப் பொறுத்த வரை, அத்தகைய வரைமுறையற்ற பொறுப்பை ஏற்றுக்கொள்ளும் படி சர்க்காரை கோர முடியாது என்பது தெளிவு. இரண்டாவதாக, இந்த விஷயத்தில் சர்க்கார் பொறுப்பை ஏற்றுக்கொள்ளவில்லை என்பதை பெரிதாக்கிக் கொள்ளமுடியும் என்று நான் கருதவில்லை; எந்த இழப்பீடு தொகை கொடுக்க வேண்டுமென முதலாளி கோரப் படுகிறாரோ, அதாவது நாம் அவர்மீது சுமத்தப்படும்தொகை, இ.பி.டி- ன் கீழ் இது வருவாய் செலவாகச் சந்தேகமின்றி அனு மதிக்கப்படும் என்பதைத் தெரிந்து கொள்ளமுடியும்; இதன்விளை வாக, இதன் பிரதான பளு முடிவில் கஜானாவின் மீதுதான் விழும்.

முதலாளிகள் மீது இந்தச் சுமையைத் திணிக்க இந்திய சர்க்கார் வழிசெய்யும்பொழுதே, தனது சிப்பந்திகள்பால் தனக் குள்ள சொந்த கடமையை அது மறந்துவிடவில்லை. இந்த மசோதா வில் உள்ள ஒருஷரத்து, மாட்சிமைதங்கிய மன்னர்பிரானின் ஊழியர் களுக்கும் பெடரல் ரயில்வே ஊழியர்களுக்கும் பொருந்தாது என்று

கூறுவதை மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் காண்பார்கள். ஆனால் அதன் பொருள், இந்த மசோதாவால் மற்றவர்கள் பயனடைவது போல் மேற்சொன்ன சிப்பந்திகள் பயன் அடைய மாட்டார்கள் என்பதல்ல. பொதுத்துறைப் பணியாளர் விதிமுறைகளிலும் ரயில்வே தொழிலாளர்களுக்கான சட்டப்படியான விதிகளிலும் கண்டுள்ள அதிகப் படியானபென்ஷன் தொகைகளை வழங்க தயாராக இருப் பதாக பெடரல் ரயில்வேயும் இந்திய சர்க்காரும் தங்களுடைய ஊழியர்களுக்குத் தெரிவித்துள்ளனர் என்பதை இந்த அவைக்குத் தெரிவிக்க விரும்புகிறேன்.

ஐயா, முதலாளி மீது சுமத்தப்பட்டபளுவை நடைமுறையில் ஏற்றுக்கொள்ளமாறு நிர்ப்பந்திக்கும் மூன்றாவது ஷரத்து மிக அவசிய மானதும் சட்டப்படி மிகவும் கட்டுப்படுத்தும் ஒன்றுமாகும் என்பது எனது திட்டவட்டமான கருத்து. இந்த ஷரத்தின்நோக்கம், இந்த மசோதா வழிவகுக்கின்ற இழப்பீடு தொகையை எல்லா சந்தர்ப்பத் திலும் பெறுவதை உத்திரவாதம் செய்வதுதான். ஒரு தொழிற்சாலை குண்டுவீச்சுக்கு உட்பட்டால் அல்லது இடித்து நாசம் செய்யப் பட்டால், நலன்கள் வழங்கும் இந்தமசோதாவின் ஷரத்து அமுலில் இருந்தபோதிலும், இறுதியாகப் பார்த்தால் வழங்கப்பட்டுள்ள இழப்பீடு தொகையைப்பார்த்தால் வழங்கப்பட்டுள்ள இழப்பீடு தொகையைப்பெறும் சந்தர்ப்பம் இல்லாமல் போகலாம். எனவே எல்லாச் சந்தர்ப்பங்களிலும் தொழிலாளிக்கு இந்த மசோதா வழங்கி யிருக்கும் அனுகூலங்கள் போர்க்காயம் பெறும் துரதிருஷ்டவசமான நிலை ஏற்பட்டால் அவை அவருக்குக்கிடைப்பதைக் காப்பீடு உத்திர வாதம் செய்கிறது. இந்த மசோதாவின் விதிகளின்படி முதலாவதாக முதலாளியால் தொழிலாளிக்கு வழங்கப்படும், சர்க்காரால் நிர்வகிக் கப்படும் காப்பீட்டிலிருந்து முதலாளிக்கு அது ஈடுசெய்யப்படும். யுத்த முடிவுக்குப்பின் மொத்தச் சுமை எவ்வளவு என்று முடிசெய்யப் படும் காப்பீட்டு நிதிக்கு முதலாளி காப்பீட்டுக் கட்டணத்தைச் செலுத்தவேண்டும். யுத்த முடிவுக்குப்பின் நிர்ணயிக்கப்படும் இறுதி காப்பீட்டுக் கட்டணத்திற்கு எதிராக முன்பணத்தை முதலாளிகளிட மிருந்து சர்க்கார் வசூலிக்கும். செலுத்த வேண்டிய முன்பணம் மூன்று மாதத்திற்கு ஒருமுறை முடிவு செய்யப்படும். முதல் மூன்று மாதத் தில், முன்பணம் சம்பளப் பட்டியலில் ரூ.100க்கு எட்டு அணாவுக்கு மேல் இருக்காது. அடுத்துவரும் மூன்று மாதங்களுக்குப் பாக்கியுள்ள பொறுப்பு தொகைக்கு ஏற்ப அதுமாறும். முந்தின மூன்று மாதங் களில் எந்தக் காயங்களும் ஏற்படாமல் இருக்கலாம். அது அப்படி யாயின், முதலாளியிடமிருந்து எந்த முன்பணமும் வசூலிக்கப் படாது என்பது தெளிவு. நான் கூறியபடி இந்தக் காப்பீடுத் திட்டத்தின்

நற்பயன் என்னவெனில், அது தொழிலாளர்களுக்கு கிடைக்க வேண்டிய பணத்தை உத்திரவாதம் செய்கிறது; இரண்டாவதாக, நஷ்டம் பிரித்துக் கொடுக்கப்படுகிறது; தாக்குதல் அபாயத்திற்கு உட்படாத பிரதேசங்களில் வாழும் தொழிலாளர்களும் தாக்கு தலுக்குட்பட்ட பிரதேசங்களில் வேலைசெய்யும் தொழிலாளர்களின் காப்பீடுநிதிக்கு ஒருபங்கைச் செலுத்த வேண்டும். மூன்றாவதாக, இந்தப் பளு விகித விதிப்படி பிரித்துக் கொடுக்கப்படுகிறது. ஏனெனில் ஒவ்வொரு முதலாளியின் சம்பளப் பட்டியலை அடிப்படை யாகக் கொண்டது அது.

ஐயா! எனவே இந்த மசோதா ஒரு எளிமையான நடவடிக்கை என்பதைக் காணமுடியும். வாத-பிரதிவாதத்திற்கு உட்படாத நட வடிக்கை என்றும் கூறுவேன். இந்த மசோதாவுக்கான கருத்து 1942 துவக்கத்தில் பம்பாய் மில்முதலாளிகள் சங்கத்திலிருந்து வந்தது என்பதை அவை தெரிந்துகொள்ள விரும்பும்; இந்த ஆலோசனை இந்திய சர்க்காருக்கு அனுப்பப்பட்டபின், தொழிலாளர் இலாகாச் செயலாளர் சர் ஹென்றி ரிச்சர்ட்சன், சர் பிரடெரிக் ஜேம்ஸ், திரு. ஹட்டோ, திரு.குவில்ட், திரு. ஹுசேன்பாய் லால்ஜி ஆகியோரைக் கொண்ட ஒருபூர்வாங்கமாநாடு 1942 ஏப்ரலில் நடைபெற்றது. அவர் களின் ஆலோசனைப்படி தொழிலதிபர்களுடன் கலந்தாலோசனை செய்யப்பட்டது. இரு தொழிலதிபர்களின் அமைப்புகள் அணுகப் பட்டன; இரு அகில இந்தியத் தொழில் அதிபர்களின் அமைப்புகள் இந்த நடவடிக்கையை முழுமையாக ஆதரித்தன. தொழிலதிபர் களின் சம்மேளனத்தைப் பொறுத்தவரை, துரதிருஷ்டவசமாக அந்த அமைப்பு ஒரே கருத்தைக் கொண்டிருக்க வில்லை. ஒரு பகுதி சாதக மாக இருந்தது, மற்றொன்று சாதகமாக இல்லை. தொழிலாளர் பிரதிநிதித்துவம் பொறுத்தவரை, தொழிலாளர் நிலைக் குழு ஏகமன தாக இந்த நடவடிக்கைக்கு சிபாரிசு செய்தது. இந்த மசோதாவின் ஷரத்துக்களை முற்றிலுமாகப் புரிந்து கொள்ள வேறுஅதிகமாக எதுவும் தேவை என்று நான் நினைக்கவில்லை. ஐயா, இந்தக் கருத் துரையுடன் இம்மசோதாவைப் பிரேரேபிக்கிறேன்.

* * *

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா! இன்று காலை நான் பிரேரேபித்த மசோதாவுக்கு இத்தகைய ஒரு பொதுவான ஆதரவு அளிக்கப்பட்டது அறிந்து நான் மகிழ்ச்சியடைகிறேன். மசோதாவிற்கு எதிரான விமர்சனங்கள் அதிசயிக்கத்தக்க வகையில்

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, 1943 மார்ச் 31, பக்கம் 1659-61.

சிலவையே; அவற்றில் பெரும்பாலானவை எனது மதிப்பிற்குரிய நண்பர்கள் திரு. மில்லரிடமிருந்தும் திரு. ஜோஷியிடமிருந்தும் வந்தன. இந்த மசோதா பற்றி சர்க்கார் அதிகம் விவரங்கள் கொடுக்க வேண்டியது அவசியம் என்று திரு.மில்லர் சொன்னார். எந்த விஷயங்கள் அவர் மனதை வருத்திக்கொண்டிருக்கின்றன என்பதை தயவுசெய்து அவர் எனக்குத் தெரிவித்தால், அவர் விரும்பும் எந்தவிதத் தகவலையும் வழங்க எப்பொழுதும் நான் மகிழ்ச்சியடைவேன். அவர் எழுப்பிய மற்ற விஷயத்தைப் பொறுத்தவரை, அதாவது, போர்க்காயங்கள் அவசரச் சட்டத்தின் கீழ் நாம் வழங்கிவரும் விகிதங்களுக்கும் இந்த மசோதாவின்கீழ் நாம் கொடுக்கவிருக்கும் விகிதத்திற்கும் இடையே பாகுபாடு உள்ளதாக அவர் மனதில் தோன்றியதைப் பொறுத்தவரை, அவர் தவறாகப் புரிந்து கொண்டிருக்கிறார் என நான் அஞ்சுகிறேன்; ஏனெனில் நான் எடுத்துரைக்க முற்பட்டது போல, இந்த மசோதாவின் நோக்கம் போர்க்காயங்கள் அவசரச் சட்டத்தின் கீழ் வருகிறவர்கள் நிலையையும் இந்த மசோதாவின் கீழ் வருகிறவர்கள் நிலையையும் உண்மையில் சமநிலைப் படுத்துவதே. நான் சுட்டிக்காட்டியபடி போர்க்காயங்களால் பாதிப்பிற்குள்ளானவர்களுக்கு நாம் கொடுத்துவந்த விகிதங்களை பரிசீலித்ததில், ரூ.24ம், அதற்கு மேலும் சம்பளம் பெற்றவர்கள் துயர் துடைப்புத் தொகை மட்டுமே பெற்றனர் என்பதையும் ரூ.24/- க்குக் கீழ் சம்பளம் பெற்றவர்கள் இழப்பீடு தொகை மட்டுமே பெற்றனர் என்பதையும் காணமுடிந்தது. இப்பொழுது இந்தச்சட்டப்படி நாம் செய்யவிருப்பது, ரூ.24க்கு மேல் இருப்பவர்களுக்கு இழப்பீடுதொகை வழங்குவதாகும். பாகுபடுத்தும் நிலையை ஏற்படுத்துவதற்கு மாறாக, இந்த இரு சட்டங்களின் கீழ் தகுதிபெறும் எல்லாத் தொழிலாளர்களின் நிலையை சமநிலைப்படுத்துகிறோம் என்பதை எனது மதிப்பிற்குரிய நண்பர் காணமுடியும். என் நண்பர் திரு.மில்லர் எழுப்பிய விஷயத்தை நான் பாராட்டுகிறேன்; அதாவது 5வது ஷரத்து வகுக்கும் சிலவகைத் தொழிலாளர்கள் அல்லது சில பிரிவுத் தொழிலாளர்கள் மட்டுமே இந்தச் சட்டத்தால் பயன்பெறுவர்; இந்தச் சட்டத்தின் விதிமுறைகளிலிருந்து அது மிகத் தெளிவாகிறது. ஆனால் நான் சுட்டிக்காட்டியபடி இரு சந்தர்ப்பங்களைப் பொறுத்தவரை முதலாவதாக, எல்லாத் தொழிலாளர்களுக்கும் இழப்பீடு கொடுக்கும் சுமையைச் சர்க்கார் ஏற்றுக்கொள்வது சாத்திய மல்ல; இரண்டாவதாக சர்க்கார் முன்வைக்கக்கூடிய எந்தக் காப்பீட்டுத் திட்டத்தையும் பொறுத்தவரை, அது நிர்வாக ரீதியாக நடைமுறைப்படுத்தக் கூடியதாக இருக்க வேண்டும். எல்லா வகைப்பட்ட தொழிலாளர்களுக்கும் பொருந்துமாறு அதனை நடைமுறைப்படுத்தினால் சர்க்காருக்கு

அது அதிக சுமையாக இருக்கும்; நிர்வாக ரீதியில் செயல்படுத்த முடியாததாகி விடும். பொறுப்பை நாம் நிச்சயம் சுமத்தக்கூடிய, காப்பீடு கட்டணத்தை செலுத்த ஒரு முதலாளியைக் கண்டுபிடிக்கப் பட வேண்டும். பொது மக்களைப் பொறுத்தவரை, இந்தப் பொறுப்பைச் சுமக்கக்கூடிய, காப்பீட்டுக் கட்டணத்தை தரும்படி கோரமுடிகிற ஒருவரை கண்டுபிடிப்பது சாத்தியமல்ல. விதி 5 விவ ரிக்கிற சில பிரிவுகளைச் சேர்ந்த தொழிலாளர்களுக்கு மட்டும் என இந்தத் திட்டத்தைக் கட்டுப்படுத்திக் கொள்ளும்படி தேவைப்பட்ட தற்கான நிச்சயமான காரணம் இதுதான். விதி 5 விவரித்த பிரிவுகளைச் சேர்ந்த தொழிலாளர்களுக்கு மட்டுமென கட்டுப்படுத்திக் கொண்ட தற்கான நியாயம் எதையும் நாங்கள் கூறவில்லை என்று மதிப்பிற் குரிய எனது நண்பர் திரு. மில்லர் கூறினார். நான் அவருக்குக் கொடுத் திருக்கக் கூடிய பதில்கள் சிலவற்றை மதிப்பிற்குரிய என் நண்பர் திரு.ஜோஷி கொடுத்துள்ளார்; அவற்றைத் திருப்பிக்கூற நான் விரும்ப வில்லை. நோக்கங்கள் - காரணங்கள் அறிக்கையிலேயே பதிலை உண்மையில் கண்டுபிடிக்கலாம். நோக்கங்கள் - காரணங்கள் பற்றிய (பாரா. 2) இந்த சட்டத்தை, அதில் விவரிக்கப்பட்ட பிரிவுத் தொழி லாளர்களுக்கு மட்டுமாகக் கட்டுப்படுத்திக் கொண்டது நாம் கொடுக்கக்கூடிய நல்ல பதிலாகும். தொழிற்சாலைகளிலும் தொழிற் கூடங்களிலும் அவர்கள் ஆபத்திற்கு உட்படுத்தப்படுகிறார்கள் என்பதை நோக்கங்களும் - காரணங்களும் என்ற அறிக்கை (பாரா 2) தெளிவாக்கு கிறது. அதில் விவரிக்கப்பட்ட தொழிலாளர் பிரிவின ருக்கு மட்டும் இந்தச் சட்டம் என்று மட்டுப்படுத்திக் கொள்வதற்கு கொடுக்கப் படக்கூடிய ஒரு நல்ல காரணம் எனக் கூறினேன். தொழிற்சாலைகளும் தொழிற்கூடங்களும் எதிரியின் தாக்குதலுக்கு சுலபமான இலக்குகள் என்பதை மறுக்க முடியாது. எனவே, பொதுமக்களை விட, இந்த இடங்களில் வேலை செய்வோர் ஆபத் திற்கு அதிகமாக உட்படுத்தப்படுகிறார்கள்.

மதிப்பிற்குரிய எனது நண்பர் திரு. ஜோஷி எழுப்பிய கேள்வி யைப் பொறுத்தவரை, இந்த மசோதா எல்லாத் தொழிலாளர் களுக்கும் பொருந்தாது என்பது; இரண்டு குறிப்பிடத்தக்க பிரிவின ருக்கு இந்தச் சட்டத்தின் சிறப்பு சட்டப் பிரிவு விரிவாக்கப்பட வேண் டும் என்று சுட்டிக்காட்டினார், அதாவது அஸ்ஸாமில் தேயிலைத் தோட்டங்களில் பணிபுரியும் தொழிலாளர்களுக்கும் கப்பல் மாலுமி களுக்கும்; இந்த பிரிவினர் விஷயத்தில் குறிப்பான பதில்தேவை என்பதில் சந்தேகமில்லை. ஐயா, இனி இந்த இரு குறிப்பிட்ட பகுதி யினர்பற்றி திரு.ஜோஷியின் விமர்சனத்திற்கு எனது பொதுவான பதில் என்னவெனில், அவர் கூறியுள்ளது பற்றி சர்க்காருக்குத்

தெரியும்; இதனால்தான், விதி 5ல் உபவிதி (C) ஐ சர்க்கார் உட்படுத்தியுள்ளது; இதன்படி இந்த மசோதாவின் விதிகளை எந்தத் தொழிலிலும் பணியாற்றும் மற்ற தொழிலாளர்களுக்கும் விரிவு படுத்தும் அதிகாரத்தை சர்க்கார் தன்னிடம் வைத்துள்ளது. மசோதாவில் வரையறுக்கப்பட்ட தொழிலாளர் பிரிவினர்கள் இறுதியானது என்றோ மற்றவர்களைச் சேர்ப்பதற்கு சந்தர்ப்பம் எதுவும் இராதென்றோ சர்க்கார் கருதவில்லை.

டாக்டர் பி.என். பானர்ஜி: இது முடிவானதல்ல.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: நீங்கள் குறிப்பிட்டது போல் இது முடிவானதல்ல; எனவே ஒரு நிலைமை எழுந்தால், இந்த மசோதாவின் விதிகள் மற்ற தொழில்களில் வேலை செய்யும் தொழிலாளர் களுக்கும் விரிவுபடுத்தப்பட வேண்டுமென்று சர்க்காருக்குத் தெளிவானால், அந்த விஷயத்தை சந்தேகமின்றி சர்க்கார் பரிசீலிக்கும்.

அஸ்ஸாம் பிரச்சினையைப் பொறுத்தவரை, நான் குறிப்பிடுவது என்னவெனில், நான் கூறியபடி அபாயத்திற்கு உட்படுத்தப் பட்டுள்ள இடங்கள் என்று கூறப்படும் இடங்களில் வாழும் தொழிலாளர்களுக்கு மட்டும் இந்த மசோதாவை எல்லைப்படுத்தியுள்ளோம். தற்சமயம் எங்களிடம் உள்ள தகவலின்படி, தேயிலைத் தோட்டங்கள் ஆபத்திற்கு உட்படுத்தப்பட்டுள்ள மையங்கள் எனக் கூற முடியாது எனக் கருத தோன்றுகிறது. எந்த சமயத்திலும் தேயிலைத்தோட்டங்கள் ஆபத்திற்கு உட்படுத்தப்படும் அபாய மையங்களாக மாறினால் திரு.ஜோஷி இந்த விஷயத்தை எடுத்துக் கொள்ளலாம் அல்லது சர்க்கார் தனது கவனத்திற்குகொண்டுவந்து இந்த மசோதாவின் நலன்கள் அஸ்ஸாமிலுள்ள தொழிலாளர்களுக்கும் விரிவுபடுத்துவதை உறுதி செய்யும் என்பதில் சந்தேகமில்லை.

மாலுமிகள் சம்பந்தப்பட்டவரை, வர்த்தகத்துறை இந்த விஷயத்தை முன்கொண்டுவந்தது என்று நினைக்கிறேன்; ஒரு ஏற்பாடு ஏற்கனவே அமுலில் இருக்கிறது என்று அறிகிறேன்; அதன்படி அதே அளவில் இல்லாவிடினும், எப்படியாயினும், நாம் கொண்டுள்ள திட்டத்திற்கு ஒத்ததான நிரந்தரக்குழு இதைப்பரிசீலித்து, ஏதாவது ஏற்பாடு - அது இந்த மசோதாவின் பிரதான அம்சங்களுக்கு முரணில்லாததிருந்தால் - செய்வது விரும்பத்தக்கது என்று எனது நண்பர் திரு. ஜோஷி கருதினால், நிரந்தரக்குழுவில் இந்த விஷயத்தை பரிசீலிப்பதற்கு எந்த ஆட்சேபனையையும் நிச்சயமாக எழுப்ப மாட்டேன்.

மதிப்பிற்குரிய எனது நண்பர் திரு.மில்லர் இந்த மசோதா வின் ஒன்று அல்லது இரண்டு பிரிவுகள் பற்றிக் குறிப்பிட்டார். முதலாவதாக உப-பிரிவு 5(3). இந்த உப பிரிவை எச்சரிக்கை உணர்வுடன் சர்க்கார் வேண்டுமென்றே அறிமுகப்படுத்தியுள்ளது என்று கூறினார். ஏனெனில் பொருத்தமான நிலைமை எழலாம் என்றும் அப்பொழுது இந்த மசோதாவின் பிரிவுகள் விரிவு படுத்தப்பட வேண்டி வரலாம் என்றும் சர்க்கார் நினைக்கிறது என்றார்.

அவர் குறிப்பிட்ட மற்றபிரிவு, பிரிவு 10, உபப்பிரிவு (3). அவரது விமர்சனம் என்னவெனில், இந்தப்பிரிவின்படி, நிதியில் ஏதாவது மீதித்தொகை விடப்பட்டிருந்தால் அந்த அதிகப்படியான தொகை பொதுவருவாய் நிதிக்கு கொடுக்கப்படும் என்பது. இந்த விஷயத்தின் சூழ்நிலையில், இந்திய சர்க்காரின் கொள்கையை நியாயப்படுத்த முடியாதது என திரு.மில்லர் என் கூறுகிறார் என்பதை நான் புரிந்துகொண்டேன். நான் ஏற்கனவே குறிப்பிட்ட உண்மையை திரு.மில்லர் கவனத்தில் கொண்டால், அதாவது முதலாளிகளால் இந்தநிதிக்கு காப்பீட்டு தவணைகளாக கொடுக்கப்படும் பணத்தின் பெரும்பகுதி இருந்து வருகிறது என்பதாகும்; அப்படியாயின் இந்த மிச்சத்தொகையின் சட்டப்படியான உரிமையாளராக சர்க்கார் இருக்கவேண்டுமென்பது சரியானதே. இதற்குமேல் நான்கூற எதுவு மில்லை.

**திரு. ஈ.எல்.ஸி.குவில்ட்** (பம்பாய்: ஐரோப்பியர்): மாண்புமிகு உறுப்பினரிடமிருந்து ஒரு கேள்வி நான் கேட்கலாலமா? மில் தொழிலதிபர்கள் சங்கம் முன்முயற்சி எடுத்த திட்டம் என்று தமது துவக்க உரையில் அவர் கூறியது ஏன்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** அவர்கள் ஒரு யோசனையை முன்வைத்தனர்.

**திரு.ஈ.எல்.ஸி.குவில்ட்:** காப்பீட்டுத்தொகை முழுவது மாக கொடுக்கப்பட்டபின் மீதமுள்ள தொகை தொழில்துறை ஆய்வுக்காக பயன்படுத்தப்படவேண்டுமென்று ஒரு யோசனை யையும் அவர்கள் முன்வைக்கவில்லையா? அப்படியாயின் மாண்பு மிகு நண்பர் அந்த யோசனையைப் பரிசீலிப்பாரா?

**மாண்புமிகு டாக்டர்.பி.ஆர்.அம்பேத்கர்:** எனக்கு ஞாபக மில்லை. ஆனால் இந்த விஷயத்தைக் கவனிக்கிறேன்.

திரு. தலைவர் (சையது குலாம் பிக் நைராங்) : தீர்மானம் வருமாறு:

''போர்க்காயங்களுக்கு உள்ளான தொழிலாளர்களுக்கு இழப்பீடு வழங்கும் பொறுப்பை முதலாளிகள் மீது சுமத்தவும் அதைஈடுசெய்ய முதலாளிகளின் காப்பீட்டிற்கு வகை செய்யவு மான மசோதா கீழ்கண்டவர்களைக்கொண்ட தெரிவுக்குழு வுக்கு அனுப்பப்படுகிறது: சர் வித்தல் சந்திரவர்க்கர், திரு. என்.எம்.ஜோஷி, திரு.ஜம்னாதாஸ் மேத்தா, திரு. ஹுசேன்பாய், ஏ.லால்ஜி, கான்பகதூர் மியான் குலாம் கதிர் முகமது சபன், திரு.ஸி.ஸி.மில்லர், திரு.ஈ.ஐ.ஸி, குவில்ட், மௌலானா ஜாபர் அலி கான், திரு. யூசுப் அப்துலா ஹருன், ஹாஜி சௌதுரி முகமது இஸ்மாயில் ஹருன், திரு.எச்.ஏ.சத்தார் எச்.எஸ்ஸாக் சேட், திரு. அமேந்திரநாத் சட்டோபாத்யாயா, திரு.ஆர்.ஆர். குப்தா, மற்றும் தீர்மானத்தை முன்மொழிபவர்; இந்த குழுக் கூட்டம் நடைபெற, அதில் கலந்து கொள்ளும் உறுப்பினர் களின் எண்ணிக்கை ஐந்தாக இருக்கவேண்டும்; இந்தக்குழு சிம்லாவில் கூடுவதற்கு அதிகாரம் அளிக்கப்படுகிறது.''

தீர்மானம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

# 14

# [1]தேர்ச்சி பெற்ற மற்றும், பகுதித் தேர்ச்சி பெற்ற பணியாளர்களுக்கான வேலைவாய்ப்பு நிலையங்கள்

## நிரந்தரத் தொழிலாளர் குழு விவாதங்கள்

தொழிலாளர் நலன், யுத்த உற்பத்தி, தேர்ச்சி பெற்ற மற்றும் பகுதி தேர்ச்சி பெற்ற பணியாளர்களை வேலைக்கு அமர்த்துதல். தொழில் தகராறுகள் மற்றும் தொழிலாளர் பிரச்சினைகள் பற்றி புள்ளி விவரங்கள் சேகரித்தல் ஆகியவை பம்பாயில் மே 7, 8 தேதி களில் நடைபெற்ற நிரந்தரத்தொழிலாளர் குழுவின் மூன்றாவது கூட்டத்தில் விவாதிக்கப்பட்டன. தொழிலாளர் நலத்துறை உறுப் பினர் மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் தலைமை தாங்கினார்.

தேர்ச்சி பெற்ற மற்றும் பகுதி தேர்ச்சி பெற்ற பணியாளர் களுக்கான வேலைவாய்ப்பு மையங்கள் ஏற்படுத்துவதற்கான திட்டம் - தன்னிச்சையாய் செயல்படும் அடிப்படையான திட்டம் - பற்றி பொதுவாக கருத்து சாதகமாக இருந்தது. வேலைவாய்ப்பு மையங்களோடு இணைக்கப்பட்டுள்ள ஆலோசனைக்குழுவில் மாகாண சர்க்கார்களின் பிரதிநிதிகள் இருக்க வேண்டும் என்ற யோசனை ஏற்றுக்கொள்ளப்பட்டது.

சர்க்கார் ஒப்பந்தப் பணிகளில் நியாய-சம்பளவிதி சேர்க்கப் பட வேண்டும் என்பதுபற்றி மாநாடு விவாதித்தது. பொதுப்பணித் துறை ஒப்பந்தப் புள்ளிகள் தவிர பிற ஒப்பந்தப் பணிகளுக்கும் இது பொருந்தும்.

## தொழிலாளர் சட்டங்கள்

யுத்தகாலத்தில் தொழிலாளர் சட்டங்கள், தொழிலாளர் நலன் கள் பற்றிய திட்டத்தில் சமூகப் பாதுகாப்பு, சம்பளம், வாழ்க்கை

---

1. இந்தியத் தகவல் ஏடு, 1943 ஜூன் 1, பக்கம் 43.

நலம் ஆகியவை விவாதத்தில் இடம்பெற்றன. இந்தியாவில் சம்பள வாரியங்கள் அமைப்பது விரும்பத்தக்கதா என்ற கேள்வியும் விவாதத்தின் வட்டத்திற்குள் வந்தது. தொழிலாளர் வாழ்க்கை நலன் பற்றிய திட்டங்களில் தங்களுக்கு உதவ ஒரு ஆலோசனை அமைப்பாக முக்கூட்டு மாநாட்டை பயன்படுத்த இந்திய சர்க்கார் அக்கறை கொண்டுள்ளது என்று பிரதிநிதிகளுக்கு உறுதியளிக்கப்பட்டது.

தொழிலாளர்களோடு நெருங்கிய தொடர்பை மேற்கொள்ள, அவர்களது குறைகளைக் கேட்டறிய, எவ்வளவு வேகமாக முடியுமோ அவ்வளவு வேகமாக தீர்வுகளைப்பெற, தொழிற்சாலைகளில் தொழிலாளர் நல அதிகாரிகள் நியமிக்கப்படுவது விரும்பத்தக்கது என்று பொதுவாக ஒப்புக்கொள்ளப்பட்டது. தொழிலாளர் நல அதிகாரிகளுக்கு பயிற்சியளிப்பதற்கான பம்பாய் மில் அதிபர்கள் அமைப்பின் திட்டம்பற்றி குறிப்பிட்டது. மாகாணங்களிலிருந்தும், சமஸ்தானங்களிலிருந்தும், கீழ்க்கண்ட பிரதிநிதிகளும் ஆலோசகர்களும் இந்தியா முழுவதிலுமிருந்து முதலாளிகள், தொழிலாளர் பிரதிநிதிகளும் கூட்டத்தில் கலந்து கொண்டனர்.

***இந்திய சர்க்கார்:*** *திரு.எச்.ஸி.பிரியோர் சி.ஐ.இ., ஐ.சி.எஸ். தொழிலாளர் நலத்துறை செயலாளர், டாக்டர் டி.டி. ஜாக் (ஆலோசகர்); திரு.ஆர்.எஸ்.நிம்கர் (ஆலோசகர்); சர். தியோடர் கிரிகிரி (ஆலோசகர்) மற்றும் திரு.டி.எஸ்.ஜோஷி (கூட்டத்தின் செயலாளர்).*

***பம்பாய்:*** *திரு.ஸி.எச்.பிரிஸ்டோ சி.ஐ.சி., ஐ.சி.எஸ். (மேன்மைதங்கிய ஆளுநரின் ஆலோசகர்) திரு.ஜி.பி. கான்ஸ்டான்டின் ஐ.சி.எஸ். தொழிலாளர் நலத்துறை ஆணையர் (ஆலோசகர்).*

***வங்காளம் :*** *திரு.ஏ.ஹக்ஸ் ஐ.சி.எஸ். தொழிலாளர் நலத்துறை ஆணையர்.*

***ஐக்கிய மாகாணங்கள்:*** *ஜே.ஈ.பெட்லி சி.ஐ.இ., எம்.சி., ஐ.சி.எஸ். தொழிலாளர் நலத்துறை ஆணையர்.*

***சென்னை மற்றும் மத்திய மாகாணங்களும் பேராரும்:*** *ராவ் பகதூர் என்.ஆர்.சந்தோர்கர், தொழிலாளர் நலத்துறை ஆணையர், ம.மா - மற்றும் பேரார்; திரு.எப்.ஆர்.பிரிஸ்லி. ஐ.சி.எஸ்., தொழிலாளர் நலத்துறை ஆணையர், சென்னை (ஆலோசகர்).*

**பஞ்சாப், சிந்து மற்றும் வடமேற்கு எல்லைப்புற மாகாணம்:** திரு. ஏ.பி.லி. மெகூரியர் ஐ.சி.எஸ், தொழிலாளர் நலத் துறை ஆணையர் சிந்து; திரு.அமின்-உத்-தின். ஐ.சி.எஸ்., செயலாளர் மின்சக்தி - தொழிற்சாலைகள் இலாகா பஞ்சாப் (ஆலோசகர்).

**பீஹார், அஸ்ஸாம் மற்றும் ஒரிஸ்ஸா :** திரு.எஸ்.என். மசூம்தார் ஐ.சி.எஸ். தொழிலாளர் நலத்துறை ஆணையர், பீஹார்; திரு. ஏ.எஸ். ராமச்சந்திரன் பிள்ளை, தொழிலாளர் நலத்துறை ஆணையர், அஸ்ஸாம் (ஆலோசகர்); திரு.எஸ்.சாலமன் ஐ.சி.எஸ்., தொழில் துறை இயக்குனர் மற்றும் தொழிற்கூடங்களின் ஆய்வாளர், ஒரிஸ்ஸா (ஆலோசகர்).

**சமஸ்தான மன்னர்களின் சபை:** சமஸ்தான மன்னர்கள் சபைச் செயலாளர் திரு. மஹ்பூல் முகமது.

**ஹைதராபாத், மைசூர், திருவாங்கூர், பரோடா, குவாலியர் மற்றும் ஹோல்கர் சமஸ்தானங்கள்:** திரு.மஹ்தி அலி மிர்ஜா, தொழிலாளர் நலத்துறை ஆணையர் ஹைதராபாத்; கர்னல் சிர்தர் எம்.என்.சிட்டோல், தொழில், வர்த்தகம் மற்றும் தகவல் போக்குவரத்து அமைச்சர், குவாலியர், திரு. பி.ஜி.ஏ.முதலியார், தொழிலாளர் நலத் துறை ஆணையர், மைசூர் (ஆலோசகர்): திரு.ஈ.ஐ.சாக்கோ, தொழில் துறை இயக்குனர் மற்றும் தொழிலாளர் நலத்துறை ஆணையர், திருவாங்கூர் (ஆலோசகர்); திரு.கே.ஆர்.டோட்டிவாலா, தொழில்கள் மற்றும் தொழிலாளர் நலத்துறை இயக்குனர் பரோடா(ஆலோசகர்), காப்டன் எச்.சி. தண்டா, ஹோல்கர் சமஸ்தானம் (ஆலோசகர்).

**தொழில் அதிபர்களின் அகில இந்திய ஸ்தாபனம்:** சர் ரஹிம்தூலா எம்.சினாய், பம்பாய்; திரு.கஸ்தூரிபாய் லால்பாய், அகமதாபாத்; திரு. டி.ஜி. முல்கெர்கர், டில்லி (ஆலோசகர்).

**இந்தியத் தொழிலதிபர்கள் சம்மேளனம்:** சர்.வி.என். சந்தவர்க்கர், பம்பாய்; திரு. கே.டபிள்யூ. மீலிங், கல்கத்தா; திரு. ஏ.எச். பிஷப் (ஆலோசகர்)

**பிற தொழிலதிபர்கள்:** திவான்பகதூர் ஸி.எஸ்.ரத்னசபாபதி முதலியார், சி.பி.இ., கோயம்புத்தூர்.

**அகில இந்திய தொழிற்சங்க காங்கிரஸ்:** திரு.என்.எம். ஜோஷி, பம்பாய்; திரு.பி.கே.முகர்ஜி, லக்னோ (ஆலோசகர்); திரு. பி.ஆர்.கே.சர்மா சென்னை(ஆலோசகர்).



# 15

## [1]இந்தியக் கொதிகலங்கள் (திருத்த) மசோதா

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்), ஐயா! பின்கண்டவாறு பிரேரேபிக்கிறேன்:*

*''இந்திய கொதிகலங்கள் சட்டம், 1923ஐ மேலும் திருத்துவதற்கான மசோதா பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்படுகிறது.''*

*இந்த மசோதா ஒரு எளிமையான நடவடிக்கை; வாத-பிரதிவாதத்திற்கு உட்படாத ஒன்று; எந்தக்கோட்பாட்டையும் உட்படுத்தாதது. இக்காரணங்களைக் கணக்கில்கொண்டு, இந்த மசோதாவின் விதிகளை விளக்குவதற்காக மிக விரிவாகப் பேச நான் விரும்பவில்லை. இந்தத் திருத்த மசோதாவை கொண்டுவர சர்க்காரைத் தூண்டிய சூழ்நிலைமைகளை இங்கு கூறினால் அதுவே போதுமானதாகும். சுருக்கமாக, சூழ்நிலைகள் இவைதான்:*

*1942 பிப்ரவரி 23ம் தேதி பம்பாயிலுள்ள ஒரு மில்லின் கொதிகலத்தில் விபத்து நடைபெற்றது; மிக மோசமான உயிர் சேதத்தை அது விளைவித்தது. இந்த விபத்து நடந்தபோது, இந்த விபத்துக்கான காரணத்தை கண்டறிவதற்காக பம்பாய் சர்க்காரால் ஒரு விசாரணை நடத்தப்பட்டது. இந்த வெடிப்புக்குக் காரணம் வெப்பம் - எரிபொருள் முதலியவற்றை மிச்சப்படுத்துவதற்கான 'எகானாமைசர்' என்று அழைக்கப்படும் இயந்திரபாகத்தில் ஏதோ கோளாறு இருந்தது என்று விசாரணையில் தெரியவந்தது. 'ஊட்டுக் குழாய்கள்'' என்று தொழில்நுட்பரீதியில் அழைக்கப்படும் குழாய்கள் நீண்டகாலமாகவே உள்ளுக்குள் அரிப்பு ஏற்பட்டதன் காரணமாக அவை பலஹீனம் அடைந்திருந்தன. இந்த விசாரணையின்முடிவு சர்க்காருக்கு வியப்பூட்டுவதாக இருந்தது; ஏனெனில், 1923 ஆம் வருட இந்திய கொதி கலங்கள் சட்டம், கொதிகலங்களின் ஆய்வாளர் இந்த*

---

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, 1943 ஜூலை 29, பக்கம் 176-77.

கொதிகலங்களை அவ்வப்போது பார்வையிட்டு, கொதிகலங்கள் சரியாக இயங்கும் நிலையில் உள்ளனவா என்று சோதித்துச் சான்றிதழ் வழங்க வேண்டுமெனக் கோருகிறது.

சிக்கனப்படுத்தும் கருவியின் ஊட்டுக்குழாய்கள் வேலை செய்ய லாயக்கற்றவை ஆகிவிட்டதைத் தெரிந்தும் சான்றிதழை வழங்க கொதிகலங்கள் ஆய்வாளர் எவ்வாறு முடிவுசெய்தார் என்ற கேள்வி எழுகிறது. ஒரு விஷயம் தெரியவந்தது. அதாவது இந்திய கொதிகலங்கள் சட்டத்தின் 28வது பிரிவின் கீழ்வெளியிடப்பட்ட விதிமுறைகளைப் பொறுத்தவரை, கொதிகலத்தில் இணைக்கப் பட்டுள்ள ஊட்டுக்குழாய்களையோ அல்லது வேறு எந்த துணைக் கருவியையோ சோதித்துப் பார்ப்பது கொதிகலங்கள் ஆய்வாளரின் பணியல்ல; இதன் காரணமாகவே, வெடித்த கொதிகலத்தின் விஷ யத்தில் ஊட்டுக்குழாய்கள்சோதனை செய்துபார்க்கப்படவில்லை என்பது தெரியவந்தது. இந்தக்குறையைப் போக்குவதற்குத்தான் இன்றைய திருத்த மசோதா கொண்டு வரப்பட்டுள்ளது.

இந்த மசோதா இரு திருத்தங்களைச் செய்கிறது. முதல் திருத்தம் பிரிவு இரண்டிற்கு சிசி என்ற ஒரு புதிய உட்பிரிவைக் கொண்டு வருகிறது; அது விளக்கம் அளிக்கும் உட்பிரிவு. 'ஊட்டு குழாய்'' என்ற புதிய பதத்தைச் சேர்த்து, ஊட்டுகுழாய் என்றால் என்ன என்பதை விவரிக்கிறது. இரண்டாவது, 'நீராவி குழாய்'' என்று அழைக்கப்படுவதன் பொருளை விரிவுப்படுத்துகிறது. இன்று நடப்பி லுள்ள சட்டத்தின்படி நீராவிக்குழாய் என்பது பிரதான குழாய் என்று மட்டுமே பொருள்படும்; திருத்தத்தின் கீழ், நீராவிக்குழாய், பிரதான குழாய் மட்டுமல்லாமல் ஊட்டுக்குழாயையும் உட் படுத்தும். இந்தத் திருத்தம் நிறைவேற்றப்பட்டதும், நீராவிக்குழாய் களைமட்டுமல்லாமல் ஊட்டுக்குழாய்களையும் சோதனை செய்து பார்ப்பது கொதிகல ஆய்வாளரின் கட்டாயக் கடமையாக்குவதற்கு பிரிவு 28ன் விதிமுறைகளைத் திருத்துவது சர்க்காருக்குச் சாத்திய மாகும். இதன் காரணமாகத்தான் இந்த மசோதா கொண்டுவரப் பட்டுள்ளது. ஐயா, இந்த மசோதா பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப் படலாம் என்று பிரேரபிக்கிறேன்.

திரு.தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரஹீம்): தீர்மானம் பிரேரபிக்கப்படுகிறது.

''இந்திய கொதிகலங்கள் சட்டம், 1923ஐ மேலும் திருத்து வதற்கான மசோதா பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்படுகிறது''

*திரு. ஸி.ஸி.மில்லர்:* ஒரு சிறுவிஷயம் பற்றி மாண்புமிகு உறுப்பினரிடமிருந்து விளக்கம் பெற விரும்புகிறேன். சிக்கனப் படுத்தும் கருவி என்றழைக்கப்படும் ஊட்டுகுழாய் அமைப்பு பற்றியது நான் கோரும் விளக்கம்; ஊட்டுக்குழாய் கொதிகலத்தின் பிரதான பாகத்துடன் சேர்க்கப்பட்டுள்ளது. ஆனால் அது அத்தியாவசியமான பாகமல்ல; ஊட்டுக்குழாய்களின் தொடர்பை துண்டிக்க முதலாளி ஒப்புக்கொண்டாலல்லாமல், ஊட்டுகுழாயில் சில குறைபாடு இருந்தால், கொதிகலம் நல்ல நிலைமையில் இருப்பதாக சான்றிதழ் வழங்க மறுப்பதற்கு ஆய்வாளருக்குச் சட்டப்படி உரிமை கிடையாது என்று நான் எடுத்துக்கொள்கிறேன்.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* ஒரு திட்ட வட்டமான பதிலை அளிப்பது எனக்குச்சாத்தியமல்ல என்பதை எனது நண்பர் புரிந்துகொள்ள வேண்டும்; எனினும் இந்த ஊகத்தை அவர் எழுப்பியதே சரியே.

*திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரஹீம்):* தீர்மானம் என்னவெனில்

> 'இந்தியக் கொதிகலங்களின் சட்டம், 1923ஐ மேலும் திருத்து வதற்கான மசோதா பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்படு கிறது.''

தீர்மானம் ஏற்கப்பட்டது. உட்பிரிவுகள் 2ம் 3ம் மசோதா வில் சேர்க்கப்பட்டன. உட்பிரிவு 1 மசோதாவில் சேர்க்கப்பட்டது.

தலைப்பும் பீடிகையும் மசோதாவில் சேர்க்கப்பட்டன.

*மாண்புமிகு டாக்டர்.பி.ஆர்.அம்பேத்கர்:* இந்த மசோதா நிறைவேற்றப்பட வேண்டுமென நான் பிரேரபிக்கிறேன்.

*திரு.தலைவர்: (மாண்புமிகு சர் அப்துல ரஹீம்):* தீர்மானம் வருமாறு:

''மசோதா நிறைவேற்றப்படட்டும்''

தீர்மானம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

# 16

## [1]மோட்டார் வாகனங்கள் (ஓட்டுனர்) திருத்த மசோதா

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்):*** ஐயா! நான் பின்கண்டவாறு பிரேரேபிக்கிறேன்:

> ''மோட்டார் வாகனங்கள் (ஓட்டுனர்) அவசரச் சட்டம், 1942 ஐ திருத்தும் இந்த மசோதாவைப் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளலாம்.''

இது ஒரு எளிமையான நடவடிக்கை. அவை நினைவில் கொள்வதுபோல், பல்வேறு அவசரச் சட்டங்கள் மூலம் பல்வேறு நபர்களின் சேவையை நாட்டின் பாதுகாப்புக்காக சர்க்கார் ஆணையின் மீது பெறப்பட்டிருக்கிறது.

***மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர் :*** மொத்தத்தில் எத்தனை பேர்?

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** என்னிடம் தகவல் இல்லை என அஞ்சுகிறேன்; ஆனால் பொதுவான உண்மை நன்கு தெரிந்ததே. அவற்றில் ஒன்று மோட்டார் வாகன ஓட்டுனர்களின் சேவை நாட்டுக்குப் பெறப்பட்டதாகும். அவசரச் சட்டம் நிறைவேற்றப்பட்டபிறகு, மற்ற அவசர சட்டத்தில், உள்ள ஒரு பிரிவு மோட்டார் வாகனங்கள் ஓட்டுனர் அவசரச் சட்டத்தில் இல்லை என்று கண்டுபிடிக்கப்பட்டது. ஒரு மோட்டார் வாகன ஓட்டுனரின் சேவை எந்த அதிகாரத்தின்படி கோரப்பட்டதோ அந்தசேவையின் தேவை பூர்த்தியானபின், சொந்தக்காரர் அவரை மீண்டும் வேலைக்கு வைத்துக்கொள்ள கோரும் எந்தப் பிரிவும் அவசரச் சட்டத்தில் இல்லை. இந்த இடைவெளியை நிரப்ப இந்த மசோதா கொண்டு வரப்படுகிறது. இந்தத் திருத்தத்தின் நோக்கங்கள் மூன்று தன்மை கொண்டது. சர்க்காரால் ஒரு ஓட்டுனரின் சேவை முடிவுக்குக்

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, 1943 ஜூலை 29, பக்கம் 178.

கொண்டு வரப்பட்டதும், அவரை மீண்டும் வேலைக்கு அமர்த்தும் கட்டாயக் கடமை முதலாளிக்கு இருப்பதை இந்தத் திருத்தம் அறிவிக்கிறது. இரண்டாவது, முதலாளியின் இந்தபொறுப்பு சம்பந்தமாக எழக்கூடிய சர்ச்சைகளுக்குத்தீர்வு காணுவதற்கான வழிமுறைகளை வகுக்கிறது; மாகாண சர்க்கார் சார்பில் நியமிக்கப்படும் அதிகாரி பற்றி இந்த மசோதா குறிப்பிடுகிறது; மூன்றாவாது, அந்த அதிகாரி பிறப்பிக்கும் ஆணையை நிறைவற்றாததற்காக அபராதம் விதிப்பது பற்றியும் இதில் கூறப்பட்டிருக்கிறது. ஒரு மோட்டார் வாகன ஓட்டுனருக்கு அளிக்கப்படும் வேலைவாய்ப்பு உரிமையின் வரம்புகளைப் பற்றி குறிப்பிட்டிருக்கின்றன மசோதாவின் மற்ற பிரிவுகள்; அவை இரு-தன்மை வாய்ந்தவை. முதலாவதாக, மீண்டும் வேலைக்கு சேர்க்கப்படும் உரிமையை கோருவதற்கு, அவர் ஆறுமாத காலத்திற்கு தொடர்ந்து பணியில் ஈடுபட்டிருக்க வேண்டும். இரண்டாவதாக, நாட்டுக்கான சேவையிலிருந்து விடுபட்ட இரண்டு மாதங்களுக்குள் அவர் மீண்டும் வேலைக்கமர்த்தப்படுவதற்கு விண்ணம் செய்திருக்க வேண்டும். இந்த நிபந்தனைகள் திருப்தி செய்யப்பட்டால், நாட்டு சேவைக்காக கோரப்பட்ட மற்றவர்கள் நிலையில் இவரையும் இந்த மசோதா வைக்கிறது. இந்த மசோதாபற்றி மேலும் சொல்ல எதுவுமில்லை. ஐயா! இந்த வார்த்தைகளுடன், மசோதாவை நான் பிரேரேபிக்கிறேன்.

*திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரஹீம்): தீர்மானம் வருமாறு:*

> 'மோட்டார் வாகனங்கள் (ஓட்டுனர்) அவசர சட்டம், 1942 ஐ திருத்தும் இந்த மசோதா பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்படுகிறது.''

*தீர்மானம் நிறைவேறியது.*

★ ★ ★

*திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரஹீம்) : பிரிவு 2.*

[1]**சர் கவாஸ்ஜி ஜஹாங்கிர்:** (பம்பாய் நகரம்: முகமதியர் நகர் பகுதி) ஐயா! நான் அறிந்தவரை இந்தப் பிரிவுதான் முக்கிய பிரிவு.

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, 1943 ஜுலை 29, பக்கம் 179-80.

யுத்தநோக்கங்களுக்காக சர்க்காரால் சேவைக்கு அழைக்கப்பட்ட மோட்டார்வாகன ஓட்டுனர்களுக்கு வேலைபெற்றுத் தருவது இந்த மசோதாவின் நோக்கம் என்று நான் காண்கிறேன்; முந்திய முதலாளி இரண்டு நிபந்தனையின்கீழ் அந்த மோட்டார்வாகன ஓட்டுனரை வேலைக்கு அமர்த்தும்படி செய்வதற்கான முயற்சி இது; அந்த நிபந் தனைகள் வருமாறு: முந்திய முதலாளியிடம் அவர் ஆறுமாதங்கள் வேலை பார்த்திருக்க வேண்டும்; அவரை வேலைக்கு அமர்த்த அவர் இரண்டு மாதங்களுக்குள் மனு செய்ய வேண்டும். இந்த விஷ யங்களை மாண்புமிகு உறுப்பினர் கவனத்தில் கொண்டு இதுபற்றி பரிசீலனைசெய்ய அவர் அவகாசம் எடுத்துக்கொள்ளலாம். இதன் மூலம் மக்களுக்கும் நாட்டுக்கும் மாண்புமிகு உறுப்பினர் நன்மை செய்தவராகிறார்.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** மதிப்பிற்குரிய எனது நண்பர் சர் கவாஸ்ஜி ஜஹாங்கிர் கூறிய கருத்துக்களைப் பொறுத்தவரை, முதலாளி தன்னுடைய முந்திய ஓட்டுனரை மீண்டும் வேலைக்குஅமர்த்திக்கொள்ளும்படிக் கோரப்படும்போது என்ன நிகழக்கூடும் என்பதைபற்றி அவர் உண்மையில் ஒரு பெரிய, கருப்புவர்ணத்தைப் பூசி பெரிதுபடுத்தியுள்ளார் என்று கூற நான் கடமைப்பட்டிருக்கிறேன். இந்தவிஷயம் ஒரு பெரிய தகராறுக்குரிய விஷயமாக மாறி, வழக்கறிஞர்கள் வைத்து வாதாடும் அறைக்குச் செல்லும் என்று அவர் கருதுவதாகத் தோன்றுகிறது. ஆனால் இது அத்தனை சர்ச்சைக்குரிய விஷயமாக இருக்காது என்று நம்புகிறேன். மாகாணசர்க்கார் இது சம்பந்தமாக ஒரு அதிகாரியை நியமிக்கும் விதியையும் நாம் ஏற்படுத்தியுள்ளோம். அந்த அதிகாரி இரு தரப் பாருக்கும் ஏற்புடையவராக இருப்பார் என்று கூறுவதில் எனக்குச் சந்தேகமில்லை.

***சர் கவாஸ்ஜி ஜவாங்கீர்:*** அதை நாங்கள் தெரிந்துகொள்வது எவ்வாறு?

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** மாகாண சர்க்கார் அதனால் சாத்தியமான அனைத்தையும் செய்யும் என்று நாம் நம்ப வேண்டும்.

***சர் கவாஸ்ஜி ஜஹாங்கீர்:*** ஒரு அதிகாரி நியமிக்கப்பட்டதும் விதிமுறைகள் மிக விரிவாக இருக்கும் என்பதையும், பிரச்சினை எவ்வளவு எளிதாக இருந்தாலும் இது எப்பொழுதும் கணிசமாக

அசௌகரியத்தை ஏற்படுத்தும் என்பதையும் மாண்புமிகு உறுப்பினர் அறிய மாட்டாரா?

**மாண்புமிகு டாக்டர்.பி.ஆர்.அம்பேத்கர்:** பிரச்சினையை விரைவாக தீர்த்துவைப்பதில் அதில் சம்பந்தப்பட்டவர்களுக்கு அசௌகரியத்தை ஏற்படுத்தாது, எனவே, இந்த மசோதாவை நிறுத்தி வைக்குமாறு என்னை நிர்ப்பந்திக்கும் அளவுக்கு இதில் எதுவும் இருக்காது என்றே நினைக்கிறேன். எழக்கூடிய விஷயங்கள் மிகச் சாதாரணமானவையாக இருக்குமெனக் கருதுகிறேன்; இரு சாரருக்கும் அதிக கஷ்டம் அல்லது கவலை ஏற்படுத்தாமல் அவற்றைத் தீர்த்துவைக்க முடியும்.

**திரு.தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரஹீம்):** தீர்மானம் இதுதான்:

> ''பிரிவு இரண்டு மசோதாவின் ஓர் அங்கமாக அமைந்துள்ளது.'' தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

பிரிவு 2 மசோதாவில் சேர்க்கப்பட்டது.
பிரிவு 3 மசோதாவில் சேர்க்கப்பட்டது.
பிரிவு 1 மசோதாவில் சேர்க்கப்பட்டது.

தலைப்பும் பீடிகையும் மசோதாவில் சேர்க்கப்பட்டன.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் மசோதா நிறைவேற வேண்டுமென பிரேரேபிக்கிறேன்.

**திரு. தலைவர் (மாண்புமிகு சர்.அப்துல் ரஹீம்):** தீர்மானம் வருமாறு:

'மசோதா நிறைவேறட்டும்.''

தீர்மானம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.



# 17

## [1]சுரங்க மகப்பேறு நல உதவி (திருத்த) மசோதா

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்: (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): ஐயா! நான் பின்கண்டவாறு பிரேரேபிக் கிறேன்:*

> *''சுரங்க மகப்பேறு நல உதவிச் சட்டம், 1941ஐ திருத்துவதற்கான மசோதா பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ள வேண்டுமென்று விழைகிறேன்.''*

இந்தத் திருத்தம் ஏன் அவசியமாகியுள்ளது என்பதை அவைக்கு நான் விளக்கிக் கூறினால் அது விரும்பத்தக்கதாக இருக் கும். சுரங்க மகப்பேறு நல உதவி சட்டத்தின்கீழ், சுரங்கத்தில் வேலை செய்யும் ஒரு பெண் 8 வாரகாலத்திற்கு நாள் ஒன்றுக்கு 8 அணா வீதம் மகப்பேறு நல உதவிபெற தகுதிபெறுகிறார். இந்த 8 வாரக் கால அளவு, ஒவ்வொன்றும் 4 வாரங்கள் கொண்ட இருபகுதிகளாகப் பிரிக்கப்படுகிறது. ஒரு பகுதி மகப்பேறுக்கு முந்தியும், மற்ற பகுதி மகப்பேறுக்கு பின்பும். மற்றபகுதி மகப்பேறுக்கு முந்திய 4 வாரங் கள் விருப்பப்படியான ஓய்வுக்கான கால அளவாகும். அந்தக் காலத்தில் ஒருபெண் வேலை செய்து முழுச்சம்பளத்தையும் பெற லாம்; அல்லது வேலைக்கு வராமல் இருந்து பேறுகால நல உதவியைப் பெறலாம். மகப்பேற்றைத் தொடர்ந்துள்ள நான்கு வாரங்களைப் பொறுத்தவரை, அது கட்டாயமாக ஓய்வு எடுக்கும் ஒரு கால அள வாகும்; அந்த சமயத்தில் ஒருபெண் கட்டாயம் வேலைசெய்வது சட்டத்தை மீறுவதாகும், குற்றமுமாகும்; பேறுகால நலனைப் பெறுவ தோடு மட்டும் திருப்தியடைய வேண்டும், மகப்பேறு நல உதவி சட்டம் 5வது பிரிவு பேறுகால நல ஊதியம் கொடுக்கப்படுவதற்கு வகை செய்கிறது; அந்தப் பிரிவின் 9வது வரியில் இப்பொழுதுள்ள சொற்களை மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் கவனிப்பார்களாயின், 'வேலைக்கு வராமல் இருந்தால்'' என்று இருப்பதைக் காண்பார்கள். இந்தச் சொற்கள் குறிப்பாக 'வேலைக்கு வராமல் இருப்பது'' என்னும்

---

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, 1943 ஜூலை 29, பக்கம் 180.

சொற்கள் தெளிவற்றவையாக இருப்பதாகச் சொல்லப்பட்டது. 'வேலைக்கு வருவதிலிருந்து' என்ற சொற்கள் ஒரு ஐயப்பாட்டை ஏன் கொண்டு வருகிறது என்று கூறப்பட்டது என்பதைச் சுருக்கமாக விளக்குகிறேன்.

சுரங்க உரிமையாளரால் சுரங்கம் ஒரு குறிப்பிட்ட நாளில் மூடப்பட்டிருந்தது என வைத்துக்கொள்வோம். அப்போது மகப்பேறு நலஉதவி பெற அந்தப் பெண் உரிமை பெறுகிறாளா? 'வேலைக்கு வராமல் இருப்பது' என்ற சொற்களின் பொருள், வேலை நடைபெறு கிறது என்று பொருள்படுகிறது; ஆனால் சுரங்கம் மூடப்படும்போது, அந்த வேலை நடைபெறவில்லை; எனவே 'வேலைக்கு வருவதி லிருந்து' என்ற சொற்கள் தெளிவற்ற நிலையைத் தோற்றுவித்துள் ளன. பல்வேறு மாகாணங்களில் நிறைவேற்றப்பட்ட பல்வேறு பேறுகால நலஉதவிச் சட்டங்களோடு, 5வது பிரிவை ஒப்பிட்டுப் பார்த்தேன்; அவற்றில் 'வேலைக்கு வருவதிலிருந்து' என்ற சொற்கள் இடம்பெறவில்லை. இந்தச் சொற்களை எடுத்து விடுவதன் மூலம் இந்ததெளிவற்ற நிலையை போக்கவேண்டியது அவசியமாகிறது. இந்தத் திருத்தத்தை இரு வேறுபட்ட திருத்தங்கள் மூலம் நிறை வேற்ற முயற்சிக்கப்படுகிறது. ஒன்று, எந்த சொற்கள் ஐயப்பாட் டினை ஏற்படுத்தினவோ அவற்றைப் பிரிவு 5இலிருந்து அகற்றி விடுவது! மகப்பேற்றிற்கு முந்தின நான்கு வாரக் காலத்தில், ஒவ் வொரு நாளும் மகப்பேறு நல உதவி பெற பெண் உரிமைபெற்றுள் ளார்' என்ற வாசகத்துடன் அந்தப் பிரிவைப் படிக்க வேண்டும். இரண்டாவதாக, பேறுகாலத்திற்கு முந்தின நான்கு வார காலம் விருப்பப்படி ஓய்வு எடுத்துக்கொள்ளும் காலம், அந்த சமயம் அவர் வேலைக்குச் சென்று முழுச் சம்பளத்தையும் பெறுவதைத் தேர்ந் தெடுக்கலாம்; அல்லது வீட்டில் இருந்து கொண்டே பேறுகால நலனைப் பெறுவதோடு திருப்தியடையலாம் என்று ஏற்கனவே கூறினேன். ஆனால் இந்த நான்கு வார காலத்தில் அவர் வேலைக்குச் சென்றால் அப்பொழுது, எந்தப் பேறுகால உதவி பெறவும் அவர் உரிமை பெற மாட்டார் என்ற உப-பிரிவைச் சேர்த்துள்ளோம். இந்த வார்த்தைகளோடு, நான் பிரேரபிக்கிறேன்:

திரு. தலைவர் (மாண்புமிகு சர். அப்துல் ரஹீம்) :

'சுரங்க மகப்பேறு நல உதவிச் சட்டம், 1941 ஐ திருத்து

வதற்கான மசோதாவைப் பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ள வேண்டுமென விழைகிறேன்.''

தீர்மானம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.
பிரிவு 2 மசோதாவுடன் சேர்க்கப்பட்டது.
பிரிவு 1 மசோதாவுடன் சேர்க்கப்பட்டது.

தலைப்பும் பீடிகையும் மசோதாவுடன் சேர்க்கப்பட்டன.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஐயா, இந்த மசோதாவை நிறைவேற்ற வேண்டுமென பிரேரேபிக்கிறேன்.

திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரஹீம்): தீர்மானம் பிரேரேபிக்கப்படுகிறது.

'மசோதா நிறைவேறட்டும்.''



# 18

## [1]போர்க் காயங்கள் (இழப்பீட்டுக் காப்பீடு) மசோதா

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): ஐயா! பின்கண்ட தீர்மானத்தைப் பிரேரே பிக்கிறேன்:*

> 'போர்க்காயங்களுக்கு உள்ளான தொழிலாளர்களுக்கு இழப்பீடு வழங்கும் பொறுப்பை முதலாளிகள் மீது சுமத்தவும் இந்த சுமையை ஈடுசெய்ய முதலாளிகளின் ஒப்பீட்டிற்கு தெரிவுக் குழு அறிவித்துள்ளபடி வகை செய்யவுமான மசோதாவை பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளலாம்''.

இந்த மசோதா சபையின்முன் இருந்தபோது, இந்த மசோதா வின் அடிப்படைக் கோட்பாடுகள் என்னால் ஏற்கனவே விளக்கப் பட்டன. எனவே அதே விஷயத்தை மீண்டும் எடுத்துக் கூறுவது அவசியமில்லை. மூல மசோதாவில் தெரிவுக்குழு செய்த கோட் பாட்டின் மாற்றங்களை நான் சுருக்கமாக எடுத்துரைக்க விரும்பு கிறேன்.

தெரிவுக்குழு மூலமசோதாவில் பல மாற்றங்களை செய் திருந்த போதிலும் கோட்பாடு சம்பந்தப்பட்ட நான்கு விஷயங்கள் கருத்தில் கொள்ளப்பட வேண்டியவை என்பதை அவை கவனித் திருக்கும். முதலாவதாக, இந்த மசோதாவால் பயனடையதக்க (பய னடையும் தகுதிபெற்ற) தொழிலாளர்களின் வகையை விரிவுபடுத்தி யுள்ளது; இப்பொழுது தேயிலைத் தோட்டத்தில் வேலை செய்யும் தொழிலாளர்களையும் உட்படுத்தியுள்ளோம். இரண்டாவது மாற்றம் காப்பீட்டு நிதிக்கு செலுத்த வேண்டிய முதலாவது தவணையின் விகிதம் சம்பந்தப்பட்டது. ஒரு முதலாளியின் சம்பளப்பட்டி யலில் ரூ.100க்கு எட்டு அணா என்ற விகிதத்தை மூல மசோதா வில் சர்க்கார் அனுமதித்திருந்தது; எட்டணா விகிதத்தை நான்கு அணாவாக தெரிவுக் குழு குறைத்துள்ளது. மூன்றாவது மாற்றம்,

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுப்பு III, 1943 ஆகஸ்ட் 13, பக்கம் 701.

காப்பீட்டு நிதியில் செலவு செய்யப்படாமல் மீதியாகியுள்ள தொகையை உபயோகிப்பது பற்றியது. மசோதாவில் முதலில் இருந்த யோசனை என்னவெனில், நிதியில் மீதியாகியுள்ள தொகை பொதுவருவாய் நிதியில் சேர்க்கப்பட்டு சர்க்காரின் பொதுநோக்கங் களுக்காகப் பயன்படுத்துவதாகும். தெரிவுக்குழு ஒரு மாற்றம் செய் துள்ளது; இந்த நிதிக்கு பங்களிப்பு செய்த முதலாளிகளுக்கு அவர் களின் பங்களிப்பு விகிதத்திற்கு ஏற்ப மீதித்தொகையைத் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும் என்பதாகும் அது. நான்காவது மாற்றம் ஒப்பந்த தொழிலாளர் பற்றியது. முதலாளி ஒரு ஒப்பந்தக்காரரை ஏற்பாடு செய்து, அந்த ஒப்பந்தக்காரர்தான் ஒப்பந்தக்காப்பு எடுத்து வேலையை முடிக்க தொழிலாளர்களை வேலைக்கு அமர்த்து கிறார் எனில், அந்த ஒப்பந்தக்காரரை ஏற்பாடு செய்கிற முதலாளி இழப்பீடு தொகை கொடுப்பதற்கு பொறுப்பாளியாக இருப்பார்.

செய்யப்பட்ட மாற்றங்களில் தெரிவுக்குழு பரிசீலித்த கோட் பாடுகள் இவை. அவை காண்பதுபோல் இந்த மசோதாவிற்கு பல திருத்தங்கள் பட்டியலில் உள்ளன. சிலதிருத்தங்கள் செயல்முறை சம்பந்தப்பட்ட விஷயங்கள்; தெரிவுக்குழுவின் பரிசீலனைக்குப் பின் வந்த மசோதாவிற்கு எதிராக எழுந்த விமர்சனங்களை எதிர் கொள்வதற்காக பிரதானமாக அவற்றை சர்க்கார் முன்வைத்துள்ளது; இந்த திருத்தங்கள் பற்றி அதிகம் வாதம் இருக்காது என்று நம்பு கிறேன்.

ஐயா! இந்த மசோதாபற்றி மேலும் நான் எதுவும் கூறுவது அவசியமென்று நினைக்கவில்லை. எனவே தீர்மானத்தை பிரேரே பிக்கிறேன்.

**திரு.தலைவர்** (மாண்புமிகு சர் அப்துல் ரஹீம்): தீர்மானம் பிரேரேபிக்கப்படுகிறது.

> போர்க்காயங்களுக்குள்ளான தொழிலாளர்களுக்கு இழப்பீடு கொடுக்கும் பொறுப்பை முதலாளிகள் மீது சுமத்தவும், 'தெரிவுக் குழு குறிப்பிட்டுள்ள படி, இந்தச் சுமையை ஈடுசெய்ய முதலாளிகளின் காப்பீட்டுக்கு வகை செய்யவுமான மசோதா பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்படுகிறது.''

★ ★ ★

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** எந்த விரிவான பதிலும் தேவைப்படுத்துகிற மாதிரி இந்த விவாதத்தில் பங்குபெற்ற மதிப்பிற்குரிய உறுப்பினர்களால் எதுவும் எழுப்பப்பட்டது என்று நான் கருதவில்லை. கூறப்பட்ட விஷயங்களை நான் பரிசீலிக்கும் போது, இந்த மசோதா முதலாவதாக படிக்கப்பட்டபோது பொருத்த மாக இருந்திருக்கக்கூடிய சில விஷயங்கள் உள்ளன. இந்த விஷ யங்கள் எழுப்பப்பட்டதை நான் ஞாபகத்தில் வைத்திருக்கிறேன்; அந்தக்கட்டத்தில் இவற்றுக்கு நான் பதிலளிக்க முயன்றதும் எனக்கு நினைவிருக்கிறது. எனவே, மீண்டும் அவற்றைப் பற்றி விவாதிப் பதற்காக மேலும் அதிக நேரத்தைச் செலவிட நான் விரும்பவில்லை.

இந்த மசோதாவின் சில குறிப்பிட்ட பிரிவுகள் பற்றியும், நிகழ்ச்சி நிரலிலுள்ள திருத்தங்கள் பற்றியும், நேரத்தை சிக்கன மாக்கும் நலம் கருதி, இந்தக் கட்டத்தில் என் உரையின் எந்தப் பகுதி யையும் செலவழிக்காமல் இருப்பது சிறந்ததாகுமென நினைக் கிறேன். இந்தத்திருத்தங்கள் பிரேரேபிக்கப்படும் சமயத்தில் இந்த விஷயம் எடுத்துக்கொள்ளப்பட்டால், உகந்ததாகவும் சரியானதாக வும் பொருத்தமானதாகவும் இருக்கும்.

[1]**திரு. தலைவர்** (மாண்புமிகு சர்.அப்துல் ரஹீம்): திருத்தம் பிரேரேபிக்கப்படுகிறது.

> ''மசோதாவின் ஆறாவது விதியைக் கீழ்க்கண்டவாறு மாற்றி யமைக் கவும்:
>
> ''தொழிலாளர் இழப்பீடுச் சட்டம், 1923 பொருந்துகிற எல்லாத் தொழி லாளர்களுக்கும் இந்தச் சட்டம் பொருந்தும்.''

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, இந்தத் திருத்தத்தை நா எதிர்த்தாக வேண்டியவனாக இருக்கிறேன். எனது இந்த எதிர்ப்பு தொழிலாளர்பால் அனுதாபம் இல்லாததை அடிப் படையாகக் கொண்டதல்ல என்பதை எனது மதிப்பிற்குரிய நண்பர் திரு. ஜோஷி புரிந்து கொள்வார் என்று நினைக்கிறேன்.

**திரு. என்.எம்.ஜோஷி:** அப்படி நான் கூறவில்லை.

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுப்பு III, 1943 ஆகஸ்ட் 13, பக்கம் 710.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அவரது தீர்மானம் ஏற்றுக்கொள்ளப்பட்டால், இந்த மசோதாவின் அனுகூலத்தை பெற உரிமை பெற்ற தொழிலாளர் எண்ணிக்கையில் நடைமுறையில் பெரிய அளவில் குறைவு ஏற்படும். ஐயா, முதலாவதாக, திரு. ஜோஷி கூறியதுபோல, இந்தவிஷயத்தில் நாம் ஜாக்கிரதையாகச் செயல்படவேண்டும்; ஏனெனில், இந்தப் பொறுப்பு சுமத்தப்படக் கூடிய, ஸ்தாபனரீதியாக உள்ள முதலாளிகள் உள்ளனர் என்பதை ஆதாரமாகக் கொண்டதுதான் இந்தச் சட்டம்; தவணைகளை வசூலிக்கும் பிரச்சினை இது; தெருவில் நடந்துபோகும் மக்களிடமிருந்து தவணைகள் வசூலிக்க முடியாது. ஒரு ஸ்தாபனம் இருக்கவேண்டும். அப்பொழுதுதான் இந்தப் பொறுப்பை பிணைக்க முடியும்; எனவே, இந்த மசோதாவிற்கு உட்படுத்தப்படும் எண்ணிக்கையை பற்றி ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். இரண்டாவதாக கஷ்டம் என நான்கருதுவது என்னவெனில், உண்மையில் இந்த மசோதாவில் திரு.ஜோஷியின் திருத்தத்தை ஏற்றுக்கொண்டால் இப்பொழுது உட்படுத்தியிருக்கிற தொழிலாளர் பிரிவுகளை விரிவாக்காது. தொழிலாளர் இழப்பீடுச் சட்டத்தை நான் மிக ஜாக்கிரதையுடன் பரிசீலித்தேன்; மொத்தத்தில் ஒன்பது வேறுபட்ட வகையான தொழிலாளர்களுக்கு இந்தச்சட்டம் பயன்படுகிறது. இந்தச்சட்டத்தை எந்த பிரிவுகளைச்சேர்ந்த தொழிலாளர்களுக்குப் பயன்படுத்த உத்தேசித்துள்ளோமோ, அவற்றை தொழிலாளர் இழப்பீடுச் சட்டம் எந்த பிரிவுகளைச்சேர்ந்த தொழிலாளர்களுக்கு பயன்பட்டு வருகிறதோ அவற்றோடு ஒப்பிட்டுப் பார்த்தால், ஒரே ஒரு வித்தியாசம் மட்டுமே இருப்பதாக நான் காண்கிறேன். தொழிலாளர் இழப்பீடுச் சட்டம் கட்டிட, பொதுத்துறைப் பணிகளுக்கு பயன்படுகிறது. இந்தப் பிரிவுத் தொழிலாளர்களுக்கு மட்டுமே இப்போதைய மசோதா பயன்தராது. மற்ற பிரிவினர் பொறுத்தவரை இரண்டுமே தொழிலாளர் இழப்பீட்டுச் சட்டமும் இந்த மசோதாவும் சமநிலையில் உள்ளன. தொழிலாளர் இழப்பீடுச் சட்டத்தை, அது உள்ளபடியே, பயன்படுத்தினோமென்றால், அத்துடன் தொழிலாளி பற்றி மேற்படிச் சட்டத்தில் போலவே விவரிக்க வேண்டிவரும் என்பது தெளிவு. எனது நண்பர் திரு.ஜோஷிக்குத் தெரியும் தொழிலாளர் காப்பீடுச் சட்டத்தில் தொழிலாளர் பற்றி கொடுத்துள்ள விவரிப்பு ஒரு வட்டத்திற்குட்பட்டதும் மட்டுப்படுத்துவதுமாகும் என்பது. தொழிலாளர் இனத்தில் அவ்வப்போது வேலைக்கு அமர்த்தப்படும் தொழிலாளர்களைச் சேர்த்துக் கொள்வதில்லை. இந்த மசோதா உட்படுத்தும் எந்த ஒரு குறிப்பிட்ட தொழிலிலும் அவ்வப்போது வேலைக்கு அமர்த்தப்படுபவர்களின் எண்ணிக்கை என்ன என்பதை ஒருவர் தெரிந்துகொள்ள

முடியாது. குமாஸ்தாக்கள் அந்தஸ்தில் உள்ளவர்களின் பிரிவை தொழிலாளர் இழப்பீடுச்சட்டம் விளக்குகிறது என்பதையும் மதிப் பிற்குரிய எனது நண்பர் திரு.ஜோஷி ஒன்றை நினைவில் கொள்ள வேண்டும். நிரந்தரமில்லாத சிப்பந்திகளையோ குமாஸ்தா அந்தஸ் தில் வேலைக்கு அமர்த்தப்பட்டிருப்பவர்களையோ இந்த மசோதா விலக்கவில்லை. திரு.ஜோஷி ஒன்றை ஒப்புக்கொள்வார் என்று நினைக்கிறேன்; அதாவது சில முக்கியமில்லாத தொழிலாளர் பிரிவு விடப்பட்டிருந்தாலும், தொழிலாளர் இழப்பீடுச் சட்டத்தில் உள்ளதைவிட, தொழிலாளர்கள் பற்றிய விவரிப்பு மிக விரிவானது. இந்த வாக்குறுதியின் மீது, மதிப்பிற்குரிய எனது நண்பர் இந்த திருத் தத்தை வாபஸ் பெறுவார் என நம்புகிறேன்.

திரு. தலைவர் (மாண்புமிகு சர்.அப்துல் ரஹீம்): தீர்மானம் வருமாறு:

'மசோதாவின் ஆறாவது விதியைக் கீழ்க்கண்டவாறு மாற்றயமைக்கவும்:

''6. தொழிலாளர் இழப்பீடுச் சட்டம் 1923, பொருந்துகிற எல்லாத் தொழிலாளர்களுக்கும் இந்தச் சட்டம் பொருந்தும்.''

தீர்மானம் ஏற்கப்படவில்லை.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்: எனது அடுத்த திருத்த எண்5; அது பிரிவு 3ஐப் பொறுத்துள்ளது; அதைத் தள்ளி வைக்க வேண்டுமென அவை இப்பொழுது ஒப்புக்கொண்டிருக் கிறது.

திரு. தலைவர் (மாண்புமிகு சர்.அப்துல் ரஹீம்): இது மற்ற திருத்தத்தின் மாற்றீடா? இந்தத் திருத்தம் நிறைவேறினால், அப் பொழுது பிரிவு 3க்கான 3வது திருத்தம் தேவையற்றதாகி விடும் என்று கருதலாமா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இந்தத் திருத் தத்தை இப்பொழுது பிரேரேபிக்கிறேன்:

''மசோதாவின் பிரிவு 6-ன் உப-பிரிவு(2) நீக்கப்படும்.''

இந்தத் திருத்தத்திற்கு ஆதரவாக அதிக விளக்கம் எதுவும் தேவையில்லை. அவை ஞாபகத்தில் கொண்டால், இந்தப் பிரிவு, அதன் இப்பொழுதுள்ள வாசகம், ரயில்வே ஊழியர்களையும் விலக்குகிறது. இந்த மசோதாவின் முதல் வாசிப்பின்போது, இந்தப் பிரிவுப் பணியாளர்களுக்கு இந்த சட்டம் பொருந்தாது என்றாலும், தங்களின் சொந்த ஊழியர்களுக்கு இழப்பீடு கொடுப்பதற்கு சர்க்கார் போதுமான ஏற்பாட்டைச் செய்துள்ளது என்று நான் அவைக்கு எடுத்துச்சொன்னேன். துரதிருஷ்டவசமாக அவையின் சில உறுப்பினர்களுக்கு எனது உரை திருப்தியளிக்கவில்லை என்பது தெளிவு; நிர்வாக ரீதியில் பொறுப்பை எடுத்துக் கொள்வதற்குப் பதிலாக சட்ட ரீதியில் பொறுப்பு சுமத்தப்பட வேண்டுமென உறுதியாக உள்ளனர். ஐயா, இந்த ஆலோசனையை ஏற்றுக்கொள்வது சரி என்று நான் கருதினேன்; எனவே என்பெயரில் இருக்கும் பிரிவு 3க்கு திருத்தத்தை பின்பு நான் பிரரேபிக்கிறேன்.

**திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரஹீம்):** திருத்தம் பிரேரேபிக்கப்படுகிறது.

'இந்த மசோதாவின் பிரிவு 6ன் உட்பிரிவு (2) நீக்கப்படும்''

[1]**திரு.தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரஹீம்):** தீர்மானம் வருமாறு:

'பிரிவு 6, திருத்தப்பட்ட வடிவில், மசோதாவின் ஒரு பகுதியாகிறது.''

தீர்மானம் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

பிரிவு 6, திருத்தப்பட்ட வடிவில், மசோதாவுடன் சேர்க்கப் படுகிறது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் பின்வருமாறு முன்மொழிகிறேன்:

'மசோதாவின் பிரிவு 7ன் உபபிரிவு 5ன் பகுதி (G)யுடன் கீழ்க்கண்ட வாசகம் சேர்க்கப்படும்.

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, 1943 ஆகஸ்ட் 13, பக்கம் 712.

'முன்பணமாகக் கொடுத்த தொகையை திருப்பிக் கொடுத்த பின் நிதியில் சேர்க்க வேண்டிய மதிப்பீட்டில், முதலாவது தவணையை விட முறையாகச் செலுத்தப்படும் தவணையின் விகிதம் அதிகமாக இல்லாதிருந்தால், பிரிவு II, உப-பிரிவு (2) கீழ் நிதிக்கு சர்க்கார் கொடுத்த தொகை பதினைந்து லட்சம் வரை இருக்கும்''.

இந்தக் காப்பு வாசகத்தின் நோக்கம் தொழிலதிபர்களைப் பிரதிநிதித்துவப்படுத்தும் உறுப்பினர்களின் அச்சத்தைப் போக்கவே எந்தநோக்கத்திற்காக உத்தேசிக்கப்பட்டதோ அதற்கு நடைமுறை யில் அவசியமில்லாதபோது முதலில் இந்த பிரிவில் இருந்த வாச கத்தை நாங்கள் பயன்படுத்தி எந்தத் தொகையையும் பெற்று நிதியை வளர்ப்போம் என்று அவர்கள் அச்சம்கொண்டனர். இந்த மசோதா வால் தாங்கள் பெறும் அதிகாரத்தை தேவையில்லாத நிதியைச் சேர்த்து அதன் மூலம் முதலாளி களுக்கு ஒரு மாதிரியான சிரமத்தை ஏற்படுத்துவது சர்க்காரின் நோக்கமல்ல என்று முன்பு அவையில் வாக்குறுதி அளித்தேன். அச்சமயமும் எனது அறிக்கை அவர்களைத் திருப்திப்படுத்தவில்லை. இந்த பிரிவை சேர்ப்பதன் மூலம் அவர் களுக்குத் திருப்தியளிப்பது சிறந்தது என்று நான் எண்ணினேன். நிதியின் மீதியில் பதினைந்து லட்சம் ரூபாய் என்று வரம்பு ஏற் படுத்தப்பட்டுள்ளதைக் காணமுடியும்; வரி விதிப்பதற்கான சர்க் காரின் அதிகாரம் கண்டு பொறாமைப்படுபவர்களை திருப்திப் படுத்த எந்த உணர்வோடு இது செய்யப்படுகிறதோ அந்த உணர் வில் அவர்கள் இந்தத் திருத்தத்தை ஏற்றுக் கொள்வார்கள் என்று நினைக்கிறேன். ஐயா, திருத்தத்தை பிரேரேபிக்கிறேன்.

* * *

[1]திரு.தலைவர் (மாண்புமிகு அப்துல ரஹீம்): திருத்தம் பிரேரே பிக்கப்படுகிறது.

'இந்த மசோதாவின் பிரிவு9ன் உப-பிரிவு 2ல், 2வது வரி யில் வரும், 'தவறினால்' என்ற சொல்லுக்கு பின்னால் 'தேவைப் படும் அறிவிப்புக்கொடுத்து'' என்ற சொற்கள் சேர்க்கப்பட வேண்டும்.

---

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, 1943 ஆகஸ்ட் 13, பக்கம் 713.

*மாண்புமிகு டாக்டர்.பி.ஆர். அம்பேத்கர்:* ஏதாவது, அறிவிப்பு கொடுக்க வேண்டியது அவசியம் என்ற நியாயத்தை நான் புரிந்து கொள்கிறேன்; ஆனால், அத்தகைய அறிவிப்புக்கு மசோதாவில் வழிவகை செய்யப்பட்டிருப்பதாகத் தோன்றாவிடினும், அதற்கு ஒரு ஏற்பாடு செய்துள்ளது என்பதை மதிப்பிற்குரிய உறுப்பினருக்குத் தெரிவித்துக் கொள்கிறேன். பிரிவு 9ல் உள்ள முக்கியச் சொற்கள் 'திட்டத்திற்கு ஏற்ப' என்பதை அவர் புரிந்து கொள்வார். எனது நண்பர் பிரிவு 9- ஐ புரட்டி திட்டத்தின் விதி முறைகளைப் பார்ப் பாரேயானால் - இந்த திருத்தத்தை அவர் முன் வைத்ததற்கு இது தான் காரணம் என வருந்துகிறேன் -- அந்த ஏற்பாடு இருப்பதை அவர் காண்பார்; நகல் திட்டம் பிரிவு 1 (VIII) (ஏ) 15 நாள் அறிவிப்பு கொடுக்க வகைசெய்கிறது. இந்த தகவலின்பேரில் எனது நண்பர் அவரது திருத்தத்தை திரும்பப் பெறுவார் என எண்ணுகிறேன்.

[1]*திரு. தலைவர் (மாண்புமிகு சர். அப்துல் ரஹீம்): திருத்தம் பிரேரேபிக்கப்படுகிறது:*

> ''மசோதாவின் பிரிவு 9ன் உட்-பிரிவு (2)ல், நாலாவது வரி யில் உள்ள 'தண்டிக்கப்படத்தக்கது' என்ற சொல்லுக்குபின் 'கொடுக்கப்பட வேண்டிய தேதியிலிந்து 30 நாட்கள் கருணைக் காலத்திற்கு பின் என்ற சொற்கள் புகுத்தப்பட வேண்டும்.''

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* ஐயா! திருத் தத்தை நான் எதிர்க்கிறேன். எனது நண்பர் சொல்ல விரும்புகிற விஷயத்தை ஏற்றுக்கொள்வதற்கான அவசியம் எதையும் நான் காணவில்லை. அவைக்கு நான் சுட்டிக்காட்டியபடி, அறிவிப்பிற்கு நாம் ஏற்கனவே வழி செய்துள்ளோம்; அது 15 நாட்கள் கால அள வாகும். ஒரு பிடிவாதமான முதலாளிக்கு மேலும் அதிக கால அளவைக் கொடுக்கும் அதிகப்படியான சலுகைக்காக கற்றறிந்த எனது நண்பர் ஏன் வாதிட வேண்டுமென்பதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. அறிவிப்புக்கு நமது திட்டத்தில் நாம் வழி வகுத்திராவிடில் கருணைக்காலம் கோருவதற்கான நியாயத்தை நான் புரிந்துகொண்டிருக்க முடியும். எனது கற்றநண்பர் என்னைக் கூற அனுமதித்தால், அறிவிப்புக் காலத்திற்கும் சலுகை காலத்திற்கும் எந்த வேறுபாட்டையும் உண்மையில் நான் காணவில்லை.

---

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, 1943 ஆகஸ்ட் 13, பக்கம் 713.

*திரு. ஹுசேன் பாய் ஏ.லால்ஜி: ஐயா, மதிப்பிற்குரிய எனது நண்பர் திரு.அப்துல் ரஷீத் சௌதரி அளித்த வேண்டுகோள் நேர்மையானது என்று நான் நினைக்கிறேன்.... என்ன செய்த போதிலும், என்ன கூறிய போதிலும், தொழில் வாழ்வில், நாம் அதிக மான பேர்களை உள்ளே கொண்டுவருவதற்கு, ஏதேனும் ஏற்பாடு செய்ய வேண்டியுள்ளது. 15 நாள் அறிவிப்பும் 15 நாட்கள் சலுகை காலமும் அனுமதிக்கப்பட்டால் அது பெரிய விஷயமாகாது. 'அறி விப்புக் காலம்' என்பதை விட மொத்தத்தில் கருணைக்காலம் 30 நாட்கள் என்று கூறுவது எனக்குப் பிடிக்கிறது; இதற்கான எளிய காரணம், 15 நாட்கள் கருணை நாட்கள் என்பது சர்க்கார் தங்கள் கருணையில் கொடுக்கக்கூடிய ஒரு விஷயமேயாகும். எனவே, இந்தப் பரந்த உலகில் இந்தியாவில் மற்றவர்களைவிடநாம் அதிகம் நேர்மையற்றவர்கள் என்று நம்பும் நண்பர்களால் இவர் வழிநடத்தப்பட மாட்டார் என நியாய உணர்வுடன் நம்புகிறேன்.*

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஐயா, இந்தத் திட்டத்தில் கருணைக்காலம் 15 நாட்களை அனுமதிக்கத் தயாராக இருக்கிறேன்.*

★ ★ ★

*திரு. தலைவர் (மாண்புமிகு சர்.அப்துல் ரஹீம்): தீர்மானம் வருமாறு:*

*'மசோதாவின் பிரிவு 11ன் உப-பிரிவு (1)ல் பின்கண்ட பிரிவு சேர்க்கப்படுகிறது:*

*'தன்னால் பணிக்கு அமர்த்தப்பட்டுள்ள தொழிலாளர் களுக்கு இழப்பீடு கொடுப்பதற்கு மன்னர்பிரான் சர்க்காருக்கு எந்தப்பொறுப்பையும் நிறை வேற்ற நிதியிலிருந்து தொகை எதுவும் கொடுக்கப்படாமலிருந்தால்.''*

*தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.*

*[1]மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கார்: ஐயா, நான் பின்வருமாறு பிரேரேபிக்கிறேன்:*

---

*1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, 1943 ஆகஸ்ட் 13, பக்கம் 714-15.*

''மசோதாவின் 11ன் உபபிரிவு(3) பதிலாக கீழ்க்கண்டவாறு மாற்றீடு செய்யப்படுகிறது:

(3) நிதியிலிருந்து கொடுக்கப்பட வேண்டிய எல்லாத் தொகை களையும் கொடுக்கப்பட்டு கணக்குத் தீர்க்கப்பட்டு, நிதியிலுள்ள மீதித்தொகை நிதியாக அமைக்கப்பட்டு தொழிலாளர் நலனுக்காக, பயன்படுத்தப்பட வேண்டும்; மத்திய சர்க்காரால் நிர்வகிக்கப்பட வேண்டும்.

நான் சுட்டிக்காட்டியதுபோல், இந்த மசோதா கொண்டு வரப்பட்டபோது ஆரம்ப நிலை என்னவெனில், மீதமுள்ள தொகை சர்க்காரின் பொது நோக்கங்களுக்காகப் பயன்படுத்தப்பட வேண்டும், பொதுநிதியில் இணைக்கப்படவேண்டும் என்பதாக இருந்தது தெரிவுக் குழு இந்த பிரிவை மாற்றியது; மீதித் தொகை ஏதாவது இருந்தால் இந்த நிதிக்கு பங்களித்த முதலாளிகளுக்கு அவர்கள் அளித்த விகிதத்திற்கு ஏற்ப அது கொடுக்கப்பட வேண்டும் என்று மாற்றியது. நான் இப்பொழுது முன்வைத்துள்ள திருத்தம் இரண்டு நிலைகளுக்கும் நடுவழியிலுள்ள திருத்தமாகும். இந்த நிதி சர்க்காரால் பொதுநோக்கங்களுக்காக பயன்படுத்தக்கூடாது என்றும் முதலாளி களுக்கு திருப்பித் தரக்கூடாது என்றும் இது ஆலோசனை கூறுகிறது; ஒரு அறக்கட்டளை நிதிபோன்று அது பாவிக்கப்பட்டு, தொழிலாளர் நலனுக்காக மத்திய சர்க்காரால் பயன்படுத்தப்பட்டு நிர்வகிக்கப் படவேண்டுமென்று தெரிவுக்குழு கூறுகிறது. இது ஒரு நியாயமான சமரசம் என்றும் அவை தயக்கம் எதுவுமின்றி ஏற்றுக்கொள்ளும் என்றும் கருதினேன்; ஆனால், இந்த திருத்தம் வகுத்துக் காட்டிய நிலை பற்றி திருப்தியடையாத இந்த அவையில் சிலர் இருக்கிறார்கள் என்று எனக்குத் தோன்றுகிறது. என் பெயரில் நிற்கும் இந்தத் திருத் தத்தை நான் நியாயப்படுத்தும் அடிப்படைகள் இவை: முதலாவ தாக, காப்பீட்டுநிதிக்கு முதலாளிகள் எந்தெந்த பங்கை செலுத்து கிறார்களோ, நிதி இலாகாவால் அது வருவாய் என்று கருதப்பட்டு, நிதிஇலாகா வரவுவைத்துக்கொள்ளும் என்பதை மறுக்க முடியாது. சாதாரண சூழ்நிலைமைகளில், வருமான வரியாகவும் உப வரியாக வும் இந்திய சர்க்காருக்குப்போகவேண்டும். எனவே, இந்த நிதி யின் மிகப் பெரும்பகுதி உண்மையில் அவர்களுடையது என்று உத்தேசிக்கப்பட்டதை, அவர்கள் பெற்று பயன்படுத்துவர் என்று கூறுவதற்கு எனக்கு தயக்கம் எதுவும் இல்லை. இந்த நிலையை ஆட்சேபிப்பதற்கு முக்கியமானது எதுவும் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. ஆனால் நான் குறிப்பிட்டபடி, அந்த நிலை யிலிருந்து பின்வாங்கி விட்டேன்; இந்த நிதியை பொதுவருவா

யாகக் கருதாமல், தொழிலாளர் நலனுக்காகப் பயன்படுத்தக்கூடிய கௌரவ நிதியாகக் கருதப்படுவதை அனுமதிக்க நான் தயாராக இருக்கிறேன். நான் தாழ்வாரத்தில் கேட்ட வாதங்கள், இங்கு எடுக்கப் பட்ட நிலை பற்றி திருப்தியடையாத உறுப்பினர்கள் மீது எவை செல்வாக்கை ஏற்படுத்தினவோ அவை இதுதான் என்று எனக்குத் தோன்றுகிறது. வரப்போகும் பெரும் மாற்றங்களுக்கு வழிகோலும் சிறு மாற்றம் என்று அவர்கள் கருதுகிறார்கள் எனத் தோன்றுகிறது; அதாவது தொழிலாளர் நலனுக்காக உண்மையில் தொழில்துறை மீது வரியை சுமத்துவதற்கான முன்னோடி இது என்று கருதுகிறார் கள். இம்மாதிரியான அச்சம் கொண்டிருப்பவர்களின் மனத்தில் குடி கொண்டுள்ள தப்பெண்ணங்களை அகற்றவே நான் விரும்புகிறேன். தேவைப்படாத எந்த நோக்கங்களுக்காகவும் ஒரு நிதியைத் திரட்டு வதற்காக எந்த ஒரு தொழில்துறை மீதும் வரி விதிப்பதற்கு இந்த விதியை நியாயமற்ற முறையில் பயன்படுத்தும் எண்ணம் ஏதும் சர்க்காருக்கு இல்லை என்பதை முன்பே உறுதிபடக் கூறியிருக் கிறேன்; இந்த மாதிரி அச்சத்தை கொண்டுள்ள மதிப்பிற்குரிய உறுப்பினர்களுக்கு வாக்குறுதியளிக்கிறேன். ஒருமுன்மாதிரியை ஏற்படுத்துவதற்காக எந்த இரகசியமான முயற்சியை விரும்பவோ எடுக்கவோ சர்க்காருக்கு அவசியமில்லை. இங்கும் இங்கிலாந்திலும் சட்டங்கள் வகுக்க தேவையான அதிகாரம் உள்ளது - அதற்கான முன்மாதிரிகள் உள்ளன; இந்த அதிகாரத்தின்படி தொழிலாளர் நலனுக்காக, ஒரு விசேட வரியை விதிப்பது அரசுக்குச் சாத்தியமே. இந்த நாட்டில் நிலக்கரி வரி, கற்கரி வரி உள்ளன; அதுதொழிலின் மீது விதிக்கப்படும் வரி; அது தொழிலின் நோக்கங் களுக்காகவும் அந்த தொழிலால் பயன்பெறுவோருக்குமாகவும் உபயோகப் படுத்தப்படுகிறது. இங்கிலாந்தில், நிலக்கரிச் சுரங்கங்கள் சட்டத்தில் ஒரு ஷரத்து உள்ளது; அதன்படி ஒரு விசேஷவரி அந்த தொழில் மீது விதிக்கப்பட்டது; இந்த வரியினால் வசூலிக்கப்படும் நிதி தொழி லாளர் நலனுக்காக ஒதுக்கி வைக்கப்பட்டுள்ளது. ரகசியமான முன் மாதிரியை ஏற்படுத்த ஒரு ரகசியமான நோக்கம் எதுவும் இல்லை என்று மதிப்பிற்குரிய உறுப்பினர்களுக்கு உறுதியளிக்க விரும்பு கிறேன். எங்கள் நோக்கம் தொழிலாளருக்கு ஆதரவளிப்பது. தங்க ளிடம் வேலைசெய்யும் தொழிலாளர் நலனுக்கான திட்டங்களை ஆதரிக்கும் அக்கறையை எப்பொழுதும் வெளிப்படுத்திய பல முதலாளிகள் நான் முன்வைத்துள்ள இந்தத் திருத்தத்தை ஏற்றுக் கொள்ள ஏன் தயங்குகிறார்கள் என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. ஐயா, என் திருத்தத்தை பிரேரேபிக்கிறேன்.

★ ★ ★

[1]மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஐயா, மதிப்பிற்குரிய எனது நண்பர் திரு. சாப்மன் - மார்ட்டிமெர் சொன்ன விஷயம் இது என்று தோன்றுகிறது. நமது நோக்கத்தை மாற்றிக் கொண்டிருக்கிறோம் என்று அவர் கூறுகிறார். ஆரம்பத்தில், நிதி இழப்பீடு வழங்கும் நோக்கத்திற்குப் பயன்படுத்தப்படும் என்று இருந்தது. அதில் மீதமாகும் தொகையை நல்வாழ்விற்காக உபயோகிப்பது என்று இப்பொழுது எண்ணுகிறோம். நோக்கத்தில் இது ஒரு மாற்றம் என்பதில் சந்தேகமில்லை; ஆனால் இதில் முறையற்றதாக எதுவும் இல்லை என நான் இன்னமும் கூறுகிறேன். அவரை நான் சரியாகப் புரிந்து கொண்டால், அவர் நிலை இதுவென்று தோன்றுகிறது. பட்ஜெட்டில் ஏற்பாடு செய்யப்பட்டதை, அதாவது சட்டமன்றத்தில் ஒரு குறிப்பிட்ட நோக்கத்திற்காக பணம் அங்கீகரிக்கப்பட்டால், அந்த நோக்கத்திற்கு உட்படாத மற்றொரு சேவைக்காக அதை செலவழிக்கக்கூடாது என்ற நிலைபெற்ற கோட்பாட்டை அவர் பின்பற்றுகிறார்கள் போல் தோன்றுகிறது என்பதை நான் ஒப்புக்கொள்ள வேண்டும். நான் முற்றிலும் உடன்படுகிறேன்; ஆனால் நிர்வாகச் செயல் சம்பந்தப்பட்டவிஷயம் இது. நிர்வாக நடவடிக்கையில் நிதியைப் பயன்படுத்துவதை நான் விரும்பவில்லை; முறையற்ற செயல் என்ற குற்றத்திற்கு உள்ளாக நான் விரும்பவில்லை என்பதால், வேறு ஒரு நோக்கத்திற்காக - அது நலன்கள் விளைவிக்கும் நோக்கம் என்பதை அவை முழுமையாக ஒப்புக்கொள்கிறது - மீதியை உபயோகிப்பதை அனுமதிப்பதை அங்கீகரிக்கக்கோரி அவைமுன் வந்துள்ளேன். நோக்கத்தை மாற்றுவதில் முறைகேடானது எதுவுமில்லை எனக் கூறுகிறேன்; ஏனெனில் நோக்கத்தில் மாற்றத்திற்காக இந்த அவையின் சட்டரீதியான அங்கீகாரத்தை நாம் கோரிக் கொண்டிருக்கிறோம்.

அடுத்து, 'சேமநலம்' என்ற சொல், விரிவான பொருள் கொண்ட சொல் என்பது பற்றி எழுப்பப்பட்ட விஷயம்; அந்தச் சொல் விரிவான பொருள்கொண்டது என்பதை நான் ஒத்துக் கொள்கிறேன். 'சேமநலம்' என்ற சொல்லில் எந்தவிதமான இனங்கள் உட்படுத்தப்படும் என்பதைக் குறிப்பிட்டுக் கூறும் நிலையில் நான் இருக்கிறேன் என்பதோ இதுபற்றி அவையில் ஏகோபித்த கருத்தை எதிர்பார்க்க முடியும் என்பதோ எனக்குத் தெரியாது. எனவே, 'சேமநலம்' என்பதன்கீழ் எதெல்லாம் வரும் என்று குறிப்பிட்டுக்

---

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, 1943 ஆகஸ்ட் 13, பக்கம் 718.

கூற முனைய மாட்டேன். 'சேமநலம்' என்பதன் பொருள் என்ன என்று தெரியாத மதிப்பிற்குரிய உறுப்பினர்களுக்கும், இந்த நிதியை நிர் வகிக்கும் பொறுப்பை சர்க்காருக்கு அளிக்கக்கூடாது என்று கருதும் உறுப்பினர்களுக்கும் நான் கூற விரும்புவது, இத்துடன் இந்த விஷயம் அவையின் கரங்களில் இன்னமும் விடப்பட்டுள்ளது என்பதை உணர்வார்கள் என்பதுதான். இந்த நிதியை எவ்வாறு பயன்படுத்துவது என்ற விஷயத்தை பல்வேறு சந்தர்ப்பங்களில் எழுப்ப அவைக்கு அதிக வாய்ப்புகள் கிடைக்கும்; 'சேமநலம்' என்றால் என்ன என்பதை அறிந்துள்ள பல உறுப்பினர்கள் அல்லது அதைப் பற்றி கருத்துகள் உள்ளவர்கள் பணத்தை எவ்வாறு பயன் படுத்துவது என்பதை சர்க்காருக்குத் தெரிவிக்கலாம். ஐயா, எனது இந்தத் திருத்தத்தை ஏற்றுக்கொள்ளும்படி அவைக்கு ஆலோசனை கூறலாம்.

*திரு.தலைவர் (மாண்புமிகு அப்துல் ரஹீம்):*

*'மசோதாவின் பிரிவு 3, உபபிரிவு (1) உடன் பின்கண்ட காப்பு வாசகம் சேர்க்கப்பட வேண்டும்:*

*'பிரிவு 9ன் உபபிரிவு (1) கோருகிறபடி முதலாளி காப்பீட்டு ஒப்பந்தப் பத்திரம் எடுத்து, அந்தத்திட்டத்தின்படி அவரிடம் இருந்து பெற வேண்டிய தொகை முழுவதும் தவணைகள் மூலம் செலுத்தியிருந்தால், அல்லது, பிரிவு 12ன் உப பிரிவு (2)ன் விதிப்படி, முதலாளி காப்பீடு ஒப்பந்தப் பத்திரம் எடுக்க வேண்டிய தேவையில்லை என்றால், இந்த உபவிதியின் கீழ் முதலாளியின் சார்பில் அந்த முதலாளியின் இழப்பீடுத் தொகை செலுத்த வேண்டிய பொறுப்பை சர்க்கார் ஏற்று அதை நடைமுறைப் படுத்தும்.''*

*தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.*

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் முன்மொழிகிறேன்:

*'இந்த மசோதாவின் 3வது பிரிவோடு, கீழ்க்கண்ட உப பிரிவு சேர்க்கப் பட வேண்டும்.*

*''(3) இந்த பிரிவு மாட்சிமை தங்கிய மன்னர்பிரான் அரசைக் கட்டுப் படுத்தும்''*

---

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, 1943 ஆகஸ்ட் 13, பக்கம் 719.

இந்த மசோதாவின் முற்காப்பு விதிகளுக்கு மாட்சிமை தங்கிய மன்னர்பிரான் அரசை சட்டப்படி பொறுப்பாக்க நாங்கள் இப்பொழுது முயலுகிறோம் என்பதை ஏற்கனவே விளக்கிக் கூறி யுள்ளேன். இந்தத் திருத்தத்தை பிரேரேபிக்கிறேன்.

[1]திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரஹீம்): திருத்தம் பிரேரேபிக்கப்படுகிறது.

> ''மசோதாவின் 13வது பிரிவின் உட்பிரிவு 1ல் (பி) பகுதி நீக்கப் பட வேண்டும்.''

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஐயா, என்னிடம் போதுமான அளவு பண்பாடு இல்லாமலிருக்கலாம்; ஆனால் சராசரி அளவான அறிவுத்திறனுக்கு நான் உரிமைகோர முடியும். இந்த பிரிவுக்கு என்னிடமுள்ள அத்தகைய அறிவுத்திறனைப் பயன்படுத்து கிறேன். இதன் நோக்கத்தையும் அதற்கான அவசியத்தையும் மதிப் பிற்குரிய எனது நண்பர் முற்றிலும் தவறாகப் புரிந்துகொண்டார் என்று எண்ணுகிறேன். இந்தப் பிரிவின் நோக்கம் தகவலைப் பெறு வதும் தகவலைத்தேடிப் பெறுவதுமாகும். இந்த விஷயத்தில் கறாரான தகவல் ஏன் முற்றிலுமாக அவசியமாகும் என்பதை மதிப்பிற்குரிய எனது நண்பர் புரிந்துகொள்ளவில்லை. சர்க்காரின் கண்ணோட்டத் திலிருந்து மட்டுமல்லாமல் முதலாளியின் கண்ணோட்டத்திலிருந் துமே தகவல் அவசியம் என்பதை அவருக்குக்கூறவிரும்புகிறேன். உதாரணத்திற்கு ஏய்க்கும் இயல்புடைய ஒரு முதலாளி, குறையுள்ள தகவலை, பொய்யான தகவலை, அவரது சம்பளப் பட்டியலைக் குறைத்துக்காட்டும் தகவலை, அவரது கீழ் வேலை செய்யும் சிப்பந்தி களின் எண்ணிக்கையைக் குறைத்துக்காட்டும் தகவலை அளிப்பது முற்றிலும் சாத்தியமே. அவர் அளிக்கும் தகவலை ஆதாரமாகக் கொண்டுதான் காப்பீட்டுத் தவணைகள் நிர்ணயிக்கப்படும் மோசடி செய்யும் முதலாளிகள் செய்யும் தவறுக்காக நல்ல முதலாளிகள் தண்டவரிக்கும் தண்டனைக்கும் உள்ளாக்கப்படுவது சாத்தியமே. மோசடிசெய்யும் முதலாளிகள் தவறான தகவல்கள் அளிப்பதன் மூலம் சட்டம் அவர்கள் மூலம் சுமத்தும் பொறுப்பிலிருந்து தப்பிக்க முயலலாம். எனவே இந்தப்பிரிவு மிக முக்கியம்; முதலாளிகளின் நலன்களுக்காகவும் அவசியம். சரியான தகவல் கொடுக்கப்பட வில்லை என்ற சந்தேகம் ஏற்பட்டாலோ தகவல் கொடுக்கப்பட

வில்லை என்ற தகவல் சர்க்காருக்குக் கிடைத்தாலோ, சரியான தகவலைப்பெற சர்க்காருக்கு அதிகாரம் இருக்க வேண்டியது அவசியம் என்று சட்டம் வகை செய்வதற்கு எந்த் ஆட்சேபணையும் இருக்க முடியும் என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. சரியான தகவல் பெறுவது என்ற அடிப்படையில் தான் இந்தத் திட்டம் உருவாக்கப்பட்டது. ஐயா, இந்தத் திருத்தத்தை நான் எதிர்க்கிறேன்.



# 19

## [1]விரிவடைந்த தொழிலாளர் மாநாட்டின் முதல் கூட்டத்தொடர்

### சமூகப் பாதுகாப்பு குறித்து டாக்டர் அம்பேத்கர்

விரிவடைந்த தொழிலாளர் மாநாட்டின் முதல் கூட்டத்தொடர், செப்டம்பர் 6-ஆம் நாளன்று திங்கட்கிழமை புதுடில்லியில் நடைபெற்றது. வைசிராய் கவுன்சிலில் தொழிலாளர் நலத்துறை உறுப்பினராக (இப்பதவி அமைச்சர் பதவிக்கு சமமானது - மொழி பெயர்ப்பாளர்) பணியாற்றும் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் இக் கூட்டத் தொடரில் சொற்பொழிவாற்றினர். அவரது உரையின் முழு வாசகம் வருமாறு:-

இந்த விரிவடைந்த தொழிலாளர் மாநாட்டின் முதல் கூட்டத் தொடரில் கலந்து கொள்ளும் உங்கள் அனைவரையும் வரவேற்கிறேன். டில்லியில் நடைபெறவிருக்கும் ஒரு முத்தரப்பு தொழிலாளர் மாநாட்டில் பங்கேற்கும்படி மாகாண அரசாங்கங்கள் மற்றும் இந்திய சமஸ்தானங்களின் பிரதிநிதிகளுக்கும், அவ்வாறே தொழிலாளர்கள் மற்றும் தொழிலதிபர்களின் பிரதிநிதிகளுக்கும் பதின்மூன்று மாதங்களுக்கு முன்னர் அதாவது சென்ற ஆண்டு ஆகஸ்டு 7-ஆம் தேதியன்று இந்திய அரசாங்கம் அழைப்பு விடுத்திருந்தது.

நீண்டகாலமாகவே பின்வரும் கருத்து நிலவி வந்தது: அரசாங்கம், தொழிலாளர்கள், தொழிலதிபர்கள் ஆகிய முத்தரப்பினருமே பரஸ்பரம் ஒருவர்பால் ஒருவர் பொறுப்பு உணர்வை வளர்த்துக் கொள்ள வேண்டும்; ஒருவர் மற்றவர்களின் கருத்துகளுக்கு உரிய மதிப்பு அளிக்க வேண்டும்; ஒருவருக்கு ஒருவர் விட்டுக்கொடுக்கும் மனோபாவத்தோடு செயலாற்ற வேண்டும்; இவ்வாறு செய்யவில்லை என்றால் தொழில்துறை சம்பந்தப்பட்ட பிரச்சினைகளுக்கும், தொழிலாளர் நலம் சம்பந்தப்பட்ட பிரச்சினைகளுக்கும் தீர்வு காண முடியாது என்ற கருத்து மேலோங்கி வந்தது. ஆனால் இந்த

---

1. இந்தியத் தகவல் ஏடு, செப்டம்பர் 15, 1943, பக்கங்கள் 143 - 144.

முத்தரப்பினருமே ஒன்றுகூடி மனம் விட்டுப் பேசினாலொழிய இத்தகையப் பொறுப்பு உணர்வும் பரஸ்பர மரியாதை உணர்வும் வளர்ந்தோங்குவதற்கு அதிக வாய்ப்பு இல்லை. எனவே, இந்த நோக் கத்தோடு இவர்களை ஒன்றுகூடச் செய்வதும், அவர்கள் தத்தமது பிரச்சினைகளை முன்வைத்து விவாதிக்கச் செய்வதும் அவசியம் என்பது உணரப்பட்டது.

இத்தகைய ஒரு முத்தரப்பு அமைப்பை உருவாக்கும் யோசனை நீண்ட காலமாகவே இருந்து வந்தபோதிலும், தொழிலாளர்களின் மன உறுதியையும், உத்வேகத்தையும், விடா முயற்சியையும் வளர்த்து வலுப்படுத்துவதை யுத்தம் அவசர அவசியமாக்கி இருக்க வில்லை என்றால், இந்த யோசனை இவ்வளவு விரைவில், இத்தனை துரித கதியில் ஸ்தூல வடிவம் பெற்றிருக்குமா என்பது ஐயமே. முத்தரப்பு அமைப்பை உருவாக்கும் பணியை யுத்தம் மற்றொரு வகையிலும் துரிதப்படுத்திற்று.

## துணிகரமான கொள்கை

போரின் தாக்கம் காரணமாக, தொழில்துறைப் பிரச்சினை களிலும், தொழிலாளர் நலப் பிரச்சினைகளிலும் மிகப் பெருமள வில் அக்கறையும் கவனமும் செலுத்தும்படியான அவசரம் இந்திய அரசாங்கத்துக்கு ஏற்பட்டது. இவ்வகையில் மிகவும் துணிகரமான நடவடிக்கை எடுத்துக்கொள்ள அரசாங்கம் எவ்வகையிலும் தயக்கமோ மயக்கமோ காட்டவில்லை என்பதை மகிழ்ச்சியோடு கூறிக்கொள்கிறேன்.

தேர்ச்சி பெறாத தொழிலாளர்களைத் தேர்ச்சி பெற்ற தொழி லாளர்களாக ஆக்கும் பணியை அரசாங்கம் மேற்கொண்டது. அவர் களுக்கு தேர்ந்த, சிறந்த தொழில் பயிற்சி அளித்தும், எண்ணற்ற தொழில் பயிற்சிப் பள்ளிகளை உருவாக்கியும் இப்பணியை சிறப்புற ஆற்றிற்று.

தற்போதைய தொழிலாளர் சட்டத்தில் அது இரண்டு புதிய கோட்பாடுகளை அறிமுகப்படுத்திற்று. இவை இரண்டுமே மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்தவை; வழக்கமான பாரம்பரியத்திலிருந்து முற்றிலும் வேறுபட்டவை, மாறுபட்டவை.

நியாயமான ஊதியங்களையும் நேரிய வேலை நிலைமை

களையும் வகுத்துத் தரும் உரிமையை தனது கடமையாகவும் பொறுப்பாகவும் அது ஏற்றுக்கொண்டுள்ளது.

தங்களுக்கு இடையே உள்ள தகராறுகளை மத்தியஸ்துக்கு விடும்படி தொழிலாளர்களையும் தொழிலதிபர்களையும் நிர்ப்பந்திப்பதை தனது கடப்பாடாகவும் பொறுப்பாகவும் அது வரித்துக் கொண்டுள்ளது. அதுமட்டுமல்ல, தொழிலாளர்களின் சேமநலனை உத்தரவாதம் செய்யும் பொறுப்பினையும் இந்திய அரசாங்கம் மேற்கொண்டுள்ளது. தொழிலாளர்களின் நல்வாழ்வுக்காக என்ன செய்ய வேண்டும் என்று ஆணைகள் பிறப்பிப்பதோடு அரசாங்கம் நின்று கொள்ளப்போவதில்லை; அந்த ஆணைகள் முறையாக, சரிவர நிறைவேற்றப்படுகின்றனவா என்பதைக் கண்காணிப்பதற்கு ஓர் அமைப்பையும் அது நியமிக்க இருக்கிறது.

இந்தத் துணிகரமான கொள்கையை தனது சொந்த முயற்சியின் பேரிலும், மதிப்பீட்டின் பேரிலும், பகுத்தாய்வின் பேரிலுமே இந்திய அரசாங்கம் வகுத்துக் கொண்டிருக்கிறது. எனினும் ஒரு விஷயம்; தன்மீது சார்ந்துள்ள இந்தப் புதிய கடமைகளை, பொறுப்புகளை உறுதியோடு, தன்னம்பிக்கையோடு நிறைவேற்றுவதற்கு மாகாண அரசாங்கங்கள், தொழிலாளர்கள், தொழிலதிபர்களின் ஆலோசனையைப் பெறுவது உகந்ததாக இருக்குமே என்று அரசாங்கம் உணர்ந்தது; இதன் பொருட்டு ஓர் அமைப்பைத் தோற்றுவிப்பது அரசாங்கத்தின் தொழிலாளர் கொள்கை மேம்படவும் சிறக்கவும் துணைபுரியும் என்றும் அது கருதிற்று.

## இரண்டு அமைப்புகள் உதயம்

இந்த இரட்டை நோக்கத்துக்காகவே முத்தரப்பு தொழிலாளர் மாநாடு கூட்டப்பட்டது. தொழிலாளர் நலம் சம்பந்தப்பட்ட பிரச்சினைகளை அவற்றின் சட்ட மற்றும் நிர்வாக அம்சங்களின் பகைப்புலனில் விவாதிப்பதற்கும், இந்தப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காணுவதில் மிகவும் திருப்திகரமான நடவடிக்கைகள் எடுத்துக்கொள்வது சம்பந்தமாக இந்திய அரசாங்கத்துக்கு தக்க ஆலோசனை கூறுவதற்கும் ஒரு நிரந்தமான, பிரதிநிதித்துவம் வாய்ந்த அமைப்பினை உருவாக்குவதற்கு காலம் கனியவில்லையா என்பதை ஆழ்ந்து பரிசீலித்து உகந்த முடிவை எடுக்குமாறு மாநாடு கேட்டுக்கொள்ளப்பட்டது. அப்போது அங்கு குழுமியிருந்த பிரதிநிதிகள் இந்த யோசனையை ஏகமனதாக, முழுமனதோடு ஏற்றுக்கொண்டனர்; இது சம்பந்தமாக

இரு அமைப்புகளை உருவாக்கவும் தீர்மானித்தனர். இவற்றில் ஓர் அமைப்பு பெரியது; அது விரிவடைந்த தொழிலாளர் மாநாடு என்று அழைக்கப்பட்டது. மற்ற அமைப்பு சிறிது; தொழிலாளர் நிலைக் குழு என்பது அதன் பெயர்.

யுத்த நிலைமைகளே முத்தரப்பு தொழிலாளர் மாநாடு கருவாகி உருவாவதற்கு அடிப்படைக் காரணமாகும். எனினும் யுத்தம் முடிந்த பிறகும் இது நீடிக்கும் என்பதை மகிழ்ச்சியோடு தெரிவித்துக் கொள்கிறேன். நாட்டின் பொருளாதாரக் கட்டமைப் பில் ஒரு நிலையான, நிரந்தரமான இடம் வகிக்கும் ஓர் அமைப்பாக அது திகழப்போகிறது.

தொழில் துறைப் பிரச்சினைகளையும் தொழிலாளர் பிரச் சினைகளையும் பற்றி விவாதிப்பதற்கு இத்தகைய ஒரு பிரதிநிதித் துவம் வாய்ந்த அமைப்பை உருவாக்குவது சம்பந்தமாக மேற் கொண்ட முடிவு மிகவும் விவேகமானது என்பதில் எவருக்கும் ஐயம் இருக்க முடியாது. கடந்த 13 மாதங்களாக நடைபெற்றுள்ள பணியை ஆய்வுசெய்தாலே இத்தகைய ஐயமெல்லாம் பறந்தோடி விடும் என்பது திண்ணம்.

இந்த இரு அமைப்புகளும் 1942 ஆகஸ்டு 7-ஆம் தேதி தோன்றின. அதற்குப் பிறகு இதுவரை தொழிலாளர் நிலைக்குழு மூன்று முறை கூடியுள்ளது. முதல் கூட்டத்தின் நிகழ்ச்சி நிரலில் பின்கண்ட விஷயங்கள் இடம்பெற்றிருந்தன: யுத்தகால தொழி லாளர் சட்டங்கள், அனுமதியின்றித் தொழிலாளர்கள் வேலைக்கு வராமல் இருத்தல், தொழில் தகராறுகள், வேலைநேரம், மிகை உழைப்பால் தொழிலாளர்கள் சோர்வடைதல், சுகாதார ஆராய்ச்சி வாரியங்கள், உழைப்பாளர்களின் ஊதியங்கள், அகவிலைப்படி, ஆதாயப்பங்கு ஊதியங்கள், சேமிப்புகள், ஆக்கநல நடவடிக்கை கள், அடக்கவிலை தானிய விற்பனைக் கடைகள், ஏ.ஆர்.பி.க்கும் சேமநலப்பணிக்கும் கூட்டுக் குழு அமைத்தல், சில்லறை நாணயங் கள் பற்றாக்குறை ஏற்படும்போது ஊதியங்கள் வழங்குவதை பின்னமில்லாமல் முழுமையாக்குதல் முதலியவை.

இரண்டாவது கூட்டத்தின் நிகழ்ச்சி நிரல் பின்கண்ட விஷ யங்களைக் கொண்டதாக இருந்தது: தொழிலாளர்களுக்கு அத்தியா வசியப் பொருள்கள் வழங்கீடு, இந்தியப் பாதுகாப்பு விதி 81-ஏ.யின்

படி கட்டாய மத்தியஸ்த தீர்ப்பு, குறிப்பிட்ட காலத்திற்குப் பிறகு அளிக்கப்படும் போனசுகள்.

மூன்றாவது கூட்டத்தில் பின்கண்ட விஷயங்கள் பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்பட்டன: நியாயமான கூலியை உத்தரவாதம் செய்யும் ஒரு விதியை அரசாங்க ஒப்பந்தங்களில் சேர்த்தல், கூட்டு உற்பத்திக் குழுக்களை அமைத்தல், தொழில் நிறுவனங்களில் தொழிலாளர் நல அதிகாரிகளை நியமித்தல், இந்தியப் பாதுகாப்பு விதி 81-83 முறையாக செயல்படும்படிப் பார்த்துக் கொள்ளுதல், வேலை வாய்ப்பு நிலையங்களை நிறுவுதல், தொழில்துறை புள்ளி விவரத் தொகுப்புச் சட்டத்தின்படி புள்ளி விவரங்களைச் சேகரித்தல் முதலியவை.

தொழிலாளர் நிலைக் குழுவில் எவ்விதம் மிகப் பல்வேறுபட்ட விஷயங்கள் விரிவாக விவாதிக்கப்பட்டன என்பதை இதிலிருந்து தெரிந்து கொள்ளலாம். எனினும் இவ்வாறு விவாதிக்கப்பட்ட பல விஷயங்களில் ஒருமனதாக முடிவுக்கு வருவது சாத்தியமில்லாது போயிற்று.

### மிகவும் பயனுள்ளவை

ஆயினும் இந்த விவாதங்கள் மிகவும் பயனுள்ளவையாக அமைந்திருந்தன; இவற்றால் இந்திய அரசாங்கம் பெரிதும் அனுகூலமடைந்தது. விவாதிக்கப்பட்ட பெரும்பாலான விஷயங்களில் ஒருமித்த கருத்து நிலவாததன் காரணமாக அவற்றின்மீது இந்திய அரசாங்கம் ஆக்கபூர்வமான நடவடிக்கை ஏதும் எடுத்துக்கொள்ள முடியவில்லை. ஆனால் ஒருமித்த கருத்து நிலவிய முடிவுகளை ஏற்றுக்கொள்வதிலோ, அவற்றை நடைமுறைப்படுத்துவதிலோ இந்திய அரசாங்கம் எத்தகைய தயக்கத்தையும் மெத்தனப்போக்கையும் கடைப்பிடிக்கவில்லை. போரில் காயமடைவோர்களுக்கு நஷ்டஈடு தரும் சட்டத்தையும், தேசிய சேவை (தொழில்நுட்ப ஊழியர் திருத்த) அவசர சட்டத்தையும் இதற்குச் சான்றாகக் கூறலாம். இதல்லாமல், தொழில்துறைப் புள்ளிவிவரச் சட்டத்தையும், வேலை வாய்ப்பு நிலையங்களை அமைக்கும் திட்டத்தையும் இவ்வகையில் மேலும் உதாரணமாக சொல்லலாம். இவ்விரண்டு விஷயங்களிலும் மாநாட்டின் முடிவுகளுக்கு இணங்க விரைவிலேயே உரிய நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்படும்.

### கண்ணோட்டத்தில் அடிப்படை மாற்றம்

இந்த முன்னேற்றம் பலருக்கு அற்பமானதாகத் தோன்றக் கூடும். அவர்களது இந்த நோக்கும் போக்கும் தவறானது என்று அவர்களுக்கு எடுத்துக்காட்ட விரும்புகிறேன். முன்னேற்றத்துக்குக் குறுக்குப் பாதைகள் எவையும் இல்லை, அப்படியே குறுக்குப் பாதைகள் இருந்தாலும் அவை சரியானவையாக இருக்கும் என்று கூற முடியாது. அமைதியான முறையில் முன்னேற்றம் காண்பது எப்போதும் மெதுவான இயக்க நிகழ்வாகவே இருக்கும்; அதிலும் என் போன்ற அவசரக்குடுக்கைகளுக்கு இந்த மெதுவான முன்னேற் றம் சில சமயங்களில் ஓரளவு வேதனை அளிப்பதாகவே இருக் கும். கூட்டு நடவடிக்கை மேற்கொள்ளும் பாரம்பரியமோ, சமூக உணர்வோ இல்லாத இந்தியா போன்ற ஒரு பண்டைய நாட்டில் முன்னேற்றம் மெதுவாக இருப்பது முற்றிலும் இயல்பே. இது குறித்து எவரும் சோர்வடைய வேண்டியதில்லை. ஏனென்றால் எனது அபிப் பிராயத்தில் கண்ணோட்டத்தின் இயல்புதான் முக்கியமானதே தவிர முன்னேற்றத்தின் வேகம் முக்கியமானதல்ல.

இந்த நோக்கில் பார்க்கும்போது, தொழிலாளர் பிரச்சினை கள் சம்பந்தமாக அரசாங்கம், தொழிலதிபர்கள், ஊழியர்கள் ஆகி யோரின் கண்ணோட்டத்தில் அடிப்படையான மாற்றத்தைத் தோற்று வித்திருப்பதை இந்த முத்தரப்பு மாநாடு புரிந்துள்ள மகத்தான சாதனை என்று கூறுவதில் எனக்கு எந்தத் தயக்கமும் இல்லை. இந்த மாநாடுகளில் பங்கு கொண்ட எவருமே இத்தகைய உணர்வைப் பெறாமல் இருக்க முடியாது. நமது கண்ணோட்டத்தில் இவ்விதம் ஆரோக்கியமான, அடிப்படையான மாற்றம் ஏற்பட்டிருக்கும் நிலைமையில், நமது முன்னேற்றத்தின் வேகத்தைத் தீவிரப்படுத்த முடியும் என்று நாம் உறுதியாக நம்பலாம்.

### நிகழ்ச்சி நிரல்

இந்த விரிவடைந்த தொழிலாளர் மாநாட்டின் நிகழ்ச்சி நிரலில் எட்டு விஷயங்கள் அடங்கியுள்ளன. அவை வருமாறு:

(i) நிலக்கரி, மூலப்பொருள்கள் போன்றவற்றின் பற்றாக் குறை காரணமாக தொழிலாளர்களை வேலை நீக்கம் செய்தல்.

(ii) சமூகப் பாதுகாப்பு; குறைந்தபட்ச ஊதியம்.

(iii) அகவிலைப்படியை நிர்ணயிக்கும் கோட்பாடுகள்.

(iv) பெரிய தொழில் நிலையங்கள் சம்பந்தமாக பம்பாய் தொழில் தகராறுகள் சட்டம் இயல் Vல் இடம் பெற்றுள்ள விதிகளின் அடிப்படையில் நிலை ஆணைகள் பிறப்பிக்க வழிவகை செய்தல்.

(v) விரிவடைந்த மாநாட்டுக்கான நடைமுறை விதிகளை வகுத்தல்.

(vi) மாகாணங்களில் முத்தரப்பு அமைப்புகளை நிறுவுதல்.

(vii) சட்டமன்றங்களிலும் ஏனைய அமைப்புகளிலும் தொழிலாளர்களுக்குப் பிரதிநிதித்துவம் அளித்தல்.

(viii) சேம நிதிக்கான முன்மாதிரியான விதிகள்.

இவற்றில் இரண்டு விஷயங்கள் மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்தவையாகும்; இவற்றை நீங்கள் கவனித்திருப்பீர்கள் என்று நம்புகிறேன். சமூகப்பாதுகாப்பையும் தொழிலாளர் பிரதிநிதித்துவத்தையும்தான் இங்கு குறிப்பிடுகிறேன். இவை பிரிக்க முடியாதபடி ஒன்றுடன் ஒன்று பின்னிப் பிணைந்தவை. இன்னும் சொல்லப் போனால் இவை தவிர்க்கவொண்ணாதவை என்பதுதான் இவற்றின் தனிச்சிறப்பு எனக் கூறவேண்டும். இந்த இரண்டு விஷயங்களும் உலகெங்கும் ஆழ்ந்து ஆய்ந்து பரிசீலிக்கப்பட்டு வருகின்றன. உலகம் முழுவதிலும் இவை மிகுந்த ஆர்வத்தையும் அக்கறையையும் கிளர்த்தி விட்டிருக்கின்றன என்பதற்கு பீவரிட்ஜ் அறிக்கை ஒரு நிதர்சன சான்றாக அமைந்துள்ளது. இவ்வாறிருக்கும்போது இந்தியாவிலுள்ள நாம் இவற்றைப்பற்றிக் கண்களை மூடிக்கொண்டு இருக்க முடியாது; அலட்சியமாக, பாராமுகமாக இருந்துவிட முடியாது. இவை சம்பந்தமாக நீங்கள் எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும், இவை விஷயத்தில் எத்தகைய போக்கை மேற்கொள்வது உசிதமானதாக, உகந்ததாக இருக்கும் என்று நான் உங்களுக்குச் சொல்ல வேண்டியதில்லை. ஆனால் இந்தப் பிரச்சினைகளுடன் நெருங்கிய சம்பந்தமுடைய இரண்டு கருத்துகளைக் கூறுவதற்கு என்னை அனுமதிப்பீர்கள் என்று நம்புகிறேன். இவற்றில் முதல் கருத்து வருமாறு:

## இரு முரண்பாடுகள்

முதலாளித்துவத் தொழில் துறை அமைப்பிலும், நாடாளுமன்ற ஜனநாயகம் எனப்படும் அரசியல் அமைப்பிலும் வாழ்ந்து வருபவர்கள் தமது அமைப்புகள் இரண்டு முரண்பாடுகளைக்

கொண்டுள்ளன என்பதை ஒப்புக்கொள்ள வேண்டும். மலைமலை யாகக் குவிந்துள்ள செல்வத்துக்கும் பிணந்தின்னிக் கழுகுகளைப் போல் கொத்தியெடுக்கும் கோர வறுமைக்கும் இடையே உள்ள படுபாதாளம் முதல் முரண்பாடாகும். அதிலும் இந்த முரண்பாடு சாதாரணமானதல்ல; மிகவும் உச்சக்கட்டத்தை அடைந்துள்ள முரண்பாடாகும். இதன் விபரீத விளைவாக இன்று நாம் என்ன பார்க்கிறோம்? ஒரு சொட்டு வியர்வைகூடச் சிந்தி உழைக்காமல் உல்லாசபுரியில் வாழ்பவர்கள் கோடீஸ்வரக் கோமான்களாக இருப் பதையும் அதேசமயம் நெற்றி வியர்வை நிலத்தை நனைக்க மாடாக உழைத்து ஓடாகத் தேய்பவர்கள் கொடிதினும் கொடிதான வறுமை யில் வாடுவதையும் காண்கிறோம்.

இனி அடுத்து, இரண்டாவது முரண்பாடு அரசியல், பொரு ளாதார அமைப்புகளுக்கிடையே பொதிந்துள்ளது. அது என்ன? அரசியலில் சமத்துவம்; பொருளாதாரத்திலோ அசமத்துவம், ஒருவ ருக்கு ஒரு வாக்கு, ஒரு வாக்குக்கு ஒரே மதிப்பு - இது நமது அரசியல் கோட்பாடு. ஆனால் பொருளாதாரத்தில் நமது கோட்பாடு நமது அரசியல் கோட்பாட்டையே மறுதலிப்பதாகும், உதாசீனம் செய்வ தாகும். இந்த முரண்பாடுகளைக் களையும் விஷயத்தில் கருத்து வேறுபாடு இருக்கக்கூடும். ஆனால் இந்தக் கொடிய முரண்பாடுகள் இருந்து வருகின்றன என்பதில் கருத்து வேறுபாட்டுக்கு எள்ளளவும் இடமில்லை.

இந்த முரண்பாடுகள் கண்ணை உறுத்தும்படியாக, முனைப் பானவையாக இருந்தபோதிலும், கடந்த காலத்தில் பெரும்பான்மை யான மக்கள் இந்தக் கொடுமையை, அவலத்தைக் கவனிக்காமல் விட்டுவிட்டனர். ஆனால் இன்று நிலைமை அடியோடு மாறி விட்டது. மிகவும் கூரறிவு படைத்தவர்களே முன்னர் ஏனோ தானோ என்று நோக்கிய இந்த முரண்பாடுகள் இப்போது மிகவும் மந்தமான, மழுங்கலானவர்களுக்கே வெட்டவெளிச்சமாகி விட்டன.

இரண்டாவதாக நான் கூறவிரும்பும் கருத்து இதுதான். சமூக வாழ்க்கைக்கான அடித்தளமானது அந்தஸ்திலிருந்து தொழில் ஒப் பந்தத்துக்கு மாறியதிலிருந்தே வாழ்க்கையின் பாதுகாப்பு இன்மை ஒரு சமூகப் பிரச்சினையாகி விட்டது; மனித வாழ்வின் உய்வில், உயர்வில், மேம்பாட்டில் நம்பிக்கை கொண்ட அனைவரது சிந்தனை களுமே இந்தப் பிரச்சினைக்குத் தீர்வு காணுவதில் ஈடுபாடு கொண் டன. மனிதனுக்குள்ள உரிமைகளையும் அவனுக்குள்ள பல்வேறு

சுதந்திரங்களையும் நிர்ணயித்துக் கூறுவதற்கு மிகப்பெரும் முயற்சி மேற்கொள்ளப்பட்டது; இவை யாவும் அவனுடைய பிறப்புரிமை யாகக் கருதப்பட வேண்டும் என்றும் வலியுறுத்தப்பட்டது. மிக மிக நல்லது. இவற்றைப் பற்றி எல்லாம் அறியவரும்போது மிகவும் மகிழ்ச்சியாக இருக்கிறது; உள்ளம் உவகை அடைகிறது. ஆனால் இங்கு ஒரு முக்கிய விஷயத்தைக் குறிப்பிட்டுக் கூற விரும்புகிறேன்; பசிபிக் உறவுகள் மாநாட்டின் பொருளாதாரக் குழுவின் அறிக்கை யில் சுட்டிக்காட்டியிருப்பது போல், இந்த உரிமைகள் எல்லாம் சாமானிய மனிதனுக்கு அமைதியான வாழ்க்கையாக, குடியிருக்கும் இல்லமாக, உடுத்தும் உடையாக, கல்வி வசதியாக, ஆரோக்கிய மாக உருவெடுக்க வேண்டும்; எல்லாவற்றுக்கும் மேலாக உலகின் அகல்பெரும் நெடுஞ்சாலைகளில் தட்டுத் தடுமாறி விழுவோம் என்ற அச்சமின்றி, தலை உயர்த்தி, நெஞ்சு நிமிர்த்தி, கம்பீரமாக நடைபோடும் உரிமை அவனுக்கு இருக்க வேண்டும். இவை எல்லாம் இல்லை என்றால் சமூகப் பந்தோபஸ்து என்பது முற்றிலும் அர்த்த மற்றதாக, வெறும் ஏட்டுச்சுரைக்காயாகவே இருக்கும்.

## விழுமிய வாழ்க்கைக்கு

இந்தியாவிலுள்ள நாம் இந்தப் பிரச்சினைகள் இருந்து வரு வதை உணரத் தவறுவதோ அல்லது உதாசீனம் செய்வதோ கூடாது. நிலைமைகளை மறுமதிப்பீடு செய்யத் தயாராக இருக்க வேண்டும். இந்தியாவின் தொழில் வளர்ச்சியை நமது குறிக்கோளாகக் கொண் டிருப்பது மட்டும் போதாது. இத்தகைய எந்தத் தொழில் வளர்ச்சியும் சமூக ரீதியில் விரும்பத்தக்க அளவிலேயே இருக்குமாறு பார்த்துக் கொள்ள வேண்டும். இந்தியாவில் மேன்மேலும் அதிகமான செல்வத்தை உற்பத்தி செய்து குவிப்பதில் நமது ஆற்றல்களை, முயற்சிகளை ஒருமுகப்படுத்துவது மட்டும் போதாது. அனைத்து இந்தியர்களுக்கும் இந்த செல்வத்தில் பங்கு கொள்ள உரிமை உண்டு என்பதை நாம் ஏற்க வேண்டும். அப்போதுதான் அவர்கள் தகைமை மிக்க, ஏற்றமிகு வாழ்க்கை வாழ்வது சாத்தியமாகும். மேலும், அவர்களுக்குப் பாதுகாப்பற்ற அவல நிலைமை ஏற்பட்டு விடாதபடி தடுப்பதற்கான வழிவகைகளையும் நாம் காண வேண்டும்.

என் உரையை முடிப்பதற்கு முன்னர் ஒரு விஷயத்தைக் குறிப் பிட விரும்புகிறேன். நமது கூட்டங்களில் நடைபெறும் விவாதங் கள் சில சமயங்களில் சுற்றி வளைத்துச் செல்லுபவையாகவும், காரியார்த்த ரீதியற்றவையாகவும் அமைந்து விடுகின்றன.

இந்த விஷயத்தில் எவர் மீதும் குற்றம் சாட்டும் எண்ணம் ஏதும் எனக்கு இல்லை. எனினும் இரத்தினச் சுருக்கமாகப் பேசுமாறும், சொல்லவந்த விஷயத்தை நறுக்குத் தெறுக்காக எடுத்துரைக்குமாறும் பிரதிநிதிகளைக் கேட்டுக் கொள்கிறேன். எந்த ஒரு பிரதிநிதியும் விவாதத்தில் பங்கு கொள்வதைக் கட்டுப்படுத்தும் உத்தேசம் எதுவும் எனக்கு இல்லை. ஒவ்வொரு பிரதிநிதியின் கருத்தையும் நாம் தெரிந்து கொள்வது அவசியம். அவர் தமது கருத்தை தெரிவிப்பதை நாம் வரவேற்போம். ஆனால் அவர் நீண்ட, விரிவான தர்க்க நியாயங்களுடனும் வாத ஆதாரங்களுடனும் பேச வேண்டும் என்பதில்லை. அவர் முன்வைக்கும் வாதம் மனத்தில் படும்படியாக, தெள்ளத் தெளிவாக இருக்க வேண்டும். நமது மாநாட்டு நடவடிக்கைகள் முற்றிலும் காரியார்த்த ரீதியில் அமைந்திருக்க வேண்டும் என்று என்னைப் போலவே நீங்களும் விரும்புவீர்கள் என்று நம்புகிறேன். காமன்ஸ் சபைக்கு எதிராக கார்லைல் சாட்டியது போன்ற குற்றச்சாட்டுக்கு ஆளாகிவிடாதபடி நாம் பார்த்துக் கொள்ள வேண்டும்.



# 20

## [1]தொழிலாளர்களும் நாடாளுமன்ற ஜனநாயகமும்

*(இந்தியத் தொழிலாளர் சம்மேளனத்தின் சார்பில் 1943 செப்டம்பர் 8 முதல் 17ஆம் தேதி வரை டில்லியில் நடைபெற்ற அகில இந்தியத் தொழிற்சங்க பயிற்சி முகாமின் இறுதிக் கூட்டத்தொடரில் நிகழ்த்தப் பட்ட உரை.)*

இன்று மாலை உங்களிடையே வந்து உரையாற்றுமாறு எனக்கு அன்பான அழைப்பு விடுத்தமைக்காக உங்கள் செயலாளருக்கு என் பாராட்டுக்கள். இந்த அழைப்பை ஏற்க முதலில் நான் தயங்கினேன். அதற்கு இரண்டு காரணங்கள் உண்டு. முதலாவதாக அரசாங்கத்தைக் கட்டுப்படுத்தும் வகையில் நான் கூறக் கூடியவை மிகவும் குறைவு. இரண்டாவதாக நீங்கள் பெரிதும் ஆர்வம் கொண்டுள்ள தொழிற் சங்க இயக்கத்தைப்பற்றி நான் கூறக்கூடியதும் மிகச் சொற்பமே. ''இல்லை, என்னால் வர இயலாது'' என்று நான் கூறுவதை உங்கள் செயலாளர் ஒப்புக்கொள்ள மாட்டார் என்பதாலேயே இந்த அழைப்பை ஏற்றுக் கொண்டேன். மேலும், இந்தியத் தொழிலாளர் களின் ஸ்தாபன அமைப்புப் பிரச்சினை எப்போதுமே என் சிந்தனை யில் தலையாய இடம் பெற்று வந்திருக்கிறது, எனவே இது குறித்து என் கருத்துகளை வெளியிடுவதற்கு இது ஓர் அருமையான வாய்ப்பு என்று நான் உணர்ந்தேன். தவிரவும், தொழிற்சங்க இயக்கத்தில் பிரதானமாக ஆர்வம் கொண்டிருப்போரையும் என் கருத்துகள் ஈர்க்கும் என்றும் கருதினேன்.

மனித சமுதாயத்தின் அரசாங்கம் சில மிகவும் குறிப்பிடத்தக்க மாற்றங்களை அடைந்துள்ளது. கொடுங்கோல் மன்னர்களின் எதேச் சாதிகார வடிவத்தை மனித சமுதாயத்தின் அரசாங்கம் எய்தியிருந்த காலம் ஒன்று இருந்தது. இரத்தக் களறியான நீண்ட நெடும் போராட் டத்திற்குப் பிறகு, இந்த சாபக்கேடான அமைப்பு தூக்கியெறியப்

---

1. இந்திய தொழிலாளர் சம்மேளனம் பிரசுரித்த உரை, 30, பெய்ஸ் பஜார், டில்லி, பிரதி வழங்கி உதவியவர் பம்பாயைச் சேர்ந்த திரு. ஆர்.டி. ஷிண்டே.

பட்டு, நாடாளுமன்ற ஜனநாயகம் எனப்படும் ஒரு புதிய அரசமைப்பு அதன் இடத்தில் அமர்ந்தது. அரசாங்கக் கட்டமைப்பில் இதுதான் முடிந்த முடிவு என்று கூடக் கருதப்பட்டது. ஒவ்வொரு மனித ஜீவனுக்கும் சுதந்திரத்தையும், சொத்துரிமையையும், இன்ப வாழ்வையும் நல்கும் பொற்காலத்தை இது கொண்டுவரும் என்றும் நம்பப்பட்டது. இத்தகைய நம்பிக்கைகளுக்கு போதிய ஆதார அடிப்படைகள் இருந்து வரவே செய்தன. நாடாளுமன்ற ஜனநாயகத்தில் மக்களின் குரலை எதிரொலிக்க சட்டமன்றம் இருக்கிறது; அந்த சட்டமன்றத்திற்குக் கீழ்ப்பட்டதாக, அதன் ஆணைக்கு உட்பட்டதாக ஆட்சித்துறை இருக்கிறது. சட்டமன்றத்திற்கும் ஆட்சித்துறைக்கும் மேலே அவை இரண்டையும் கண்காணிக்கவும், நிர்ணயிக்கப்பட்ட வரம்புகளுக்குள் அவற்றை வைத்திருக்கவும் நீதித்துறை இருக்கிறது. நாடாளுமன்ற ஜனநாயகம் ஒரு மக்கள் அரசாங்கத்துக்குரிய எல்லா அம்சங்களையும் பெற்றுள்ளது; அதாவது மக்களால் மக்களைக்கொண்டு மக்களுக்காக நடத்தப்படும் அரசாங்கம் என்ற தகைமையை அது கொண்டிருக்கிறது. இவ்வாறு இருக்கும்போது, அது அகிலம் எங்கும் ஏற்றுக் கொள்ளப்பட்டு ஒரு நூற்றாண்டு முடிவதற்குள்ளாகவே அதனை எதிர்த்துக் குரல் எழுப்பப்பட்டு வருவது ஓரளவு வியப்பளிக்கக்கூடிய விஷயமாக இருந்து வருகிறது. இத்தாலி, ஜெர்மனி, ரஷ்யா, ஸ்பெயின் ஆகிய நாடுகளில் அதற்கு எதிராகக் கலகக் கொடி தூக்கப்பட்டிருக்கிறது. இன்னும் சொல்லப்போனால் நாடாளுமன்ற ஜனநாயகத்துக்கு எதிராக அதிருப்தி தலை தூக்காத நாடுகள் வெகு சிலதான் என்றுகூடக் கூறலாம். நாடாளுமன்ற ஜனநாயகத்துக்கு எதிராக இவ்விதம் அதிருப்தியும் மனக்குறையும் தோன்றியிருப்பது ஏன்? இது பரிசீலனைக்குரிய ஒரு கேள்வியாகும். இந்தப் பிரச்சினையைப் பரிசீலிக்க வேண்டிய அவசர அவசியம் வேறு எந்த நாட்டையும்விட இந்தியாவில்தான் அதிகம் உணரப்படுகிறது. இது ஏன்? ஏனென்றால் நாடாளுமன்ற ஜனநாயகத்தை எய்துவதற்கு இந்தியா முயற்சி செய்துவருகிறது. ''நாடாளுமன்ற ஜனநாயகத்தைப்பற்றி எச்சரிக்கையாக இருங்கள்; வெளிக்குத் தோன்றுவது போல் அது அப்படி ஒன்றும் மிகச் சிறந்த சரக்கல்ல'' என்று இந்தியர்களிடம் கூறுவதற்குப் போதிய துணிச்சல் கொண்ட யாரேனும் ஒருவர் பெரிதும் தேவைப்படுகிறார்.

நாடாளுமன்ற ஜனநாயகம் ஏன் தோல்வியடைந்தது? சர்வாதிகாரிகள் நாட்டில் அது தோல்வியடைந்ததற்கு மிகவும் மெதுவாக இயங்கக் கூடியதாக அது இருந்து வந்ததே காரணம். எத்தகைய விரைவான, துரிதமான நடவடிக்கை எடுப்பதையும் அது தாமதப்

படுத்துகிறது. நாடாளுமன்ற ஜனநாயகத்தில் ஆட்சித்துறைக்கு சட்ட மன்றம் முட்டுக்கட்டைப் போடக்கூடும்; ஆட்சித் துறை விரும்பும் சட்டங்களை நிறைவேற்ற அது மறுக்கக்கூடும். அப்படியே சட்ட மன்றம் ஆட்சித்துறையின் பாதையில் குறுக்கிடாவிட்டாலும் நீதித் துறை குறுக்கிட்டு அதன் சட்டங்களை செல்லாதவை என்று அறிவிக்கக்கூடும். இதேசமயம், சர்வாதிகாரம் சுதந்திரமாக செயல்பட நாடாளுமன்ற ஜனநாயகம் அனுமதிப்பதில்லை. சர்வாதிகாரிகள் ஆளுகின்ற இத்தாலி, ஸ்பெயின், ஜெர்மனி போன்ற நாடுகளில் இதனால்தான் நாடாளுமன்ற ஜனநாயகம் மதிப்பிழந்த ஒரு கோட்பாடாகக் கருதப்படுகிறது. நாடாளுமன்ற ஜனநாயகத்தை சர்வாதி காரிகள் மட்டுமே எதிர்த்தால் அது அப்படி ஒன்றும் கவலைப்படக் கூடிய விஷயமல்ல. ஏனென்றால் நாடாளுமன்ற ஜனநாயகத் துக்கு எதிரான அவர்களது சாட்சியம் உண்மையில் ஒரு சாட்சியமே அன்று. உண்மையைக் கூறினால் நாடாளுமன்ற ஜனநாயகம் சர்வாதி காரத்துக்கு ஒரு வலுவான தடையரணாக இருக்கக்கூடுமாதலால் அது வரவேற்கப்படவே செய்யும். எனினும் சர்வாதிகாரத்தை எதிர்க்கும் மக்கள் வாழும் நாடுகளில் கூட துரதிர்ஷ்டவசமாக நாடாளுமன்ற ஜனநாயகத்துக்கு எதிராக மிகுந்த அதிருப்தி நிலவு கிறது. நாடாளுமன்ற ஜனநாயகம் குறித்து பெரிதும் வருந்தத்தக்க விஷயமாகும் இது. அதிலும் நாடாளுமன்ற ஜனநாயகம் எவ்வகை யிலும் ஸ்தம்பித்துப் போய் நிற்காத நிலையில் இது மிகவும் இரங்கத் தக்க ஒன்றாகும். அது மூன்று திசைகளில் முன்னேறியிருக்கிறது. சமத்துவ அரசியல் உரிமைகள் என்னும் கருத்தை விரிவுப்படுத்தி அது முன்னேறியிருக்கிறது. வயது வந்தோர் வாக்குரிமையைப் பெற்றிராத நாடாளுமன்ற ஜனநாயகத்தைத் தன்னகத்தே கொண்ட நாடுகள் மிகச் சிலவே இருக்கின்றன. சமூக, பொருளாதார சமத்துவ வாய்ப்புக் கோட்பாட்டை அது அங்கீகரித்திருக்கிறது. மூன்றாவதாக, சமூக விரோத நோக்கம் கொண்ட கூட்டுரிமைக் கழகங்கள் அரசை முடமாக்கி செயலற்றதாக்க முடியாது என்பதை அது ஏற்றிருக் கிறது. இவ்வாறெல்லாம் இருந்தும் ஜனநாயகத்தைப் பாதுகாக்க உறுதிபூண்டுள்ள நாடுகளில்கூட நாடாளுமன்ற ஜனநாயகத்துக்கு எதிராக கடும் எதிர்ப்பு உருவாகி இருக்கிறது. ஆனால் இத்தகைய நாடுகளில் நிலவும் அதிருப்திக்கான காரணங்கள் எதேச்சாதிகார நாடுகளில் நிலவும் அதிருப்திக்கான காரணங்களிலிருந்து வேறு பட்டவையாக இருக்கக்கூடும் என்பது தெளிவு. இது குறித்து இங்கு விவரிக்க நேரம் இல்லை. எனினும் ஒன்றை மட்டும் பொதுப்படை யான முறையில் கூறலாம்; அதாவது சுதந்திரத்துக்கும் சொத்துரிமைக் கும், சுபிட்ச வாழ்வுக்குமான உரிமையை பெருந்திரளான மக்களுக்கு

உத்தரவாதம் செய்ய அது தவறிவிட்டதே இந்த அதிருப்திக்கு முக்கிய காரணம் என்று கூறலாம். இது உண்மையாயின், இந்தத் தோல்விக் கான காரணங்களைத் தெரிந்து கொள்வது முக்கியமாகும். இந்தத் தோல்விக்கு தவறான சித்தாந்தமோ, அல்லது தவறான அமைப்பு முறையோ அல்லது இவை இரண்டுமோ காரணமாக இருக்கக் கூடும். இவை இரண்டுமே காரணமாக இருக்கும் என்பதுதான் எனது கருத்து. நாடாளுமன்ற ஜனநாயகத்தைச் சிதைத்துச் சீர்குலைத்து விட்ட தவறான சித்தாந்தத்துக்கு இங்கு இரண்டு எடுத்துக்காட்டு களைக் கூறினால் போதும் என்று நினைக்கிறேன். முதலாவதாக, ஒப்பந்த சுதந்திரம் என்னும் கருத்து நாடாளுமன்ற ஜனநயகத்தைப் பாழ்படுத்தி விட்டது என்பதில் எனக்கு எந்த ஐயமுமில்லை. இந்தக் கருத்து சட்டத்தின் ஒப்புதலைப் பெற்றதோடு, சுதந்திரத்தின் பெயரால் அது நிலைநாட்டப்படவும் செய்தது. பொருளாதார ஏற்றத் தாழ்வுகளை நாடாளுமன்ற ஜனநாயகம் கணக்கிலெடுத்துக் கொள்ள வில்லை; அதுமட்டுமல்ல, ஒப்பந்த சுதந்திரத்தின் விளைவாக ஏற் படக்கூடிய ஏற்றத்தாழ்வைப் பரிசீலிப்பதிலும் அது கவனம் செலுத்த வில்லை. ஒப்பந்த சுதந்திரம் வலுமிக்கவர்கள் வலுவற்றவர் களை ஏமாற்றுவதற்கும் வஞ்சிப்பதற்கும் வாய்ப்பளிப்பது பற்றியும் அது கவலைப்படவில்லை. இதன் விளைவு என்ன? சுதந்திரத்தின் பாதுகாவலனாக இருக்க வேண்டிய நாடாளுமன்ற ஜனநாயகம் ஏழை எளிய மக்களுக்கு, அடிமட்டத்தில் அமிழ்ந்து கிடக்கும் மக்களுக்கு, சொத்துரிமை பறிக்கப்பட்ட வர்க்கத்துக்கு மேன்மேலும் பொருளாதார தீங்குகளை, சீர்கேடுகளை, துன்ப துயரங்களை இழைத்து வந்தது. நாடாளுமன்ற ஜனநாயகத்தை சின்னாபின்னப் படுத்திய இரண்டாவது தவறான சித்தாந்தம் சமூக, பொருளாதார சுதந்திரம் இல்லாத இடத்தில் அரசியல் ஜனநாயகம் வெற்றிபெற முடியாது என்பதை நாடாளுமன்ற ஜனநாயகம் உணரத் தவறிய தாகும். இந்தக் கூற்றை சிலர் ஏற்க மறுக்கக்கூடும். இத்தகைய சந்தேகப் பிராணிகளிடம் ஓர் எதிர்கேள்வி கேட்க விரும்புகிறேன். இத்தாலி, ஜெர்மனி, ரஷ்யா ஆகிய நாடுகளில் நாடாளுமன்ற ஜன நாயகம் ஏன் அவ்வளவு எளிதாக வீழ்ச்சியடைந்தது? அதேசமயம் இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும் அது ஏன் அத்தனை எளிதாகத் தகர்ந்துவிடவில்லை? என் அபிப்பிராயத்தில் இதற்கு ஒரே ஒரு பதில்தான் உள்ளது: முன்னர் குறிப்பிட்ட நாடுகளைவிட பின்னர் குறிப்பிட்ட நாடுகளில் பொருளாதார ஜனநாயகமும் சமூக ஜன நாயகமும் அதிக அளவில் இருந்ததே இதற்குக் காரணம். சமூக ஜனநாயகமும் பொருளாதார ஜனநாயகமும் அரசியல் ஜனநாயகத் தின் நரம்பும் நாளமும் ஆகும்; இந்த நரம்பும் நாளமும் உறுதியாக

இருந்தால்தான் உடல் வலுமிக்கதாக, ஆரோக்கியமானதாக இருக்கும். ஜனநாயகம் என்பது சமத்துவத்துக்கு மற்றொரு பெயர். நாடாளுமன்ற ஜனநாயகம் சுதந்திர தாகத்தை, விழைவை கிளர்த்தி விட்டு விட்டது என்பதில் ஐயமில்லை. ஆனால் சமத்துவத்துக்கு ஆதரவாக அது ஒருபோதும் தலையசைத்தது கூட இல்லை. சமத்துவத்தின் முக்கியத்துவத்தை அது உணரத் தவறிவிட்டது. அதுமட்டுமல்ல, சுதந்திரத்துக்கும் சமத்துவத்துக்கும் இடையே ஒரு சமநிலையைத் தோற்றுவிப்பதற்குக் கூட அது, எத்தகைய முயற்சியையும் எடுத்துக் கொள்ளவில்லை. இதன் விளைவாக சுதந்திரம் சமத்துவத்தை விழுங்கி ஏப்பம் விட்டு விட்டது; அதுமட்டுமன்று, இன்னும் எத்தனை எத்தனையோ ஏற்றத் தாழ்வுகள் தோன்றவும் வழிவகுத்து விட்டது.

நாடாளுமன்ற ஜனநாயகம் தோல்வியடைந்ததற்கு தவறான கோட்பாடுகள் ஒரு காரணம் என்ற என் கருத்தை இதுவரை எடுத்துரைத்தேன். ஆனால் அதேசமயம் ஜனநாயகம் தோல்வியடைந்ததற்கு தவறான கோட்பாட்டை விடவும் மோசமான அமைப்பு முறை ஒரு காரணம் என்பதிலும் எனக்கு எள்ளளவும் ஐயமில்லை. எல்லா அரசியல் சமுதாயங்களும் இரண்டு வர்க்கங்களாகப் பிரிந்துள்ளன: ஆளும் வர்க்கம் ஆளப்படும் வர்க்கம் என்பவையே அவை. இது ஒரு தீமையாகும். இந்தத் தீமை இத்துடன் நின்றிருந்தால் பரவாயில்லை. ஆனால் இதிலுள்ள மிகவும் துரதிர்ஷ்டவசமான அம்சம் என்னவென்றால், இந்தப் பிரிவினை ஒரே மாதிரியானதாகவும், படிநிலையில் அமைந்திருப்பதுமாகும்; இதனால் ஆளுபவர்கள் எப்போதும் ஆளும் வர்க்கத்தைச் சேர்ந்தவர்களாகவும், ஆளப்படுபவர்கள் ஒருபோதும் ஆளும் வர்க்கமாக மாற முடியாதவர்களாகவும் இருந்து வருகின்றனர். இதன் காரணமாக மக்கள் தங்களைத் தாங்களே ஆள்வதில்லை; அவர்கள் ஓர் அரசாங்கத்தை அமைத்து அது தங்களை ஆள்வதற்கு விட்டுவிடுகின்றனர்; இது தங்கள் அரசாங்கம் இல்லை என்பதையும் மறந்துவிடுகின்றனர். இத்தகைய நிலைமையில், நாடாளுமன்ற ஜனநாயகம் மக்களது அரசாங்கமாகவோ அல்லது மக்களால் நடத்தப்படும் அரசாங்கமாகவோ ஒருபோதும் இருப்பதில்லை; இதன் காரணமாக அது மக்களுக்கான அரசாங்கமாகவும் எக்காலத்திலும் இருப்பதில்லை. நாடாளுமன்ற ஜனநாயகம் ஒரு மக்கள் அரசாங்கத்துக்குரிய அம்சங்களைக் கொண்டிருந்தபோதிலும், உண்மையில் அது வழிவழியான ஓர் ஆளப்படும் வர்க்கத்தை வாழையடி வாழையான ஓர் ஆளும் வர்க்கம் ஆளுகின்ற ஓர் அரசாங்கமாகவே எப்போதும் இருந்து வருகிறது.

அரசியல் வாழ்க்கை இவ்விதம் நேர்மைக்கேடாக, ஒழுக்கக்கேடாக, நெறிபிறழ்வாக உருவாக்கப்பட்டிருப்பதுதான் நாடாளுமன்ற ஜனநாயகம் இவ்வாறு படுதோல்வியடைந்திருப்பதற்குக் காரண மாகும். மேலும் இதன் காரணமாகவே, சுதந்திரம், சொத்துரிமை, சுபிட்ச வாழ்வு ஆகியவற்றை சாமானிய மனிதனுக்கு உத்தரவாதம் செய்வதாக தான் அளித்திருந்த வாக்குறுதியை நாடாளுமன்ற ஜன நாயகத்தால் நிறைவேற்ற முடியவில்லை.

இதற்கு யார் பொறுப்பு? இக் கேள்வி இயல்பாகவே இங்கு எழுகிறது. வறுமையிலும் வெறுமையிலும் வாடும் வர்க்கங்களுக்கு, ஓயாது ஒழியாது உழைக்கும் வர்க்கங்களுக்கு, அடக்கி ஒடுக்கப் பட்ட வர்க்கங்களுக்கு நலம் செய்ய, நன்மை புரிய நாடாளுமன்ற ஜனநாயகம் தவறிவிட்டது என்றால் அதற்கு இந்த வர்க்கங்களே பிரதானமாக பொறுப்பாகும். முதலாவதாக, மனிதர்களின் வாழ்க்கையை உருவாக்குவதில் பொருளாதார அம்சத்துக்குள்ள முக்கிய பங்கை இந்த வர்க்கத்தினர் மிகப்பெருமளவுக்கு அலட்சிப் படுத்தி விட்டனர். 'பொருளாதார மனிதனின் முடிவு' என்ற தலைப் பில் யாரோ ஒருவர் அண்மையில் ஒரு புத்தகம் எழுதியுள்ளார். பொருளாதார மனிதன் ஒருபோதும் பிறப்பதில்லை என்ற ஒரே காரணத்திற்காக பொருளாதார மனிதனின் முடிவு பற்றி உண்மையில் நாம் எதுவும் பேச முடியாது. மனிதன் ரொட்டியைக் கொண்டு மட்டுமே வாழ்வதில்லை என்று மார்க்சுக்கு பொதுவாக அளிக்கப் படும் மறுப்புரையில் துரதிர்ஷ்டவசமாக உண்மை பொதிந்துள்ளது என்றே கூற வேண்டும். பன்றிகளைப் போன்று மனிதர்களைக் கொழுக்க வைப்பதே நாகரிகத்தின் குறிக்கோள் அல்ல என்று கார்லைல் கூறியிருப்பதில் எனக்கு உடன்பாடு உண்டு. ஆனால் இந்தக் கட்டத்திலிருந்து நாம் வெகு தொலைவில் இருக்கிறோம். உழைக்கும் வர்க்கத்தினர் பன்றிகளைப்போல் தின்று கொழுத்திருக்க வில்லை; மாறாக அவர்கள் கவ்வும் குடலை இறுகப் பிடித்துக் கொண்டு பசிபட்டினியால் வாடிக்கொண்டிருக்கின்றனர். எனவே, முதலில் ரொட்டி மற்றவை எல்லாம் பின்னர்தான் என்று அவர்கள் கூறுவதில் நியாயம் இல்லாமலில்லை.

வரலாற்றைப் பொருளாதாரக் கண்ணோட்டத்தில் விளக்கும் சித்தாந்தத்தை மார்க்ஸ் முன்வைத்தார். இதன் தகைமை குறித்து காரசாரமான வாக்குவாதம் நடைபெற்றுவருகிறது. மார்க்ஸ் இதனை ஒரு சித்தாந்தமாக அன்றி தொழிலாளர்களுக்கு ஓர் அறிவுரையாகக் கூறினார் என்றே எனக்குத் தோன்றுகிறது; உடைமை வர்க்கத்தினரைப்

போன்றே உழைக்கும் வர்க்கத்தினரும் பொருளாதார நலன்களுக்குத் தலையாய முக்கியத்துவம் அளிப்பார்களேயானால், வாழ்வின் பொருளாதார அம்சங்களை இப்போதுவிடப் பெரிதும் பிரதிபலிப்பதாக வரலாறு அமைந்திருக்கும் என்று அவர் கருத்துத் தெரிவித்தார். வரலாற்றைப் பொருளாதார நோக்கில் காணும் இந்த சித்தாந்தம் முழு அளவுக்கு எதார்த்தமாகவில்லை என்றால், கூட்டு சமுதாய வாழ்க்கையைத் தீர்மானிப்பதில் பொருளாதார அம்சங்களுக்கு உரிய முக்கியத்துவம் அளிக்க உழைக்கும் வர்க்கம் தவறியதே அதற்குக் காரணமாகும். மனித வர்க்க அரசாங்கத்தைப் பற்றித் தெரிந்து கொள்ள உழைக்கும் வர்க்கங்கள் தவறிவிட்டன. உழைக்கும் வர்க்கத்தைச் சேர்ந்த ஒவ்வொருவரும் தற்கால சமூக, அரசாங்க ஒழுங்கமைப்பு குறித்த அடிப்படையான செயல்முறை ஆவணங்களை அவசியம் பரிச்சயம் செய்து கொள்ள வேண்டும். ரூசோவின் சமூக ஒப்பந்தம், மார்க்சின் கம்யூனிஸ்டு அறிக்கை, தொழிலாளர்களின் நிலை குறித்த போப்பாண்டவர் பதின்மூன்றாம் லியோவின் சுற்றுக் கடிதம், சுதந்திரம் பற்றிய ஜான் ஸ்டூவர்ட் மில்லின் நூல் ஆகிய நான்கையும் இவ்வகையில் முக்கியமாகக் குறிப்பிட வேண்டும். ஆனால் உழைக்கும் வர்க்கங்கள் இந்த ஆவணங்களின்பால் உரிய கவனம் செலுத்தத் தவறிவிட்டன. இதற்கு மாறாக, பண்டைய மன்னர்களையும் ராணிகளையும் பற்றிய புனை சுருட்டான கட்டுக் கதைகளைப் படிப்பதில் தொழிலாளர்கள் இன்பம் காணுகின்றனர்; இந்தக் கெட்டப் பழக்கத்திற்கு அடிமைகளாகி விட்டனர்.

மற்றொரு மாபெரும் குற்றத்தையும் அவர்கள் தங்களுக்குத் தாங்களே இழைத்துக் கொண்டுள்ளனர். அரசாங்கத்தைக் கைப்பற்றும் ஆர்வ விருப்பம் எதையும் அவர்கள் கொண்டிருக்கவில்லை. தங்களது நலன்களைப் பாதுகாத்துக்கொள்ளும் ஒரு வழிமுறையாக அரசாங்கத்தைத் தங்கள் கட்டுப்பாட்டில் வைத்திருப்பது அவசியம் என்பதையும்கூட அவர்கள் உணர்ந்திருக்கவில்லை. இன்னும் சொல்லப் போனால் அரசாங்கம் குறித்து அவர்கள் எத்தகைய அக்கறையையும் கொண்டிருக்கவில்லை. மனித குலத்துக்கு நேர்ந்த எல்லா அவலங்களிலும் இதுதான் மிகப் பெரியதும், மிகமிக வருந்தத்தக்கதுமாகும். அவர்கள் எத்தகையதொரு அமைப்பை வரித்துக் கொண்டிருந்தாலும் அது தொழிற்சங்க வடிவத்தையே எய்திற்று. இதை வைத்து நான் தொழிற்சங்கங்களை எதிர்ப்பவன் என்று எண்ணிவிட வேண்டாம். அவை மிகவும் பயனுள்ள நோக்கத்தை நிறைவேற்று

கின்றன என்பதில் ஐயமில்லை. ஆனால் தொழிலாளர்களுக்கு நேர்ந்துள்ள எல்லாக் கேடுகளுக்கும் தொழிற்சங்கங்கள் சர்வரோக நிவாரணி, சஞ்சீவி மருந்து என்று நினைப்பது தவறாகும். தொழிற் சங்கங்கள் என்னதான் சக்தி மிக்கவையாக இருந்தாலும் முதலாளித் துவத்தை நேர்மையான வழியில் இட்டுச் செல்லும்படி முதலாளி களை நிர்ப்பந்திக்கும் ஆற்றல், வலிமை அவற்றுக்கு இல்லை. அவை நம்பி இருக்கும்படியான ஒரு தொழிலாளர் அரசாங்கம் அவற்றுக்குப் பின்னால் இருந்தால் தொழிற்சங்கங்கள் இன்னமும் மிகவும் சக்தி படைத்தவையாக இருக்க முடியும். அரசாங்கத்தைத் தங்கள் கட்டுப்பாட்டில் வைத்திருப்பதே தொழிலாளர்களின் குறிக் கோளாக இருக்க வேண்டும். அரசாங்கத்தைத் தங்கள் கட்டுப்பாட் டில் வைத்திருப்பதை தொழிற்சங்க இயக்கம் தனது நோக்கமாகக் கொண்டிருந்தாலொழிய தொழிற்சங்கங்கள் தொழிலாளர்களுக்கு அதிக நன்மை ஏதும் செய்துவிட முடியாது; தொழிற் சங்கத் தலை வர்கள் தங்களுக்குள் ஓயாது சண்டை போட்டுக்கொண்டு -சிண்டு பிடித்துக்கொள்ளும் ஒரு களமாகவே அவை இருந்துவரும்.

உழைக்கும் வர்க்கங்களைப் பீடித்திருக்கும் மூன்றாவது பிணி தேசிய கோஷத்துக்கு மிக எளிதாக மயங்கிவிடுவதாகும். தொழி லாளர் வர்க்கத்தினர் எல்லா வகைகளிலும் வறியர்களாக இருக் கின்றனர்; தங்களுடைய மிகக் குறைந்தபட்சத் தேவைகளையே நிறைவேற்றிக் கொள்ள இயலாதவர்களாக இருக்கின்றனர். அப்படி யிருக்கும்போது தேசியம் என்று கூறப்படும் லட்சியத்துக்காக தங்க ளிடமிருக்கும் சகலவற்றையும் பல சந்தர்ப்பங்களில் தியாகம் செய்து விடுகின்றனர். தாங்கள் இவ்வளவு தியாகம் செய்யும் அந்த தேசியம் வெற்றி பெற்றுவிடும்போது அது தங்களுக்கு சமூக சுதந்திரத்தை யும் பொருளாதாரச் சுதந்திரத்தையும் உத்தரவாதம் செய்யுமா என்று அறிய அவர்கள் ஒருபோதும் அக்கறை எடுத்துக்கொள்வதில்லை. அதுமட்டுமல்ல, தேசியம் வெற்றிவாகை சூடி அதிலிருந்து உதய மாகும் ஒரு சுதந்திர அரசு, இவர்களது எண்ணற்ற தியாகங்களால் கருவாகி உருவான அரசு இவர்களது எசமானர்களின் ஆதிக்கத் துக்கு உள்ளாகி இவர்களுக்கே பகையானதாக மாறிவிடுவதைப் பல சந்தர்ப்பங்களில் பார்த்திருக்கிறோம். தொழிலாளர்கள் தங்களை இலக்காக்கிக் கொள்ளும் மிக மிகக் கொடிய சுரண்டல் வகையைச் சேர்ந்ததாகும் இது.

எனவே, ஒரு நாடாளுமன்ற ஜனநாயக அமைப்பின்கீழ் உழைக்கும் வர்க்கங்கள் வாழ நேரிடுமாயின் அதனை தங்கள் நலன் களுக்குச் சேவை செய்யக்கூடியதாக மாற்றுவதற்கான வழிமுறை களை அந்த வர்க்கங்கள் வகுத்துக்கொள்ள வேண்டும். இந்தக் குறிக்கோளை எய்த வேண்டுமானால் இரண்டு காரியங்களை அது செய்ய வேண்டும் என்பது என் கருத்து. முதலாவதாக தொழிற் சங்கங்களை அமைப்பதை மட்டுமே இந்தியாவில் தொழிலாளர் களின் இறுதி லட்சியமாக, குறிக்கோளாகக் கொள்வதைக் கைவிட வேண்டும். அரசாங்கம் தொழிலாளர் கைகளுக்கு வருவதை தனது இலட்சியமாக அது பிரகடனப்படுத்த வேண்டும். இதன் பொருட்டு ஒரு தொழிலாளர் கட்சியை அரசியல் கட்சியாக உருவாக்க வேண்டும். இத்தகையதொரு கட்சி தொழிற் சங்கங்களையும் தனது அமைப்புக்குள் கொண்டிருக்கும் என்பதில் ஐயமில்லை. ஆனால் இத்தகைய கட்சி தொழிற்சங்க இயக்கத்தின் குறுகிய, இடுங்கிய கண்ணோட்டத்திலிருந்து விடுபட்டதாக இருக்க வேண்டும். ஏனென் றால் பொதுவாக தொழிற்சங்கங்கள் இறுதி நலன்களை விட உடனடி நலன்களையும், தொழிலாளர்களைப் பிரதிநிதித்துவப் படுத்த தொழிற்சங்கத் தலைவர்களுக்குள்ள உரிமையையும் வலி யுறுத்துபவையாகவுமே இருக்கும். மேலும் தொழிலாளர்களின் இந்தக்கட்சி இந்து மகாசபை அல்லது காங்கிரஸ் போன்ற வகுப்பு வாத அல்லது முதலாளித்துவக் கட்சிகளிலிருந்தும் விலகி இருக்க வேண்டும். காங்கிரசோ அல்லது இந்து மகாசபையோ இந்தியாவின் சுதந்திரத்திற்காகப் போராடி வருவதாக உரிமை கொண்டாடிவரும் கட்சிகள் என்பதற்காக அவற்றில் சேர வேண்டிய அவசியமோ அல்லது அக்கட்சிகளின் பரிவாரத்தினராக இருக்க வேண்டிய கட்டாயமோ தொழிலாளர்களுக்கு இல்லை. மாறாக, தொழிலாளர் களே தங்களது சொந்த அணிகளைக் கொண்ட ஒரு தனியான அரசியல் அமைப்பாக உருவாகி இந்த இரு நோக்கங்களுக்காகவும் பாடுபட முடியும். காங்கிரஸ் மற்றும் இந்து மகாசபையின் உடும்புப் பிடிகளிலிருந்து விடுபடுவதன் மூலம் அது இந்தியாவின் விடுதலைக் காக சிறந்த முறையில் போராட முடியும். அதேசமயம் தேசியத்தின் பேரால் தான் ஏமாற்றப்படுவதிலிருந்தும் தன்னைப் பாதுகாத்துக் கொள்ள முடியும். இதை எல்லாம் விட முக்கியமாக இந்திய அரசியலில் நடைபெற்றுவரும் திருகுஜாலங்களுக்கு அது முற்றுப் புள்ளி வைக்க முடியும். இந்திய அரசியலில் இன்று எத்தகைய காட்சியைக் காண்கிறோம்? காங்கிரஸ்தான் ஒரு புரட்சிகர கட்சி

என்று கூரை மீது ஏறி நின்று கூவிவருகிறது. அதனைப் பின்பற்று பவர்கள் பெரும் எண்ணிக்கையில் இருப்பதற்கு இதுவே காரணம். ஆனால் அதேசமயம் காங்கிரஸ் அரசியல் ஏமாற்றத்தைத் தவிர வேறு எதையும் கொண்டுவரவில்லை என்பது மறுக்க முடியாத உண்மை. காங்கிரஸ் அரசியல் பகுத்தறிவுக்கு ஒவ்வாது இருப்பதே இதற்குக் காரணம். அக்கட்சிக்கு சரியான போட்டி இல்லாததாலேயே அது தறிகெட்டுத் தாண்டவமாடுகிறது. இந்நிலைமையில் இந்தியா வில் ஒரு தொழிற்கட்சி உதயமாகுமானால், கடந்த இருபதாண்டு களாக இந்திய அரசியலில் கொட்டமடித்துவரும் அராஜக நிலைக்கு அது முடிவுகட்டும் இந்தியாவிலுள்ள தொழிலாளர்கள் தெரிந்து கொள்ள வேண்டிய இரண்டாவது விஷயம் அறிவாற்றல் இல்லை யேல் அதிகாரம் இல்லை என்பதாகும். இந்தியாவில் ஒரு தொழிற் கட்சி அமைக்கப்படுமானால், ஆட்சி பீடத்தில் தன்னை அமர்த்த வேண்டும் என்ற கோரிக்கையை அது வாக்காளர்களிடம் முன் வைக்குமானால், தொழிலாளர்கள் ஆட்சி செய்யத் தகுதியானவர் கள்தானா என்ற ஒரு கேள்வி எழும் என்பது நிச்சயம். மற்ற வர்க் கங்களைவிட தொழிலாளர்கள் மோசமாக ஒன்றும் ஆட்சி செய்ய மாட்டார்கள் அல்லது உள்நாட்டு விவகாரங்களிலோ, அயல்நாட்டு விவகாரங்களிலோ அப்படி ஒன்றும் ஒட்டாண்டிகளாக நடந்து கொள்ள மாட்டார்கள் என்று நொண்டிச் சமாதானம் கூறுவது இக் கேள்விக்கு சரியான, முறையான, நேரிய பதிலாக இருக்க முடியாது. மாறாக, தொழிலாளர்கள் சிறப்பாக, திறம்பட ஆட்சி செய்ய முடியும் என்பதைத் திட்டவட்டமாக மெய்ப்பித்தாக வேண்டும். அதேசமயம் இதர வர்க்கங்களின் அரசாங்க பாணியைவிட தொழிலாளர்களின் அரசாங்க பாணி மிகவும் கடினமானது என்பதையும் மறந்துவிடக் கூடாது. தொழிலாளர்களின் அரசாங்கம் வரைமுறையற்ற, கட்டுப் பாடற்ற அரசாங்கமாக இருக்க முடியாது. அது முக்கியமாக ஒரு கட்டுப்பாட்டு முறையில் அமைந்த அரசாங்கமாகவே இருக்கும். ஒரு சிறந்த கட்டுப்பாட்டு முறையை உருவாக்குவதற்கு அதிகளவு அறிவாற்றலும் பயிற்சியும் தேவை. இந்தியாவில் உள்ள தொழி லாளர்கள் படிப்பின் முக்கியத்துவத்தை உணரத் தவறிவிட்டது துர திர்ஷ்டவசமானதாகும். இந்தியாவிலுள்ள தொழிற்சங்கத் தலைவர் கள் செய்திருப்பதெல்லாம் தொழிலதிபர்கள்மீது எவ்விதம் வன்மை யோடு உக்கிரத்தோடு வசைபாட முடியும் என்பதைக் கற்றுக் கொண் டிருப்பதுதான். திட்டுவது, மேலும் மேலும் திட்டுவதுதான் ஒரு தொழிற்சங்கத் தலைவனது முழு முதல் கடமையாகி விட்டது.

ஆகவே, இந்தியத் தொழிலாளர் சம்மேளனம் இந்தக் குறைபாட்டை உணர்ந்து கொண்டிருப்பதையும், தொழிலாளர் வர்க்கங்களுக்காக இந்தப் பயிற்சி முகாம்களைத் தொடங்க முன்வந்திருப்பதையும் அறிந்து மிகுந்த மகிழ்ச்சி அடைகிறேன். ஆட்சி புரிவதற்கு தொழிலாளர்களைத் தகுதியுடையவர்களாக ஆக்க இந்தப் பயிற்சி முகாம்கள் சிறந்த சாதனங்களாக விளங்கும் என்பதில் ஐயமில்லை. ஒரு தொழிற்கட்சியைத் தொடங்க வேண்டிய அவசியத்தை சம்மேளனம் மறந்துவிடாது என்றும் நம்புகிறேன். இது செய்யப்படுமானால், ஆளும் வர்க்கத்தின் அந்தஸ்துக்குத் தங்களை உயர்த்தியமைக்காக தொழிலாளர் வர்க்கங்கள் சம்மேளனத்துக்குப் பெரிதும் நன்றிக்கடன் பட்டிருக்கும்.



# 21

## [1]இந்தியத் தொழிற்சங்கங்கள் (திருத்த) மசோதா

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்) :*

> ''1926-ஆம் வருட இந்தியத் தொழிற்சங்கங்களின் சட்டத்தை மேலும் திருத்தக் கோரும் இந்த மசோதாவை பொதுமக்களின் கருத்தறிய சுற்றுக்கு விட வேண்டுமென்று முன்மொழிகிறேன்.''

இந்த மசோதா குறித்து பொதுமக்களின் கருத்து அறியும் பொருட்டு சுற்றுக்கு விடுவதே இதன் நோக்கமாகும். எனவே, இந்த மசோதாவில் அடங்கியுள்ள விதிகள் குறித்து எவ்வகையிலும் விரிவான விவாதம் நடத்தி அவையின் நேரத்தை எடுத்துக் கொள்வது அவசியமற்றது என்று எனக்குத் தோன்றுகிறது. இந்த மசோதாவின் பிரதான அம்சங்கள் என்ன, இதனை அரசு ஏன் கொண்டுவருகிறது என்பதை அவைக்குக் கூறினால் போதுமானது என்று கருதுகிறேன்.

இந்த மசோதா மூன்று பிரதான அம்சங்களைக் கொண்டிருக்கிறது. முதலாவதாக, தொழிற் சங்கத்தை தொழிலதிபர் அங்கீகரிப்பதை இந்த மசோதா கட்டாயமாக்குகிறது. இரண்டாவதாக, இவ்வாறு தொழிலதிபரால் அங்கீகரிக்கப்படும் தகுதியைப் பெறுவதற்கு தொழிற்சங்கம் சில நிபந்தனைகளை நிறைவேற்ற வேண்டுமென்று மசோதா கோருகிறது. மூன்றாவதாக, இம் மசோதாவில் குறிப்பிடப்பட்டிருக்கும் எல்லா நிபந்தனைகளையும் முறையாக நிறைவேற்றி, அங்கீகாரத்துக்குத் தகுதிபெற்ற தொழிற்சங்கத்தை தொழிலதிபர் அங்கீகரிக்க மறுப்பதை சட்டப்படி தண்டிக்கப்படத் தக்க ஒரு குற்றமாக மசோதா அறிவிக்கிறது.

நான் ஏற்கெனவே குறிப்பிட்டது போன்று, இந்த மசோதாவின் தகுதிகள் குறித்து இப்போது விரிவாக விவாதிக்க வேண்டிய

---

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, நவம்பர் 13, 1943, பக்கங்கள் 252 - 254.

அவசியம் ஏதுமில்லை. இந்த மசோதா தற்போது சுற்றுக்கு விடப் படுவதால் இப்போதைய கட்டத்தில் அதில் அரசாங்கம் முன் வைத்திருக்கும் ஷரத்துகள் தற்காலிகமானவையே என்பது தெளிவு. இவை இறுதியானவை அல்ல. தொழிலாளர் தலைவர்கள், தொழி லதிபர்கள், மாகாண அரசாங்கங்கள், மற்றும் இந்த நடவடிக்கை யுடன் சம்பந்தப்பட்ட ஏனைய தரப்பினர் போன்றோரின் கருத்து களைப் பெறும் வரை இந்த ஷரத்துகளை இறுதியானவையாக்கும் உத்தேசம் ஏதும் அரசாங்கத்துக்கு இல்லை என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். எனவே, மசோதா சுற்றுக்கு விடப்படுவதன் விளை வாக பெறப்படும் பல்வேறு பரிந்துரைகளையும், யோசனைகளை யும் கருத்திற்கொண்டு அரசாங்கம் செயல்படும்போது இம்மசோதா இப்போதிலிருப்பதற்கு முற்றிலும் மாறுபட்டதாக இருக்கக்கூடும்.

திரு. என்.எம். ஜோஷி (அதிகார சார்பமற்ற நியமன உறுப்பினர்) : இதுவே சரியான நடைமுறை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** அனைவரது கருத்தும் இவ்வாறே இருக்கும் என்று நம்புகிறேன். எனவே, இப்போது அவைக்கு நான் சொல்ல விரும்புவதெல்லாம் இந்திய அரசாங்கம் இந்தப் பொறுப்புகளை ஏன் ஏற்றுக்கொண்டது என்பதைத்தான்.

இந்த விஷயம் ஏற்கெனவே பரிசீலிக்கப்பட்டது என்பதை யும், தொழிற் சங்கங்களை தொழிலதிபர்கள் அங்கீகரிக்கும் பிரச் சினை சம்பந்தமாக மிகுந்த கவனம் செலுத்தப்பட்டது என்பதையும் அவை அறியும். தொழிலாளர்கள் பிரச்சினையை ஆய்வு செய்து அறிவதற்கு மன்னரால் ராயல் கமிஷன் அமைக்கப்பட்டது அனை வருக்கும் தெரியும். தொழிற்சங்கங்கள் ஆரோக்கியமான முறையில் வளர்ச்சியுறுவதற்கும், தொழிலதிபர்களுக்கும் தொழிலாளர்களுக் கும் இடையே நேச உறவுகளைக் கட்டி வளர்ப்பதற்கும் தொழிற் சங்கங்களை அங்கீகரிப்பது எவ்வளவு முக்கியமானது என்பதை ராயல் கமிஷன் பெரிதும் வலியுறுத்தி இருந்ததை அது வெளியிட்ட அறிக்கையைப் படித்த மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் அறிந்திருப் பார்கள். சட்ட நடவடிக்கைகள் ஏதுமின்றி, தொழிலதிபர்களின் விருப்பார்வ சம்மதத்தோடு தொழிற்சங்க அங்கீகாரத்தைப் பெற முடியுமானால் அது மிகவும் உகந்ததாகவும், விரும்பத்தக்கதாக வும் இருக்கும் என்று அப்போதைய கட்டத்தில் ராயல் கமிஷன் தெரிவித்த கருத்தும் அவைக்கு நினைவிருக்கும். அது மட்டுமல்ல, தொழிற்சங்கங்களை தாமே முன்வந்து அங்கீகரிக்க தொழிலதிபர்

கள் தயாராக இல்லை என்பதை 1929-ல் 12 ஆண்டுக் காலத்திற்குப் பிறகு - ராயல் கமிஷன் அறிவித்ததும் கூட அவைக்கு நினைவிருக்கும். இன்னும் சொல்லப்போனால் தொழிற் சங்கங்களை அங்கீகரிப்பதை எதிர்த்து ராயல் கமிஷன் முன் தொழிலதிபர்கள் என்ன ஆட்சேபனைகளைத் தெரிவித்தார்களோ அதே ஆட்சேபனைகளைத் தான் தொழிற்சங்கங்களை அங்கீகரிக்க மறுப்பதற்கு இப்போதும் கூறுகின்றனர். எனவே, நிலைமை எவ்வகையிலும் மேம்படவில்லை என்பதையே இது காட்டுகிறது.

1937-ல் மாகாண சுயாட்சி உதயமாகி, புதிய சட்டத்தின்படி பெரும்பாலான மாகாண அரசாங்கங்கள் பதவியேற்ற பிறகு இந்தப் பிரச்சினை மீண்டும் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டதை மதிப்பிற்குரிய அவை உறுப்பினர்கள் நினைவில் வைத்திருப்பர் என்று நம்புகிறேன். தொழிற் சங்கங்களைத் தொழிலதிபர்கள் அங்கீகரிப்பது சம்பந்தமாக பல தனிநபர் மசோதாக்களும் அமைச்சரவைகளின் மசோதாக்களும் அப்போது கொண்டுவரப்பட்டன. இதுகுறித்து தனியார் மசோதா ஒன்றும், அப்போதைய அமைச்சரவையின் மசோதா ஒன்றும் சென்னையில் தாக்கல் செய்யப்பட்டதை இதற்கு உதாரணமாகக் கூறலாம். இதேபோன்று பம்பாயில் பம்பாய் தொழில் தகராறுகள் மசோதாவை அரசாங்கம் கொண்டுவந்தது. மத்திய மாகாணங்களில் இதே மாதிரியான ஒரு மசோதாவைக் கொண்டுவர உத்தேசிக்கப்பட்டு, அதற்கான நகல் ஒன்றும் தயாரிக்கப்பட்டது. ஐக்கிய மாகாணங்களிலும் இவ்வாறே செய்யப்பட்டது. துரதிர்ஷ்டவசமாக பம்பாயில் தவிர ஏனைய மாகாணங்களில் இந்த மசோதாக்கள் சட்டமாவதற்கு முன்பே அங்கிருந்த அமைச்சரவைகள் பதவி விலகி விட்டன. எனினும், மாகாண சுயாட்சி நடைமுறைக்கு வந்த பிறகு மத்திய அரசாங்கத்துக்கும் மாகாண அரசாங்கங்களுக்கும் இடையே ஒத்துழைப்பை வலுப்படுத்தும் பொருட்டு இந்திய அரசாங்கம் பல நடவடிக்கைகளை எடுத்துக் கொண்டது. இத்தகைய நடவடிக்கைகளில் ஒன்று அவ்வப்போது தொழிலாளர் நலத்துறை மாநாடுகளை நடத்துவதாகும். இத்தகைய முதல் மாநாடு 1940ல் நடைபெற்றது. அப்போது இந்தப் பிரச்சினை மத்திய அரசாங்கத்துக்கும் மாகாண அரசாங்கங்களுக்கும் இடையே விவாதிக்கப்பட்டது. இந்த விஷயத்தில் ஒரு திட்டவட்டமான முடிவுக்கு வருவதற்கு மாநாட்டின் முன் போதிய தகவல்கள் இல்லை என்பது அப்போது உணரப்பட்டது. எனவே இந்த விஷயம் குறித்து மாகாண அரசாங்கங்கள், தொழிலாளர் தலைவர்கள், தொழிலதிபர்கள் போன்றோரின் கருத்தறிவதற்காக மாகாண அரசாங்கங்களுக்கு இதனை

அனுப்பி வைக்கும்படி மத்திய அரசாங்கத்தை மாநாடு கேட்டுக் கொண்டது. இவ்வாறு சேகரிக்கப்பட்ட கருத்துகள் 1941-ஆம் ஆண்டில் கூட்டப்படவிருக்கும் தொழிலாளர் நலத்துறை அமைச்சர்கள் மாநாட்டின் இரண்டாவது கூட்டத்தொடரில் சமர்ப்பிக்கப்பட வேண்டும் என்றும் அது தெரிவித்தது. எனவே இதன் பேரில், இது விஷயம் குறித்து பல்வேறு தரப்பினரின் கருத்துகளைச் சேகரித்து அனுப்பும்படி மாகாண அரசாங்கங்களுக்கு மத்திய அரசாங்கம் கடிதம் எழுதிற்று. அவ்வாறே பல்வேறு மாகாண அரசாங்கங்களும் ஏராளமான விவரங்களையும் கருத்துகளையும் சேகரித்து மத்திய அரசாங்கத்துக்கு அனுப்பிவைத்தன. இவை யாவும் 1941ல் நடைபெற்ற தொழிலாளர் நலத்துறை அமைச்சர்களின் மாநாட்டில் சமர்ப்பிக்கப்பட்டன. அப்போது பின்கண்ட முடிவு எடுக்கப்பட்டது: இது விஷயம் குறித்து மத்திய அரசாங்கம் ஒரு சட்டம் இயற்ற வேண்டும் என்றும், அது முற்றிலும் மாகாண ரீதியிலானதாக இருத்தலாகாது என்றும், மாகாண அரசாங்கங்களிடமிருந்தும், பிரச்சினையில் சம்பந்தப்பட்ட எல்லாத் தரப்புகளிலிருந்தும் வரும் பதில்களை அடிப்படையாகக் கொண்டு அந்தச் சட்டம் இயற்றப்பட வேண்டும் என்றும் தீர்மானிக்கப் பட்டது. இதன் விளைவாக மத்திய அரசாங்கம் இப்பணியை மேற்கொண்டது. பல்வேறு மாகாணங்களிலிருந்து பெறப்பட்ட தகவல்களையும் சம்பந்தப்பட்ட பலதரப்பட்ட தரப்பினர் தெரிவித்த கருத்துகளையும் அடிப்படையாகக் கொண்டே இப்போதைய இந்த மசோதா தயாரிக்கப்பட்டிருக்கிறது. இதுதான் இந்த மசோதாவின் பிறப்பு மூலம். தொழிலாளர்கள் சம்பந்தமாக சட்டம் இயற்றுவது மாகாண அரசாங்கத்தின் பொறுப்பு என்றாலும் மத்திய அரசாங்கம் இப்பணியை தானே மேற்கொண்டதற்கு இந்த சந்தர்ப்ப சூழ்நிலைகள்தான் காரணம்.

இந்த மசோதா குறித்து மேற்கொண்டு எதுவும் கூறுவது அவசியம் என்று நான் நினைக்கவில்லை. நான் ஏற்கெனவே கூறியது போன்று இந்தப் பிரேரணைகள் எல்லாம், முன்மொழிவுகள் எல்லாம் தற்காலிகமானவையே, முடிவானவை அல்ல. இந்த நகல் மசோதா பற்றிப் பல்வேறு தரப்பினரிடமிருந்தும் கருத்துகள் பெறும் வரை இது விஷயத்தில் முடிவு ஏதும் எடுப்பதற்கில்லை. நான் இப்போது சொல்ல விரும்புவதெல்லாம் இந்த சட்டமன்றம் எதிர் நோக்கிய மிக முக்கியமான சட்ட நடவடிக்கைகளில் இதுவும் ஒன்றாகும் என்பதே ஆகும். மேலும் இது ஒரு தனிச் சிறப்பு வாய்ந்த மசோதாவாகும். அமெரிக்காவையும் சுவீடனையும் தவிர மற்ற நாடுகளில் எல்லாம் தொழிற்சங்கங்களை அங்கீகரிக்கும் விஷயம்

சுயவிருப்பத்துக்கு விடப்பட்டிருக்கிறது. இது ஒரு சர்ச்சைக்குரிய மசோதாவாக இருக்காது என்று நம்புகிறேன். மசோதாவிலுள்ள எந்த ஒரு ஷரத்தையும் பற்றி நான் முடிவு எடுப்பதற்கு முன்னர் பொது மக்களின் அபிப்பிராயத்தைக் கேட்டறிய விரும்புகிறேன். எனவே, அது சம்பந்தமான பிரேரணையை முன்வைக்கிறேன்.

**திரு. தலைவர்** *(மாண்புமிகு சர் அப்துல் ரஹீம்)* : பிரேரணை முன்மொழியப்படுகிறது :

> "1926-ஆம் வருட இந்தியத் தொழிற்சங்கங்களின் சட்டத்தை மேலும் திருத்தக் கோரும் இந்த மசோதாவை பொதுமக்களின் கருத்தறிய சுற்றுக்கு விட வேண்டுமென்று முன்மொழிகிறேன்."

★ ★ ★

[1]**திரு. பி.ஜே. கிரிபித்ஸ்** *(அசாம் : ஐரோப்பியப் பிரதிநிதி)* : தலைவர் அவர்களே, பொது மக்களின் கருத்தறிய மசோதாவைச் சுற்றுக்கு விட வேண்டும் என்பதே இப்போதைய முன்மொழிவாகும்.,... தொழிற்சங்கங்களுக்குப் பல பகைவர்கள் இருக்கிறார்கள் என்பதை மாண்புமிகு நண்பருக்கு நினைவூட்டுகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** : தொழிலதிபர்கள் அவர்களில் ஒருவர்.

★ ★ ★

[1] **மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்** : ஐயா, சுற்றுக்கு விடுவதற்கு நான் முன்வைத்திருக்கும் மசோதா சர்ச்சையைக் கிளர்த்தி விட்டிருக்கிறது. இது எதிர்பாராததாகும். நான் ஆரம்பத்திலேயே குறிப்பிட்டது போல் இந்த மசோதா சர்ச்சைக்குரியது என்பதில் ஐயமில்லை. ஆனால் அதேசமயம் எத்தகைய சர்ச்சையிலும் ஈடுபட நான் விரும்பவில்லை என்பதையும், பல்வேறு சந்தேகங்களுக்கும் பதிலளிக்கத் தயாராக இருக்கிறேன் என்பதையும் தொடக்கத்திலேயே தெளிவுபடுத்தினேன். இந்த விவாதத்தில் பங்கு கொண்டு தங்கள் கருத்துகளைத் தெரிவித்த மதிப்பிற்குரிய உறுப்பினர்களை

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, நவம்பர் 13, 1943, பக்கம் 256.
2. மேற்படி தொகுதி, பக்கம் 276.

எவ்வகையிலும் அவமதிக்க வேண்டும் என்ற எண்ணத்தில் இதனை நான் செய்யவில்லை. அவர்கள் தெரிவித்துள்ள கருத்துகளைக் கணக்கிலெடுத்துக் கொள்வேன் என்பதையும், உரிய சந்தர்ப்பம் வரும்போது அவற்றைப் பரிசீலனைக்கு எடுத்துக்கொள்வேன் என்பதையும் அவர்களுக்கு உறுதி கூறுகிறேன்.

இப்போது நான் எழுந்து பேசுவது சபையின் முன் வைக்கப் பட்டுள்ள பல்வேறு வாதங்களுக்குப் பதில் கூறுவதற்காக அல்ல. எனினும் அதே சமயம் என்னுடைய நண்பர் திரு. கிரிபித்ஸ் முன் வைத்துள்ள சில விமர்சனங்களுக்கு நான் பதில்கூறக் கடமைப் பட்டிருக்கிறேன். அவர் தெரிவித்துள்ள ஒரு கருத்து மிகவும் நியாய மற்றது என்று கருதுகிறேன். ஒரு வகையில் தெளிவற்றதும், அவ ருடைய சொற்களிலேயே கூறுவதானால் பொருளற்ற ஷரத்துகளைக் கொண் டதுமான ஒரு மசோதாவை நான் கொண்டுவந்திருப்பதாக அவர் கூறினார். இத்தகைய தெளிவற்ற, பொருளற்ற ஷரத்துகளைக் கொண்ட ஒரு மசோதாவை பரிசீலிக்க வேண்டுமென்று அவையை நான் கேட்டுக் கொண்டிருப்பது நேர்மையற்றது, நியாயமற்றது என்பது அவரது வாதம். இந்த வாதத்தை நான் ஏற்றுக் கொள்ள முடியாது. இந்தக் குற்றச்சாட்டு முற்றிலும் தவறானது, ஆதாரமற்றது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன். முதலாவதாக இந்த மசோதா வின் நோக்கத்தைப் புரிந்துகொள்ள முடியாத அளவுக்குத் தெளிவற்ற அல்லது அர்த்தமற்ற எந்த விதிகளும் இதில் இருப்பதாக நான் ஒப்புக் கொள்ள மாட்டேன். அப்படியே ஒரு சில ஷரத்துகள் தெளிவற்றவை யாகவும், வேறு சில ஷரத்துக்கள் இன்னும் அதிக விளக்கம் தேவைப் படுபவையாகவும் இருப்பதாக ஒரு வாதத்துக்கு ஒப்புக் கொண் டாலும்கூட இந்தக் குற்றச்சாட்டை நேர்மையானதாக நான் கருத வில்லை. இப்போது சபையின் முன் வைத்துள்ள இந்த மசோதாவை இப்போதைய அதன் வடிவத்தில் அப்படியே சட்டமாக்க வேண்டு மென்று அவையை நான் கேட்டால் அதை குறைகூறுவதை என் னால் புரிந்து கொள்ள முடியும்; ஆனால் நான் அவ்வாறு கேட்க வில்லை. மாறாக, பொது மக்களின் அபிப்பிராயத்தை அறிவதற்கு மசோதாவைச் சுற்றுக்கு விடுவதற்கு அனுமதிக்க வேண்டும் என்று தான் கேட்கிறேன். இவ்வாறு சுற்றுக்கு விடப்படுமானால் பல்வேறு தரப்பினரின் வழிகாட்டுதலை அரசாங்கம் பெற முடியும்; இத்தகைய வழிகாட்டுதலின் மூலம் மசோதாவில் விடப்பட்ட இடைவெளி களை முடிவில் நிரப்புவதும், தெளிவற்ற ஷரத்துக்களை திட்ட வட்டமானவையாக ஆக்குவதும் சாத்தியமாகும். எனவே, திரு. கிரிபித்ஸ் தெரிவித்துள்ள குற்றச்சாட்டுக்கு எத்தகைய ஆதாரமும் இல்லை என்பதைக் கூறிக்கொள்கிறேன்.

இந்த மசோதாவை கோட்பாட்டளவில் தவறானதாகத் தாம் கருதுவதாகவும் திரு. கிரிபித்ஸ் கூறினார். இது அவரவர்களது அபிப் பிராயத்தைப் பொறுத்தது. இந்த மசோதா கோட்பாட்டளவில் முற்றி லும் ஆரோக்கியமானது, சட்டமாக்கப்படுவதற்கு அறவே தகுதி யானது என்று இன்னொரு புறத்தில் பலர் கருத்துத் தெரிவித்ததை யும் நாம் செவிமடுத்துக் கேட்டோம். எனவே, அவரது இந்தக் குற்றச் சாட்டை இங்கு நான் கணக்கிலெடுத்துக் கொள்ளப் போவதில்லை.

அவர் எழுப்பியிருக்கும் இரண்டாவது பிரச்சினை பிரதிநிதித் துவம் வாய்ந்த ஒரு தொழிற் சங்கம் என்பது என்ன என்பதை நான் விளக்கவில்லை என்பதாகும். இப்போது நான் கூறப்போவதை அவர் தமது மனத்தைப் புண்படுத்துவதாக எடுத்துக்கொள்ளவில்லை என்றால் ஒன்றைக் கூறுகிறேன்: ஒன்று அவர் இந்த மசோதாவின் ஷரத்துக்களை படித்திருக்க மாட்டார் அல்லது அப்படியே படித் திருந்தாலும் அவற்றைப் புரிந்து கொண்டிருக்க மாட்டார். இந்த மசோதாவில் இரண்டு பிரதான நிபந்தனைகள் விதிக்கப்பட்டிருப் பதை அதன் ஷரத்துக்களிலிருந்து தெள்ளத் தெளிவாகத் தெரிந்து கொள்ளலாம். முதல் நிபந்தனை - ஒரு தொழிற்சங்கம் அங்கீகரிக்கப் படுவதற்கு முன்னர் அது சில கட்டுப்பாடுகளை, வரையறைகளைப் பூர்த்தி செய்ய வேண்டும். இரண்டாவது நிபந்தனை - இத்தகைய கட்டுப்பாடுகளையும் வரையறைகளையும் அது பூர்த்தி செய்வது மட்டும் போதாது, ஒரு குழுமம் நடத்தும் தேர்வுக்குள்ளாகி அதன் தகுதிச் சான்றிதழையும் பெற வேண்டும். உண்மையில், இன்னும் சொல்லப்போனால், தொழிலாளர்கள், அரசாங்கம், தொழிலதிபர்கள் ஆகியோர் அடங்கிய ஒரு முத்தரப்பு குழுமம் வழங்கும் சான்றிதழில் குறிப்பிடப்படும் இதர நிபந்தனைகளைப் பொறுத்துத் தொழிற்சங்கத் தின் பிரதிநிதித்துவ இயல்பு அமைந்திருக்கும்; இது இந்த மசோதா வின் பிரதான கோட்பாடாக, அடிப்படை அம்சமாக இருக்கும். இது ஒருபுறமிருக்க, நிர்ணயிக்கப்படும் வேறு சில நிபந்தனைகளையும் தொழிற்சங்கம் பூர்த்தி செய்ய வேண்டும் என்று கூறும் 28 (டி) ஷரத்தின் (ஜி) உப ஷரத்தையும் என்னுடைய நண்பர் பெரிதும் ஆட்சேபித்திருக்கிறார். இந்த ஷரத்தின் நோக்கத்தை திரு. கிரிபித்ஸ் எவ்வாறு முற்றிலும் தவறாகப் புரிந்து கொண்டார் என்பதையும் என்னால் நினைத்துப் பார்க்க முடியவில்லை. இதில் அரசாங்கத்தின் நிலை என்னவென்றால் .....

திரு. பி.ஜே. கிரிபித்ஸ் : இங்கு ஒரு விஷயத்தைத் தெளிவு படுத்த விரும்புகிறேன். இந்த உப ஷரத்து (ஜி) பற்றி நான் குறிப் பிடவே இல்லை.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : மதிப்பிற்குரிய உறுப்பினரை நான் தவறாகப் புரிந்து கொண்டிருந்தால் அதற்காக மிகவும் வருந்துகிறேன். மேலே கூறியபடி அவர் பேசியதாகத்தான் நான் எடுத்துக்கொண்டேன். நான் கூற விரும்புவதெல்லாம் இதுதான். இது விஷயத்தில் அரசாங்கத்தின் நிலை முற்றிலும் தெளிவாக இருக் கிறது. அதனை இரத்தினச் சுருக்கமாகக் கூற முடியும். 1941ல் எங்க ளுக்குத் தெரிவிக்கப்பட்ட கருத்துகளின் அடிப்படையிலும், தொழி லாளர்களையும் முதலாளிகளையும் அரசாங்கத்தையும் பிரதிநிதித் துவப் படுத்தும் பல்வேறு அமைப்புகள் எங்களுக்குத் தெரிவித்த கருத்துகளின் அடிப்படையிலும் அரசாங்கம் ஐயத்துக்கிடமற்ற ஒரு முடிவுக்கு வந்தது: அதாவது தான் விதித்துள்ள நிபந்தனைகள் போது மானவை என்ற தீர்மானத்துக்கு அது வந்தது. எனினும் இது குறித்து பிடிவாதப் போக்கைக் கடைப்பிடிக்க அரசாங்கம் விரும்பவில்லை. அங்கீகாரம் அளிப்பதற்கு முன்னர் மாகாண அரசாங்கமோ அல்லது முதலாளிகளோ இந்த மசோதாவில் சில நிபந்தனைகளைச் சேர்ப்பது அவசியம் எனக் கருதக்கூடும் என்பதை அரசாங்கம் உணர்ந்துள் ளது. இவ்வகையான ஒரு நிலைமை ஏற்படலாம் என்பதைக் கருத்திற் கொண்டே இந்த ஷரத்து சேர்க்கப்பட்டிருக்கிறது; மேற்கொண்டு நிபந்தனைகளை விதிப்பதற்கு இந்த ஷரத்து வகை செய்கிறது. நாங்கள் பெறக்கூடிய எந்த ஆலோசனைகளையும், பரிந்துரை களையும் இணைத்துக் கொள்வதற்காக இவ்வாறு செய்துள்ளோம். மற்றபடி பிரதிநிதித்துவத்தின் இயல்பு என்ன என்பதைப் பொறுத்த வரையில் இந்த மசோதா எவ்வகையிலும் நிச்சயமற்றதாகவோ, தெளிவற்றதாகவோ இல்லை என்பதை என்னால் நிச்சயமாகக் கூற முடியும்.

திரு. பி.ஜே. கிரிபித்ஸ் : எனக்கு ஒரு விஷயம் தெரிய வேண்டும். புதிய ஷரத்து 28 (டி) யின் உபஷரத்தான (இ) ல் ''அது பிரதிநிதித்துவம் வாய்ந்த தொழிற்சங்கமாக இருக்க வேண்டும்'' என்று குறிப்பிடப் பட்டிருக்கிறது. இந்த வாசகத்தின் பொருளை அவைக்கு விளக்கிக் கூறுவீர்களா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : பிரதிநிதித்துவம் வாய்ந்த தொழிற்சங்கம் என்று குழுமத்தால் சான்றிதழ் வழங்கப்பட்ட தொழிற்சங்கத்தை அது குறிக்கிறது.

**திரு. பி.ஜே. கிரிபித்ஸ் :** சுயவிருப்பத்தின் பேரிலா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** குழுமம் ஒரு விசாரணையை மேற்கொள்ளும். இது பற்றி என் நண்பர் திரு. ஜோஷி அபிப்பிராயம் தெரிவிக்கும்போது, தனிப்பட்ட உறுப்பினர்களின் கருத்துகள் உட்பட எல்லாவிதமான தகவல்களையும் கோரிப் பெறுவதற்கு குழுமம் அதிகாரம் பெற்றிருக்கிறது என்று கூறினார்.

**திரு. பி.ஜே. கிரிபித்ஸ் :** ''பிரதிநிதித்துவம்'' என்பதற்கு என்ன பொருள் என்பது குறித்து குழுமத்துக்கு ஏதேனும் வழிகாட்டுதலை அளிக்க வேண்டும் என்பது இதன் உத்தேசமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவ்வாறுதான் நினைக்கிறேன். எந்த விஷயம் குறித்து எவ்வகையான நெறிமுறைகளை குழுமத்துக்கு வழங்க தாங்கள் விரும்புகிறார்கள் என்பது பற்றி பல்வேறு தரப்பினரிடமிருந்து ஆலோசனைகளை நாங்கள் எதிர்பார்க்கிறோம்.

**திரு. பி.ஜே. கிரிபித்ஸ் :** ஆக, இந்த விஷயத்தில் நீங்கள் வெறுமையான மனத்தோடு இருக்கிறீர்கள்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** வெறுமையான மனமல்ல, திறந்த மனம் : எனவேதான் என் நிலையை சரிநுட்பமாக வரையறுத்துக் கொள்ள விரும்புகிறேன்.

மசோதா பற்றி உரையாற்றிய திரு. கிரிபித்சும் ஏனைய உறுப்பினர்களும் ஒரு விஷயத்தைக் குறிப்பிட்டனர்: அதாவது ஷரத்து 1ஐப் பயன்படுத்துவதில் இந்த மசோதாவின் செயற்பாட்டிலிருந்து அரசுத் தொழில் நிலையங்களுக்கு தவறான முறையில் அரசாங்கம் விதி விலக்கு அளித்துள்ளது என்று குற்றம் சாட்டினர்; அவர்களது சொற்களிலேயே கூறுவதானால், இது விஷயத்தில் அரசாங்கம் தருக்க முரணாக நடந்து கொண்டிருக்கிறது என்று குறிப்பிட்டனர்.

நல்லது, ஐயா, முதல் வாதத்துக்கு நான் அளிக்க விரும்பும் பதில் தருக்கவியல் எப்போதுமே வாழ்க்கையாக இருப்பதில்லை என்பதுதான். தருக்க முரண்பாடு நம்மை அதிதீவிரவாதத்தை நோக்கிப்

பிடித்துத்தள்ளும் பல சந்தர்ப்பங்கள் உண்டு. தருக்க முரண்பாட்டுக்குப் பதில் அதிதீவிரவாதத்தை எந்த மனிதனும் விரும்புவான் என்று நான் நினைக்கவில்லை. ஷரத்து 28 (ஜே) யைப் பற்றி தனிப்பட்ட முறையில் நான் ஏதேனும் சொல்லுவதானால் அரசாங்கம் பயங்கொள்ளி அல்ல, அரசாங்கம் தருக்க முரணாக நடந்து கொள்ளவில்லை, அரசாங்கம் விவேகமாகவே செயல்படுகிறது, அரசாங்கம் எச்சரிக்கையாகவே இருக்கிறது என்றுதான் கூறுவேன். இந்த ஷரத்து ஓரளவு தவறாகப் புரிந்து கொள்ளப்பட்டிருக்கிறது என்றே கருதுகிறேன். இந்த மசோதாவிலிருந்து அரசாங்கத்துக்கு விதிவிலக்கு அளிக்கும் உத்தேசம் ஏதுமில்லை. இந்த மசோதாவின் ஷரத்துகள் அரசாங்க நிறுவனங்கள் விஷயத்தில் எப்போது செயல்படுத்தப்படும் என்பதற்கு ஒரு தேதி நிர்ணயிக்கப்படும் என்றுதான் கூறப்பட்டிருக்கிறது, அவ்வளவுதான். எனவே, அரசாங்க நிறுவனங்கள் விஷயத்தில் ஏதேனும் சலுகை காட்டப்பட்டிருக்கிறது என்றால் அது இந்த மசோதாவின் ஷரத்துக்களை அவற்றின் விஷயத்தில் செயல்படுத்துவது சம்பந்தமானதல்ல, மாறாக அரசாங்க நிறுவனங்களுக்கு அவற்றை எந்தத் தேதியிலிருந்து செயல்படுத்துவது என்பது சம்பந்தப்பட்டதேயாகும்.

**திரு. பி.ஜே. கிரிபித்ஸ் :** ஏன் இவ்வாறு செய்ய வேண்டும்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** அதற்கு அவசியம் இருக்கக் கூடும்.

**திரு. பி.ஜே. கிரிபித்ஸ் :** அப்படி என்ன அவசியம்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** நான் ஏற்கெனவே கூறியது போல் இந்தக் கட்டத்தில் நான் எத்தகைய சர்ச்சையிலும் ஈடுபட விரும்பவில்லை. ஊழியர்களை பணிக்கமர்த்திக் கொண்டிருக்கும் அரசாங்க இலாகாக்கள் அவர்களுடைய தொழிற் சங்கங்களை அங்கீகரிக்கப் போதிய ஏற்பாடுகளைச் செய்திருப்பதாக அஞ்சல் மற்றும் தந்தித் துறைச் செயலாளர் கூறியிருக்கிறார். தனியார் துறைகளைவிடத் தொழிற்சங்கங்களை அங்கீகரிக்க அரசாங்கம் தயாராக இருப்பதால் இந்த மசோதாவை அதன் விஷயத்தில் செயல்படுத்தும் தேதியைத் தள்ளிப்போடுவதன் காரணமாக ஊழியர்

களின் நலன்கள் பாதிக்கப்படும் என்று நான் நினைக்கவில்லை. ஐயா, இதற்கு மேல் நான் கூறுவதற்கு எதுவுமில்லை.

திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரஹீம்) : ஆக, பின்வருமாறு பிரரேபிக்கப்படுகிறது :

> ''1926 ஆம் வருட இந்தியத் தொழிற்சங்கங்களின் சட்டத்தை மேலும் திருத்தக் கோரும் இந்த மசோதா பொதுமக்களின் கருத்தறிய சுற்றுக்கு விடப் படுகிறது.''

பிரேரணை ஏற்கப்பட்டது.



## 22

# [1]யுத்தப் பிற்காலத்தில் இந்தியாவில் மின்விசை வளர்ச்சி

### டாக்டர் அம்பேத்கர் உரை

யுத்தப் பிற்காலத்தில் இந்தியாவில் மின்விசை வளர்ச்சி குறித்த பிரச்சினைகள் அக்டோபர் 25ஆம் தேதி புதுடில்லியில் நடைபெற்ற மறுசீரமைப்புக் கொள்கைக் குழுவில் விவாதிக்கப்பட்டன. வைசிராய் கவுன்சிலில் தொழிலாளர் நலத்துறை உறுப்பினராக உள்ள மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் கூட்டத்துக்குத் தலைமை வகித்தார். மத்திய அரசாங்கத்தின் அழைப்பின் பேரில் மாகாண அரசாங்கங்களிலிருந்தும், பெருமளவுக்கு மின் விசை உற்பத்தி செய்யும் மாகாணங்களிலிருந்தும், பொறியியல் வட்டாரங்களிலிருந்தும் ஏராளமான பிரதிநிதிகள் கூட்டத்தில் கலந்து கொண்டனர்.

குழுவின் கூட்டத்தில் மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் பேசும்போது கூறியதாவது :

பெருந்தகையாளர்களே, 3 சி எண் சீரமைப்புக் குழுவின் இந்தக் கொள்கைக் குழுக் கூட்டத்திற்கு வருகை தந்திருக்கும் உங்கள் அனைவரையும் வரவேற்கிறேன். கூட்டத் தலைவருக்கு துவக்க உரை ஆற்றும் கடமையும் சலுகையும் உண்டு. எனக்குள்ள கடமைப் பொறுப்பை ஏற்கிறேன். ஆனால் நீண்டதொரு சொற்பொழிவாற்றி எனது சலுகையை துஷ்பிரயோகம் செய்ய நான் விரும்பவில்லை. நான் இப்போது செய்யப்போவதெல்லாம் நாம் பரிசீலனைக்கு எடுத்துக்கொண்டுள்ள விஷயம் சம்பந்தமான சில மெய்ம்மைகளை முன்னிலைப்படுத்தி அவற்றின்மீது நமது கவனத்தை ஒருமுகப் படுத்துவதுதான்.

மறு சீரமைப்பு குறித்த பல்வேறு பிரச்சினைகளை ஆராய்வதற்காக இந்திய அரசாங்கம் வைசிராய் நிர்வாக சபையின் சார்பில் மறுசீரமைப்புக் குழு ஒன்றை அமைத்துள்ளது. இக்குழு அமைக்கப்

1. இந்தியத் தகவல் ஏடு, நவம்பர் 15, 1943, பக்கங்கள் 279 - 81.

பட்டது பற்றித் தெரியாதவர்கள் பலர் இங்கு இருக்கின்றனர். இத்தனைக்கும் இந்தப் பணியில் அவசியம் பங்கெடுத்துக் கொள்ள வேண்டியவர்கள் இவர்கள். எனவே, இவர்கள் தெரிந்து கொள்ளும் பொருட்டு இந்த மறுசீரமைப்புக் குழு மேற்கொண்டுள்ள பணியையும், அதனைச் சிறப்பாகவும் துரிதமாகவும் நிறைவேற்றும் பொருட்டு வகுக்கப்பட்டிருக்கும் வேலைத் திட்டத்தையும் பற்றி இங்கு இரத்தினச் சுருக்கமாக கூறலாம் என்றிருக்கிறேன்.

## ஐந்து குழுக்கள்

பண்பும் நேயமுமிக்க என் நண்பரும் சகாவுமான மாண்புமிகு சர் ஜே.பி. ஸ்ரீவஸ்தவா தலைமையில் நிர்வாக சபையின் மறு சீரமைப்புக் குழு ஒன்றை அமைக்க முன்னாள் வைசிராய் லின்லித்கோ பிரபு கடந்த மார்ச் மாதம் முடிவு செய்தது உங்கள் அனைவருக்கும் நினைவிருக்கும். நிர்வாக சபையின் இந்த மறு சீரமைப்புக் குழு ஐந்து வெவ்வேறு சீரமைப்புக் குழுக்களை அமைத்தது. இவற்றில் குழு எண்: I மறு குடியமர்வு, மறு வேலைவாய்ப்புப் பிரச்சினைகளைக் கவனித்துக்கொள்கிறது. குழு எண் II பைசல்கள், ஒப்பந்தங்கள், அரசாங்கக் கொள்முதல்கள் முதலியவற்றுக்கு பொறுப்பு ஏற்றிருக்கிறது. குழு எண். III-ன் பணி மூன்று குழுக்களிடையே பிரித்துத் தரப்பட்டிருக்கிறது - குழு எண் 3 ஏ போக்குவரத்தைக் கவனித்துக் கொள்கிறது; குழு எண் 3 பி அஞ்சல், தந்தி, விமானப் போக்குவரத்தை மேற்பார்க்கிறது; குழு எண். 3 சி பொதுப்பணித்துறை, மின்விசை போன்றவற்றுக்குப் பொறுப்பு ஏற்கும். குழு எண் IV வாணிகம் மற்றும் தொழில்துறையைக் கவனித்துக் கொள்ளும். குழு எண் V வேளாண்துறையில் ஈடுபாடு கொள்ளும்

இந்தக் குழுக்களில் ஒவ்வொன்றும் ஒரு கொள்கை வகுக்கும் குழுவைப் பெற்றிருக்கும். வைசிராய் நிர்வாக சபையின் உறுப்பினர் ஒருவர் இதன் தலைவராக இருப்பார். மத்திய அரசாங்கம், மாகாண அரசாங்கங்கள், வாணிகம், தொழில் முதலான துறைகளின் பிரதிநிதிகள் இதில் அங்கம் வகிப்பர். மேலும் இந்தக் குழுக்கள் ஒவ்வொன்றும் பணித்துறைக் குழுவைக் கொண்டிருக்கும். இலாகா செயலாளர் இதன் தலைவராக இருப்பார். சம்பந்தப்பட்ட இதர இலாக்காக்களின் செயலாளர்களும் இதில் இடம் பெற்றிருப்பர்.

இந்த இருவகையான குழுக்களைத் தவிர சில மறுசீரமைப்புக் குழுக்கள் தத்தமது துறைகள் சம்பந்தப்பட்ட மூன்றாவது குழு ஒன்றை

யும் கொண்டிருக்கின்றன. துறைசார்ந்த குழு என்று அழைக்கப்படும் இக்குழு தனது செயல் எல்லைக்குள் எழும் தொழில்நுட்பப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண உதவுகிறது. இவை தவிர, சமூக சேவைகள் குழு ஒன்றும், பொருளாதார ஆலோசனைக் குழு ஒன்றும் அமைக்கப்பட்டிருக்கின்றன. இத்தகையதுதான் மறுசீரமைப்புப் பிரச்சினைகளைச் சமாளிப்பதற்கு மத்திய அரசாங்கம் வகுத்துள்ள வேலைத் திட்டமாகும். நமது இப்போதைய கூட்டம் மறுசீரமைப்புக் குழு எண். 3 சியின் கொள்கைக் குழுக் கூட்டமாகும். மின்விசை சம்பந்தப்பட்ட பிரச்சினைகளை ஆராய்வதும், அவற்றிற்குச் சிறந்த முறையில் தீர்வு காணுவதற்கான பரிந்துரைகளை வழங்குவதும்தான் இந்தக் குழுவின் பணி.

இந்தப் பிரச்சினைகள் யாவற்றையும் பற்றி ஆராய்வதற்கு முன்னதாக ஒரு விஷயத்தை இங்கு ஆரம்பத்திலேயே குறிப்பிட விரும்புகிறேன்; அவ்வாறு செய்வது நிலைமையைத் தெள்ளத் தெளிவாகப் புரிந்துகொள்வதற்கு உதவிகரமாக இருக்கும். மின்விசை உற்பத்தி செய்வதற்குத் தேவையான எந்திர சாதனங்கள், கருவிகள், தொழிற்கூடங்கள் முதலியவற்றை கொள்முதல் செய்வது சம்பந்தப் பட்டது இந்த விஷயம். இந்த எந்திர சாதனங்களை வெளியி லிருந்துதான் அதிலும் பிரதானமாக பிரிட்டனிலிருந்துதான் வாங்க வேண்டும். இத்தகைய எந்திர சாதனங்களை வாங்குவதில் சிரமம் இல்லாமலில்லை. பிரிட்டனில் உற்பத்தி செய்யப்படும் மின் எந்திர சாதனங்களில் பெரும் பகுதி அதன் சொந்த தேவைகளுக்கே வேண்டி யிருக்கிறது.

மேலும், தங்களுக்குத் தேவையான எந்திர சாதனங்களை யும் தொழிற்சாலைகளையும் பிரிட்டிஷ், அமெரிக்க சந்தைகளில் வாங்கும் பல ஐரோப்பிய, ஆசிய நாடுகளும் இருக்கின்றன. இந்தப் போட்டியில், இந்தியா தனக்கு வேண்டிய சாதனங்களை வாங்குவது கடினமாக இருக்கிறது. இத்தகைய சூழ்நிலையில், இந்தியா தனது நிலைமையைப் பாதுகாத்துக் கொள்வதற்கு கூடிய மட்டிலும் முன்கூட்டியே 'ஆர்டர்களை'ப் பதிவு செய்து முன்னுரிமை பெறுவது மிகவும் உகந்ததாக இருக்கும். இவ்வாறு முன்னுரிமை பெறுவதில் பெரும் சிரமம் ஏதும் இருக்காது. இந்த யுத்தத்தில் இந்தியா செய்துள்ள மகத்தான உதவியையும் தியாகத்தையும் கருத்திற்கொண்டு பார்க்கும் போது, இது விஷயத்தில் இந்தியாவுக்கு முன்னுரிமை பெற்றுத் தரு வதற்கு மன்னர் பிரான் அரசாங்கத்தை நம்பலாம் என்று உறுதியாகக் கருதுகிறேன். எனினும் நமக்குத் தேவையான எந்திர சாதனங்கள்,

கருவிகள் முதலியவற்றுக்கான மதிப்பீடுகளை முறையாகத் தயாரித்து சம்பந்தப்பட்ட உற்பத்தி நிறுவனங்களிடம் 'ஆர்டர்கள்' தருவது போன்ற வேறு சில சிரமங்கள் இருக்கின்றன.

முதலாவதாக, மின்விசை முற்றிலும் மாகாணம் சம்பந்தப் பட்ட விஷயம். எனவே, தேவையான கருவிகள், எந்திரங்கள் முதலி யவை சம்பந்தப்பட்ட மதிப்பீடுகள் மாகாணங்களிலிருந்துதான் வர வேண்டும். மத்திய அரசாங்கம் இவற்றை எல்லாம் கொண்டு தொகுத்துத்தான் தர முடியும்.

இரண்டாவதாக, எந்த வகையான எந்திரங்கள் தேவைப்படும் என்பது சம்பந்தப்பட்டவர்கள் எண்ணெய், நீரோட்டம் போன்ற வற்றில் எவற்றின் உதவியைக் கொண்டு மின்விசை தயாரிக்கத் திட்ட மிட்டிருக்கிறார்கள் என்பதைப் பொறுத்திருக்கிறது.

யுத்தத்திற்குப் பிறகு அமையும் அரசாங்கங்களின் போக்கு எப்படியிருக்கும் என்ற நிச்சயமற்றத் தன்மை மூன்றாவது இடர்ப் பாடாகும். இப்போதைய அரசாங்கம் வகுத்தளிக்கும் திட்டங்களை எதிர்கால அரசாங்கம் ஏற்குமா? இப்போதைய அரசாங்கம் தனது திட்டங்களை நிறைவேற்றுவதற்கு விதிக்கும் வரிகளை எதிர்கால அரசாங்கங்கள் தொடருமா? இவற்றைப் பற்றி எல்லாம் எதுவும் நிச்சயமாகக் கூறுவதற்கில்லை. எனினும் யுத்தம் முடிவுற்றதும் மின்மயமாக்கத்துக்குத் தேவையான எந்திர சாதனங்களையும் கருவி களையும் வாங்குவதற்கு ஏற்பாடு செய்யவில்லை என்றால் இந்த அரசாங்கம் தனது கடமையைச் செய்வதிலிருந்து பிறழ்ந்த குற்றச் சாட்டுக்கு ஆளாக நேரிடும்.

## கொள்கை வகுக்கும் குழுவின் பணிகள்

இந்த விஷயம் அவசரமானதும் முக்கியமானதும் என்று குறிப்பிட்டேன். ஆனால் இந்த விஷயம் இந்தக் குழு சம்பந்தப் பட்டதல்ல என்பதை நீங்கள் புரிந்து கொண்டிருப்பீர்கள் என்று நம்புகிறேன். இது கொள்கை வகுக்கும் குழு. மின்விசை உற்பத்தி, விநியோகம், நிர்வாகம் இவை சம்பந்தப்பட்ட பிரச்சினைகளைக் கையாள்வதும், எதிர்கால அரசாங்கத்துக்கு வழிகாட்டக்கூடியவை என நாம் கருதும் கோட்பாடுகளைப் பரிந்துரைப்பதுமே நமது பிரதான பணியாகும். தங்களது கருத்துகளைத் தெரிவிப்பதற்கு தங்க ளுடைய பிரதிநிதிகளை இக்கூட்டத்துக்கு அனுப்பும்படிக் கேட்டுக்

கொள்ள நமது கொள்கை வகுப்புக் குழுவின் இந்தக் கூட்டத்தை நாம் பயன்படுத்திக் கொண்டோம்.

பொது அக்கறைக்குரிய விஷயம் என்ற முறையில் மின் விசைப் பிரச்சினையைக் கையாளும் முறை பல மாற்றங்களுக்கு உள்ளாகி வந்திருக்கிறது. இந்திய அரசாங்கம் இந்தப் பிரச்சினையை முதன் முதலில் 1905ஆம் ஆண்டில்தான் கவனத்தில் எடுத்துக் கொண்ட தாகத் தெரிகிறது. அப்போது அது மாகாணங்களுக்கு ஒரு சுற்றுக் கடிதத்தை அனுப்பியது. அதன் பிறகு மாகாண அரசாங்கங் களும் மத்திய அரசாங்கமும் நித்திரையில் ஆழ்ந்துவிட்டன. 1918-ஆம் ஆண்டில் வெளியிடப்பட்ட இந்தியத் தொழில் துறை ஆணையத்தின் அறிக்கையும், இதற்கு ஓராண்டுக்குப் பிறகு வெளியிடப்பட்ட இந்தியப் படைக்கல வாரியத்தின் அறிக்கையும் மின்விசைத் துறை யில் தீவிர அக்கறை எடுத்துக்கொள்ள வேண்டிய அவசியத்தை வலியுறுத்திய பிறகே அவை விழித்துக் கொண்டு செயலில் ஈடுபடத் தொடங்கின.

இந்தியாவில் நீர்நிலைப் பரப்பாராய்ச்சி மேற்கொள்ளப்பட வேண்டும் என்றும், இந்தப் பணியை தனியார் நிறுவனத்திடம் ஒப்படைக்காமல் அரசாங்கமே மேற்கொள்ள வேண்டும் என்றும் தொழில்துறை ஆணையம் பரிந்துரைத்தது. இந்தப் பரிந்துரையை இந்திய அரசாங்கம் ஏற்றுக்கொண்டு, இந்த ஆராய்ச்சிப் பணிக்குப் பொறுப்பாளராக அச்சமயம் ஐக்கிய மாகாணங்களில் பாசனத் துறையின் தலைமைப் பொறிஞராக இருந்த திரு. ஜி.டி. பார்லோ, சி.ஐ.இ.யை நியமித்தது; இந்த ஆய்வில் அவருக்குத் துணைபுரிய இந்திய அரசாங்கத்தின் மின்விசை ஆலோசகராக இருந்த திரு. ஜி.எம். மியரஸ், எம்.ஐ.சி.இ.யை நியமித்தது. ஆனால் விரைவி லேயே திரு. பார்லோ காலமாகிவிட்டார். அவர் விட்டுச் சென்ற பணியை திரு. மியரஸ் மேற்கொண்டார். 1919-1922 ஆம் ஆண்டு களுக்கு இடையே அவர் மிகச் சிறந்த மூன்று அறிக்கைகளைச் சமர்ப்பித்தார். மின்விசை வழங்கீடு சாத்தியக்கூறுகள் சம்பந்தமான மாகாண ரீதியான முக்கிய தகவல்கள் பின்கண்ட ஐந்து தலைப்பு களில் அடங்கியிருந்தன - (1) ஏற்கெனவே நிர்மாணிக்கப்பட்டுள்ள நீர்மின்விசை நிலையங்கள், (2) தற்போது கட்டப்பட்டுவரும் மின் நிலையங்கள், (3) ஆராய்ச்சி மேற்கொள்ளப்பட்ட ஆனால் இன்னமும் வளர்ச்சியுறாத பிரதேசங்கள், (4) விரிவான ஆய்வுக்கு உகந்தவை என்ற தெரியவந்துள்ள இடங்கள், (5) ஆய்வு செய்யப் படாத இடங்கள்.

## மின்விசை - மாகாணத்தின் பொறுப்பிலுள்ள துறை

1919-ஆம் வருடச் சட்டத்தின் விளைவாக இந்திய அரசாங்க அமைப்பில் பல மாற்றங்கள் செய்யப்பட்டன. துரதிர்ஷ்டவசமாக இதனைத் தொடர்ந்து மின்விசை மாகாணத்தின் பொறுப்பிலுள்ள துறையாகி விட்டது. அதுமட்டுமல்ல, தனது நிர்வாக வரம்புக்கு வெளியே உள்ள விஷயங்களில் தகுதியானவை, உகந்தவை எனத் தான் கருதுபவற்றுக்கு மத்திய அரசாங்கம் நிதி ஒதுக்கலாம் என்று இப்போதுள்ள சட்டத்தில் இருப்பது போன்று அச்சமயம் இருந்த சட்டத்தில் துரதிர்ஷ்டவசமாக வழிவகை ஏற்பாடு எதுவும் செய்யப்படவில்லை. இதனால் நீர்நிலைப் பரப்பாராய்ச்சிக்கு இந்திய அரசாங்கம் நிதி ஒதுக்க முடியாதுபோயிற்று. இவ்வாறு, இந்தியாவுக்கு மின்விசை வழங்குவதற்குத் துணைபுரியும் ஒரு சிறந்த, அத்தியாவசியமான, மாபெரும் பணி முடிவுக்கு வந்தது.

இந்தியாவில் மின்விசை உற்பத்தியைப் பெருக்குவதற்குப் பொறுப்பான அதிகாரி எவரும் மத்திய அரசாங்கத்தில் இல்லை. இதன் விளைவாக இந்தியாவில் மின்விசை உற்பத்தி, விநியோகம், நிர்வாகம் சம்பந்தமான தகவல்கள் எதுவும் மத்திய அரசாங்கத்திலுள்ள எங்களுக்கு அண்மைக் காலம் வரை கிடைக்கவில்லை.

எனவே, இந்தியாவில், மின்விசைத்துறை மீண்டும் மிகுந்த அக்கறைக்கும், ஆர்வத்துக்கும், கவனத்துக்கும் உரியதாகி இருப்பது குறித்து நான் பெரிதும் மகிழ்ச்சி அடைகிறேன். எனக்குத் தெரிந்த வரை மின்விசை சம்பந்தமான பின்கண்ட கேள்விகளுக்கு இந்தக் குழு விடை காணவேண்டும் என்று கருதுகிறேன்:-

(1) மின்விசைத் துறை தனியார் பொறுப்பில் இருக்க வேண்டுமா, அல்லது அரசாங்கப் பொறுப்பில் இருக்க வேண்டுமா?

(2) அது தனியார் வசம் இருக்கும் பட்சத்தில் பொது மக்களின் நலன்களைப் பாதுகாக்கும் பொருட்டு விதிக்க வேண்டிய நிபந்தனைகள் ஏதும் உண்டா?

(3) மின்விசைத் துறையை வளர்த்து மேம்படுத்தும் பொறுப்பு மத்திய அரசாங்கத்திடம் விடப்பட வேண்டுமா, அல்லது மாகாண அரசாங்கத்திடம் விடப்பட வேண்டுமா?

(4) இந்தப் பொறுப்பை மத்திய அரசாங்கத்திடம் விடும் பட்சத்தில், மலிவாகவும் பெருமளவிலும் மின்விசை வழங்கீடு செய்

வதற்கும், மூல வளங்கள் வீணடிக்கப்படுவதைத் தவிர்ப்பதற்கும்
தடுப்பதற்கும் எத்தகைய தேர்ந்த, உகந்த, பயனுறுதியுடைய நிர்வாக
முறைகளை மேற்கொள்ள வேண்டும்?

(5) இவ்வாறில்லாமல் இந்தப் பொறுப்பு மாகாணங்
களிடம் ஒப்படைக்கப்படும் பட்சத்தில், இது விஷயத்தில் மாகாணங்
களின் நிர்வாகம் ஆலோசனை கூறும் அதிகாரங்களையும், ஒருமுகப்
படுத்தும் அதிகாரங்களையும் கொண்ட மாகாணங்களுக்கு இடை
யிலான ஒரு வாரியத்தின் மேற்பார்வைக்கு உட்பட்டதாக ஆக்கப்
பட வேண்டுமா?

### மூன்று அம்சங்கள்

இந்தக் கேள்விகள் ஒவ்வொன்றுக்கும் இரண்டு கோணங்கள்
இருக்கின்றன. ஒவ்வொரு கோணமும் தனது ஆதரவாளர்களைப்
பெற்றுள்ளது. இந்தக் கட்டத்தில் என் கருத்தை வெளியிட நான்
விரும்பவில்லை. நான் திறந்த மனமுடையவனாக இருக்கிறேன்;
ஆனால் அது வெற்று மனமல்ல. மின்விசை உற்பத்தியைப் பெருக்கு
வதற்கு எது சிறந்த மார்க்கம் என நாம் முடிவுக்கு வருவதற்கு முன்னர்
பின்வரும் மூன்று அம்சங்களை நாம் மனத்திற் கொள்ள வேண்டும்:-

(1) இவை இரண்டில் எது மலிவான விலையில் அல்லா
மல் மிகமிக மலிவான விலையில் நமக்கு மின்விசை வழங்கும்,

(2) இவை இரண்டில் எது போதுமானது மட்டுமல்லாமல்
அபரிமிதமாக நமக்கு மின்விசை வழங்கும்,

(3) இவற்றில் எது கேந்திர முக்கியத்துவம் வாய்ந்த
ரயில்வேயைப் போல் கருதப்பட்டு அதாவது உடனடி லாப
நோக்கமில்லாமல் தொடங்கப்படும் ஒரு தொழில் முயற்சி
யைப் போல் கருதப்பட்டு இந்தியாவின் மின்மயமாக்கத்தைச்
சாத்தியமாக்கும்.

மலிவான அதேசமயம் அபரிமிதமான மின்விசை வழங்கீடு
உத்தரவாதம் செய்யப்பட வேண்டும் என்று இந்தியா விரும்புகிறது;
இதனால்தான் இந்த மூன்று அம்சங்களை இங்கே வலியுறுத்துகிறேன்.

இவை அடிப்படையான கேள்விகள், இவற்றில் பெரும்
பாலானவை அரசியலமைப்புச் சட்டத்தில் மாற்றங்களைச் செய்யும்

பிரச்சினையை எழுப்பக்கூடும் என்ற ஐயம் இருந்துவரும் காரணத்தால் உங்களில் சிலர் இவற்றைப் பற்றி முடிவு எடுப்பதற்குத் தயங்கலாம். என்னைப் பொருத்தவரையில் இத்தகைய தயக்கம் ஏதும் இல்லை ஓர் அரசியலமைப்புப் பிரச்சினையைத் தீர்மானிப்பதற்கும் அது குறித்து அபிப்பிராயம் தெரிவிப்பதற்கும் இடையே வேறுபாடு உண்டு. அரசியலமைப்புப் பிரச்சினைகளை இங்கு நாம் தீர்மானிக்கப் போவதில்லை. அவை சம்பந்தமான நமது கருத்தைத் தான் வெளியிடுகிறோம். அவை அரசியலமைப்புச் சட்ட இயல்பு கொண்டிருக்கும் காரணத்தால் அவற்றைப் பரிசீலிப்பதிலிருந்து நாம் எவ்வகையிலும் தடை செய்யப்படவில்லை. நம் பொறுப்பில் விடப்பட்டிருக்கும் துறையிடம் நாம் நேர்மையோடு நடந்துகொள்ள வேண்டுமானால் இவற்றை நாம் தவிர்க்க முடியாது என்று நான் நிச்சயமாக நம்புகிறேன்.

### மின்விசை இலாகா

இந்த முக்கியமான பிரச்சினைகள் தவிர எவ்வகையிலும் இரண்டாந்தரமானவை அல்லாத வேறு பிரச்சினைகளும் இருக்கின்றன. மின்விசைமயமாக்கம் வெற்றிபெற வேண்டுமாயின் இந்தப் பிரச்சினைகளை நம் கவனத்திலிருந்து அகற்றிவிட முடியாது. இப் பிரச்சினைகள் வருமாறு:-

(1) மின்விசை உற்பத்திக்கு அவசியமான நிலக்கரி, பெட்ரோல், எரி சாராயம், நீரோட்டம் முதலியவற்றைப் பற்றி முறையாக ஆய்வு செய்வதற்கும், மின் விசை உற்பத்தி ஆற்றலை அதிகரிப்பதற்கான வழி துறைகளைப் பரிந்துரைப்பதற்கும் மத்தியில் ஒரு மின்விசை இலாகாவை உருவாக்குவது அவசியமா?

(2) கிடைக்கக் கூடிய மின்விசையை மிகத் திறமையோடு பயன்படுத்திக் கொள்ளும் பொருட்டு மின்விசை ஆதாரங்களுக்கும் எந்திர சாதனங்களுக்கும் இடையே உள்ள உறவுகளுடன் சம்பந்தப்பட்ட பிரச்சினைகளை ஆராய்வதற்கு மத்தியில் ஒரு மின்விசை ஆராய்ச்சி மையத்தை அமைப்பது அவசியமா?

(3) இந்தியாவில் மின்விசை நிலையங்கள் மற்றும் எந்திர சாதனங்களை உருவாக்குவதற்கும், பராமரிப்பதற்கும், மேம்படுத்துவதற்கும் திட்டமிடவும் அத்திட்டங்களைச் செயல்படுத்தவும் மின்

விசைத் தொழில் நுட்பத்தில் இந்தியர்களைப் பயிற்றுவிக்கும் வழி துறைகளைக் காணுவது அவசியமா?

என் உரையை முடித்துக் கொள்வதற்கு முன்னர் இந்தியாவில் மின்விசை உற்பத்தியைப் பெருக்குவதன் முக்கியத்துவத்தையும், அதன் இறுதிக் குறிக்கோளையும் சுட்டிக்காட்டக்கூடிய சில கருத்துகளை இப்போது உங்கள் முன்வைக்கலாமா? ஏனென்றால் இத்துறைக்குப் பொறுப்பேற்பவர்கள் இந்த முக்கியத்துவத்தையும் இறுதிக் குறிக்கோளையும் முழு அளவுக்கு உணர்ந்து தெளிந்தவர்களாக இருப்பது அவசியம். இது விஷயத்தில் நீங்கள் என்னுடன் உடன்படுவீர்களானால் உங்களை நீங்களே பின்வரும் கேள்வியைக் கேட்டுக் கொள்ள வேண்டும் என்று விரும்புகிறேன்: 'இந்தியாவில் நமக்கு ஏன் மலிவான, ஏராளமான மின்விசை தேவை?' மலிவான, ஏராளமான மின்விசை இல்லாமல் இந்தியாவைத் தொழில்மயமாக்கும் முயற்சி வெற்றிபெற முடியாது என்பதே இந்தக் கேள்விக்கான பதிலாக இருக்க முடியும். இந்தக் குழு மேற்கொள்ள வேண்டியிருக்கும் பணியின் முக்கியத்துவத்தின் ஒரு பகுதியையே இந்தப் பதில் வெளிப்படுத்துகிறது எனக் கூற வேண்டும்.

பின்வரும் மற்றொரு கேள்வியையும் நீங்கள் கேட்டுக் கொள்ளுங்கள்: 'தொழில்மயமாக்கம் ஏன் அவசியம்?' அப்போது இந்த முழு முக்கியத்துவமும் உடனே உங்களுக்குப் புலனாகும்; ஏனென்றால் கொத்தியெடுக்கும் கோர **வறுமை என்னும் நிரந்தர சுழல் வட்டத்தில் சிக்கித்தவிக்கும்** கோடானுகோடி ஏழை எளிய மக்களை அதன் இரும்புப் பிடியிலிருந்து மீட்கும் உறுதியான, நிச்சயமான மார்க்கமாக இந்தியாவில் தொழில்மயமாக்கம் இருக்க வேண்டுமென நாம் விரும்புகிறோம். எனவே இந்தியாவின் தொழில்மயமாக்கத்தில் நாம் உடனடியாக ஈடுபடுவது அவசியம்.

## இந்தியாவின் தொழில் வளர்ச்சி

இந்தியாவின் தொழில் வளர்ச்சி குறித்துப் பல ஆண்டுகளாகவே நாம் பேசி வருகிறோம். ஆனால் தொழில்வளர்ச்சியைச் சாத்தியமாக்குவதற்கு, சாதிப்பதற்கு எத்தகைய உருப்படியான முயற்சியும் மேற்கொள்ளப்பட்டதை நாம் காணவில்லை. இது விஷயத்தில் உதட்டு சேவை செய்வதுடன்தான் இன்னமும் சிலர் இருந்து வருகின்றனர். வேறு சிலரோ இது விஷயத்தில் எதிர்க்கோடிக்குச்

சென்று, மட்டுமீறிய வெறி ஆர்வம் காட்டுகின்றனர். இது இவ்வாறு என்றால் வேறுபலர் முற்றிலும் மாறுபட்டதொரு போக்கைக் கடைப் பிடிக்கின்றனர்; இந்தியா முழுக்க முழுக்க ஒரு விவசாய நாடு, எனவே வேளாண்மையை மேம்படுத்துவதில் நமது முழுமுயற்சி யையும் ஈடுபடுத்துவதுதான் மிகச்சிறந்தது என்று உபதேசம் செய் வதில் இவர்கள் ஒருபோதும் சலிப்பதோ, சளைப்பதோ இல்லை. இந்தியா பிரதானமாக ஒரு வேளாண் நாடு என்று யாரும் சொல்ல வேண்டிய அவசியமில்லை. எல்லோருக்குமே இது தெரியும். ஆனால் இது எத்தகைய ஒரு மாபெரும் அவப்பேறு என்பதை உணர்ந்திருப் பவர்கள் வெகு சிலரே இருப்பது வியப்பூட்டுவதாக இருக்கிறது. இது ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது என்பது எனக்குத் தெரியும். வங்காளத்திலும் இந்தியாவின் இதர பகுதிகளிலும் பஞ்சம் கோர நர்த்தனமாடி வருகிறது; அங்கு ஒரு சாண் வயிற்றுக்கு உண்ண உண வின்றி அல்லது உணவை வாங்க சக்தியின்றி மக்கள் கொத்துக் கொத்தாக மாண்டு மடிந்து வருகின்றனர்; அந்தக் கொடிய பஞ்சத்தை விடவும் இது அவப்பேறானது என்பதை மெய்ப்பிக்க மேற்கொண்டு என்ன சான்று வேண்டும்?

என் அபிப்பிராயத்தில் இந்தியாவின் வேளாண் துறை மிக மிகப் பரிதாபகரமாக தோல்வியடைந்து விட்டது என்பதைக் காட்டு வதற்கு பெரிய சான்று எதுவும் தேவையில்லை; ஏனென்றால் கைப்புண்ணுக்கு யாராவது கண்ணாடியைத் தேடுவார்களா? இந்தியா உணவைத் தவிர வேறு எதையும் உற்பத்தி செய்வதில்லை. அந்த உணவும் மக்களைப் போஷிக்கும் அளவுக்கு உற்பத்தி செய்யப்படுவதில்லை. இதற்கு என்ன காரணம்? நாடு முழுக்க முழுக்க வேளாண்மையைச் சார்ந்திருக்கும்படிச் செய்யப்பட் டிருப்பதே, நம்பியிருக்கும்படி நிர்ப்பந்திக்கப்பட்டிருப்பதே இந்தியாவின் படுபயங்கர வறுமைக்கு முற்றிலும் காரணம் என்பது என் திட்டவட்டமான கருத்து.

இந்தியாவின் மக்கட்தொகை ஆண்டுக்கு ஆண்டு, வாரத் திற்கு வாரம், நாளுக்கு நாள், மணிக்கு மணி அதிகரித்து வருகிறது. இவ்வாறு மக்கட் தொகை எல்லையற்று பெருகிவரும் அதே வேளையில் சாகுபடிக்குக் கிடைக்கும் நிலம் மிக மிகக் குறைவு; அந்த மிகக் குறைந்த நிலத்தின் வளப்பமோ வருடத்துக்கு வருடம் தேய்பிறையாகக் குன்றி வருகிறது. இந்தியா ஒரு குறடின் இரு

பக்கங்களுக்கு இடையே சிக்கிக் கொண்டிருக்கிறது. ஒரு பக்கத்தில் மக்கட் தொகை வரைமுறையின்றிப் பெருகி வருகிறது; மற்றொரு பக்கத்திலோ மண்ணின் வளம் கிடுகிடுவென்று சரிந்து வருகிறது.

### ''விநாசகாலம் சூழ்ந்து கொண்டிருக்கிறது''

இதன் விபரீத விளைவு என்ன? ஒவ்வொரு பத்தாண்டின் இறுதியிலும் மக்கட்தொகைப் பெருக்கத்துக்கும் வேளாண் உற்பத்திக்கும் இடையே ஒரு படு பயங்கர அதல பாதாளம் தோன்றி விடுவதைப் பார்க்கிறோம்; வாழ்க்கைத்தரம் நாளுக்கு நாள் கூனிக் குறுகி வருவதைக் காண்கிறோம். ஒவ்வொரு பத்தாண்டுக் காலத்திலும் மக்கட் தொகைக்கும் உற்பத்திக்கும் இடையேயான இந்த இடைவெளி மிகுந்த அச்சம் கொள்ளும் வகையில் நாளுக்கு நாள் அதிகரித்து வருகிறது. இதனால் இந்தியா படுபயங்கர வறுமைப் படுகுழியில், மீளமடியாத கெபியில் மேலும் மேலும் தள்ளப்பட்டு வருகிறது. உண்மையில் ஒரு விநாசகாலம் இந்தியாவைச் சூழ்ந்து கொண்டிருக்கிறது. நாடுகளெங்கும் பட்டிதொட்டிகளெங்கும் வேளாண் பொருட்காட்சிகளையோ அல்லது விலங்குகள் கண்காட்சிகளையோ நடத்தி விடுவதனாலோ, சிறந்த உரத்தைப் பயன்படுத்துவது பற்றிப் பிரசாரம் செய்துவிடுவதாலோ இந்த விநாசத்தைத் தடுத்து நிறுத்தி விட முடியாது. வேளாண்மை ஆதாயம் தரக்கூடியதாக ஆக்கப்பட்டால்தான் இத்தகைய விபரீத நிலைக்கு, அவலநிலைக்கு முற்றுப் புள்ளி வைக்க முடியும். தொழில் வளர்ச்சிக்கு ஆதரவாக தொடர்ந்து பல தீவிர முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டாலொழிய இந்தியாவில் விவசாயத்தை லாபகரமானதாக்குவது சாத்தியமில்லை. தொழில் வளர்ச்சி ஒன்றுதான் நிலத்தை முழுக்க முழுக்க நம்பியுள்ள அளவுக்கு அதிகமான மக்கட் தொகையில் ஒரு பகுதியினரை வேளாண்மையல்லாத இதர ஜீவனோபாயத் தொழில்களில் ஈடுபடும்படிச் செய்ய முடியும்.

சுருக்கமாகக் கூறினால், நமது மறுசீரமைப்புக் குழுக்கள் நோக்கத்திலும் சரி, செயல்பாட்டிலும் சரி பெரும்பாலான ஐரோப்பிய நாடுகளிலுள்ள மறுசீரமைப்புக் குழுக்களின் அடிப்படையில் அமைக்கப்பட்டுள்ளன; ஏனென்றால் இந்நாடுகளில் எல்லாம் தொழில்துறை அமைப்புகளை ஜெர்மானியர்கள் அழித்தொழித்து நாசப்படுத்திவிட்டபோது இத்தகைய சீரமைப்புக் குழுக்கள்தான் அங்கு தொழில்துறைக்குப் புத்துயிரும் புத்தாக்கமும் அளித்தன. மறுசீரமைப்புப் பிரச்சினைகள் நாட்டுக்கு நாடு வேறுபடுகின்றன,

வேறுபடவே செய்யும். சில நாடுகளில் மறுசீரமைப்புப் பிரச்சினை பத்தாம்பசலியாகிவிட்ட தொழில் நிலையங்களையும் எந்திர சாதனங் களையும் புனரமைக்கும் பிரச்சினையாக அமைந்திருக்கிறது.

## இந்தியாவிலுள்ள நிலைமை

வேறு சில நாடுகளில் மறுசீரமைக்கும் பிரச்சினை போரில் நிர்மூலமாக்கப்பட்டுவிட்ட கருவிகளையும் எந்திரங்களையும் தொழில் நிலையங்களையும் புதுப்பிக்கும் பிரச்சினையாக உரு வெடுத்திருக்கிறது. இந்தியாவைப் பொறுத்தவரையில், அதன் மறு சீரமைப்புப் பிரச்சினையில் போரில் ஈடுபட்டுள்ள இதர நாடு களுக்கு இவ்வகையில் ஏற்பட்டுள்ள அனைத்து அனுபவங்களை யும், அவற்றின் சகல அம்சங்களையும் கணக்கிலெடுத்துக் கொள்ள வேண்டும்.

ஆனால் அதேசமயம் இந்தியாவின் மறுசீரமைப்புப் பிரச் சினை இதர நாடுகளின் மறுசீரமைப்புப் பிரச்சினையிலிருந்து அடிப் படையிலேயே மாறுபட்டது என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. ஏனைய நாடுகளில் மறுசீரமைப்புப் பிரச்சினை ஏற்கெனவே உள்ள தொழில் துறையைப் புதுப்பிக்கும் பிரச்சினையாக இருந்து வருகிறது.

இந்தியாவின் மறுசீரமைப்புப் பிரச்சினையோ ஏற்கெனவே உள்ள தொழில்களைப் புனரமைக்கும் பிரச்சினையாக அல்லாமல் பிரதானமாக இந்தியாவின் தொழில் வளர்ச்சிப் பிரச்சினையாக, முடிவில் காலகாலமான, நாட்பட்ட கொடிய வறுமையை ஒழித்துக் கட்டும் பிரச்சினையாக இருந்து வருவதை நான் காண்கிறேன்.

எனவே, மத்திய அரசாங்கமும் மாகாண அரசாங்கங்களும் போட்டி போட்டுக்கொண்டு உரிமை கொண்டாடுவதைக் கருத்திற் கொள்ளாமல், மனித வாழ்க்கையை மனத்திற்கொண்டு மின்விசை சம்பந்தப்பட்ட பிரச்சினைகளுக்கு ஆழ்ந்த அக்கறையுடனும் மெய் யார்வத்தோடும் அரசியல் மேதகைமையுடனும் நாம் தீர்வு காண முடியும் என்று நம்புகிறேன்.

மறுசீரமைப்பு சம்பந்தமாக கடந்தகாலத்தில் மேற்கொள்ளப் பட்ட முயற்சிகள் பரிதாபகரமாக தோல்வியடைந்த கசப்பான நினைவுகள் இருந்தபோதிலும் நம்பிக்கை இழந்த உணர்வோடு

என் உரையை முடிக்க விரும்பவில்லை. அவசியத்திலிருந்து புதுமை தோன்றும் என்பார்கள்; அல்லல்களிலிருந்து ஆண்டவன் பக்தி தோன்றும் என்று கூறுவது உண்டு. அதே போன்று மறுசீரமைப்புக் கான உத்வேகத்தை யுத்தம் அளிப்பதாகத் தோன்றுகிறது. ஆனால் இதில் பரிதாபத்துக்கும் வேதனைக்குமுரிய விஷயம் என்னவென் றால், போரிலிருந்து தோன்றும் உந்துதல் சமாதானம் ஏற்பட்டதும் மடிந்துவிடுவதாகத் தெரிகிறது. கடந்த யுத்தத்திற்குப் பிறகு இந்தியா வில் இதுதான் நிகழ்ந்தது; அப்போது இந்தியத் தொழில்துறை ஆணையமும், இந்தியப் படைக்கல வாரியமும் முன்வைத்த மறு சீரமைப்புத் திட்டத்திற்கு இதே கதிதான் ஏற்பட்டது. ஆனால் இம் முறை மறுசீரமைப்புத் திட்டம் வாடிவதங்கி உதிர்ந்து போகாது என்ற நம்பிக்கை எனக்கு உண்டு. ஏனென்றால் வில்லியம் ஜேம்ஸ் குறிப்பிட்டது போன்று ''இந்தியாவின் வறுமை எத்தகையது என்பதை சென்ற யுத்தகால ராஜியவாதிகள் அறிந்திருக்கவில்லை, ஆனால் அந்த இந்திய வறுமையின் கண்கண்ட எதார்த்தம் பற்றிய கூரிய உணர்வை'' இந்த யுத்தம் தோற்றுவித்திருப்பதை நாம் இப்போது காண்கிறோம்.

* * *

## [1]ஷெட்யூல்டு வகுப்பு மாணவர்களுக்கும் இந்திய அகதிகளுக்கும் உதவி

### நிரந்திர நிதிக்குழுவால் அங்கீகரிக்கப்பட்ட பரிந்துரைகள்

விஞ்ஞான, தொழில் நுட்பக் கல்வி பயிலும் ஷெட்யூல்டு வகுப்பு மாணவர்களுக்கு உபகாரச் சம்பளங்கள் வழங்குதல், யுத்த பிராந்தியங்களிலிருந்து வரும் அகதிகளுக்கும் அங்கு காவலில் வைக்கப்பட்டிருப்போரை சார்ந்து வாழுபவர்களுக்கும் ஆகும் செலவை ஏற்றல் ஆகிய இரு முக்கியமான பரிந்துரைகள் 1943 நவம்பர் 20 ஆம் தேதி புதுடில்லியில் இந்திய அரசாங்கத்தின் நிதித் துறை உறுப்பினரான மாண்புமிகு சர் ஜெரிமி ரய்ஸ்மான் தலைமை யில் நடைபெற்ற நிரந்தர நிதிக்குழு கூட்டத்தில் அங்கீகரிக்கப் பட்டன.

முந்திய பரிந்துரையைச் செயல்படுத்துவதற்கு ஐந்தாண்டு

1. இந்தியத் தகவல் ஏடு, டிசம்பர் 15, 1943, பக்கம் 337.

காலத்துக்கு வருடம் ரூ. 3 லட்சமும் பிந்திய பரிந்துரையைச் செயல் படுத்துவதற்கு 1944-45ல் ரூ. 225 லட்சமும் செலவாகும்.

### உபகாரச் சம்பளங்கள்

உயர்நிலைப் பள்ளிக் கல்வியை முடித்த ஷெட்யூல்டு வகுப்பைச் சேர்ந்தவர்கள் மேற்கல்வி பெறுவதற்கு வருடம் ரூ. 3 லட்சம் வீதம் 5 ஆண்டுக் காலத்திற்கு வழங்கப் பரிந்துரைக்கப்பட்டிருக்கிறது. இந்தியாவிலும் வெளிநாடுகளிலும் விஞ்ஞான, தொழில்நுட்பக் கல்வி பெறுவதற்கு இந்த உபகாரச் சம்பளங்கள் வழங்கப்படும்.

குழு இந்தப் பரிந்துரையை ஏற்றுக்கொண்டது.



# 23

## [1]தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் ஜாரியா நிலக்கரிச் சுரங்கங்களுக்கு வருகை

மத்திய நிர்வாக சபையில் தொழிலாளர் நலத் துறை உறுப்பினராக உள்ள மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர், தொழிலாளர் இலாகா செயலாளரான மதிப்புக்குரிய திரு. எச்.சி. பிரியோர், இந்திய அரசாங்கத்தின் தொழிலாளர் நலத்துறை ஆலோசகரான திரு. ஆர்.எஸ். நிம்ப்கர் ஆகியோர் நிலக்கரிச் சுரங்கங்களிலுள்ள வேலை நிலைமைகளை ஆராயும் பொருட்டு அண்மையில் தான்பாத்துக்கு வருகை தந்தனர்.

தான்பாத்தில் தங்கியிருந்தபோது, நிலக்கரி உற்பத்தியை அதிகரிக்கும் யோசனைகள் குறித்தும், சுரங்கங்களில் ஆள் பற்றாக்குறையால் ஏற்பட்டுள்ள நிலைமை குறித்தும் சுரங்க முதலாளிகளுடனும் தொழிலாளர்களுடனும் அவர்கள் விரிவாக விவாதம் நடத்தினர்.

பெண்கள் நிலத்தடியில் வேலை செய்ய மீண்டும் அனுமதிக்கப்பட்டிருக்கும் நிலைமையில், சுரங்கத் தொழிலாளர்களுக்குப் பல்வேறு சலுகைகள் வழங்கும் பிரச்சினையும், சுரங்கங்களில் ஆக்க நல வசதிகளை மேம்படுத்தும் பிரச்சினையும் கூடுதல் முக்கியத்துவத்தைப் பெற்றுள்ளன. தொழிலாளர்களுக்கு உணவுப் பொருள்கள் தட்டின்றிக் கிடைப்பதற்கும் இதர சலுகைகள் வழங்கு வதற்கும் மத்திய அரசாங்கம் உடனடி நடவடிக்கைகள் எடுத்து வருவதாகத் தெரிகிறது. வங்காளத்தில் போதிய உணவு வழங்கீடுகள் பற்றாக் குறையாலும், வங்காளத்திலும் பீகாரிலும் தொழிலாளர்களுக்குப் போதிய அளவில் சலுகைகள் அளிக்கப்படாததாலும் எழுந்துள்ள இடர்ப்பாடுகள் கடந்த சில காலமாகவே தொழிலாளர் நலத் துறையின் பரிசீலனையில் இருந்து வருகின்றன.

புதுடில்லியில் அண்மையில் நடைபெற்ற நிலக்கரி மாநாட்டில் இந்தப் பிரச்சினை விவாதிக்கப்பட்டது. தொழிலாளர் நலத்துறை உறப்பினர் தான்பாத்தில் தங்கியிருந்தபோது, தொழில் துறையுடன் மேற்கொண்டு ஆலோசனைகள் நடைபெற்றதாகத் தெரிய வருகிறது.



1. இந்தியத் தகவல் ஏடு, டிசம்பர் 15, 1943, பக்கம் 336.

# 24

## [1]தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் நிலக்கரிச் சுரங்கங்களுக்கு வருகை

### வேலை நிலைமைகளையும் சுரங்கத் தொழிலாளர்களின் குடியிருப்புகளையும் பார்வையிடுகிறார்

இந்திய அரசாங்கத்தின் தொழிலாளர் நலத்துறை உறுப்பின ரான மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் டிசம்பர் 9ஆம் தேதி வியாழனன்று தான்பாத் வந்து சேர்ந்தார்; நிலக்கரிச் சுரங்கங்களில் வேலை நிலைமைகளை ஆராய்வதே அவரது வருகையின் நோக்கம். அவரை வரவேற்பதற்கு ஸ்தல அதிகாரிகள் ஏராளமானோர் வந்திருந்தனர். பீகார் தொழிலாளர் நலத்துறை ஆணையர் திரு. எஸ்.என். மஜூம்தார், சுரங்கரத் தலைமை மேலாளர் திரு. டபிள்யூ. கிர்பி, பல்வேறு சுரங்க நிறுவனங்களின் பிரதிநிதிகள், சுரங்க முத லாளிகள், தொழிலாளர் இலாகா செயலாளர் திரு. எச்.சி. பிரியோர், இந்திய அரசாங்கத்தின் தொழிலாளர் நல ஆலோசகரான திரு. ஆர். எஸ். நிம்ப்கர் முதலியோர் இவர்களில் அடங்குவர்.

தான்பாத் வந்த சிறிது நேரத்தில் தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் சுரங்கத் தலைமை மேலாளர், சுரங்க முதலாளிகள், திரு. பிரியோர், திரு. நிம்ப்கர் முதலியோர் புடை சூழ புலான்பரேரீ நிலக்கரிச் சுரங்கத்துக்குப் புறப்பட்டுச் சென்றார். தொழிலாளர்களின் பிரதிநிதிகள், இந்தியத் தொழிலாளர் சம்மேளனத்தைப் பிரதிநிதித் துவப்படுத்தும் திரு. கார்னிக், அகில இந்தியத் தொழிற் சங்க காங் கிரஸ் சார்பில் குமாரி சாந்தா பால் ராவ் ஆகியோரும் நிலக்கரிச் சுரங்கங்களிலுள்ள வேலை நிலைமைகளை ஆராய்வதற்காக குழு வினருடன் உடன் சென்றனர். பூமியின் மேற்பகுதியிலும் நிலத்தடி யிலும் வேலை நிலைமைகளை ஆய்ந்தறிவது அவர்களது பயணத் திட்டத்தில் அடங்கியிருந்தது.

---

1. இந்தியத் தகவல் ஏடு, ஜனவரி 1, 1944, பக்கங்கள் 39-40.

## 400 அடிக்குக் கீழே

ராணுவத்தினர் அணியும் கவசத் தொப்பிகள் போன்ற ''பாது காப்புத் தொப்பிகளை'' அணிந்து கொண்டு தொழிலாளர் நலத் துறை உறுப்பினரும் ஏனையோரும் இரு பிரிவுகளாக 400 அடி ஆழத்திலுள்ள சுரங்கத்துக்குச் சென்றனர்; அங்கு தொழிலாளர்கள் நிலக்கரி வெட்டிக் கொண்டிருப்பதைப் பார்வையிட்டனர். இந்தத் தொழிலாளர்களிடையே சில பெண் தொழிலாளர்களும் இருந்தனர். சுரங்கங்களில் பெண்களை வேலைக்கமர்த்தக்கூடாது என்ற தடை நீக்கப்பட்டதன் பயனாக இவர்கள் அண்மையில்தான் இந்தச் சுரங் கத்தில் வேலைக்கமர்த்தப்பட்டவர்கள் ஆவர். தொழிலாளர் நலத் துறை உறுப்பினரும், திரு. நிம்பகரும் ஏனையோரும் தொழிலாளர் களிடம் அவர்களது ஊதியங்களையும் வருவாய்களையும் பற்றி ஏராளமான கேள்விகளைக் கேட்டனர்.

குழுவினர் புலான்பரேரீ சுரங்கத்தைச் சுற்றிப் பார்த்துக் கொண்டு வந்தபோது, ஓரிடத்தில் நிலக்கரி ஒழுங்குபடுத்தி வைக்கப் படும் பணியைப் பார்வையிட்டனர். மேற்பரப்பில் நடைபெற்று வரும் பணியைப் பார்வையிட்டுக்கொண்டு வந்தபோது டாக்டர் அம்பேத்கர் தொழிலாளர்களுடன் நேசபூர்வமாகவும் அன்போடும் அளவளாவினார்; அவர்களது ஊதியங்களைப்பற்றியும் வாழ்க்கை நிலைமைகளைப் பற்றியும் பரிவோடு விசாரித்தார்.

பின்னர் தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் சுரங்கங் களுக்கு அருகாமையிலிருந்து தொழிலாளர் குடியிருப்புகளுக்குச் சென்றார். **ஹம் அந்தர் ஏ சக்தே ஹைன்** என்று பண்போடும் பவ்வியத்தோடும் இந்தியில் பேசி அனுமதி பெற்று ஒரு தொழிலாளி யின் வீட்டிற்குள் நுழைந்தார். வீட்டிலிருந்த தட்டுமுட்டுப் பொருள் களையும் ஏனைய பொருள்களையும் பார்வையிட்டார். காற்றோட்ட ஏற்பாடுகளையும் நோட்டமிட்டார்.

பின்னர் குழுவினர் நவீன வசதிகளுடன் சுத்தமாகப் பராமரிக் கப்பட்டு வரும் ஒரு மருத்துவமனைக்கு அழைத்துச் செல்லப்பட் டனர். இந்த நிலக்கரிச் சுரங்கத்தின் உரிமையாளர்களால் நடத்தப் பட்டு வரும் மருத்துவமனையாகும் இது. தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அங்கு தங்கி சிகிச்சை பெற்றுவரும் சில நோயாளிகளுடன் அளவளாவி உரையாடினார். பெண் தொழிலாளர்களுக்கான சிகிச்சைப் பிரிவுக்கும் அவர் அழைத்துச் செல்லப்பட்டார்.

## தொழிலாளர்கள் குடியிருப்பு

அடுத்து, குழுவினர் திக்வதி நிலக்கரிச் சுரங்கத்துக்குச் சென்றனர். நிலக்கரி உற்பத்தி செய்வதற்கு மிக நவீனமான எந்திர சாதனங்கள் பயன்படுத்தப்படுவதை அங்கு கண்டனர். இங்குள்ள தொழிலாளர் குடியிருப்பில் தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் சுமார் ஒருமணி நேரம் செலவிட்டார்; சுரங்க உரிமையாளர்கள் தங்களுடைய தொழிலாளர்களுக்காகக் கட்டித்தந்திருக்கும் பல்வேறு வகையான வீடுகளைப் பார்வையிட்டார். சுரங்கப் பணிக்குத் தொழிலாளர்களைத் தேர்ந்தெடுக்கும் வழிமுறைகளைத் தெரிந்துகொள்வதில் அவர் மிகுந்த ஆர்வம் காட்டினார்.

அன்றைய சுற்றுப் பயணத்திட்டத்தில் திஸ்ரா நிலக்கரிச் சுரங்கத்தைப் பார்வையிடுவதும் அடங்கியிருந்தது. சுரங்க முதலாளிகள் தங்கள் தொழிலாளர்களுக்கு அளிக்கும் கூலி விகிதங்களைப் பரிசீலிப்பதுடன் ஆய்வு ஆரம்பமாயிற்று. அன்று மாலை பின்னேரத்தில் குழுவினர் சுரங்கத்தின் மேற்பரப்புக்கு வந்து தங்கள் ஆய்வினை மேற்கொண்டனர். அப்போது தொழிலாளர்கள் மண்வெட்டிகள், குந்தாலிகள், சுரங்கத்தில் பயன்படுத்தப்படும் மண்ணெண்ணெய் காப்பு விளக்குகள் சகிதம் சாவதானமாக வீடு திரும்பிக் கொண்டிருந்தனர். தொழிலாளர்களும் அவர்களுடைய இல்லத்துப் பெண்களும் தங்கள் வீடுகளில் இரவுநேர உணவு சமைப்பதைத் தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் நேரில் பார்த்தார். தொழிலாளர்கள் உண்ணும் உணவின் அளவையும் தரத்தையும் பற்றித் தெரிந்து கொள்வதில் அவர் மிகுந்த ஆர்வம் காட்டினார். திஸ்ரா நிலக்கரிச் சுரங்கத்தில் சில இடங்களில் ஆண்களும் பெண்களும் மேற்பரப்புப் பணியில் ஈடுபட்டிருப்பதைக் கண்டார்.

## ராணிகஞ்ச் நிலக்கரிச் சுரங்கங்களுக்கு வருகை

டாக்டர் பி.ஆர். அம்பேத்கரும் அவருடைய குழுவினரும் சில ராணிகஞ்ச் சுரங்கங்களில் வேலை நிலைமையையும் நிலக்கரி உற்பத்தி முறைகளையும் பற்றித் தெரிந்துகொள்வதில் வெள்ளிக் கிழமையை செலவிட்டனர்.

சிவபூர் சுரங்க உரிமையாளர்கள் தங்களுடைய தொழிலாளர்களின் ஆக்க நலனுக்காகவும் மருத்துவப் பராமரிப்புக்காகவும் செய்து தந்திருக்கும் ஏற்பாடுகளைப் பரிசீலிப்பதுடன் இங்கு ஆய்வு ஆரம்பமாயிற்று. நாற்கோண வடிவில் கட்டப்பட்டு வெள்ளை வண்ணம்

பூசப்பட்ட ஓர் ஒற்றை மாடிக் கட்டிடத்தில் அமைந்திருந்த மருத்துவ மனைக்கு குழுவினர் அழைத்துச் செல்லப்பட்டனர். நவீன எக்ஸ்ரே வசதியுடனும் இதர அறுவைச் சிகிச்சை சாதனங்களுடனும் அந்த மருத்துவமனை அமைந்திருப்பதை அவர்கள் கண்டனர். அந்த மருத்துவமனை விரைவிலேயே செயல்படத் தொடங்கிவிடும் என்று தெரிய வந்தது.

அன்றைய தினம் பிந்தியபொழுதில் வைசிராய் நிர்வாக சபையின் தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தொழுநோயாளிகள் நல்வாழ்வு மையத்துக்கு அழைத்துச் செல்லப்பட்டார். தொழுநோய் ஆரம்பக்கட்டத்திலுள்ள நோயாளிகளுக்கு அங்கு சிகிச்சை அளிக்கப் பட்டு வந்தது. அடக்கமான ஒரு சிறு கட்டடத்தில் அமைந்திருந்த குழந்தை நலக் கேந்திரத்தையும் டாக்டர் அம்பேத்கர் பார்வை யிட்டார். சுரங்கத் தொழிலாளிகளின் நோஞ்சானான குழந்தைகள் அங்கு ஆயாக்களால் பராமரிக்கப்பட்டு வருவதைக் கண்டார். இந்த சேம நல நடவடிக்கைகளை எல்லாம் பாராட்டிய தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் இந்தக் குழந்தைகள் ஏன் இவ்விதம் நலிந்து மெலிந்து போயுள்ளனர் என்று வினவினார். சத்துணவுப் பற்றாக் குறையே இதற்குக் காரணம் என்று அவருக்கு விளக்கம் அளிக்கப் பட்டது.

### சுரங்கத் தொழிலாளர்களுக்கான பள்ளிக்கூடம்

சீதாப்பூர் நிலக்கரிச் சுரங்கத்துக்குச் செல்லும் வழியில் குழு வினர் ஒரு தொடக்கப் பள்ளிக்கு வருகை தந்தனர். அங்கு தொழி லாளர்களின் குழந்தைகள் டாக்டர் அம்பேத்கருக்கு மாலை அணி வித்தனர். ஒரு சுரங்கத் தொழிலாளியின் மகனான ஏழுவயதுள்ள ஒரு சிறுவனுடன் தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அளவளாவி உரையாடினார். அவனுடைய குடும்ப வருவாய் பற்றிய கேள்வி களுக்கு பால்மணம் மாறாத அந்த இளம் பிஞ்சு தயங்கித் தயங்கி ஆனால் புரிந்து கொள்ளக்கூடிய ஆங்கிலத்தில் பதிலளித்தான்.

அன்றைய தினம் ஆரம்பத்தில் குழுவினர் சோத்பூர் மணல் வாரி நிலையத்தைப் பார்வையிட்டனர். இது ஒரு பிரம்மாண்டமான எந்திர அமைப்பாகும். அண்மையிலுள்ள தாமோதர் வடி நிலத்தி லிருந்து மணிக்கு 200 டன் மணலை வாரியெடுத்து தானியங்கி கயிற்று வழிப்போக்குவரத்து மூலம் சுரங்கங்களுக்கு அது அனுப்பு கிறது.

சீதாப்பூர் நிலக்கரிச் சுரங்கத்தில் நிலத்துக்கடியிலான வேலை நிலைமைகளையும் குழுவினர் பார்வையிட்டனர். அவர்கள் சுமார் 1000 அடி ஆழத்துக்குக் கீழே இறங்கி மிக நவநவீனமான முறையில் நிலக்கரி வெட்டும் எந்திரங்களைக் கண்டனர்.

தான்பாத்துக்குத் திரும்பிச் செல்லும் வழியில் தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பெகுனியா நிலக்கரிச் சுரங்கத்தைச் சேர்ந்த தொழிலாளர்கள் குடியிருப்பில் ''தோவ்ராஸ்களை''ச் சென்று பார்த்தார். ஓர் அறை கொண்ட குடியிருப்பு மனைகள்தான் ''தோவ்ராஸ்கள்'' எனப்படுகின்றன. இந்த அறைகள் இருள் சூழ்ந்து காணப்பட்டன. ஓரிடத்தில் அவர்கள் ஒரு விசித்திரமான காட்சியைக் கண்டனர். குடியிருப்பவர்களுக்கே இடம் போதாத ஒரு சின்னஞ்சிறு அறையை ஒட்டிய மிகக் குறுகிய தாழ்வாரத்தில் ஒரு கன்றுக்குட்டி வைக்கோலை மென்று சாவதானமாக அசைபோட்டுக் கொண்டிருந்தது. டாக்டர் அம்பேத்கர் அங்கு குடியிருந்தவர்களிடம் மனம் விட்டு உரையாடினார். வீட்டு உபயோகத்துக்கான போதிய அளவு நிலக்கரி தொழிலாளர்களுக்கு இலவசமாக வழங்கப்பட்டு வருவது தெரியவந்தது. தொழிலாளர்களின் உணவு, உடை, மருத்துவ வசதிகள் போன்றவற்றைப் பற்றியும் தொழிலாளர்களிடமிருந்து விசாரித்து அவர் தெரிந்து கொண்டார்.

## தான்பாதில் தொழிலாளர்கள் பிரச்சினைகள் விவாதிக்கப்பட்டன

சனிக்கிழமை அன்று தான்பாதில் நடைபெற்ற ஒரு மாநாட்டில் தற்போது நிலக்கரிப் பற்றாக்குறை ஏற்பட்டிருப்பதற்கான காரணங்களும், இதனைச் சமாளிப்பதற்கு எடுத்துக் கொள்ளப்பட வேண்டிய நடவடிக்கைகளும் விவாதிக்கப்பட்டன. மத்திய அரசாங்கம், வங்காளம், பீகார் அரசாங்கங்கள், மூன்று சுரங்க சங்கங்கள் ஆகியவற்றின் பிரதிநிதிகளும் தொழிலாளர்கள் சார்பில் வந்திருந்தவர்களும் இந்த மாநாட்டில் பங்கு கொண்டனர். மத்திய நிர்வாக சபையின் தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் மாநாட்டுக்குத் தலைமை தாங்கினார்.

தலைவர் தமது சுருக்கமான தொடக்க உரையில் தொழில்துறைத் தொழிலாளர்கள் சம்பந்தப்பட்ட பிரச்சினைகள் விவாதிக்கப்படுகின்ற முத்தரப்புத் தொழிலாளர் மாநாடுகளுடன் இந்த மாநாட்டை ஒப்பிட்டுப் பேசினார். இந்தியாவின் பல்வேறு தொழில்களுக்கும்

போர் முயற்சிகளுக்கும் மேன்மேலும் அதிக நிலக்கரியை உற்பத்தி செய்ய வேண்டிய அவசியத்தை அவர் வலியுறுத்தினார். இந்த விஷயம் குறித்து தொழிலாளர்களின் பிரதிநிதிகளும் முதலாளி களின் பிரதிநிதிகளும் சிறந்த ஆலோசனைகள் வழங்கி உதவுவார் கள் என்று நம்பிக்கை தெரிவித்தார்.

''அதிகம் உணவு உற்பத்தி செய்யுங்கள்'' என்னும் இயக் கத்தின் விளைவாக அமோக விளைச்சல் கண்டு, வழக்கத்தைவிட வேளாண் துறைக்கு அதிக ஆட்கள் தேவைப்பட்டதும், ராணுவத்தில் சேருவதில் நிலவிய போட்டியுமே நிலக்கரிச் சுரங்கப் பணிகளுக்கு ஆட்கள் பற்றாக்குறை ஏற்பட்டதற்குப் பிரதான காரணங்களாகும். இந்த நிலைமையைச் சமாளிப்பதற்கான நடவடிக்கைகள் எடுத்துக் கொள்வது பற்றி விவாதிக்கப்பட்டது; அண்டைக் கிராமங்களி லிருந்து நிலக்கரிச் சுரங்கங்களுக்கு ஆட்களைத் திரட்டிக் கொண்டு வருவதற்கு உதவ அதிகப் பெட்ரோலும் டயர்களும் வழங்கப்பட வேண்டும் என்று தொழிலாளர்களின் பிரதிநிதிகள் கேட்டுக்கொண்டனர்.

ஆண், பெண் சுரங்கத் தொழிலாளர்களுக்குப் போதிய அளவில் உணவுப் பொருள்கள் பங்கீட்டை வழங்கும் நோக்கத் தோடு சிறிது காலத்திற்கு முன்னர் மத்திய அரசாங்கம் முன்மொழிந்த பங்கீட்டுத் திட்டம் மாநாட்டின் நிகழ்ச்சி நிரலில் அடுத்தபடியாக இடம்பெற்றிருந்தது. இது சம்பந்தமாக நடைபெற்ற விவாதத்தின் போது, இப்பிரதேசத்தில் ஓர் உணவுப் பங்கீட்டுத் திட்டத்தை நடைமுறைப்படுத்த பீகார் அரசாங்கம் உத்தேசித்திருக்கும் விஷயம் பிரஸ்தாபிக்கப்பட்டது. இது நிகழுமானால் சுரங்கத் தொழிலாளர் களுக்காகக் கொண்டுவரப்பட்டிருக்கும் பங்கீட்டுத் திட்டத்தை மறு பரிசீலனை செய்யப்பட வேண்டியிருக்கும் என்று தீர்மானிக்கப் பட்டது.

சுரங்கத் தொழிலாளர்களுக்கான வழங்கீடுத் திட்டத்தில் அவர் களைச் சார்ந்திருப்போருக்கும் உணவுப் பொருள்களை வழங்கு வதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. முழு வாரப் பங்கீட்டைப் பெறுவதற்கு குறைந்தபட்சம் ஐந்து நாட்கள் வேலை செய்திருக்க வேண்டும் என்று நிர்ணயிக்கப்பட்டுள்ள போதிலும், இதைவிடக் குறைந்த நாட்கள் வேலை செய்வோருக்கும் போதிய வழங்கீடு களுக்கு திட்டத்தில் வகை செய்யப்பட்டிருக்கிறது. தொழிலாளர்களுக்கு ஆரம்பத்தில் ரூபாய்க்கு ஆறு சேர் வீதம் அரிசி விற்பனை செய்வது என்றும், இதே விலையில் அவசியமான அளவு பருப்பு விற்பனை செய்வது என்றும் முடிவு செய்யப்பட்டது.

உப்பு, கடுகு எண்ணெய், மலிவுவிலைத்துணி மற்றும் இதர பயனீட்டுப் பண்டங்களை தொழிலாளர்களுக்கு வழங்குவது சம்பந்த மாக மத்திய அரசாங்கம் முன்வைத்துள்ள திட்டம் பற்றியும் மாநாடு பரிசீலித்தது. சுரங்க உரிமையாளர் சங்கங்கள் மூலமாக பல்வேறு நிலக்கரிச் சுரங்கங்களுக்கு இப்பொருள்களை விநியோகிப்பது இத் திட்டத்தின் ஒரு முக்கிய அம்சமாகும். நிலக்கரிச் சுரங்கத் தொழி லாளர்களின் சேமநலனுக்கு அரசாங்கம் பரிந்துரைத்துள்ள பல்வேறு நடவடிக்கைகளில் ஒரு சேம நல வரியை உடனடியாக விதிப்பதும் ஒன்று; இந்த வரியிலிருந்து கிடைக்கும் பணத்தைக் கொண்டு ஒரு நிதியம் உருவாக்கப்படும்; நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர்களின் ஆக்க நலனுக்கு ஆகும் செலவுகள் இந்த நிதியத்திலிருந்து ஈடுகட்டப் படும்; மேலும் 1,00,000 டன்னுக்கும் அதிகமாக நிலக்கரி உற்பத்தி செய்யும் எல்லாச் சுரங்கங்களிலும் தொழிலாளர் நல அதிகாரிகள் நியமிக்கப்படுவார்கள்.

## ஊதிய உயர்வு

சுரங்கத் தொழிலாளர்களின் ஊதியங்கள் சம்பந்தப்பட்ட பல விஷயங்களும் மாநாட்டு நிகழ்ச்சி நிரலில் இடம்பெற்றிருந்தன. 1939ல் நிலவிய ஊதிய விகிதங்களை மேலும் அதிகரிப்பதற்கு, அதாவது தற்காலிக யுத்தகால அதிகரிப்பை யுத்தத்திற்கு முந்தைய ஊதிய விகிதங்களைவிட மொத்தம் 50 சதவிகிதம் அதிகரிப்பதற்கு சுரங்க உரிமையாளர் சங்கங்கள் தயாராக இருப்பதாகத் தோன் றிற்று. எனினும் நிலக்கரிச் சுரங்கங்களில் பயனீட்டுப் பண்டங்கள் போதிய அளவில் இருப்பு இருக்க வேண்டும், இதற்கான உத்தர வாதம் அளிக்கப்பட வேண்டும், அவ்வாறில்லை எனில் ஊதிய உயர்வால் பலன் ஏதும் கிட்டாது என்று அந்த சங்கங்கள் கருத்துத் தெரிவித்தன.

மாநாட்டில் விவாதிக்கப்பட்ட ஏனைய விஷயங்களில் ஊதிய வழங்கீடு சட்டத்தை சுரங்கத் தொழிலாளர்கள் விஷயத்தில் செயல்படுத்தும் சாத்தியக்கூறும் அடங்கும்; சுரங்கத் தொழிலில் இச்சட்டத்தை செயல்படுத்துவதிலுள்ள சிரமங்கள் கவனத்தில் கொள்ளப்பட்டன. அமித லாப வரி விஷயத்தில் உதவ வேண்டும் என்றும், எந்திர சாதனங்களுக்கு வழிவகை செய்யப்பட வேண்டும் என்றும் முன்வைக்கப்பட்ட வேண்டுகோள்கள் பரிசீலிக்கப்பட்டன.



# 25

## [1]இந்தியாவில் தொழிலாளர்களின் சேம நலனை மேம்படுத்தல்

தொழிலாளர் நிலைக்குழுவின் கூட்டம் லட்சுமணபுரியில் ஜனவரி 25,26 தேதிகளில் நடைபெற்றது. தொழில்துறைத் தொழிலாளர்களுக்கான பஞ்சப்படி, தொழிலாளர்கள் சரிவர வேலைக்கு வராதிருத்தல், பணி பதிவேடுகளைப் பராமரித்தல், பணிமனைச் சிற்றுண்டிச்சாலைகளின் முறையான நிர்வாகம் போன்ற பல்வேறு விஷயங்கள் கூட்டத்தில் விவாதிக்கப்பட்டன.

கூட்டம் சட்டப்பேரவை வளாகத்தில் நடைபெற்றது. இந்திய அரசாங்கத்தின் தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் தலைமை வகித்தார். தொழிலதிபர் அமைப்புகள், தொழிலாளர் அமைப்புகள் ஆகியவற்றிலிருந்து தலா ஐந்து பிரதிநிதிகளும், மாகாண அரசாங்கங்கள் சார்பில் ஐந்து பிரதிநிதிகளும், இந்திய சமஸ்தானங்கள் சார்பில் மூன்று பிரதிநிதிகளும் பங்கு கொண்டனர்.

### டாக்டர் அம்பேத்கர் உரை

தலைவர் தமது தொடக்க உரையில் தொழிலாளர் நிலைக்குழுவின் முந்தைய கூட்டங்களில் மேற்கொள்ளப்பட்ட முடிவுகளைச் செயல்படுத்துவதற்கு மத்திய அரசாங்கம் எடுத்துவரும் பல்வேறு நடவடிக்கைகளை விவரித்தார்; மத்தியப் பொதுப்பணித்துறை இலாகா செய்து கொள்ளும் ஒப்பந்தங்களில் நியாய ஊதிய விதியைச் சேர்ப்பதற்கு அரசாங்கம் முடிவு செய்திருப்பதைத் தெரிவித்தார். மத்திய அரசாங்கத்தின் இதர இலாகாக்கள் செய்து கொள்ளும் ஒப்பந்தங்களிலும் இதே போன்ற விதியை சேர்ப்பது குறித்துப் பரிசீலிக்கப்பட்டு வருவதாகவும் அவர் கூறினார்.

கடந்த தொழிலாளர் மாநாட்டின் முழு நிறைவான கூட்டத்

1. இந்தியத் தகவல் ஏடு, பிப்ரவரி 15, 1944, பக்கங்கள் 151-152.

தொடரில் ஏற்கப்பட்ட தீர்மானத்துக்கு இணங்க தொழிலாளர்களின் ஊதியங்கள், வருவாய்கள், வேலை நிலைமைகள் முதலியவற்றைப் பற்றி விசாரணை செய்வதற்கு இந்திய அரசாங்கம் ஒரு விசாரணைக் குழுவை நியமித்திருக்கிறது என்று தலைவர் அறிவித்தார் விவசாயக் கூலித் தொழிலாளர்கள் விஷயத்திலும் இந்த விசாரணையை உரிய முறையில் மேற்கொள்ளும் விஷயமும் மாகாண அரசாங்கங் களுடன் கலந்தாலோசித்து பரிசீலிக்கப்பட்டு வருவதாகவும் அவர் தெரிவித்தார்.

இந்தியாவில் சட்டரீதியாக ஊதியத்தை ஒழுங்குபடுத்தும் முறை பற்றியும், இத்தகைய முறை அவசியமா, அவ்வாறு அவசிய மானால் அதனை எப்போது நடைமுறைக்குக் கொண்டுவருவது என்பது பற்றியும் குழு பின்னர் விவாதித்தது.

ஊதியக் குழுமங்களை அமைப்பதென முடிவு செய்யப் பட்டால், அவை மாகாண ரீதியாகவும், தனித்தனித் தொழில் வாரி யாகவும் அமைக்கப்பட வேண்டும் என்று பிரதிநிதிகள் பொதுவாகக் கருதியதாகத் தோன்றிற்று.

வேலை வாய்ப்பு அலுவலகங்கள் திட்டத்தையும், மாகாணங் களில் இத்திட்டம் அடைந்துள்ள முன்னேற்றம் குறித்தும் மாகாண அரசாங்கப் பிரதிநிதிகள் முன்வைத்த கருத்துகளையும் பற்றி குழு சுருக்கமாக விவாதித்தது. அதன் பின்னர், பிரதிநிதிகளின் கருத்தறியும் பொருட்டு மத்திய அரசாங்கம் சுற்றுக்கு விட்ட வைப்புநிதி மாதிரி விதிகளை குழு பரிசீலனைக்கு எடுத்துக் கொண்டது. இந்த நிதியின் நிர்வாகம், ஊழியர்கள் மற்றும் தொழிலாளர்களின் பங்களிப்பு, நிதியிலிருந்து கடன் பெறுதல் போன்றவை சம்பந்தப்பட்ட விவ ரங்களையும் அது ஆராய்ந்தது.

## அகவிலைப்படி

அகவிலைப்படி குறித்து கிரிகோரி குழு சமர்ப்பித்த அறிக்கை யையும் குழு ஆராய்ந்தது. மாநாட்டின் கடந்த கூட்டத்தொடரில் ஏற்கப்பட்ட தீர்மானத்துக்கு இணங்க முத்தரப்புத் தொழிலாளர் மாநாட்டின் தலைவர் இந்த கிரிகோரி குழுவை அமைத்தது நினை விருக்கும். அகவிலைப்படியை நிர்ணயிப்பதற்கான பொதுக்கோட் பாடுகள், அந்தக் கோட்பாடுகளின் இயல்பு, வெவ்வேறு தொழில்

களுக்கு அல்லது வெவ்வேறு பிராந்தியங்களுக்கு வெவ்வேறான முறையில் விகிதங்களை நிர்ணயிப்பதிலுள்ள சாதகம், அகவிலைப் படிக்கும் வாழ்க்கைச் செலவு குறியீட்டெண்ணுக்குமுள்ள சம்பந்தா சம்பந்தம் முதலியவை குறித்து கிரிகோரி குழுவின் அறிக்கையில் தெரிவிக்கப்பட்டிருந்த கருத்துகள் விவாதிக்கப்பட்டன.

தொழில் நிலையங்கள் வழங்கும் அல்லது வழங்க வேண்டிய அகவிலைப்படி சம்பந்தமான பொதுவிதிகளை பெரும்பாலும் அரசாங்கம்தான் வகுத்துத் தர வேண்டும் என்பதை குழு ஏற்றுக் கொண்டதாகத் தெரிகிறது. அகவிலைப்படி குறித்த விதிகளை வகுத்தளிப்பதற்கு துணைக் குழுவின் அறிக்கை அரசாங்கத்துக்குப் பயனுள்ள வழிகாட்டியாக இருக்கும் என்பதை ஒப்புக் கொண்டும், பிரதிநிதிகள் தெரிவித்த கருத்துகளின் பகைப்புலனிலும் அதனை இந்திய அரசாங்கத்துக்கு அனுப்பி வைப்பதென குழு தீர்மானித்தது.

## அடிக்கடி வேலைக்கு வராதிருத்தல்

தொழில் நிலையங்களில் அதிலும் குறிப்பாக போர்த்தளவாடங்கள் தயாரிக்கப்படும் தொழில் நிலையங்களில் தொழிலாளர்கள் அடிக்கடி வேலைக்கு வராதிருப்பது குறித்து ஒரு மாதிரி ஆய்வு நடத்தும் நகல் திட்டம் ஒன்றும் கூட்டத்தின் நிகழ்ச்சி நிரலில் இடம் பெற்றிருந்தது. நோய்வாய்ப்படுதல், விபத்துக்குள்ளாதல், விடுப்பு எடுத்தல் போன்ற காரணங்களாலும், சமூக அல்லது சமய காரணங்களாலும், போக்குவரத்து இடர்ப்பாடுகள் காரணமாகவும், கால தாமதமாகிவிட்டதன் காரணமாகவும் தொழிலாளர்கள் அடிக்கடி வேலைக்கு வராதிருக்கும் பிரச்சினை குறித்து ஓர் எதார்த்தபூர்வமான ஆய்வு நடத்துவதே இந்தத் திட்டத்தின் நோக்கமாகும். சில திருத்தங்களுடன் பொதுவாக இந்தத் திட்டம் அங்கீகரிக்கப்பட்டது.

தொழில் நிலையங்களில் தொழிலாளர்களுக்காக சிற்றுண்டிச் சாலைகளையும், சமைக்கப்பட்ட உணவு விற்பனை நிலையங்களையும் தொடங்கும் பணியில் கண்டுள்ள முன்னேற்றத்தை குழு மதிப்பாய்வு செய்தது. பல சிரமங்களுக்கு இடையிலும் இத்தகைய சிற்றுண்டிச் சாலைகள் கணிசமான எண்ணிக்கையில் செயல்பட்டு வருவதும், தொழிலாளர்களிடையே அவை பிரபலம் பெற்றிருப்பதும் தெரிய வந்தது.

★ ★ ★

## [1]நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர்கள் நல்வாழ்வு அவசரச்சட்டம், 1944

''நிலக்கரி சுரங்கத் தொழிலாளர்கள் நல்வாழ்வு அவசரச் சட்டம், 1944'' என்னும் தலைப்புக் கொண்ட ஓர் அவசரச் சட்டம் இன்று பிறப்பிக்கப்பட்டது; நிலக்கரிச் சுரங்கத் தொழிலில் ஈடுபட்டுள்ள தொழிலாளர்களின் ஆக்க நலத்தை மேம்படுத்தும் நடவடிக்கைகளுக்காக இந்த அவசரச் சட்டத்தின்படி ஒரு நிதியம் அமைக்கப்படுகிறது. இந்த அவசரச் சட்டம் இந்தியா முழுவதுக்கும் பொருந்துவதோடு, உடனடியாக நடைமுறைக்கும் வருகிறது என்று இந்திய அரசாங்கத்தின் தொழிலாளர் இலாகா ஜனவரி 31-ஆம் தேதி வெளியிட்ட ஒரு பத்திரிகைக் குறிப்பு தெரிவித்தது.

இந்த நிதியத்தை உருவாக்குவதற்காக, பிரிட்டிஷ் இந்தியாவில் நிலக்கரிச் சுரங்கங்களிலிருந்து ரயில் மூலம் அனுப்பப்படும் எல்லா நிலக்கரிக்கும் சுட்ட நிலக்கரிக்கும் தீர்வை விதிக்கப்படும். ஆலோசனைக் குழுவுடன் கலந்தாலோசித்த பிறகு இந்தத் தீர்வை விகிதம் இந்திய அரசுச் செய்தி இதழில் அவ்வப்போது அறிவிக்கப்படும். இந்தத் தீர்வை டன்னுக்கு ஓர் அணாவுக்குக் குறையாமலும் நான்கு அணாவுக்கு மிகைப்படாமலும் இருக்கும். நிலக்கரியை அல்லது சுட்ட நிலக்கரியை எடுத்துச் செல்லும் ரயில்வே நிர்வாகத்தில் இந்திய அரசாங்கத்தின் சார்பில் இந்தத் தீர்வை வசூலிக்கப்படும்.

இவ்வாறு தீர்வை மூலம் கிடைக்கும் பணம் ''நிலக்கரிச் சுரங்கத் தொழிலில் ஈடுபட்டிருக்கும் தொழிலாளர்களின் சேமநல நடவடிக்கைகளுக்குச் செலவிடுவதற்காக'' தொழிலாளர் நல நிதியத்தில் சேர்க்கப்படுவதற்கு இந்த அவசரச் சட்டம் பொதுவாக வகை செய்திருக்கிறது; எனினும் இந்தப் பணம் முக்கியமாக எத்தகைய காரியங்களுக்குப் பயன்படுத்தப்பட வேண்டும் என்பதையும் அது குறிப்பிட்டுக் கூறியிருக்கிறது. தொழிலாளர்களுக்கு குடியிருப்பு வசதிகள் செய்துதருதல், குடி நீர் வழங்குதல், கல்வி வசதிகளை ஏற்படுத்தித் தருதல், அவர்களின் வாழ்க்கைத் தரங்களை உயர்த்துதல், சத்துணவு வழங்குதல், சமூக நிலைமைகளை மேம்படுத்துதல், பொழுதுபோக்கு வசதிகளை அமைத்துக் கொடுத்தல், போக்குவரத்து வசதிகளை அதிகரித்தல் போன்றவை இந்த நிதியத்தின் உதவியோடு

1. இந்தியத் தகவல் ஏடு, பிப்ரவரி 15, 1944, பக்கங்கள் 153-54.

இயங்கும் தொழிலாளர் நலத் திட்டத்தின் பிரதான குறிக்கோளாக இருக்கும்.

இவைதவிர, மக்களின் ஆரோக்கியத்தையும் சுகாதாரத்தையும் மேம்படுத்துதல், மருத்துவ வசதிகளைச் செய்து தருதல், ஏற்கெனவே இருந்துவரும் பல்வேறு வசதிகளை மேலும் அபிவிருத்தி செய்தல் முதலியவையும் இந்தத் திட்டத்தில் அடங்கும். மேலும், மத்திய அரசாங்கம் அங்கீகரிக்கப்பட்ட எந்தத் தொழிலாளர் நலத் திட்டத்துக்கும் உதவுவதற்கு மாகாண அரசாங்கத்துக்கோ, ஸ்தல ஸ்தாபன அமைப்புக்கோ, நிலக்கரி சுரங்கத்தின் உரிமையாளருக்கோ, அவரது பிரதிநிதிக்கோ அல்லது நிர்வாகிக்கோ இந்த நிதியத்திலிருந்து மானியங்கள் வழங்கவும் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. சுரங்கத்தொழிலாளர்களின் நலனுக்காகப் பணியாற்றும் தற்போதுள்ள அமைப்புகளை அவசியமான அளவு வலுப்படுத்துவதற்கும், அதே போன்று ஏற்கெனவே அங்கீகரிக்கப்பட்ட சுரங்கத் தொழிலாளர் நல்வாழ்வுத் திட்டங்களை முன்னிலும் திறம்படச் செயல்படுத்துவதற்கும் இந்த ஏற்பாடு துணை புரியும்.

## ஆலோசனை கூறும் குழு

ஒரு ஆலோசனைக் குழுவை அமைப்பதற்கும் மத்திய அரசாங்கத்துக்கு இந்த அவசரச் சட்டம் அதிகாரம் அளிக்கிறது. நிலக்கரிச் சுரங்கங்களின் உரிமையாளர்களையும் நிலக்கரிச் சுரங்கத் தொழிலில் வேலைக்கமர்த்தப்பட்டுள்ள தொழிலாளர்களையும் பிரதிநிதித்துவப்படுத்தும் உறுப்பினர்கள் சம எண்ணிக்கையில் ஏனையோருடன் இக்குழுவில் இடம் பெற்றிருப்பர். ஆலோசனைக் குழுவின் ஒரு உறுப்பினர் பெண்ணாக இருக்க வேண்டும். அவசரச் சட்டத்தின்படி மத்திய அரசாங்கம் கலந்தாலோசிக்க வேண்டிய விஷயங்களிலும் மற்றும் அவசரச் சட்டத்தைச் செயல்படுத்துவது சம்பந்தமாக தோன்றக்கூடிய இதர விஷயங்களிலும் இந்தக் குழு மத்திய அரசாங்கத்துக்கு ஆலோசனை கூறும்.



# 26

## [1]நிலக்கரிச் சுரங்கங்களில் பூமிக்கடியில் பெண்களை வேலைக்கு அமர்த்திக் கொள்வதற்கிருந்த தடை நீக்கம்

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (வைசிராய் நிர்வாக சபையின் தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): ஐயா, நமது அவையின் பெண் உறுப்பினர் இந்த ஒத்திவைப்புத் தீர்மானத் தைக் கொண்டு வந்தமைக்காக மகிழ்ச்சி அடைகிறேன். என் மனத் தில் பெரும் சுமையாக அழுத்திக்கொண்டிருக்கும் ஒரு விஷயம் குறித்து அவைக்கு விளக்கம் அளிக்க இந்த ஒத்திவைப்புத் தீர்மானம் எனக்கு நல்வாய்ப்பினை அளிக்கிறது. இதுவே என் மகிழ்ச்சிக்குக் காரணம். இந்திய அரசாங்கத்தின் இந்த முடிவை மிகவும் துரதிர்ஷ்ட வசமானது என்று கருதுகிறேன். இதிலிருந்தே அவை எனது உணர்வு களைப் புரிந்துகொள்ளும் என்று முதலிலேயே கூறிவிடுகிறேன். இந்த முடிவு எனக்கு மகிழ்ச்சி அளிக்கவில்லை. இருப்பினும் இப் போதைய சூழ்நிலைமைகளில் இத்தகைய முடிவை மேற்கொள்ளும் படி இந்திய அரசாங்கம் நிர்ப்பந்திக்கப்பட்டிருக்கிறது என்பதைக் கூறிக் கொள்ள விரும்புகிறேன். இதிலிருந்து என் நிலையை அவை வேறுபடுத்திப் புரிந்து கொள்ளும் என்று நம்புகிறேன்.*

*இந்த விஷயம் குறித்து இதுவரை நடைபெற்ற விவாதத்தை நான் உன்னிப்பாக செவிமடுத்துக் கேட்டதில் மதிப்பிற்குரிய பெரும் பாலான உறுப்பினர்கள் மனிதநேயத்தால் உந்தப்பட்டே பேசியிருக் கிறார்கள் என்று எனக்குப்படுகிறது. அவர்கள் எதார்த்த நிலையி லிருந்து வெகுதூரம் விலகிச் சென்று விட்டார்கள் என்பதே எனது தாழ்மையான கருத்து. இந்த விவாதத்தில் பங்கு கொண்டு பேச முன்வந்துள்ள நான் எதார்த்த நிலைமையைக் கணக்கிலெடுத்துக் கொண்டே உரையாற்ற எண்ணியுள்ளேன். இந்த அவை முடிவெடுக்க வேண்டிய விஷயங்கள் என்ற நோக்கில் பல விஷயங்கள் விவாதத் தின்போது முன்வைக்கப்பட்டன. நிலக்கரிச் சுரங்கங்களில் தற்போது*

---

*1. சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, பிப்ரவரி, 1944, பக்கம் 131.*

தரப்பட்டுவரும் ஊதியங்கள் பற்றிக் கூறப்பட்டதை முக்கியமாகக் குறிப்பிட வேண்டும். மேலும், நிலக்கரிச் சுரங்கங்களில் தொழிலாளர் களுக்குப் போதிய வசதிகள் செய்த தரப்படாதது பற்றியும் பல உறுப்பினர்கள் குறிப்பிட்டனர். இவற்றைப் பற்றி எல்லாம் என் உரையில் எனது கருத்துகளைக் கூறுவேன். எனினும் இந்த ஒத்தி வைப்புத் தீர்மானத்தில் தெரிவிக்கப்பட்டிருக்கும் கருத்துகளுடன் ஒப்பிடும்போது இவை அவை முடிவெடுக்க வேண்டியிராத அத்தனை முக்கியத்துவமற்ற விஷயங்கள்.

இந்த முகவுரையுடன் என் உரையைத் தொடங்குகிறேன். பெண்களை பூமிக்கு அடியில் வேலை செய்வதைத் தடுக்கும் நடை முறை ஒழுங்கை அரசாங்கம் ஒருபோதும் சரிவர கடைப்பிடிப்ப தில்லை. இந்த நடைமுறை ஒழுங்கைப் பின்பற்ற 1939-ல் ஒப்புக் கொண்ட அரசாங்கம் நான்கு ஆண்டுகளுக்குள்ளாகவே அதிலிருந்து பின்வாங்கி விட்டது என்று மதிப்பிற்குரிய சில உறுப்பினர்கள் குற்றம் சாட்டினார்கள். ஐயா, இந்த விஷயத்தை சரியான கோணத் தில் அவையின் முன்வைக்கும் பொருட்டு சில கருத்துகளை இங்கு எடுத்துக்கூற விரும்புகிறேன். பூமிக்கு அடியில் பெண்கள் வேலை செய்வதைத் தடை செய்யும் கோட்பாட்டை இந்த மரபொழுங்கு நடைமுறைக்கு வருவதற்கு நீண்டகாலத்துக்கு முன்பே இந்திய அர சாங்கம் ஏற்றுக்கொண்டது அவைக்கு நினைவிருக்கும் என்று நம்பு கிறேன். எனக்குத் தெரிந்தவரை இந்த விஷயம் 1923ஆம் ஆண்டில் முதன் முறையாக விவாதிக்கப்பட்டது; அப்போது இந்திய நிலக்கரிச் சுரங்கங்கள் சட்டத்தைத் திருத்துவதற்கு இந்திய அரசாங்கம் ஒரு மசோதாவைக் கொண்டு வந்தது. இந்த மசோதாவின் ஆரம்ப நோக்கம் மிகவும் வரையறைக்குட்பட்டதாக இருந்தது என்பதை அவைக்கு நினைவுப்படுத்த விரும்புகிறேன். நிலக்கரிச் சுரங்கங் களில் பாதுகாப்பு நடவடிக்கைகள் எடுத்துக் கொள்வதே அதன் நோக்கமாக இருந்தது. ஆனால் மசோதா தெரிவுக் குழுவுக்கு அனுப்பப் பட்டபோது, பூமிக்கு அடியில் பெண்கள் வேலை செய்வதைத் தடுப்பதற்கான அதிகாரத்தை இந்த மசோதா மூலம் பெறுவதற்கு இந்திய அரசாங்கம் துணிச்சலான நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று தெரிவுக் குழு கருத்துத் தெரிவித்தது. பொறுக்குக் குழுவில் இந்திய அரசாங்கம் இந்தக் கோட்பாட்டை ஏற்றுக் கொண்டது. இந்திய அரசாங்கம் இந்தக் கோட்பாட்டை ஏற்றுக் கொண்டது மட்டுமன்றி மேலும் ஒரு படி மேலே சென்றது நிலத்துக்கு அடியில் பெண்கள் வேலை செய்வதைத் தடுக்கும் நோக்கத்தோடு அது திட்டவட்டமான சில நடைமுறைகளை வகுத்தது; பூமிக்கு

அடியில் பணியாற்றும் பெண்களின் எண்ணிக்கையை வருடந் தோறும் குறைப்பதற்கு அது ஒரு தெள்ளத்தெளிவான திட்டத்தைத் தயாரித்தது. இதனால் இத்திட்டம் அவையில் அங்கீகரிக்கப்படு வதற்கு இரண்டு ஆண்டுகளுக்கு முன்பே, இந்திய அரசாங்கத்தின் கொள்கையின்படி, பூமிக்கு அடியில் வேலை செய்யும் பெண்கள் எவருமே இருக்கவில்லை. இந்த ஒத்திவைப்புத் தீர்மானத்தைக் கொண்டு வந்துள்ள மதிப்பிற்குரிய உறுப்பினரே இந்த உண்மையை தமது உரையில் குறிப்பிட்டிருக்கிறார். அப்படியிருக்கும்போது, பூமிக்கு அடியில் பெண்கள் பணியாற்றுவதை அனுமதிக்கலாகாது என்ற மரபு ஒழுங்கு நடைமுறைக்கு வருவதற்கு நீண்ட காலத்திற்கு முன்பே அதனைப் பின்பற்றிய இந்திய அரசாங்கம், சுரங்கங்களில் பெண்கள் பணியாற்றுவது கூடாது என்ற திட்டவட்டமான கருத்தின் அடிப்படையில் அதற்கு முற்றுப்புள்ளி வைக்க பல்வேறு உறுதி யான நடவடிக்கைகள் எடுத்துவந்த இந்திய அரசாங்கம் இப்போது இந்தத் தடையை நீக்க முன்வந்திருக்கிறது என்றால் அதற்கான கார ணத்தை இந்த ஒத்திவைப்புத் தீர்மானத்தைக் கொண்டுவந்திருக் கும் மதிப்பிற்குரிய பெண் உறுப்பினர் புரிந்து கொள்ளாததற்காகப் பெரிதும் வருந்துகிறேன்.

இதுவரை இருந்துவந்த இந்தத் தடையை எத்தகைய நியாயமு மின்றி இந்திய அரசாங்கம் அகற்றியிருக்கிறது என்று குற்றம் சாட்டப்படுகிறது. இத்தகைய ஒரு குற்றச்சாட்டு கூறப்படுவது குறித்து நான் மிகுந்த வியப்படைகிறேன். ஐயா, இது விஷயத்தில் இரண்டு அம்சங்களை அவையின் கவனத்துக் கொண்டுவர விரும்புகிறேன்; இந்த இரண்டு அம்சங்களும் நான் குறிப்பிடுகின்ற அவசர நிலையை உறுதி செய்பவையாக இல்லையா என்பதைப் பரிசீலித்துப் பார்க்கு மாறு அவையைக் கேட்டுக்கொள்கிறேன். ஐயா, பூமிக்கு அடியில் பெண்கள் வேலை செய்வதற்கு இருந்துவந்த தடை நீக்கப்பட் டிருப்பது நிலக்கரியுடன் நேரடியாக சம்பந்தப்பட்டதாகும். இது எவ்வகையிலும் மறுக்க முடியாத உண்மை. தொழில் துறைக் கண் ணோட்டத்தில் நிலக்கரி ஒரு கேந்திரமான பொருள் இல்லையா என்று அவையைக் கேட்கிறேன்; போக்குவரத்துத்துறைக் கண் ணோட்டத்தில் நிலக்கரி ஒரு கேந்திரப் பொருள் இல்லையா என்று அவையைக் கேட்கிறேன்; மக்கள் பயனீட்டுக் கண்ணோட்டத்தில் நிலக்கரி ஒரு கேந்திரப் பொருள் இல்லையா என்று அவையைக் கேட்கிறேன். நமது விருப்பப்படி நாம் பயன்படுத்துவதைத் தவிர்க்கக் கூடிய ஒரு பொருளைப் பற்றியல்ல இங்கு நாம் பேசிக்கொண்டிருக் கிறோம். நமது உணவுக்கு முன்னர், இன்னும் சொல்லப்போனால்

வேறு எதற்கும் முன்னர் நாம் பெற்றிருக்கவேண்டிய பொருள் இது என்பதைக் கூறிக்கொள்ள விரும்புகிறோம். இது நமது அவை கவனத்திற் கொள்ள வேண்டிய முதல் அம்சமாகும். இந்த அவை பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ள வேண்டிய இரண்டாவது அம்சம் ஒன்றும் உள்ளது. அது இதுதான்; நிலைமை சீரடையும் வரை இந்திய அரசாங்கம் காத்துக்கொண்டிருப்பது சாத்தியமல்ல. நிலக்கரியை வழக்கமான முறையில் உற்பத்தி செய்ய முடியும் என்பதை மதிப்பிற்குரிய பெரும்பாலான உறுப்பினர்கள் அறிவார்கள் என்பது எனக்கு நன்கு தெரியும். இவ்வாறு 1943-ல் உற்பத்தி செய்ய முடியவில்லை; 1944-ல் உற்பத்தி செய்ய முடியவில்லை; ஒருக்கால் 1945ல் இது சாத்தியமாகலாம். ஆனால் இங்கு அவை கவனத்திற்கொள்ள வேண்டிய கேள்வி என்னவென்றால், இது நாம் காத்திருக்கக்கூடிய நேரமா? வழக்கமான முறையில் நடைபெறட்டும் என்று நாம் கைகட்டிக்கொண்டு உட்கார்ந்து கொண்டிருக்கக்கூடிய விஷயமா இது? மிக அவசரமாக, உடனடியாக நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்பட வேண்டிய பிரச்சினைகளில் இதுவும் ஒன்று என்று துணிந்து கூறுவேன்; நிலைமையை சீர் செய்ய துரிதகதியில் நடவடிக்கை எடுத்துக் கொள்ளாத ஓர் அரசாங்கம் தன்னை அரசாங்கம் என்று அழைத்துக்கொள்வதற்கே தகுதியற்றதாகும். ஆதலால், நாம் ஓர் அவசர நிலையைச் சமாளிக்க வேண்டியிருக்கிறது என்பதையும், நிலத்துக்கு அடியில் பெண்கள் வேலை செய்வதற்கு இருந்த தடையை அரசாங்கம் அகற்றியிருப்பது விவேகமற்ற செயலோ அல்லது பொறுப்பற்ற செயலோ அல்ல என்பதையும் நாம் மறந்துவிடக்கூடாது, மாறாக எதார்த்த நிலைமையையும் சந்தர்ப்ப சூழ்நிலைமைகளையும் கருத்திற்கொண்டு மேற்கொள்ளப்பட்ட ஒரு நியாயமான நடவடிக்கை என்பதை நாம் மனத்திற் கொள்ள வேண்டும். எனவே, ஐயா, அரசாங்கத்தின் செயல்பாட்டை தற்போது ஏற்பட்டுள்ள நெருக்கடியான நிலைமையைக் கருத்திற்கொண்டு மதிப்பிட வேண்டும். இந்த இரு சந்தர்ப்ப சூழ்நிலைமைகளை மட்டுமே கணக்கிலெடுத்துக் கொண்டு அரசாங்கத்தின் நடவடிக்கையை எடைபோட வேண்டும், மதிப்பிட வேண்டும் என்று மதிப்பிற்குரிய உறுப்பினர்களைக் கேட்டுக்கொள்கிறேன்; செய்ய வேண்டிய எதையேனும் அரசாங்கம் செய்யத் தவறிவிட்டதா? செய்ய வேண்டாததை எதையேனும் அரசாங்கம் செய்துவிட்டதா? நான் இங்கு குறிப்பிட்ட இரண்டு அம்சங்களின் பகைப்புலனில் பார்க்கும்போது, அரசாங்கத்தின் நடவடிக்கை முற்றிலும் நியாயமானதே என்று கூறுவதில் எனக்கு எந்தத் தயக்கமும் இல்லை.

இது மீறப்படக்கூடாத ஒரு மரபொழுங்கு என்று மதிப்பிற் குரிய என்னுடைய நண்பர் திரு. ஜோஷி கூறினார். தன்னைத் தானே கலைத்துக் கொள்ளும் விதியைக் கொண்டிராத எழுதாச் சட்டங் களில் இதுவும் ஒன்று என்பதை ஒப்புக்கொள்கிறேன். ஆனால் சில சந்தர்ப்பங்களில் ஒரு சர்வதேச மரபொழுங்கை அல்லது ஒரு சர்வ தேச ஒப்பந்தத்தை மீறுவதற்கு ஒவ்வொரு தேசத்திற்கும் உரிமை உண்டு என்பதை எத்தகைய தயக்கமுமின்றிக் கூறுவேன். இது நன்கு நிலைநாட்டப்பட்ட ஒரு சர்வதேச நியதியாக இருந்து வரு கிறது. ஜெனீவாவில் நிர்வாகக் குழுக் கூட்டத்தில் நடைபெற்ற விவாதத்தில் ஏறத்தாழ இதே கருத்துத்தான் நிலவியது என்பதை மகிழ்ச்சியோடு தெரிவித்துக் கொள்கிறேன். ஐயா, நாங்கள் இந்த முடிவுகளை மேற்கொள்ளாதபடித் தவிர்த்திருக்க முடியுமா? இந்த நடவடிக்கைகளை அரசாங்கம் எடுத்துக்கொள்ள வேண்டியதேற் பட்ட சில சந்தர்ப்ப சூழ்நிலைகளை இங்கு விவரிக்க விரும்பு கிறேன். நிலக்கரிச் சுரங்கத் தொழிலில் ஆள் பற்றாக்குறை ஏற்பட் டிருப்பதற்கு என்ன காரணம் என்று அரசாங்கம் ஆராய்ந்ததில் மூன்று காரணங்கள் தெரிய வந்தன. முதலாவதாக, இந்திய அரசாங்கம் தொடங்கிய அதிக உணவு உற்பத்தி இயக்கத்தை இவ்வகையில் குறிப்பிட வேண்டும். படைக்கல உற்பத்தித் தொழிற்சாலைகளில் அதிகரித்துவரும் வேலைவாய்ப்பையும் இதேபோல் குறிப்பிடுவது அவசியம். அதிக உணவு உற்பத்தி இயக்கத்தின் விளைவாக வேளாண் துறைக்கு அதிக ஆட்கள் தேவைப் படுவதுடனும் அதே போல் படைக்கலத் தொழிலில் வேலைவாய்ப்பு அதிகரித்திருப் பதுடனும் சுரங்கத்தொழிலின் வேலைவாய்ப்பைப் பாரபட்சமின்றி ஒப்புநோக்கும் எவரும் நிலக்கரிச் சுரங்கங்களில் ஆள் பற்றாக்குறை ஏன் ஏற்பட்டிருக்கிறது என்பதை எளிதாகப் புரிந்து கொள்வர். ஐயா, உணவு தானியங்களின் விலைகள் துரிதமாக அதிகரித்து வரும் இன்றைய சூழ்நிலைமையில், அதிக உணவு உற்பத்திக் கொள்கை வேளாண் துறைக்கு மக்களைப் பெருமளவு ஈர்ப்பது முற்றிலும் இயல்பே. நிலக்கரிச் சுரங்கத் தொழிலில் பணி யாற்றுவோர் விவசாயி கள் என்பதால் அதிக உணவு உற்பத்திக் கொள்கை அவர்களைக் கவர்ந்து ஈர்ப்பதில் வியப்பேதும் இல்லை. அதேபோன்று அதிக ஊதியம் கிடைக்கக்கூடிய ஆயுத உற்பத்தித் தொழிற்சாலைகளும் இந்த மக்களை வெகுவாக ஈர்க்கின்றன. தவிரவும், நிலக்கரிச் சுரங்கத் தொழிலில் ஆள் பற்றாக்குறை ஏற்பட் டிருப்பதற்கு மற்றொரு காரணமும் உண்டு. எனக்கு முன் பேசிய மதிப்புமிக்க சில உறுப் பினர்கள் இந்தக் காரணத்தை குறைத்து மதிப்பிட்ட போதிலும், அலட்சியம் செய்தபோதிலும் எதார்த்த நிலையை மூடி மறைத்து

விட முடியாது. நிலக்கரிச் சுரங்கங்களில் வேலை செய்வது ஆரோக் கியத்துக்கு உகந்ததல்ல என்பதையும், அபாயகரமானதும் கூட என்பதையும் அனைவருமே அறிவர். யாருமே இந்த வேலையை விரும்புவதில்லை. வேறு எங்கேயாவது வேலை கிடைத்தால் அடுத்த கணமே அங்கு பறந்தோடிவிடுகிறார்கள். அதிக உணவு உற்பத்தி இயக்கமும் சரி, ஆயுதத் தளவாடத் தொழில்களும் சரி சுரங்கத் தொழிலாளிக்கு அளிக்கும் வேலை குறைந்த அபாய முள்ளதாகவும் மனதுக்கு ஒத்ததாகவும் அமைகிறது. இரண்டாவ தாக, அதிக உணவு உற்பத்தி இயக்கத்திலும் ஆயுதத் தளவாடத் தொழிற்சாலையிலும் நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளி தனக்கு மட்டுமன்றி தன்னுடைய குடும்பத்தைச் சேர்ந்த இதர உறுப்பினர் களுக்கும் சேர்த்துச் சம்பாதிக்கிறான்.

**திரு. தலைவர்** (மாண்புமிகு சர் அப்துல் ரஹீம்) : மாண்புமிகு உறுப்பினருக்கு இன்னும் ஒரு நிமிடம்தான் பாக்கி இருக்கிறது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** மிகவும் வருந்து கிறேன், ஐயா.

**திரு. தலைவர்** (மாண்புமிகு சர் அப்துல் ரஹீம்) : இது விஷயத்தில் நான் வேறு எதுவும் செய்வதற்கில்லை. மாண்புமிகு உறுப்பினர் தமது உரையை முடிக்க வேண்டும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** அவ்வாறே செய் கிறேன். சுரங்க வேலைக்கு ஆள் பற்றாக்குறை என்று சொன்னேன் அல்லவா.

இந்த அவை பரிசீலிக்க வேண்டிய மேலும் இரண்டு விஷ யங்களை இங்கு குறிப்பிட விரும்புகிறேன், முதலாவதாக, இந்தப் பிரச்சினை அத்தனை முக்கியத்துவம் வாய்ந்ததல்ல என்ற நோக் கோடு அவசரப்பட்டுக் கண்மூடித்தனமாக இந்த நடவடிக்கையை அரசாங்கம் எடுத்துக் கொள்ளவில்லை என்பதைத் தெரிவித்துக் கொள் கிறேன். மிகுந்த முன்னெச்சரிக்கையோடுதான் அரசாங்கம் செயல் பட்டுள்ளது என்பதையும் கூறிக்கொள்ள விரும்புகிறேன். இந்தத் தடை நீக்கம் முதலில் மத்திய மாகாணத்தில்தான் நடைமுறைப் படுத்தப்பட்டது; நிலக்கரிப் பிரதேசம் முழுவதிலும் செயல்படுத்தப் படவில்லை. இந்த அறிவிப்பை வங்காளத்துக்கும் பீகாருக்கும் விஸ் தரிப்பது அவசியம் என்பதை நவம்பரில்தான் அரசாங்கம் கருதிற்று.

பிறகு டிசம்பரில்தான் அறிவிப்பு ஒரிசாவுக்கு விஸ்தரிக்கப்பட்டது. ஆண்களுக்கு அளிக்கப்படும் அதே ஊதியம் பெண்களுக்கும் வழங்கப் பட வேண்டும் என்பதில் நாங்கள் கவனமாக இருந்தோம்; இது ஒரு முக்கியமான விஷயமாகும். **பால் பாகுபாடின்றி சம வேலைக்குச் சம ஊதியம் என்னும் கோட்பாடு வேறு எந்தத் தொழிலிலும் இல்லாத வாறு இத்தொழிலில்தான் முதல் முறையாக நிலைநாட்டப்பட்டது எனக் கருதுகிறேன்.**[1] 51/2 அடிக்குக் குறைவான ஊடுவழியுள்ள இடத்தில் பெண்கள் வேலை செய்யக்கூடாது என்பதிலும் நாங்கள் உறுதியாக இருந்தோம். இந்த அறிவிப்புகள் எல்லாம் மிகவும் தற் காலிகமானவை என்பது அவைக்கு நினைவிருக்கலாம்; இந்த விஷ யத்தை இங்கு வலியுறுத்திக்கூற விரும்புகிறேன். யுத்தகாலம் வரை இந்த அறிவிப்புகள் நீடிக்கும் என்று நாங்கள் கூறவில்லை; சில வற்றை முற்றிலும் நெகிழ்வுடையவையாகவே வைத்திருக்கிறோம்; நாங்கள் விரும்பும்போது எப்போது வேண்டுமானாலும் மாற்றக் கூடியவையாகவே இவற்றை வைத்துள்ளோம்; இவ்வாறு செய்ய எங்களால் முடியும். இதனை முற்றிலும் அவசரமான, தற்காலிக மான நடவடிக்கையாகவே நாங்கள் கருதுகிறோம் என்பதை இந்த அவைக்குக் கூறிக்கொள்ள விரும்புகிறேன். இந்த அறிவிப்புக் காலத்தை குறைப்பதற்கும் நாங்கள் முயற்சி மேற்கொண்டு வரு கிறோம். உதாரணமாக, நாங்கள் ஒரு தொழிலாளர் முகாமை ஏற்பாடு செய்து வருகிறோம்; நிலக்கரிச் சுரங்கங்களுக்கு அனுப்புவதற்கு இந்த முகாம் மூலம் ஆண் தொழிலாளர்களைத் திரட்டிக் கொண்டிருக் கிறோம். அறிவிப்புக் காலத்தைக் குறைப்பதற்கு நாங்கள் மற்றொரு நடவடிக்கையும் எடுத்து வருகிறோம்; அதாவது ராணுவ தளவாடத் தொழிற்சாலைகளுக்கு ஆட்களைத் திரட்டிவரும் ஒப்பந்தக்காரர் களின் உதவியை நாடி நிலக்கரிச் சுரங்கங்களில் வேலை செய்வ தற்குத் தொழிலாளர்களை அனுப்பிவைப்பதற்கான தகவல்களை அவர்களுக்கு வழங்குவதற்கு தொழிலாளர் உதவிக் குழுக்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன.

திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரஹீம்) : மாண்புமிகு உறுப்பினருக்கு ஒதுக்கப்பட்ட நேரம் முடிந்துவிட்டது.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : ஐயா, ஒரு நிமிடம் பேச அனுமதிப்பீர்களா....

1. இந்த வாசகங்களுக்கு அழுத்தம் தந்தது நாம் - ஆசிரியர்.

திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரஹீம்) : நான் எதுவும் செய்ய இயலாதவனாக இருக்கிறேன். அவையின் விதிகள் மீற வொண்ணாதவையாக உள்ளன.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : எனவே இது முற்றிலும் ஓர் அவசர நடவடிக்கை என்பதையும், தேவைக்கும் அதிக மாக ஒரு நிமிடம்கூட அதனை நீடிக்கும் உத்தேசம் அரசாங்கத் துக்கு இல்லை என்பதையும் அவை உணரும் என்று நம்புகிறேன்.



27

# [1]நிலக்கரிச் சுரங்கங்கள் பாதுகாப்பு (பராமரிப்பு) திருத்த மசோதா

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): ஐயா, பின்வருமாறு முன்மொழிகிறேன்:

> ''1939 ஆம் வருட நிலக்கரிச் சுரங்கங்கள் பாதுகாப்பு (பராமரிப்பு) சட்டத்தை மேற்கொண்டும் திருத்துவதற்கான இந்த மசோதாவைப் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ள வேண்டுகிறேன்.''

ஐயா, 1939 ஆம் வருட நிலக்கரிச் சுரங்கங்கள் சட்டத்தில் சில திருத்தங்கள் செய்யப்பட வேண்டும் என்று இந்த மசோதா கோருகிறது. இந்த நிலக்கரிச் சுரங்கங்கள் சட்டம் 1939ல் நிறைவேற்றப் பட்டது என்பது மதிப்பிற்குரிய உறுப்பினர்களுக்கு நினைவிருக்கும். அது பராமரிப்புக் குழுமம் என்னும் அமைப்பை உருவாக்கிற்று. நிலக்கரி மற்றும் சுட்ட நிலக்கரி மீது விதிக்கப்படும் வரியைக் கொண்டு உருவாக்கப்படும் நிதியத்தை நிர்வகிப்பதும், சுரங்கங் களில் தீ விபத்துகள் ஏற்படாதபடி தடுக்கும் பொருட்டு நிலக்கரிச் சுரங்கங்களை முறையாகப் பராமரிப்பதற்கு இந்த நிதியத்திலிருந்து பணம் செலவிடுவதுமே குழுமத்தின் பிரதான பணியாகும். இந்த சட்டத்தைச் செயல்படுத்தும்போது, பரிகாரம் காண வேண்டிய சில குறைபாடுகள் அதில் இருப்பது தெரியவந்தது. இத்தகைய மூன்று பிரச்சினைகளைக் கையாள்வதற்கு இந்த மசோதா வகை செய்கிறது; ஏனென்றால் இவைதான் மிக அவசரமான, உடனடிக் கவனம் செலுத்த வேண்டிய பிரச்சினைகள் எனக் கண்டறியப்பட்டுள்ளன. இம்மூன்று பிரச்சினைகளில் முதல் பிரச்சினை 8ஆவது பிரிவை திருத்துவது சம்பந்தப்பட்டதாகும். இந்தப்பிரிவு குழுமத்தின் பணி களை நிர்ணயித்துத் தருவதோடு, இந்த நிதியத்திலிருந்து என்னென்ன காரியங்களுக்குப் பணம் செலவிடப்பட வேண்டும் என்பதையும் வகுத்துத் தருகிறது. நிர்வாகம் செய்வதற்கு ஆகும் செலவுகளைச் சரிகட்டுவதற்கு பணம் செலவிடுவதை பிரிவு 8 அனுமதிக்கிறது.

---

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, 1943 பிப்ரவரி 23, பக்கம் 443-46.

இரண்டாவதாக, பராமரிப்பு நடவடிக்கைக்காக நிலக்கரிச் சுரங்கங்களின் உரிமையாளர்களுக்கோ, அவர்களது பிரதிநிதிகளுக்கோ அல்லது நிர்வாகிகளுக்கோ பராமரிப்பு சாதனங்களையும், பொருள்களையும் இதர உதவிகளையும் குழுமம் வழங்க அது அனுமதிக்கிறது. சட்டத்தின் நோக்கங்களை நிறைவேற்றுவது சம்பந்தப்பட்ட இதர பணிகளை மேற்கொள்வதற்கு குழுமத்தை பிரிவு 3 அனுமதிக்கிறது; நான்காவதாக சுரங்கப் பராமரிப்பு சம்பந்தப்பட்ட ஆய்வுப் பணிக்காக பணம் செலவிடுவதற்கு குழுமத்துக்கு அதிகாரமளிக்கிறது. குழுமம் தானே மேற்கொள்ளும் பராமரிப்புப் பணிகளுக்குப் பணம் செலவிட அதனை அனுமதிக்கும் ஏற்பாடு எதுவும் பிரிவு 8ல் செய்யப்படவில்லை என்பது தெரியவந்துள்ளது. இது ஒரு மாபெரும் தவறாகும். இத்தகைய அதிகாரம் குழுமத்துக்கு அளிக்கப்படுவது அவசியம் என்பது நிபுணர்களின் கருத்து. எனவே, பிரிவு 8-ஐச் சேர்ந்த 1 ஆவது விதியிலுள்ள உபவிதி (iii) வாசகத்தை மாற்ற வேண்டுமென்று மசோதாவின் 2 ஆவது விதி கோருகிறது. இது அது கோரும் முதலாவது திருத்தமாகும்; இந்தத் திருத்தம் பராமரிப்புப் பணியை நேரடியாக தானே மேற்கொள்வதற்கும், தனது கட்டுப்பாட்டிலுள்ள நிதியை இந்த நோக்கத்துக்காக செலவிடுவதற்கும் குழுமத்தை அனுமதிக்கிறது. மசோதாவின் இரண்டாவது திருத்தம் விதி 10 சம்பந்தப்பட்டதாகும். நிலக்கரியைப் பாதுகாப்பதற்கு அவசியமான நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளும்படி நிலக்கரிச் சுரங்கத்தின் உரிமையாளருக்கோ அல்லது அவரது பிரதிநிதிக்கோ பிரதம சுரங்க ஆய்வாளர் ஆணையிடுவதை நிலக்கரிச் சுரங்கப் பாதுகாப்பு (பராமரிப்பு) சட்டத்தின் 9ஆவது பிரிவின் உபபிரிவு (31 அனுமதிக்கிறது. இந்த சட்டத்தின் 10 ஆவது பிரிவு இந்த ஆணையை கட்டாயம் நிறைவேற்றப்பட வேண்டிய ஆணையாக ஆக்குகிறது. ஆனால் இவ்வாறு நிலக்கரிச் சுரங்க நிபுணரோ அல்லது ஆய்வாளரோ பிறப்பிக்கும் ஆணை கட்டாயமாக நிறைவேற்றப்பட வேண்டிய ஆணையாக இருக்கும்; அதேசமயம் இதனை எதிர்த்து சுரங்க உரிமையாளர் மேல்முறையீடு செய்வதற்கு சட்டத்தில் வழிவகை ஏதும் செய்யப்படவில்லை. இது துரதிருஷ்டவசமான ஒரு சட்டவிதி என்றும், மேல்முறையீடு செய்வதற்கு உரிமை இருக்கவேண்டும் என்றும், ஆனால் மூலஉத்தரவை நிறைவேற்றுவதற்கு தடைவாங்க அனுமதிக்கப்படக்கூடாது என்றும் கருதப்பட்டது. எனவே, இப்போதைய சட்டத்தின் 10ஆவது பிரிவில் ஒரு கூடுதல் விதியை சேர்ப்பதன் வாயிலாக இந்தத் தவறை அகற்றுவதற்குத் திட்டமிடப்பட்டிருக்கும் மூன்றாவது திருத்தம் பராமரிப்புப் பணியைத் தானே மேற்கொள்வதற்கு குழுமத்திற்கு அதிகாரம் அளிக்கலாமா, வேண்டாமா என்பது

குறித்ததாகும். நிலக்கரியைப் பராமரிப்பது ஒரு முக்கியமான பணி. தீப்பிடித்து எரிந்து சாம்பலாகிப் போகக்கூடிய ஆபத்திலிருந்து நிலக்கரி யைப் பாதுகாப்பதே இதன் குறிக்கோள். சில நிலக்கரிச் சுரங்கங்கள் கைவிடப்பட்டது தெரியவந்துள்ளது. அவற்றின்மீது எவரும் எத்தகைய கட்டுப்பாடும் செலுத்துவதில்லை. பூமிக்கு அடியிலுள்ள நிலக்கரி தீப்பிடித்துக் கொண்டுவிடும்போது அத்தகைய சுரங்கங்களின் உரிமையாளர்கள் அவற்றைக் கைவிட்டுச் சென்றுவிடுகின்றனர். ஒரு குறிப்பிட்ட சுரங்கம் யாருக்குச் சொந்தம் என்று சர்ச்சைகள் நடைபெறும் சம்பவங்களும், நிலக்கரிப் பராமரிப்புப் பணியை தாங்களே ஏற்று நடத்த முடியாத நிலைமையில் பல சுரங்க உரிமை யாளர்கள் இருக்கும் சம்பவங்களும் ஆங்காங்கு நடைபெறுகின்றன. இத்தகைய சந்தர்ப்பங்களில் நிலக்கரிப் பராமரிப்புப் பொறுப்பை எவரிடமும் ஒப்படைக்க முடியாத நிலைமையும், ஆய்வாளரின் உத்தரவை எவரிடம் கொண்டுபோய் சேர்ப்பது என்று தெரியாத நிலைமையும் ஏற்பட்டு விடுகின்றன. இத்தகைய நிலைமையைத் தவிர்க்கும் பொருட்டு குழுமமே பராமரிப்புப் பணியை மேற்கொள்ளும் வகையில் அதற்கு அதிகாரமளிக்கப்பட வேண்டும் என்று உணரப்பட்டது. அதேசமயம், குழுமம் இத்தகைய பணியை ஏற்று நடத்தவேண்டுமானால், சுரங்க உரிமையாளரின் நிலத்தில் பிரவேசிக்கும் உரிமையும் அதற்கு அளிக்கப்படுவது அவசியம். 10ஏ என்னும் ஒரு புதிய விதியின் மூலம் இதைச் செய்வதற்கு வகை செய்யப்பட்டுள்ளது; பராமரிப்புப் பணியை மேற்கொள்ளும் அதிகாரத்தையும், சுரங்க உரிமையாளரின் நிலத்தில் பிரவேசிக்கும் அதிகாரத்தையும் இது குழுமத்துக்கு வழங்குகிறது.

இந்த மசோதா மிகவும் எளிமையானது; இதுவரை நான் கூறியதற்கும் அதிகமாக விளக்கம் எதுவும் தேவையில்லை என்று நினைக்கிறேன். இது சர்ச்சைக்கு இடமற்ற ஒரு மசோதா; அவை இதனை அங்கீகரிக்கும் என்று நம்புகிறேன்.

ஐயா, இந்த மசோதாவை நான் முன்மொழிகிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:** ஐயா, ''இந்த மசோதா ஏற்கப்பட வேண்டும்'' என்று முன்மொழிகிறேன்.

மதிப்பிற்குரிய என்னுடைய நண்பர்கள் எழுப்பிய சில பிரச்சினைகள் சம்பந்தமாக அரசாங்கத்தின் கண்ணோட்டத்தை விளக்கு

வதற்கு இந்த வாய்ப்பினைப் பயன்படுத்திக் கொள்ள விரும்பு கிறேன். போதிய முன்னறிவிப்பின்றி மசோதாக்களைக் கொண்டு வருவது அரசாங்கத்துக்கு வழக்கமாகி விட்டது என்று மதிப்பிற் குரிய என் நண்பர் திரு.மில்லர் குற்றம் சாட்டினார். இந்தக் குற்றச் சாட்டுக்கு நான் அளிக்கக்கூடிய பதில் இதுதான்: இத்தகைய மசோ தாக்களைக் கொண்டுவரும் விஷயத்தில் இவ்வாறுதான் நடந்து கொள்ள வேண்டும் என்று அரசாங்கத்தை கட்டுப்படுத்தும் விதத் தில் நான் தனிப் பட்டமுறையில் எதுவும் கூறுவது சாத்தியமல்ல. ஆனால் இப்போதைய மசோதாவைப் பொறுத்தவரையில் அர சாங்கம் அவசர கோலமாக நடந்து கொண்டிருப்பதாகக் குற்றம் சாட்ட முடியாது. ஏறத்தாழ ஆறு மாதகாலம் இந்த மசோதா அவை யின் பரிசீலனையில் இருந்துவருகிறது என்பதை மதிப்பிற்குரிய உறுப் பினருக்கு நினைவூட்ட விரும்புகிறேன். இரண்டாவதாக மற்றொரு முக்கிய விஷயத்தையும் இங்கு குறிப்பிட விரும்புகிறேன். பரா மரிப்புக் குழுமம்தான் இந்த மசோதாவைப் பரிந்துரைத்து, அநேக மாக அதற்கு வடிவம் கொடுத்தது என்பதை மதிப்பிற்குரிய நண்பர் மனத்தில் கொள்ளவேண்டும்; மேலும் இந்தப் பராமரிப்புக் குழுமம் நிலக்கரித் தொழிலுடன் சம்பந்தப்பட்ட மிகவும் பிரதிநிதித்துவம் வாய்ந்த அமைப்பு என்பதை அவர் மறந்துவிடமாட்டார் என்று நினைக்கிறேன். எனவே, இந்தக் குறிப்பிட்ட மசோதாவைப் பொறுத்தவரையில் இதனை அவசர அவசமாகக் கொண்டு வந்த தாக எவரும் என்னைக் குற்றம் சாட்டுவார்கள் என்று நான் எண்ண வில்லை.

மதிப்பிற்குரிய என் நண்பர் மற்றொரு பிரச்சினையையும் எழுப்பினார். அவசரமான, நெருக்கடியான நிலைமை ஏற்படும் போதுதான் இத்தகைய நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படும், வேறு சமயங்களில் இவ்வாறு செய்யப்படமாட்டாது என்று உறுதி அளிக்க முடியுமா என்று அவர் வினவினார். அத்தகைய உறுதிமொழியை அளிக்க நான் முற்றிலும் சித்தமாக இருக்கிறேன். உண்மையில், குழுமத்துக்கு நாங்கள் அளிக்கும் அதிகாரம் அவசரநிலைமை களில் மட்டுமே பயன்படுத்தப்படவேண்டும் என்பதே எங்களது எண்ணமாகும்.

மதிப்பிற்குரிய என்னுடைய நண்பர் டாக்டர் ஜியாவுதீன் தற்போது அவையில் இல்லை. அவர் தெரிவித்த கருத்தைப் பொறுத்த வரையில் அது ஏற்புடையதல்ல. நிலக்கரிச் சுரங்கப் பராமரிப்புக் குழுமத்துக்கும் நிலக்கரிச் சுரங்க உரிமையாளர்களுக்கும் இடையே

நான் அறிந்தவரை எத்தகைய வேறுபாடோ, சர்ச்சையோ எழுந்த தில்லை. நாங்கள் இப்போது கொண்டு வந்திருக்கும் இந்த மசோதா நிலக்கரிச் சுரங்க உரிமையாளர்களுக்கும் பராமரிப்புக் குழுமத் துக்கும் இடையே எத்தகைய கருத்து வேற்றுமையையும் உண்டு பண்ணும் என்று நான் நினைக்கவில்லை. எனக்குத் தெரிந்தவரை இதுவரை அவர்கள் ஏறத்தாழ ஒரு மகிழ்ச்சிகரமான குடும்பம் போலவே செயல்பட்டு வந்திருக்கின்றனர். நிலக்கரிச் சுரங்க உரிமை யாளர் சங்கத்தைச் சேர்ந்த எந்த ஒரு குறிப்பிட்ட உறுப்பினரும் எதிர்க்கக்கூடிய எத்தகைய கொள்கையையும் குழுமம் கடைப் பிடித்த சம்பவம் எதையும் நான் அறிந்ததில்லை.

மதிப்பிற்குரிய என் நண்பர் திரு. ஹுசேன்பாய் லால்ஜி ஒரு கருத்தைத் தெரிவித்தார்; அது பரிசீலனைக்குரிய ஒரு கருத்தே யாகும்; பராமரிப்புப்பணியில் அரசாங்கம் எந்தெந்த நிலக்கரிச் சுரங் கங்களுக்குப் பணம் செலவிடப்பட்டதோ அவற்றின்மீது அரசாங் கத்துக்குச் சில உரிமைகள் இருக்கவேண்டும் என்று அவர் யோசனை தெரிவித்தார். இது ஒரு சிறந்த, முக்கியமான யோசனை என்பதில் ஐயமில்லை, இந்த யோசனை குறித்து அரசாங்கத்தின் நிலை என்ன என்பதை பின்னர் ஒரு கட்டத்தில் தெரிவிக்க முடியும் என்று நம்புகிறேன்.

ஐயா, இதற்குமேல் நான் கூறுவதற்கு வேறு எதுவும் இல்லை.



# 28

## [1]தொழிலாளர்கள் சம்பந்தமாக அரசாங்கத்தின் கொள்கை

### *மத்திய சட்டமன்றத்தில் நிகழ்த்தப்பட்ட உரை*

*'தொழிலாளர்கள் சம்பந்தமாக இந்திய அரசாங்கம் பற்றி எத்தகைய கருத்துகள் வெளியிடப்பட்டபோதிலும் ஒன்றைமட்டும் நிச்சயமாகக் கூறமுடியும்: அதாவது தொழிலாளர் விஷயத்தில் அரசாங்கத்தின் நோக்கிலும் போக்கிலும் ஒரு புதிய திருப்பம் ஏற்பட்டிருக்கிறது என்று நியாயமாகவே உரிமை கொண்டாடமுடியும்.'' தொழிலாளர் சம்பந்தப்பட்ட பிரச்சினைகளில் தொழிலாளர் இலாகா கடைப்பிடித்துவரும் கொள்கை குறித்து திரு.என்.எம். ஜோஷி கொண்டுவந்த வெட்டுத்தீர்மானம் பற்றி மத்திய சட்டமன்ற கீழவையில் நடைபெற்ற விவாதத்திற்கு பதிலளித்துப் பேசும்போது (மார்ச் 16) இந்திய அரசாங்கத்தின் தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் மேற்கண்டவாறு குறிப்பிட்டார். டாக்டர் அம்பேத்கர் கூறியதாவது:*

'திரு. ஜோஷி இந்த விஷயம் குறித்து மிக விரிவாகப் பேசியிருக்கிறார்; ஏராளமான பிரச்சினைகளை எழுப்பியிருக்கிறார். இவை ஒவ்வொன்று குறித்தும் தனித்தனியாக ஆராய்வதும், அவர் தெரிவித்த கருத்துகள் குறித்து விவாதிப்பதும், தொழிலாளர் இலாகாவின் பிரதிநிதி என்ற முறையில் இவை எல்லாவற்றுக்கும் விரிவாகவும் விளக்கமாகவும் பதிலளிப்பதும் சாத்தியமல்ல. அவகாசம் மிகவும் குறைவாக இருப்பதால் அவசியமானவை என்று நான்கருதும் விஷயங்களை மட்டும் தேர்ந்தெடுத்து, பொறுக்கியெடுத்து இந்த விவாதத்தின்போது அவற்றுக்குப் பதிலளிக்கலாம் என்றிருக்கிறேன்.

### தொழிலாளர்களின் நிலைமை

உலகின் இதர பகுதிகளில் நிலவும் நிலைமைகளுடன்

---

1. இந்தியத் தகவல் ஏடு, ஏப்ரல் 15, 1944, பக்கங்கள் 401-13. (மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, மார்ச் 16, 1944, பக்கம் 1187-91.)

ஒப்பிடும்போது இந்தியாவில் தொழிலாளர்களின் நிலைமைகள் மிகவும் மனநிறைவு தராததாக இருக்கின்றன என்ற ஒரு பொதுப் படையான கருத்தை திரு.ஜோஷி வெளியிட்டார். இந்த அவை யிலிருந்து கொண்டு இந்தக்கருத்தை மறுதலிப்பது என் வேலை அல்ல. ஆனால் இது உண்மை என்பதில் ஐயமில்லை. இந்நிலைமை யில் நான் கூறக்கூடியதெல்லாம் இதுதான்: திரு.ஜோஷி படம் பிடித்துக்காட்டியிருப்பதுபோல் இங்கு தொழிலாளர்களின் நிலைமை கள் திருப்திகரமாக இல்லை என்றால் அதற்கு இந்திய அரசாங்கம் தான் பொறுப்பு என்று கூறமுடியாது.

இந்தியாவில் தொழிலாளர்களின் நிலைமைகள் இந்த நாட்டின் தொழில் வளர்ச்சியையே பெரிதும் சார்ந்திருக்கின்றன; இது விஷயத்தில் இந்த அரசாங்கத்துக்குக் கட்டுப்பாடு ஏதுமில்லை; எனவே இங்கு தொழிலாளர்களின் நிலைமைகள் உண்மை யாகவே திருப்தியளிக்கக்கூடியவையாக இல்லையென்றால் அதற்கு இந்திய அரசாங்கத்தின் மீது பழிபோடுவதில் அர்த்தமில்லை. இந்திய அரசாங்கத்தின் போக்கை, செயற்பாட்டை ஆராய்ந்து பார்த்தபோது அது அலட்சியப்போக்குடன், சுறுசுறுப்பின்றி நடந்து கொண்டிருப் பதை தாம் கண்டதாக திரு.ஜோஷி கூறினார். அது பயங்கொள்ளித் தனமாக நடந்து கொண்டதாகவும், செய்ய முடிந்ததைக்கூட போதிய அளவில் செய்யவில்லை என்றும் அவர் குற்றம் சாட்டினார். திரு. ஜோஷி இதைச் செய்யும்போது மற்றவர்களிடமிருந்து தம்மை தனித்து வேறுபடுத்திக் காட்டக்கூடிய புதுமையான எதையும் செய்து விடவில்லை.

சர்ச்சையைத் தோற்றுவிக்காத தொழிலாளர் பிரச்சினைகள் இருக்கின்றன. பொருளாதார விளைவுகளை உருவாக்காத தொழி லாளர் பிரச்சினைகள் இருக்கின்றன. திரு. ஜோஷியிடமிருந்து இப்போது நான் தெரிந்து கொள்ள விரும்புவது இதுதான்: சம்பந் தப்பட்டதரப்புகளிடையே எத்தகைய சச்சரவும் இல்லாத எந்தத் தொழிலாளர் பிரச்சினைகளிலோ அல்லது நிதிப்பிரச்சினையை எழுப்பாத எந்தத் தொழிலாளர் பிரச்சினைகளிலோ இந்திய அர சாங்கம் விரைந்து சென்று நடவடிக்கை எடுக்காத சந்தர்ப்பம் ஏதே னும் உண்டா? ஐயா, பரிபூரண ஒத்தக்கருத்தோ அல்லது ஏறத்தாழ ஒத்தக்கருத்தோ நிலவிய சந்தர்ப்பங்களிலும் சரி, நிதிப்பொறுப்பு ஏதும் இல்லாத சந்தர்ப்பங்களிலும் சரி இத்தகைய எல்லாச் சந்தர்ப் பங்களிலுமே இந்திய அரசாங்கம் உடனடி நடவடிக்கை எடுத்து வந்திருக்கிறது என்பதை என்னால் உறுதியாகக் கூற முடியும்.

*நவாப்ஜாடா முகமத் லியகத் அலிகான்:* இத்தகைய சந்தர்ப்பங்களில் நடவடிக்கை எடுக்க வேண்டிய அவசியம் ஏதுமில்லை.

*டாக்டர் அம்பேத்கர்:* அப்படியல்ல, நடவடிக்கை எடுக்க வேண்டியது அவசியம்.

## போர்க்கால நடவடிக்கைகள்

பிறகு ஜோஷி மேலும் கூறும்போது வேலைநேரம் சம்பந்தமாக தொழிற்சாலைகள் சட்டத்திலிருந்து அரசாங்கம் சில விதிவிலக்குகளை அளித்தது; வேலை நிறுத்தம் செய்வதற்கு 15 நாள் முன்னறிவிப்பு செய்ய வேண்டும் எனக்கூறி வேலை நிறுத்தம் செய்வதற்குத் தொழிலாளர்களுக்குள்ள உரிமை தடுக்கப்பட்டது. இவை போன்ற நடவடிக்கைகள் காரணமாக யுத்தத்தின்போது தொழிலாளர் களின் நிலைமை மிகவும் மோசமடைந்தது என்று கூறினார். மேலும் அரசாங்கம் கொண்டுவந்த தேசியதொழிலாளர் சேவை அவசரச் சட்டம், தொழில்நுட்ப ஊழியர்கள் அவசரச் சட்டம் போன்றவை தங்களுக்கு விருப்பமில்லாத சில குறிப்பிட்ட தொழில்களைச் செய்யும்படித் தொழிலாளர்களை நிர்ப்பந்தித்தன என்றும் அவர் குறிப்பிட் டார். யுத்தகாலத்தில் இத்தகைய கட்டுப்பாடுகள் நியாயமானவையே என்பதை ஒப்புக்கொள்ளும் நேர்மை திரு. ஜோஷியிடம் இருப்பது குறித்து மகிழ்ச்சி அடைகிறேன். என்னைப் பொறுத்தவரையில், இந்த யுத்தகால நடவடிக்கைகளின் செயற்பாடுகள் குறித்து ஏதேனும் முறையீடுகள் என் கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டபோதெல்லாம் அந்தக் குறைபாடுகளை நிவர்த்திக்க உடனடி நடவடிக்கைகள் எடுத்து வந்திருக்கிறேன் என்பதைக் கூறிக்கொள்ள விரும்புகிறேன். இதற்கு ஒரே ஓர் உதாரணத்தை மட்டும் இங்கு குறிப்பிடலாம் என்று கருதுகிறேன். ஊழியர் மீது வழக்கு தொடுப்பதற்கு தொழிலதி பருக்கு அவசரச்சட்டம் அளித்துள்ள அதிகாரம் தொழிலாளர்களைப் பெரிதும் தொல்லைப் படுத்துவதற்குத்தான் வகைசெய்யும் என்று திரு. ஜோஷி ஒரு பிரச்சினையை எழுப்பியது எனக்கு நினைவிருக்கிறது. இந்தக் கருத்தை உடனடியாக நான் ஏற்றுக்கொண்டு, தொழிலதிபர்களுக்குள்ள இந்த அதிகாரங்களை அரசு வழக்கறிஞர்களுக்கு மாற்றுவதற்கு அவசரச் சட்டத்தில் ஒரு திருத்தத்தை நாங்கள் கொண்டு வந்தோம்.

ஐயா, இந்த விஷயங்களைப் பற்றி எல்லாம் நான் சாங்கோ

பாங்கோமாகக் கையாள்வது என்பது சாத்தியமல்ல; எனினும் நிலைமை முழுவதையும் இரத்தினச் சுருக்கமாகப் பின்கண்டவாறு என்னால் கூறமுடியும்: இந்திய அரசாங்கத்தின் யுத்தகால சட்டங் களை எல்லாம் பரிசீலித்துப்பார்க்கும்போது, அவை தொழிலாளர் களின் சுதந்திரத்தைக் கட்டுப்படுத்துவதாக இருந்தாலும், அவற்றி லிருந்து இரண்டு புதிய கோட்பாடுகள் உருவாகி இருக்கின்றன என்பதில் ஐயமில்லை. முதல் கோட்பாடு இதுதான்: ஒரு தொழி லாளியை வேலைக்கமர்த்திக் கொள்வதற்கான நிபந்தனைகளை நிர்ணயிக்கும் பொறுப்பை இந்திய அரசாங்கம் முதல் தடவையாக ஏற்றுக்கொண்டது; இவ்வாறு இதற்கு முன்னர் அது ஒருபோதும் செய்ததில்லை. இது இதுவரை நமது சட்டத் தொகுப்பில் இடம் பெற்றிராத முற்றிலும் ஒரு புதிய கோட்பாடாகும். போர்க்கால சட்டங்களில் இடம்பெற்றிருக்கும் இந்தக் கோட்பாடு இந்த நாட்டின் தொழிலாளர் சட்டங்களில் நிரந்தர இடம்பெறும் என நம்புகிறேன்.

இந்த யுத்தகால தொழிலாளர் சட்டங்களில் இடம் பெற்றி ருக்கும் இரண்டாவது முக்கியமான கோட்பாடு கட்டாய மத்தி யஸ்தக் கோட்பாடாகும். தொழிலாளர்கள் சம்பந்தமாக எனக்கு ஓரளவு சொந்த அனுபவம் உண்டு என்று கூற என்னுடைய நண்பர்கள் திரு.ஜோஷியும் திரு.ஜம்னாதாஸ் மேத்தாவும் என்னை அனுமதிப் பார்கள் என்று நம்புகிறேன்; தொழிலாளர்கள் தங்களுடைய முதலாளி களிடமிருந்து சில அனுகூலங்களைப் பெறும் பொருட்டு வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டு, தங்களது ஆற்றலையும் முயற்சிகளையும் வீணடிப்பதை நான் அறிவேன். சற்றும் மிகைப்படுத்தாமல் ஒரு விஷயத்தை இந்தச் சந்தர்ப்பத்தில் கூறவிரும்புகிறேன்; ஏதோ ஒரு பிரச்சினைக்காக மிகக்கடினமான, எத்தனை எத்தனையோ துன்ப துயரங்கள் மிகுந்த, வேதனைமிக்க பலமாதங்கள் நீடிக்கும் ஒரு போராட்டத்தில் ஆவேசத்தோடு குதிக்கும் தொழிலாளர்கள் தங்களது முயற்சி பலனின்றி இறுதியில் முதலாளிகளிடம் சரணடைவதை யும், பழைய நிலைமைகளை இன்னும் சொல்லப்போனால் அவற்றைவிட மோசமான நிலைமைகளை ஏற்று வேலைக்குத் திரும்புவதையும் நான் பார்த்திருக்கிறேன்.

ஆதலால் ஐயா, கட்டாய மத்தியஸ்தத்தைச் செயல்படுத்து வதற்கு அரசாங்கத்துக்கு அதிகாரம் வழங்கும் இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தின் 81 வது விதியில் செய்யப்பட்டுள்ள ஏற்பாடுகள் தொழி லாளர்களுக்கு மிகப்பெரும் நன்மைகளைச் செய்யும் என்பது என் கருத்து.

கட்டாய மத்தியஸ்தம் செய்யும் இந்த அதிகாரத்தைப் பயன் படுத்தியும்கூட தொழிலாளர்களுக்குப் பலன் கிட்டாதுபோன மிகச் சில சந்தர்ப்பங்களை நான் அறிவேன். அதேபோன்று தொழிலாளர் களுக்குச் சாதகமாகன முறையில் முடியாது போன வேலை நிறுத்தங் களையும் நான் அறிவேன். 81 வது விதியை விதிவிலக்கின்றி எல்லாச் சந்தர்ப்பங்களிலும் பயன்படுத்த நாம் தவறிவிட்டோம் என்பதுதான் 81வது விதியில் செய்யப்பட்டிருக்கும் ஏற்பாடு சம்பந்த மாக திரு.ஜோஷி கூறும் குற்றச்சாட்டாகும். தொழிலாளர்கள் ஒரு பிரச்சினையை எழுப்பும்போது எப்போதும் எல்லாச் சந்தர்ப்பங் களிலும் சட்டத்தின் இந்த விதியைப் பிரயோகிக்க அரசாங்கம் முன் வருவதில்லை என்பதுதான் திரு.ஜோஷியின் வாதம் என்று தெரிகிறது.

ஐயா, அவர் எழுப்பியுள்ள பிரச்சினையில் எனக்கு உடன்பாடு உண்டு; ஆனால் அதற்காக அவரது வாதத்தை அப்படியே ஏற்றுக் கொண்டுவிடமுடியாது. ஒரு குறிப்பிட்ட தொழிற்சங்கத்தைச் சேர்ந்த தொழிலாளர்களின் குறைகள் தீர்க்கப்படாத காரணத்தால், வேலை நிறுத்தம் செய்ய முடிவு செய்யப்பட்டிருப்பதாக அந்தத் தொழிற் சங்கம் அறிவித்த மறுகணமே இந்த விதியைப் பயன்படுத்த அர சாங்கம் முன்வரவேண்டும் என்று ஜோஷி கூறுகிறார். இந்த அவரது நிலையை நாங்கள் ஏற்றுக் கொள்வதற்கில்லை.

மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர்: இதர நாடுகளில் இந்த உரிமை மறுக்கப்படாதபோது இந்தியாவில் மட்டும் அதை ஏன் மறுக்க வேணடும்?

டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்: அங்கெல்லாம் கட்டாய மத்தியஸ்தம் ஏதும் இல்லை என்பதை மதிப்பிற்குரிய என் நண்ப ருக்குத் தெரிவித்துக் கொள்கிறேன். ஒரு தொழிற்சங்கம் முதலாளிக்கு முன்னறிவிப்பு செய்யும் அல்லது வேலை நிறுத்தம் செய்யப்போவ தாக அச்சுறுத்தும் மறுகணமே 81 வது விதியைப் பயன்படுத்த முற்பட வேண்டும் என்றும் கோட்பாட்டை நாம் ஏற்க முடியாது. நமக்கு முக்கியபொறுப்புகள் உள்ளன. எனவே, தொழிலாளர்கள் தெரிவிக்கும் குறைகள் உண்மையானவைதானா என்பதை பரிசீ லிக்கும் வாய்ப்பு நமக்கு இருக்க வேண்டும்; இல்லையென்றால் வேலை நிறுத்தம் என்பது ஓர் அன்றாடத்தொழிலாகிவிடும். இந்த அவையிலுள்ள எவருமே இதனை ஆதரிக்க மாட்டார்கள் என்பது நிச்சயம்.

திரு. ஜோஷி எழுப்பியுள்ள மற்றொரு பிரச்சினை தொழிலாளர்களின் பிரச்சினைகளைக் கையாள்வதற்கு தொழிலாளர் இலாகா போதுமானதாக இல்லை என்பதாகும். தொழிலாளர்களின் பிரச்சினைகளைக் கையாள்வதற்கு ஒரு தனியான, பிரத்தியேகமான அமைச்சகம் இருக்க வேண்டும், வயதானவர்களுக்கான ஓய்வூதியத்துக்கு ஓர் அதிகாரி, நோய்க்காப்பீட்டுக்கு ஓர் அதிகாரி, வேறு சில தொழிலாளர் அவசரப் பிரச்சினைகளுக்கு மூன்றாவதொரு அதிகாரி எனத் தனித்தனி அதிகாரிகளை நியமிக்க வேண்டும் என்பது அவரது வாதம். திரு.ஜோஷி கூறியதை மறுத்துரைப்பது எனது பணியல்ல, உண்மையில் அவர் கூறியதில் தனிப்பட்டமுறையில் எனக்கு மிகுந்த உடன்பாடு உண்டு.

## தொழிலாளர் இலாகா விஸ்தரிப்பு

இது விஷயத்தில் நான் சொல்லக்கூடியதெல்லாம் இதுதான்: நாம் எவ்விதம் வாழ்ந்து வருகிறோம், நிர்வாகத்தை நடத்திவருகிறோம் என்ற சந்தர்ப்ப சூழ்நிலைகளை மனத்திற்கொண்டால், தொழிலாளர் இலாகா இப்போது அமைக்கப்பட்டிருக்கும் நிலையில் தன்முன்னே எழக்கூடிய பிரச்சினைகளைச் சமாளிப்பதற்குப் போதுமானதல்ல என்று கூறமுடியாது. ஐயா, தொழிலாளர் இலாகா இனியும் வேறொரு இலாகாவின் பின் இணைப்பாக இல்லை என்பதை முதலாவதாகக் கவனிக்க வேண்டும். ஒரு சமயம் அது வாணிக இலாகாவின் அல்லது தொழில் இலாகாவின் இணைப்பாக இருந்துவந்தது. இப்போது அப்படி இல்லை. அது ஒரு தனியான, சுதந்திரமான இலாகாவாக இருந்து வருகிறது. அது ஒரு பிரத்தியேக இலாகா அல்ல என்பது உண்மையே, ஆனால் மாண்புமிகு உறுப்பினர்களின் பொறுப்பிலுள்ள ஒரு சுதந்திரமான, பிரதானமான இலாகாவாக அது இருந்துவருகிறது குறித்து எவரும் ஐயம் கொள்வதில்லை.

'அடுத்து, அண்மையில இந்த இலாகாவை நாங்கள் கணிசமான அளவுக்கு விரிவுபடுத்தியுள்ளோம். 1942 ஆம் ஆண்டுக்கு முன்னர், தொழிலாளர் இலாகாவில் தொழிலாளர் சம்பந்தப்பட்ட விஷயங்களைக் கவனிப்பதற்கு ஒரே ஒரு உதவிச் செயலாளர்தான் இருந்தார். இப்போது இந்த இலாகாவில் ஒரு துணை செயலாளரும் இரண்டு உதவிசெயலாளர்களும் இருக்கின்றனர். இதல்லாமல் ஒரு தொழிலாளர்துறை ஆலோசகரும், ஒரு தொழிலாளர் நல்வாழ்வுத்

துறை ஆலோசகரும், - திரு.நிம்கர் - எட்டு தொழிலாளர் நல்வாழ்வுத் துறை உதவி ஆலோசகர்களும் பணியாற்றுகின்றனர். தொழிலாளர் கள் சம்பந்தப் பட்ட சகல புள்ளி விவரங்களையும் சேகரித்து வழங்குவதற்காக ஒரு புள்ளி விவரத் தொகுப்பாளரையும் எங்கள் இலாகாவில் நியமித்திருக்கிறோம். மேலும் ஏராளமான ஊழியர் களையும் நாங்கள் பணிக்கு அமர்த்தியிருக்கிறோம்; அதிலும் குறிப் பாக தொழில்நுட்பப் பயிற்சி அளிப்பதற்குப் பெரும் எண்ணிக்கை யிலான ஊழியர்கள் இருக்கிறார்கள். இவை எல்லாம் தொழிலாளர் களுக்குப் பெரிதும் பயனளிக்கக் கூடியவை என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

*மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர்:* ஆய்வுக்குழுவுக்கு ஒரு நல்ல செய்திதான்.

*டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:* இனி, தனி அதிகாரிகளை நியமிக்கும் விஷயத்தைப் பொறுத்தவரையில், எங்கள் இலாகா வுக்கு இது புதிதான விஷயம் ஒன்றுமல்ல. உண்மையில், நோய்க் காப்பீடு குறித்து அறிக்கை தயாரித்து அளிப்பதற்காக ஒரு தனி அதிகாரியை நியமித்து இந்த நடைமுறையைத் தொடங்கினோம். அந்த அதிகாரியின் பெயர் பேராசிரியர் அதார்கர், இதேபோன்ற விஷயங்களைக் கையாள்வதற்கு இத்தகைய தனி அதிகாரிகளை நியமிப்பதும், அவர்கள் மூலம் அறிக்கைகளைத் தயாரித்து அவற் றில் தெரிவிக்கப்படும் வழிமுறைகளைச் சட்டமாக்குவதும் எங்க ளுடைய விருப்பமாகவும் திட்டவட்டமாகவும் இருந்தது.

ஆனால் நடந்தது இதுதான். சென்ற ஆகஸ்டில் முத்தரப்பு மாநாடு கூடியபோது அவர்களின் பரிசீலனைக்காக அறிக்கையைச் சமர்ப்பித்தோம். சமூக நடவடிக்கைகளைப் பரிசீலிப்பதற்காகவும், சமூகப் பாதுகாப்பு கோட்பாட்டை இந்தியாவின் உழைக்கும் வர்க் கங்கள் விஷயத்தில் செயல்படுத்துவதற்கான வழிமுறைகளைப் பரிந் துரைப்பதற்காகவும் இந்திய அரசாங்கமும் ஒரு குழுவை அமைக்க வேண்டுமெனக் கோரும் ஒரு தீர்மானத்தை குழுவும் முத்தரப்பு மாநாடும் ஒருமனதாக ஏற்றன.

இந்தத் தீர்மானத்தை நாங்கள் உடனடியாக செயல்படுத்தி னோம்; ஒரு குழு இப்போது இந்த விஷயம் குறித்து ஆராய்ந்து

வருகிறது. தனித்தனிப் பிரச்சினைகளுக்கு இதர அதிகாரிகளை எங்கள் இலாகா நியமித்துக் கொண்டேபோவது மிகவும் தவறாக இருந்திருக்கும். குழுவின் அறிக்கை எங்களிடம் சமர்ப்பிக்கப்படும் வரை நாங்கள் காத்திருக்கவேண்டியிருந்தது. விசேடப்பிரச்சினை களை ஆராய்வதற்குத் தனி அதிகாரிகளை நியமிக்கும் திட்டம் கைவிடப்படவில்லை என்பதை மதிப்பிற்குரிய என்னுடைய நண்பர் களுக்கு உறுதிகூறுகிறேன்; குழுவின் அறிக்கை அரசாங்கத்துக்குக் கிடைத்ததும் அத்திட்டம் மேற்கொண்டு செயல்படுத்தப்படும். இதுவரை நான் கூறிவந்த விவரங்களிலிருந்து தொழிலாளர் பிரச் சினைகளைக் கையாளும் தற்போதைய அரசாங்க அமைப்பு போது மானதல்ல எனக் கூற முடியாது என்பதை திரு.ஜோஷி ஏற்றுக் கொள்வார் என்று நம்புகிறேன்.

## முத்தரப்பு தொழிலாளர் மாநாடு

முத்தரப்பு தொழிலாளர் மாநாடு குறித்து திரு.ஜம்னாதாஸ் மேத்தா சில கருத்துக்களைத் தெரிவித்துள்ளார். முத்தரப்பு தொழி லாளர் மாநாட்டை சர்வதேச தொழிலாளர் அலுவலக நிலைக்கு உயர்த்த வேண்டும் என்று அவர் கூறினார். அதற்கு ஒரு தனித் தலைமைச் செயலகம் இருக்க வேண்டும் என்று திரு. ஜோஷி கூறி னார். தொழிலாளர் இலாகாவுக்குப் பொறுப்பு வகிக்கும் உறுப் பினர் மாநாட்டு நடவடிக்கைகளுக்குப் பொதுவாகத் தலைமை வகிக்கிறார். அந்த அதிகாரத்தை அவர் கைவிடவேண்டும் என்றும் திரு.ஜோஷி யோசனை கூறினார். குழுவின் அறிக்கைகள் சட்ட மன்ற ஒப்புதலுக்காக அதன்முன் வைக்கப்படவேண்டும் என்றும் திரு. மேத்தா கூறினார்.

மதிப்பிற்குரிய என்னுடைய நண்பர்கள் திரு.மேத்தாவும் திரு. ஜோஷியும் கூறியவற்றுடன் எனக்கு நிறைய உடன்பாடு உண்டு. ஆனால் அவர்களுக்கு இதைக்கூற விரும்புகிறேன்: குழுவின் நிகழ்ச்சிமுறைகள் அநேகமாக மாநாடு முடிவு செய்ய வேண்டிய விஷயம் என்பதை இவர்கள் இருவருமே அறிவார்கள். மாநாட்டுக்கு ஒரு தனித் தலைமைச் செயலகம் இருக்க வேண்டுமா என்னும் விஷயம் மாநாடு தொடங்கப்பட்ட சமயத்திலேயே விவாதிக்கப் பட்டது. இத்தகைய ஒரு தனித் தலைமைச் செயலகம் இருப்பது அவசியம்தான் என்று அச்சமயம் மாநாடு ஒருமனதாகத் தீர்

மானித்தது. ஆனால் அடுத்த மாநாட்டில் இந்த முடிவு மாற்றப் பட்டு எங்களுக்கு வேறுபட்டதொரு ஆணை பிறப்பிக்கப்பட்டது. இந்த விஷயம் மீண்டும் பரிசீலிக்கப்படும் என்று நம்புகிறேன்.

ஐயா, முத்தரப்பு தொழிலாளர் மாநாட்டை அத்தனை முக்கியத் துவமற்ற ஓர் அமைப்பாக திரு.ஜோஷியும் திரு.மேத்தா வும் கருதுவதாகத் தோன்றுகிறது. அவர்களுடைய கருத்திலிருந்து நான் மாறுபடுகிறேன். ஏனென்றால் மாநாடு மிக முக்கியமான பணியை ஆற்றி வருகிறது. எனவே, அதன் முக்கியத்துவத்தை குறைத்து மதிப்பிடுவது உண்மையிலேயே முற்றிலும் சாத்தியமற்றது.

மற்றொரு முக்கிய விஷயத்தையும் இங்கு கூற விரும்பு கிறேன்; அவையின் உறுப்பினர்கள் முக்கியமாக இதனைக் கருத் தில் கொள்ள வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். முத்தரப்பு தொழிலாளர் மாநாட்டில் அல்லது தொழிலாளர் நிலைக் குழுவில் முன்வைக்கப்படும் நிகழ்ச்சி நிரலை ஆழ்ந்து ஆராயும் எவரும் இவற்றின் பரிசீலனைக்கும் விவாதத்திற்கும் முன்வைக்கப்படும் விஷயங்கள் மிகவும் தரமானவை என்பதை நிச்சயம் ஒப்புக் கொள்ளவே செய்வார்கள். தொழிலாளர் உலகத்திற்கு அவை மகத்தான முக்கியத்துவம் வாய்ந்தவையாக இருந்து வந்திருப்பதை என்னால் நினைவுகூர்ந்து நிச்சயமாகக் கூற முடியும்.

இங்கு ஒன்றைக் கேட்க விரும்புகிறேன். இந்த விஷயங் களைப் பற்றி எல்லாம் பரிசீலிப்பதற்கோ அல்லது பேசுவதற்கோ முத்தரப்பு மாநாட்டுக்கு வெளியே உள்ள தொழிலாளர்களின் பிரதி நிதிகள் எந்த ஒரு முதலாளியையும் அணுகுவது சாத்தியமாகி இருக்குமா? இந்தியத் தொழிலாளர்கள் நெல்லிக்காய் மூட்டை அவிழ்த்து விடப்பட்டதுபோல் சிதறுண்டுக் கிடக்கும் இன்றைய நிலைமையில், ஊழியர்களின் பிரதிநிதிகள் தங்கள்முன் கொண்டு வரும் பிரச்சினைகளின்பால் முதலாளிகள் அற்பமான செப்புக்காசு மதிப்புள்ள கவனத்தைக் கூடச் செலுத்த மாட்டார்கள் என்பதை என்னால் நிச்சயமாகக் கூறமுடியும்.

முத்தரப்புத் தொழிலாளர் மாநாட்டை உருவாக்கியதில் எனக்கும் பெரும்பங்குண்டு என்பதைப் பெருமிதத்தோடு கூறிக் கொள்கிறேன். நாங்கள் அதிகம் எதுவும் செய்யாவிட்டாலும்

குறைந்தபட்சம் ஒரு நல்ல காரியத்தைச் செய்திருக்கிறோம்; அதாவது முதலாளிகளின் பிரதிநிதிகளைச் சந்தித்து மிகுந்த முக்கியத் துவம் வாய்ந்த பிரச்சினைகளைப் பற்றி விவாதிக்கும்படி நிர்ப் பந்தம் ஏதும் செய்யாமல் தொழிலாளர்களின் பிரதிநிதிகளைத் தூண்டி ஊக்குவித்து இணங்கச் செய்திருக்கிறோம்.

இந்த நாட்டின் உழைக்கும் வர்க்கங்களுக்கு முத்தரப்பு மாநாடு மகத்தான சேவை செய்து வருகிறது என்றே கருதுகிறேன்.

### நிலக்கரிச் சுரங்கங்களில் பெண்கள்

மதிப்பிற்குரிய என் நண்பர் திருமதி. சுப்பராயன் தமது உரை யில் நிலக்கரிச் சுரங்கங்களில் பெண்களை வேலைக்கமர்த்தும் விஷயம் பற்றிப் பெரிதும் குறிப்பிட்டார். இந்த விஷயத்தில் அவ ருக்குள்ள தீவிர உணர்வுகளை நான் வெகுவாக மதிக்கிறேன்; அவற்றின்மீது எனக்கு எத்தகைய ஐயப்பாடும் இல்லை. ஆனால் இதுகுறித்து ஒத்திவைப்புத் தீர்மானம் கொண்டு வரப்பட்டபோது ஏற்கனவே விரிவாக விவாதிக்கப்பட்டுவிட்ட நிலைமையில் மீண்டும் இதுபற்றி என்னால் மேற்கொண்டு எதுவும் கூறஇயலாது. இத்தகைய ஒருமுடிவை நாங்கள் மேற்கொள்ள நேர்ந்ததற்கு உண்மையி லேயே வருந்துகிறேன். நிலக்கரி உற்பத்தியைப் பெருக்கும் பொருட்டு சுரங்கங்களில் வேலைக்கமர்த்திக் கொள்ளப்படும் தொழிலாளர் களின் எண்ணிக்கையை அதிகரிப்பதற்கு முடிந்த எல்லா நடவடிக்கை களையும் மேற்கொண்டு வருகிறேன். இதனால் நிலக்கரிச் சுரங்கங் களில் பெண்களை வேலைக்கமர்த்துவதற்கு இருந்த தடைகூடிய விரைவில் மீண்டும் கொண்டு வரப்படும் என்று உறுதியளிக்கிறேன்.

திருமதி. கே. ராதாபாய் சுப்பராயன்: மாண்புமிகு உறுப் பினரிடம் நான் ஒரு கேள்வி கேட்கலாமா? நிலக்கரிச் சுரங்கங் களில் பூமிக்கு அடியில் பெண்களை வேலைக்கு அமர்த்துவது குறித்த அறிவிப்பை வெளியிடுவதற்கு முன்னர் முத்தரப்பு மாநாட்டை அரசாங்கம் கலந்தாலோசித்ததா?

டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்: அவ்வாறு செய்வதற்கு எங்களுக்கு நேரம் இல்லை. மிக அவசரநிலைமை ஏற்பட்டதால் மிக அவசர நடவடிக்கை மூலமே அதனை நாங்கள் சமாளிக்க வேண்டி யிருந்தது.

தொழிலாளர்களின் குறைகளை நிவர்த்திப்பதற்குப் பதிலாக தொழிலாளர் தலைவர்களை இந்திய அரசாங்கம் சிறைக்குள் தள்ளிவருகிறது என்று திருமதி சுப்பராயன் கூறினார். இதுபற்றி எனது நிலையைத் தெளிவுப்படுத்த விரும்புகிறேன். இது எனது இலாகாவால் அதிலும் குறிப்பாக என்னால் கையாளப்படும் விஷயமல்ல. நேற்று இதுகுறித்து நிறைய விவாதித்தோம். எந்த ஒரு தொழிற்சங்கத் தலைவரும் அரசாங்கத்தால் கைதுசெய்யப்பட்ட சம்பவம் எதுவும் நேற்றும் சரி, இன்றும் சரி என் கவனத்திற்குக் கொண்டுவரப்படவில்லை.

**சேத். யூசுப் அப்துல்லா ஹரூன்:** கராச்சித் துறைமுகப் பொறுப்புக் கழகத்தில் நடைபெற்ற ஒரு சம்பவத்தைச் சற்று முன்னர் குறிப்பிட்டேன்.

**திரு.ஹுசேன்பாய் ஏ.லால்ஜி:** துறைமுகப் பொறுப்புக் கழகம் உங்கள் கட்டுப்பாட்டில் இருக்கிறதா?

**டாக்டர் அம்பேத்கார் :** இல்லை.

**திரு. லால்ஜி:** ரயில்வேத் தொழிலாளர்கள்?

**டாக்டர் அம்பேத்கர்:** இல்லை.

**லால்ஜி:** கப்பல் மாலுமிகள்?

**டாக்டர் அம்பேத்கர் :** இல்லை.

**திரு. லால்ஜி:** வேறு எந்தத் தொழிலாளர்கள் உங்கள் பொறுப்பில் இருக்கிறார்கள்?

**டாக்டர் அம்பேத்கர்:** எத்தனையோ வகையான தொழிலாளர்கள் என் பொறுப்பில் இருக்கிறார்கள். தொழிலாளர் தலைவர்களைக் கைது செய்யும் பிரச்சினையையும் நான் கையாண்டு வருகிறேன்.

**திருமதி ராதாபாய் சுப்பராயன்:** திரு.டாங்கே கைது செய்யப்பட்டிருக்கிறார் அல்லவா?

**டாக்டர் அம்பேத்கர்:** அந்த விஷயத்துக்குத்தான் இப்போது வருகிறேன். தொழிலாளர்களின் தலைவர்களைப் பற்றி எனக்கு நன்கு தெரியும். அவர்கள் ஒன்றுக்கு மேற்பட்ட பாத்திரத்தை வகித்து வருவதுதான் பிரச்சினைக்கே காரணம்.

> அவர்கள் சில சமயங்களில் தொழிலாளர் தலைவர்களாக இருக்கின்றனர். சில சமயங்களில் கம்யூனிஸ்டுகளாக இருக்கின்றனர். சில சமயங்களில் தேசியத் தலைவர்களாக இருக்கின்றனர், சில சம யங்களில் காங்கிரஸ் உறுப்பினர்களாக இருக்கின்றனர். சில சமயங்களில் இந்து மகாசபை உறுப்பினர்களாகவோ அல்லது வேறு ஏதேனும் அமைப்புகளின் உறுப்பினர்களாகவோ இருக்கின்றனர்.

**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர்:** அப்படியானால் அவர்களை எல்லாம் ஒதுக்கிவைக்க வேண்டியதுதான்:

**டாக்டர் அம்பேத்கர்:** இவ்வாறு பலதரப்பட்ட பாத்திரங்களை வகிக்கும் ஒரு தொழிலாளர் தலைவர் கைது செய்யப்படும் போது அவர் தொழிலாளர் தலைவர் என்ற முறையில் கைது செய்யப் படுகிறாரே தவிர, கம்யூனிஸ்டாக, காங்கிரஸ் உறுப்பினராக செயல்பட்டார் என்பதற்காகக் கைது செய்யப்படவில்லை என்று கூறுவது மிகவும் கடினமாக இருக்கிறது. வேறுபட்ட இயல்புகளையும் சூழல்களையும் திட்டங்களையும் கொண்ட அரசியல் கட்சிகளின் கைப்பாவைகளாக இல்லாமல் தொழிலாளர் தலைவர் தொழிலாளர்களின் லட்சியத்துக்கு முற்றிலும் தங்களை அர்ப்பணித்துக் கொண்டு செயல்படுவார்களேயானால், அவர்கள் 26வது விதியின் இறுக்கமான பிடிகளிலிருந்து தப்புவதோடு, தொழிலாளர் வர்க்கத்துக்கும் மகத்தான சேவை செய்தவர்களாகிறார்கள் என்ற எனது கருத்தைப் பணிவோடு தெரிவித்துக் கொள்கிறேன். தொழிலாளர்களின் புனித சேவைக்குத் தங்களை அறவே ஈடுபடுத்திக் கொண்ட தலைவர்களைத் துரதிருஷ்டவசமாக இந்த நாடு பெற்றிருக்கவில்லை.

*மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர்:* ஏன் நம்முடைய ஜோஷி இருக்கிறாரே.

*டாக்டர் அம்பேத்கர்:* இந்த விவாதத்தின்போது எழுப்பப் பட்டு நான் பதிலளிக்காத அல்லது பதிலளிக்க வேண்டிய வேறு ஏதேனும் விஷயம் இருக்கிறதா என்று தெரியவில்லை.

தொழிலாளர்கள் விஷயத்தில் இந்திய அரசாங்கத்தின் அணுகுமுறை பற்றி என்ன கூறப்பட்ட போதிலும் தொழிலாளர் களின்பாலான அரசாங்கத்தின் போக்கில் ஒரு புதிய மாற்றம் ஏற்பட் டிருக்கிறது என்பதை நேரியமுறையில் திட்டவட்டமாக என்னால் கூறமுடியும்.

*திரு. அமரேந்திரநாத் சட்டோபாத்யாயா:* இந்தப் புதிய போக்குக்கு அடிப்படையாக அமைந்துள்ள கொள்கை யாது?

*டாக்டர் அம்பேத்கர்:* கடந்த அரைமணிநேரமாக இதைத் தான் சொல்லி வருகிறேன்.

*மௌல்வி முகமது அப்துல் கனி:* மாண்புமிகு உறுப்பினரிட மிருந்து ஒரு தகவலை நான் தெரிந்து கொள்ளலாமா? பயிற்சிக் கேந்திரத்தில் பயிற்சியை முடித்துவிட்ட தொழில்நுட்ப ஊழியர் களுக்கு இன்னும் சான்றிதழ்கள் வழங்கப்படாதது ஏன்?

*டாக்டர் அம்பேத்கர்:* அதுபற்றி நான் கவனிக்கிறேன்.

*திரு. என்.எம்.ஜோஷி:* இந்த அவையில் நடைபெற்ற ஆழமான, விரிவான, பயனுள்ள விவாதத்தின் நற்பயனாக தொழி லாளர் இலாகா மிகச் சிறந்த முறையில் செயலாற்றும் என்ற நம்பிக்கை யோடு என் வெட்டுத் தீர்மானத்தைத் திரும்பப் பெற்றுக் கொள்கிறேன்.

அவையின் அனுமதியோடு வெட்டுத் தீர்மானம் விலக்கிக் கொள்ளப்பட்டது.

★ ★ ★

### [1]பிலடெல்பியாவில் நடைபெற்ற சர்வதேச தொழிலாளர் மாநாடு

1944 ஏப்ரல் 20ம்தேதி அமெரிக்காவிலுள்ள பிலடெல்பியா வில் நடைபெறவிருக்கும் சர்வதேச தொழிலாளர் மாநாட்டில் பங்குகொள்ள பின்கண்ட பிரதிநிதிகளை இந்திய அரசாங்கம் நிய மித்திருப்பதாக மார்ச் 24 ஆம் தேதி வெளியிடப்பட்ட பத்திரிக்கைக் குறிப்பு கூறுகிறது:

*அரசாங்கத்தின் பிரதிநிதிகள்:* சர். சாமுவல் ரங்கநாதன், இந்தியாவின் ஹைக்கமிஷனர், தலைவர், திரு. எச்.சி. பிரியோர், செயலாளர் தொழிலாளர் இலாகா, பிரதிநிதி; ஹைக்கமிஷனர் அலு வலக உறுப்பினர் ஒருவர் அரசாங்கப் பிரதிநிதிகளுக்கு ஆலோ சகராகவும் இந்தியப் பிரதிநிதிக் குழுவின் செயலாளராகவும் இருப்பார்.

*தொழிலதிபர்களின் பிரதிநிதிகள்:* திரு.ஜே.சி. மஹிந்திரா, பிரதிநிதி; திரு.டி.ஜி. முல்கர்கர், ஆலோசகர்.

*தொழிலாளர் பிரதிநிதிகள்:* திரு. ஜம்னாதாஸ் மேத்தா பிரதிநிதி: திரு. அப்தாப் அலி, ஆலோசகர்; திரு. ஆர்.ஆர்.போலே, ஆலோசகர்.

இந்த சர்வதேச நிறுவனத்தின் ஓர் உறுப்பு நாடு என்றமுறை யில் இந்தியா தொழில் துறை அமைப்புகளின் ஒப்புதலுடன் தேர்ந் தெடுக்கப்பட்ட அரசு சார்பற்ற பிரதிநிதிகளையும் ஆலோசகர் களையும் நியமிக்கப் பொறுப்பேற்றது. ஆனால் இத்தகைய அமைப்பு கள் தத்தமது நாடுகளில் தொழிலதிபர்களின் அல்லது உழைக்கும் மக்களின் மிகவும் பிரதிநிதித்துவம் வாய்ந்தவையாக இருக்க வேண் டும். இத்தகைய முறையில் இணக்கமான பரிந்துரைகள் பெறப்பட்ட தால் தொழிலதிபர்களின் பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

தொழிலதிபர்களின் விஷயம் இவ்வாறிருக்க, ஊழியர்களைப் பொறுத்தவரையில் இரண்டுபிரதான அமைப்புகள் இருக்கின்றன, அவை ஒன்றுபட்ட முன்மொழிதல்களைச் சமர்ப்பிக்கத் தவறி

1. இந்தியத் தகவல் ஏடு, ஏப்ரல் 15, 1944, பக்கம் 416.

விட்டன. இவ்விரண்டில் எது அதிகப் பிரதிநிதித்துவம் வாய்ந்த அமைப்பு என்பதைக் கண்டறியும் ஸ்தாபனம் எதுவும் அரசாங்கத்திடம் இல்லாததாலும், இந்த அமைப்புகள் தமக்குள் ஓர் உடன்பாட்டிற்குவரத் தவறியதன் காரணமாக மாநாட்டில் தங்கள் கருத்துகளைத் தெரிவிக்கும் வாய்ப்பை தொழிலாளர்கள் இழந்துவிடக் கூடாது என்று அரசாங்கம் விரும்புவதாலும் இவ்விரு அமைப்புகளின் ஒப்புதலுடன் பிரதிநிதிகளை மாறிமாறி நியமிக்கும் கோட்பாட்டை இப்போதைக்குக் கடைப்பிடிப்பதென அரசாங்கம் முடிவு செய்துள்ளது.

இந்த முடிவின்படி, இந்தியத் தொழிலாளர் சம்மேளனம் பரிந்துரைத்தவர்களைத் தொழிலாளர்களின் பிரதிநிதிகளாகவும் ஓர் ஆலோசகரையும் அரசாங்கம் நியமித்துள்ளது; அதேசமயம் அகில- இந்திய நகரசபை ஊழியர்கள் சம்மேளனம் பரிந்துரைத்த திரு.ஆர்.ஆர்.போலேவையும் ஆலோசகராக சேர்த்துள்ளது; இவர் தொழிலாளர்கள் பிரதிநிதியின் இணை ஆலோசகராக ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறார்.



# 29

## [1]பல்வேறு வகைப்பட்ட துறைகள்

*திரு. தலைவர் (மாண்புமிகு சர்.அப்துல் ரஹீம்): பல்வேறு வகைப்பட்ட இலாகாக்கள் சம்பந்தமாக விடுப்பட்டுப் போன கோரிக்கை எண் 64ஐ இப்போது அவை பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளும்.*

*மாண்புமிகு டாக்டர்.பி.ஆர். அம்பேத்கர்: ஐயா, இங்கு இடம்பெற்றிருக்கும் தொகை ரூ.15,26,000 நிரந்தர நிதிக்குழு அறிக்கையில் ஏன் குறிப்பிடப்படவில்லை என்று என்னுடைய நண்பர் மதிப்பிற்குரிய திரு. அவினாசிலிங்கம் செட்டியார் தெரிந்து கொள்ள விரும்புகிறார் என்று கருதுகிறேன். அவர் பிரஸ்தாபித்த அந்த அறிக்கையை நான் பரிசீலித்துப் பார்த்தேன். அவர் கூறுவது சரி என்றே எனக்குத் தோன்றுகிறது. இங்கு பதிவு செய்யப்பட்டிருக்கும் தொகை எந்த எந்த இனங்களைக் குறிக்கிறது என்று தகவல் தரும்படி இலாகாவைக் கேட்டிருக்கிறேன். இதற்கிடையே இந்தத் துறைமானியம் எந்த விஷயம் சம்டந்தப்பட்டது என்று சில பொது வான தகவல்களை மதிப்பிற்குரிய உறுப்பினராக விரும்பினால் அத்தகைய தகவல்களைத் தருவதற்கு நான் முற்றிலும் தயாராக இருக்கிறேன்.*

*திரு.டி.எஸ்.அவினாசிலிங்கம் செட்டியார்: இந்தத் தகவல் கள் எல்லாம் பொதுநிலை அறிக்கையிலேயே தரப்பட்டிருக்கின்றன.*

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: வேலைவாய்ப்பு நிலை யங்கள் அமைக்கும் திட்டம் நிரந்தர நிதிக்குழு அறிக்கையில் முழு அளவுக்கு விவரிக்கப்பட்டிருக்கிறது.*

*திரு. டி.எஸ். அவினாசிலிங்கம் செட்டியார்: இந்தத் தொகைக்கு சரியான விளக்கம் வேண்டும் என்று நாங்கள் விரும்பு கிறோம்.*

---

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, மார்ச் 29, 1944, பக்கம் 1720.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இவற்றில் பெரிய இனம் சம்பந்தப்பட்ட விவரங்களை இங்கு சுருக்கமாகத் தருகிறேன். அரசாங்கத்தின் சில இலாகாக்களுடனும் ராணுவ இலாகாக்களுடனும் ஒப்பந்தம் செய்து கொண்டிருக்கும் பல்வேறு ஒப்பந்தக்காரர்கள் இடையே தேர்ச்சி பெறாத தொழிலாளர்களைத் தங்கள் பக்கம் ஈர்க்கும் விஷயத்தில் மிகக் கடுமையான போட்டி ஏற்பட்டிருப்பதை மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் அறிவார்கள். இந்தப் போட்டியின் விளைவாக முக்கியமான பணித்துறைகளிலிருந்து இன்றியமையாத தொழிலாளர்கள் ஆசை காட்டி வேறு பணிகளுக்கு ஈர்த்துச் செல்லப்படுகின்றனர். அது மட்டுமல்ல, தொழிலாளர்களின் ஊதியங்கள் நியாயமான வரம்புகளுக்கு மேலே உயர்த்தப்படுகின்றன. இந்தப் போட்டியின் இத்தகைய நியாயமற்ற, ஆரோக்கியமற்ற விளைவுகளுக்கு முடிவு கட்டும் பொருட்டு இந்தப் பிரச்சினையைக் கையாள்வதற்கென சில குழுக்களை அமைப்பது என அரசாங்கம் கருதிற்று. வெவ்வேறான இரண்டு திட்டங்களைச் செயல்படுத்துவதில் அரசாங்கம் முனைந்து ஈடுபட்டுள்ளது. இவற்றில் ஒரு திட்டம் தொழிலாளர் சப்ளைக்குழுத் திட்டம் எனப்படுகிறது. ராணுவ நடவடிக்கைகள் நடைபெற்றுவரும் பிரதேசங்களை ஒட்டிய வங்காளம், அசாம் போன்ற சில மாகாணங்களில் இத்திட்டம் செயல்பட்டுவருகிறது. அரசாங்கத்தின் இரண்டாவது திட்டம் தொழிலாளர்களின் முகாம்களை நிறுவுவதாகும். இத்தகைய ஒரு முகாம் கோரக்பூரில் அமைக்கப்பட்டிருக்கிறது. பயிற்சிபெறாத பெரும்பாலான தொழிலாளர்கள் இந்த முகாமில் அணி திரட்டப்படுகின்றனர்; வகை பிரிக்கப்படுகின்றனர்; பின்னர் அவர்கள் நிலக்கரிச் சுரங்கங்களுக்கோ அல்லது ராணுவ தளவாடத் தொழிற்சாலைகளுக்கோ அனுப்பப்படுகின்றனர். 'எம்' என்ற தலைப்பில் குறிப்பிடப்பட்டிருக்கும் செலவினம் தேர்ச்சி பெறாத தொழிலாளர்களை ஒருங்கிணைக்கும் இரண்டு திட்டங்களைச் செயல்படுத்துவதற்கான செலவினமேயாகும். நான் கூறக்கூடியது இவ்வளவுதான்.

திரு. என்.எம்.ஜோஷி: (அதிகார சார்பற்ற நியமன உறுப்பினர்): ஐயா, மாண்புமிகு உறுப்பினர் இரண்டு திட்டங்களைப் பற்றி நம்மிடம் கூறினார்; ஒன்று தொழிலாளர் சப்ளைக்குழு அமைக்கும் திட்டம்; இரண்டாவது திட்டம் தொழிலாளர் முகாம்களை அமைத்து அங்கிருந்து அவர்களை வெவ்வேறு பணிகளுக்காக இதர இடங்களுக்கு அனுப்பிவைப்பதாகும். சரி, இது போகட்டும்.

அடுத்து, தொழிலாளர் சப்ளைக் குழுக்களைப் பொறுத்தவரையில் இத்தகைய குழுக்கள் அமைக்கப்பட்டிருக்கும் இடங்களில் எல்லாம் இந்தக் குழுக்களில் தொழிலாளர் பிரதிநிதகள் இடம்பெற்றிருக்கிறார்களா என்பதை மாண்புமிகு உறுப்பினரிடமிருந்து அறிய விரும்புகிறேன்.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர்:* இத்தகைய தொழிலாளர் சப்ளைக் குழுக்களில் தொழிலாளர்களின் பிரதிநிதிகள் இடம்பெறுவதற்கு வகைசெய்ய வேண்டும் என்று நேற்றுதான் கட்டளை பிறப்பித்தேன்.



# 30

## [1]புதுடில்லியில் மசூதிகளைப் பாதுகாத்தல்

*திரு. தலைவர் (மாண்புமிகு சர்.அப்துல் ரஹீம்): பின்கண்ட திருத்தம் முன்மொழியப்படுகிறது :*

*''அசல் தீர்மானத்துக்குப் பதிலாக பின்கண்டவற்றைச் சேர்த்துக் கொள்ள வேண்டும்:*

*''புதுடில்லிப் பிரதேசத்திலுள்ள மசூதிகளைப் பாதுகாப்பதற்கும், முறையாக மராமத்து செய்வதற்கும் பின்கண்ட நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்பட வேண்டுமென்று நிர்வாக சபையுடன் கூடிய கவர்னர்-ஜெனரலுக்கு இந்த அவை பரிந்துரைக்கிறது :*

*(அ) மசூதிகள் அமைந்துள்ள வளாகங்களுக்குள் உள்ள இல்லங்களை மற்றவர்களுக்கு ஒதுக்கலாம் என்று சம்பந்தப் பட்ட இலாகாவுக்கு ஆணையிடப்படுகிறது; ஆனால் இத் தகைய மசூதிகளை மராமத்து செய்வதற்கும் முஸ்லீம்கள் அவற்றில் தொழுகை நடத்துவதற்கும் எத்தகைய இடைஞ்சலும் இருக்கக்கூடாது என்று பணிக்கிறது;*

*(ஆ) புதுடில்லிப் பிரதேசத்தில் தற்போதுள்ள மசூதிகளை பழுதுபார்ப்பதற்கும், புதுப்பிப்பதற்கும், திரும்பக்கட்டுவதற் கும் சம்பந்தப்பட்ட இலாகாவும் புதுடில்லி நகரக் குழுவும் எல்லா வசதிகளையும், உதவிகளையும், தேவையான சட்ட இசைவாணைகளையும் வழங்க வேண்டும் என்று ஆணை யிடுகிறது.*

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: (தொழிலாளர் நலத் துறை உறுப்பினர்): இந்தத் தீர்மானம் (அ) (ஆ) என இரு*

---

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, மார்ச் 30, 1944, பக்கம் 1798.

பகுதிகளைக் கொண்டது. பகுதி (ஆ) கல்வி, சுகாதாரம், நிலம் ஆகியவற்றுக்கான மாண்புமிகு செயலாளர் பொறுப்பில் உள்ள தாகும். நான் சம்பந்தப்பட்ட பகுதி (அ) இரண்டு பரிந்துரைகளைச் செய்கிறது. முதலாவது பரிந்துரை தமது வளாகத்திற்குள் மசூதி களைக் கொண்டுள்ள வீடுகளை இந்திய அரசாங்கத்தின் முஸ்லீம் ஊழியர்களுக்கு ஒதுக்க வகைசெய்கிறது. இரண்டாவது பரிந்துரை தொழுகைகள் செய்வதற்காக வருவோர் இத்தகைய மசூதிகளைப் பயன்படுத்திக் கொள்வதற்கோ அல்லது அவற்றைப் புனரமைப் பதற்கோ இந்த வீடுகளில் குடியிருப்பவர்கள் எவ்வகையினும் இடைஞ்சல் செய்யக்கூடாது என்று கூறுகிறது.

இவ்விரு பரிந்துரைகளையும் என்னால் ஏற்க இயலாது என்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேன். இந்தத் தீர் மானத்தை முன்மொழிந்தவரது உணர்வுகளை நான் மதிக்காதது இதற்குக் காரணமல்ல; மாறாக இந்தத் தீர்மானத்தை ஏற்றுக்கொள் வதில் உள்ளார்ந்து பொதிந்துள்ள சிரமங்களே இதற்குக் காரணம்.

மதிப்பிற்குரிய என்னுடைய நண்பர் சர். யாமின் கான் தீர் மானத்தின் முதல்பகுதியை எடுத்துக்கொண்டு பேசும்போது, இத் தகைய வளாகங்களுக்குள் அமைந்திருக்கும் ஒரு குறிப்பிட்ட இல்லம் மதிப்பிற்குரிய முஸ்லீம் உறுப்பினர் ஒருவருக்கு ஏற்கனவே ஒப்புக் கொள்ளப்பட்டு விட்டது என்ற தமது வாதத்தை ஆதரிக்கும் வகை யிலேயே அவர் இவ்வாறு பேசியிருக்கிறார் என்று கருதுகிறேன். ஆனால் இது தவறு என்பதைத் திட்டவட்டமாகக் கூறவிரும்பு கிறேன். மதிப்பிற்குரிய உறுப்பினர் எவருக்கும் எந்தவீடும் ஒதுக்கப் படவில்லை. அவர் குறிப்பிட்டுள்ளபடி ஒரு முஸ்லீம் உறுப்பின ருக்கு வீடு ஒதுக்கப்பட்டிருப்பது ஓர் எதிர்பாராத நிகழ்ச்சியாகும். அந்தக் குறிப்பிட்ட வீடு காலியாக இருந்தால் - காலியாக இருக்காது என்றே நம்புகிறேன் - அது மதிப்பிற்குரிய உறுப்பினருக்கு அடுத்த படியாக உயர்நிலையிலுள்ளவருக்கே ஒதுக்கப்பட வேண்டும், மதிப் பிற்குரிய உறுப்பினர் முஸ்லீமாக இருந்தாலும் அல்லது முஸ்லீமல் லாதவராக இருந்தாலும் இவ்வாறுதான் செய்யவேண்டும் என்பதில் எனக்கு அணுவளவும் ஐயமில்லை.

**சர் முகமது யாமின் கான்:** ஆனால் ஒரு தடுப்புச் சுவர் ஏற்கனவே கட்டப்பட்டு விட்டது.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அது வேறு விஷயம். இங்கு கோட்பாடுகளைப் பற்றித்தான் பேசிக் கொண்டிருக்கிறேன்.

ஆதலால் இந்திய அரசாங்கம் இந்தக் கோட்பாட்டை ஏற்றுக் கொள்ளவில்லை. இத்தகைய கண்டிப்பான கோட்பாட்டை அரசாங்கம் ஏற்றுக்கொள்வது என்பது அறவே சாத்தியமல்ல என்பதை மதிப்பிற்குரிய நண்பருக்குச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

ஐயா, இந்தக் கோட்பாட்டை ஏற்றுக்கொள்வது என்பது எதைக் குறிக்கிறது? அது இரண்டு விஷயங்களைக் குறிக்கிறது. இந்தத் தீர்மானத்தில் குறிப்பிடப்பட்டிருப்பது போன்ற வீடுகளில் முஸ்லீம் அல்லாதவர்கள் குடியேறியிருந்தால் அவர்களுக்கு சட்டப் படியாக முன்னறிவிப்பு தந்து அவர்கள் வீட்டைக் காலி செய்யச் செய்வதையே குறிக்கிறது. இந்தத் தீர்மானத்தை அரசாங்கம் ஏற்றுக் கொண்டால் இத்தகைய விளைவுதான் ஏற்படும்.

இதுபோக, தீர்மானத்தை ஏற்றுக்கொள்வதால் ஏற்படும் இரண்டாவது விளைவு பின்கண்டவாறு இருக்கும்: இத்தகைய ஒரு வீடு காலியாக இருக்கிறது என்று வைத்துக்கொள்வோம், வெளி இடங்களிலிருந்து தவிர்க்க முடியாதபடி டில்லியில் தங்கியிருப்பதற்கு முஸ்லீம் அல்லாத ஒருவர் அரசாங்கத்தால் அழைக்கப்படுகிறார் என்றும் தெரிவித்துக் கொள்வோம். அப்படிப்பட்ட நிலைமையிலும் அவருக்கு அந்த வீட்டை ஒதுக்க முடியாது. எனவே, ஐயா, இது காரியசாத்தியமற்ற நிபந்தனையாகும் என்பது எனது பணிவான கருத்து. இன்று பெருமளவுக்கு எங்கும் வீட்டுவசதிப்பற்றாக்குறை நிலவுகிறது; இங்கு அழைக்கப்படும் அதிகாரிகள் படைவீடுகள் போன்ற வசதி இல்லாத குடியிருப்புகளில் வசிக்க வேண்டியிருக்கிறது; இத்தகைய நிலைமையில் அரசாங்கம் இவ்வகையான விதியைக் கடைப்பிடிப்பது தனக்குப் பயன்படாதது மற்றவர்களுக்கும் பயன்படக்கூடாது என்ற கொள்கையைப் பின்பற்றுவதாகத் தான் இருக்கும். இன்றைய சந்தர்ப்ப சூழ்நிலைகளில் இது அரசாங்கத்தால் ஏற்றுக்கொள்ளக்கூடிய விஷயமல்ல என்பதை மதிப்பிற்குரிய என் நண்பர் உணர்வார் என்று நம்புகிறேன்.

இனி, அடுத்து, வீட்டிற்குக் குடி வருபவர்கள் மீது சில குறிப்பிடப்பட்ட கட்டுப்பாடுகளை விதிக்கும்படி அரசாங்கத்தைக் கோரும் தீர்மானத்தின் இரண்டாவது பகுதிக்கு வருவோம். இதுவும்

மிகுந்த சிக்கல்களையும் இக்கட்டுகளையும் ஏற்படுத்தும். குடியிருப் பவர்கள்மீது வீட்டுச் சொந்தக்காரர்கள் சில கட்டுப்பாடுகளை விதிக்க உரிமைபெற்றிருக்கிறார்கள் என்பது அனைவரும் அறிந்ததே. அவர்கள் விதிக்கும் கட்டுப்பாடுகள் வீட்டைச் சுத்தமாக வைத்துக் கொள்வது, நன்கு பராமரிப்பது சம்பந்தப்பட்டவையாகவே பிரதான மாக இருக்கும் என்பதை மதிப்பிற்குரிய என்னுடைய நண்பர் சர் யாமின் கான் ஒப்புக்கொள்வார் என்பதில் எனக்கு எள்ளளவும் ஐயமில்லை. ஆனால் குடித்தனக்காரர்மீது அரசாங்கம் விரும்பும் கட்டுப்பாடுகளோ முற்றிலும் நியாயமற்றவை, குடியிருப்பை சிறந்த முறையில் பராமரிப்பது சம்பந்தப்படாதவை.

அடுத்து, ஐயா, இனி இரண்டாவது இடர்ப்பாட்டுக்கு வரு கிறேன். இத்தகைய கட்டுப்பாட்டுக்கு உள்ளாகும் குடித்தனக்காரரின் நிலைமை எப்படியிருக்கும்? இங்கு குடிவரும் ஒவ்வொருவரும் அவர் முஸ்லீமாக இருந்தாலும் முஸ்லீமல்லாதவராக இருந்தாலும் தொழுகை செய்ய விரும்பும் எல்லோருக்குமே இந்த வளாகத்தைத் திறந்துவிட வேண்டும் என்று தீர்மானத்தில் குறிப்பிடப்பட்டிருக் கும் நிபந்தனையை நான் செயல்படுத்துவதானால் இந்த வீடுகளின் தனிமை இயல்பு அழிக்கப்பட்டு அது ஒரு முசாபிர்கானாவாக ஆகிவிடும் அதாவது சத்திரமாக மாறிவிடும். இத்தகைய ஒரு நிபந்தனையை முஸ்லீம் அல்லாத ஒருவர்க்கு விதிப்பது மிகமிகக் கடினம்; இதேபோன்ற நிபந்தனையை ஓர் ஐரோப்பியருக்கு விதிப் பதும் முற்றிலும் சாத்தியமல்ல. இன்னும் சொல்லப்போனால் மதிப் பிற்குரிய என்னுடைய நண்பர் விரும்புவதுபோல் ஒரு முஸ்லீம் குடித்தனக்காரர்கூட இந்த நிபந்தனையை நிச்சயமாக ஏற்றுக்கொள்ள மாட்டார். அதிகம் போவானேன் தீர்மானத்தில் குறிப்பிடப்பட் டிருப்பதுபோன்ற ஒரு வீட்டில் குடியிருக்கும் மதிப்பிற்குரிய என் சகாவையே எடுத்துக் கொள்வோம். அவர் என்னதான் தீவிர சமய சார்புடையவராக இருந்தாலும் தொழுகை நடத்துவதற்காக ஒரு பெரிய கூட்டம் தன்னுடைய வளாகத்திற்குள் நுழைவதை அவர் அனுமதிக்க மாட்டார்.

எனவே, ஐயா, நான் மேலே கூறிய காரணங்கள் எல்லாம் தற்காலிகமானவை அல்ல என்பதை மதிப்பிற்குரிய என்னுடைய நண்பர் ஒப்புக்கொள்வார் என்று நம்புகிறேன். இத்தகைய காரணங் களால் இத்தீர்மானத்தை நான் ஏற்க முடியாதவனாக இருக்கிறேன்.



# 31

## [1]தொழிற்சாலைகள் (திருத்த) மசோதா

மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): ஐயா, பின்கண்டவாறு முன்மொழிகிறேன்:

'1934 ஆம் வருடத் தொழிற்சாலைகள் சட்டத்தை மேலும் திருத்துவதற்கான இந்த மசோதாவை அவையின் பரிசீலனைக்கு முன்வைக்கிறேன்.''

இந்த மசோதா மிகவும் எளிமையானதும் சர்ச்சைக்கு இட மற்றதுமாகும். நான்கு திருத்தங்கள் செய்ய இந்த மசோதா கோரு கிறது; 9,19,23,45 மற்றும் 54 ஆகிய பிரிவுகள்தான் இந்த மசோதாவால் திருத்தம் செய்யப்பட வேண்டிய பிரிவுகளாகும்.

ஒரு தொழிற்சாலையின் உரிமையாளர் அந்தத் தொழிற் சாலையைத் தொடங்குவதற்கு முன்னர் சில குறிப்பிட்ட தகவல் களைத் தொழிற்சாலைகளின் கண்காணிப்பாளருக்கு அனுப்ப வேண்டும் என்பதை 9 ஆவது பிரிவு சட்டரீதியாகக் கட்டயமாக்கு கிறது. ஆனால் இப்போது அப்படியல்ல. தற்சமயம் இந்தப் பிரிவின் படி, தொழிற்சாலைகளின் கண்காணிப்பாளர் தமக்கு அவசிய மானவை என்று கருதும் சில தகவல்களைத் தொழிற்சாலையின் உரிமையாளரிடமிருந்து கோரிப்பெறமுடியாது; தொழிற்சாலை யின் உரிமையாளரும் இத்தகைய தகவல்களை வழங்க எவ்விதத் திலும் கட்டுப்பட்டிருக்கவில்லை. அண்மையில், தொழிற்சாலை ஒன்றைத் தொடங்க விரும்பிய ஒருவர் தொழிற்சாலைகளின் கண் காணிப்பாளருக்கு அத்தியாவசியமாகத் தேவைப்பட்ட சிலமுக்கிய தகவல்களை அளிப்பதற்கு மறுத்துவிட்டார். இதுபோன்ற குறைபாடு களை அகற்றும் பொருட்டே 9ஆவது பிரிவு திருத்தப்படுகிறது. கண் காணிப்பாளருக்குத் தேவைப்படும் குறிப்பிட்ட தகவல்களைத் தரும்படிக் கோரும் அதிகாரத்தை இந்தத் திருத்தம் அரசாங்கத்துக்கு வழங்குகிறது.

---

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, ஏப்ரல் 4, 1944, பக்கம் 1929.

19வது பிரிவு தொழிற்சாலைகளில் தண்ணீர் வழங்கீடு, அலம்புமிடங்கள் சம்பந்தப்பட்டதாகும். இப்போதுள்ளபடி இந்தப் பிரிவு தீங்கு உண்டுபண்ணக்கூடிய, அருவருப்பான பொருள்கள் பயன்படுத்தப்படும் பணிகளில் ஈடுபட்டுள்ள தொழிலாளர்கள் வேலை செய்யும் தொழிற்சாலைகளில்தான் அலம்பிடங்கள் அமைக்க வகை செய்துள்ளது. ஏனைய தொழிற்சாலைகள் இத் தகைய அலம்பிடங்களைப் பராமரிக்க வேண்டும் என இது வற் புறுத்தவில்லை. இந்தக் கட்டுப்பாடு அகற்றப்படவேண்டும் என்று பரிந்துரைக்கப்படுகிறது. ஏனென்றால் தீங்கு பயக்கும், அருவருப்பான பொருள்களைப் பயன்படுத்தும் பணியில் ஈடுபட்டிருக்கும் தொழி லாளர்களுக்கு மட்டுமன்றி எல்லாவகையான தொழிலாளர்களுக் குமே அலம்பிடங்கள் இருப்பது அவசியமாகும். எனவே, அனைத்துத் தொழிற்சாலைகளுமே அலம்பிடங்களைப் பராமரிப்பதை இந்தத் திருத்தம் கட்டாயமாக்குகிறது.

23 ஆவது பிரிவு எரியும் கட்டிடத்திலிருந்து ஆட்களை மீட்டுக் கொண்டு வருவதற்குரிய கருவிகளைப் பற்றியதாகும். இந்தப் பிரிவும் குறைபாடுடையதாக இருப்பதைக் காண்கிறோம். இது விஷ யத்தில் இந்தப் பிரிவு தொழிற்சாலை உரிமையாளர் தனது விருப்பப் படி நடந்துகொள்ள அனுமதிக்கிறது. ஒரு குறிப்பிட்ட தொழிற்சாலை இத்தகைய சாதனங்களை போதுமான எண்ணிக்கையில் வைத் திருக்க வேண்டும் என்று சட்டரீதியாக அதனைக் கட்டாயப்படுத்தும் அதிகாரத்தை இது அரசாங்கத்துக்கு வழங்கவில்லை. எனவே, ஒரு குறிப்பிட்ட தொழிற்சாலையில் அங்குள்ள சந்தர்ப்ப சூழ்நிலைமை களுக்கு ஏற்ப இத்தகைய சாதனங்கள் எத்தனை வைத்திருப்பது அவ சியம் என்று தொழிற்சாலைகளின் கண்காணிப்பாளர் கருதுகிறாரோ அத்தனை சாதனங்களை நிர்ணயிக்கும் அதிகாரத்தை அரசாங்கத் துக்கு வழங்கும் வகையில் 23ஆவது பிரிவு திருத்தப்படுகிறது.

அடுத்து, ஐயா, 45 மற்றும் 54 ஆவது பிரிவுகளுக்கு வரு கிறேன். இந்தப் பிரிவுகள் இரண்டு விஷயங்களைக் கையாள் கின்றன. தொழிற்சாலையில் ஒரு குழந்தையும் ஒரு பெண்ணும் எவ்வளவு நேரம் வேலை செய்ய வேண்டும் என்பது பற்றியவை இந்தப் பிரிவுகள். நேர வரம்புகள் குறித்தும் இந்தப் பிரிவுகள் குறிப்பிடுகின்றன. ஒரு தொழிற்சாலையில் ஒரு பெண் அல்லது குழந்தை வேலைசெய்யவேண்டிய நேரம் அல்லது தற்போதைய 13 மணிநேர வரம்புகள் குறித்த விதிமுறைகளில் இந்தத் திருத்தம்

7.30 மணி என்பதை 8.30 மணியாக மாற்றுவதுதான். இந்த மாற்றம் செய்வதற்கு இரண்டு காரணங்கள் உண்டு. முதல் காரணம் சர்வதேச நேரத்தில் செய்யப்பட்டிருக்கும் மாற்றம்; இரண்டாவது காரணம் வெளிச்சத்தை மிச்சப்படுத்த வேண்டிய அவசியம்.

ஐயா, இந்த மசோதாவின் ஷரத்துக்கள் பற்றி மேற்கொண்டு விவரிக்கவேண்டிய அவசியம் இல்லை என்று கருதுகிறேன். எனவே இந்த மசோதாவை முன்மொழிகிறேன்.

திரு. தலைவர் (மாண்புமிகு சர்.அப்துல் ரஹீம்): மசோதா முன்மொழியப்படுகிறது:

> '1934 ஆம் வருடத்தொழிற்சாலைகள் சட்டத்தை மேலும் திருத்தும் இந்த மசோதா பரிசீலனைனக்கு எடுத்துக் கொள்ளப் பட வேண்டும் என்று கேட்டுக் கொள்ளப்படுகிறது.''

மசோதாவில் சில திருத்தங்கள் செய்யவேண்டும் என்று மௌல்வி முகமது கனி பிரரேபித்திருக்கிறார். ஆனால் அவர் தற்போது அவை யில் இல்லை. எனவே, மசோதாவைப் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளும் நடைமுறையை அவை இப்போது மேற்கொள்ளலாம்.

**திரு.முகமது நௌமான்:** (பாட்னா, சோட்டா நாக்பூர் மற்றும் ஒரிசா: முகமதியர்): ஐயா, மசோதாவையும் மாண்புமிகு உறுப்பினர் எடுத்துரைத்த அதன் கோட்பாட்டையும் நான் ஆதரிக்கிறேன். ஆனால் மாண்புமிகு உறுப்பினர்களையும் கலந்தாலோசிக்கவில்லை என்பதே எனது ஒரே ஆட்சேபனை; ஏனென்றால் இத்தகைய திருத் தங்கள் அவசியம்தானா என்பதை உண்மையில் கூறுவதற்கு முற்றி லும் தகுதியானவர்கள் அவர்கள்தான் என்பது எனது கருத்து. தொழிற்சாலைகளை நடத்தி வருபவர்கள் அல்லது அவற்றை அமைத்து வருபவர்கள் இன்னின்னவாறு நடந்துகொள்ள வேண்டும் என்று குறிப்பிட்ட சில நிபந்தனைகளை விதிக்க 19ஆவது பிரிவில் வகைசெய்ய உத்தேசிப்பதுதான் எனக்குப் பிடிக்காத ஒரே விஷயம். இந்த விஷயத்தில் வாணிக சமுதாயத்தின் கருத்தையும் தொழில் முனைவர்களின் கருத்தையும் கணக்கிலெடுத்துக் கொள்ள அரசாங்கம் உரிய முயற்சி எடுத்துக்கொண்டிருந்தால் இந்த மசோதாவை நான் மிகுந்த மகிழ்ச்சியோடு வரவேற்றிருப்பேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, மதிப்பிற் குரிய என் நண்பர் திரு.முகமது நௌமான் எழுப்பியுள்ள பிரச் சினையைப் பொறுத்தவரையில் ஒன்று கூற விரும்புகிறேன். அகில இந்தியாவிலுள்ள தொழிற்சாலைகளின் கண்காணிப்பாளர்களது மாநாடு பரிந்துரைத்தபடியே இந்த மசோதா தயாரிக்கப்பட்டது. அவர்கள்தான் இப்போதுள்ள நிலைமையில் இந்த மசோதா குறை பாடுடையது என்று கருத்துத் தெரிவித்தார்கள். இந்நிலையில் அர சாங்கம் செய்ததெல்லாம் அகிலஇந்திய தொழிற்சாலைகளின் கண் காணிப்பாளர்கள் ஒருமனதாகத் தெரிவித்த பரிந்துரைகளுக்குச் செயல் வடிவம் அளித்ததுதான். வாணிகக் கழகங்கள் கலந்தாலோசிக்கப் பட்டனவா என்பதைக் கூறஇயலாத நிலைமையில் இருக்கிறேன்; அது சம்பந்தமான ஆவணங்கள் ஏதும் என்னிடம் இல்லை. வாணிகக் கழகங்கள் தொழிற்சாலை சட்டங்கள் சம்பந்தமாக கலந்தாலோசிக் கப்பட வேண்டிய அமைப்புகள் அல்ல என்று கருதப்பட்டிருக்க வேண்டும். ஆனால் தொழில் அதிபர்களது நிறுவனங்கள் கலந் தாலோசிக்கப்பட்டிருக்கும் என்றே நம்புகிறேன்.

*திரு.தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரஹீம்): தீர்மானம் இதுதான்:*

'1934 ஆம் வருடத்தொழிற்சாலைகள் சட்டத்தை மேலும் திருத்துவதற்கான இந்த மசோதா அவையின் பரிசீலனைக்கு முன்வைக்கப்படுகிறது.''

*தீர்மானம் ஏற்கப்பட்டது.*

**திரு. சி.சி. மில்லர்:** (வங்காளம் - ஐரோப்பியர்): ஐயா, பின்கண்டவாறு பிரரேபிக்கிறேன்:

''உபபிரிவு (1) இன் (எஃப்) பகுதியுடன் சேர்க்க உத்தே சிக்கப்பட்டிருக்கும் மசோதாவின் ஷரத்து 2இல் பின்கண்ட சொற்கள் சேர்க்கப்பட வேண்டும்:

'இந்த சட்டத்தின் நோக்கங்களுக்காக.

ஐயா, இந்தத் திருத்தம் பற்றிச் சுருக்கமாக விளக்குகிறேன். மதிப்பிற்குரிய உறுப்பினர் ஏற்கனவே கூறியது போல், தொழிற் சாலை ஆய்வாளருக்கு தொழிற்சாலைகளின் உரிமையாளர்கள் சில

குறிப்பிட்ட விஷயங்கள் சம்பந்தமாக வழங்க வேண்டிய தகவல்கள் குறித்து மூலப்பகுதி 9 கூறுகிறது. மேற்கொண்டு தகவல்கள் தேவைப் பட்டால் அவற்றை அளிப்பதற்கு மசோதாவின் பிரிவு 73 வகை செய்வதாகத் தோன்றுகிறது. அப்படியிருக்கும்போது இந்தத் திருத்தம் தேவைதானா என்று எவருக்கும் ஐயம் எழுவது இயல்பே. ஆனால் அரசு கொண்டு வந்திருக்கும் இந்தத் திருத்தம் முறைப்படி இருப் பதைக் கணக்கி லெடுத்துக் கொண்டு பார்க்கும்போது பல்வேறு விஷயங்கள் குறித்து ஏராளமான திருத்தங்கள் கொண்டுவருவதை விட இந்தத் திருத்தம் உசிதமானது என்று நாங்கள் நினைத்தோம். நாங்கள் கேட்பதெல்லாம் தொழிற்சாலைச் சட்டம் சம்பந்தப்பட்ட தகவல்கள் மட்டுமே கோரிப்பெறும் உரிமை தொழிற்சாலை கண் காணிப்பாளருக்கு இருக்க வேண்டும் என்பதே ஆகும். மிகவும் மிதமான இந்தத் திருத்தத்தை மாண்புமிகு உறுப்பினர் ஏற்றுக்கொள் வார் என்று நம்புகிறேன்.

திரு. தலைவர் (மாண்புமிகு சர்.அப்துல் ரஹீம்): பின்வரும் திருத்தம் முன்மொழியப்படுகிறது:

'உபபிரிவு (1) இன் (எஃப்) பகுதியுடன் சேர்க்க உத்தே சிக்கப்பட்டிருக்கும் மசோதாவின் ஷரத்து 2இல் பின்கண்ட சொற்கள் சேர்க்கப்பட வேண்டும்:

'இந்த சட்டத்தின் நோக்கங்களுக்காக''

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: திருத்தத்தை ஏற்கிறேன்.

தலைவர் (மாண்புமிகு சர்.அப்துல் ரஹீம்): பின்வரும் திருத்தம் முன்மொழியப்படுகிறது.

'உபபிரிவு 1 இன் (எஃப்) பகுதியுடன் சேர்க்க உத்தேசிக்கப் பட்டிருக்கும் மசோதாவின் ஷரத்து 2ல் பின்கண்ட சொற்கள் சேர்க்கப்பட வேண்டும் :

'இந்த சட்டத்தின் நோக்கங்களுக்காக''

திருத்தம் ஏற்கப்பட்டது.

திருத்தப்பட்ட ஷரத்து 2 மசோதாவில் சேர்க்கப்பட்டது. 3,4,5 ஷரத்துக்கள் மசோதாவில் சேர்க்கப்பட்டன. ஷரத்து 1 மசோதாவில் சேர்க்கப்பட்டது.

சட்டத்தின் தலைப்பும் பீடிகையும் மசோதாவில் சேர்க்கப் பட்டன.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, பின்வருமாறு முன்மொழிகிறேன்:

'திருத்தப்பட்ட மசோதா ஏற்கப்பட வேண்டும்.''

திரு. தலைவர் (மாண்புமிகு சர்.அப்துல் ரஹீம்): பிரேரணை இதுதான்:

'திருத்தப்பட்ட மசோதா ஏற்கப்பட வேண்டும்.''

மசோதா ஏற்கப்பட்டது.



# 32

## [1]நிலக்கரிச் சுரங்கங்கள் சேமநல நிதியத்துக்கான ஆலோசனைக்குழு

கடந்த ஜனவரிமாதம் பிரகடனம் செய்யப்பட்ட நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர் சேமநல அவசரச்சட்டத்தைச் செயல்படுத்து வதில் எழக்கூடிய விஷயங்கள் குறித்து ஆலோசனைகள் கூறுவதற் காக மத்திய அரசாங்கம் ஓர் ஆலோசனைக் குழுவை அமைத்துள்ளது.

இந்தக் குழு முற்றிலுமாக அமைக்கப்படும்போது பின்கண்ட வர்களைக் கொண்டதாக இருக்கும்: தொழிலாளர் இலாகாவின் செயலாளர், நிலக்கரி ஆணையர், தொழிலாளர் சேமநல ஆலோ சகர், சுரங்கங்களின் தலைமைக் கண்காணிப்பாளர், ரயில்வே போர்டு, வங்க அரசாங்கம், பீகார் அரசாங்கம், மத்திய மாகாணங்கள் மற்றும் பேரார் அரசாங்கம் ஆகியவை சார்பில் நியமிக்கப்படும் ஒவ்வொரு அதிகாரி, இந்திய சுரங்கக் கழகத்தின் இரு பிரதிநிதிகள், சுரங்க உரிமை யாளர்கள் சங்கம், மத்திய மாகாணங்கள் மற்றும் பேரார் சுரங்கக் கழகத்தின் பிரதிநிதி; இரண்டு சுரங்கப்பொறியாளர்கள், நிலக்கரிச் சுரங்க உரிமையாளர்களைத் தவிர்த்து இதர நலன்களின் பிரதிநிதிகள் அல்லது நிலக்கரிச் சுரங்கத் தொழிலில் பணியாற்றும் தொழிலாளர்களின் பிரதிநிதிகள்:

இவர்கள் தவிர, நிலக்கரிச்சுரங்கத் தொழிலாளர்களின் நலன் களைப் பிரதிநிதித்துவப்படுத்துவதற்கு மத்திய அரசாங்கம் ஐந்து பிரதிநிதிகளை நியமிக்கும். இவ்வகையில் ஏற்கனவே நான்குபேர் நியமிக்கப்பட்டுவிட்டனர்; ஐந்தாவது நபர் விரைவில் நியமிக்கப் படுவார். அவசரச் சட்டத்தின்படி ஆலோசனைக் குழுவில் ஒரு பெண் உறுப்பினரும் இடம்பெற வேண்டும். இந்த நியமனம் விரைவில் நடைபெறும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

இதுவரை அமைக்கப்பட்டுள்ள குழுவில் இந்திய அரசாங் கத்தின் பின்வரும் பிரதிநிதிகள் அடங்குவர்; திரு எஸ். லால், செயலாளர்,

1. இந்தியத் தகவல் ஏடு, மே 15, 1944, பக்கங்கள் 522-523.

தொழிலாளர் இலாகா, திரு. ஆர்.எஸ். நிம்பகர், தொழிலாளர் சேமநல ஆலோசகர்; திரு. டபிள்யூ.எச். கிர்பி, பிரதம சுரங்கக் கண்காணிப்பாளர். ரயில்வே போர்டு, வங்காள, பீகார், மத்திய மாகாணங்கள் மற்றும் பேரார் அரசாங்கங்களின் பிரதிநிதிகள் வருமாறு: திரு. ஏ.ஓர்., திரு.ஏ. ஹக்ஸ், ஐ.சி.எஸ், தொழிலாளர் ஆணையர், வங்காளம்; திரு. ஏ.ஜ. பூன், ஐ.சி.எஸ், கூடுதல் துணை ஆணையர்; தான்பாத்; சர்தார் பகதூர் இஷார் சிங், தொழிலாளர் ஆணையர், மத்திய மாகாணங்கள் மற்றும் பேரார். திருவாளர்கள் ஜே.லாத்திமர், எஸ்.எஃப்.தார்ல்டன், எம்.என்.முகர்ஜி, ஆர்.டி. ரத்தோர், ஏ.இ. டக்ளஸ் ஆகியோர் சுரங்கத் தொழில்துறை சார்பில் ஆலோசனைக் குழுவில் நியமிக்கப்பட்டிருக்கின்றனர்.

## முதல் கூட்டம்

நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர்களின் சார்பில் நியமிக்கப் பட்டிருக்கும் நால்வரில் திருவாளர்கள் பி.பட்டாசாலியும் எச். கோசலும் இந்தியத் தொழிலாளர் சம்மேளனத்துடன் இணைக்கப் பட்ட அமைப்புகளையும், திருவாளர்கள் நிர்பதா முகர்ஜியும் சாப்பால் பட்டாச்சாரியாவும் தொழிற்சங்க காங்கிரசுடன் இணைக்கப் பட்ட அமைப்புகளையும் பிரதிநிதித்துவப்படுத்துபவர்களாவர். திருவாளர்கள் எஸ்.என்.மல்லிக்கும், டபிள்யூ.என். பர்ச்சும் குழுவில் நியமிக்கப் பட்டிருக்கும் சுரங்கப் பொறிஞர்கள்.

ஆலோசனைக் குழுவின் முதல் கூட்டம் ஏப்ரல் 27 ஆம் தேதி தான்பாத்தில் நடைபெற்றது. இந்திய அரசாங்கத்தின் தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் கூட்டத்துக்குத் தலைமை வகித்தார்.

டாக்டர் அம்பேத்கர் தமது இரத்தினச் சுருக்கமான துவக்க உரையில் முதலாவதாக, நிலக்கரி உற்பத்திப் பிரச்சினையையும், இரண்டாவதாக, தங்குதடையின்றித் தொழிலாளர்கள் கிடைக்கும் பிரச்சினையையும் பரிசீலிக்கும் பொருட்டு கடந்த டிசம்பரில் தான்பாத்தில் நடைபெற்ற முத்தரப்புக் கூட்டத்தை நினைவுகூர்ந்தார். அந்தக் கூட்டத்தில் தெரிவிக்கப்பட்ட யோசனைகள் நடைமுறைப் படுத்தப்பட்டிருப்பதாக அவர் தெரிவித்தார். உற்பத்திப் பிரச்சினை தனியாகப் பரிசீலிக்கப்பட்டுவந்த நிலைமையில், நிலக்கரிச் சுரங் கங்களில் பணியாற்றும் தொழிலாளர்களின் சேமநலத்துக்காக மேற்கொள்ளப்பட வேண்டிய நடவடிக்கைகள் குறித்து ஆராயும் பொருட்டு இந்தக் கூட்டம் கூட்டப்பட்டது. அந்தக் கூட்டத்தில்

விவாதிக்கப்பட்டு, முடிவெடுக்கப்பட்டதற்கு இணங்க சுரங்கத் தொழிலாளர்களின் சேமநலத்தின் பொருட்டு ஒரு நிதியத்தை அமைப் பதற்கு இந்திய அரசாங்கம் ஓர் அவசர சட்டத்தைப் பிரகடனம் செய்தது. அந்த அவ்சரச்சட்டத்தின்படி இந்த ஆலோசனைக்குழு அமைக்கப்பட்டது.

பின்னர் குழு தன்முன் வைக்கப்பட்ட நகல் விதிகள் குறித்து விவாதித்தது; ஆலோசனைக் குழுவின் இயைபு மற்றும் இந்த நிதியத்திலிருந்து நல்வாழ்வுத் திட்டங்களுக்குச் செலவிடப்பட வேண்டிய இனங்கள் முதலியவை குறித்தவையே இந்த நகல் விதிகள். குழுவின் தலைவரது நிர்வாக அதிகாரத்தின்கீழ் தான்பாதில் ஒரு தலைமைச் செயலகத்தை அமைப்பதற்கு இந்த விதிகள் வகை செய்கின்றன. ஆலோசனைக்குழுவின் பல்வேறு பணிகளைச் செய் வதற்கு அநேக துணைக்குழுக்கள் அமைக்கப்படும். நிதியத்திலிருந்து என்னென்ன காரியங்களுக்குப் பணம் செலவிடலாம் என்பது குறித்து ஆலோசனை கூறும் நிதி துணைக் குழு, நிதியத்திலிருந்து மேற் கொள்ளப்படும் எல்லாப் பிரதான கட்டுமானப் பணிகளையும் பரிசீலிக்கும் கட்டுமானத் துணைக்குழு, நிதியத்திலிருந்து அந்தந்த பிராந்தியங்களில் செய்யப்படும் செலவினங்கள் குறித்த எல்லா விஷயங்களையும் பரிசீலிப்பதற்கு வங்காளம், பீகார், மத்திய மாகா ணங்கள் மற்றும் பேரார், அசாம் ஆகிய பகுதிகளிலுள்ள பிரதான நிலக்கரிச் சுரங்கங்கள் ஒவ்வொன்றும் அமைக்கும் தனி நிலக்கரிச் சுரங்கத் துணைக்குழு முதலியவற்றை இவ்வகையில் முக்கியமாகக் குறிப்பிடலாம். இந்தத் துணைக் குழுக்களை அமைக்கும்போது நிலக் கரிச் சுரங்கங்களின் உரிமையாளர்களுக்கும் அவற்றில் பணிபுரியும் தொழிலாளர்களுக்கும் சமத்துவப் பிரதிநிதித்துவம் அளிக்கப்படும்.

## நிதியத்தின் நிர்வாகம்

அனுமதிக்கப்பட்ட வரவு செலவுக் கட்டுக்கோப்பிற்குள் மேற் கொள்ளப்படவிருக்கும் செலவினத் திட்டங்களை மத்திய அர சாங்கத்தின் அங்கீகாரத்திற்காக ஆலோசனைக்குழு சமர்ப்பிப்பதற்கு உத்தேச விதிகள் வகை செய்கின்றன. இந்தச் செலவினத் திட்டங் கள், இரு பகுதிகளாக அமைந்திருக்கும் - தலைமைச் செயல்கத்துக்கு ஆகும் செலவுகள், ஆலோசனைக் குழுத் தலைவரால் நியமிக்கப் படும் ஊழியர்களுக்கு வழங்கப்படும் ஊதியங்கள் முதலியவை முதல் பகுதியில் அடங்கும். இரண்டு, சேமநலத் திட்டங்கள், அதாவது கட்டாயமாக மேற்கொள்ளப்பட வேண்டிய திட்டங்களும், அங்கீகாரம் பெற்று மேற்கொள்ளப்பட வேண்டிய திட்டங்களும்

இரண்டாவது பகுதியில் அடங்கும். மத்திய அரசாங்கத்தின் அங்கீ காரம் பெற்ற எந்தத் திட்டங்களையும் செயல்படுத்தும் பொருட்டு நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர்களின் சேமநல நிதியத்திலிருந்து மானியம் பெறும் ஒரு மாகாண அரசாங்கத்துக்கோ, ஸ்தல ஸ்தா பனத்துக்கோ, நிலக்கரிச் சுரங்க உரிமையாளருக்கோ, நிர்வாகிக்கோ குறிப்பிட்ட சில நிபந்தனைகளை விதிப்பதற்கு இந்த விதிகள் மத்திய அரசாங்கத்துக்கு அதிகாரம் அளிக்கின்றன. எந்தப் பணிக்காக மானியம் அளிக்கப்படுகிறதோ அந்தப்பணி முறையாகவும் உரிய காலத்திலும் செய்யப்படுவதையும், இதனைக் கண்காணிப்பதற்குத் தேவையான வசதிகள் செய்யப்படுவதையும், வழங்கப்பட்ட பணத் திற்கு சரியான கணக்குகள் வைக்கப்படுவதையும் உத்தரவாதம் செய்யும் பொருட்டு இந்த நிபந்தனைகள் விதிக்கப்படக்கூடும்.

இந்த நிதியத்திலிருந்து ஸ்தல ஸ்தாபனத்துக்கோ அல்லது நிலக்கரிச் சுரங்க நிர்வாகிக்கோ மானியம் அளிக்கப்படுவதற்கு முன்னர் இந்த நிபந்தனைகளை நிறைவேற்றுவதாக உறுதிகூறும் ஓர் ஒப்பந்தத்தில் சம்பந்தப்பட்ட தரப்பு கையெழுத்திடவேண்டு மென்று மத்திய அரசாங்கம் கோரும்.

நிதியத்திலிருந்து மானியங்கள் வழங்குவதற்குப் பரிந்துரைக் கும் விஷயத்தில் ஜாரியா மற்றும் அசன்சால் சுகாதார வாரியங் களையும் ஜாரியா நீர் வழங்கு வாரியத்தையும் எந்த அளவுக்குப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்பதையும் குழு பரிசீலித்தது. நிதி யத்திலிருந்து சேமநலத் திட்டங்களையும் ஏனைய திட்டங்களையும் நிறைவேற்றுவதில் நிலக்கரிச் சுரங்கங்களில் தற்போதுள்ள அமைப்பு களைப் பயன்படுத்திக் கொள்ள முடியும் என்பது சுட்டிக்காட்டப் பட்டது. ஸ்தல ஸ்தாபனங்களுக்கு மானியங்கள் வழங்கலாமா, கூடாதா என்பதை ஆலோசனைக்குழு ஒவ்வொரு கோரிக்கையையும் தனித்தனியாகப் பரிசீலித்து முடிவு செய்ய வேண்டும் என்று தலைவர் கூறிய யோசனையை குழு ஏற்றுக்கொண்டது. நிதியத் திலிருந்து உடனடியாக மேற்கொள்ள வேண்டிய செலவினங்களைப் பற்றியும் குழு பரிசீலித்தது. இத்தகைய செலவினங்களில் பின் வருபவையும் அடங்கும்: சேமநலப் பணியில் ஈடுபட்டிருப்போர் சம்பந்தப்பட்ட செலவினங்கள், நிய மிக்கப்படவிருக்கும் தலைமைச் செயலக ஊழியர்கள் சம்பந்தப்பட்ட செலவினங்கள், மத்திய மாகாணங்களிலும் பேராரிலும் தற்போது நடைபெற்றுவரும் மலேரியா ஒழிப்புத் திட்டத்துக்கும், வங்காளத்திலும் பீகாரிலும் விரைவில் செயல்படுத்தப்படவிருக்கும் மலேரியா ஒழிப்புத் திட்டத் துக்கும் ஆகும் செலவினங்கள். அவசர சட்டத்தின்படி விதிக்கவிருக்கும் தீர்வை விகிதம் குறித்தும் குழு பரிசீலித்தது.



# 33

## [1]மைக்காத் தொழிலுக்கு வலுவான, நிலையான அடித்தளம் அமைத்துக் கொடுத்தல்

''இந்தத் தொழிலுக்கு வலுவான, நிலையான அடித்தளம் அமைத்துத் தருவதற்கு இந்திய அரசாங்கம் தன்னால் முடிந்ததனைத்தையும் செய்துதருவதற்குச் சித்தமாக இருக்கிறது'' என்று தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் கூறினார். இந்திய அரசாங்கம், பீகார் அரசாங்கம், மைக்காத் தொழில் அதிபர்களின் அமைப்புகள், மைக்காத் தொழிலாளர் சங்கங்கள் ஆகியவற்றின் பிரதிநிதிகள் பங்குகொண்ட மைக்கா தொழில்துறை மாநாட்டில் பேசும்போது அவர் மேற்கண்டவாறு குறிப்பிட்டார். இந்த மாநாடு ஏப்ரல் 29ஆம் தேதி கொதர்மாவில் (பீகார்) நடைபெற்றது.

பீகார் அரசாங்கத்தின் சார்பில் ஏனையோருடன் பின்கண்டவர்கள் மாநாட்டில் கலந்து கொண்டனர்: திரு. இ.சி. அன்சோர்ஜ், ஆலோசகர்; திரு.ஜே.எஸ்.வில்காக், செயலாளர், வருவாய்த் துறை; திரு. எம்.இஜட் கான், துறை ஆணையர், ஹஜாரிபாக் மாவட்டம், திரு. டி.எல். மஜூம்தார், கூட்டுச் செயலாளர், தொழிலாளர் நலத் துறை டாக்டர் இ.எல்.ஜி. கிளக், இயக்குநர், இந்திய மண்ணியல் ஆய்வுத்துறை, திரு. ஜே.டி.கே. கிராஸ்பீல்டு, மண்ணியல் ஆய்வுத் துறை கள மேற்பார்வை அதிகாரி ஆகியோர் மத்திய அரசாங்கத்தின் பிரதிநிதிகளாகப் பங்கு கொண்டனர்.

''மைக்காத் தொழிலில் இந்தியா தற்போது வகித்துவரும் இதே அளவு ஏகபோக நிலையை யுத்தத்திற்குப் பிறகு நிலைநாட்ட முடியாது போகலாம்'' என்பதை இந்திய அரசாங்கம் உணர்ந்துள்ளது என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார். இத் தொழிலுக்கு ஓர் உறுதியான, நிலையான அடித்தளத்தை அமைத்துத்தரும் பொருட்டு ஒரு விசாரணைக்குழுவை நியமிக்க அரசாங்கம் உத்தேசித்துள்ளது

1. இந்தியத் தகவல் ஏடு, மே 15, 1944, பக்கங்கள் 533-35.

என்று அவர் குறிப்பிட்டார். மைக்காத் தொழிலை எதிர்நோக்கும் உடனடிப் பிரச்சினைகளையும் நீண்டகாலப் பிரச்சினைகளையும் அந்தக் குழு ஆராயும் என்றும் அவர் தெரிவித்தார்.

பின்கண்ட விஷயங்கள் குழுவின் ஆய்வுக்கு விடப்பட்டன: மைக்கா கட்டுப்பாடு உத்தரவு யுத்தகால உற்பத்தி சம்பந்தமாக எவ்வாறு செயல்படுகிறது; நீண்டகாலக் கொள்கையின்பால் அது எத்தகைய விளைவுகளை ஏற்படுத்துகிறது; இந்த உத்தரவு தொடர் பாக அரசாங்கம் பிறப்பித்த எத்தகைய செயற்கட்டளைகளையும் மதிப்பாய்வு செய்தல்; உள்நாட்டு, வெளிநாட்டு விற்பனைமுறை, தர நிர்ணயம், ஏனைய நாடுகளின் மைக்கா வாணிகம் பிரதான மைக்கா உற்பத்திநாடு என்றமுறையில் இந்தியாவின் நிலையை எந்த அள வுக்குப் பாதிக்கிறது அல்லது பாதிக்கக்கூடும்; மைக்காவுக்குப் பதிலாக வேறு பொருள்களைப் பயன்படுத்துவது தொழில்துறை யில் மைக்காவின் பயனீட்டை எந்த அளவுக்கு அகற்றும் அல்லது அகற்றக்கூடும்; இந்த நாட்டில் செய்பொருள்களின் உற்பத்தியில் மைக்காவைப் பயன்படுத்துவதை அதிகப்படுத்துதல்; ஆராய்ச்சி மற்றும் வளர்ச்சி; மைக்கா தொழில் மற்றும் வாணிகத்தின் நலன் களைக் கண்காணிப்பதற்கு மத்திய மைக்கா குழுவோ அல்லது வேறு எந்த வகையிலோ ஒரு பொருத்தமான அமைப்பை நிறுவுதல்.

விசாரணைக்குழு ஒரு முழுநேரத் தலைவரையும், இரண்டு பகுதிநேர உறுப்பினர்களையும் - இவர்களில் ஒருவர் உள்நாட்டு வாணிகத்திலும் மற்றொருவர் அயல்நாட்டு வாணிகத்திலும் அனு பவமிக்கவர்களாக இருப்பார்கள்- ஒரு முழுநேர செயலாளரை யும் கொண்டதாக இருக்கும் என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார். இவர்களையன்றி, ஏழு மதிப்பீட்டார்களும் குழுவில் இடம் பெற்றி ருப்பார்கள்; இவர்களில் இருவர் பீகார் அரசாங்கத்தையும், இருவர் பீகார் மைக்கா வணிகர்களையும், ஒருவர் சென்னை மைக்கா வாணிகத்தையும் இன்னொருவர் ராஜபுதனத்தின் மைக்கா தொழி லாளர்களையும் பிரதிநிதித்துவப்படுத்துவர். இதல்லாமல், இரண்டு தொழில்நுட்ப ஆலோசகர்களும் குழுவுக்கு உதவி செய்வர். இவர் களில் ஒருவர் உதவி செய்வர். இவர்களில் ஒருவர் இந்திய மண் ணியல் ஆய்வுத்துறை இயக்குநர்; மற்றொருவர் விஞ்ஞான, தொழில் துறை ஆய்வு வாரியத்தின் பிரதிநிதி.

## தொழிலாளர்களின் சேமநலம்

மைக்காத் தொழில் துறையையும் அதில் பணியாற்றும் தொழிலாளர்களையும் பற்றி மாண்புமிகு டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் பேசும்போது, மைக்கா தொழில்துறைக்கு அரசாங்கம் உதவ வேண்டு மானால் தொழிலாளர்களை அத்துறை சுரண்டுவதை ஒருபோதும் அனுமதிக்காது என்று குறிப்பிட்டார். மைக்காத் தொழிலில் இந்திய ஏகபோகம்வகிப்பதற்கு மிகக்குறைந்த கூலிக்குத் தொழிலாளர்கள் கிடைப்பதே பிரதான காரணம் என்று கூறப்படுகிறது. இது உண்மை யானால், இது இத்தொழில் துறையையோ அல்லது அதில் பணி யாற்றும் தொழிலாளர்களையோ பாராட்டுவதற்குரிய விஷயமல்ல. மைக்கா தொழில் துறையை மேலும் வளர்த்து வலுப்படுத்தும் நடவடிக்கைகளை அரசாங்கம் மேற்கொள்ளவேண்டுமானால், அத்துறை அதன்கீழ்ப் பணியாற்றும் தொழிலாளர்களின் நலன்களைப் பாதுகாக்க வேண்டும் என்று அரசாங்கம் எதிர்பார்க்கிறது.

வாழ்க்கை நடத்தப் போதிய குறைந்தபட்ச ஊதியமும், சிறந்த வேலை நிலைமைகளும் தொழிலாளர்களுக்கு உத்தரவாதம் செய்யப் படவேண்டும் என்றும், அவர்களது சேமநலன்கள் பாதுகாக்கப்பட வேண்டும் என்றும் அரசாங்கம் விரும்புகிறது என்று டாக்டர் அம்பேத்கர் கூறினார். தொழிலாளர்களின் நலன்களைப் பாதுகாப் பதற்கு தொழில்துறையிடமிருந்து பணம் வசூலிக்கப்படும் பொதுக் கொள்கையை இந்தச் சந்தர்ப்பத்தில் அவர் பிரஸ்தாபித்தார்; நிலக்கரி மீது சேமநல வரி விதிக்கப்படுவதை இதற்கு உதாரணமாகக் குறிப் பிட்டார். தொழிலாளர்களின் சேமநலனுக்கு ஆகும் செலவை ஈடு கட்ட தொழில்துறை ஒரு விசேட வரியைச் செலுத்த முன்வர வேண்டும் என்று அவர் வலியுறுத்தினார்.

தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தமது உரையின் ஆரம் பத்தில் இந்திய மைக்கா தொழிலின் முக்கியத்துவத்தை எடுத் துரைத்தார்; மின்-தொழில்நுட்பத் தொழில்கள் மைக்காவைப் பெரிதும் சார்ந்திருக்கிறது என்பதையும், மைக்கா கேந்திர முக்கியத் துவம் வாய்ந்தபொருள், அது இல்லாமல் நாட்டைப் பாதுகாப்பது சாத்தியமில்லை என்பதையும் அவர் தெள்ளத்தெளிவாக விளக் கினார்; உலகின் மைக்கா தகடு உற்பத்தி 1913ல் 17,018 மெட்ரிக் டன்னாக இருந்தது; இதில் இந்தியாவின் உற்பத்தி மட்டும்14,958 மெட்ரிக் டன்னாகும். அதாவது ஏறத்தாழ 81.7 சதவீதம். அப்படி யிருந்தும் இந்தியாவின் தொழில் விவகாரங்களில் அது முக்கியத் துவம் எதையும் பெறவில்லை.

அவர் மேலும் கூறியதாவது: ''பருத்தி, ஜவுளி, சணல் தொழிலாளர்களைப் பற்றி நிறைய பேசப்படுவதைக் கேட்கிறோம்; ஆனால் இந்தியாவின் மைக்கா தொழில் பற்றிக் குறிப்பிடுவது மிகவும் அரிதாகி விட்டதைக் காண்கிறோம்.'' இதற்கு இரண்டு காரணங்களை டாக்டர் அம்பேத்கர் சுட்டிக்காட்டினார். முதல் காரணம், இந்தியாவில் உற்பத்தி செய்யப்படும் மைக்கா இங்கு பயன்படுத்தப்படுவதில்லை. அதுமுற்றிலும் ஏற்றுமதி செய்யப்படுகிறது. எனவே, இந்திய மக்கள் இது குறித்து எத்தகைய அக்கறையும் காட்டுவதில்லை. இத்தொழில் மூலம் கிட்டும் லாபங்கள் வெளி உலகிலிருந்து தான் பெறப்படுகின்றன. அதனைப் பயன்படுத்தும் மக்கள் மைக்கா தொழிலைப் பற்றிக் கவலைப்படுவதில்லை, ஆர்வம் காட்டுவதில்லை. இரண் டாவது காரணம் இத்தொழில் திறமையோடு சரிவர ஒழுங்கமைக்கப் படாத நிலைமையில் இருப்பதாகும். இத்தனைக்கும் இத்தொழில் அமோக வளர்ச்சியடைந்திருப்பதைக் காட்டும் பல புள்ளி விவரங்களை அவர் எடுத்துரைத்தார். இந்தியாவில் மைக்காத் தகடு உற்பத்தி 1905-ல் 1,714 மெட்ரிக் டன்னாக இருந்தது. 1987ல் 14598 மெட்ரிக் டன்னாக அதிகரித்தது. மழைக்காலம் அல்லாத வறண்ட பருவத்தில் மைக்கா சுரங்கங்களிலும் தொழிற்சாலைகளிலும் 60,000 தொழிலாளர்கள் வேலைக்கமர்த்தப் படுகின்றனர். இதுவல்லாமல், மைக்காத் தகடுகளை வீடுகளுக்கு எடுத்துச சென்று அவற்றை உடைக்கும் பணியில் ஏறத்தாழ 1,00,000 பேர் ஈடுபடுத்தப்படுகின்றனர். இத்தொழில் இவ்வாறெல்லாம் மிகுந்த வளர்ச்சியும் முன்னேற்றமும் அடைந்திருந்தபோதிலும் பஞ்சாலை மில்முதலாளிகள் சங்கம் அல்லது வடஇந்திய தொழில் முனைவோர் சம்மேளனம் போன்றவற்றுடன் ஒப்பிடக்கூடிய பெரிய அமைப்பு ஏதும் மைக்காத்தொழிலில் இல்லாதது வருந்தத்தக்கதாகும் என்று டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் குறிப்பிட்டார்.

## கொள்ளையோ கொள்ளை

இத்தகைய அவலநிலை உருவாகியிருப்பதற்கான காரணங்களை அவர் விரித்துரைக்கும்போது இத்தொழிலில் சம்பந்தப்பட்டவர்கள் பரஸ்பரம் பொறாமையிலும், நியாயமற்ற, அலங்கோலமான வாணிகப் போட்டியிலும் ஈடுபட்டிருக்கின்றனர். ஒருவரை ஒருவர் விழுங்கி ஏப்பமிடுவதில் குறியாக இருக்கின்றனர் என்று கூறினார். அவர்களிடையே கடும்போட்டி நிலவுகிறதே தவிர அணுவளவும் ஒத்துழைப்பு இல்லை. இத்தொழிலின் எதிர்காலத்தைப் பற்றி இந்திய அரசாங்கத்தின் தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் குறிப்பிட்டுக் கூறும்போது இத்தொழிலுக்கு உறுதியான, அசைக்க

முடியாத அடித்தளத்தை அமைத்துத் தருவதற்கு அவசியமான அனைத்தையும் செய்துதர இந்திய அரசாங்கம் தயாராக இருக்கிறது என்று தெரிவித்தார். இத்தொழிலை இரண்டு பிரச்சினைகள் எதிர் நோக்கி இருக் கின்றன என்பதை அரசாங்கம் நன்கு உணர்ந்துள் ளது. ஒன்று உடனடிப் பிரச்சினை; மற்றொன்று நீண்டகாலக் கொள்கை தேவைப்படும் இறுதியான பிரச்சினை. உடனடிப் பிரச் சினை மைக்கா கொள்ளையடிக்கப்பட்டு வருவது சம்பந்தப்பட்ட பிரச்சினையாகும். இதனைத் தடுப்பதற்கு திருடுதல், திருட்டுப் பொருளை வாங்குதல் சம்பந்தப்பட்ட வழக்கமான சட்டமே போதும் என்று சாதாரணமான சந்தர்ப்பங்களில் இந்திய அரசாங்கம் எண்ணி யிருக்க முடியும்; ஆனால் மைக்காவின் கேந்திர முக்கியத்துவத்தைக் கருதி, இத்தொழில்துறைக்கு தன்னால் முடிந்தளவு உதவிட அது ஆர்வத்தோடு இருக்கிறது. தற்போது நடைமுறையிலுள்ள மைக்கா கட்டுப்பாடு உத்தரவு சில குறைபாடுகளுடையதாக இருப்பினும் மைக்கா திருட்டுப் போவதை, கொள்ளையடிக்கப்படுவதைப் பெருமளவுக்கு அது குறைத்திருக்கிறது என்பதில் ஐயமில்லை. இத்தொழிலில் ஈடு பட்டிருப்போர் அனைவரது ஒத்துழைப்பையும் அவர் வேண்டினார்; இந்தக் கொள்ளையைத் தடுத்தநிறுத்த அவசிய மான நட வடிக்கைகள் மேற்கொள்வதற்கு அரசாங்கம் தயாராக இருக்கிறது என்று அவர் உறுதிகூறினார்.

## யோசனைக்கு வரவேற்பு

மைக்காத் தொழில் சம்பந்தமாக ஒரு விசாரணைக்குழு அமைக்கும் யோசனையை மாநாட்டில் பங்குகொண்ட இத்தொழிலின் பிரதிநிதிகள் ஒருமனதாக வரவேற்றனர். மைக்காத் தொழிலைப் பொறுத்த வரையில் யுத்த பிற்காலத்தில் அதனை மறுசீரமைக்கும் பிரச்சினை குறித்தும் விசாரணைக்குழு ஆராய வேண்டும் என்று கருத்துத் தெரி விக்கப்பட்டது.

ஆரம்பத்தில், இத்தொழிலின் உடனடித் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கு மேற்கொள்ளப்படவேண்டிய நடவடிக்கைகள்பற்றி மாநாடு விவாதித்தது. சில குறிப்பிட்ட வகையான மைக்காவை வாங்குவதையும் விற்பதையும் மாற்றுவதையும் தடை செய்தல், சான்றிதழ்கள் அல்லது அனுமதி வழங்குவதில் உசிதம்போல் நடந்து கொள்ளும் அதிகாரத்தை மாவட்ட குற்ற நடுவர்களுக்கும் மாகாண அரசாங்களுக்கும் அளித்தல், உரிமம் பெற்ற ஏஜெண்டுகளின் எண் ணிக்கை பெருகுவதைத் தடுத்தல், மைக்காவைச் சேமித்து வைக்கும்

கிடங்குகள் இருக்க வேண்டிய இடங்களை நிர்ணயித்தல், நிர்வாக அமைப்பை மேம்படுத்துதல் முதலியவை இந்த நடவடிக்கைகளில் அடங்கும்.

இத்தகைய நடவடிக்கைகளை மேற்கொள்வதற்கு வழிவகை செய்யும் பொருட்டு 1940 ஆம் வருட மைக்காக் கட்டுப்பாட்டு உத்தரவை கூடிய விரைவிலேயே திருத்த மத்திய அரசாங்கம் உத்தேசித்துள்ளது என்பது சுட்டிக்காட்டப்பட்டது.

மைக்காத் தொழிலில் பணியாற்றும் தொழிலாளர்களின் சேம நலத்தைப் பொறுத்த வரையில், மலிவு விலையில் தானியங்கள் வழங்குதல், அகவிலைப்படி உயர்வு, வீட்டு வசதி செய்து தருதல், குடிநீர் வழங்கீடு, மருத்துவ வசதிகள், ஊதிய அதிகரிப்பு போன்ற விஷயங்கள் மறுபரிசீலனை செய்யப்பட்டன. மைக்காத் தொழிலாளர்களுக்கு குறிப்பிட்ட முறையில் அடிப்படைச் சம்பளம் ஏதேனும் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறதா என்று தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் வினவினார்; மருத்துவ உதவி, வீட்டு வசதி, குடிநீர் வழங்கீடு முதலியவற்றின் முக்கியத்துவத்தை அவர் வலியுறுத்தினார். பெரும்பாலான தொழிலாளர்கள் கிராமங்களில் வசிக்கின்றனர் என்று தெரிவிக்கப்பட்டது. மைக்காத் தொழிலாளர்களுக்கு அவசியமான வசதிகளைச் செய்து தரும் பொருட்டு மைக்காவுக்கு விசேட வரி விதிக்க வேண்டும் என்ற யோசனை குறித்து ஒரு பொதுவான உடன்பாடு நிலவியது. மைக்கா சுரங்கங்களுக்கு நிலக்கரி வழங்கும் பொறுப்பு இந்திய மண்ணியல் ஆய்வுத் துறையினரிடம் ஒப்படைக்கப்பட வேண்டும் என்று ஒப்புக்கொள்ளப்பட்டது.

### மைக்கா சுரங்கத்திற்கு அம்பேத்கர் வருகை

திரு. மஜூம்தார், டாக்டர் கிளக், திரு. கிராஸ்பீல்டு ஆகியோருடன் ஏப்ரல் 28-ஆம் தேதி டாக்டர் அம்பேத்கர் ஒரு மைக்காச் சுரங்கத்துக்கும், மைக்காத் தொழிற்சாலைக்கும் வருகை தந்தார். சுரங்கத்தில் அமைக்கப்பட்டிருந்த ஓர் ஏணி மூலம் குழுவினர் சுரங்கத்திற்குள் சென்றனர். மைக்கா உற்பத்தியை அதிகரிக்கும் பொருட்டு அரசாங்கம் வழங்கிய காற்றழுத்தத் துரப்பணக் கருவிகளைக் கொண்டு துரப்பணப் பணிகளும் துளையிடும் பணிகளும் நடைபெறுவதை டாக்டர் அம்பேத்கர் பார்வையிட்டார். பிறகு மேற்பரப்புக்கு வந்ததும் தொழிலாளர்கள் குடியிருக்கும் சிறு குடில்களைச் சுற்றிப் பார்த்தார். இந்தக் குடியிருப்பில் ஓரிடத்தில் ஒரு மரத்தின் கீழ் குங்குமப்பூ நிறத்தில் முக்கோண வடிவில் கற்கள் வைக்கப்பட்டிருந்தன. தொழிலாளர்கள்

இக்கற்களை ''மைக்காத் தேவதைகளாக'' வழிபட்டு வருகிறார்கள் என்று டாக்டர் அம்பேத்கரிடம் தெரிவிக்கப்பட்டது. கொதர்மாவிலுள்ள தொழிற்சாலையில் பிரம்மாண்டமான கூடங்களில் ஆயிரக் கணக்கான தொழிலாளர்கள் - ஆண்களும் பெண்களும் - மைக்கா பாளங்களை பலகைகளாக செதுக்குதல், சிறுசிறு துண்டுகளாகப் பிளத்தல், வழுவழுப்பாக்குதல் போன்ற பல்வேறு பணிகளை மிக நுணுக்கமாகவும், தேர்ந்தத் திறத்தோடும் செய்து கொண்டிருப்பதை டாக்டர் அம்பேத்கரும் அவருடைய குழுவினரும் பார்த்தனர். ஓரிடத்தில் விமானங்களில் 'ஸ்பார்க் - பிளக்குகளில்' 'கண்டன்சர் பிலிம்களாக'ப் பயன்படுத்தும் பொருட்டு மைக்கா ஒரே அளவுள்ள மெல்லியத் தகடுகளாகச் செதுக்கப்பட்டுவந்தது. இன்னோர் இடத்தில், மைக்கானைட் தயாரிப்பதற்காக மைக்கா பாளங்கள் சிறுசிறு தகடுகளாக வெட்டப்படுவதை தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் கண்டார்.

## மைக்காவின் முக்கியத்துவத்தை விஞ்ஞானம் மிகுதியாக்கிவிட்டது

மைக்காத் தகடுகளை உற்பத்திசெய்வதில் இந்தியா உலகிலேயே தலையாய இடம் வகிக்கிறது. இத்தகைய மைக்கா பிரதானமாக பீகாரில் ஹஜாரிபாக், கயா மாவட்டங்களிலும் சென்னை மாகாணத்தில் நெல்லூரிலும் ஓரளவுக்கு ராஜபுதனத்தில் டோங்க் மற்றும் ஆஜ்மீர் - மேர்வாரா சமஸ்தானங்களிலும் உற்பத்தி செய்யப்படுகிறது. இன்னும் சொல்லப்போனால் மைக்கா உற்பத்தி சுமார் 80 சதவிகிதம் பீகாரிலிருந்தும், எஞ்சியவற்றில் பெரும்பகுதி நெல்லூரிலிருந்தும் கிடைக்கிறது என்றே கூறவேண்டும். ''வங்கத்தின் மாணிக்கம்'' என்று பெரிதும் புகழ்ந்துரைக்கும் அளவுக்கு பீகாரின் மைக்கா மிக உயர்ந்த தரத்தினைப் பெற்றிருக்கிறது. இரண்டாவதாக, ஆதிவாசிகள், அதிலும் பிரதானமாக பெண்கள் சாதாரண செதுக்குக் கத்திகளைக் கொண்டு மைக்காப் பாளங்களை தகடுகளாகச் செப்பமுறப் பிளக்கும் அற்புதக் கைத்திறனை எவரும் பாராட்டாமல் இருக்க முடியாது. இந்தத் திறமை மிக்க பணி நெல்லூரில் கத்தரிக்கோல்களைக் கொண்டு நடைபெறுகிறது. இந்தத் தேர்ச்சி மிக்க வேலைப்பாடு காரணமாக யுத்தத்துக்கு முந்தைய ஆண்டுகளில் ஏராளமான அளவில் மைக்கா பாளங்கள் இந்தியாவில் இறக்குமதி செய்யப்பட்டன. அவை அபூர்வமான முறையில் தகடுகளாகப் பிளக்கப்பட்டு ஏற்றுமதி செய்யப்பட்டு வந்தன. இந்தியாவில் மருத்துவத் துறையிலும் ஒப்பனைத் துறையிலும் நூற்றாண்டு நூற்றாண்டுக் காலமாக மைக்கா பயன்படுத்தப் பட்டு வந்திருக்கிறது.

பல்வகைக் கனிப்பொருள்கள் கொண்ட படுகைகளில் மைக்கா வெட்டியெடுக்கப்படுகிறது. சில சமயங்களில் 10 மீட்டர் குறுக்களவுள்ள பெரிய மைக்கா தகடுகள் கூடக் கிடைக்கின்றன. படிகக்கல், மணிக்கல் போன்ற கனிமப் பொருள்களுடன் இவை பெறப்படுகின்றன. பெரிலியம் தயாரிப்பதற்கான மூலப்பொருளாக ஆஜ்மீரிலிருந்து இது ஏற்றுமதி செய்யப்படுகிறது.

இந்தியாவிலிருந்து ஏற்றுமதி செய்யப்படும் மைக்காவில் பெரும்பகுதி பிரிட்டனுக்கும் அமெரிக்காவுக்கும் செல்லுகிறது.

விஞ்ஞான முன்னேற்றம் காரணமாக இந்த மூலப்பொருளின் முக்கியத்துவம் பெரிதும் அதிகரித்திருக்கிறது. இன்று மின் ஜனனிகளில் மின்வலியளவு கூடிவருகிறது; வானொலி, தொலைக்காட்சிப் பெட்டிகள் மேன்மேலும் பெரும் எண்ணிக்கையில் தயாரிக்கப் பட்டு வருகின்றன; மோட்டார் கார்கள், விமானங்களின் எண்ணிக்கை பெருகி வருகிறது; மின்னணுக்கள் கூடக் கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வரப்பட்டிருக்கின்றன; இத்தகைய நிலைமையில் ்மைக்கா பெருமளவுக்கு முக்கியத்துவம் பெற்று வருவது முற்றிலும் இயல்பே.

பின்கண்ட கருவிகளுக்கு மைக்கா மிக இன்றியமையாததாகி வருகிறது:

(1) மோட்டார்களிலும் ஜனனிகளிலும் மின்ஓட்டத்தை மாற்றும் பகுதிகள்;

(2) மோட்டார்களுக்கும் ஜனனிகளுக்குமான மின்விசை மாற்று V- வளையங்கள்;

(3) உயர் வெப்பமும் உயர் மின்னழுத்தமும் கொண்ட சுழலும் மின்சுருள்களான ஆர்மேட்சர்கள்;

(4) விமானங்களுக்கான மோட்டார் ஸ்பார்க் பிளக்குகள்;

(5) வானொலி டியூப்புகள்;

(6) டிரான்ஸ்பார்மர்கள்;

(7) வானொலி கண்டன்சர்கள்.



# 34

## [1]தொழிற்சங்கங்களை அங்கீகரிப்பது சம்பந்தமாக தொழிலாளர் நிரந்தரக் குழுவில் விவாதம்

தொழிலாளர் நிரந்தரக் குழுவின் ஐந்தாவது கூட்டம் ஜூன் 27ஆம் தேதி புதுடில்லியில் நடைபெற்றது. 1943ஆம் வருட இந்தியத் தொழிற்சங்கங்கள் (திருத்த) மசோதாவில் கண்டுள்ளபடி, தொழிற் சங்கங்களை அங்கீகரிப்பதைக் கட்டாயமாக்குவது பற்றியும், இதற் கான அங்கீகார குழுமங்களை நியமிப்பது குறித்தும் இந்தக் கூட்டத் தில் விவாதிக்கப்பட்டது. இந்திய அரசாங்கத்தின் தொழிலாளர் நலத் துறை உறுப்பினர் மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் கூட்டத் துக்குத் தலைமை வகித்தார்.

ஒரு தொழிற்சங்கத்தின் பிரதிநிதித்துவத் தன்மையை மதிப் பிடுவதற்கு எத்தகைய அளவுகோலைக் கடைப்பிடிப்பது என்பது குறித்துத் தொழில் அதிபர்கள் பிரதிநிதிகளும் தொழிலாளர் பிரதி நிதிகளும் தத்தமது கருத்துகளைத் தெரிவித்தனர்.

தொழில் அதிபர்களுக்கும் தொழிலாளர்களுக்கும் இடையே ஒத்துழைப்பையும் இணக்கத்தையும் வளர்ப்பதை தொழில் அதிபர் களின் பிரதிநிதிகள் பொதுவாக வரவேற்றபோதிலும், இந்த ஒத் துழைப்பு சுயவிருப்ப அடிப்படையில் அமைந்திருக்க வேண்டுமே தவிர, அது சட்ட அடிப்படையில் அமைந்திருக்கலாகாது என்று தொழில் அதிபர்கள் கருதியதாகத் தோன்றிற்று. தொழிற் சங்கங்கள் ஆரோக்கியமான முறையில் வளர்ச்சியடைந்து வரும் நிலைமையில், அவற்றுக்கு அங்கீகாரம் வழங்குவதில் சிரமம் ஏதும் இருக்காது என்று கூறப்பட்டது. ஆனால் தொழிலாளர்களின் பிரதிநிதிகள் வேறு பட்டதொரு நிலையை மேற்கொண்டனர்; தொழிற் சங்கங்களை அங்கீகரிப்பதைக் கட்டாயமாக்க வேண்டும் என்று வலியுறுத்தினர்; அதேசமயம், தொழிற் சங்கங்களுக்கு இப்போதிருப்பதை விட அதிகப்

1. இந்தியத் தகவல் ஏடு, ஜூலை 15, 1944, பக்கங்கள் 53 & 57.

படியான உரிமைகளும் சலுகைகளும் வழங்கும் வகையில் மசோதா திருத்தப்பட வேண்டும் என்று அவர்கள் கருத்துத் தெரிவித்தனர்.

## தொழில் தகராறுகள் குறித்த புள்ளிவிவரத் தொகுப்பு

தொழில் தகராறுகள் குறித்த புள்ளி விவரங்களைத் தொகுப்பதில் ஒரே சீரான முறையைக் கடைப்பிடிக்கும் பொருட்டும், இவ்வகையில் இந்தியாவின் மாகாணங்களை ஏனைய நாடுகளுடன் ஒப்புநோக்கும் விதத்தில் அதனை வயப்படுத்தும் பொருட்டும் தொழில் தகராறுகளின் இப்போதைய புள்ளிவிவரத் தொகுப்பை மேம்படுத்துவது பற்றி முன்வைக்கப்பட்ட ஒரு யோசனை இக்கூட்டத்தில் விவாதிக்கப்பட்டது. தொழில் தகராறுகள் குறித்த புள்ளி விவரங்களைப் பெறுவதற்கு 1942 ஆம் வருடத் தொழில்துறைப் புள்ளி விவரத் தொகுப்புச் சட்டம் மாகாண அரசாங்கங்களுக்கு அதிகாரம் அளித்திருப்பதை நன்கு பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்று தெரிவிக்கப்பட்டது. இது, சர்வதேச தொழிலாளர் அமைப்பு பின்பற்றும் நடைமுறையை அனுசரித்ததாக இருக்கும் என்றும் கூறப்பட்டது. இந்த யோசனை குறித்து பொது உடன்பாடு நிலவிற்று.

தொழிலாளர்களின் எண்ணிக்கை எத்தகையதாக இருப்பினும் அதனைக் கணக்கிலெடுத்துக் கொள்ளாமல் எல்லாத் தொழிலதிபர்களுக்கும் 'நோட்டீஸ்' அனுப்புவதா அல்லது பத்தும் அதற்கு மேற்பட்ட தொழிலாளர்களைப் பணிக்கு அமர்த்திக் கொண்டிருக்கும் தொழிலதிபர்களுக்கு மட்டுமே 'நோட்டீஸ்' அனுப்புவதா என்பது பற்றியும் கூட்டம் விவாதித்தது. உத்தேச திட்டத்தின்படி புள்ளி விவ ரங்களைச் சேகரிப்பதற்கான நகல் விதிகளும் படிவங்களும் குழுவின் உறுப்பினர்களிடையே விநியோகிக்கப்பட்டன.

## துணி ஆலைகளுக்கு வருகை

கூட்டம் முடிவடைந்த பின்னர் டாக்டர் பி.ஆர். அம்பேத்கரும் தொழிலாளர் நிரந்தரக் குழுவின் உறுப்பினர்களும் சர் ஸ்ரீராமின் அழைப்பின் பேரில் டில்லி துணி ஆலையைச் சுற்றிப் பார்த்தனர். அங்கு நடைபெற்றுவரும் பல்வேறு உற்பத்தி முறைகளையும், நிர்வாகம் மேற்கொண்டுவரும் தொழிலாளர் நலப் பணிகளையும் பார்வையிட்டனர். சர் ஸ்ரீராம் இக்குழுவினரை தொழிலாளர்களின் குடியிருப்புகளுக்கு அழைத்துச் சென்றார்; அங்கு செய்து தரப்பட்டிருக்கும் சுகாதார ஏற்பாடுகளையும் மற்றும் குடிநீருக்கும் குளிப்பதற்கும் செய்துதரப்பட்டுள்ள வசதிகளையும் பற்றி விளக்கமாக

எடுத்துரைத்தார். அந்தத் தொழிலாளர் குடியிருப்பில் ஒரு பள்ளிக் கூடமும், மருந்தகமும், நூலகமும் உள்ளன. நூலகத்தில் வைக்கப் பட்டிருந்த வானொலிப் பெட்டி டில்லி அகில இந்திய வானொலி ஒலிபரப்பிய ஒரு திரைப்படப் பாடலை அஞ்சல்செய்து கொண் டிருந்தது.

குழுவினர் ஒரு நீச்சல் குளத்தையும் பார்வையிட்டனர். இப்போதுதான் நீந்தக் கற்றுக்கொள்பவர்களுக்கும், நீச்சலில் பெரிதும் தேர்ச்சி பெற்றவர்களுக்கும் ஏற்ற முறையில் அது அமைந்திருந்தது. தொழிலாளர்களின் விளையாட்டு மன்றத்தில் கபடி போட்டி நடைபெற்றுக் கொண்டிருந்தது. அந்த மன்றத்திற்கு அருகிலேயே ஒரு நாடக அரங்கு அமைந்திருந்தது. அதில் தொழிலாளர்களே அவ் வப்போது வரலாற்று நாடகங்களையும் ஏனைய நாடகங்களையும் அரங்கேற்றி வருவதாகக் கூறப்பட்டது.

மத்திய அரசாங்கம், மாகாண அரசாங்கங்கள், இந்திய சமஸ் தானங்கள், அகில இந்தியத் தொழிலதிபர்கள் கழகம், இந்தியத் தொழிலதிபர்கள் சம்மேளனம், அகில இந்தியத் தொழிற் சங்க காங்கிரஸ், இந்தியத் தொழிலாளர் சம்மேளனம், மற்றும் இதர பல தொழிலதிபர்கள் மற்றும் தொழிலாளர் அமைப்புகள் முதலிய வற்றைப் பிரதிநிதித்துவப்படுத்தும் பின்கண்ட பிரதிநிதிகளும் ஆலோ சகர்களும் கூட்டத்தில் பங்கெடுத்துக் கொண்டனர்:

திரு. எச்.சி. பிரியோர், செயலாளர், தொழிலாளர் நலத்துறை மற்றும் திரு. எஸ். லால் கூட்டுச் செயலாளர் (மத்திய அரசாங்கம்) : சர்தார் பகதூர் இஷர் சிங், தொழிலாளர் துறை ஆணையர், நாகபுரி, திரு. சி.கே. விஜயராகவன், ஐ.சி.எஸ்., தொழிலாளர் துறை ஆணையர், சென்னை (சென்னை மற்றும் மத்திய மாகாணங்கள், பேரார்); திரு. எஸ்.வி. ஜோஷி, தொழிலாளர் துறை ஆணையர், திரு. வி.பி. கெனி, தொழிலாளர் துறை உதவி ஆணையர், (பம்பாய்); திரு. ஏ. ஹக்ஸ், ஐ.சி.எஸ்., தொழிலாளர் துறை ஆணையர், வங்காளம்; திரு. ஜே.சி. பெட்லே, ஐ.சி.எஸ்., தொழிலாளர் துறை ஆணையர் (ஐக்கிய மாகாணங்கள்); திரு. எம்.எச். மகமூத், தொழில்துறை இயக்குநர், பஞ்சாப், பி.கே. கவுல், ஐ.சி.எஸ்., அரசாங்கச் செயலாளர், மின்விசை மற்றும் தொழில் துறை, பஞ்சாப் (பஞ்சாப், இந்து, வட மேற்கு எல்லைப்புற மாகாணம்); திரு. ஏ.எஸ். ராமச்சந்திரன் பிள்ளை,

தொழிலாளர் துறை ஆணையர், அசாம் மற்றும் தலைமை தொழிற் சாலைகள் மேலாளர், ஒரிசா (அசாம் மற்றும் ஒரிசா); திரு. கே.எஸ். ஸ்ரீகண்டன், தொழில்கள் துறை இயக்குநர், இந்தூர் திரு. பி.எஸ். தேசாய், தொழிலாளர் நலத்துறை துணை இயக்குநர், பரோடா மற்றும் திரு. என்.டி. குப்தா, தொழிலாளர் நல அதிகாரி, குவாலியர் (பரோடா, இந்தூர், குவாலியர் சமஸ்தானங்கள்); இ.ஐ. சாக்கோ தொழில்கள் துறை இயக்குநர் மற்றும் தொழிலாளர் நலத்துறை ஆணையர், திருவாங்கூர் மற்றும் திரு. எம்.ஏ. மிர்ஜா, சமஸ்தான தொழிலாளர் நல அதிகாரி, ஹைதராபாத், தக்காணம் (மைசூர், திருவாங்கூர் சமஸ் தானங்கள்); மிர் மக்பூல் மகமுத் (சமஸ்தான மன்னர்கள் சபை); சர் ஸ்ரீராம், திரு. கஸ்தூரிபாய் லால் பாய் மற்றும் திரு. டி.ஜி. முல்ஹெர்கர், செயலாளர் அகில இந்தியத் தொழிலதிபர்கள் அமைப்பு; திரு. லச். எஸ். டவுன், திரு. சி.சி. மில்லர் எம்.எல்.ஏ., திரு. ஜே. லாட்டிமர் மற்றும் டி.எஸ். சுவாமிநாதன், செயலாளர், அகில இந்திய தொழி லதிபர்கள் சம்மேளனம்; திரு. எஸ்.எஸ். மிராஜ்கர், திரு. வி. சக்கரை செட்டியார், திரு. காஜி முஸ்தபா, திரு. வி.ஜி. பால்வய்க் (அகில இந்தியத் தொழிற் சங்க காங்கிரஸ்); பேராசிரியர் பி.என். பானர்ஜி, திரு. ஜம்னாதாஸ் எம். மேத்தா, திரு. அப்துல் சத்தார், திரு. வி.ஜி. கார்னி (இந்தியத் தொழிலாளர் சம்மேளனம்); ராய் பகதூர் சியாம் நந்தன் சகாயா (ஏனைய தொழிலதிபர்களின் பிரதிநிதி); திரு. எஸ்.சி. ஜோஷி, எம்.எல்.சி. மற்றும் பி.டி. தேவரா (ஏனைய தொழிலாளர் களின் பிரதிநிதிகள்).



# [1]தேர்ச்சி பெற்ற தொழிலாளர்களுக்கு யுத்தப் பிற்காலத்தில் வேலை வாய்ப்பு

''தொழில் நுட்ப, விஞ்ஞானப் பயிற்சிக்கு வழிவகை செய்யாத, நாட்டின் வருங்கால வளர்ச்சிக்கான எந்தத் திட்டத்தையும் முழு நிறைவானதாகக் கருத முடியாது. இது எந்திரங்கள் யுகம்; தொழில் நுட்ப, விஞ்ஞானப் பயிற்சியில் மிக உன்னத நிலையை எய்தும் நாடுகள்தான் போர் முடிவடைந்ததும் தமது மக்களின் வாழ்க்கைத் தரத்தை மேம்படுத்தும் போராட்டத்தில் தாக்குப்பிடித்து நிற்க முடியும். இந்த உண்மையை இந்திய அரசாங்கம் கணக்கிலெடுத்துக் கொள்ளத் தவறிவிடவில்லை; தொழில்நுட்பப் பயிற்சித் திட்டம் தொடர்ந்து செயல்படும்படியாக அது பார்ததுக் கொள்ளும்; அது மட்டுமல்ல, இத்திட்டத்தை நாடு முழுவதும் விஸ்தரிப்பதற்கும், நாட்டின் கல்வி அமைப்பில் அது ஒரு நிரந்தர இடத்தைப் பெறு வதற்கும் அரசாங்கம் முயற்சி எடுத்துக்கொள்ளும். ஆகஸ்டு 24ஆம் தேதி கல்கத்தாவில் நடைபெற்ற தொழில்நுட்பப் பயிற்சித் திட்ட ஆலோசனைக் குழுக் கூட்டத்தில் உரை நிகழ்த்தும்போது இந்திய அரசாங்கத்தின் தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் மேற்கண்டவாறு குறிப்பிட்டார்.

சிவில் தொழில் துறையின் தேவைகளைப் பூர்த்தி செய்யும் வகையில் தொழில் நுட்பப் பயிற்சித் திட்டத்தைத் திருத்தியமைப் பதை ஆராயும் பொருட்டு நியமிக்கப்பட்ட இந்தக் குழுவில் பொறி யியல் அமைப்புகள், அகில இந்திய தொழிலதிபர்கள் சங்கம், இந்தியத் தொழிலதிபர்கள் சம்மேளனம், வங்காள வாணிகக் கழகம், வழங்கீடுத் துறை, ரயில்வே வாரியம், பொறியியல் கழகம் முதலிய வற்றின் பிரதிநிதிகள் இடம்பெற்றிருந்தனர். இக்கூட்டம் மூன்று நாள் நடைபெற்றது.

### டாக்டர் அம்பேத்கரின் உரை

கூட்டத்தில் தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் நிகழ்த்திய உரையின் முழு வாசகம் வருமாறு:

1. இந்திய தகவல் ஏடு, செப்டம்பர் 15, 1944, பக். 274 - 77.

பெருந்தகையாளர்களே, இன்று உங்களை இங்கு வரவேற்பதற்கு மிகுந்த மகிழ்ச்சி அடைகிறேன். சிரமம் பாராது இந்தக் கூட்டத்தில் கலந்து கொண்ட உங்கள் ஒவ்வொருவருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்நாட்களில், நமக்கு எத்தனை எத்தனையோ இயல்பான கடமைப் பொறுப்புகள் இருக்கின்றன. இவற்றுடன் புதிய பொறுப்புகள் சேரும்போது நமது சுமை கூடவே செய்யும். இருப்பினும் இத்தகைய வேலைச் சுமைகளுக்கு இடையேயும், நாட்டின் மாறிவரும் தேவைகளுக்கு ஏற்ப தொழில் நுட்பப் பயிற்சித் திட்டத்தைப் புனரமைப்பதற்கு அரசாங்கத்துக்கு உதவி செய்ய முன்வந்தமைக்காக உங்களுக்கு நன்றி தெரிவிக்கக் கடமைப்பட்டிருக்கிறேன்.

இந்த ஆலோசனைக் குழுவின் பணிக்கு நான் எத்தகைய மிகுந்த முக்கியத்துவம் அளிக்கிறேன் என்பதை நான் சொல்லத் தேவையில்லை. கடைசி நிமிடத்தில் சில சிக்கல்கள் ஏற்பட்ட போதிலும்கூட எப்படியும் உங்களைச் சந்திக்க வேண்டும், உங்கள் முயற்சிகளில் நீங்கள் வெற்றிபெற விழைய வேண்டும் என்ற உறுதியோடு நான் கல்கத்தாவுக்கு வந்திருப்பதே எனது கூற்றின் வாய்மைக்கு, நேர்மைக்குச் சான்று பகரும் என்பதில் ஐயமில்லை.

நமது தொழில்நுட்பப் பயிற்சித் திட்டத்தின் எதிர்காலம் குறித்து ஆராய்வதற்காக இன்று இங்கே கூடியிருக்கிறீர்கள். படைகளின் தொழில் நுட்பத் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காக ஓர் அவசர நடவடிக்கையாக இத்திட்டம் மேற்கொள்ளப்பட்டது என்பதையும், இதன் முன்னர் கேட்டிராத அளவுக்கு ஓரளவு - பயிற்சி பெற்ற மனித சக்தியை அது இந்தியாவுக்கு வழங்கியுள்ளது என்பதையும் நீங்கள் அறிவீர்கள்.

தொழில் நுட்பப் பயிற்சித் துறையில் சாதிக்கப்பட்டிருக்கும் பணியின் பரிமாணத்தை ஓரளவு நீங்கள் புரிந்து கொள்ளும் பொருட்டு தொழில் நுட்பப் பயிற்சித் திட்டத்தின் வரலாற்றை அதன் ஆரம்பக் கட்டங்களிலிருந்து சுருக்கமாக எடுத்துரைப்பது உசிதமாக இருக்கும் என்று கருதுகிறேன். படைகளுக்குத் தொழில்நுட்ப ஊழியர்களின் பற்றாக்குறை பெருமளவுக்கு நிலவி வந்தது; இந்த முக்கிய இடர்ப்பாட்டை அகற்றும் பொருட்டே மூன்றரை ஆண்டுகளுக்கு முன்னர் தொழில்நுட்பப் பயிற்சித் திட்டம் ஆரம்பிக்கப்பட்டது. ஒரு குறிப்பிட்ட காலக்கெடுவுக்குள் சுமார் 3,000 பேரைப் பயிற்றுவிக்கும் குறிக்கோளோடு இந்தத் திட்டத்தைத்

தொடங்கினோம். ஆனால் இரண்டு ஆண்டுகளுக்குள்ளேயே இந்த இலக்கை 48,000க்கு உயர்த்த வேண்டிய அவசியம் ஏற்பட்டது. இதன் பொருட்டு 394 பயிற்சிக் கேந்திரங்கள் தேவைப்பட்டன. 1942 இறுதிக்குள்ளாக பயிற்சிபெற்ற 54,000 ஊழியர்களை ராணுவத் துக்கு வழங்கியுள்ளோம். 1944 ஆம் ஆண்டு ஜூன் மாதத்துக்குள் ளாக 75,000 பயிற்சியாளர்களை உருவாக்கினோம். இவர்களில் 63,000 பேர் பாதுகாப்புத் துறையின் தொழில்நுட்பப் பிரிவுகளில் சேர்ந்தனர்; 3,000 பேர் ராணுவ தளவாடங்கள் உற்பத்தித் தொழிற் சாலைகளில் பணியாற்றச் சென்றனர். இந்தப் பணியை நிறைவேற்ற எடுத்துக் கொள்ளப்பட்ட கால அளவைக் கருத்திற் கொண்டு பார்க்கும் போது அது ஒரு சாதாரண சாதனையல்ல என்பதை நீங்கள் ஒப்புக் கொள்வீர்கள் என்று நம்புகிறேன்.

யுத்தத்தின் விளைவாக ராணுவத்துக்கு ஏற்பட்ட தேவை களைப் பூர்த்தி செய்வதற்காகவே இந்தத் தொழில் நுட்பப் பயிற்சித் திட்டம் தொடங்கப்பட்டது என்பதை ஏற்கெனவே குறிப்பிட்டேன். யுத்தம் முடிவடையும் தறுவாயில் இருப்பதை நீங்கள் அனைவரும் காணுகிறீர்கள். இதனால் தொழில் நுட்ப ஊழியர்கள் சம்பந்தமாக ராணுவத்துக்குள்ள தேவை குறையும் என்பது தெளிவு.

இத்தகைய நிலைமையில், யுத்தத்தின் முடிவில் நம் முன்னால் இரண்டு கேள்விகள் எழக்கூடும். முதல் கேள்வி; ஏற்கெனவே தொழில் நுட்பப் பயிற்சி பெற்று ஏராளமானோர் ராணுவத்தில் சேவை செய்து வருகின்றனர்; யுத்தம் முடிந்ததும் இவர்கள் விரைவிலேயே ராணுவ சேவையிலிருந்து விடுவிக்கப்பட்டு, வேலை வாய்ப்புகள் பெறக் காத்திருப்பார்கள்; இவர்கள் விஷயத்தில் நாம் என்ன செய்யப் போகிறோம்? இரண்டாவது கேள்வி: இந்தத் தொழில் நுட்பப் பயிற்சித் திட்டம் குறித்து நாம் என்ன முடிவெடுக்கப் போகிறோம்?

இந்தத் தொழில் நுட்பத் திட்டத்தைக் கைவிட அரசாங்கம் முடிவு செய்து விட்டதாகச் சிலர் கருதுகின்றனர். இது முற்றிலும் தவறான கருத்தாகும். ஆனால் அதே சமயம் ஒரு விஷயத்தை இங்கு மூடி மறைக்க நான் விரும்பவில்லை: அதாவது சில பயிற்சிக் கேந்தி ரங்களை அரசாங்கம் மூடிவிட்டது என்பது உண்மையே. 45,000 பயிற்சியாளர்களைப் பயிற்றுவிக்கும் திறன் படைத்த 400 பயிற்சிக் கேந்திரங்கள் 1942ல் இருந்தன; ஏறத்தாழ 32,000 பேரைப் பயிற்று விக்கக் கூடிய 170 பயிற்சிக் கேந்திரங்கள் இப்போது உள்ளன. இதற்குப் பல காரணங்கள் உண்டு. அவற்றில் இரண்டு பிரதான

காரணங்களை மட்டும் இங்கு குறிப்பிட விரும்புகிறேன். முதலாவது காரணம் தொழில் நுட்பப் பயிற்சியாளர்கள் சம்பந்தமாக ராணுவத் துக்குள்ள தேவை இப்போது குறைந்து விட்டது. இரண்டாவது காரணம் சிறு பயிற்சிக் கேந்திரங்களைப் பராமரிப்பதற்கு மிக அதிக மாக செலவு பிடிக்கிறது.

## அரசாங்கத்தின் உத்தேசம்

நிலைமையைச் சமாளிப்பதற்கு அவசியமானவற்றை மட்டுமே அரசாங்கம் செய்துள்ளது என்பதையே இந்த நடவடிக்கைகள் யாவும் காட்டுகின்றன. தொழில் நுட்பப் பயிற்சித் திட்டத்தைக் கைவிடும் உத்தேசம் ஏதும் அரசாங்கத்துக்கு இல்லை என்பதையே இவை புலப் படுத்துகின்றன. இத்தகைய உத்தேசம் ஏதும் இருந்திருக்குமானால் அரசாங்கம் இந்த ஆலோசனைக் குழுவை அமைத்திருக்காது. தொழில் நுட்ப, விஞ்ஞானப் பயிற்சிக்கு வழிவகை செய்யாத, நாட்டின் வருங்கால வளர்ச்சிக்கான எந்தத் திட்டத்தையும் முழு நிறைவான தாகக் கருத முடியாது. இது எந்திரங்கள் யுகம்; தொழில் நுட்ப, விஞ்ஞானப் பயிற்சியில் மிக உன்னத நிலையை எய்தும் நாடுகள் தான் போர் முடிவடைந்ததும் போராட்டத்தில் தாக்குப்பிடித்து நிற்க முடியும். இந்த உண்மையை இந்திய அரசாங்கம் கணக்கி லெடுத்துக் கொள்ளத் தவறிவிடவில்லை; தொழில் நுட்பப் பயிற்சித் திட்டம் தொடர்ந்து செயல்படும்படியாக அது பார்த்துக் கொள்ளும்; அது மட்டுமல்ல, இத்திட்டத்தை நாடு முழுவதும் விஸ்தரிப்பதற் கும், நாட்டின் கல்வி அமைப்பில் அது ஒரு நிரந்தர இடத்தைப் பெறுவதற்கும் அரசாங்கம் முயற்சி எடுத்துக் கொள்ளும்.''

## பயிற்சியாளர்களைத் தொழில்துறை ஈர்த்துக் கொள்ள வேண்டும்

இதுதான் அரசாங்கத்தின் குறிக்கோள் என்றாலும் இத்திட்டம் வெற்றி பெறுவது பயிற்சியாளர்கள் வேலைவாய்ப்புப் பெறும் சாத்தியக் கூறுகளையே முற்றிலும் பொறுத்துள்ளது. பயிற்சியாளர் கள் உரிய முறையில் பயிற்சி பெற்ற பிறகு வேலை வாய்ப்புப் பெற முடியாதுபோனால், இத்தொழில் நுட்பப் பயிற்சித் திட்டம் படு தோல்வியே அடையும். இந்தப் பிரச்சினைக்கான தீர்வு பயிற்சிக் கேந்திரங்களிலிருந்து வெளிவரும் பயிற்சியாளர்களின்பால் தொழில் துறை கடைப்பிடிக்கும் போக்கையே அறவே சார்ந்திருக்கும். இத் திட்டத்தின் முழுக் கதிப்போக்கும் இதனையே பொறுத்துள்ளது. பயிற்சியாளர்களை வேலைக்கமர்த்திக்கொள்ள தொழில்துறை

மறுக்குமானால், தொழில்நுட்பப் பயிற்சியில் எவரும் எத்தகைய அக்கறையும் எடுத்துக்கொள்ள மாட்டார்கள்; அப்போது பயிற்சிக் கேந்திரங்களை மூடுவதைத் தவிர வேறு வழியில்லை. நமது பயிற்சி யாளர்களை ஈர்த்துக் கொள்வதில் சிவில் தொழிற்சாலைகள் ஆர்வம் காட்டினால் மட்டுமே இந்தத் துரதிர்ஷ்டவசமான விளைவைத் தடுத்து நிறுத்த முடியும்.

உபரியாக உள்ள 6,000 பயிற்சியாளர்களில் 3,000 பேர்களை மட்டுமே சிவில் தொழில் துறை எடுத்துக் கொண்டுள்ளது. தேர்ச்சி பெறாத தொழிலாளர்களை வேலைக்கமர்த்திக் கொள்வதையே இந்தத் தொழில் நிலையங்கள் விரும்புகின்றன; வேலை செய்து வரும்போது நாளடைவில் இவர்கள் தேவையான திறமையை யும், பயிற்சியையும் பெற்றுவிடுவார்கள் என்று இவை நம்புகின்றன. நமது தொழில்நுட்பப் பயிற்சிக் கேந்திரங்களில் பயின்று வெளிவரும் பயிற்சியாளர்களை வேலைக்கமர்த்திக் கொள்ள மறுப்பதற்குப் பல காரணங்கள் உண்டு. நாம் அளிக்கும் பயிற்சி போதுமானதாக இல்லை என்று முறையீடுகள் எழுந்திருப்பதைப் பார்க்கிறேன். நமது திட்டத்தின்படி அளிக்கப்படும் பயிற்சியை விடவும் மிக உயர்ந்த பயிற்சி பெற்ற ஊழியர்களே தங்களுக்கு வேண்டும் என்று சிவில் தொழில் நிலையங்கள் வலியுறுத்துகின்றன. யுத்தத்திற்கு முன்னர் ஐந்தாண்டுக்காலம் பிடிக்கக் கூடிய பயிற்சியை போர் நிர்ப்பந்தம் காரணமாக எட்டே மாதங்களில் தருவதற்கு நாங்கள் முயற்சி எடுத்துக் கொண்டோம் என்பது உண்மையே.

எனினும், சிவில் தொழில் துறையின் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கு இந்தப் பயிற்சி ஐந்தாண்டுக் காலம் நீடிக்க வேண்டிய அவசியம் இல்லை என்பது என் கருத்து. ஏனைய நாடுகளில் போர்க் காலத் தொழில் நுட்பப் பயிற்சித் திட்டத்தின் அனுபவம் எதைக் காட்டுகிறது? ஓரளவு தீவிர பயிற்சி பெற்ற தொழிலாளர்களைப் பெரும்பாலான தொழில்களுக்கு வெகுவிரைவிலேயே பயிற்றுவித்து விட முடியும் என்பதையே அது புலப்படுத்துகிறது.

## தொழில்துறைக்குள்ள பொறுப்பு

எனவே, தொழில் நுட்பப் பயிற்சித் திட்டத்தின்படி அளிக்கப் படும் பயிற்சியோடு வேலை செய்யும் இடத்திலேயே மேற்கொண்டு குறிப்பிட்ட தனிவகைப்பட்ட பயிற்சி அளிக்கப்படுமானால் அது சிவில் தொழில் துறையின் தேவைகளைப் பூர்த்தி செய்யக்கூடியதாக

இருக்கும். எனினும், நமது பயிற்சித் திட்டத்தில் சில குறைபாடுகள் இருக்கின்றன என்பதை நான் ஒப்புக் கொள்ளத் தயாராக இருக்கிறேன். நமது பயிற்சியாளர்களைத் தொழில்துறைக்கு ஏற்றவர்களாக ஆக்குவதற்கு பயிற்சித் திட்டத்தில் ஏதேனும் மாற்றங்கள் செய்ய வேண்டுமானால் அதற்கும் இணங்க சித்தமாக இருக்கிறேன். ஆனால் நமது பயிற்சியாளர்களை வேலையில் அமர்த்த தொழில்துறை இணங்கினாலொழிய தொழில்நுட்பப் பயிற்சித் திட்டம் இந்த நாட்டில் வெற்றிபெறும் என்று நம்புவதற்குச் சாத்தியமில்லை. எனவே தனது தோள்களில் மிக முக்கியமான பொறுப்பு சுமர்ந்துள்ளது என்பதை தொழில்துறை உணர்வது அவசியம்.

தொழில்துறையின் தேவைகளை என்னைவிட நீங்கள் நன்கு அறிவீர்கள். இங்கு நான் கூறக்கூடியதெல்லாம் இதுதான்: இந்தத் திட்டம் வெற்றிபெற வேண்டுமானால் அதன் எதிர்காலத்தை நிர்ணயிப்பதில் தொழிலதிபர்களும் தொழிலாளர்களும் பரஸ்பரம் ஒத்துழைக்க வேண்டும். இது விஷயத்தில் இனியும் நாம் கால தாமதம் செய்யக்கூடாது; இல்லையென்றால் நாம் யுத்தத்தில் வெற்றிவாகை சூடினாலும் சமாதானத்துக்காக ஆக்கப்பணிகளுக்காக எதையும் செய்யாதவர்களாகவே ஆவோம்.

நான் ஏற்கெனவே குறிப்பிட்டது போன்று நாம் இரண்டு பிரச்சினைகளைச் சமாளிக்க வேண்டியவர்களாக இருக்கிறோம்: (1) யுத்தம் முடிந்ததும் ராணுவத்திலிருந்து விடுவிக்கப்படும் பயிற்சியாளர்களுக்கும், நிர்ணயிக்கப்பட்ட பயிற்சியைப் பூர்த்தி செய்தவர்களுக்கும் வேலைவாய்ப்பு அளித்தல், (2) யுத்தப் பிற்காலத் தொழில்துறைச் சீரமைப்புத் திட்டத்தின் ஒரு பகுதியாக தொழில்நுட்பப் பயிற்சித் திட்டத்தை மறுசீரமைப்பு செய்தல். இவை இரண்டும் வெவ்வேறான பிரச்சினைகள்; இவற்றைத் தனித்தனியாகச் சமாளிக்க எண்ணியுள்ளோம். எனவேதான் இரண்டு கட்டங்களாக இப்பிரச்சினைகளை அணுகுவது உசிதமெனத் தீர்மானித்திருக்கிறோம். இரண்டாவது கட்டத்தைப் பொறுத்தவரையில் பின்வரும் கேள்வி எழுகிறது: சிவில் தொழில் துறையின் இன்றைய தேவைகளை முற்றிலுமாகவும் பூரணமாகவும் பூர்த்தி செய்யக் கூடிய வகையில் நமது தொழில் நுட்பப் பயிற்சித் திட்டத்தில் எத்தகைய மாற்றங்கள் செய்யப்பட வேண்டும்? யுத்தப் பிற்காலத்தில் நாட்டின் தொழில் வளர்ச்சிக்குத் தேவையான பயிற்சி பெற்ற தொழில்நுட்ப ஊழியர்களை வழங்கும் நீண்டகாலக் கொள்கை சம்பந்தப்பட்டதாகும் இந்தப் பிரச்சினை.

## தேர்ச்சி பெற்ற தொழிலாளர்களை வேலைக்கு அமர்த்துதல்

மற்றொருபுறம் நாம் பரிசீலிக்க வேண்டிய பிரச்சினை முதல் கட்டம் சம்பந்தப்பட்டதாகும்; நமது பயிற்சிக் கேந்திரங்களில் பயிற்றுவிக்கப்பட்டு, தற்போது ராணுவத்தில் சேவை செய்து கொண் டிருக்கின்ற, போரின் முடிவில் வேலையிலிருந்து விலக்கப்படவிருக் கிற நமது ஆயிரக்கணக்கான தேர்ச்சி பெற்ற தொழிலாளர்களுக்கு மறுவாழ்வு அளிக்கும் பிரச்சினையே இது. இவர்களை வேலைக்கு அமர்த்திக் கொள்வதில் தொழில்துறைக்கு சிரமம் ஏதும் இருக்காது என்றே எதிர்பார்க்கிறோம்; அதிலும், யுத்தப் பிற்காலத்தில் சிவில் தொழில் துறை மேன்மேலும் விரிவடையும், இதனால் தொழில் நுட்பப் பயிற்சியாளர்கள் பெரும் எண்ணிக்கையில் தேவைப்படுவர் என்று நம்புகிறோம்.

எனினும் உடனடியாக ஒரு பிரச்சினை நம்மை எதிர்நோக்கு கிறது. அது இதுதான்: நமது தொழில் நுட்பப் பயிற்சியாளர்களை அமைதிக்கால தொழில்துறைக் கட்டமைப்புக்கு எவ்வாறு தகுதியான வர்களாக ஆக்குவது? இது சம்பந்தப்பட்ட சிரமங்களைப் பரிசீலித்து, அவற்றைச் சமாளிப்பதற்கு முன்கூட்டியே திட்டமிடுவதற்கு நாம் விரும்புகிறோம். இதில் வெற்றியடைய வேண்டுமானால், நமது தொழில் நுட்ப ஊழியர்களுக்கு மேற்கொண்டு எத்தகைய பயிற்சி அளிக்க வேண்டும். பாடத் திட்டங்களில் எவற்றை மாற்ற வேண்டும், எவற்றைச் சேர்க்க வேண்டும் அல்லது ஏதேனும் கூடுதல் பயிற்சி அளிப்பது அவசியமா என்பதை எல்லாம் நாம் ஆராய்வது முக்கியம்; அப்போதுதான் நமது பயிற்சியாளர்களை இன்றைய தொழில்களுக்கு ஏற்புடையவர்களாக ஆக்க முடியும். இந்தக் கூட்டத்தில் நீங்கள் விவாதித்து மேற்கொள்ளும் முடிவுகள் அடுத்த கட்டத்தில் நாம் எத்தகைய முன்னேற்றத்தை எட்ட முடியும் என்பதைத் தீர்மானிக் கும். இவ்விரண்டு கட்டங்களும் மிக நெருக்கமாகப் பின்னிப் பிணைந் தவை; இரண்டாவது கட்டம் முதல் கட்டத்தைவிட முக்கியத்துவத் தில் எவ்விதத்திலும் குறைந்ததல்ல.

உங்களது கூட்டத்தின் நிகழ்ச்சி நிரலில் ஏராளமான விஷ யங்கள் இடம் பெற்றிருப்பதால், நீண்ட நேரம் பேசுவதற்கு நான் விரும்பவில்லை. எனினும் நமது நாட்டின் ஒளிமயமான எதிர் காலத்திற்குத் திட்டமிட வேண்டுமானால் தேர்ச்சி பெற்ற ஊழியர் களைப் போதிய எண்ணிக்கையில் தொழில்துறைக்கு வழங்குவது எவ்வளவு முக்கியமானது என்பதை என் உரையை முடிப்பதற்கு முன்னர் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். அரசாங்கம், தொழிலதிபர்கள்,

தொழிலாளர்கள் ஆகிய முத்தரப்பினரின் ஒத்துழைப்பு மூலமாகத் தான் தொழில்நுட்பப் பயிற்சித் திட்டத்துக்கு நம்மால் ஓர் உறுதி யான, நிலையான அடித்தளத்தை வழங்க முடியும். தொழில் முனைவர்களுக்கும் தொழிலதிபர்களுக்கும் இந்த சந்தர்ப்பத்தில் ஒரு விசேட வேண்டுகோள் விடுக்கிறேன். அரசாங்கம் வகுக்கும் எந்தத் தொழில் நுட்பப் பயிற்சித் திட்டத்தையும் பராமரித்துத் திறம்படச் செயல்படுத்துவதற்கு இத்துறையில் அவர்களுக்குள்ள தனித்துறை ஈடுபாடும் அனுபவமும் அரும்மதிப்பு வாய்ந்ததாகும்; அதேசமயம் இது விஷயத்தில் அவர்களது எதிர்கால ஒத்துழைப்பும் மிகுந்த மதிப்புடையதாகும்.

மேலும் ஒரு விஷயத்தைக் கூறிவிட்டு எனது உரையை முடிக்கலாம் என்றிருக்கிறேன். ராணுவத்தில் சேவை செய்யச் சென்று, விரைவில் சிவில் வாழ்க்கைக்குத் திரும்பவிருக்கும் பயிற்சியாளர் களுக்கு வேலையில்லாத் திண்டாட்டம்தான் நாம் அளிக்கப்போகும் கதிப்போக்கா? தங்கள் உயிரைப் பணயம் வைத்து சேவை செய்த அவர்களுக்கு இதுதான் நாம் வழங்கப்போகும் பரிசா? அவர்களை நாம் கைவிட மாட்டோம் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு. அவர் களை நாம் புறக்கணித்தோமானால், உதாசீனம் செய்தோமானால் அவர்கள் தொழில் துறையில் மிகுந்த அதிருப்தியைப் பரப்பும் ஒரு சக்திவாய்ந்த மையமாகி விடுவார்கள். இவ்வாறின்றி, போருக்குப் பிறகு சிவில் வாழ்க்கையில் அவர்களுக்கு உரிய இடத்தை, உகந்த இடத்தை அளித்தோமானால் தொழில் துறையில் ஸ்திரத்தன்மையை ஏற்படுத்த அவர்கள் உதவுவார்கள்; படைத்துறையில் தாங்கள் கற்றுக் கொண்ட கட்டுப்பாட்டு உணர்வை சிவில் தொழில் துறையில் ஊட்டி வளர்ப்பார்கள். சிவில் துறையில் வேலைவாய்ப்பு பெறும் பொருட்டு அவர்களைச் சீர்திருத்துவதற்கு என்ன நடவடிக்கைகளை அரசாங்கம் எடுத்துக் கொள்ள வேண்டும் என்பதை நீங்கள்தான் தெரிவிக்க வேண்டும். இவ்விதம் நீங்கள் ஆலோசனை கூறி உதவி னால் அதற்கு அரசாங்கம் உங்களுக்கு நன்றி கடமைப்பட்டிருப்பது மட்டுமன்றி, நீங்கள் தெரிவிக்கும் நியாயமான, நடைமுறை சாத்திய மான யோசனைகளைச் செயல்படுத்த தன்னால் முடிந்த அனைத் தையும் அரசாங்கம் செய்யும் என்றும் உறுதி கூறுகிறேன்.

## குழுவின் விவாதங்கள்

பின்னர் தொழில்நுட்பப் பயிற்சி சம்பந்தமான பல்வேறு பிரச் சினைகள் குறித்து குழு விவாதித்தது; தொழில் நுட்பப் பயிற்சியாளர்

களின் கல்வித் தரத்தை உயர்த்த வேண்டிய முக்கியத்துவத்தை அது வலியுறுத்திற்று. தொழிலாளர் நலத்துறைக் கூட்டுச் செயலாளர் திரு. எஸ். லால் கூட்டத்துக்குத் தலைமை வகித்தார்.

★ ★ ★

## [1]வேலைவாய்ப்பு அலுவலகத்துக்கு வருகை

ஆகஸ்டு 23ஆம் தேதி கல்கத்தா வந்து சேர்ந்த டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் கல்கத்தா வேலைவாய்ப்பு அலுவலகத்தைச் சென்று பார்த்தார். இந்திய அரசாங்கத்தின் தொழிலாளர் நலத்துறை கூட்டுச் செயலாளரும், லண்டனில் முன்னர் இந்தியாவின் உதவி ஹைகமிஷனராகப் பணியாற்றியவருமான திரு. எஸ். லால் அவருடன் சென்றிருந்தார்.

கல்கத்தாவில் வேலைவாய்ப்பு அலுவலகத் திட்டம் செயல்படும் விதம் பற்றியும், தேசிய சேவை (தொழில் நுட்ப ஊழியர்) அவசரச் சட்டத்தின் செயல்பாடு குறித்தும், இதர பல்வேறு விஷயங்கள் குறித்தும் வங்காள அரசாங்கத்தின் தொழிலாளர் நலத்துறை ஆணையர் திரு. ஏ. ஹக்சுடன் இந்திய அரசாங்கத்தின் தொழிலாளர் நலத்துறை உறுப்பினரான டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் விவாதித்தார். தொழில்நுட்பப் பயிற்சி மையங்களை மூடிவிடுவது குறித்து இந்திய அரசாங்கத்தின் கொள்கை பற்றியும், அதனால் வங்காளத்துக்கு ஏற்படக்கூடிய பாதிப்புப் பற்றியும் விவாதம் நடைபெற்றது.

தங்கள் பெயர்களைப் பதிவு செய்து கொள்வதற்காக ஏராளமான தொழிலாளர்கள் வேலை வாய்ப்பு அலுவலகத்திற்கு வந்திருந்ததை டாக்டர் அம்பேத்கர் பார்த்தார். தொழிலாளர்கள் இங்கு தங்கள் பெயர்களைப் பதிவு செய்துகொள்ளும் முறையையும், அவர்களுக்கு வழங்கப்படும் அடையாளச் சீட்டுகளையும் பற்றி திரு. ஹக்சும், திரு. பென்னட்டும் (வேலைவாய்ப்பு அலுவலக நிர்வாகி) விளக்கிக் கூறினர்.

## வேலைவாய்ப்பு குறித்த புள்ளி விவரங்கள்

வேலைவாய்ப்பு அலுவலகத்தில் பதிவு செய்து கொண்டோர் எண்ணிக்கையும், இந்த அலுவலகத்தின் உதவியால் வேலை

1. இந்தியத் தகவல் ஏடு, செப்டம்பர் 15, 1944, பக்கம் 278.

வாய்ப்புப் பெற்றவர்கள் எண்ணிக்கையும் படிப்படியாக அதிகரித்து வந்திருப்பதை தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் கவனத்தில் கொண்டார். அண்மைய புள்ளி விவரங்களின்படி, தொழில் நுட்பப் பயிற்சித் திட்டத்தின் அடிப்படையில் பயிற்சி பெற்றோர் 1029 பேர் வேலை வாய்ப்பு அலுவலகத்தில் பதிவு செய்து கொண்டனர் என்றும், இவர்களில் 388 பேர் வேலை வாய்ப்புப் பெற்றனர் என்றும் அவரிடம் தெரிவிக்கப்பட்டது. மேலும், 1944 ஜனவரி முதல் 1944 ஜூலை 31 வரை வேலை வாய்ப்பு அலுவலகத்தில் பதிவு செய்து கொண்டோரின் மொத்த எண்ணிக்கை 2,264 என்றும், இதே காலப் பகுதியில் வேலை வாய்ப்பு பெற்றவர்களின் எண்ணிக்கை 537 என்றும் அவரிடம் கூறப்பட்டது.

வங்காளத்தில் தொழில் நுட்பப் பயிற்சித் திட்டத்தின் முன்னேற்றத்தை எடுத்துரைக்கும் விவர விளக்கப்படம் ஒன்றும் டாக்டர் அம்பேத்கரிடமும் அவருடன் வந்த குழுவினரிடமும் காட்டப் பட்டது. 4164 பேரைப் பயிற்றுவிக்கக்கூடிய 24 மையங்களும் அத்துடன் 2,270 பேரைப் பயிற்றுவிக்கும் திறன் கொண்ட 15 சிவில் மையங்களும் இருப்பதாக அவரிடம் கூறப்பட்டது. இவற்றில் பதினேழு மையங்கள் தொழில் நுட்பப் பயிற்சிக் கழகங்கள், இரண்டு மையங்கள் தொழில் நிலையங்களுக்குச் சொந்தமானவை. இந்த மையங்களில் பயிற்சி பெற்றவர்களில் 2540 பேர் 1944 ஜூலை 31 வரை சிவில் தொழில் துறையில் வேலைவாய்ப்பு பெற்றனர். இந்திய அரசாங்க அச்சகத்தையும், மத்திய எழுது பொருள் விற்பனை நிலையத்தையும் தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் பார்வையிட்டார்.

வங்க அரசாங்கம் அமைத்துள்ள தொழிற்சங்க ஆலோசனைக் குழு உறுப்பினர்களிடையே அவர் உரை நிகழ்த்தினார்; தேசிய சேவை தொழிலாளர் விசேட நீதிமன்றம் அண்மையில் பிறப்பித்த வேலை நேர ஆணைகள் பற்றி அப்போது விவாதிக்கப்பட்டது.



# 36

## [1]விரிவடைந்த முத்தரப்புத் தொழிலாளர் மாநாட்டின் கூட்டம்

### டாக்டர் பி.ஆர். அம்பேத்கரின் உரை

விரிவடைந்த முத்தரப்பு தொழிலாளர் மாநாட்டின் ஆறாவது கூட்டம் அக்டோபர் 27ஆம் தேதி புதுடில்லியில் தொடங்கிற்று. இந்திய அரசாங்கத்தின் தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் மாண்பு மிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் கூட்டத்துக்குத் தலைமை தாங்கி னார். இந்த மாநாடு செயல்பட்டு வந்த கடந்த இரண்டு ஆண்டு களில் அதன் ஸ்தாபன அமைப்பில் குறைபாடுகள் இருப்பது தெரிய வந்தன. எனவே, அந்த குறைபாடுகளை அகற்றும் பொருட்டு மாநாட் டின் சட்ட திட்டங்களில் சில மாற்றங்கள் செய்வது அவசியம் என்று அவர் வலியுறுத்தினார்.

மாநாட்டின் அதிகார வரம்பெல்லைக்குள் வரும் விஷ யங்களை இரண்டு பட்டியல்களாகப் பிரிக்க வேண்டும் என்று அவர் யோசனை கூறினார்: வேலைவாய்ப்புக்கான விதிமுறைகள், நிபந் தனைகள், தொழிலாளர் சட்டங்கள், சமூகப் பாதுகாப்பு சம்பந்தப் பட்ட பிரச்சினைகள் போன்ற எல்லாப் பொது விஷயங்களும் முதல் பட்டியலில் அடங்கும். தொழிலாளர் நலம், மற்றும் தொழிலாளர் சட்ட அமலாக்கம் சம்பந்தப்பட்ட அனைத்து ஸ்தூலமான பிரச் சினைகளும் இரண்டாவது பட்டியலில் இடம்பெறும்.

இக்கூட்டத்தில் டாக்டர் அம்பேத்கர் நிகழ்த்திய உரையின் முழு வாசகம் வருமாறு:

''இங்கு குழுமியிருக்கும் பிரதிநிதிகளை வரவேற்கும் வகை யில் ஒரு வார்த்தையும், அவர்களுக்கு நன்றி தெரிவிக்கும் முறையில் ஒரு வார்த்தையும் கூறுவதைத் தவிர கூட்டத் தலைவர் தமது துவக்க உரையில் வேறு எதுவும் செய்ய வேண்டியதில்லை என்று இருக்கு மாயின் அதைப்போன்ற மிக எளிதான, மகிழ்வளிக்கும் பணி வேறு

1. இந்தியத் தகவல் ஏடு, நவம்பர் 15, 1944, பக்கங்கள் 590-97.

எதுவும் இருக்க முடியாது. ஆனால் கூட்டத் தலைவர் இதைவிடவும் ஏதேனும் சொல்ல வேண்டும் என்பது மரபு. நம்முடையது போன்ற தொழிலாளர் மாநாட்டின் தலைவர் தாம் பேச வேண்டிய பொருளைத் தேர்ந்தெடுப்பது எளிதான விஷயமல்ல. இது தத்துவஞானிகளின் மாநாடல்ல. எனவே கூட்டத்தலைவர் ஒரு பெரிய கற்றறிவாளராக செயல்பட முடியாது; என்னென்னவோ தத்துவங்களை எல்லாம் சரமாரியாகப் பொழிந்து, சமூக உள்ளடக்கம் இல்லாத வகையில் சொற்சிலம்பம் ஆடி, தம்மை எவ்வகையிலும் கட்டுப்படுத்திக் கொள்ளாதவராக நடந்து கொள்ள முடியாது. மேலும், இது சமூ கத்தைப் புனரமைக்கும் மாநாடுமல்ல. எனவே, முதலாளித்துவத் தையும், சோஷலிசத்தையும், கம்யூனிசத்தையும் மற்றும் இதர தத்து வங்களையும் பற்றி இங்கு விரிவாக ஆய்வாராய்வு செய்து கொண் டிருக்கவும் முடியாது.

''அதே போன்று இந்த மாநாடு ஓர் அறநெறிக் கழகத்தின் கூட்டமுமல்ல; ஆகவே, வாய்மையை, நேர்மையைப் பற்றி உணர்ச் சிகளைத் தூண்டிக் கிளறிவிடும் வகையில் கூட்டத்தலைவர் இங்கு ஆவேசமாக, உணர்ச்சிப் பிழம்பாகப் பேசவும் முடியாது. அதேச மயம், ஒரு தொழிலாளர் மாநாட்டுக்குத் தலைமை தாங்குபவன் எத் தகைய பாணியில் துவக்க உரையை நிகழ்த்த வேண்டும் என்பதை யும் அறியாதவன் நான். ஆதலால் இந்த இடர்ப்பாட்டை, இக்கட்டைத் தவிர்க்கும் நோக்கத்தோடு உங்களுக்கு நடைமுறை முக்கியத்துவம் வாய்ந்த விஷயங்களைப் பற்றி இங்கு பேசலாம் என்று எண்ணுகிறேன். இவ்வாறு இங்கு பேசுவது பொருத்தமற்றது என்று நீங்கள் கருதமாட்டீர்கள் என்று நிச்சயமாக நம்புகிறேன்.

''இந்த மாநாட்டு உறுப்பினர்களின் ஆர்வத்துக்கும் அக்கறைக்கு முரிய இரண்டு முக்கியமான விஷயங்கள் பற்றி இங்கு பேசலாம் என்றிருக்கிறேன். முதலாவதாக, மாநாட்டாலும் தொழிலாளர் நிரந்தரக் கமிட்டியாலும் விவாதிக்கப்பட்ட பல்வேறு பிரச்சினை களின்பால் அரசாங்கம் என்ன நடவடிக்கைகள் எடுத்துள்ளது என்பது குறித்த ஒரு பொதுவான படப்பிடிப்பினை உங்களுக்கு வழங்க எண்ணுகிறேன். இரண்டாவதாக, முத்தரப்பு அமைப்பின் சட்ட திட்டங்களிலும் நடைமுறையிலும் காணப்படும் குறைபாடுகளைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

''முதல் விஷயம் இந்தத் தொடக்க உரைக்குள் அடங்கக் கூடியதல்ல. உங்கள் நிகழ்ச்சி நிரலைக் கருத்திற்கொண்டு பார்க்கும்

போது இது நீண்ட நேரத்தை எடுத்துக்கொள்ளும். இதனை நீங்கள் சகித்துக் கொள்ள மாட்டீர்கள். எனவே, இந்த விஷயம் குறித்த ஒரு தனி அறிக்கையை வெளியிட விரும்பினேன். அந்த அறிக்கை ஏற்கெனவே உங்கள் கைகளில் இருக்கிறது. இதனை எனது துவக்க உரையின் ஒரு பகுதியாக எடுத்துக் கொள்ளுமாறு வேண்டுகிறேன்.

## முத்தரப்பு அமைப்பு

''இனி நான் எடுத்துக் கொள்ள வேண்டிய அடுத்த விஷயம் இந்த மாநாட்டின் அமைப்பு மற்றும் அதன் நடைமுறைகள் சம்பந்தப்பட்டதாகும். இந்த மாநாடும் தொழிலாளர் நிரந்தரக் குழுவும் செயல்பட்டு வந்துள்ள இரண்டாண்டுக்கால அனுபவம் நம் முன்னே உள்ளது. இது நீண்ட அனுபவம் என்று கூறிவிட முடியாது. எனினும் இது குறுகிய கால அனுபவமே ஆயினும் ஸ்தாபனத்தில் காணப்படும் சில பலவீனங்களை, குறைபாடுகளை அது வெளிப்படுத்தியுள்ளது. பின்கண்ட குறைபாடுகள் கடுமையானவையாகத் தோன்றுகின்றன:-

(1) மாநாட்டுக்கும் தொழிலாளர் நிரந்தரக் குழுவுக்கும் இடையே அவற்றின் பணிகள் தெள்ளத்தெளிவான முறையில், துல்லியமான விதத்தில் பிரிக்கப்படவில்லை. இவற்றில் ஒன்று கலந்தாலோசனை அமைப்பாகவும் மற்றொன்று நிர்வாக அமைப்பாகவும் இல்லை. இரண்டுமே கலந்தாலோசனை அமைப்புகளாகவே உள்ளன.

(2) இரண்டு அமைப்புகளும் செய்யும் பணி ஒரே தன்மையினதாக இருந்து வருகிறது. இரண்டு அமைப்புகளில் விவாதிக்கப்படும் விஷயங்களும் ஒரே மாதிரியானவையாக இருக்கின்றன.

(3) பொதுவானப் பிரச்சினைகளுக்கும் குறிப்பிட்ட வகைப்பட்ட பிரச்சினைகளுக்கும் இடையே தெள்ளத்தெளிவான வேறுபாடு இல்லாததால் மாநாட்டிலும் குழுவிலும் நடைபெறும் விவாதங்கள் பொதுப்படையானவையாக அமைந்து விடுகின்றன. இதனால் உரிய பலன் கிட்டாமல் போய்விடுகிறது. குறிப்பிட்ட திட்டவட்டமான பிரச்சினைகள் கூடப் பொதுப்படையான பிரச்சினைகளாகப் பாவிக்கப்படுகின்றன.

(4) விசேடப் பிரச்சினைகளைப் பரிசீலிப்பதற்கும் அவற்றை ஆராய்ந்து அறிக்கை சமர்ப்பிப்பதற்கும் ஏற்பாடு எதுவும்

செய்யப்படவில்லை. இது ஒரு முக்கியமான பணி; இத்தகைய பணியை மேற்கொள்வதற்குப் பொறுப்பேற்கக்கூடிய ஒரு சிறந்த ஏற்பாட்டினைச் செய்வது அவசியம்.

(5) தொழில் வாரியாக தொழிலாளர் நலம் சம்பந்தப்பட்ட பிரச்சினைகளை அலசி ஆராய்ந்து உரிய ஆலோசனைகள் கூறுவதற்குத் தகுந்த அமைப்பு ஏதும் இல்லை.

## தனித் தலைமைச் செயலகம்

''ஸ்தாபன அமைப்பில் காணப்படும் இரண்டாவது பலவீனத்தையும் மாநாட்டு உறுப்பினர்கள் சிலர் சுட்டிக்காட்டினர். தொழிலாளர் மாநாட்டுக்கு ஒரு தனித்தலைமைச் செயலகம் இல்லாதது தான் அந்தக் குறைபாடாகும். பின் கண்ட பணிகளை ஆற்றுவதற்கு ஒரு தனித் தலைமைச் செயலகம் இருப்பது அவசியம் என்று யோசனை கூறப்பட்டது:-

(அ) கூட்டங்களுக்குத் தயாரிப்புகள் செய்தல் (அதாவது அறிக்கைகளைச் சுற்றுக்கு விடுதல், கூட்டங்கள் நடைபெறும் தேதிகளையும், நிகழ்ச்சி நிரலையும் உறுப்பினர்களுக்குத் தெரிவித்தல் முதலியவை);

(ஆ) கூட்ட நடவடிக்கைகள் பற்றிய குறிப்புகளைத் தயாரித்தல்;

(இ) பிரசுரங்களை வெளியிடுவதன் மூலமும் சுற்றுப் பயணங்களை மேற்கொள்வதன் மூலமும் பிரசாரம் செய்தல்;

(ஈ) தலைமைச் செயலக ஊழியர்களுக்கு ஊதியம் அளித்தல், மாநாட்டில் பங்கு கொள்ளும் அரசு சார்பற்ற உறுப்பினர்களுக்குப் பிரயாணப்படி வழங்குதல் போன்ற நிதிநிர்வாகத்தை மேற்கொள்ளுதல்;

(உ) விவாதங்கள் செய்வதற்கும் பரிந்துரைகள் வழங்குவதற்கும் அடிப்படையாக அமையக்கூடிய தகவல்களைச் சேகரித்தல், ஆராய்ச்சி மேற்கொள்ளுதல்;

(ஊ) அரசாங்கம் மேற்கொள்ளும் நடவடிக்கைகளைக் கண்காணித்தல்.

''புகாருக்கு இடமளிக்கக்கூடிய வேறு இரண்டு விஷயங்களும் உள்ளன. இவற்றில் ஒன்று தொழிலாளர் மாநாட்டுக்கும் தொழிலாளர் நிரந்தரக் குழுவுக்கும் நிகழ்ச்சி நிரல் தயாரிப்பது சம்பந்தப்பட்டதாகும். நிகழ்ச்சி நிரலைத் தயாரிப்பதற்குத் தற்போது கடைப்பிடித்துவரும் நடைமுறை இரண்டு அம்சங்களில் குறைபாடுடையதாகக் கூறப்படுகிறது. முதலாவதாக, மாநாட்டு உறுப்பினர்களும் சரி, குழு உறுப்பினர்களும் சரி தங்களுக்கு அக்கறையுள்ள விஷயங்களை நிகழ்ச்சி நிரலில் தங்கள் விருப்பம் போல் சேர்க்க உரிமை பெற்றிருக்கவில்லை. இரண்டாவது குறைபாடு நிகழ்ச்சி நிரலோடு அனுப்பப்படும் பொது நிலை அறிக்கை உறுப்பினர்களிடம் மிகவும் தாமதமாகச் சேர்ப்பிக்கப்படுவதாகும்; இதனால் அறிக்கையை ஆழமாக ஆராய்வதற்கும், இது சம்பந்தமான விவாதத்தில் பங்கு கொள்ளத் தங்களைத் தயார் செய்து கொள்வதற்கும் உறுப்பினர்களுக்குப் போதிய அவகாசம் கிடைப்பதில்லை.

''குறை கூறுவதற்கு இடம் தரும் மற்றொரு விஷயம் மாநாட்டிலும் தொழிலாளர் நிரந்தரக் குழுவிலும் பல்வேறு தரப்பினர்களுக்கும் பிரதிநிதித்துவம் அளிப்பது சம்பந்தப்பட்டதாகும். தொழிலதிபர்கள் சார்பில் மூன்று இடங்களுக்கு அரசாங்கமே தங்களுக்கு வேண்டியவர்களை நியமிப்பது ஆட்சேபகரமானது என்று தொழிலதிபர்கள் கூறுகின்றனர். இந்தியத் தொழிலதிபர்கள் சம்மேளனமும், அகில இந்தியத் தொழிலதிபர்கள் அமைப்பும் இந்தியாவில் தொழிலதிபர்கள் வர்க்கத்தை முழு அளவுக்குப் பிரதிநிதித்துவப்படுத்துபவை. அப்படியிருக்கும்போது நியமனத்தின் மூலம் மேலும் தொழிலதிபர்களின் பிரதிநிதிகளை நியமிக்கும் நடைமுறை தேவையற்றது என்பது அவர்களது வாதம். தொழிலாளர்களுக்குப் பிரதிநிதித்துவம் அளிக்கும் முறையிலும் கோளாறு இருக்கிறது; தொழிலாளர்களைப் பிரதிநிதித்துவப்படுத்துவோரில் ஒருவர்கூட உண்மையில் உழைக்கும் வர்க்கங்களைச் சேர்ந்தவரல்ல.

''இது சம்பந்தமாக எத்தகைய நடவடிக்கை எடுக்க அரசாங்கம் தயாராக இருக்கிறது என்று நீங்கள் என்னை இயல்பாகவே வினவலாம். தொழிலாளர் மாநாடு சிறந்த முறையில் செயல்படுவதற்கும், அதன் அமைப்பிலுள்ள எத்தகைய கடுமையான கோளாறு காரணமாகவும் அதன் செயல்பாட்டில் அது பின்தங்கியிராதிருப்பதற்கும் என்னால் முடிந்த அனைத்தையும் செய்ய நான் சித்தமாக இருக்கிறேன். ஆனால் எந்த ஒரு திட்டவட்டமான முடிவுக்கும் வருவதற்கு முன்னர் இவை எல்லாம் நன்கு ஆழமாக ஆராயப்பட

வேண்டிய விஷயங்கள் என்பதை நீங்கள் உணர வேண்டும். இந்தப் பலவீனங்களில், குறைபாடுகளில் சிலவற்றை அரசாங்கம் பரிசீலித்து சில முடிவுகளுக்கு வந்துள்ளது. இவற்றில் இன்னமும் ஆராயப் படாதவையும் சில உள்ளன. அரசாங்கம் பரிசீலித்து முடிவுக்கு வந்துள்ளவற்றை இங்கு முதலில் குறிப்பிட விரும்புகிறேன். தனித் தலைமைச் செயலகம், நிகழ்ச்சி நிரல் மற்றும் பிரதிநிதித்துவம் சம்பந்தப்பட்ட பிரச்சினையும் இவற்றில் அடங்கும்.

### ஆலோசனை கூறும் குழு மட்டுமே

''தொழிலாளர் மாநாட்டுக்கு ஒரு தனித் தலைமைச் செயலகம் அமைக்க வேண்டும் என்ற கோரிக்கை ஐ.எல்.ஓ.வை மனத்திற்கொண்டு எழுப்பப்பட்டுள்ள கோரிக்கை என்றே கருதுகிறேன். ஆனால் ஐ.எல்.ஓ.வுக்கும் நம்முடைய முத்தரப்பு அமைப்புக்கும் இடையே அடிப்படையான வேறுபாடு உள்ளது என்று அரசாங்கம் அபிப்பிராயப்படுகிறது. ஐ.எல்.ஓ. என்பது வெர்சேல்ஸ் சமாதான உடன்படிக்கையின் மூலம் உருவாக்கப்பட்ட ஒரு சுதந்திரமான அமைப்பு. அதன் நடைமுறை மரபுகளும் பரிந்துரைகளும் எல்லா உறுப்பு நாடுகள்மீதும் சில திட்டவட்டமான கடமைப் பொறுப்புகளைச் சுமத்துகின்றன; இந்தக் கடமைப் பொறுப்புகளை நிறைவேற்றத் தவறும் நாடுகள் சில குறிப்பிட்ட சர்வதேச விதிமுறைக் கட்டுப்பாடுகளுக்கு உள்ளாக நேரிடும். அது தனது சொந்த சட்டதிட்டங்களால் ஒழுங்குமுறைப்படுத்தப்படுகிறது; எந்த ஓர் வெளி அதிகாரத்துக்கும் அது ஆட்பட்டதல்ல. இதுவன்றி, அது தனது சொந்த நிதி வசதிகளைக் கொண்டிருக்கிறது; ஏதேனும் ஒரு புதிய பணியை மேற்கொள்ள முடிவுசெய்யும்போது, அது வேறு ஒரு நாட்டின் அல்லது இலாகாவின் பொருளுதவியைச் சார்ந்திருக்க வேண்டியதில்லை.

''நமது முத்தரப்பு அமைப்பு ஐ.எல்.ஓ.வைப் போன்ற ஒரு சுதந்திர அமைப்பல்ல. அதற்கென சொந்த நிதிவசதிகள் ஏதுமில்லை, இருக்கவும் முடியாது. அது ஓர் ஆலோசனை அமைப்பு மட்டுமேயாகும்; அதன் ஆலோசனைக்காக சமர்ப்பிக்கப்படும் விஷயங்களில் அரசாங்கத்துக்கு ஆலோசனை கூறுவதற்காகவே அது அமைக்கப்பட்டிருக்கிறது. மற்றபடி அது தானாகவே எந்த முடிவையும் எடுக்க முடியாது. அவ்வாறு முடிவெடுக்க அதனை அனுமதிப்பது சட்டமன்ற அதிகாரங்களைக் கைப்பற்றிக் கொள்வதற்கு அதனை அனுமதிப்பதற்கு ஒப்பாகும். இந்த வேறுபாடுகளை எல்லாம் கருத்திற்

கொண்டு நோக்கும்போது, தொழிலாளர் மாநாட்டுக்கு ஒரு தனித் தலைமைச் செயலகத்தை உருவாக்குவது அரசாங்கத்துக்கும் மாநாட்டுக்கும் இடையே உரசலும் மோதலும் ஏற்படுவதற்கே இட்டுச் செல்லும் என்பது தெள்ளத் தெளிவு.

''ஐ.எல்.ஓ. தனது ஆற்றலையும் சிறப்பாகப் பணிபுரியும் திறனையும் பெரும்பாலும் தனது தலைமைச் செயலகத்திலிருந்து பெற்றது என்பதில் ஐயமில்லை. இருப்பினும் ''ஆராய்ச்சி மற்றும் தகவல் பணியை''த் தவிர தலைமைச் செயலகம் செய்யக்கூடிய எல்லாப் பணிகளையும் இந்திய அரசாங்கத்தின் தொழிலாளர் நலத் துறைத் தலைமைச் செயலகமே செய்ய முடியும் என்று இந்திய அரசாங்கம் கருதுகிறது. ''ஆராய்ச்சி மற்றும் தகவல்'' பணியைப் பொறுத்த வரையில், தொழிலாளர் நலத்துறை இப்பணியைச் சீரமைக்க சில நடவடிக்கைகளைப் பரிசீலித்து வருகிறது; இதன்படி தொழிலாளர்கள் மற்றும் அவர்கள் சம்பந்தப்பட்ட இதர பல பிரச் சினைகள் குறித்து ஆராயவும் தகவல் திரட்டவும் ஏற்பாடு செய்யப் படும். முத்தரப்பு அமைப்புக்கு ஒரு தனித் தலைமைச் செயலகத்தை உருவாக்கும் யோசனையை மேலே கூறிய காரணங்களுக்காக இந்திய அரசாங்கம் தற்போதைக்கு ஆதரிக்கவில்லை.

## நிகழ்ச்சி நிரலைத் தயாரிக்கும் உரிமை

நிகழ்ச்சி நிரல் பிரச்சினையை அரசாங்கம் ஆராய்ந்தது. மாநாட்டு நிகழ்ச்சி நிரலைத் தயாரிக்கும் உரிமையை தங்களால் விட்டுக் கொடுக்க இயலாது என அரசாங்கம் முடிவு செய்துள்ளது. மாநாடு ஒரு சட்டமன்றமல்ல. அது ஓர் ஆலோசனை அமைப்பு மட்டுமே ஆகும். எனவே, எத்தகைய விஷயங்களில் தங்களுக்கு ஆலோசனை தேவை என்பதை அரசாங்கம்தான் தீர்மானிக்க வேண்டும்.

''நிகழ்ச்சி நிரலைத் தயாரிக்கும் உரிமையை மாநாட்டுக்கு அரசாங்கம் ஏன் விட்டுக் கொடுக்க இயலாது என்பதற்கு இன்னொரு காரணம் உண்டு. மாநாட்டு உறுப்பினர்கள் எத்தகைய விஷயங்கள் குறித்து விவாதம் நடததுகிறார்களோ அத்தகைய விஷயங்கள் சம்பந்தப்பட்ட முக்கிய தகவல்களை மாநாட்டுக்கு அரசாங்கம் வழங்கக்கூடிய நிலையில் இருக்க வேண்டும்; மேலும் அவர்கள் இவற்றை எல்லாம் அலசி ஆராய்ந்து தங்கள் கருத்துகளை வெளி யிடுவதற்குப் போதிய அவகாசம் அளிக்க வேண்டும்; இவ்வாறு

செய்யாத வரை நிகழ்ச்சி நிரலில் ஒரு குறிப்பிட்ட விஷயத்தை இடம் பெறச் செய்வது அரசாங்கத்துக்குச் சாத்தியமல்ல. ஆனால் அதேசமயம் நிகழ்ச்சி நிரலைத் தயாரிப்பதற்குத் தங்களுக்குள்ள உரிமைக்கு உட்பட்டு நடைமுறை ஒழுங்கை மாற்றியமைப்பதற்கு அரசாங்கம் தயாராக இருக்கிறது.

''தற்போதுள்ள நடைமுறை ஒழுங்கின்படி, ஒரு கூட்டம் முடிவடைந்த பிறகு, தத்தமது யோசனைகளைத் தெரிவிக்குமாறு அரசாங்கங்களையும், தொழிலதிபர்கள் மற்றும் தொழிலாளர் களின் அமைப்புகளையும் தொழிலாளர் நலத்துறை கேட்டுக் கொள் கிறது; இந்த யோசனைகளின் அடிப்படையில் அடுத்த கூட்டத்திற் கான நிகழ்ச்சி நிரலில் இடம்பெறக்கூடிய விஷயங்கள் தேர்ந்தெடுக் கப்படுகின்றன. நிகழ்ச்சி நிரலில் இடம் பெறுவதற்கான விஷயங் களைத் தெரிந்தெடுப்பது குறித்து அரசாங்கம் ஒரு முடிவுக்கு வரு வதற்கு முன்னர் அரசாங்கத்துக்கும் மாநாட்டுக்கும் அல்லது ஆலோ சனைக் குழுவுக்கும் இடையே கலந்தாலோசனை எதுவும் நடை பெறுவதில்லை. ஆனால் திருத்தப்பட்ட நடைமுறை ஒழுங்கின்படி, அரசாங்கமும் தொழிலதிபர்கள் மற்றும் தொழிலாளர் அமைப்பு களும் நிகழ்ச்சி நிரல் சம்பந்தமாக ஏதேனும் யோசனைகள் தெரிவிக்க விரும்பும்போதெல்லாம் அவற்றைப் பெறுவதற்கு அரசாங்கம் தயாராக இருக்கும். இவ்வாறு இந்த அமைப்புகள் யோசனைகள் ஏதும் தெரிவிக்கத் தவறினால் ஒவ்வொரு கூட்டத்திலும் பிரதிநிதி களிடமிருந்து யோசனைகளை அரசாங்கம் வரவேற்கும்.

''அரசாங்கம் மற்றொரு மாற்றத்தைச் செய்யவும் தயாராக இருக்கிறது: அதாவது நிகழ்ச்சி நிரலைத் தயாரிக்கும் விஷயத்தில் அரசாங்கம்தான் இறுதி முடிவை எடுக்கும் என்றபோதிலும் இது சம்பந்தமாகத் தெரிவிக்கப்படும் எல்லா யோசனைகளையும் ஒவ் வொரு கூட்டத்திலும் விவாதிப்பதற்கு அது முன்வைக்கும். உறுப் பினர்களின் விருப்பங்களை அரசாங்கம் அறிந்து கொள்ள இது வாய்ப்பளிக்கும்; அதேபோல் உறுப்பினர்களும் தங்கள் விருப்பங் களை வெளியிடும் வாய்ப்பினை பெறுவர். இப்போதுள்ள நிலைமை யில் இது பெரும் மேம்பாட்டை உண்டுபண்ணும் என்பதை நீங்கள் ஒப்புக்கொள்வீர்கள் என்று நம்புகிறேன்.

''மாநாட்டின் இயைபு பிரச்சினையைப் பொறுத்தவரையில் இது சம்பந்தமாகத் தெரிவிக்கப்பட்டுள்ள யோசனைகளில் மிகுந்த வலிமை இருக்கிறது என்பதை ஏற்றுக் கொள்கிறேன். இரண்டு

தொழிலதிபர் அமைப்புகளும் அவை உரிமை கொண்டாடுவது போன்று முழுப் பிரதிநிதித்துவம் வாய்ந்தவையாக உண்மையிலேயே இருக்குமாயின், தொழிலதிபர்களின் பிரதிநிதிகளை அரசாங்கம் நியமிப்பது நியாயமில்லை என்பது தெளிவு. இதேபோன்று, உழைக்கும் வர்க்கங்களின் வேலைவாய்ப்புப் பிரச்சினைகளையும் சேம நலப் பிரச்சினைகளையும் பரிசீலிப்பதுடன் நின்றுவிடாமல், அவர்கள் தங்கள் காரியங்களைத் தாங்களே செய்து கொள்ளும்படி அவர்களைப் பயிற்றுவிப்பதும் அவசியம். எல்லாத் தொழிலாளர் மாநாடுகளிலும் உழைக்கும் ஆண்களையும் உழைக்கும் பெண்களையும் பங்குகொள்ளச் செய்வதன் மூலம் இதனைச் சாதிக்கலாம். நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர்களின் சேமநலக் குழு அண்மையில் அமைக்கப்பட்டபோது அக்குழுவில் தொழிலாளர் வர்க்கங்களைப் பிரதிநிதித்துவப்படுத்துவதற்கு நிலக்கரிச் சுரங்கத்தைச் சேர்ந்த ஓர் ஆண் தொழிலாளியையும் ஒரு பெண் தொழிலாளியையும் நியமிப்பதற்கு அரசாங்கம் நடவடிக்கை எடுத்துக் கொண்டதை நீங்கள் அனைவரும் அறிவீர்கள்.

## சட்ட திட்டங்கள்: சில யோசனைகள்

''எனவே, மாநாட்டின் இயைபில் தகுந்த மாற்றங்கள் செய்ய அரசாங்கம் எத்தகைய தயக்கமும் காட்டவில்லை. ஆனால் அதே சமயம் மாநாட்டின் இயைபில் மாற்றங்கள் செய்வது சம்பந்தப்பட்ட விஷயம் அத்தனை மிகவும் அவசரமானதல்ல, இது குறித்த பரிசீலனையை சிறிது காலம் ஒத்திவைக்கலாம் என்று அரசாங்கம் கருதுகிறது. செடி வேர் விட்டுவிட்டதா என்பதைப் பார்ப்பதற்கு அதனை அடிக்கடி மண்ணிலிருந்து பிடுங்கிக் கொண்டிருக்கக்கூடாது, அவ்வாறு செய்தால் அதுவே அந்தச் செடி வாடி, பட்டுப்போவதற்குக் காரணமாக இருக்கும் என்று முதலாவது முத்தரப்பு மாநாட்டில் நான் கூறியது உங்களுக்கு நினைவிருக்கும்.

''மாநாட்டின் சட்ட திட்டங்களில் காணப்படும் குறைபாடுகளைப்பற்றி இப்போது பார்ப்போம். இந்தப் பலவீனங்கள், குறைபாடுகள் மிகவும் கடுமையானவை, அவற்றை அகற்றுவது அவசியம் என்பதை அரசாங்கம் உணர்கிறது. ஆனால் இது விஷயத்தில் அரசாங்கம் இன்னும் எந்த முடிவுக்கும் வரவில்லை. இது சம்பந்தமாக நீங்கள் முன்வைக்க விரும்பும் எந்த யோசனைகளையும் அரசாங்கம் வரவேற்கும். இதற்கிடையே இந்த விஷயம் குறித்து என் கருத்துகளைத் தெரிவிக்கலாமா? மாநாட்டின் சட்ட திட்டங்களில் பின்கண்ட மாற்றங்களைச் செய்யலாம் என்பது என் கருத்து:

*(1)* மாநாட்டின் அதிகார வரம்பிற்குள் வரும் விஷயங்களை இரண்டு பட்டியல்களாகப் பிரிக்கலாம். (அ) வேலை வாய்ப்புக்கான விதிமுறைகள், நிபந்தனைகள் முதலிய எல்லாப் பொது விஷயங்கள்; (ஆ) தொழிலாளர் சம்பந்தப்பட்ட சட்டங்கள்; (இ) சமூகப் பாதுகாப்பு சம்பந்தப்பட்ட விஷயங்கள் - ஆகிய இவை யாவும் முதல் பட்டியலில் அடங்கும். (அ) தொழிலாளர் நலம் சம்பந்தப்பட்ட பிரச்சினைகளும், (ஆ) தொழிலாளர்கள் குறித்த சட்டங்களை அமல் படுத்துவது சம்பந்தப்பட்ட விஷயங்களும் இரண்டாவது பட்டியலில் இடம் பெறும். முதல் பட்டியலில் அடங்கியுள்ள விஷயங்கள் விரிவடைந்த மாநாட்டின் பரிசீலனைக்கு விடப்படும். விரிவடைந்த முத்தரப்பு தொழிலாளர் மாநாடு என்னும் பெயர் மிக நீளமாக இருப்பதால் ''விரிவடைந்த முத்தரப்பு'' என்னும் சொற்களை விட்டு விட்டு தொழிலாளர் மாநாடு என்று மட்டுமே இங்கு குறிப்பிட விரும்புகிறேன்.

*(2)* தொழிலாளர் சேமநலக் குழு என்னும் ஒரு புதிய அமைப்பு தோற்றுவிக்கப்பட்டு, இரண்டாவது பட்டியலில் இடம் பெற்றுள்ள விஷயங்கள் அதன் பொறுப்பில் விடப்படும்.

*(3)* இந்தத் தொழிலாளர் சேமநலக் குழுவின் இயைபு பின்கண்டவாறு அமைந்திருக்கும் : (அ) தொழிலாளர் நிரந்தரக் குழுவால் தேர்ந்தெடுக்கப்படும் உறுப்பினர்கள்; (ஆ) தொழிலதிபர்களின் பிரதிநிதி ஒருவர், ஒழுங்கமைக்கப்பட்ட தொழில்களையும் தொழி லாளர்களை வேலைக்கமர்த்திக் கொண்டுள்ள நகரசபை அமைப்பு களையும் ஏனைய அமைப்புகளையும் சேர்ந்த ஊழியர்களின் பிரதிநிதி ஒருவர்; (இ) அதிகார சார்பற்றவர்களிடமிருந்து அரசாங்கம் நியமிக்கும் நபர்கள்; (ஈ) இந்திய சமஸ்தானங்களைப் பிரதிநிதித் துவப்படுத்துபவர்கள்; (2) மாகாண அரசாங்கங்களின் பிரதிநிதிகள்.

*(4)* தொழிலாளர் நிரந்தரக் குழுவின் இயைபைப் பொறுத்த வரையில் அதில் எத்தகைய மாற்றமும் இருக்காது. அதன் செயல் பாட்டில்தான் மாற்றம் இருக்கும். அது ஓர் ஆலோசனைக் குழுவாக இருக்காது. மாறாக அது அவ்வப்போது மாநாடு ஒதுக்கும் பணிகளை அதன் சார்பாகச் செய்துவரும்.

''ஆக இந்த ஏற்பாட்டின்படி மூன்று அமைப்புகள் இருந்து வரும்; மாநாடு, நிரந்தரக் குழு, சேம நலக்குழு.

''மாநாட்டின் பணிகளும் அதிகாரங்களும் பின் கண்டவாறு அமைந்திருக்கும்:

(1) வேலை வாய்ப்பு விதிகள் மற்றும் நிபந்தனைகள் சம்பந்தப்பட்ட எல்லா விஷயங்கள் பற்றியும், அதன் நிகழ்ச்சி நிரலில் சமூகப் பாதுகாப்பு சம்பந்தமாக இடம்பெறக்கூடிய அனைத்து விஷயங்கள் குறித்தும் பரிந்துரைகள் செய்தல்.

(2) சில நெறிமுறைகளைப் பின்பற்றும்படிக் கூறி குறிப்பிட்டதொரு விஷயத்தை தொழிலாளர் நிரந்தரக் குழுவின் பரிசீலனைக்கு அனுப்புதல்; இது குறித்து மாநாட்டுக்கு அறிக்கை சமர்ப்பிக்கும்படி கூறுதல் அல்லது (ஆ) அரசாங்கத்துறையைச் செய்யும்படித் தெரிவித்தல்.

(3) நிகழ்ச்சி நிரலில் உள்ள எந்த ஒரு விஷயம் குறித்தும் பரிசீலித்து ஒரு பொறுப்பாளர் மூலம் (அ) மாநாட்டுக்கும் (ஆ) தொழிலாளர் நிரந்தரக் கமிட்டிக்கும் அறிக்கை தாக்கல் செய்தல்; அரசரங்கத்துக்குப் பரிந்துரை செய்வதும் மாநாட்டுக்கு மேலும் தகவல் அளிப்பதுமே இதன் நோக்கம்.

தொழிலாளர் நிரந்தரக் கமிட்டியின் பணிகளையும் அதிகாரங்களையும் மாநாடு நிர்ணயிக்கும். அது மாநாட்டின் ஒரு பிரதிநிதி போல செயல்படும்; அது தனக்குள்ள அதிகாரத்தை மாநாட்டிடமிருந்து பெறும்; மாநாடு அதற்கு ஒதுக்கும் பணிகளைத் தவிர வேறு எந்தப் பணிகளையும் அது செய்யாது. பின்கண்டவை மட்டும் இதற்கு விதிவிலக்கு: எனினும் விரைவாக அபிப்பிராயம் தேவைப்படும் எந்த ஒரு விஷயத்தையும் நேரடியாக தொழிலாளர் நிரந்தரக் குழுவுக்கு அரசாங்கம் அனுப்பலாம்; மாநாட்டுக்கோ அல்லது அரசாங்கத்துக்கோ இது சம்பந்தமாக அறிக்கை அனுப்பும்படிக் கோரலாம். எனினும் சாதாரணமாக தொழிலாளர் நிரந்தரக் குழுவின் எந்த அறிக்கையையும் அல்லது பரிந்துரையையும் மாநாட்டுக்குத்தான் அனுப்ப வேண்டும்.

''தொழிலாளர் நிரந்தரக் குழுவின் அதிகாரங்கள் பின்கண்டவாறு அமைந்திருக்கும்:

(i) மாநாடு அபிப்பிராயம் கோரும் விஷயங்கள் சம்பந்தமாக பரிந்துரைகளை அல்லது அறிக்கைகளைச் சமர்ப்பித்தல்;

(ii) அரசாங்கத்துக்கு அறிக்கை அனுப்பும்படி தொழிலாளர் நிரந்தரக் குழுவை மாநாடு பணித்தால் அவ்வாறு பரிந்துரைகளை அரசாங்கத்துக்குச் சமர்ப்பித்தல்;

(iii) தொழிலாளர் நிரந்தரக் குழுவுக்கு அறிக்கை சமர்ப்பிக்க வேண்டும் என்னும் ஆணையோடு நிகழ்ச்சி நிரலில் உள்ள எந்த ஒரு விஷயத்தையும் பரிசீலிப்பதற்கு ஒரு தனிக் குழுவை நியமித்தல்.

## தொழிலாளர் சேமநலக் குழு

''தொழிலாளர் சேமநலக் குழுவின் பணிகள் தொழிலாளர் நலம் சம்பந்தப்பட்டவையாகவும், தொழிலாளர் சட்டங்களைச் செயல்படுத்துவ்து சம்பந்தமாகவும் இருக்கும். தன் முன்வைக்கப் படும் இத்தகைய விஷயங்கள் அனைத்தையும் பரிசீலித்து அரசாங் கத்துக்குப் பரிந்துரைகள் செய்வது அதன் அதிகார எல்லைகளுக்கு உட்பட்டவையாகும்.

''இவைதாம் இப்போது வெளிச்சத்துக்கு வந்துள்ள ஸ்தாபன பலவீனங்களை அகற்றுவதற்கு நான் முன்வைக்கும் யோசனை களாகும். இந்த மாநாட்டின் உறுப்பினர் என்ற முறையில் சொந்தப் பொறுப்பில் இந்த யோசனைகள் உங்கள் முன்வைக்கப்படுகின் றன. இவற்றிற்கு அளவு மீறி முக்கியத்துவம் தர வேண்டியதில்லை. எனினும் இது சம்பந்தப்பட்ட அணுகுமுறை ஆழமானதாக இருப் பதாக எனக்குத் தோன்றுகிறது. எனவே இந்தப் பிரேரணைகளை எல்லாம் இந்திய அரசாங்கத்தில் இலாகா வாரியாகப் பரிசீலிக்க வேண்டும் என்று கருதுகிறேன். இவை காரியசாத்தியமானவை எனத் தெரியவந்தால் அரசாங்கத்தின் முடிவுகள் உங்களது அபிப்பிராயத் துக்காக முன்வைக்கப்படும். ஸ்தாபனத்தில் காணப்படும் இத்தகைய குறைபாடுகளைக் கடுமையானவையாகக் கருதுகிறேன்; இது அவசர மான பிரச்சினையாக எடுத்துக் கொள்ளப்படும் என்று உறுதி கூறு கிறேன்.

''மாநாட்டையும், அதன் பல்வேறு அமைப்புகளை மறு சீரமைப்பதையும், அதன் நடைமுறையை மாற்றியமைப்பதையும், அதன் ஊழியர்களைச் சீர்திருத்துவதையும் குறித்துக் கூற வேண்டி யதை எல்லாம் கூறி விட்டேன். அதன் திறனை அதிகரிப்பதிலும், அதன் பயன்தன்மையை மேம்படுத்துவதிலும் அரசாங்கம் ஆர்வ

மாக இருக்கிறது என்பதை நீங்கள் ஒப்புக்கொள்வீர்கள் என்று நம்புகிறேன்.

## தொழிலாளர் சட்டங்கள்

''இங்கு நான் எடுத்துரைக்க வேண்டிய மேலும் இரண்டு விஷயங்கள் உள்ளன. நடைபெறவிருக்கும் சட்டமன்றக் கூட்டத் தொடரில் தொழிலாளர் நலத் துறை பின்கண்ட மூன்று மசோதாக் களைத் தாக்கல் செய்யும்: தொழிற்சாலைகள் திருத்த மசோதா, ஊதியத்துடன் விடுமுறைகள் அளிப்பதற்கான மசோதா என இது அறியப்படும்; தொழிற்சங்கங்களை அங்கீகரிப்பதற்கு வகை செய்யக் கூடிய தொழிற்சங்கங்கள் திருத்த மசோதா; ஊதிய பட்டுவாடா திருத்த மசோதா. முதல் இரண்டு மசோதாக்கள் மாநாட்டால் பரிசீலிக்கப்பட்டு விட்டன. மூன்றாவது மசோதா ஒரு புதிய மசோதா, நமது நடைமுறை ஒழுங்கின்படி விவாதத்திற்காக அது இப்போது உங்கள் முன் வைக்கப்பட்டிருக்கிறது.

''சர்வதேசத் தொழிலாளர் மாநாட்டின் 26 ஆவது கூட்டத் தொடர் கடந்த ஏப்ரல் மாதம் அமெரிக்காவிலுள்ள பிலடெல்பியா வில் நடைபெற்றதை நீங்கள் அறிவீர்கள். அந்தக் கூட்டத் தொடரில் ஓர் இந்தியப் பிரதிநிதிக் குழுவும் பங்கு கொண்டது. லண்டனி லுள்ள இந்திய ஹைகமிஷனர் சர் சாமுவல் ரங்கநாதன் அந்தக் குழு வின் தலைவராகச் சென்றிருந்தார். தொழிலாளர் நல இலாகாச் செயலாளர் திரு. எச்.சி. பிரியோர், சி.எஸ்.ஐ., சி.ஐ.இ., ஐ.சி.எஸ்., இந்திய அரசாங்கத்தின் சார்பிலும், திரு. டி.ஜி. முல்கெர்கர் தொழி லதிபர்கள் சார்பிலும், திருவாளர்கள் ஜம்னாதாஸ் மேதா, எம்.எல். ஏ., அப்தாப் அலி, ஆர்.ஆர். போலே ஆகியோர் தொழிலாளர்கள் சார்பிலும் அந்த மாநாட்டில் கலந்து கொண்டனர். மாநாட்டில் அவர்கள் ஆற்றிய சிறப்புமிக்க பங்கையும், அவர்கள் செய்த அரிய பணியையும் பெரிதும் பாராட்டுவதில் என்னுடன் சேர்ந்து கொள் வீர்கள் என்று நம்புகிறேன். இந்தக் குழுவினரின் அறிக்கை உங்கள் முன்வைக்கப்பட்டுள்ளது. அது மிகுந்த ஆர்வமூட்டுவதாகவும் பெரிதும் பயனுள்ளதாகவும் இருக்கும் என்பது திண்ணம்.

''இதற்குமேல் பயனுள்ள முறையில் அதிகம் பேசுவதற்கு எதுவுமில்லை. எனது உரையைப் பொறுமையோடு செவிமடுத்துக் கேட்டமைக்காக உங்களுக்கு நன்றி தெரிவித்துக்கொண்டு என்

பேச்சை முடித்துக்கொள்கிறேன். நம்மை எதிர்நோக்கும் பணிகளை இனிச் செய்யத் தொடங்குவோம்.''

## டாக்டர் அம்பேத்கரின் தனி அறிக்கை

முத்தரப்புத் தொழிலாளர் மாநாட்டிலும் அதன் தொழிலாளர் நிரந்தரக் குழுவிலும் நடைபெற்ற விவாதங்களைத் தொடர்ந்து மத்திய அரசாங்கம் எத்தகைய நடவடிக்கைகளை எடுத்துள்ளது என்பதை தொழிலாளர் மாநாட்டில் தாம் சமர்ப்பித்த தனி அறிக்கை யிலும் டாக்டர் அம்பேத்கர் எடுத்துரைத்துள்ளார். இந்த அறிக்கையில் இடம்பெற்றுள்ள விஷயங்களில் பின்வருபவையும் அடங்கும்: தொழில் தகராறுகளுக்குத் தீர்வு காணுதல், தொழிலாளர் நலம், தொழில் துறைத் தொழிலாளர்களுக்கு உணவு வழங்கீடு, அரசாங்க ஒப்பந்தங்களில் நியாய ஊதியங்களை நிர்ணயித்தல், தொழில் நிலை யங்களில் தொழிலாளர் நல அதிகாரிகளை நியமித்தல், வேலை வாய்ப்பு அலுவலகங்கள், தொழில்துறைப் புள்ளிவிவரங்கள், வேலை யில்லாத் திண்டாட்டம், தொழிலாளர் பிரதிநிதித்துவம், சமூகப் பாது காப்பு, அகவிலைப்படி, தொழில் நிலையச் சிற்றுண்டிச் சாலைகள்.

இந்திய அரசாங்கம் வேலைவாய்ப்பு நிலையங்களை அமைக்கத் தொடங்க வேண்டும் என்று 1943 மே மாதம் நடைபெற்ற தொழிலாளர் நிரந்தரக் குழுவின் மூன்றாவது கூட்டத்தில் ஒருமித்த கருத்து நிலவியது. தொழில்நுட்ப ஊழியர்கள் தேவை என்று விளம் பரம் செய்வதைத் தடைசெய்ய வேண்டும் என்று மத்திய அரசு முன் வைத்த பிரேரணை பொதுவாக ஏற்கப்பட்டது. இந்த இரண்டு பிரே ரணைகளும் செயல்படுத்தப்பட்டன. தொழில் நுட்ப ஊழியர்களுக்கு வேலைவாய்ப்பு அளிப்பதற்காக பல மையங்களில் வேலைவாய்ப்பு நிலையங்கள் தொடங்கப்பட்டன. (1) தொழில் தகராறுகள் துரித மாகத் தீர்த்து வைக்கப்பட வேண்டும், (2) தற்போது நடைமுறை யிலுள்ள 1929 ஆம் வருட தொழில் தகராறுகள் சட்டத்திற்குப் பதிலாக புதிய சட்டம் இயற்றப்பட வேண்டும், நிர்வாகத்துக்கும் தொழி லாளர்களுக்கும் இடையே சமரச உணர்வை ஊக்குவிக்கும் வகை யில் புதிய சட்டம் அமைந்திருக்க வேண்டும் என்று கூட்டத்தில் பொதுவான கருத்து நிலவியது. புதிய தொழில் தகராறுகள் சட்டத்தை இயற்றும் யோசனை மத்திய அரசாங்கத்தின் பரிசீலனையில் உள்ளது; அதேசமயம், தொழில் தகராறுகளைத் தாமதமின்றித் தீர்த்துவைக்கும் படி மாகாண அரசாங்கங்களுக்குக் கூறப்பட்டுள்ளது.

## பெவின் பயிற்சித் திட்டம்

இந்தக் கூட்டத்தில் மற்றொரு விஷயமும் எழுப்பப்பட்டது; பெவின் பயிற்சியாளர்களைத் தேர்ந்தெடுப்பதில் தொழிற்சங்க அமைப்புகள் தேசிய சேவை தொழிலாளர் முறை மன்றங்களுடன் இணைந்து செயல்பட வேண்டும் என்றும், பயிற்சியாளர்களைத் தேர்ந்தெடுக்கும் சமயத்தில் இந்த முறை மன்றங்கள் அந்தப் பிரதேசத்திலுள்ள பிரதான தொழிற்சங்கங்களைக் கலந்தாலோசிக்க வேண்டும் என்றும் கூறப்பட்டது. பயிற்சியாளர்களைத் தேர்ந்தெடுப்பதில் இத்தகைய முறையைக் கடைப்பிடிக்கும் விஷயம் பரிசீலனையில் உள்ளது. தொழிலாளர்களின் நலன்கள் துறையில், சேமநல நிதியானது குடியிருப்பு வசதி செய்துதருதல், கல்வி முதலியவற்றுக்குப் பயன்படுத்தப்பட வேண்டும் என்ற குழுவின் யோசனை அரசாங்கத்தின் பரிசீலனையில் உள்ளது. ஆனால் இது சம்பந்தமாக நடைமுறை சாத்தியமான திட்டம் எதையும் வகுப்பதில் பெரும் சிரமங்களும் சிக்கல்களும் உள்ளன என்று டாக்டர் அம்பேத்கரின் அறிக்கை கூறுகிறது.

தொழில் நிலையங்களின் நிர்வாகம், அங்கீகரிக்கப்பட்ட தொழிற்சங்கங்கள் மற்றும் ஊழியர்களின் இதர பிரதிநிதித்துவ அமைப்புகள் போன்றவை நடத்தும் தானியக் கடைகள் மூலம் தொழில்துறைத் தொழிலாளர்களுக்கு உணவுப் பொருள்கள் வழங்கப்பட வேண்டும் என்றும், தொழில்துறை தொழிலாளர்களுக்கு கூட்டுறவு தானியக் கடைகள் அமைக்கப்பட வேண்டும் என்றும் பரிந்துரைத்து 1943 ஜனவரியில் நடைபெற்ற தொழிலாளர் நிரந்தரக் குழுவின் இரண்டாவது கூட்டத்தில் ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. இந்தப் பரிந்துரைகள் சம்பந்தப்பட்ட அதிகாரிகளின் கவனத்துக்குக் கொண்டுவரப்பட்டன. ஆனால் பெரிய நகரங்களிலும் அவற்றையடுத்துப் படிப்படியாக சிறிய நகரங்களிலும் உணவுப் பொருள்கள் பங்கீட்டு முறை நடைமுறைக்குக் கொண்டுவரப்பட்டதைத் தொடர்ந்து இந்தப் பரிந்துரைகள் காலத்துக்கு ஒவ்வாதவையாகி விட்டன. எனினும் பங்கீட்டுத் துறை அதிகாரிகள் தொழிற்சாலைகளின் நிர்வாகங்கள் நடத்தும் உணவு தானியக் கடைகளைக் கூடிய மட்டும் பயன்படுத்தி வருகின்றன.

## நியாய ஊதிய விதி

1943 மே மாதம் நடைபெற்ற தொழிலாளர் நிரந்தரக் குழுவின் மூன்றாவது கூட்டத்தில் அரசாங்க ஒப்பந்தங்களில் நியாய ஊதி

யத்தை உத்தரவாதம் செய்யும் ஓர் விதியைச் சேர்ப்பது குறித்து ஒரு நியாயமான உடன்பாடு ஏற்பட்டது பற்றி அம்பேத்கரின் அறிக்கையில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. மத்தியப் பொதுப் பணித்துறை ஒப்பந்தங்களில் மத்திய அரசாங்கம் ''நியாய் ஊதியம்'' குறித்த விதியை சேர்த்திருப்பது இந்தச் சந்தர்ப்பத்தில் குறிப்பிடப்பட்டது.

அனைத்துப் பெரிய தொழில் நிலையங்களிலும் கூடிய மட்டும் தொழிலாளர் நல அதிகாரிகளை நியமிக்க வேண்டும் என்ற பரிந்துரையை மத்திய அரசாங்கம் தனக்குச் சொந்தமான தொழில் நிலையங்களில் செயல்படுத்தி வருகிறது. மாகாண அரசாங்கங்களும், சமஸ்தான அரசாங்கங்களும், தனியார் தொழில் நிலையங்களும் இவ்வாறே செய்யும்படிக் கேட்டுக்கொள்ளப்பட்டுள்ளன. ஊழியர் நலத்துறை அதிகாரிகளைத் தாங்கள் நியமித்திருப்பதாக இந்திய சுரங்க உரிமையாளர் சங்கத்தினர் அறிவித்துள்ளனர்.

தொழில் தகராறுகள் சம்பந்தப்பட்ட விஷயங்களை மத்தியஸ்துக்கான உத்தரவில் குறிப்பிட வேண்டும் என்ற குழுவின் பரிந்துரை ஏற்கப்பட்டு, அதற்கிணங்க இந்தியப் பாதுகாப்பு விதி 8 (அ) மாற்றப்பட்டிருக்கிறது. விசாரணையில் உள்ள அல்லது தகராறில் நேரடியாகச் சம்பந்தப்பட்ட தொழிலாளர்களை தகராறில் சம்பந்தமில்லாத அவர்களது தவறான நடத்தைக்காகவோ, மத்தியஸ்தரின் அல்லது இது சம்பந்தமாக நியமிக்கப்படும் வேறு எந்த அதிகாரியின் அனுமதியின்றியோ தொழிலதிபர்கள் வேலையிலிருந்து நீக்கக்கூடாது என்னும் ஒரு விதியை மத்தியஸ்த உத்தரவில் சேர்ப்பது உசிதமானது என்று மாகாண அரசாங்கங்களின் கவனத்துக்குக் கொண்டு வரப்பட்டிருக்கிறது. குறிப்பிட்ட முக்கிய தொழில்களில் நிலவும் ஊதிய விகிதங்கள், வருவாய்கள், வேலை நேரம் முதலியவை சம்பந்தப்பட்ட புள்ளி விவரங்களை அகில இந்திய அளவில் சேகரிக்கும் விஷயம் தீவிர பரிசீலனையில் உள்ளது.

## வேலை இழத்தல்

நிலக்கரி, கச்சாப் பொருள்கள் முதலியவற்றின் பற்றாக்குறை காரணமாக வேலை இழக்கும் தொழிலாளர்களுக்கு ஏதேனும் ஒரு வகையான நிவாரணம் வழங்க வேண்டும் என்று 1943 செப்டம்பரில் கூடிய ஐந்தாவது தொழிலாளர் மாநாட்டின் கூட்டத்தொடரில் ஒருமனதாக ஒப்புக்கொள்ளப்பட்டது. இத்தகைய நிவாரணம் அளிப்பது சம்பந்தமான கோட்பாடுகளைக் கடைபிடித்தொழுகும்படி வலி

யுறுத்தி மாகாண அரசாங்கங்களுக்கு மத்திய அரசாங்கம் ஒரு சுற்றுக் கடிதத்தை அனுப்பியுள்ளது; சம்பந்தப்பட்ட சமஸ்தானங் களின் கவனத்துக்கும் இந்தக் கடிதம் கொண்டுவரப்பட்டிருக்கிறது. சட்டமன்றங்கள், ஸ்தல ஸ்தாபன அமைப்புகள், சட்டக் குழுக்கள் போன்றவற்றில் தங்களுக்குப் போதிய பிரதிநிதித்துவம் அளிக்கப் பட வேண்டும் என்று இந்தக் கூட்டத் தொடரில் தொழிலாளர் பிரதிநிதிகள் பெரிதும் வலியுறுத்தினர். இந்த விஷயம் பரிசீலனை யில் உள்ளது என்று குறிப்பிட்டிருக்கும் டாக்டர் அம்பேத்கரின் அறிக்கை கொள்கைப் புனரமைப்புக் குழுக்கள், மத்திய சுகாதார ஆய்வுக் குழு, அபிவிருத்திக் குழு, மத்திய உணவு ஆலோசனைக் குழு போன்ற பல ''மத்திய'' அரசாங்கக் குழுக்களில் தொழிலாளர் களுக்குப் பிரதிநிதித்துவம் அளிக்கப்பட்டிருப்பதைச் சுட்டிக்காட்டி யிருக்கிறது.

## ஊதியங்களும் வருமானங்களும்

தொழிலாளர்களின் ஊதியங்கள், வருமானங்கள், வேலை வாய்ப்பு, குடியிருப்பு வசதிகள், சமூக நிலைமைகள் முதலியவற்றை விசாரித்தறிவதற்கு ஓர் அமைப்பு ஏற்படுத்துவது சம்பந்தமான தீர் மானம் ஒன்றை கூட்டத்தொடர் ஏற்றது; தொழிலாளர்களின் சமூகப் பாதுகாப்பு சம்பந்தமான ஒரு கொள்கையைத் திட்டமிட்டு உரு வாக்குவதற்கு அவசியமான தகவல்களைச் சேகரிப்பதே இதன் நோக்கமாகும். இத்தீர்மானத்துக்கு இணங்க தொழிலாளர் விசா ரணைக் குழு ஒன்று அமைக்கப்பட்டிருக்கிறது; அதன் அறிக்கை 1945ஆம் ஆண்டு மத்தி வாக்கில் கிடைக்கும் என்று எதிர்பார்க்கப் படுகிறது.

250 அல்லது அதற்கும் மேற்பட்ட தொழிலாளர்களை வேலைக்கு அமர்த்திக் கொண்டிருக்கும் தொழில் நிலையங்களில் நிலையாணைகள் முறையை நடைமுறைக்குக் கொண்டுவரும் விஷ யத்தில் மாகாண அரசாங்கங்களும், சமஸ்தானங்களும், தொழி லதிபர்கள் மற்றும் தொழிலாளர்களின் அமைப்புகளும் கலந்தாலோ சிக்கப்பட்டன என்று டாக்டர் அம்பேத்கரின் அறிக்கை சுட்டிக் காட்டியிருக்கிறது. இந்த விஷயம் குறித்து கூடிய விரைவில் ஒரு நிரந்தர சட்டம் இயற்ற உத்தேசிக்கப்பட்டுள்ளது. இந்தச் சட்டம் இயற்றும் பணி பூர்த்தியடைவதற்குக் காத்துக் கொண்டிராமல் உடனடியாக நிலையாணைகளைத் தயாரிக்கும்படி இரண்டு அகில இந்திய தொழிலதிபர்களின் அமைப்புகளும் கேட்டுக்கொள்ளப்

பட்டுள்ளன. இத்தகைய நிலையாணைகளைத் தயாரிப்பதற்குத் தொழிலதிபர்களுக்கு உதவும் நோக்கத்தோடு ஓர் அறிக்கை தயாரிக்கப்பட்டு அவர்களுக்கு அனுப்பப்பட்டிருக்கிறது.

சட்டப்படியாக ஊதியங்களை ஒழுங்குபடுத்துவது சம்பந்தமாக நான்காவது தொழிலாளர் நிரந்தரக் குழுவில் நடைபெற்ற விவாதத்தின் பயனாக இது விஷயமாக ஓர் அமைப்பை நிறுவியது குறித்து ஓர் உடன்பாடு ஏற்பட்டது. இந்தச் சட்டத்தை எந்தெந்தத் தொழில்களுக்குப் பயன்படுத்துவது என்னும் பிரச்சினை தொழிலாளர் மாநாட்டின் இப்போதைய கூட்டத் தொடரின் நிகழ்ச்சி நிரலில் இடம் பெற்றிருக்கிறது.

## தொழில் நிலையச் சிற்றுண்டிச்சாலைகள்

தொழில்கள் என்பதற்கு ஒரேமாதிரியான பொருள் வரையறை செய்வது சம்பந்தமாக ஆராய பம்பாய், ஐக்கிய மாகாணங்கள், வங்காளம், பீகார் ஆகிய நான்கு மாகாணங்களில் குழுக்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன; இந்தக் குழுக்களின் பரிந்துரைகள் எதிர்பார்க்கப்படுகின்றன. இந்தக் கூட்டத்தில் தெரிவிக்கப்பட்ட யோசனையின்படி, வேலைவாய்ப்பு நிலையங்களை நிர்வகிப்பது சம்பந்தமாக தேசிய சேவை தொழிலாளர் முறைமன்றங்களுக்கு ஆலோசனைகள் கூறி உதவும் பொருட்டு அமைக்கப்பட்டிருக்கும் வேலைவாய்ப்புக் குழுக்கள் மூலம் தொழிலாளர் பிரதிநிதிகள் மத்திய வேலைவாய்ப்பு அமைப்புடன் தொடர்பு கொண்டுள்ளனர்.

தொழில் நிலையங்களில் தொழிலாளர்களின் சிற்றுண்டிச்சாலைகளை ஊக்குவிப்பதற்கு மத்திய அரசாங்கம் எடுத்துள்ள நடவடிக்கைகளை டாக்டர் அம்பேத்கர் அறிக்கை குறிப்பிடுகிறது. அரசாங்கமோ, தொழிலாளர்களோ நடத்தும் சிற்றுண்டிச்சாலைகளுக்கும் அல்லது இவ்விரு தரப்பினருமே சேர்ந்து நடத்தும் சிற்றுண்டிச்சாலைகளுக்கும் சில நிபந்தனைகளுக்கு உட்பட்டு ஒப்பந்தக்காரர்கள் நடத்தும் சிற்றுண்டிச்சாலைகளுக்கும் கூட வாடகை இல்லாமல் இடமும், இலவசமாக தட்டு முட்டுப் பொருள்களும், சமையல் பாத்திரங்களும் பிறவும் வழங்கப்படுகின்றன. இதல்லாமல் ரேஷன் விதிமுறைகளுக்கு அப்பாற்பட்டு ரேஷன் உணவுப்பொருள்களும் இச் சிற்றுண்டிச் சாலைகளுக்கு தரப்படுகின்றன.



# 37

# [1]தொழிற்சாலைகள் (இரண்டாவது திருத்த) மசோதா

## [2]ஆலைத் தொழிலாளர்களுக்கு ஊதியத்துடன் கூடிய விடுமுறைகள்

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்) : ஐயா, பின்கண்டவாறு முன்மொழிகிறேன்:*

> *''1934 ஆம் வருட தொழிற்சாலைகள் சட்டத்தை மேலும் திருத்தும் (இரண்டாவது திருத்தம்) இந்த மசோதா பின்வருவோர் அடங்கிய பொறுக்குக் குழுவின் பரிசீலனைக்கு விடப் படுகிறது: நவாப் சித்திக்கு அலிகான், கான் பகதூர் ஷேக் பஸில்-இ-ஹக் பிராசா, திரு. ஆர்.ஆர். குப்தா, திரு. ஏ.சி. இன்ஸ்கிப், சர் வித்தல் என். சந்தவர்கர், ராவ் பகதூர் என். சிவ ராஜ், திரு. என்.எம். ஜோஷி, திரு. டி.எஸ். ஜோஷி மற்றும் இம்மசோதாவை முன்மொழிபவர். குழுவின் எந்த ஒரு கூட்டமும் சட்டபூர்வமானதாகக் கருதப்படுவதற்கு அக்கூட்டத்தில் ஐந்து உறுப்பினர்கள் பிரசன்னமாகி இருப்பது அவசியம்.''*

இந்த மசோதாவின் ஷரத்துகள் இரண்டு பகுதிகளாக அமைந்துள்ளன. விஷயத்தைத் தெளிவாகப் புரிந்து கொள்ளும் பொருட்டு மசோதாவின் ஷரத்துகளை இரு பகுதிகளாகப் பிரித்து சபைக்கு விளக்கினால் உசிதமாக இருக்கும் என்று கருதுகிறேன்.

மசோதாவின் முதல் பகுதி கட்டாய விடுமுறைகளுக்குப் பதிலாக இழப்பீட்டு விடுமுறைகளை அளிப்பது சம்பந்தப்பட்டதாகும். தொழிற்சாலைகள் சட்டம் 35 ஆவது பிரிவின்படி தொழிற்சாலையிலுள்ள ஒவ்வொரு வயது வந்த தொழிலாளிக்கும் ஒரு கட்டாய விடுமுறை அளிக்க தொழிற்சாலையின் உரிமையாளர்

---

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, நவம்பர் 1, 1944, பக்கங்கள் 89-91.
2. பத்திகளுக்குத் தரப்பட்டுள்ள தலைப்புகள் இந்தியத் தகவல் ஏட்டிலிருந்து எடுக்கப் பட்டவை, நவம்பர் 15, 1944, பக்கங்கள் 600 - 01.

அல்லது நிர்வாகி கடமைப்பட்டுள்ளார் என்பது உறுப்பினர்க ளாகிய உங்கள் அனைவருக்கும் தெரியும். 35ஆவது பிரிவில் அடங்கி யுள்ள இந்த விதி 43, 44 ஆவது பிரிவுகளில் அடங்கியுள்ள விதி களுக்கு உட்பட்டதாகும். 35ஆவது பிரிவு விதித்துள்ள கடமைப் பொறுப்புகளிலிருந்து தொழிற்சாலையின் உரிமையாளர் அல்லது நிர்வாகிக்கு தொழிற்சாலைகளின் கண்காணிப்பாளர் விதிவிலக்கு அளிக்க 43, 44 ஆவது பிரிவுகள் வழிவகை செய்கின்றன. ஆனால் இத்தகைய விதிவிலக்குகள் அளிக்கப்படும்போது, அதே எண் ணிக்கை யுள்ள இழப்பீட்டு விடுமுறைகளைக் கொண்டு அவை சமன் செய்யப்பட வேண்டும் என்ற கருத்து நிலவுகிறது. மேலும், தொழிலாளியின் ஆரோக்கியத்தையும் வேலை செய்யும் ஆற்றலை யும் பராமரிப்பதற்கு சட்டம் நிர்ணயித்துத் தந்துள்ள விடுமுறை நாட்களை அவன் பெறுவது அவசியம். இப்போதைய சட்டம் இழப்பீட்டு விடுமுறைகளுக்கு வழிவகை ஏதும் செய்யவில்லை. எனவே, இந்தக் குறைபாட்டை அகற்றும் பொருட்டு மசோதாவில் 2 ஆவது ஷரத்து சேர்க்கப்பட்டிருக்கிறது. இதன்படி, 35ஆவது பிரிவின் கீழ் விதிவிலக்குகள் அளிக்கப்படும்போதெல்லாம் தொழிலாளர் களுக்கு அவற்றுக்கு இணையான எண்ணிக்கையில் இழப்பீட்டு விடுமுறைகள் வழங்க மாகாண அரசாங்கங்கள் விதிமுறைகளை வகுத்தளிக்க வேண்டும். இதுதான் மசோதாவிலுள்ள ஷரத்துக் களின் முதல் பகுதியின் சாராம்சமாகும்.

## பொது இணக்க ஒப்பந்தம்

மசோதாவின் இரண்டாவது பகுதியை எடுத்துக் கொண்டால், அது சம்பளத்துடன் விடுமுறைகள் அளிக்கும் பிரச்சினையைக் கையாள்கிறது. மசோதாவின் இந்தப் பகுதியினது தோற்றுவாயைப் பற்றி இங்கு முதலில் கூறுவது உசிதமானதாக இருக்கும். சம்பளத் துடன் விடுமுறைகள் அளிப்பது சம்பந்தமான ஒரு பொது இணக்க ஒப்பந்தம் பற்றிய தீர்மானத்தை 1936ல் சர்வதேச தொழிலாளர் மாநாடு இயற்றியது இந்த அவையைச் சேர்ந்த பல உறுப்பினர் களுக்கு நினைவிலிருக்கும். அந்த சர்வதேச தொழிலாளர் மாநாட் டில் பங்கு கொண்ட இந்திய அரசாங்கம் இந்தப்பொது இணக்க ஒப்பந்தத்தை ஏற்பதற்கும் அதனை உறுதிசெய்வதற்கும் தயாராக இல்லை. இந்தப் பொது இணக்க ஒப்பந்தத்தை ஏற்கக்கூடாது என்ற கூறும் ஒரு தீர்மானத்தை 1937 ஜூலை 26ஆம் தேதி சட்ட மன்றத்தில் அரசாங்கம் கொண்டு வந்தது. தீர்மானம் நிறைவேறியது. ஆனால் இந்த ஒப்பந்தத்தை ஊர்ஜிதம் செய்யும் நிலையில்

அரசாங்கம் இல்லாத போதிலும், தீர்மானத்தைக் கொண்டுவந்த உறுப்பினர் ஒரு விஷயத்தைக் கூறினார்; அதாவது, இந்த ஒப்பந்த விஷயத்தில் எந்த அளவுக்கு பொதுவான உடன்பாடு நிலவுகிறது என்பதைக் கண்டறிவதற்கு மாகாண அரசாங்கங்களையும், தொழிலதிபர்கள் மற்றும் தொழிலாளர்களைப் பிரதிநிதித்துவப்படுத்தும் அமைப்புகளுடன் கலந்தாலோசித்து, இந்த ஒப்பந்தத்தை முழுமையாக அல்லாவிட்டாலும் அதன் ஒரு பகுதியையாவது செயல்படுத்தும் சாத்தியக்கூறுகள் பற்றி அரசாங்கம் பரிசீலிக்கும் என்று அவர் தெரிவித்தார். இத்தகைய பரிசீலனையின் விளைவாகவும், இது சம்பந்தமாக பல ஆண்டுகாலம் நடைபெற்ற கருத்துப் பரிமாற்றத்தின் விளைவாகவுமே சம்பளத்துடன் விடுமுறைகள் அளிப்பதற்கு வகை செய்யும் ஷரத்துகள் அடங்கிய இந்த இரண்டாவது பகுதி உருவாயிற்று. எனலாம்.

## ஆண்டு முழுதும் பணி தொடரும் தொழிற்சாலைகள்

இனி மசோதா முழுவதையும் எடுத்துக் கொண்டால், அது தொழிற்சாலைகள் சம்பந்தப்பட்டது என்பது தெரியவரும்; ஆனால் இம்மசோதா எல்லாத் தொழிற்சாலைகளுக்கும் பொருந்தாது; ஆண்டு முழுதும் பணி தொடரும் தொழிற்சாலைகளுக்கு மட்டுமே பொருந்தும். 1936ல் சர்வதேச மாநாட்டில் ஏற்கப்பட்ட ஒப்பந்தத்தின் ஷரத்துகளுடன் ஒப்பிடும்போது இந்த மசோதாவின் குறியிலக்கு ஒரு வரையறைக்குட்பட்டதே ஆகும். ஏனைய ஷரத்துகளைப் பொறுத்தவரையில், நான் சொல்ல வேண்டியதை நான்கு பகுதிகளாகப் பிரித்துக் கூறுவதே உசிதமாக இருக்கும் என்று கருதுகிறேன்; அப்போதுதான் சம்பளத்துடன் கூடிய விடுமுறைகள் சம்பந்தமான சட்டங்கள் குறித்த பின்கண்ட நான்கு விஷயங்களைத் தனித் தனியாகக் கையாள்வது சாத்தியமாகும்:

1. விடுமுறையின் கால அளவு. (2) விடுமுறை பெறுவதற்கான தகுதிகள். (3) வரையறுக்கும் நிபந்தனைகள். (4) விடுமுறை காலச் சம்பளம். முதல் விஷயத்தை அதாவது விடுமுறையின் கால அளவைப் பொறுத்தவரையில் 49-பி என்னும் புதிய பிரிவில் இது கையாளப்பட்டிருக்கிறது; தொழிற்சாலைகள் சட்டத்தில் இந்தப் புதிய பிரிவை சேர்க்க வேண்டும் என்று இந்த மசோதா பிரரேபித்துள்ளது. இந்தப் பிரிவின்படி, தொடர்ந்து ஓராண்டுக் காலம் பணி புரியும் ஒரு தொழிலாளிக்கு மொத்தம் தொடர்ச்சியாக ஏழு நாள் விடுமுறை கிடைக்கும். நாம் ஏன் ஏழு நாட்கள் என்று நிர்ணயித்

திருக்கிறோம், அதற்கும் அதிகமாக ஏன் நிர்ணயிக்கக் கூடாது என்று கேட்கக்கூடும். 1936 ஆம் வருட ஜெனீவா ஒப்பந்தம் விடுமுறை நாட்களில் எண்ணிக்கையை ஆறு என்று நிர்ணயித்திருக்கிறது; இந்த ஒப்பந்தத்தைப் பின்பற்றியே நாம் ஏழு நாட்கள் என்று நிர்ண யித்திருக்கிறோம். ஜெனீவா ஒப்பந்தம் கூறும் ஆறு நாட்களுடன் தொழிற்சாலைகள் சட்டத்தின் 35 ஆவது பிரிவின்படி வழங்கப்படும் கட்டாய வார ஓய்வு நாளையும் சேர்த்து ஏழு நாட்கள் என்று நாம் நிர்ணயித்திருக்கிறோம்.

ஏழு நாட்கள் விடுமுறை கோருவதற்கு ஒரு தொழிலாளி எப்போது தகுதி பெறுவார் என்ற விஷயம் சம்பந்தமாக மசோதா வில் பின்கண்ட ஷரத்துகள் அடங்கியுள்ளன. உண்மையில் அதற்கு ஒரே ஒரு நிபந்தனைதான் விதிக்கப்பட்டுள்ளது; அதாவது ஒரு தொழி லாளி தொடர்ந்து பன்னிரண்டு மாதங்கள் பணியாற்றி இருக்க வேண்டும் என்பதுதான் அந்த நிபந்தனை. இதைத்தவிர இது விஷ யத்தில் வேறு நிபந்தனை ஏதும் இல்லை. தொடர்ந்து பன்னிரண்டு மாதங்கள் பணியாற்ற வேண்டும் என்றால் என்ன என்பதைப் பொறுத்த வரையில், சில இடையீடுகளை மசோதா அனுமதிப்பதோடு, இந்த இடையீடுகளைக் காரணம் காட்டி சம்பளத்துடன் கூடிய விடு முறைகளைப் பெறும் உரிமையை மறுக்கலாகாது என்றும் கூறு கிறது. நோய்வாய்ப்படுதல், விபத்துக்குள்ளாகுதல், அங்கீகரிக்கப் பட்ட விடுப்பு, கதவடைப்புக் காலம், சட்டரீதியான வேலை நிறுத்தக் காலம் முதலியவற்றை இடையீடுகள் பட்டியலில் மசோதா சேர்த்துள்ளது.

### வேலையின்றி இருத்தல்

இதே விஷயம் குறித்து மசோதாவில் மற்றொரு ஷரத்தும் இருக்கிறது. தொழிற்சாலை உரிமையாளரின் விருப்பம் காரணமாக தொழிற்சாலை மூடப்படும்போது தொழிலாளர்கள் வேலையின்றி இருக்கும் பிரச்சினையே அது. இவ்வாறு தொழிற்சாலை மூடப் பட்டிருக்கும் காலத்தை 30 நாட்கள் என்று நிர்ணயித்திருக்கிறோம். தொழிற்சாலை நிர்வாகியின் நடவடிக்கை காரணமாக தொழிலாளர் கள் வேலையில்லாதிருக்கும் காலம் 30 நாட்களுக்கு மேல் செல்ல வில்லை என்றால், தொழிலாளர்கள் சம்பளத்துடன் விடுமுறை பெறும் உரிமை பாதிக்கப்படாது. 30 நாட்கள் மட்டும் என்று நிர்ண யித்திருப்பது ஏன் என்று கூறுவது அவசியம். இதற்கான விளக்கம் இதுதான். சம்பளத்துடன் கூடிய விடுமுறை என்னும்போது அவ்வாறு சம்பளம் கொடுக்கும் ஆற்றல் தொழிற்சாலையின் நிர்வாகிக்கு

அல்லது உரிமையாளருக்கு இருக்கிறதா என்பதைக் கணக்கி லெடுத்துக் கொள்வது அவசியமாகிறது. தொழிற்சாலையின் நிர்வாகி அல்லது உரிமையாளர் தனது ஆலையை 30 நாட்களுக்கும் அதிகமாக மூட வேண்டியிருந்தால், அப்போது அவர் நிலைமை உண்மை யில் செழிப்பு மிக்கதாக இருக்காததால் அவரால் சம்பளத்துடன் கூடிய விடுமுறைகளுக்கு ஆகும் செலவை ஏற்கும் நிலையில் இருக்க மாட்டார் என்ற நியாயமான ஊகத்தை மசோதா கருத்திற் கொள் கிறது. ஆனால் தொழிற்சாலை மூடப்பட்டு தொழிலாளர்கள் வேலை செய்ய இயலாதிருக்கும் நாட்கள் 30க்கும் அதிகமாக இல்லை என்றால், அப்போது தொழிற்சாலையின் நிர்வாகி அல்லது உரிமை யாளர் சம்பளத்துடன் விடுமுறை அளிப்பதற்கு ஆகும் செலவை ஏற்கக்கூடிய நிலையில் இருப்பார் என்று கருதப்படுகிறது. இதனால் அவர் அந்த செலவை ஏற்பதும் நியாயம் என்றாகிறது.சம்பளத் துடன் கூடிய விடுமுறை சம்பந்தமாக மசோதா ஒரு நிபந்தனை யையும் விதிக்கிறது; இந்த விடுமுறைகளை ஒரு தொழிலாளி எத்தனை நாள் சேர்த்து வைக்கலாம் என்பது குறித்ததே இந்த நிபந்தனை. சம்பளத்துடன் கூடிய விடுமுறைகள் பெறுவதற்குத் தகுதிபெற்ற ஒரு தொழிலாளி இரண்டு வருட காலத்துக்கு அந்த விடுமுறைகளைச் சேர்த்து வைக்கலாம் அதாவது மொத்தம் 14 நாட்கள் சேர்த்து வைக்கலாம்.

## விடுமுறை காலத்துக்கு ஊதியம்

விடுமுறை காலத்துக்கு ஊதியம் அளிக்கும் விஷயத்தைப் பொறுத்தவரையில் இது சம்பந்தமாக பல விஷயங்களை அவையின் கவனத்துக்குக் கொண்டுவர விரும்புகிறேன். முதலாவதாக, மொத்த விடுமுறைக்காலம் ஏழு என்றாலும் ஆறு நாட்களே சம்பளத்துடன் கூடிய விடுமுறை நாட்களாக அளிக்கப்பட்டுள்ளன. இரண்டாவதாக நான் ஏற்கெனவே குறிப்பிட்டது போன்று, 35 ஆவது பிரிவின்படி ஏழாவது நாள் உண்மையில் வார ஓய்வு நாளாகும். இந்த ஏழாவது நாளைப் பொறுத்தவரையில் இதற்கு தொழிற்சாலை உரிமையாளர் சம்பளம் அளிக்க வேண்டும் என்று மசோதா கட்டாயப்படுத்த வில்லை. ஆனால் அதேசமயம் இவ்வாறு சம்பளம் கோருவதற்குத் தொழிலாளிக்குள்ள உரிமையை மசோதா மறுக்கவில்லை; எனினும் தொழிற்சாலை உரிமையாளருடன் தொழிலாளர்கள் செய்து கொண்ட ஒப்பந்தத்தில் ஏழாவது ஓய்வு நாளுக்கும் சம்பளம் தர இரு தரப்பாரும் ஒப்புக்கொண்டிருக்க வேண்டும்; இதற்கு இது ஒரு முக்கிய நிபந்தனை. இவ்விதம் இந்த விஷயம் பணி ஒப்பந்தத்துக்கு உள்ளாக்கப்பட்டிருக்கிறது.

இந்த ஆறு விடுமுறை நாட்களுக்கும் ஊதியம் அளிப்பது குறித்த மூன்றாவதொரு விஷயமும் இருக்கிறது. இது சம்பந்தமாக ஏற்கத்தக்க, நியாயமான ஒரு விதியை மசோதாவில் சேர்த்திருக் கிறோம். அந்த விதி இதுதான்: முந்திய மூன்று மாதங்களில் மிகை நேர ஊதியம் தவிர்த்து, ஒரு தொழிலாளி சராசரியாக பெற்ற ஊதியத் துக்கு இணையான தொகையை அவனுக்கு வழங்க வேண்டும். இது நேர்மையான கோட்பாடு என்றே கருதுகிறேன். ஒரு தொழிலாளி விடுமுறையில் செல்லும்போது அவனுக்கு சில வசதிகள் செய்து தருவதற்கும் மசோதா வழிவகை செய்கிறது; அதாவது அவன் விடுமுறையில் செல்லும் அன்று அவனுக்கு ஓரளவு பண வசதி செய்து தரும் பொருட்டு, அவனுக்குக் கிடைக்க வேண்டிய பணத்தில் பாதியை விடுமுறை தொடங்கும்போதே வழங்குவதற்கு மசோதா ஏற்பாடு செய்கிறது.

இது சம்பந்தப்பட்ட மற்றொரு விஷயத்தையும் இங்கு குறிப் பிட வேண்டும். இந்த மசோதா அதன் செயற்பாட்டிலிருந்து சில குறிப்பிட்ட தொழிற்சாலைகளுக்கு விதிவிலக்கு அளிக்க உத்தேசித் திருக்கிறது; மசோதாவில் குறிப்பிடப்பட்டிருப்பதற்குப் பெருமள வுக்கு ஒத்துள்ள விதத்தில் சம்பளத்துடன் விடுமுறைகள் அளிப்பவை யும், அவற்றின் நடத்தை பற்றி மாகாண அரசாங்கங்களின் நற் சான்றைப் பெற்றிருப்பவையுமான தொழிற்சாலைகளை இவ்வகை யில் குறிப்பிடலாம். சட்டத்தில் குறிப்பிடப்பட்டிருக்கும் அதே சலுகைகள் வழங்கப்படுவதற்கு தொழிலதிபர்களுக்கும் தொழிலாளி களுக்கும் இடையே அவர்களது விருப்பார்வ அடிப்படையில் ஒரு சுமுகமான ஏற்பாடு செய்துகொள்ளப்பட்டிருக்கும் பட்சத்தில் இந்திய சட்டம் தலையிட வேண்டியதில்லை என்பதே இந்த ஷரத்தில் பொதிந்திருக்கும் அடிப்படைக் கருத்தாகும்.

ஐயா, இவைதாம் இந்த மசோதாவின் பிரதான ஷரத்து களாகும். என் உரையை முடித்து அமர்வதற்கு முன்னர் வேறு இரண்டு விஷயங்களையும் இங்கு குறிப்பிட விரும்புகிறேன். முதல் விஷயம் ஒரு தொழிலாளி தனது விடுமுறை ஊதியத்தைப் பெறாத படி தடுப்பதற்கு அவனை தொழில் நிலைய உரிமையாளர் வேலையிலிருந்து நீக்குவது சம்பந்தப்பட்ட விஷயமாகும். இரண் டாவது விஷயம் ஒரு தொழிலாளி சம்பளத்துடன் கூடிய தனது விடுமுறைகளைப் பயன்படுத்திக் கொள்ளாதபடி தொழிற்சாலை உரிமையாளர் அவனைத் தூண்டி இணக்குவிக்கச் செய்வதாகும்.

இந்த இரண்டு பிரச்சினைகளுக்கும் மசோதாவில் பரிகாரம் ஏதும் காணப்படவில்லை என்பதை பட்டவர்த்தனமாக ஒப்புக்கொள் கிறேன். இத்தகைய பிரச்சினைகள் எழக்கூடும் என்பதை அரசாங்கம் உணர்ந்திருக்கவில்லை என்று இதற்குப் பொருள் அல்ல; மாறாக, குறைந்தபட்சம் இப்போதைய கட்டத்தில் இத்தகைய நிலைமைகள் எழக்கூடும் என்று கருதுவதற்கு இடமில்லை என்பதே அரசாங்கத் தின் கருத்தாகும். இப்படிப்பட்ட நிலைமைகள் ஏற்படக்கூடும் என்பதை அனுபவம் காட்டுமானால் அவை நிகழாதபடி தடுப் பதற்கு சட்டத்தைத் திருத்துவதற்கு அரசாங்கம் தயங்காது. ஆலைத் தொழிலாளர்களுக்கு சம்பளத்துடன் கூடிய விடுமுறைகள் அளிக்கப் பட வேண்டும் என்பதே இந்த மசோதாவின் நோக்கம்; இந்த நோக் கத்தை நிறைவேற்றுவதற்குத் தேவையான ஷரத்துகள் இதில் இடம் பெற்றிருக்கின்றன என்றே கருதுகிறேன்.

ஆகவே, ஐயா, இந்த மசோதாவை முன்மொழிகிறேன்.

* * *

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : இந்த மசோதா சம்பந்தமாக நான் கொண்டுவந்துள்ள தீர்மானத்துக்குப் பொதுவாக ஆதரவு இருப்பது என் பணியைப் பெரிய அளவுக்கு எளிதாக்கி விட்டது; ஆதலால் இதன் பேரில் நடைபெற்ற விவாதத்திற்குப் பதிலளித்து நான் இப்போது ஆற்றப்போகும் உரை மிக சுருக்க மாகவே இருக்கும் என்பது தெளிவு.

என் மதிப்பிற்குரிய நண்பர் டாக்டர் சர் ஜியா வுத்தீன் அகமது நிகழ்த்திய உரை சம்பந்தமாக உடனடியாக ஏதேனும் கூறுவது உசிதம் என்று நினைக்கிறேன். அவர் பேசியது குறித்து ஏதும் கூறும் உத்தேசம் எனக்கு இல்லை; அவரை அவமதிக்கும் எண்ணம் எதுவும் நமக்குக் கிடையாது; ஏனென்றால் அவர் பேசியதற்கும் விவாதத் திலுள்ள மசோதாவுக்கும் உண்மையில் சம்பந்தம் ஏதும் இல்லை. தொழிலாளர் பிரச்சினையைத் தீர்ப்பதற்கு அவர் ஒரு புதுமையான யோசனையைக் கூறினார்; கூட்டுப் பங்காண்மை என்பதே அந்த யோசனை. இந்தப் புதிய யோசனை குறித்து அவர் அளித்த விளக்கம் நம் அனைவருக்கும் மிகவும் பயனுள்ளதாக இருந்தது. நமது ஸ்தாபனக் கட்டமைப்புப் பிரச்சினை நம் முன் விவாதத்துக்கு வரும் போது, அவர் தெரிவித்த கருத்து எனக்கு மட்டுமன்றி இப்பிரச்சினை யில் ஈடுபடக்கூடிய அனைவருக்குமே பெரிதும் உபயோககரமாக இருக்கும் என்று அவருக்கு உறுதிகூற விரும்புகிறேன்.

இனி அடுத்து மற்ற பேச்சாளர்கள் விஷயத்துக்கு வருகிறேன். என்னுடைய நண்பர் சர் வித்தல் சந்தவர்கர் ஆற்றிய உரையை முதலில் எடுத்துக் கொள்கிறேன். சம்பளத்துடன் கூடிய விடுமுறைகள் பற்றிய சர்வதேச ஒப்பந்தம் சம்பந்தமாக சர் பிராங்க் நோய்ஸ் கொண்டுவந்த தீர்மானம் பற்றி அவர் குறிப்பிட்டார். இது விஷயத்தில் அவர் என்ன கருத்தை வெளியிட விரும்பினார் என்பதை என்னால் சரிவரப் புரிந்து கொள்ள முடியவில்லை. இந்தப் பிரச்சினையில் அரசாங்கம் தனது நிலையை மாற்றிக் கொண்டது என்ற கருத்தை அவர் வெளியிட விரும்பினார் என்று நினைக்கிறேன்.

*சர் வித்தல் என் சந்தவர்கர் :* இல்லை, இல்லை,

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : 1936ல்* அந்த ஒப்பந்தத்தை அவர்கள் எதிர்த்தார்கள்; ஆனால் அதில் தெரிவிக்கப் பட்டுள்ள கோட்பாட்டுக்கு இப்போது அங்கீகாரம் அளிக்க அவர்கள் தயாராக இருக்கிறார்கள். இவ்வகையில் இந்திய அரசாங்கத்தின் நிலையில் எத்தகைய மாற்றம் ஏற்பட்டிருப்பதாக நான் கருதவில்லை. இந்த ஒப்பந்தம் பற்றி அச்சமயம் நடைபெற்ற விவாதத்தை நான் கவனமாகவும் உன்னிப்பாகவும் படித்தேன். ஓர் ஒப்பந்தத்தை ஏற்பதென்றால் முழுவதுமாக ஏற்க வேண்டும்; அவ்வாறின்றி அதன் ஒரு பகுதியை மட்டும் ஏற்க முடியாது; அதனால்தான் இந்தியா ஒப்பந்தத்தை கோட்பாட்டளவில் ஏற்க தயாராக இருந்தாலும், அதனை குறிப்பிட்டளவு செயல்படுத்தும் சாத்தியக்கூறுகளை ஆராய சித்தமாக இருந்தாலும் அன்றைய நிலைமையில் அந்த ஒப்பந்தத்தை எதிர்ப்பதைத் தவிர அதற்கு வேறு வழியில்லாது போயிற்று.

அடுத்தபடியாக என்னுடைய நண்பர் திரு. ஜோஷி தம்முடைய உரையில் சில கருத்துகளை எடுத்துரைத்தார். அவர் தெரிவித்தவற்றில் இரண்டு கருத்துகள் பொருட்செறிந்தவையாக உள்ளன. அவற்றில் ஒன்று மசோதாவின் குறிக்கோளை தொழிற்சாலை அளவில் நிறுத்திக்கொள்ளாமல் அதனை குறைந்தபட்சம் ஒரு தொழில் முழுவதுக்கும் விஸ்தரித்திருக்க வேண்டும் என்பதாகும். நான் ஏற்கெனவே குறிப்பிட்டதுபோல் இது ஒரு சிறந்த கருத்து என்பதை ஏற்றுக் கொள்கிறேன். ஆனால் அதேசமயம் நாங்கள் இவ்வாறு செய்வதற்கு ஒரு குறிப்பிட்ட தொழிலின் கீழுள்ள அனைத்துத் தொழில்நிலையங்களின் வள ஆதாரங்கள மற்றும் இதர அவசியமான தகவல்களைத் திரட்டுவதற்கு ஒரு வழி வகுக்க வேண்டியிருக்கிறது.

இத்தகைய நிலையில், திரு. ஜோஷி தெரிவித்த கருத்து எங்களுக்கு ஏற்புடையதாக இருப்பினும் தற்போது எங்களுக்குப் போதிய முன் அனுபவம் இல்லாதிருக்கும்போது, ஒரு குறிப்பிட்ட தொழிலின் கீழுள்ள எல்லாத் தொழில் நிலையங்களும் தொழிலாளர்களுக்கு விடுபட்டுப்போன விடுமுறைகளுக்கான ஊதியத்தை வழங்கும் படிச் செய்வதற்கு வழிவகை காணுவது இப்போதைக்கு சாத்திய மல்ல. எனவேதான் இந்த யோசனையை தொழில்துறை முழுவதற் கும் பயன்படுத்த முடியாத நிலையில் இருக்கிறோம்.

இரண்டாவதாக, சட்டத்தின்படி தொழிலாளர்களுக்கு வழங்கப் பட்டிருக்கும் விடுமுறை நாட்களின் எண்ணிக்கை மிகவும் குறைவு என்று திரு. ஜோஷி குறை கூறினார். இந்தப் புகாரிலும் அர்த்தம் இருக்கிறது என்பதை ஒப்புக் கொள்கிறேன். 7 நாட்கள் என்பது மிகவும் குறைவுதான். ஆனால் இங்கும் ஒரு சிக்கல் எழுகிறது. இப்படிப்பட்ட ஒரு சிக்கல் இருக்கிறது என்பதை திரு. ஜோஷியும் திரு. வித்தல் சந்தவர்கரும் ஒப்புக்கொள்வார்கள் என்று நம்புகிறேன். நமது தொழிலாளர்களின் முறையற்ற போக்கிலிருந்தே இந்தச் சிக்கல் எழுகிறது. நமது தொழிலாளர்கள் ஏதேதோ காரணங்கள் கூறி நீண்ட விடுமுறைகள் எடுக்கிறார்கள் என்பதும், இந்தப் பழக்கத்தின் காரணமாக வேலைக்கு வராமலிருக்கும் போக்கு நிலவுகிறது என்பதும், இது உண்மையிலேயே நிலைமையைப் பெரிதும் சிக்க லாக்குகிறது என்பதும் திரு. ஜோஷி, திரு. வித்தல் சந்தவர்கர் ஆகிய இருவருக்குமே நன்கு தெரியும். நமது தொழிலாளர்கள் இப்போதை விட தொடர்ந்து ஏராளமான நாட்கள் ஒரு தொழிற்சாலையில் பணியாற்றும்படித் தூண்டி ஊக்குவிக்கப்படுவார்களேயானால் அல்லது பயிற்றுவிக்கப்படுவார்களேயானால், இப்போது நிர்ண யிக்கப்பட்டுள்ளதை விட விடுமுறை காலத்தை அதிகப்படுத்த வேண்டும் என்ற கோரிக்கையின் தார்மிக பலம் பெரிதும் அதிகரிக் கும் என்பதில் ஐயமில்லை; இதனை நான் ஒப்புக் கொள்ளவும் முற்றிலும் தயாராக இருக்கிறேன். ஆனால் இங்கு ஒரு விஷயத்தைக் குறிப்பிட விரும்புகிறேன்: தற்போது நாங்கள் ஏழுநாள் விடுமுறையை அனுமதித்திருக்கிறோம், இது இந்த நாட்டின் தொழிலாளி வர்க் கங்களிடம் ஒரு மறைமுகமான பிரதிபலிப்பை ஏற்படுத்தும், இப்போதை விடத் தாங்கள் தொடர்ந்து அதிக நாட்கள் பணியாற்றி னால் விடுமுறைக் காலத்தை 7 நாட்களுக்கும் கூடுதலாக அதிகப் படுத்த வேண்டும் என்ற தங்கள் கோரிக்கையின் நியாயம் மிகவும் வலுப்பெறும் என்பதை அவர்கள் உணர்வார்கள். ஆனால் இப் போதைய நிலைமையில், நிர்ணயிக்கப்பட்ட ஏழு நாட்களுக்குக்

கூடுதலாக விடுமுறை அளிப்பது நியாயமாகாது; ஏனென்றால் சர்வதேச ஒப்பந்தமேகூட ஏழுநாள் விடுமுறையையே நிர்ணயித்துக் கூறியிருக்கிறது.

அடுத்து, ஐயா, இதே விஷயம் குறித்து மற்றொரு கருத்தும் தெரிவிக்கப்பட்டிருக்கிறது; குறிப்பிட்ட பருவ காலங்களில் மட்டும் பணி நிகழும் தொழிற்சாலைகளுக்கும் இந்த சட்டத்தைப் பிரயோகிக்க வேண்டும் என்னும் கோரிக்கை சம்பந்தப்பட்டது இது; இந்தக் கருத்தை மதிப்புமிக்க என்னுடைய நண்பர் பேராசிரியர் ரங்கா வெளியிட்டிருக்கிறார். இதற்கும் முன்னர் கூறியதுதான் எனது பதிலாகும்; அதாவது போதுமான அளவு நீண்டகாலம் ஓய்வு பெற இயலாத தொழிலாளர்களுக்குத்தான் ஏழுநாள் விடுமுறை என்னும் இந்த ஏற்பாடு பொருந்தும். பருவகாலத் தொழிற்சாலை என்பது அவ்வப்போது மூடப்பட்டு நடைபெற்றுவரும் தொழிற்சாலையாகும். இத்தகைய தொழிற்சாலையில் பணியாற்றும் தொழிலாளர்களுக்கு நீண்ட ஓய்வு கிடைக்கிறது. வேலைவாய்ப்பு இல்லாமை என்ற கண்ணோட்டத்தில் இந்தப் பிரச்சினையை நான் அணுகவில்லை. ஓய்வுக் கண்ணோட்டத்திலிருந்துதான் இதனை நாங்கள் பார்க்கிறோம். பருவகாலத் தொழில் நிலையங்களைப் பொறுத்தவரையில், அவற்றின் தொழிலாளர்களுக்குப் போதிய அளவு நீண்ட கால ஓய்வு கிடைக்கிறது. எனவே, ஆண்டு முழுதும் பணிதொடரும் தொழில்களைப் போன்று இவர்கள் விஷயத்தில் சம்பளத்துடன் 7 நாள் விடுமுறை அளிக்க வேண்டிய அவசியமில்லை.

திருத்தப்படும் ஷரத்துகள் ஒன்றில் ''குறைந்தபட்சம்'' என்னும் சொற்கள் பயன்படுத்தப்பட்டிருப்பது குறித்து சர் வித்தல் சந்தவர்கர் ஒரு பிரச்சினையை எழுப்பினார். திருத்த ஷரத்துகளில் 'குறைந்தபட்சம்' என்னும் சொற்கள் பயன்படுத்தப்படுவதைக் கொண்டு, 7 நாட்களுக்கும் அதிகமாக விடுமுறை அளிக்கும்படி தொழிலதிபர்களை மாகாண அரசாங்கங்கள் வற்புறுத்துவதற்கு சாத்தியமிருக்கிறது என்ற தமது அச்சத்தை அவர் வெளியிட்டார். என்னுடைய சட்ட ஆலோசகர்கள் எனக்கு அளித்துள்ள விளக்கத்தின் அடிப்படையில் ஒன்றைக் கூறவிரும்புகிறேன்: அதாவது 7 நாட்களுக்கும் அதிகமாக விடுமுறைகள் தரும்படி தொழிலதிபர்களை மாகாண அரசாங்கங்கள் நிர்ப்பந்திப்பது சாத்தியமல்ல என்று உறுதி கூறுகிறேன். இது அவசரப்பட்ட நடவடிக்கை என்றும், அரசாங்கம் உத்தேசித்து வரும் நோய் காப்பீட்டுச் சட்டம் கொண்டுவரப்பட்ட பிறகு கடைசி

யாக இந்த மசோதா கொண்டு வரப்பட்டிருக்க வேண்டும் என்றும் மற்றொரு கருத்தை சர் வித்தல் சந்தர்வர்கர் கூறினார். நான் தனிப் பட்ட முறையில் இந்தக் கருத்திலிருந்து வேறுபடுகிறேன்; எனக்கு மட்டும் அவகாசம் இருந்திருந்தால் என் வாதத்துக்கு ஆதரவாக சில ஆதாரங்களை முன்வைத்திருப்பேன். தொழில்துறைத் தொழிலாளர் களுக்கான ஆரோக்கிய காப்பீடு சம்பந்தமான தமது அறிக்கை யில் பேராசிரியர் அதர்கர் தெரிவித்துள்ள கருத்துகளைப் படிக்குமாறு அவரைக் கேட்டுக் கொள்கிறேன்; இந்த அறிக்கை 112ஆம் பக்கத்தில் இடம் பெற்றிருக்கிறது. சம்பளத்துடன் கூடிய விடுமுறை என்பது நோய்க் காப்பீட்டுடன் பிரிக்க முடியாதபடிப் பின்னிப் பிணைந் துள்ளது, இதில் முன்னுரிமை ஏதேனும் கொடுக்க வேண்டியிருந் தால் சமூகக் காப்பீட்டைவிட சம்பளத்துடன் கூடிய விடுமுறை அளிக்கும் நடவடிக்கைக்கே முன்னுரிமை அளிக்க வேண்டும் என்பதை அவர் சில வலுவான ஆதாரச்சான்றுகளுடன் மெய்ப்பித் துள்ளார். நான் ஏற்கெனவே கூறியது போன்று அவரது அறிக்கையை இப்போது சட்டமன்ற உறுப்பினர்கள் பெறலாம். எனவே, இது விஷயம் பற்றி பேராசிரியர் அதர்கர் கூறியதை மீண்டும் திருப்பிக் கூறி அவையின் நேரத்தை வீணாக்க நான் விரும்பவில்லை.

அடுத்தபடியாக ஐயா, மற்றொரு பிரச்சினையும் இங்கு எழுப்பப்படுகிறது; இது போன்ற ஒரு நடவடிக்கை தன் விருப்ப மானதா அல்லது கட்டாயமானதா என்று கேட்கப்படுகிறது. இந்த மசோதாவைப் பொறுத்தவரையில், அது இவ்விரு அம்சங் களையும் தன்னுள் கொண்டது; நீண்டகாலம் பணி புரியும் தொழி லாளர்களுக்கு சம்பளத்துடன் விடுமுறைகள் அளிப்பதை அது ஒருபுறம் சட்டரீதியாகக் கட்டாயமாக்குகிறது; இன்னொரு புறம் இது விஷயமாக தொழிலதிபர்களும் தொழிலாளர்களும் பரஸ்பரம் இணங்கி உடன்பாட்டுக்கு வரவும் வகைசெய்கிறது. இந்த மசோதா வின் ஷரத்துகளில் கண்டுள்ளபடி ஒத்த ஏற்பாட்டை ஆலை நிர் வாகமே நடைமுறைக்குக் கொண்டுவந்திருந்து அது குறித்து அர சாங்கம் திருப்தியடையுமானால் இந்த சட்டத்திலிருந்து அத்தகைய தொழில் நிலையத்துக்கு விதிவிலக்கு அளிக்கும் அதிகாரம் அரசாங் கத்துக்கு வழங்கப்படுகிறது. இது விஷயத்தில் பிரிட்டனிலும் இதே போன்ற நிலைமை நிலவுவதாக அறிகிறேன். பிரிட்டனில் சம்பளத் துடன் கூடிய விடுமுறைகள் அளிக்கும் சட்டம் ஒன்று 1938ல் இயற்றப் பட்டு நடைமுறையில் இருந்துவருகிறது; 23 லட்சம் பேர் இந்த சட்டத்தால் பயனடைகின்றனர். எஞ்சியவர்களில் 50 லட்சம் பேர்

இந்த சட்டத்தின் வாயிலாக அல்லாமல் பரஸ்பரம் சுய விருப்ப அடிப்படையில் செய்துகொள்ளப்படும் உடன்பாட்டின்படி பய னடைகின்றனர்; 40 லட்சத்து 700 பேர் நீண்ட நெடுங்காலமாக பழக் கத்திலுள்ள ஏற்பாட்டின்படி பயனடைகின்றனர்.

**சர் கவாஸ்ஜி ஜஹாங்கீர் :** விடுமுறை அளிப்பதை ஒரு தொழி லதிபர் ஒத்திப்போடுவதற்கு வகை செய்யும் ஷரத்து எங்கே இருக் கிறது?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :** அந்த விஷயத் துக்கு வருகிறேன்.

ஐயா, நான் கையாள விரும்பிய மற்றொரு விஷயம் சம்பளத் துடன் கூடிய விடுமுறை அளிப்பது சம்பந்தமான இந்தக் கட்டாய அம்சமும் பரஸ்பர உடன்பாட்டு அம்சமுமாகும்.

என்னுடைய நண்பர் பேராசிரியர் ரங்காவும் திரு. செட்டி யாரும் வேறொரு பிரச்சினையை எழுப்பினர். சம்பளத்துடன் கூடிய விடுமுறை அளிக்கும் விஷயத்தில் ஒரு தொழிற்சாலையின் உரிமை யாளர் நேர்மையற்ற முறையில் நடந்து கொள்ளக்கூடும், சம்பளத் துடன் கூடிய விடுமுறை பெறுவதைத் தடுப்பதற்கு தொழிலாளியை அவர் வேலையிலிருந்து விலக்கவும் கூடும்; இத்தகைய நெறியற்ற செயல்களைத் தடுப்பதற்கு மசோதாவில் எந்த ஷரத்தும் இல்லாததை அவர்கள் சுட்டிக்காட்டினர். இந்த மசோதாவை முன்மொழிந்து நான் ஆற்றிய தொடக்க உரையிலேயே இந்த விஷயம் பற்றிக் குறிப் பிட்டேன். இத்தகைய ஒரு நிலைமை உருவாகும் என்பதை அர சாங்கம் உணர்ந்திருந்தாலும், இது விஷயத்தில் உடனடியாக அது நடவடிக்கை ஏதும் எடுக்காது. இரு தரப்புகளும் பரஸ்பரம் ஒன்றை யொன்று வெற்றி கொள்ள எத்தகைய உத்தி முறையைக் கையாள் கின்றன என்பதைப் பொறுத்திருந்து பார்க்கவே அரசாங்கம் விரும்பு கிறது. எனினும் தொழிற்சாலை உரிமையாளர்களின் நெறிமுறை யற்ற செயல்களைத் தடுப்பதற்குச் சட்டத்தில் உபரியாக ஒரு ஷரத்தைச் சேர்ப்பது அவசியம் என்று தொழிலாளர் பிரதிநிதிகள் கருதினால், தெரிவுக் குழுவினரை அணுகி இது விஷயத்தை அவர் களுக்கு எடுத்துக்கூறி அவர்களை இணங்க வைத்து, தக்க நட வடிக்கை எடுத்துக்கொள்ள அவர்களுக்கு உரிமை உண்டு. தெரிவுக் குழுவில் இத்தகைய நடவடிக்கை எடுத்துக் கொள்வதற்கு அரசாங்கம் எவ்வகையிலும் குறுக்கே நிற்காது.

*மற்றொரு பிரச்சினையும் இங்கு எழுப்பப்பட்டிருக்கிறது: சம்பளத்துடன் விடுமுறை பெறுவது முற்றிலும் தொழிலாளியின் விருப்பத்துக்கு விட்டுவிட வேண்டுமா அதாவது எந்த நாளிலிருந்து, எந்த நேரத்திலிருந்து விடுமுறை எடுப்பது என்பதைத் தீர்மானிக்கும் உரிமை தொழிலாளிக்கு வழங்கப்பட வேண்டுமா என்பதே அந்தப் பிரச்சினை. இது சம்பந்தமான ஷரத்தை வேண்டுமென்றேதான் மசோதாவில் சேர்க்கவில்லை, இது சம்பந்தமாக என்ன செய்ய வேண்டும் என்பது குறித்த விதிமுறைகளை வகுக்கும் பொறுப்பை மாகாண அரசாங்கங்களுக்கு விட்டுவிட்டோம். இது போன்ற ஒரு பரிசோதனையில் அனைத்தையுமே சட்டத்துடன் பிணைக்காமல் இருப்பது உசிதமானது என்பது என் கருத்து. மாகாண அரசாங்கங்களே தகுந்த விதிமுறைகளை வகுத்து, இத்தகைய விஷயங்களை ஒழுங்கு படுத்துவதே நல்லது; இதற்கான அதிகாரத்தை மாகாண அரசாங்கங் களுக்கு இம்மசோதா வழங்குகிறது; ஏனென்றால் ஒரு சட்டத்தை மாற்றுவதைவிட ஒரு விதிமுறையை மாற்றுவது மிகவும் எளிது என்பதை அவை நன்கு அறியும். ஆனால் அதேசமயம் இம்மசோதா வில் சம்பந்தப்பட்ட தரப்புகள் இவ்விஷயத்தை சட்டம் இயற்று வதற்குரிய ஒன்றாகக் கருதும் பட்சத்தில், தெரிவுக் குழு அதனைப் பரிசீலித்து ஒரு முடிவுக்கு வரலாம்.*

*மதிப்பிற்குரிய எந்த ஓர் உறுப்பினராலும் எழுப்பப்பட்டு நான் கையாளாத வேறு பிரச்சினை எதுவும் இல்லை என்றே கருது கிறேன்; எனவே, நான் முன்மொழிந்திருக்கும் இந்த மசோதாவுக்கு ஆதரவாக மேற்கொண்டு எதுவும் நான் கூறப்போவதில்லை.*

**திரு. துணைத் தலைவர்** *(திரு. அகில் சந்திர தத்தா)* : *ஆக, தீர்மானம் இதுதான்:*

> *''1934 ஆம் வருட தொழிற்சாலைகள் சட்டத்தை மேலும் திருத்தும் (இரண்டாவது திருத்தம்) இந்த மசோதா பின்வருவோர் அடங்கிய பொறுக்குக் குழுவின் பரிசீலனைக்கு விடப் படுகிறது: நவாப் சித்திக்கு அலிகான், கான் பகதூர் ஷேக் பஸில்-இ-ஹக் பிராசா, திரு. ஆர்.ஆர். குப்தா, திரு. ஏ.சி. இன்ஸ்கிப், சர் வித்தல் என். சந்தவர்கர், ராவ் பகதூர் என். சிவராஜ், திரு. என்.எம். ஜோஷி, திரு. டி.எஸ். ஜோஷி மற்றும் இம் மசோதாவை முன்மொழிபவர். குழுவின் எந்த ஒரு கூட்டமும் சட்டப்பூர்வ மாகக் கருதப்படுவதற்கு அக்கூட்டத்தில் ஐந்து உறுப்பினர்கள் பிரசன்ன மாகி இருப்பது அவசியம்.''*

*மசோதா ஏற்கப்பட்டது.*



# 38

## [1]ஊதிய வழங்கீடு (திருத்த) மசோதா

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): திரு. துணைத் தலைவர் அவர்களே, பின்கண்டவாறு முன்மொழிகிறேன்:

> ''1936ஆம் வருட ஊதிய வழங்கீடு சட்டத்தை மேலும் திருத்தும் இந்த மசோதா பின்வருவோர் அடங்கிய தெரிவுக் குழுவின் பரிசீலனைக்கு விடப்படுகிறது: சேத் யூசுப் அப்துல்லா ஹரூன், திரு. முகமது ஹுசேன் சௌதுரி, திரு. லால்சந்த் நாவல்ராய், திரு. ஏ.சி. இன்ஸ்கிப், சர் வித்தல் என். சந்தவர்கர், திரு. என்.எம். ஜோஷி, டாக்டர் சர் ரத்தன்ஜி தின்ஷா தலால், திரு. டி.எஸ். ஜோஷி மற்றும் இம்மசோதாவை முன்மொழிபவர். குழுவின் எந்த ஒரு கூட்டமும் சட்டபூர்வமானதாகக் கருதப்படுவதற்கு அக்கூட்டத்தில் ஐந்து உறுப்பினர்கள் பிரசன்னமாகி இருப்பது அவசியம்.''

ஐயா, 1936ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட ஊதிய வழங்கீடு சட்டத்தில் சில திருத்தங்கள் செய்வதே இம்மசோதாவின் நோக்கம். இந்தச் சட்டம் இயற்றப்பட்டபோது இது ஒரு பரீட்சார்த்த நடவடிக்கையாகவே கருதப்பட்டது; ஏனென்றால் இந்தச் சட்டத்திற்கான மசோதாவை நாங்கள் தயாரித்தபோது இது சம்பந்தமாக நாங்கள் பின்பற்றுதற்குரிய சட்டம் ஏதும் நடைமுறையில் இருக்கவில்லை. ஆனால் இந்தச் சட்டம் குறித்த ஏழு ஆண்டு அனுபவம் இப்போது எங்களுக்கு இருக்கிறது. இச்சட்டம் செயல்பட்டு வந்த இந்த ஏழு ஆண்டுகளில், அதில் பல குறைபாடுகள் இருப்பது எங்களுக்குத் தெரியவந்திருக்கிறது. ஊதிய வழங்கீடுச் சட்டத்தை மேம்படுத்த வேண்டுமானால், 30 அல்லது 40 திருத்தங்கள் செய்வது அவசியம் என்று எங்களுக்குச் சுட்டிக்காட்டப்பட்டது. பல்வேறு தரப்பினரும் பரிந்துரைத்துள்ள எல்லாத் திருத்தங்களையும் பரிசீலிக்க தற்போது அவகாசமில்லை என்பதை இந்திய அரசாங்கம் உணர்ந்திருக்கிறது; எனவே, உறுப்பினர்கள் எடுத்துக்காட்டியுள்ள

1. சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, நவம்பர் 16, 1944, பக்கங்கள் 889-92.

அனைத்து குறைபாடுகளையும் களைந்து சட்டத்தை மேம்படுத்துவதில் ஈடுபடும் எண்ணம் ஏதும் இப்போது அரசாங்கத்துக்கு இல்லை என்பதைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். எனினும் சட்டத்திலுள்ள குறைபாடுகளில் சிலவற்றை அகற்றுவது நிர்வாக முக்கியத்துவம் வாய்ந்தது என்று அரசாங்கம் கருதுகிறது; இந்தக் குறைபாடுகளைக் களையாவிட்டால் சட்டத்தை சரிவர செயல்படுத்துவதும், எந்த நோக்கத்துக்காக சட்டம் இயற்றப்பட்டதோ அந்த நோக்கத்தை நிறைவேற்றுவதும் சாத்தியமில்லாமல் போகும்; அத்தகைய முக்கிய குறைபாடுகளை அகற்றுவதற்காகவே இந்தத் திருத்த மசோதா கொண்டு வரப்பட்டிருக்கிறது.

ஐயா, மசோதாவை இனி ஷரத்துவாரியாகப் பார்ப்போம். ''ஊதியங்கள்'' என்னும் சொல்லின் பொருள் வரையறையில் சில திருத்தங்கள் செய்வது மசோதாவின் 2 ஆவது ஷரத்தின் நோக்கமாகும். ''ஊதியங்கள்'' என்னும் சொல்லுக்கு தற்போது அளிக்கப்பட்டுள்ள விளக்கத்தில் காணப்படும் குறைபாடுகள் குறித்து பல்வேறு தரப்பினரும் தெரிவித்திருக்கும் கருத்துகள் அனைத்தையும் ஒன்றன்பின் ஒன்றாக வரிசைப்படுத்திக் கூறி அவையினரை அலுப்படையச் செய்ய நான் விரும்பவில்லை. எனினும் சில முக்கியமான குறைபாடுகளை மட்டும் இங்கு சுட்டிக்காட்டுவது உசிதமாக இருக்கும். ஒரு தொழிலாளி தான் சம்பாதிக்கும் ஊதியத்தை மட்டுமன்றி, உண்மையில் தனது உழைப்புக்குக் கிடைக்க வேண்டிய ஊதியத்தையும் குறிக்கும் வகையில் ''ஊதியங்கள்'' என்பதற்கான இப்போதைய விளக்கம் அமைந்திருக்கிறது எனப் பம்பாய் நீதிமன்றம் தனது தீர்ப்பில் குறிப்பிட்டிருக்கிறது. ஆனால் முந்திய சட்டத்தின் நோக்கம் இதுவல்ல. இந்த விளக்கம் சம்பந்தமாக இன்னொரு குறைபாடும் கூறப்பட்டது: அதாவது உற்பத்தி அடிப்படையில் வேலைக்கமர்த்தப்படும் ஒரு தொழிலாளி அவனது உற்பத்திக்குச் சம்பந்தமில்லாமல் ஊதியம் கோர இந்த விளக்கம் அவனை அனுமதிக்கிறது என்று தெரிவிக்கப்பட்டது. வேலைநேர அடிப்படையில் பணியாற்றும் தொழிலாளியையும் உற்பத்தி அடிப்படையில் பணியாற்றும் தொழிலாளியையும் வேறுபடுத்திக் காட்டத் தவறுவதால் இந்த விளக்கத்தில் பெரும் குழப்பம் நிலவுகிறது என்று குறிப்பிடப்பட்டது. விளக்கத்தில் தற்போது இடம் பெற்றிருக்கும் சில சொற்கள் மிகையானவையாக உள்ளன; அங்கு அவற்றைப் பயன்படுத்த வேண்டிய அவசியமே இல்லை; இதனால் குழப்பம்தான் மிஞ்சுகிறது என்று சில வட்டாரங்களில் வாதிக்கப்படுகின்றன. ''வழங்கப்படக்கூடிய மேலே கூறிய இயல்புடைய போனஸ்கள்

அல்லது கூடுதல் ஊதியம் முதலியவை இதில் அடங்கும் என்னும் சொற்களை இவ்வகையில் இங்கு குறிப்பிடலாம். இந்த விளக்கத்தின் முந்திய பகுதியில் ஏற்கெனவே இடம்பெற்றிருப்பதைவிட அதிகமான அர்த்தத்தை இந்தச் சொற்கள் தந்துவிடவில்லை என்று கூறப்படுகிறது. யுத்தத்தின் காரணமாக அகவிலைப்படி தோன்றுவதற்கு முன்னர் வேண்டுமானால் ''ஊதியங்கள்'' என்பதற்கு அளிக்கப்பட்ட விளக்கம் சரியானதாகவும், போதுமானதாகவும் இருக்கலாம், ஆனால் இன்று இந்த விளக்கம் போதுமானதாக இருக்க முடியாது. ஏனென்றால் அகவிலைப்படி என்பது ஊதியத்தின் ஒரு பகுதி அல்ல என்று ஒரு தொழிலதிபர் குதர்க்கவாதம் செய்வதற்கு இது வழிவகை செய்கிறது என்றும் சுட்டிக்காட்டப்படுகிறது.

இப்போது, திருத்தப்பட்ட மசோதாவில் நாங்கள் தந்திருக்கும் விளக்கம் இந்த அனைத்துச் சிக்கல்களையும் அகற்றுகிறது. இந்த விளக்கம் எளிதாக, புரியக்கூடியதாக இருப்பதாகவும் தோன்றுகிறது. திருத்தப்பட்ட மசோதாவின் நகல் இந்த மூல சட்டத்துக்கு அடிப்படையாக உள்ள நோக்கத்தை முன்கொண்டு செல்லும் என்று நானே கூட அதிக நம்பிக்கை வைக்கவில்லை என்பதை அவைக்கு கூறியாக வேண்டும் நாங்கள் முன்வைத்துள்ள விளக்கம் முற்ற முடிவானதென்றோ, மாற்ற மடியாததென்றோ நாங்கள் கருதவில்லை. தெரிவுக் குழு உறுப்பினர்கள் இதைவிடச் சிறந்ததொரு விளக்கத்தைப் பரிந்துரைப்பார்களேயானால், திருத்த மசோதாவில் தற்போது இடம்பெற்றுள்ள விளக்கத்தை மேற்கொண்டும் திருத்துவதற்கு என் தரப்பிலிருந்து நிச்சயமாக எந்த ஆட்சேபமும் வராது.

இனி அடுத்து 3ஆவது ஷரத்துக்கு வருவோம். இப்போதைய பிரிவு 5இல் இந்த ஷரத்து இரண்டு திருத்தங்களைச் செயகிறது. இந்தப் பிரிவு 5 ஊதியங்கள் அளிக்க வேண்டிய காலத்தை நிர்ணயிக்கும் பிரிவாகும்; ஊதியங்கள் வழங்கும் காலத்தை நிர்ணயிக்கும் பொருட்டு இப்பிரிவு தொழிற்சாலைகளை இரு வகைப் பிரிவுகளாகப் பிரிக்கிறது. முதலாவது வகைப் பிரிவில் 1000க்கும் குறைவான தொழிலாளர்கள் வேலை செய்யும் தொழிற்சாலைகள் அடங்கும். இரண்டாவது வகைப் பிரிவில் 1000க்கும் அதிகமான தொழிலாளர்கள் பணியாற்றும் தொழிற்சாலைகள் இடம்பெறுகின்றன. இவ்வாறு வகைப்பிரிவு செய்யப்பட்ட பிறகு, முதலாவது வகைப்பிரிவைச் சேர்ந்த தொழிற்சாலைகளில் 7 நாட்களுக்குள்ளும் இரண்டாவது வகைப் பிரிவைச் சேர்ந்த தொழிற்சாலைகளில் 10 நாட்களுக்குள்ளும் ஊதியம் வழங்கப்பட வேண்டும் என்று இந்தப்

பிரிவு நிர்ணயிக்கிறது. நடைமுறையில் இந்தப் பிரிவின் நிபந்தனைகளை நிறைவேற்றுவது சிரமமாக இருப்பது தெரிய வந்துள்ளது. இதற்கான காரணத்தைப் புரிந்து கொள்வது அப்படி ஒன்றும் கடினமல்ல. தொழிலாளர்களின் எண்ணிக்கையின் அடிப்படையிலேயே தொழிற்சாலைகள் வகை பிரிக்கப்பட்டிருக்கின்றன. தொழிலாளர்களின் எண்ணிக்கை எப்போதும் ஒரே மாதிரியாக இருப்பதில்லை என்பதையும், அது அடிக்கடி மாறிக் கொண்டே இருக்கிறது என்பதையும் இந்த அவை அறியும். உதாரணமாக, தொழிலாளர்களின் எண்ணிக்கையில் ஒன்று அதிகரித்தாலே முதல் வகைப் பிரிவு இரண்டாவது வகைப் பிரிவாக தானாகவே மாறி விடுகிறது; அதே போன்று தொழிலாளர்களின் எண்ணிக்கையில் ஒன்று குறைந்தால் இரண்டாவது வகைப் பிரிவு முதல் வகைப் பிரிவாகிவிடுகிறது. இவ்வாறு வேறுபடுத்தும் கோட்பாடு நியாயமானதோ, நிர்வாக சாத்தியமானதோ அல்ல என்று கருதப்படுகிறது. இது மிகவும் சரியான கருத்து என்றே நானும் நினைக்கிறேன். எனவே, இந்த வேறுபாட்டை அகற்றுவதே இந்தத் திருத்தத்தின் நோக்கம்; இதனால் தொழிற்சாலைகளை இருவகைப் பிரிவுகளாகப் பிரிக்கும் கோட்பாட்டுக்கு முற்றுப்புள்ளி வைக்கப்படும்; இதற்குப் பதிலாக எல்லாத் தொழிற்சாலைகளையும் ஒன்றாகப் பாவிக்கும் பொதுக் கோட்பாடு கடைப்பிடிக்கப்படும்; தொழிலாளர்களின் எண்ணிக்கை எவ்வாறு இருப்பினும் அனைத்துத் தொழிற்சாலைகளிலும் ஊதியம் பத்து தினங்களுக்குள் வழங்கப்பட வேண்டும் என்ற பொது விதி பின்பற்றப்படும். 3ஆவது ஷரத்து முன்வைக்கும் இரண்டாவது திருத்தமும் மிகவும் அவசியமானது என்பதை அவை காண வேண்டும். பணியிலிருந்து நீக்கப்படும் தொழிலாளிக்கு ஊதியம் வழங்குவதற்கு பிரிவு 5 வகை செய்கிறது. இப்போதுள்ளபடி இந்தப் பிரிவு வேலையிலிருந்து நீக்கப்படும் தொழிலாளிக்கு இரண்டாவது வேலை நாளன்று ஊதியம் வழங்கப்படும் என்று கூறுகிறது. இப்போது, ஐயா, ஊதிய வழங்கீடுச் சட்டம் நாள் முழுவதும் இயங்கும் நிரந்தரத் தொழிற்சாலைகளுக்கு மட்டுமே பொருந்தும் என்றால், இப்போதுள்ளபடி இந்தப் பிரிவினால் சிக்கல் ஏதும் ஏற்படாது. ஆனால் குறிப்பிட்ட காலங்களில் மட்டுமே இயங்கும் தொழிற்சாலைகளில் எழக்கூடிய சிக்கல் முற்றிலும் எதார்த்தமானது; இது எப்படி என்று பார்ப்போம்; தொழிற்சாலையின் கடைசி வேலை நாளன்று ஒரு தொழிலாளி வேலையிலிருந்து நீக்கப்படுவதாக வைத்துக் கொள்வோம்; அப்போது என்ன நிகழ்கிறது தெரியுமா? இந்தத் தொழிற்சாலை குறிப்பிட்ட காலத்தில் மட்டுமே இயங்கக்கூடியது ஆதலால், இதற்குப் பிறகு அது மூடப்பட்டு விடுகிறது; அப்போது நீண்டகால

இடைவேளைக்குப் பிறகுதான் இரண்டாவது வேலைநாள் வரும்; இத்தகைய நிலைமையில் அந்தப் பரிதாபத்துக்குரிய தொழிலாளி யின் கதியைப் பற்றிக் கற்பனை செய்துபார்ப்பது அப்படி ஒன்றும் கடினமல்ல. எனவே, இந்த மசோதாவில் தெரிவித்துள்ளபடி இந்தப் பிரிவில் மாற்றம் செய்யவில்லை என்றால், குறிப்பிட்ட காலங் களில் மட்டுமே இயங்கும் தொழிற்சாலையில் பணிபுரியும் ஒரு தொழிலாளி வேலை நீக்கம் செய்யப்படும்போது அவன் ஊதியம் பெறுவது காலவரையின்றித் தள்ளிப்போகும். ஆதலால் இந்தத் திருத்த மசோதா மூலம் நாங்கள் செய்திருப்பதெல்லாம், 'வேலை' என்ற சொல்லை நீக்கிவிட்டு, 'இரண்டாவது' என்ற சொல்லுக்குப் பதிலாக 'மூன்றாவது' என்ற சொல்லைச் சேர்த்திருப்பதுதான். இதன் மூலம், குறிப்பிட்ட காலத்துக்கு மட்டுமே இயங்கும் தொழிற்சாலை யிலும் சரி, நிரந்தரமாக இயங்கிவரும் தொழிற்சாலையிலும் சரி வேலையிலிருந்து நீக்கப்படும் ஒவ்வொரு தொழிலாளியும் ஏழாவது நாளில் தனது ஊதியத்தைப் பெறுவான்; குறிப்பிட்ட காலத்துக்கு மட்டுமே இயங்கும் தொழிற்சாலையில் இதுவரை நடைபெற்று வந்தது போன்று தனது ஊதியத்தைப் பெறுவதற்கு அவன் காத் திருக்க வேண்டியதில்லை.

இனி அடுத்து, மசோதாவின் 4ஆவது ஷரத்துக்கு வருகிறேன். இந்த சட்டத்தின் 7 ஆவது பிரிவில் சில திருத்தங்களைச் செய்வதே இந்த ஷரத்தின் நோக்கம் என்பதை மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் காண்பார்கள். பிரிவு 7 ஒரு தொழிலாளியின் ஊதியத்திலிருந்து எத் தகைய பிடித்தங்களைச் செய்யலாம் என்பதை வகுத்துக் கூறும் பிரிவாகும். இந்தப் பிரிவு இப்போதுள்ளபடி எல்லா நியாயமான பிடித்தங்கள் விஷயத்திலும் கையாளக்கூடியதாக இல்லை என்பதை மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் தெரிந்து கொள்வார்கள். எடுத்துக் காட்டாக, தனது வைப்பு நிதியுடனும் ஓய்வு உதவித் தொகை யுடனும் பணியிலிருந்து விலகிச் செல்லுகின்ற, அதேசமயம், பணி யில் நீடித்திருந்தால் பெற்றிருக்கக்கூடிய சலுகைகளை இழந்து விடுகின்ற ஒரு தொழிலாளியை இந்தச் சட்டம் அல்லது பிரிவு கணக்கி லெடுத்துக் கொள்ளவில்லை. குறிப்பிட்ட சில காரணங்களுக்காக, உதாரணமாக மிக அவசர, அவசிய சில பொருளாதாரத் தேவை களைப் பூர்த்தி செய்வதற்காக தனது வைப்பு நிதியையும் ஓய்வுதவித் தொகையையும் பெறும் பொருட்டு அவன் வேலையிலிருந்து தானாகவே விலகக்கூடும். பிறகு சிறிது காலம் கழித்து அதே வேலை யில் அவன் மீண்டும் சேருகிறான் என்று வைத்துக்கொள்வோம்;

அப்போது, தான் முன்னர் பணியிலிருந்த சமயத்தில் அனுபவித்து வந்த அதே சலுகைகளை மீண்டும் பெறுவதற்கு அவன் ஆவலாக இருப்பது இயல்பே; இவ்வாறு இந்த சலுகைகளை மீண்டும் பெறுவது அவன் வைப்பு நிதியையும் ஓய்வு உதவித் தொகையையும் திருப்பிக் கொடுக்கத் தயாராக இருக்கிறானா, இல்லையா என்பதைப் பொறுத் திருக்கக்கூடும். இப்படிப்பட்ட நிலைமையில், தொழிலாளி இத் தகைய பிடித்தங்களுக்குத் தயாராக இருந்தாலும் சட்டம் அதை அனுமதிக்கவில்லை. இத்தகைய பிடித்தம் அனுமதிக்கப்பட வேண் டும் என்பதுதான் என் கருத்து; ஏனென்றால் அது தொழிலாளியின் நலனுக்கே உகந்ததாக இருக்கும். ஆனால் நான் ஏற்கெனவே குறிப் பிட்டதுபோல் இப்போதுள்ளபடி சட்டத்தில் இதற்கு வழிவகை செய்யப்படவில்லை. தவிரவும், தொழிலாளிக்கு நன்மை பயக்கக் கூடிய வேறு சில பிடித்தங்களும் இருக்கின்றன; இத்தகைய நன்மை களைப் பெறும் பொருட்டு இப்படிப்பட்ட பிடித்தங்களை தொழி லாளி வரவேற்கவும் கூடும். ஆனால் இங்கும், சட்டம் குறுக்கிடு கிறது; தனக்கு நன்மை செய்யக்கூடியவை என்று கருதும் பிடித்தங் களுக்கு தொழிலாளி தானே முன்வந்து இணங்கினால்கூட சட் டத்தில் அதற்கு இடமில்லை. எனவே, தொழிலாளிக்கு இத்தகைய நன்மைகள் உண்மையிலேயே கிட்டும் வகையில் இப்போது இந்தச் சட்டம் திருத்தப்படுகிறது. பிரிவு 7 இல் இப்போதுள்ளபடி வேறுசில குறைபாடுகளும் உள்ளன. படிப்படியாக பதவி உயர்வும் ஊதிய உயர்வும் பெறும் அடிப்படையில் பணிக்கு அமர்த்தப்படும் தொழிலாளர்கள் சம்பந்தப்பட்டவையாகும் இந்தக் குறைபாடுகள். இது மசோதாவிலுள்ள ஒரு புதிய விஷயமாகும். இது சம்பந்தமாக என்ன வழிவகை ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன என்பதை யும், இந்தத் திருத்தத்தைக் கொண்டு வருவதற்கு எங்களைத் தூண்டிய சூழ்நிலைகள் யாவை என்பதையும் அவைக்கு விளக்க விரும்பு கிறேன். பிரிவு 4இன் துணைப் பிரிவு (3) மூன்று விஷயங்களைப் பற்றியதாகும். முதலாவதாக, பதவி உயர்வும் ஊதிய உயர்வும் பெறும் அடிப்படையில் பணிக்கு அமர்த்தப்படும் ஓர் ஊழியரின் ஊதிய உயர்வை நிறுத்த இது வகை செய்கிறது. இரண்டாவதாக ஓர் ஊழியரை உயர் பதவியிலிருந்து கீழ்ப்பதவிக்குத் தாழ்த்தவும், அதன் மூலம் சம்பளத்தைக் குறைக்கவும் இது அனுமதிக்கிறது. மூன்றாவதாக, ஓர் ஊழியருக்குப் பதவி உயர்வும் ஊதிய உயர்வும் தராமல் இருப்பதற்கும், திறமையில்லை என்று கூறி அவரது ஊதி யத்தைக் குறைப்பதற்கும் இது வழிவகுக்கிறது. சிந்து முறைமன்ற ஆணையர் அளித்த ஒரு தீர்ப்பின் காரணமாகவே பிரிவு 4இன் உப பிரிவில் (3) திருத்தங்கள் செய்யவேண்டிய அவசியம் ஏற்பட்டுள்ளது.

இது சம்பந்தமான விவரம் வருமாறு: அந்த ஊழியர் ஓர் இஞ்சின் ஓட்டுநர்; அவர் பதவி இறக்கம் செய்யப்படாமல் அதே பதவியில் நீடிக்க அனுமதிக்கப்பட்டாலும், அவரது சம்பளம் குறைக்கப் பட்டது. இதன் பேரில், தனக்கு இழைக்கப்பட்ட அநீதிக்குப் பரிகாரம் தேடி நீதிமன்றம் சென்றார்; பழைய 'கிரேடில்' இருக்கும்போது தனது சம்பளத்தைக் குறைத்தது சட்டவிரோதமானது என்று அவர் வாதாடினார். நீதிபதி இந்த வாதத்தை ஏற்றுக் கொண்டு, அவரது சம்பளத்தைக் குறைத்தது முறைகேடானது என்று தீர்ப்பளித்தார். ஆனால் அதேசமயம் அவர் வேறொரு கருத்தையும் வெளியிட் டார்: அதாவது ஓர் ஊழியரின் திறமை அவர் வகிக்கும் பதவிக்கும் 'கிரேடுக்கும்' ஏற்றதாகவும், தனது கடமைப் பொறுப்புகளை நிறை வேற்றுவதற்கு உகந்ததாகவும் இல்லை என்று கூறி அவருடன் ஒரு புதிய பணி ஒப்பந்தம் செய்துகொள்ளப்பட்டு, அதனை அவர் ஏற்றுக் கொள்ளும் பட்சத்தில் அப்போது சம்பள வெட்டு நியாயமான தாக இருக்கும் என்று அவர் குறிப்பிட்டார். நீதிபதி கூறிய இந்தப் பரிந்துரையைத்தான் இந்தத் திருத்தத்தின் மூலம் செயல்படுத்த முற்பட்டுள்ளேன்; அதாவது, ஓர் ஊழியர் தனக்கு அளிக்கப்பட் டுள்ள கடமைப் பொறுப்புகளை நிறைவேற்ற திராணியற்றவராக இருக்கும் பட்சத்தில், அவரிடம் ''இது வரை அளிக்கப்பட்டு வந்த மாதிரி அதே சம்பளத்தை இனி உங்களுக்குத் தரமாட்டோம், உங்க ளுக்கு விருப்பமிருந்தால் புதிய அடிப்படையில் தொடர்ந்து பணி யாற்றுங்கள், விருப்பமில்லையேல் வேலையிலிருந்து விலகிக் கொள்ளுங்கள்'' என்று இங்கிதமற்ற முறையில் கூற மாட்டோம்; அதற்கு மாறாக அவரை பழைய 'கிரேடிலே'யே இருக்க அனு மதித்து, சம்பளத்தை மட்டும் குறைப்போம், அதற்கு முன்னதாக ஒரு மாதகால அவகாசம் தந்து 'நோட்டீஸ்' அனுப்புவோம். இவ்வாறு சம்பளக்குறைப்பு நடவடிக்கை 'நோட்டீஸ்' காலம் வரை தாமதிக் கப்படும்; 'நோட்டீஸ்' காலம் முடிவதற்கு முன்னர் புதிய ஏற்பாட் டுக்கு இணங்கத் தான் தயாராக இல்லை என்று தெரிவித்தால் வேலையிலிருந்து அவர் விலகிக் கொள்ளலாம். முறைமன்ற ஆணை யரின் தீர்ப்பை பயனற்றதாக்குவதற்கே இந்தத் திருத்தங்கள் கொண்டு வரப்படுவதாக சிலர் வாதிக்கக்கூடும் என்பதாலேயே இவற்றை எல்லாம் இங்கு கூறுகிறேன். இவ்வாறு வாதிப்பவர்கள் கூறுவது போல் நான் எதையும் செய்யவில்லை என்பதையும், முறைமன்ற ஆணையரின் தீர்ப்பை அனுசரித்தே திருத்தங்கள் கொண்டுவரப் பட்டிருக்கின்றன என்பதையும் இந்த அவைக்குக் கூற விரும்புகிறேன்.

உயர் கிரேடிலிருந்து கீழ் கிரேடுக்கு இறக்குதல், ஊதிய உயர்வை நிறுத்திவைத்தல் போன்றவற்றைப் பொறுத்தவரையில் அவை சர்ச்சைக்கு இடமற்ற விஷயங்கள். ஏனென்றால் கீழ் கிரேடி லுள்ள ஓர் ஊழியர் மேல் கிரேடுக்கு உயர்த்தப்பட்டால் அவர் தமது கடமைகளைச் செம்மையுறச் செய்வார் என்று தொழி லதிபர் திருப்தியடைந்தால்தான் அந்த ஊழியருக்குப் பதவி உயர்வு தருவார். இவ்வாறிருக்கும்போது அந்த ஊழியர் பதவி உயர்வு பெறவில்லை என்றால், அவர் ஏற்கெனவே பெற்றிருந்த எதையும் இழந்துவிடவில்லை என்பதால் இதில் மனக்குறைக்கு இடமேதும் இல்லை.

இதே போன்றதுதான் மேல் கிரேடிலிருந்து கீழ் கிரேடுக்கு தாழ்த்தும் விஷயமும். இதிலும் நியாயமாகக் குறைபட்டுக் கொள்வ தற்கு எதுவும் இருப்பதாக நான் நினைக்கவில்லை. ஓர் ஊழியர் பெருமளவுக்குத் திறமை இழந்து விடும்போது, அவரை அதே கிரேடில் வைத்திருக்க தொழிற்சாலை உரிமையாளர் விரும்ப மாட்டார். அந்நிலையில் அவர் பதவி இறக்கம் செய்யப்படுவது நியாயமே. பொறுப்பு குறையும்போது ஊதியமும் குறைவது இயல்பே. இதில் குறைகூறுவதற்கு எதுவுமில்லை.

மசோதாவின் 5ஆவது ஷரத்தை எடுத்துக் கொள்வோம்; அது மிகவும் எளிமையானது. 8ஆவது பிரிவின் 7ஆவது துணைப் பிரிவை அது திருத்துகிறது. தொழிற்சாலை உரிமையாளர் விதிக்கும் அபராதம் எப்போது வசூலிக்கப்பட வேண்டும் என்பதைப் பற்றியது இந்தப் பிரிவு. அபராதம் எப்போது முதல் செலுத்த வேண்டும் என்னும் பிரச்சினை இங்கு எழுகிறது. குற்றம் இழைக்கப்பட்ட நாளி லிருந்தா அல்லது தவறு நேர்ந்த விஷயம் தொழிற்சாலை உரிமை யாளருக்குத் தெரியவந்த நாளிலிருந்தா? தவறு நேர்ந்த மறுகணமே அது தொழிற்சாலை உரிமையாளருக்குத் தெரிந்துவிடும் என்று எப்போதுமே எதிர்பார்க்க முடியாது. ஒரு தவறு நேர்ந்ததற்கு நீண்ட காலத்திற்குப் பிறகே அது தொழிற்சாலை உரிமையாளருக்குத் தெரிய வருவதுதான் அடிக்கடி நிகழ்கிறது. எனவே, அபராதம் நடை முறைக்கு வரும் காலத்தை தவறு இழைக்கப்பட்ட நாளிலிருந்து அல்லாமல் அது தெரியவந்த நாளிலிருந்து நிர்ணயிப்பது அவசிய மாகிறது; இந்த ஷரத்தைத் திருத்துவதில் நாங்கள் புதியதாக ஒன்றும் செய்துவிடவில்லை என்பதை அவைக்குச் சொல்ல விரும்புகிறேன். கால நிர்ணய விஷயத்தில் சட்டத்தில் பல விதிகள் இருப்பதையும், சில சந்தர்ப்பங்களில் செயல் புரியப்பட்ட நாளிலிருந்தும் வேறு சில

சந்தர்ப்பங்களில் அந்த செயல் பற்றித் தெரியவந்த நாளிலிருந்தும் அது நிர்ணயிக்கப்படுகிறது என்பதையும் அவையிலுள்ள வழக் கறிஞர் உறுப்பினர்கள் அறிவார்கள்.

அடுத்து, 6ஆவது ஷரத்தைப் பொறுத்தவரையில் அது இந்தச் சட்டத்தின் 9 ஆவது பிரிவுக்குத் திருத்தம் கொண்டு வருகிறது. வேலைக்கு வராமலிருப்பவர்கள் விஷயத்தில் சம்பளப்பிடித்தங் கள் செய்வதற்கு பிரிவு 7 (2) (பி) அனுமதிக்கிறது. ஆனால் 'வேலைக்கு வராதிருத்தல்' என்பதற்கான விளக்கம் துரதிர்ஷ்டவசமாக இந்தச் சட்டத்திலேயே இல்லை. இந்த ஷரத்து இக்குறைபாட்டை அகற்று கிறது; 'வேலைக்கு வராது இருத்தல்' என்பதற்கு விளக்கம் தரப் படாத பிரிவு 9க்கு இது இரண்டாவது விளக்கம் ஒன்றைத் தருகிறது. ஷரத்து 7 பிரிவு 13ஐ திருத்துகிறது; அதுவும் பெயரளவிலேயே இருக் கிறது; அது அடிப்படையான ஷரத்து ஒன்றுமல்ல. மசோதாவின் 4 ஆவது ஷரத்தில் அடங்கியுள்ள புதிய பிடித்தங்களில் இரண்டு பிடித்தங்கள் விஷயத்தில் பிரிவு 13ஐ பயன்படுத்த இது வகை செய் கிறது. மாகாண அரசாங்கம் விதிக்கும் நிபந்தனைகளுக்கு இணங்க பிடித்தங்கள் செய்வதை பிரிவு 13 அனுமதிக்கிறது என்பது மதிப்பிற் குரிய உறுப்பினர்களுக்குத் தெரியும். புதிய திருத்தம் அனுமதிக்கும் புதிய பிடித்தங்களையும் இதே நிபந்தனைகளுக்கு உட்படுத்த வேண்டும் என்று நாங்கள் விரும்புகிறோம்.

கடைசி ஷரத்து மேல்முறையீடு செய்யும் உரிமையை ஒழுங்கு படுத்தும் 17 ஆவது பிரிவில் திருத்தம் செய்கிறது. இப்போதுள்ளபடி இந்தப் பிரிவு வேலைக்கு அமர்த்தப்பட்டிருக்கும் ஒரு ஊழியருக்கு மேல்முறையீடு செய்யும் உரிமையை வழங்குகிறது; இந்தக் குறிப் பிட்ட சட்டத்தைச் செயல்படுத்தும் பொறுப்பிலுள்ள நிர்வாக அதிகாரியான கண்காணிப்பாளருக்கு இந்த உரிமையை அது அளிக்க வில்லை. அனைவரது நலன்களுக்காவும், குறிப்பாக ஊழியர் களின் நலன்களுக்காகவும் கண்காணிப்பாளருக்கும் மேல் முறையீடு செய்யும் உரிமை வழங்கப்படுவது அவசியம் என்பது உணரப் பட்டுள்ளது.

ஐயா, இவைதாம் மசோதாவின் ஷரத்துகள். இவை சர்ச்சைக்கு இடமற்றவை என்று கருதுகிறேன். எனவே என் தீர்மானத்தை அவை ஏற்றுக் கொள்ளும் என்று நம்புகிறேன்.

ஐயா, தீர்மானத்தை முன்மொழிகிறேன்.

திரு. துணைத் தலைவர் (திரு. அகில் சந்திர தத்தா): தீர்மானம் முன்மொழியப்படுகிறது :

''1936ஆம் வருட ஊதிய வழங்கீடு சட்டத்தை மேலும் திருத்தும் இந்த மசோதா பின்வருவோர் அடங்கிய தெரிவுக் குழுவின் பரிசீலனைக்கு விடப்படுகிறது; சேத் யூசுப் அப்துல்லா ஹரூன், திரு. முகமது ஹுசேன் சௌதுரி, திரு. லால்சந்த் நாவல்ராய், திரு. ஏ.சி. இன்ஸ்கிப், சர் வித்தல் என். சந்தவர்கர், திரு. என்.எம். ஜோஷி, டாக்டர் சர் ரத்தன்ஜி தின்ஷா தலால், திரு. டி.எஸ். ஜோஷி மற்றும் இம்மசோதாவை முன்மொழிபவர். குழுவின் எந்த ஒரு கூட்டமும் சட்டபூர்வமானதாகக் கருதப்படுவதற்கு அக்கூட்டத்தில் ஐந்து உறுப்பினர்கள் பிரசன்னமாக இருப்பது அவசியம்.

★ ★ ★

திரு. என்.எம். ஜோஷி : .............ஐயா, மாண்புமிகு உறுப்பினர் வேறு சில திருத்தங்களையும் பிரரேபித்திருக்கிறார்; அவற்றில் ஒன்று வேலைக்கு வராமல் இருந்தால் சில பிடித்தங் களைப் பிடிப்பது சம்பந்தப்பட்டது.

[1]மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: வேலைக்கு வராமலிருத்தல் என்பதற்கான விளக்கத்தை மட்டுமே நான் தந்துள் ளேன். பிடித்தங்கள் எதையும் நான் அனுமதிக்கவில்லை: அவை ஏற்கெனவே நடைமுறையில் இருந்து வருகின்றன.

திரு. என்.எம். ஜோஷி : அதை நான் அறிவேன். மாண்புமிகு உறுப்பினர் மிகவும் சாமர்த்தியசாலி. வேலைக்கு வராமலிருத் தல் என்பதன் விளக்கத்தை அவர் மாற்றி விட்டார். இதன் விளை வாக சில பிடித்தங்கள் அனுமதிக்கப்படுகின்றன. பழைய சட்டம் வேலைக்கு வராமலிருப்பது சம்பந்தமாக ஒரு குறிப்பிட்ட அள வுக்குத்தான் பிடித்தங்களை அனுமதிக்கிறது. எவ்வளவு நேரம் இழக்கப்பட்டதோ அல்லது எவ்வளவு வேலை செய்யப்படவில் லையோ அந்த அளவுக்குத்தான் பிடித்தங்கள் இருந்தன. ஆனால் இப்போது கொண்டுவரப் பட்டிருக்கும் திருத்தம் ஏற்கப்படுமானால் தொழிற்சாலை உரிமையாளர் தொழிலாளர் மீது இரட்டை அப ராதம் விதிப்பது சாத்தியமாகக் கூடும் என்று அஞ்சுகிறேன்.

---

1. சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, 16, நவம்பர் 1944, பக்கங்கள் 896.

[1]*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : நீங்கள் கூறுவது சரியல்ல.*

**திரு. என்.எம். ஜோஷி :** நல்லது. இது குறித்து உரிய சமயத்தில் விவாதிப்போம். இப்போது பின்வருமாறுதான் நடைபெறும் : ஓர் ஊழியர் ஒரு மணிநேரம் வேலைக்கு வரவில்லை என்று வைத்துக்கொள்வோம். அந்த ஒரு மணிநேரம் அவன் வேலை செய்யவில்லை. எனவே, அவன் செய்த வேலைக்கு ஏற்ப கூலி தரப்படும்போது அவனது ஊதியம் நேரக்கணக்கில் அல்லாமல் வேலையின் அளவுக்குத்தான் தரப்படும். இவ்வாறு அவன் குறைந்த ஊதியம் பெறுவது மட்டுமல்ல, இந்தத் திருத்தம் செய்யப்படும்போது அவனது ஊதியங்கள் மேலும் குறையும்.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் : இல்லை, இல்லை.*

* * *

[2]*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :* திரு. துணைத் தலைவர் அவர்களே, விவாதத்தை மேலும் நீடிக்க விடாமல் குறுக்க உதவுமானால் திருத்தத்தை ஏற்றுக்கொள்ள நான் தயாராக இருக்கிறேன்.

* * *

[3]*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் :* ஐயா, ஏற்கெனவே நான் குறிப்பிட்டது போல், என் நண்பர் திரு. ஜோஷி முன்மொழிந்த திருத்தத்தை ஏற்கத் தயாராக இருக்கிறேன். இத்தகைய நிலைமையில் நான் எத்தகைய உரையும் நிகழ்த்த வேண்டிய அவசியம் இல்லை. நான் சொல்ல விரும்புவதெல்லாம் மசோதாவை சுற்றுக்கு விடுவதற்கு வலுவான அடிப்படை இருப்பதாக நான் கருதவில்லை என்பதுதான். நான் சற்று முன்னர் கூறியது போன்று நான் முன்வைத்துள்ள திருத்தங்கள் யாவும் நிர்வாகம் சம்பந்தப்பட்டவை; அதாவது சட்டத்தைச் செயல்படுத்துவதில் எதிர்ப்படும் குறைபாடுகளை, சிக்கல்களைக் களைவதை நோக்கமாகக் கொண்டவை என்பதைத் தெளிவுபடுத்த விரும்புகிறேன். தெரிவுக்குழுவைச்

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, 16, நவம்பர் 1944, பக்கங்கள் 896.
2. மேற்படி பக்கம் 901
3. மேற்படி பக்கம் 902.

சேர்ந்த மதிப்பிற்குரிய உறுப்பினர்களின் புரிவுணர்வுக்கு அப்பாற் பட்ட எதையும் இந்த மசோதாவில் இடம்பெற்றுள்ள திருத்தங் களில் நான் காணவில்லை. மதிப்பிற்குரிய என்னுடைய நண்பர் திரு. ஜோஷி தம்முடைய திறமையில் போதிய நம்பிக்கை வைக் காதது எனக்கு வியப்பாக இருக்கிறது. மசோதாவைச் சுற்றுக்கு விடும்படி என்னிடம் கூறுகிறார்கள்; சரி, அப்படியே மசோதாவை நான் சுற்றுக்கு விட்டால், தங்கள் தரப்பில் வாதாடுவதற்கு திரு. ஜோஷியையும் மதிப்பிற்குரிய என் நண்பர் திரு. லால்சந்த் நாவல் ராயையும் தவிர தொழிலாளர் வர்க்கத்தினர் வேறு எவர் உதவியை நாடுவார்கள். இவர்கள் இருவரது பிரதிநிதித்துவத் தன்மையைக் கருதியும், இவர்களது ஆழ்ந்த அனுபவத்தையும் அறிவாற்றலை யும் மனத்திற் கொண்டும் அவர்களைத் தெரிவுக் குழுவில் சேர்ப் பதில் மிகுந்த அக்கறை எடுத்துக் கொண்டிருக்கிறேன். எனினும் சர்ச்சைக்கு இடமற்றவை என்று நான் கருதும் விஷயங்களைக் கையாள்வதில் தங்களுக்குள்ள திறமையில் அவர்களுக்கு நம்பிக்கை உணர்வு இல்லை என்றால், இந்தத் திருத்தத்தைச் சுற்றுக்குவிட நான் முற்றிலும் தயாராக இருக்கிறேன்.

திரு. துணைத் தலைவர் (திரு. அகில் சந்திர தத்தா) : ஆக இப்போது :

> ''1945 பிப்ரவரி 28ஆம் தேதிக்குள்ளாக பொதுமக்களின் அபிப்பிராயத்தை அறிவதற்காக மசோதா சுற்றுக்குவிடப் படுகிறது.''

தீர்மானம் ஏற்கப்பட்டது.



# 39

## [1]தாமோதர் பள்ளத்தாக்குத் திட்டம் குறித்த கல்கத்தா மாநாடு

### டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் உரை

''நாட்டின் நீர்வள ஆதாரங்கள் விஷயத்தில் தற்போது நிலவும் நிலைமையினால் ஏற்பட்டுள்ள பாதிப்புகளையும் பிரதிகூலங்களையும் இந்திய அரசாங்கம் நன்கு உணர்ந்துள்ளது. இந்த வள ஆதாரங்களை அனைவரது நலன்களுக்கும் பயன்படுத்திக் கொள்ளக்கூடிய ஒரு கொள்கையை, இந்த வளங்களை ஏனைய நாடுகள் எவ்வாறு பயன்படுத்திக் கொள்கின்றன என்னும் அனுபவத்தை அடிப்படையாகக் கொண்ட ஒரு கொள்கையை உருவாக்குவதற்கு அவசியமான நடவடிக்கைகளை மேற்கொள்ள அது விரும்புகிறது.'' தாமோதரப் பள்ளத்தாக்கை அபிவிருத்தி செய்வதற்கான வழிமுறைகளை ஆராயும் பொருட்டு ஜனவரி 3ஆம் தேதி கல்கத்தாவில் வங்காள மாகாண தலைமைச் செயலகத்தில் நடைபெற்ற மாநாட்டில் உரையாற்றுகையிலேயே இந்திய அரசாங்கத்தின் தொழிலாளர் நலத்துறை உறுப்பினரான மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் மேற்கண்டவாறு குறிப்பிட்டார். மத்திய அரசாங்கத்தையும் மற்றும் வங்காள, பீகார் அரசாங்கங்களையும் சேர்ந்த பிரதிநிதிகள் இந்த மாநாட்டில் பங்கு கொண்டனர்.

டாக்டர் அம்பேத்கர் ஆற்றிய உரையின் முழு விவரம் வருமாறு:

இவ்வாறு குறுகிய காலத்தில், எத்தனையோ சிரமங்களுக்கு இடையே இந்தக் கூட்டத்தைக் கூட்டுவதற்கு இணங்கியமைக்காக மத்திய அரசாங்கத்தின் சார்பில் உங்களுக்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறேன். 1944ஆம் ஆண்டில் வங்க அரசாங்கம் நியமித்த தாமோதர் நதி வெள்ளப்பெருக்கு விசாரணைக் குழு தெரிவித்துள்ள யோசனைகளுக்குச் செயல் வடிவம் கொடுப்பதற்கான விதிமுறைகளைப் பரிசீலிப்பதே இந்தக் கூட்டத்தின் நோக்கமாகும். மேற்

1. இந்தியத் தகவல் ஏடு, பிப்ரவரி 1, 1945, பக்கங்கள் 97-101 & 109.

கொண்டு பேசுவதற்கு முன்னதாக, இந்தக் குழுவை நியமித்தமைக் காக வங்க அரசாங்கத்தைப் பாராட்டுவதே முறையாகும். இவ்வாறே, தாமோதர் நதியின் வெள்ளப் பெருக்குப் பிரச்சினை குறித்தும், பொதுவாக நாட்டின் நீர்வள ஆதாரங்களை மிகச் சிறந்த முறை யில் பயன்படுத்திக்கொள்வது குறித்தும் மிக ஆழமான, ஆக்கபூர்வ மான கருத்துகளைத் தெரிவித்துள்ளமைக்காக இந்தக் குழுவை பாராட்டுவதும் என் கடமையாகும்.

## குழுவின் பரிந்துரைகள்

குழு தெரிவித்த பரிந்துரைகளில் இரண்டை இங்கு முக்கிய மாகக் குறிப்பிட விரும்புகிறேன் : VIII மற்றும் XIII ஆவது பரிந் துரைகள்தாம் அவை. XIII ஆவது பரிந்துரையில் குழு பின்வருமாறு குறிப்பிட்டிருக்கிறது:

> ''இந்தியாவின் வனங்களும் நதிகளும் மத்திய அரசாங்கத் தின் பொறுப்பின்கீழ் கொண்டுவரப்பட்டால், வெள்ளக்கட்டுப் பாடு, மண் பாதுகாப்பு போன்ற பிரச்சினைகளுக்குத் தீர்வு காண் பதற்கு அனுகூலமாக இருக்கும் என்று விவாதங்களின்போது குழு உணர்ந்தது.''

தாமோதர் நதி அணைக்கட்டுத் திட்டத்தின் நோக்கம் வெள்ளப்பெருக்கைக் கட்டுப்படுத்துவதாக மட்டுமன்றி, மின் விசை உற்பத்திக்கும் பாசனத்துக்குத் தண்ணீர் வழங்குவதற்கும் வகைசெய்வதாகவும் இருக்க வேண்டுமென்று குழு தனது VIII ஆவது பரிந்துரையில் குறிப்பிட்டிருக்கிறது. இந்தியாவின் நீர்வழிப் போக்குவரத்துகளைப் பயன்படுத்திக் கொள்வதில் பின்பற்றப்பட்டு வரும் இப்போதைய கொள்கையை அறிந்தவர்கள் இந்தப் பரிந் துரைகள் மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்தவை என்பதை நிச்சயம் ஏற்றுக் கொள்வார்கள். நீர் வழிப்போக்குவரத்துகளைச் சிறந்த முறையில் பயன்படுத்திக் கொள்ளும் விஷயத்தில் ஓர் ஆக்கபூர்வ மான கொள்கை இல்லை என்பது நிதர்சனமான உண்மையாகும். இரண்டாவதாக, நீர் வழிப் போக்குவரத்து சம்பந்தமான நமது கொள்கை பன்னோக்குக் கொண்டதாக இருக்க வேண்டும். பாசன வசதி, மின்விசை உற்பத்தி, போக்குவரத்து முதலியவற்றுக்கும் அதில் வழிவகை செய்ய வேண்டும் என்ற உணர்வு போதிய அளவில் இல்லை.

## ரயில்வேயும் நீர்வழிப் போக்குவரத்தும்

நீர்வளம் சம்பந்தப்பட்ட நமது கொள்கை பாசன வசதி ஒன்றை மட்டுமே குறிக்கோளாகக் கொண்டு இருந்து வருகிறது. தவிரவும், ரயில் போக்குவரத்துக்கும் நீர்வழிப் போக்குவரத்துக்கும் இடையே வேறுபாடு எதுவும் இல்லை என்ற உண்மையை நாம் தகுந்த முறையில் கணக்கிலெடுத்துக் கொள்ளத் தவறிவிட்டோம். ரயில்வேக்களுக்கு மாகாண எல்லைகள் ஏதும் இல்லையென்கிற போது ஆறுகளுக்கும் அதேபோல் மாகாண எல்லைகள் எவையும் இருப்பதற்கில்லை; ஒரு மாகாணத்திலிருந்து மற்றொரு மாகாணத் துக்கு பாய்ந்து செல்லும் ஆறுகளுக்கு முக்கியமாக இது பொருந் தும். இதற்கு மாறாக, ரயில்வேக்களுக்கும் நீர்வழிப் போக்குவரத்து களுக்கும் இடையே நமது அரசியலமைப்புச் சட்டத்தில் வேறுபாடு இடம் பெற அனுமதித்து விட்டோம்; இதன் விளைவாக ரயில்வேக் கள் மத்திய அரசின் அதிகார வரம்புக்கு உட்பட்டவையாகவும், ஆறுகள் மாகாண அரசாங்கங்களின் அதிகாரவரம்புக்கு உட்பட் டவையாகவும் ஆக்கப்பட்டுவிட்டன.

இந்தத் தவறால் ஏற்பட்ட பிரதிகூலங்கள், பாதகங்கள் அநேகம்; அவை கண்கூடானவை. இதற்கு இங்கு ஓர் உதாரணம் கூறுவோம்: ஒரு குறிப்பிட்ட மாகாணத்துக்கு மின்விசை தேவைப் படுகிறது என்று வைத்துக் கொள்வோம்; அப்போது இதன் பொருட்டு அந்த மாகாணம் தனது நீர்வளங்களைப் பயன்படுத்திக் கொள்ள விரும்புகிறது; ஆனால் இதனை அது செய்ய முடியாது; ஏனென்றால் மின்விசை உற்பத்தி செய்வதற்கு அணைகட்ட வேண்டிய இடம் மற்றொரு மாகாணத்தில் அமைந்திருக்கிறது; அந்த மாகாணமோ வேளாண்மையைப் பெரிதும் சார்ந்திருக்கும் மாகாணம்; அதற்கு மின்விசை தேவையில்லை; அதில் அதற்கு அக்கறையும் ஆர்வமும் இல்லை; மேலும் இந்தத் திட்டத்தை நிறைவேற்றுவதற்கு அத னிடம் போதிய பண வசதியும் இல்லை; எனவே, அணை கட்டு வதில் ஆர்வம் கொண்டுள்ள மாகாணத்தை அவ்வாறு செய்ய அது அனுமதிக்காது. இது குறித்து நாம் என்ன புகார் செய்தாலும் சம்பந்தப் பட்ட அந்த மாகாணம் அதைப் பொருட்படுத்தாது; மாகாண சுயாட்சி என்ற பெயரால் இத்தகைய நேசமற்ற போக்கை அது நியாயப்படுத்தவும் கூடும்.

### நீர்வளங்களைப் பயன்படுத்திக் கொள்ளுதல்

இரண்டு நோக்கங்களை மனத்திற் வைத்தே இந்தக் கருத்து களைத் தெரிவித்திருக்கிறேன். முதலாவதாக, நான் தெரிவித்த விவ ரங்களின் பகைப்புலனில், வங்க அரசாங்கம் நியமித்த தாமோதர் நதி வெள்ளப் பெருக்கு விசாரணைக் குழுவின் பரிந்துரைகளை நீங்கள் நன்கு மதிப்பிட முடியும்; இந்தப் பரிந்துரைகள் பற்றி நான் முக்கியமாகக் குறிப்பிட்டிருப்பதை நீங்கள் அறிவீர்கள். இரண்டாவ தாக, இப்போதைய சூழ்நிலைகளால் தோன்றியுள்ள பிரதிகூலங் களை மத்திய அரசாங்கம் பெரிதும் உணர்ந்துள்ளது என்பதையும், நாட்டின் நீர்வளங்களை அனைவருக்கும் மிகவும் நலமளிக்கும் முறையில் பயன்படுத்திக் கொள்ளக்கூடிய ஒரு கொள்கையை, மற்ற நாடுகளில் நீர்வளங்கள் எந்த நோக்கங்களுக்காகப் பயன்படுத்திக் கொள்ளப்படுகின்றனவோ அதே நோக்கங்களுக்காக நாமும் நமது நீர்வளங்களைப் பயன்படுத்திக் கொள்ளக்கூடிய ஒரு கொள்கையை உருவாக்க நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள மத்திய அரசாங்கம் விரும்புகிறது என்பதையும் நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டு மென்று விரும்புகிறேன்.

ரயில்வேக்கள் விஷயத்தில் நாம் எத்தகைய நடைமுறை யைக் கைக்கொள்கிறோமோ அதே நடைமுறையை நீர்வழிப் போக்குவரத்து விஷயத்திலும் பின்பற்றக்கூடிய விதத்தில் அரசிய லமைப்புச் சட்டத்தைத் திருத்துவது மிகவும் பயனளிக்கக்கூடிய ஒரு மாற்றமாக இருக்கும் என்பதில் ஐயமில்லை. எனினும் இத் தகைய அரசியலமைப்புச் சட்ட மாற்றங்கள் ஏற்படும் வரை காத்திருக்க வேண்டிய அவசியமில்லை என்று இந்திய அரசாங்கம் கருதுகிறது. அதேபோல், நீர்வளங்களைப் பயன்படுத்தும் ஒரு கூட்டுத் திட்டத்தில் ஒத்துழைக்க மாகாணங்கள் ஆர்வம் காட்டுமே யானால், அரசியலமைப்புச் சட்டம் இது விஷயத்தில் எவ்வகை யிலும் குறுக்கிடாது என்றும் அரசாங்கம் நினைக்கிறது.

அமெரிக்காவில் செயல்படுத்தப்பட்டுவரும் டென்னஸ்ஸி பள்ளத்தாக்குத் திட்டத்தை இந்திய அரசாங்கம் பெரிதும் மனத்திற் கொண்டுள்ளது. இந்தத் திட்டத்தை அது நன்கு ஆராய்ந்து வருகிறது; இது விஷயத்தில் ஒத்துழைக்க மாகாணங்கள் முன்வருமானால், அவற்றின் முன்னேற்றத்திற்கும் வளத்திற்கும் செழுமைக்கும் குறுக்கே நிற்கும் மாகாணத் தடைகளை அகற்ற அவை இணங்குமானால்,

டென்னஸ்ஸி திட்டத்தின் அடிப்படையில் இந்தியாவிலும் ஏதேனும் செய்யமுடியும் என்று அது நம்புகிறது. நாட்டின் நீர்வளங்களை மிகச் சிறந்த முறையில் பயன்படுத்திக் கொள்ளும் திசைவழியில் ஒரு பூர்வாங்க நடவடிக்கையாக இந்திய அரசாங்கம் ஒரு மத்திய அமைப்பைத் தோற்றுவித்துள்ளது - மத்திய தொழில்நுட்ப மின்விசை வாரியம் என்பது இந்த அமைப்பின் பெயர். இதே போன்று, மத்திய நீர்வழிப் போக்குவரத்து மற்றும் பாசன வசதி ஆணையம் என்ற மற்றொரு மத்திய அமைப்பை உருவாக்கவும் நாங்கள் யோசித்து வருகிறோம்.

நீர்வளங்களை எவ்வாறு சிறந்த முறையில் பயன்படுத்திக் கொள்ள முடியும், பாசன வசதி தவிர இதர பல காரியங்களுக்கும் ஒரு திட்டத்தை எவ்விதம் செயல்படுத்த முடியும் என்பது குறித்து மாகாணங்களுக்கு ஆலோசனை கூறுவதே இந்த இரண்டு அமைப்பு களையும் தோற்றுவித்ததன் நோக்கமாகும். மத்திய பயனோக்கு வாரியம் அல்லது விசேட விசாரணை ஆணையங்கள் போன்ற இதர பல அமைப்புகளை உருவாக்குவதும் அவசியமாகலாம். மத்திய மின்விசை வாரியம், மத்திய நீர்வழிப்போக்குவரத்து மற்றும் பாசன வசதி ஆணையம் ஆகியவற்றின் நியமனம் இத்தகைய அமைப்பு களை உருவாக்குவதை அவசியமற்றதாக்கி விடவில்லை.

தாமோதர நதித் திட்டம் இந்தத் திசைவழியில் மேற்கொள்ளப் பட்ட முதல் திட்டமாகும். இது பல-நோக்குத் திட்டமாக இருக்கும். தாமோதர நதியில் வெள்ளம் பெருக்கெடுத்தோடி பெரும் சேதம் விளைவிப்பதைத் தடுப்பது மட்டுமே இத்திட்டத்தின் நோக்கமாக இருக்காது; பாசன வசதி, நீர்வழிப் போக்குவரத்து, மின்விசை உற்பத்தி ஆகியவையும் இதன் குறிக்கோளாக இருக்கும்.

இத்திட்டத்தைச் செயல்படுத்தி நிர்வகிக்கும் அமைப்பு ஏறத் தாழ டென்னஸ்ஸிப் பள்ளத்தாக்குத் திட்ட நிர்வாக அமைப்பை ஒத்ததாக இருக்கும். இது ஒரு கூட்டுறவு அமைப்பாக இருக்கும். மத்திய அரசாங்கமும் பீகார், வங்க மாகாண அரசாங்கங்களும் இதில் பங்குதாரர்களாக இருந்துவரும். இத்திட்டத்துக்கு வடிவமும் கட்டமைப்பும் உயிர்த்துடிப்பும் அளிக்க இந்திய அரசாங்கம் மிகுந்த ஆர்வமுடன் இருக்கிறது; இவ்வாறு செய்வதில் எத்தகைய தாமதமும் ஏற்பட்டுவிடக்கூடாது என்பதிலும் உறுதி கொண்டிருக்கிறது.

## புதிய நீர்வளக் கொள்கை

சில பூர்வாங்க நடவடிக்கைகளை மேற்கொண்டாலொழிய இது விஷயத்தில் மேற்கொண்டு முன்னேற முடியாது என்பதை இந்திய அரசாங்கம் உணர்ந்துள்ளது. இத்தகைய பூர்வாங்க நடவடிக் கைகளில் ஒன்று அணை கட்டுவதற்கான இடத்தைத் தேர்ந்தெடுப்ப தாகும். வங்காளத்தின் விருப்பப்படி இதனைச் செய்ய முடியாது என்பது தெளிவு. அதேபோல், பீகாரின் விருப்பத்தை வைத்து மட்டும் இதனைத் தீர்மானிக்க இயலாது. ஒரு குறிப்பிட்ட இடத்தைத் தேர்ந் தெடுப்பதில் இவ்விரு மாகாணங்களுமே உடன்பாடு கண்டால் கூட நிபுணர்களின் ஆலோசனையைப் பெறாமல் இதனை முடிவு செய்ய முடியாது. இது விஷயத்தில் கணக்கிலெடுத்துக் கொள்ளப்பட வேண்டிய வேறு பல அம்சங்களும் இருக்கின்றன. நான் ஏற்கெனவே குறிப்பிட்டதுபோல் தாமோதர் நதித் திட்டம் ஒரு பல-நோக்குத் திட்டமாக இருப்பது அவசியம். வெள்ளப் பெருக்குப் பிரச்சினைக்குத் தீர்வு காணுவது மட்டுமே இத்திட்டத்தின் நோக்கமாக இருக்கக் கூடாது. பாசன வசதி, மின்விசை உற்பத்தி, நீர்வழிப்போக்குவரத்து போன்றவற்றையும் உள்ளடக்கியதாக இத்திட்டம் அமைந்திருக்க வேண்டும். அணை கட்டுவதற்கான இடத்தைத் தேர்ந்தெடுக்கும் பிரச்சினையுடன் கூட இவற்றையும் பரிசீலிப்பது முக்கியம்.

இந்தப் பணியைச் செய்வதற்கு ஒரு சிறந்த அமைப்பை உருவாக்குவது இந்த மாநாட்டின் நோக்கமாக இருக்க வேண்டும். எல்லாத் தன்னலக் கருத்துகளையும் மூட்டைகட்டி ஒதுக்கிவைத்து விட்டு, சரியான, நேர்மையான, நியாயமான உணர்வால் நாம் வழி நடத்தப்பட வேண்டும்; ஒன்றுபட்டு சிறந்த தீர்வு காணுவோம் என்ற உறுதிப்பாட்டோடு, தீர்மானத்தோடு முன்னேற வேண்டும்; நமது நீர் வளங்கள் சம்பந்தமாக ஒரு புதிய கொள்கையை உருவாக்க வேண்டும்; கொத்தியெடுக்கும் கொடிய வறுமையில் வாடும் இந்த நாட்டின் கோடானுகோடி மக்கள் வாழ்வும் வளமும் பெறும் ஒரு சுபிட்ச சூழ்நிலையைத் தோற்றுவிக்க நாம் உறுதி பூணவேண்டும். இதுவே எனது ஆசையாகும்.

## மாநாட்டு விவாதங்கள்

தாமோதர நதியைப் பாசனத்துக்கும், மின்விசைமயமாக்கத் துக்கும், நீர்வழிப்போக்குவரத்துக்கும் பயன்படுத்தும் குறிக்கோள் கொண்ட பல-நோக்குத் திட்டமான தாமோதர நதிப்பள்ளத்தாக்குத் திட்டம் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் தலைமை வகித்த மாநாட்டில் விவாதிக்கப்பட்டது.

இத்திட்டம் குறித்து அவசியமான தகவல் சேகரிக்கும் நடைமுறை சம்பந்தமாக மத்திய அரசாங்கம் சுற்றுக்கு விட்ட ஒரு குறிப்பு இந்த விவாதத்திற்கு அடிப்படையாக அமைந்திருந்தது.

மூன்று அரசாங்கங்களும் தத்தமக்குக் கிடைத்த தகவல்களும் புள்ளிவிவரங்களும் அடங்கிய ஒரு பட்டியலைத் தயாரிக்க வேண்டும் என்று இந்தக் குறிப்பில் பரிந்துரை செய்யப்பட்டிருந்தது. மத்திய அரசாங்கத்தின் நிபுணர்களைக் கலந்தாலோசித்து இந்தப் பட்டியல் தயாரிக்கப்பட வேண்டும். இந்தப் பட்டியலில் தேவையான விவரங்கள் இடம்பெற்றிருக்கவில்லை என்றால், மேற்கொண்டு தகவல்க்ள் சேகரிக்கப்பட வேண்டும். இதன் பேரில் மத்திய அரசாங்கத்தின் தொழில் நுட்ப நிபுணர்கள் ஒரு பூர்வாங்க அறிக்கையைத் தயாரிப்பார்கள்; தாமோதர நதிப் பள்ளத்தாக்கை பல வழிகளிலும் அபிவிருத்தி செய்யும், மேம்படுத்தும் ஓர் ஒருங்கிணைந்த திட்டத்தைத் தயாரிப்பதற்கான வாய்ப்பு வசதிகளை அதில் அவர்கள் கோடிட்டுக் காட்டுவார்கள். பின்னர் இத்தகைய திட்டத்தைத் தயாரிக்கும்படி மத்திய அரசாங்கத்தையும் மாகாண அரசாங்கங்களையும் சேர்ந்த நிபுணர்களை மூன்று அரசாங்கங்களும் கேட்டுக் கொள்ள வேண்டும்.

## பொது உடன்பாடு

தாமோதர நதிப் பள்ளத்தாக்குத் திட்டத்தை ஒரு பல-நோக்குத் திட்டமாகத் தயாரிக்கும் விஷயத்தில் பொது உடன்பாடு நிலவிய போதிலும், தாமோதர நதி வெள்ளப் பெருக்கைக் கட்டுப்படுத்தும் பிரச்சினையில் பிரதான கவனம் செலுத்த வேண்டும் என்று வங்காளப் பிரதிநிதிகள் வலியுறுத்தினர். மத்திய அரசாங்கம் செய்துள்ள பரிந்துரைகளின் அடிப்படையில், வங்க அரசாங்கத்தின் பாசனத்துறை பொறியாளரான திரு. மான் சிங் தலைமையில் ஆய்வுகள் மேற்கொள்ளப்பட வேண்டும் என்று சிறிது விவாதத்திற்குப் பிறகு ஒப்புக் கொள்ளப்பட்டது. இந்த ஆய்வில் திரு. மான் சிங்குக்கு உதவ மத்திய அரசாங்கமும் பீகார் அரசாங்கமும் அதிகாரிகளை அனுப்பி உதவ வேண்டும் என்றும் தீர்மானிக்கப்பட்டது. பீகார் பாசனத்துறை துணைப் பிரதம பொறியாளரான திரு. ஏ. கரீம் மான்சிங்குடன் அடிக்கடி தொடர்பு கொள்வார்.

இந்திய அரசாங்கத்தின் தொழிலாளர் நலத்துறை செயலாளர் திரு. எச்.சி. பிரியோர் கூட்ட ஆரம்பத்தில் பேசும்போது, நீர்வளப்

பிரச்சினைகளின் நிர்வாக அம்சம் பற்றிக் குறிப்பிட்டார்; மத்திய அரசாங்கம் தனது பங்குக்கு ஆற்றக் கூடிய பணிகள் பற்றி எடுத்துரைத்தார்.

★ ★ ★

மாநாட்டில் பங்கு கொண்டவர்களில் பின்வருபவர்கள் குறிப்பிடத்தக்கவர்களாவர்: வங்க அரசாங்கத்தின் தகவல் போக்குவரத்து மற்றும் பொதுப் பணித்துறை அமைச்சர் மாண்பு மிகு திரு. பி.பி. பெய்னே, இதே துறையின் செயலாளர் திரு. பி. சர்க்கார் ஐ.சி.எஸ்., திரு. பி.எல். சபர்வால், வங்கத்தின் பிரதம பொறியாளர், திரு. ஜே. எஃப். ரஸ்ஸல், விசேட பொறியாளர் (பாசனத்துறை) திரு. மான் சிங்., நதிகள் ஆய்வுக் கழகத்தின் இயக்குநர் திரு. என்.கே. போஸ், யுத்தப் பிற்காலப் புனரமைப்புக் குழுவின் செயலாளர் திரு. என். தார், வளர்ச்சித் துறை ஆணையர் திரு. எச்.எம். இஷாக், பாசனத்துறை துணைப் பொறியாளர் திரு. ஏ. கரீம், மத்திய தொழில்நுட்ப மின்விசை வாரியத்தின் தலைவர் திரு. எச்.எம். மாத்யூஸ், இவ்வாரியத்தின் நீர்மின் விசைத்துறை உறுப்பினரான திரு. டபிள்யூ. எல். ஊர்தின், மத்திய அரசாங்கத்தின் பிரதிநிதியான திரு. டி.எல். மஜும்தார்.



# 40

## [1]யுத்தப் பிற்காலத்தில் மின்விசைத் துறையின் வளர்ச்சி

யுத்தம் முடிவடைந்ததும் கூடிய விரைவில் இந்தியாவுக்குத் தேவையான கனரக மின்விசை எந்திர சாதனங்களைப் பெறுவதற்கான ஒரு கால அட்டவணை தயாரிக்கப்பட்டிருக்கிறது, அதே போன்று அவசியமான மின்விசை உற்பத்தி ஆற்றலை இந்தியா ஈட்டுவதற்கும் நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன என்று இந்திய அரசாங்கத்தின் தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் கூறினார். ''பொதுப்பணித் துறை மற்றும் மின்விசை உற்பத்தித் துறை'' குறித்த கொள்கைக் குழுவின் இரண்டாவது கூட்டம் பிப்ரவரி 2 ஆம் தேதி புதுடில்லியில் நடைபெற்றபோது அதில் உரையாற்றுகையிலேயே அவர் மேற்கண்டவாறு குறிப்பிட்டார்.

டாக்டர் அம்பேத்கர் உரையின் முழு வாசகத்தை கீழே த்ந்திருக்கிறோம்:

இந்தக் கூட்டத்திற்கு வந்திருக்கும் பழைய பிரதிநிதிகள், புதிய பிரதிநிதிகள் ஆகிய எல்லாப் பிரதிநிதிகளுக்கும் எனது மிகவும் மனமார்ந்த வரவேற்பைத் தெரிவித்துக் கொண்டு எனது உரையைத் தொடங்க விரும்புகிறேன். நமது குழு சென்ற முறை கூடியபோது அதில் அப்போது உறுப்பினர்களாக இல்லாதவர்கள் இப்போது உறுப்பினர்களாக இடம் பெற்றிருக்கின்றனர்; எனவேதான் பழைய உறுப்பினர்கள் புதிய உறுப்பினர்கள் என்று குறிப்பிட்டேன். புதிய உறுப்பினர்கள் இந்தியாவிலுள்ள மின்விசைத் தொழில் நிறுவனங்களின் உரிமையாளர்கள் சம்மேளனத்தினாலும் இந்தியத் தொழிற் சங்க காங்கிரசாலும் நியமிக்கப்பட்டவர்கள். மின்விசைத் தொழில் நிலையங்களும் ஸ்தாபன ரீதியாக ஒருங்கு திரண்டுள்ள தொழிற் சங்க அமைப்புகளும் இந்தியாவின் எதிர்கால மின்விசைத்துறை வளர்ச்சியில் மிகுந்த ஆர்வமும் அக்கறையும் கொண்டிருப்பவை.

---

1. இந்தியத் தகவல் ஏடு, பிப்ரவரி 5, 1945, பக்கங்கள் 235-41

எனவே, இவற்றின் பிரதிநிதிகள் தெரிவிக்கும் கருத்துகளை உரிய முறையில் கணக்கிலெடுத்துக் கொண்டு நாம் எந்த முடிவையும் மேற்கொள்ள வேண்டும். சென்றமுறை இந்தப் புதிய உறுப்பினர்கள் பங்குகொள்ள முடியாமல் போனதற்காக வருந்துகிறேன். அதற்காக மன்னிப்பும் கோருகிறேன். ஏனென்றால் அவர்கள் விடப்பட்டுப் போனது ஒரு பெரிய தவறாகும். இன்று அவர்கள் நம்முடன் இருப் பதற்காக நாம் அனைவரும் மிகவும் மகிழ்ச்சி அடைகிறோம். நம் முன்னுள்ள விஷயம் குறித்து நடைபெறவிருக்கும் விவாதத்தில் அவர்கள் உரிய முறையில் பங்கெடுத்துக் கொள்வார்கள் என்று நம்புகிறேன்.

### மின்விசைப் பொறியாளர்களின் மாநாடு

சென்ற முறை 1943 அக்டோபர் 25 ஆம் தேதி கொள்கைக் குழு கூடிற்று. அதற்குப் பிறகு யுத்தப் பிற்கால மின்விசைத் துறை வளர்ச்சிக்கு இந்திய அரசாங்கம் என்ன செய்துள்ளது என்பதை உங்களில் அநேகர் அறியாதிருக்கக் கூடும். எனவே, இதுகுறித்து சில விவரங்களைத் தெரிவிப்பதுடன் கூட்டத் தலைவர் என்ற முறையில் எனது உரையைத் தொடங்கலாம் என்று நினைக்கிறேன். இந்தக் கொள்கைக் குழுவின் சென்ற கூட்டத்தொடர் முடிவடைந்ததும் இந்திய அரசாங்கத்தின் மின்விசைத்துறை ஆணையரான திரு. மாத்யூஸ் அரசாங்கத்தின் அங்கீகாரம் பெற்று நாட்டிலுள்ள பிரபல மின்விசைப் பொறியாளர்களின் மாநாடு ஒன்றைக் கூட்டினார்; யுத்தப் பிற்கால மின்விசைத்துறை வளர்ச்சி குறித்துப் பரிசீலிப்பதே அரசு சார்புடைய மற்றும் அரசு சார்பில்லாத பொறியாளர்கள் பங்கு கொண்ட இம்மாநாட்டின் நோக்கமாகும். யுத்தம் முடிவுற்ற உடனேயே மின்விசை உற்பத்தியைப் பெருக்குவதற்கு இந்தியாவுக்குத் தேவை யான கனரக மின்விசை எந்திரங்களைப் பெறுவதற்கான ஒரு கால அட்டவணையைத் தயாரிப்பதே மாநாடு மேற்கொண்ட முதல் பணி யாக இருந்தது. இதுவன்றி, இதுவிஷயம் குறித்து இதுவரை மேற் கொள்ளப்பட்ட பல்வேறு ஆய்வுகள், விசாரணைகள், விவாதங் களின் அடிப்படையில் அமைந்த ஒருமித்த முடிவைப் பிரதிபலிக்கும் வகையில் மாநாடு சில தீர்மானங்களை நிறைவேற்றிற்று. இந்தத் தீர்மானங்கள் நான்கு பகுதிகளின் கீழ் வருகின்றன:

(1) மாகாணங்களும் சமஸ்தானங்களும் தமது அதிகார எல்லைகளுக்குள் மின்விசை உற்பத்தியைப் பெருக்குவது சம்பந்தமாக எத்தகைய நடைமுறைகளைப் பின்பற்ற வேண்டும்

என்பது குறித்த பொதுவான பரிந்துரைகளும், சில குறிப்பிட்ட பரிந்துரைகளும் முதல் பகுதியில் அடங்கியுள்ளன.

(2) மின்விசை வாரிய நியமனம் சம்பந்தப்பட்ட விஷயங்கள் இரண்டாவது பகுதியில் காணப்படுகின்றன.

(3) மாநாடு பரிசீலித்துக் காலதாமதமின்றி உடனடியாக ஆராய வேண்டிய சில மின்விசை வளர்ச்சி அம்சங்கள் மூன்றாவது பகுதியில் இடம்பெற்றிருக்கின்றன.

(4) ரயில் போக்குவரத்தை மின்மயமாக்குதல், செயற்கை உரங்கள் உற்பத்தி, கிராமப்புற மின்மயமாக்கம் சம்பந்தப்பட்ட விஷயங்கள் நான்காவது பகுதியில் குறிப்பிடப்பட்டிருக்கின்றன.

மாநாட்டு உறுப்பினர்கள் தங்கள் ஆய்வு முடிவுகளுடன் அனுப்பியிருந்த கடிதத்தில் பின்கண்டவாறு குறிப்பிட்டிருந்தனர்: ''மின்விசை வளர்ச்சித் திட்டம் முற்றிலும் ஒருங்கிணைந்த முறையில் பரிசீலிக்கப்பட்டது இதுவே முதல் முறையாகும்; இந்தியா முழுவதிலும் பல்வேறு நிலைமைகளில் அனுபவம் பெற்ற பொறியாளர்கள் இந்த மாநாட்டில் கலந்து கொண்டிருப்பது பிராந்தியத் தேவைகளை ஒருமுகப்படுத்துவதில் பெரிதும் மதிப்புமிக்க அம்சமாக அமைந்துள்ளது.''

### கனரக மின்விசை எந்திர சாதனங்கள்

யுத்தம் முடிவடைந்த உடனேயே இந்தியா முழுவதிலும் மின்விசை உற்பத்திப் பெருக்கத்துக்கு மகத்தான வாய்ப்பு இருப்பதாக தெள்ளத் தெளிவாக எடுத்துக்காட்டியமைக்காக மாநாட்டுக்கு நாம் மிகுந்த நன்றி கூறக் கடமைப்பட்டிருக்கிறோம் என்பதை நீங்கள் அனைவரும் ஒப்புக்கொள்வீர்கள் என்று நம்புகிறேன். தான் செய்துள்ள பல பரிந்துரைகள் சம்பந்தமாக தகுந்த நடவடிக்கைகள் எடுக்குமாறு இந்திய அரசாங்கத்தை மாநாடு கேட்டுக் கொண்டது. மாநாட்டின் இரு பரிந்துரைகள் எந்திர சாதனங்கள் வாங்குவது, தொழில்நுட்ப மின்விசை வாரியம் அமைப்பது சம்பந்தப்பட்டவை இந்த இரு பரிந்துரைகளும்.

யுத்தம் முடிவடைந்ததும் கூடிய விரைவில் இந்தியாவுக்குத்

தேவையான கனரக மின்விசை எந்திர சாதனங்களைப் பெறுவதற்கான ஒரு கால அட்டவணை தயாரிக்கப்பட்டிருக்கிறது; அதேபோன்று, அவசியமான மின்விசை உற்பத்தி ஆற்றலை இந்தியா ஈட்டுவதற்கும் நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. மொத்த உற்பத்தி ஆற்றல் 850 மெகாவாட்டாக இருக்கும்; இதற்கு ஏறத்தாழ 50 கோடி ரூபாய் செலவாகும் என்று மதிப்பிடப்பட்டுள்ளது. இந்த மொத்த புதிய ஆற்றல் திறன் தற்போதுள்ள ஆற்றல் திறனில் கிட்டத் தட்ட 65 சதவீதமாக இருக்கும். எந்திர சாதனங்கள் விஷயத்தில் நமது தேவை நாம் பதிவு செய்திருப்பதைவிட அதிகமாக இருக்கும் என்பதை மேலும் விரிவான ஆய்வு புலப்படுத்தக்கூடும். ஆனால் இனியும் தாமதிப்பது இந்தியாவின் நலனுக்கு ஊறுவிளைவிக்கு மாதலால், நமக்குள்ள குறுகிய காலத்திற்குள் கிடைக்கும் தகவல் களின் அடிப்படையில் நாம் உடனடியாக நடவடிக்கை எடுக்க வேண்டியுள்ளது.

## தொழில்நுட்ப மின்விசை வாரியம்

ஒரு தொழில்நுட்ப மின்விசை வாரியத்தை இந்திய அரசாங்கம் அமைத்திருக்கிறது என்பதை 1944 நவம்பர் 8 ஆம் தேதியிடப்பட்ட பத்திரிகை குறிப்பிலிருந்து நீங்கள் தெரிந்து கொண்டிருக்கலாம். தலைவரைத் தவிர இரண்டு முழுநேர உறுப்பினர்களையும் மூன்று பகுதிநேர உறுப்பினர்களையும் ஆரம்பத்தில் வாரியம் பெற்றிருக்கும். இந்திய மின்விசைத் துறை ஆணையரான திரு. மாத்யூசை தலைவராக இந்திய அரசாங்கம் நியமித்துள்ளது; அதோடு, அமெரிக்காவைச் சேர்ந்த திரு. டபிள்யூ.எல். ஊர்தினது சேவையைப் பெற்று அவரை வாரியத்தின் மற்றொரு உறுப்பினராக நியமித்திருக்கிறது. இந்தியா வுக்கு வருவதற்கு முன்னர் டென்னஸ்ஸி நதிப் பள்ளத்தாக்குத் திட்ட நிர்வாகத்தில் ஓர் அதிகாரியாகப் பணியாற்றியவர் இவர். பய னோக்கு உறுப்பினர் எனப்படும் மூன்றாவது உறுப்பினர் ஒருவரை நியமிக்க உத்தேசிக்கப்பட்டிருக்கிறது. பயனோக்குப் பணியில் அனுபவமுள்ள தகுதிவாய்ந்த ஒரு பொறியாளரைத் தெரிவு செய்ய முயற்சி மேற்கொள்ளப்பட்டு வருகிறது. மாகாண அரசாங்கங்களை யும் சமஸ்தான அரசாங்கங்களையும் கலந்தாலோசித்து மின்விசை உற்பத்திப் பெருக்கத்துக்குத் தேவையான தகவல்களைச் சேகரிக்கக் கூடிய, ஆய்வுகளை மேற்கொள்ளக்கூடிய, திட்டங்களைத் தயா ரிக்கக்கூடிய ஒரு வலுவான தொழில்நுட்ப அமைப்பாக இந்த வாரி யத்தை உருவாக்குவதற்கு இந்திய அரசாங்கம் எவ்விதம் மிகுந்த ஆர்வமும் அக்கறையும் கொண்டிருக்கிறது என்பதை இந்த உயர்

மட்ட நிபுணர்களின் நியமனம் தெள்ளத் தெளிவாகப் புலப்படுத்து வதை நீங்கள் காணலாம். கொள்கைக் குழுவின் கூட்டங்கள் நடை பெறுவதற்கு இடைப்பட்ட காலத்தில் என்ன நடைபெற்றிருக் கிறது என்பதை நீங்கள் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காக வும், இந்த விஷயத்தில் இந்திய அரசாங்கம் மெய்யார்வத்தோடும், துரிதமாகவும் நடவடிக்கை எடுத்துவருகிறது என்பதை உங்க ளுக்குப் புலப்படுத்துவதற்காகவுமே இவற்றையெல்லாம் இங்கு கூறினேன்.

## மூன்று அம்சத் திட்டம்

மின்விசைக் கொள்கையில் மற்றொரு முக்கிய விஷயமும் உள்ளது; அதனை உங்கள் அனைவரின் கவனத்துக்கும் இங்கு கொண்டுவர விரும்புகிறேன். கொள்கைக் குழுவின் கடந்த கூட்டத் தில் பம்பாய் அரசாங்கத்தின் சார்பில் கலந்து கொண்ட திரு. காலின்ஸ் பம்பாய் ராஜதானியில் 'கிரிட்' முறையை நடைமுறைக்குக் கொண்டு வர உத்தேசிக்கப்பட்டிருப்பதாகத் தெரிவித்தது உங்களுக்கு நினை விருக்கும். நாட்டின் பல்வேறு பகுதிகளில் ஸ்தல அளவில் மின் விசை உற்பத்திப் பெருக்கத்திற்குப் பதிலாக பிராந்திய அளவிலான மின்விசைப் பெருக்க விஷயத்தில் இந்திய அரசாங்கத்திலுள்ள நாங்கள் சென்ற ஆண்டு மிகுந்த அக்கறை காட்டினோம். மின்விசை அளிக்கும் வசதிகளை உற்பத்தியாளர்களுக்கு மட்டுமன்றி நுகர்வோ ருக்கும் மிகக் குறைந்த கட்டணத்தில் கிடைக்கச் செய்ய வேண்டு மானால், பிரிட்டனில் மத்திய மின்விசை வாரியம் ஆரம்பம் முதலே பின்பற்றிவரும் மூன்று அம்சத் திட்டத்தை நாம் முன்னெச்சரிக்கை யோடும், படிப்படியாகவும் பின்பற்ற வேண்டும் என்பதை நாங்கள் மேன்மேலும் உணர்ந்தோம். அந்த மூன்று அம்சத் திட்டம் வருமாறு:

(அ) பொது வழங்கீடு அமைப்புகளின் கட்டுப்பாட்டின் கீழ் பிரதான தொழில் கேந்திரப் பகுதிகளில் பெரிய அளவி லான மின் நிலையங்களை அமைத்தல்;

(ஆ) பெரிய மின் நிலையங்களை ஒன்றுடன் ஒன்று இணைக் கும் வகையில் மின்விசை செல்லும் பிரதான அமைப்பை நிர்மாணித்தல்; பிராந்தியம் முழுவதும் வளர்ச்சியுறும் விதத் திலும், வேளாண் பிரதேசங்களும் தொலைதூர பிரதேசங்களும் பயனடையும் முறையிலும் இப்பணியைச் செய்தல்;

(இ) மின்விசை அமைப்பு மூலம் அபிவிருத்தி செய்ய வேண்டிய பிராந்தியத்தில் மின்விசை வழங்கீட்டை முறைப் படுத்துதல்.

இந்த மூன்று அம்சத் திட்டம்தான் 'கிரிட்' முறையின் அடித் தளமாக அமைந்திருக்கிறது. 1926 ஆம் ஆண்டு முதல் பிரிட்டனில் இது செயல்படுத்தப்பட்டு வருகிறது. பிராந்திய வளர்ச்சிக்கான இத்தகையதோர் திட்டம் இந்த நாட்டில் பின்பற்றப்படுமானால், குறைந்த கட்டணத்தில் மின்விசை என்னும் மாபெரும் வரப்பிரசா தத்தை ஏழை, பணக்காரர், உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்ற பாகு பாடின்றி எல்லோருக்குமே கூடிய விரைவில் வழங்க முடியும் என்று நம்புகிறேன்.

'கிரிட்' முறையைக் கடைப்பிடிக்க பிரிட்டனில் முதலில் உத்தேசிக்கப்பட்டபோது, 1940-41க்குள்ளாக நாட்டில் மின்விசை உற்பத்தி 2500 கோடி யூனிட்டுகள் என்னும் பிரம்மாண்டமான அளவை எட்டும் என்றும், ஒரு யூனிட் மின்விசை உற்பத்திக்கான செலவு 1925-26ல் 9.4 பென்னியாக இருந்தது 4 பென்னிக்கும் குறை வாக ஆகுமென்றும், பெரிய தொழில்துறைப் பயனீட்டாளர்களுக்கு ஒரு யூனிட் மின்விசை 1/2 பென்னிக்குக் கிடைக்கும் என்றும் மதிப் பிடப்பட்டது என்பதை இந்தச் சந்தர்ப்பத்தில் உங்கள் கவனத் திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். இது உங்களுக்கு சுவையான தகவலாக இருக்கும் என்பதில் ஐயமில்லை.

### நிகழ்ச்சி நிரலில் இடம் பெற்றுள்ள விஷயங்கள்

இன்றைய நமது கூட்டத்திற்கான நிகழ்ச்சி நிரலைப் பற்றி இனி பார்ப்போம். நிகழ்ச்சி நிரலில் மொத்தம் நான்கு இனங்கள் அடங்கியுள்ளன. இவற்றில் முதல் இனம் உங்கள் பரிசீலனைக்கு இரண்டு திட்டங்களை முன்வைக்கிறது: ஒன்று தொழில்நுட்ப மின் விசை வாரியத்தை அமைப்பது; மற்றொன்று மின்விசைத் துறை யில் பயிற்சி பெறுவதற்காக இந்தியர்களை அயல் நாடுகளுக்கு அனுப்புவது. இவற்றில் எந்தத் திட்டமும் சர்ச்சைக்குரியதன்று. எனவே இவற்றைப் பற்றி இங்கு விரிவாக எடுத்துரைத்து உங்கள் நேரத்தை வீணடிக்க விரும்பவில்லை.

நிகழ்ச்சி நிரலில் இடம் பெற்றுள்ள இரண்டாவது இனம் நான்காவது இனத்தைப் போன்று துரதிர்ஷ்டவசமாக அத்தனை

சர்ச்சைக்கு இடமற்றது அன்று. மின்விசை நிலையங்களின் வருவாய், செலவு, ஆதாயம் முதலியவை குறித்த சில கணக்குவைப்புக் கோட் பாடுகள் சம்பந்தப்பட்டது இந்த இரண்டாவது இனம். இந்த இனம் எடுத்த எடுப்பில் தோன்றுவதுபோல் அவ்வளவு சர்ச்சைக்குரியது அல்ல. இந்த இனம் இரண்டு பிரச்சினைகளைத் தன்னுள் கொண் டுள்ளது. ஒரு பிரச்சினையை அல்ல. இவ்விரு பிரச்சினைகளையும் தனித்தனியாக ஆராய்ந்தால் சர்ச்சை பெருமளவுக்குக் குறையும்.

மின்விசை வழங்கும் ஒரு நிறுவனத்தின் ஆதாயப்பங்கு மின்விசைப் பயனீட்டுக்கான கட்டணத்துடன் சம்பந்தப்பட்டிருக்க வேண்டுமா என்பது முதல் பிரச்சினை. இரண்டாவது பிரச்சினை நியாயமான ஆதாயப்பங்கை எவ்வாறு நிர்ணயிப்பது என்பதாகும். முதல் பிரச்சினையைப் பொறுத்தவரையில், அதில் சர்ச்சைக்கு அதிக இடமில்லை. மின்விசை என்பது உற்பத்தி அளவிலும் பயனீட்டு அளவிலும் மக்களுக்கு ஜீவாதாரமானது. மக்களுக்கு இவ்விதம் அத்தியாவசியமாகத் தேவைப்படும் மின்விசையின் விலையை உற்பத்தியாளர் தமது விருப்பப்படி நிர்ணயிக்க அனுமதிக்க முடியாது என்பது தெள்ளத் தெளிவு. மின்விசை மலிவான கட்டணத்தில் அதிக அளவில் கிடைப்பதற்கு இந்தியா வழிவகை செய்யவில்லை என்றால் இந்திய நாட்டின் தொழில் வளர்ச்சியின் எதிர்காலம் முழுதுமே மிகுந்த அபாயத்துக்கு உள்ளாகும். ஆதலால் ஆதாயப் பங்குகளை மின்விசைக் கட்டணத்தோடு சம்பந்தப்படுத்துவது மிகவும் முக்கியம். இந்தக் கோட்பாடு ஏற்றுக்கொள்ளப்படுமானால் கணக்குவைக்கும் விதிகளைச் செயல்படுத்துவது இன்றியமையாதது; மின்விசை உற்பத்தியாளர்களுக்கு நியாயமான லாபம் கிடைக்க இது வகை செய்யும்; அதோடு, திருட்டுத்தனமாக லாபங்கள் ஈட்டு வதற்கு வகை செய்யும் ஓட்டைகளையும் அடைத்துவிடும்.

## கணக்கு வைக்கும் கோட்பாடுகள்

அப்போது பிரச்சினை இரண்டாந்தரமானதாகிவிடும். கணக்கு வைப்புக் கோட்பாடுகள் கண்டிப்பான முறையில் கடைப்பிடிக்கப் பட வேண்டும் என்பதை வலியுறுத்துவதன் மூலம் புரட்சிகரமான புதிய கருத்து எதையும் நாம் கூறிவிடவில்லை. 1925 ஆம் வருட லண்டன் மின்விசை சட்டத்திலும், 1926 ஆம் வருட மின்விசை வழங்கீடு சட்டத்திலும் மின்விசை சம்பந்தமாக தெரிவிக்கப்பட் டுள்ள பிரிட்டிஷ் விதிமுறைகளைத்தான் நாம் பின்பற்றுகிறோம். இந்திய அரசாங்கத்தின் மின்விசைத்துறை ஆணையர் தயாரித்துள்ள

பொதுநிலை அறிக்கையில், மின்விசை உற்பத்தி நிறுவனங்கள் பின்பற்ற வேண்டிய இத்தகைய கணக்கு வைப்புக் கோட்பாடுகளை வகுத்துத் தந்திருக்கிறார். அவரது அறிக்கை மாகாண அரசாங்கங் களுக்கும், மின்விசை உற்பத்தி நிறுவனங்களுக்கும் அவற்றின் கருத் தறிய சுற்றுக்கு விடப்பட்டிருக்கிறது. இது விஷயத்தில் துரதிர்ஷ்ட வசமாக சில மாறுபட்ட கருத்துகள் நிலவுகின்றன. இந்தக் கருத்து வேறுபாடுகளை களையும் பொருட்டு ஓர் ஆலோசனைக் குழுமத்தை அமைக்க இந்திய அரசாங்கம் உத்தேசித்திருக்கிறது; எத்தகைய நியாயமான, உசிதமான கோட்பாடுகளைக் கடைப்பிடிக்க வேண்டும் என்று இந்தக் குழுமம் ஆலோசனை கூறும். இது ஒரு சரியான, திருப்தி கரமான தீர்வு என நீங்கள் கருதுவீர்கள் என நம்புகிறேன்.

நிகழ்ச்சி நிரலில் நாம் இன்னும் பரிசீலிக்க வேண்டியிருப் பவை 1 ஆவது இனமும் 3ஆவது இனமுமாகும். நமது நிகழ்ச்சி நிரலில் உண்மையில் இவை மிக முக்கியமானவை; இவற்றை விளக்கிக் கூறுவதற்கு உங்கள் நேரத்தை எடுத்துக் கொள்வதை அனுமதிப்பீர்கள் என்று நம்புகிறேன்.

முதல் இனத்தைப் பொறுத்தவரையில், கொள்கைக் குழு வின் கடந்த கூட்டத்தில் நிலைமை எவ்வாறு இருந்தது என்பது உங்களுக்கு நன்கு நினைவிருக்கும். நிகழ்ச்சி நிரலில் இடம் பெற் றிருந்த விஷயங்கள் குறித்த விவாதம் முடிவுற்றபோது அக்கூட்டத் தில் ஏற்பட்ட உடன்பாடு அடங்கிய ஒரு தீர்மானத்தைத் தொழி லாளர் நலத்துறை தயாரித்து கொள்கைக் குழுவின் அடுத்த கூட் டத்தில் விவாதத்திற்கு வைக்க வேண்டும் என்று கொள்கைக் குழு விருப்பம் தெரிவித்தது. அவ்வாறே ஒரு நகல் தீர்மானம் தயாரிக்கப் பட்டது. அதன் விவரம் வருமாறு:

> ''இந்தியாவில் மின்விசை வழங்கீட்டை மேலும் அபி விருத்தி செய்வதை ஓர் அரசு முயற்சியாகவோ அல்லது ஓரளவு அரசு முயற்சியாகவோ தீவிரமாக மேற்கொள்ள வேண்டு மென்றும், மாகாண அரசாங்கங்களுக்கோ, சமஸ்தான அரசாங் கங்களுக்கோ அல்லது ஸ்தல ஸ்தாபன அமைப்புகளுக்கோ சொந்தமான மின் நிலையங்களிலும், அதேபோன்று வர்த்தக ரீதியாக தனியார் நடத்தும் மின் நிலையங்களிலும் மின்விசை உற்பத்தி ஆரோக்கியமான முறையில் வளர்வதற்கு இடை யூறுகளாக இருக்கும் காரணங்களைக் களைவதற்கு நடவடிக்கை எடுக்க வேண்டும் என்றும் இந்தக் கூட்டம் பரிந்துரைக்கிறது.''

இந்தத் தீர்மானம் அத்தனை தெள்ளத் தெளிவாக இல்லை என்பது உணரப்பட்டது. புதிதாக உருவாகப் போகும் மின் நிலையம் பற்றித் தீர்மானம் கூறியுள்ளது. ஏற்கெனவே அமைக்கப்பட்டிருக் கும் மின் நிலையங்களைப் பற்றி அது எதுவும் தெரிவிக்கவில்லை. மின்விசை உற்பத்தி ஆரோக்கியமான முறையில் வளர்வதற்கு இடை யூறாக இருக்கும் காரணக் கூறுகளைக் கட்டுப்படுத்தும் அவசியம் பற்றிக் கூறும் தீர்மானம் அந்தக் காரணக் கூறுகள் எவை என்பதை திட்டவட்டமான முறையில் எடுத்துரைக்கத் தவறிவிட்டது. எனவே, தற்போது ஏற்பட்டுள்ள ஐயங்களை அகற்றுவதற்கு கொள்கைக் குழுவில் தீர்மானம் மீண்டும் கவனமாகப் பரிசீலிக்கப்பட வேண்டி யது விரும்பத்தக்கது என்று உணரப்பட்டது. இவ்வாறுதான் 1ஆவது இனம் இப்போதைய நிலையை அடைந்தது.

## அரசுக் கட்டுப்பாடும் உடைமையும்

தற்போது மின் நிலையங்கள் இல்லாத இடங்களில் கட்டப் படும் மின் நிலையங்கள் அரசாங்கத்துக்குச் சொந்தமாக இருக்க வேண்டும் அல்லது அவற்றின்மீது அரசாங்கக் கண்காணிப்பு இருக்க வேண்டும் என்பதையே சென்ற கொள்கைக் குழுக் கூட்டத்தில் நடைபெற்ற விவாதம் தெள்ளத் தெளிவாக எடுத்துக் காட்டுவதாக இருந்தது; ஆனால் மின் நிலையங்கள் ஏற்கெனவே நிர்மாணிக்கப் பட்டுச் செயல்பட்டுவரும் இடங்களில் அரசு எத்தகைய பங்காற்ற வேண்டும் என்பது குறித்து ஓரளவு ஐயப்பாடு நிலவியது. உதாரண மாக, இதுபற்றி சில கேள்விகள் எழுந்துள்ளன: அவசியம் ஏற்படும் போது ஒரு மின் நிலையத்தை அரசோ அல்லது அதன் அதிகாரம் பெற்ற வேறு எந்த ஓர் அமைப்போ தன் நிருவாகத்தின்கீழ் கொண்டு வருவதை ஒரு பொதுவான நியதியாக மேற்கொள்வது விரும்பத் தக்கதா? பிராந்திய வளர்ச்சியின் பொருட்டோ அல்லது மின் உற் பத்தியை ஒழுங்குப்படுத்தும் பொருட்டோ தனியார் மின் நிலை யங்கள் மீது அரசு கட்டுப்பாட்டையும் கண்காணிப்பையும் செலுத் துவது உசிதமானதா? போதிய பிராந்திய வளர்ச்சியின் பொருட்டு வேறுசில மின்நிலையங்களிலிருந்து தற்போது இயங்கிவரும் சில மின் நிலையங்களுக்கு பெருமளவுக்கு மின்விசை வழங்க வேண்டி யிருக்கும். இதன் மூலம் இப்போதுள்ள ஒரு மின்நிலையத்தை விரிவு படுத்தி, அதனை பிராந்திய வளர்ச்சிக்கான பொதுத் திட்டங்களுக்கு இசைந்ததாக ஆக்க முடியும். ஆதலால், மின் நிலையங்களை எந்த அளவுக்கு அரசு உடைமையாக்க வேண்டும் என்பது பற்றி மட்டு மன்றி, உடனடியாக அரசுடைமையாக்குவது சாத்தியமில்லாத

போது, சம்பந்தப்பட்ட மின்நிலையங்கள் மீது அரசு தனது கட்டுப் பாட்டைச் செலுத்த வேண்டும் என்பது குறித்தும் இந்த விவாதத்தில் நாம் ஒரு தெளிவான முடிவினை மேற்கொள்வது அவசியம் என்று கருதுகிறேன்.

## ஜெவோனது பொருளாதார சூத்திரம்

அரசு நிறுவனமா, தனியார் நிறுவனமா என்பது எப்போதுமே ஒரு சர்ச்சைக்குரிய பிரச்சினையாக இருந்து வந்திருக்கிறது. அதிலும் திட்டமிட்ட பொருளாதாரம் என்னும் கொள்கை வழியை நாம் மேற்கொள்ள ஆரம்பித்துவிட்டதால் இந்த சர்ச்சை இந்தியாவில் தற்போது முழு வேகத்துடன் எதிரொலித்து வருகிறது. **அரசும் தொழில்துறையும்** என்னும் தமது ஆய்வுக் கட்டுரையில் அரசு நிறு வனத்தையும் தனியார் நிறுவனத்தையும் வேறுபடுத்திக் காட்டும் ஒரு பொருளாதார சூத்திரத்தை வகுத்தளிக்க ஜெவோன்ஸ் முயன் றுள்ளார்; அரசு நிறுவன எதிர்ப்பாளர்களுக்கு இந்த சூத்திரமே வேத வாக்காக அமைந்துள்ளது. ஒரு தொழிலை அரசுடைமை ஆக்குவதற்கு ஜெவோன்ஸ் நான்கு அளவுகோல்களை நிர்ணயித்து தந்திருக்கிறார்: அவை வருமாறு: (1) சிறு மூலதனக் கணக்கு; (2) வழக்கமான வேலை நடைமுறைகள்; (3) அஞ்சல் துறை, தந்தி, தொலைபேசி போன்ற பல்வேறு துறைகளுக்கிடையே ஒருங்கிணைப்பு; (4)தண்ணீர், எரிவாயு வழங்கீடு விஷயத்தில் போன்று அனைத்தையும் உள் ளடக்கிய போதிய அளவில் அமைந்த ஒரே தொழில் நிலையம்.

இந்த நாட்டிலுள்ள ஜெவோன்ஸ் ஆதரவாளர்கள் இந்த அளவுகோல்களுடன் வேறுசில அளவுகோல்களையும் சேர்க்க வேண் டும் என்று கூறுகிறார்கள்; அரசுத் துறைத் தொழில் நிலையங்களை விஸ்தரிக்கக் கூடாது, அவற்றைக் கட்டுப்படுத்த வேண்டும் என்று வலியுறுத்துகிறார்கள்; எனினும் இதற்கு ஒரு விதிவிலக்கு அளிக்கத் தயாராக இருக்கிறார்கள்; தனியார் துறைக்கு இலாபகரமற்றவை யாக உள்ள தொழில் நிலையங்களை அரசுத் துறைக்குத் தந்து விடலாம் என்று கூறுகிறார்கள். தனியார் துறை ஓர் யதார்த்தமா யிருக்குமாயின் இந்தச் சர்ச்சைக்கு உறுதியான ஆதாரம் இருக்கிறது எனக் கருதலாம். ஆனால் இன்று தனியார் துறை ஓர் இடைப்பட்ட வளர்ச்சிக் கட்டத்திலேயே இருந்து வருகிறது. ஒரு தொழில் மாபெரும் பொதுக் கூட்டுப் பங்கு நிறுவனங்களால் நடத்தப்படும் ஒரு பொரு ளாதார அமைப்பில் தனியார் துறை என்று எதுவும் இருப்பதற் கில்லை. இதேபோன்று, துணிச்சலுக்குப் பதில் முன்னெச்சரிக்கைப்

போக்கு தொழில் அல்லது வாணிபத்தின் ஆதார சுருதியாக அமைந் திருக்கும் ஒரு பொருளாதார அமைப்பில், இப்போதைய பொரு ளாதார நிலைமைகளில் ஒழுங்குமுறையிலமைந்த செயல்பாட்டைப் பராமரிப்பதன் மூலம் லாபங்களை ஸ்திரப்படுத்துவதையே பிரதான குறிக்கோளாகக் கொண்ட ஒரு பொருளாதார அமைப்பில் தனியார் துறை என்று எதுவும் இருப்பதற்கில்லை. இந்தச் சர்ச்சையில் நான் ஈடுபடுவது அவசியமற்றதாகும். ஏனென்றால் அரசுத் துறையையும், அரசுக் கட்டுப்பாட்டையும் எதிர்ப்பவர்கள் மிகச் சிலரே உள்ள னர். மின்விசைத் துறையை அரசுடைமையாக்குவதை இவர்கள் எவ்வகையிலும் எதிர்க்கவில்லை.

மின்விசை வழங்குவதற்குப் பொறுப்பேற்றுக் கொண்ட ஒரு மின்நிலையத்துக்கு அளிக்கப்பட்ட உரிமம் காலாவதியாகிவிடும். போது அது சம்பந்தமாக முடிவெடுக்கும் பிரச்சினையை 3ஆவது இனம் எழுப்புகிறது; அதாவது ஒரு மின்விசை நிலையத்தை வாங்குவது சம்பந்தப்பட்ட பிரச்சினை இது. இந்திய மின்விசை சட்டம் 7ஆவது பிரிவில் கண்டுள்ள விதிகளின்படி இப்பிரச்சினைக் குத் தற்போது தீர்வு காணப்படுகிறது. இந்தப் பிரிவின்படி ஒரு மின் நிலையத்தை வாங்குவதா, இல்லையா என்பதை ஸ்தல நிர்வாகம் தன் உசிதம் போல் முடிவு செய்யலாம்; இவ்வாறு அது முடிவு செய்ய வில்லை என்றால், மாகாண அரசாங்கம் தீர்மானிக்கலாம். இதே போன்று தீர்மானிக்கும் அதிகாரத்தை மத்திய அரசாங்கத்துக்கு அளிப்பது விரும்பத்தக்கதல்லவா, அந்த அதிகாரம் எந்தக் கட்டத் தில், எத்தகைய நிலைமைகளில் வழங்கப்பட வேண்டும் என்ற பிரச் சினையை நிகழ்ச்சி நிரலில் உள்ள இந்த 3 ஆவது இனம் முன்வைக் கிறது. மின்நிலையத்தை வாங்குவதற்கு விருப்பம் தெரிவிக்கும் உரிமை மத்திய அரசாங்கத்துக்கும் இருக்க வேண்டும் என்று கூறப் படுகிறது. மின்விசை என்பது பொதுமக்களின் உபயோகத்துக் குரியது என்பதைக் கருத்திற்கொண்டு பார்க்கும்போது இத்தகைய உரிமையை மத்திய அரசாங்கத்துக்கு வழங்குவதில் சிரமம் ஏதும் இருக்க முடியாது என்பது தெள்ளத் தெளிவு.

### மாகாணக் கட்டுப்பாடா அல்லது மத்தியக் கட்டுப்பாடா?

துரதிர்ஷ்டவசமாக, இந்தக் கோட்பாட்டை ஏற்பதில் ஓரளவு தயக்கம் நிலவுவதாகத் தோன்றுகிறது. இந்தியாவில் திட்டமிடுதல் என்பது இரண்டு பிரச்சினைகளை எதிர்நோக்குகிறது: அரசுத்துறை நிறுவனமா தனியார் துறை நிறுவனமா என்பது ஒரு பிரச்சினை;

மாகாணக் கட்டுப்பாடா மத்தியக் கட்டுப்பாடா என்பது இன்னொரு பிரச்சினை. இந்த இரண்டு பிரச்சினைகளையும் நாம் நன்கு அறிவோம்; எனினும் 3ஆவது இனம் இரண்டாவது பிரச்சினையைத்தான் பிரதானமாக கணக்கிலெடுத்துக் கொண்டிருக்கிறது. அரசுத் துறை நிறுவனக் கோட்பாட்டை ஆதரிப்பவர்கள் சம்பந்தப்பட்ட நிறுவனம் மாகாணக் கட்டுப்பாட்டில் இருந்தாலும் அல்லது மத்தியக் கட்டுப்பாட்டில் இருந்தாலும் அதனை ஒரு பிரச்சினையாக்க மாட்டார்கள்; இத்தகைய கட்டுப்பாட்டை மாகாண அரசு தன் பொறுப்பில் எடுத்துக் கொள்ள விரும்பாதபோதோ அல்லது ஒரு மாகாணத்தின் எல்லைகளுக்கு அப்பால் பிராந்திய வளர்ச்சியின் நலன்களை முன்னிட்டோ அவசியமாகும்போது மத்திய அரசிடம் அந்தக் கட்டுப்பாட்டை விடுவதையும் அவர்கள் ஆட்சேபிக்க மாட்டார்கள். நீர்வழி விஷயத்தில் போன்று எந்தத் தகுந்த, உகந்த திட்டங்களையும் மாகாண எல்லைகளுக்குள்ளாகக் கட்டுப்படுத்திட இயலாது. மத்திய அரசுக்கும் மாகாண அரசுக்கும் இடையே மிக நெருக்கமான ஒத்துழைப்பும், ஒருங்கிணைப்பும் இருக்க வேண்டும் என்றபோதிலும், பிராந்திய வளர்ச்சியின் பொருட்டு அரசுக் கட்டுப்பாடு அவசியமாகும் சந்தர்ப்பங்களிலும், குறிப்பிட்டதொரு தொழில் நிலையத்தை அரசுக் கட்டுப்பாட்டின்கீழ் கொண்டுவர மாகாண அரசாங்கம் விரும்பாத சந்தர்ப்பங்களிலும் மத்திய அரசு இந்தப் பொறுப்பை ஏற்பது உசிதம் என்றே தோன்றுகிறது.

நிகழ்ச்சி நிரல் காரணமாக எழக்கூடிய பிரச்சினைகள் குறித்து ஏற்கெனவே நான் கூறியதற்கும் அதிகமாக பயனுள்ள எதையும் என்னால் கூறமுடியும் என்று கருதவில்லை. எனினும் என் உரையை முடிப்பதற்கு முன்னர் ஒரு விஷயத்தைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்: நீங்கள் எத்தகைய முடிவை மேற்கொண்டாலும் இந்தியப் பொருளாதாரத்தின் எதிர்காலம் குறித்து நாட்டில் நிலவும் பொது மக்கள் அபிப்பிராயத்திற்கு இசைந்ததாக அந்த முடிவு இருப்பது அவசியம் என்பதை நீங்கள் மனத்திற் கொள்ள வேண்டும் என்பதை வலியுறுத்த விரும்புகிறேன். இந்தியப் பொருளாதாரத்தின் எதிர்காலம் குறித்து பொதுஜன அபிப்பிராயம் ஏதுமில்லை என்று கருதுவது தவறு. பலர் நினைப்பதை விட அது அதிக இடதுசாரிப் போக்குடையது என்பது என் திடமான கருத்து; எனினும் அதற்கு வறட்டுத்தனமாக சித்தாந்த சாயம் பூச நான் விரும்பவில்லை.

நாடாளுமன்ற ஆட்சிமுறையைக் குறிக்கோளாகக் கொண்டிருக்கும் நாடு இந்தியா; இத்தகையதொரு நாட்டில் திட்டத்திற்கும்

பொதுமக்கள் அபிப்பிராயத்துக்கும் இடையே உடன்பாடு இருக்க வேண்டிய அவசியத்தை மிகைப்படுத்த முடியாது என்பதை வலி யுறுத்த விரும்புகிறேன். திட்டமிடும் முறை ரஷ்யாவில் வெற்றி யடைந்து வருவதாகப் பலர் பேசுகிறார்கள். ரஷ்யா நாடாளுமன்ற அரசாங்க அமைப்பைப் பெற்றிராததே இதற்குப் பிரதான காரணம் என்பதை இவர்கள் மறந்து விடுகிறார்கள். நாடாளுமன்ற அமைப் பில் திட்டமிடுவதில் பல சிரமங்கள் இருக்கின்றன; திட்டமிடு பவர்கள் எந்த நேரம் தங்களுக்கு எதிராக நம்பிக்கை இல்லாத் தீர்மானங்கள் கொண்டுவரப்படுமோ என்ற அச்சத்தில் எப்போதும் இருந்துவருவார்கள்; மேலும், தங்கள் திட்டங்கள் நிறைவேற்றப் படும் காலம்வரை தாங்கள் பதவியில் இருக்க முடியுமா என்ற ஐயம் அவர்களை சதாவும் அலைக்கழித்துவரும். திட்டமிட்ட பொரு ளாதாரம் நாடாளுமன்ற ஜனநாயகத்துக்கு ஒவ்வாததா, அவ்வா றானால் அவை இரண்டையும் எவ்வாறு இணக்கமுறச் செய்வது என்பது ஒரு நீண்ட நெடிய பிரச்சினையாகும்; அதுகுறித்து விவா திப்பதற்கு இது உரிய இடமல்ல. எனவே, இந்தச் சந்தர்ப்பத்தில் உங்களுக்கு எச்சரிக்க விரும்புவதெல்லாம் ஒன்றே ஒன்றுதான்: அதாவது நமது திட்டங்கள் நமக்குப் பிறகு வருபவர்களால் ரத்து செய்யப்படாதிருக்க வேண்டுமானால் மிக அதிகமான மக்களுக்கு மிக அதிகமான நன்மை என்னும் கோட்பாட்டில் நம்பிக்கை வைத்திருக் கும் மிகப் பெரும்பாலான மக்களுக்கு உடன்பாடானதாக அவை இருக்குமாறு நாம் பார்த்துக் கொள்ள வேண்டும்.

## குழுவின் பரிந்துரைகள்

தற்போது உரிமம் பெற்ற பிரதேசங்களுக்கு வெளியே உள்ள பகுதிகளுக்கு மின்விசை வழங்கும் பணியை அரசுத்துறை நிறுவனத் தின் மூலமோ அல்லது ஓரளவு அரசுத்துறை சார்ந்த நிறுவனத்தின் மூலமோ தீவிரமாக மேற்கொள்ள வேண்டும் என்று ''பொதுப்பணித் துறை மற்றும் மின்விசைத் துறைக்கான கொள்கைக்குழு'' பரிந் துரைத்துள்ளது. ஏதேனும் காரணங்களுக்காக இத்தகைய பணியை எந்த ஒரு பகுதியிலும் உரிய காலத்திற்குள் மேற்கொள்ள அரசு தயாராக இல்லை என்றால், அப்பணியை தனியார் நிறுவனத்திடம் ஒப்படைக்கலாம். திறமையான முறையிலும், குறைந்த கட்டணத் திலும் பொதுமக்களுக்கு மின்விசை வழங்கீட்டை உத்தரவாதம் செய்யக்கூடியதும், இப்போதைய உரிமத்தின் கீழ் செயல்படக் கூடியதுமான ஒரு நிறுவனத்தை வாங்கலாம். ஆனால் அதேசமயம் மாகாண அரசுக்கோ, மத்திய அரசுக்கோ, ஸ்தல அமைப்புக்கோ

சொந்தமான அல்லது வர்த்தக ரீதியிலான மின்விசை நிலையங்கள் பிராந்திய அளவில் ஆரோக்கியமான முறையிலும் சிக்கனமான முறையிலும் வளர்ச்சியுறுவதற்குத் தடையாக இருக்கக்கூடிய காரணக் கூறுகளைக் களைவதற்கு நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப்பட வேண்டும் என்றும் பரிந்துரைக்கப்படுகிறது.

மின்விசைத் துறையின் பயனோக்கையும் பொதுமக்களின் பயனோக்கையும் கருதி மின்விசை உற்பத்தியையும் வழங்கீட்டையும் கண்காணிப்பதற்கு சில நிதிக் கோட்பாடுகள் வகுத்தளிக்கப்பட வேண்டிய அவசியத்தை குழுவின் மற்றொரு பரிந்துரை ஏற்றுக் கொள்கிறது. இத்தகைய கோட்பாடுகள் எவ்வாறு இருக்க வேண்டும், அவற்றை எந்த அளவுக்குப் பயன்படுத்த வேண்டும், இது சம்பந்தமாக எத்தகைய முறையைக் கைக்கொள்ள வேண்டும் என்பவை குறித்து அரசாங்கத்துக்கு ஆலோசனை கூற மின்விசைச் சட்டத்தின் 35ஆவது பிரிவின்படி ஓர் ஆலோசனைக் குழுமம் அமைக்கப்படுவது அவசியம். மத்திய அரசாங்கத்தின் இரு பிரதிநிதிகள், மாகாண அரசாங்கங்களுடன் கலந்தாலோசித்து நியமிக்கப்படும் இரு பிரதிநிதிகள், மின்விசை நிறுவனங்களது சம்மேளனத்தின் ஒரு பிரதிநிதி ஆகியோர் இந்தக் குழுமத்தில் இடம்பெற்றிருப்பர். தேவையான எண்ணிக்கையில் மதிப்பீட்டாளர்களை குழுமம் நியமித்துக் கொள்ளலாம்.

மின்விசை அதிகரிப்புக்குத் திட்டமிடுவதற்காக ஒரு திட்டமிட்ட, ஒருங்கிணைந்த கொள்கையை உருவாக்கும் பொருட்டு 1910 ஆம் வருட இந்திய மின்விசைச் சட்டத்தின் 7ஆவது பிரிவைத் திருத்தும் யோசனை குறித்து விவாதம் நடைபெற்றது; இந்த விவாதம் மத்திய அரசாங்கத்தின் பரிசீலனைக்குப் பல விஷயங்களை முன் வைத்துள்ளது. ஒரு மின் நிலையத்தை தன் பொறுப்பில் எடுத்துக் கொள்வதற்கு மாகாண அரசாங்கத்துக்கு முதல் உரிமை அளிக்கும் விதத்தில் சட்டம் திருத்தப்பட வேண்டும் என்பதை குழு ஏற்றுக் கொண்டது. மாகாணங்களின் பரஸ்பர வளர்ச்சிக்கு மத்திய அரசாங்கத்தின் கட்டுப்பாடு இருப்பது அவசியம் என்று கருதப்படும்போது, அத்தகைய மின் நிலையங்களை தன் பொறுப்பில் எடுத்துக் கொள்வதற்கு மத்திய அரசாங்கத்துக்கு அதிகாரம் அளிக்கும் வகையில் சட்டத்தைத் திருத்தும் பிரச்சினையும் விவாதிக்கப்பட்டது. இப்பிரச்சினையின் சில அம்சங்கள் குறித்து கருத்து வேறுபாடு நிலவிற்று; எனவே, மாகாணங்களுடன் கலந்தாலோசித்து இந்தப் பிரச்சினையை மேற்கொண்டு பரிசீலிக்க வேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது.

## அரசாங்கத்தின் பயிற்சித் திட்டங்கள்

மத்திய மின்விசைத் தொழில்நுட்ப வாரியம் அமைக்கப் படுவதையும், மின்விசைத் தொழிலின் வாணிக நிர்வாகத் துறை களில் அயல்நாடுகளில் பயிற்சி பெறுவதற்கு பத்து இந்தியப் பொறி யாளர்களை அனுப்பும் மத்திய அரசாங்கத்தின் திட்டத்தையும் கொள்கைக் குழு வரவேற்றது. இவர்களில் நான்கு பேர் பிரிட் டனிலும், நான்கு பேர் அமெரிக்காவில் டென்னஸ்ஸிப் பள்ளத்தாக்கு ஆணையத்திலும், இருவர் கனடாவிலும் பயிற்சி பெறுவர். இந்த அதிகாரிகளில் இருவர் மத்திய அரசாங்கத்தையும், நான்கு பேர் மாகாண அரசாங்கங்களையும், இருவர் சமஸ்தான அரசாங்கங்களை யும், இருவர் பொது மின்விசை நிலையங்களையும் சேர்ந்தவர் களாக இருப்பர். இரண்டு மத்திய அரசாங்க அதிகாரிகள் பயிற்சி பெறுவதற்கு ஆகும் செலவு முழுவதையும் இந்திய அரசாங்கமே ஏற்றுக்கொள்ளும். இந்தத் திட்டத்தின்படி, மின்விசைத் தொழிலின் வாணிக, நிர்வாகத் துறைகளில் இந்தியப் பொறியாளர்கள் பயிற்சி பெறும் அதேசமயம் தொழில்நுட்பத் துறைகளில் பயிற்சி பெறு வதற்கு இரண்டு கோஷ்டிகளை அனுப்புவதற்கும் அரசாங்கம் உத்தேசித்துள்ளது என்றும் அறிவிக்கப்பட்டது.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் தலைமையில் நடைபெற்ற இக்கூட்டத்தில் இந்திய அரசாங்கத்தின் திட்ட, அபி விருத்தித் துறை உறுப்பினர் மாண்புமிகு சர் அர்தேஷிர் தலால், வங்க மாகாண வாணிக, தொழிலாளர் நல மற்றும் தொழில்துறை அமைச்சர் மாண்புமிகு திரு. கே. ஷாபுதீன், சிந்து மாகாண பொதுப் பணித்துறை அமைச்சர் மாண்புமிகு ராய் பகதூர் கோகுல்தாஸ், சர் மிர்ஸா இஸ்மாயில், ராஜா தரம்கரம் பகதூர் ஆகியோர் கலந்து கொண்டனர். இவர்களையன்றி மத்திய மற்றும் மாகாண அரசாங் கங்களின் அதிகாரபூர்வமான பிரதிநிதிகளும், அகில இந்திய தொழிற் சங்க காங்கிரஸ், மின்விசை நிலையங்கள் சம்மேளனம், இந்தியப் பொறியாளர் சங்கம் போன்றவற்றைச் சேர்ந்த அதிகார சார்பற்ற பிரதிநிதிகளும் பங்கு கொண்டனர்.



# 41

# [1]இந்தியாவில் கனிம வளங்கள் சம்பந்தமாக அரசாங்கத்தின் கொள்கை

திரு. கே.சி. நியோகி: ஐயா, பின்கண்டவாறு முன்மொழிகிறேன்:

> ''மண்ணியல் ஆய்வு'' என்ற தலைப்பில் முன்வைக்கப்பட்டிருக்கும் மானியக் கோரிக்கை 100 ரூபாயாகக் குறைக்கப்பட வேண்டும்.''

எனது வெட்டுத் தீர்மானத்தில் சுட்டிக்காட்டியுள்ளபடி, இந்தியாவின் கனிம வளங்கள் சம்பந்தமான அரசாங்கத்தின் கொள்கை பற்றி விவாதிக்க வேண்டும் என்பதே எனது விருப்பமாகும். எனினும் நேரத்தைப் பொறுத்தவரையில், என்னுடைய மாண்புமிகு நண்பர் இது சம்பந்தமாக போதிய விவரங்கள் அளிப்பதற்கு கூடிய மட்டும் அதிகப்பட்ச நேரத்தை எடுத்துக் கொள்ளலாம்; இந்த விவரங்களைத் தான் நாங்கள் எல்லோரும் எதிர்பார்க்கிறோம். இந்தச் சந்தர்ப்பத்தில் நான் உரையாற்றியிருந்தால் பல்வேறு விஷயங்களைச் சுட்டிக் காட்டியிருப்பேன். ஆனால் என் உரையை விடவும் அவரது அறிக்கையைத் தான் நாங்கள் முக்கியமானதாக கருதுவதால், என்னுடைய மாண்புமிகு நண்பர் முக்கிய தகவல்களும் விவரங்களும் பொருட் செறிவும் நிறைந்த அறிக்கையை தருவாரேயானால் நான் பெரிதும் பாராட்டுவேன்.

திரு. துணைத் தலைவர் (திரு. அகில் சந்திர தத்தா): பின்கண்ட வெட்டுத் தீர்மானம் முன்மொழியப்படுகிறது:

> ''மண்ணியல் ஆய்வு என்ற தலைப்பில் முன்வைக்கப்பட் டிருக்கும் மானியக் கோரிக்கை 100 ரூபாயாகக் குறைக்கப்பட வேண்டும்.''

---

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, 1945, மார்ச் 12, 1945, பக்கங்கள் 1383 - 85

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்):* திரு. துணைத் தலைவர் அவர்களே, இத்தகைய ஒரு வெட்டுத் தீர்மானத்தை திரு. நியோகி கொண்டு வந்தமைக்காக உண்மையிலேயே மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன். ஏனென்றால் அரசாங்கத்தின் கனிமவளக் கொள்கை போதிய அளவு மக்களுக்குத் தெரியாத நிலையில், அரசாங்கம் தனது கனிமவளக் கொள்கையை விளக்கிக் கூறுவதற்கு இந்த வெட்டுத் தீர்மானம் வாய்ப்பளிக்கிறது. இந்த விஷயம் குறித்துப் பெருமளவுக்கு அறி யாமை நிலவுகிறது; அது பெரிதும் தவறாகப் புரிந்து கொள்ளப் பட்டிருக்கிறது. இத்தகைய சூழலில், அரசாங்கத்தின் கனிமவளக் கொள்கை போன்ற ஒரு முக்கியமான விஷயத்தை இந்த அவையில் முழு அளவுக்கு விளக்கிக் கூறுவது அனைவருக்கும் பயனுள்ள தாகவும் உகந்ததாகவும் இருக்கும். போதிய அவகாசம் இல்லாத கார ணத்தால் தாம் சொல்ல விரும்பிய விஷயங்களை எடுத்துரைப்ப தற்கு திரு. நியாகிக்கு வாய்ப்பு இல்லாது போனதற்காக வருந்து கிறேன்; அவையின் ஏனைய உறுப்பினர்களும் எனது இந்த உணர்வைப் பகிர்ந்து கொள்வார்கள் என்று நம்புகிறேன். அவர் தமது உரையைச் சுருக்கிக் கொண்டு, நான் விரிவாகப் பேசுவதற்காக தமது நேரத்தையும் எனக்கு ஒதுக்கித் தந்தமையைப் பாராட்டுகிறேன்; இதற்காக அவருக்கு நான் பெரிதும் நன்றிக்கடன்பட்டிருக்கிறேன்.

ஐயா, எதையும் மூடி மறைக்காமல் பட்டவர்த்தனமாகப் பேச வேண்டிய விஷயம் இது: உண்மையில் கனிமவளக் கொள்கை என்ற ஒரு கொள்கை இதுவரை இந்திய அரசாங்கத்துக்கு இருந்த தில்லை என்றே கூறுவேன். இது விஷயத்தில் குறைகூறுவதற்கு போதிய ஆதாரம் இருக்கிறது என்பதில் ஐயமில்லை. ஆனால் இதில் ஆச்சரியப்படுவதற்கு எதுவுமில்லை. கனிமவளக் கொள்கை வகுக்கப் படாமல் போனதற்கு இந்திய மண்ணியல் ஆய்வுத் துறையினர்தான் பொறுப்பேற்க வேண்டும் என்று சில வட்டாரங்களில் குற்றம் சாட்டப்படுகிறது. ஆனால் இது தவறான குற்றச்சாட்டு என்பதில் எனக்கு எள்ளளவும் ஐயமில்லை. இத்தகைய தவறான கருத்து களையப்பட வேண்டும் என்று முதலில் விரும்புகிறேன். இதன் பொருட்டு என் உரையில் ஒரு சில நிமிடங்களை இதற்காக ஒதுக்குகிறேன்.

எந்த ஓர் அரசாங்கத்தின் கனிமவளக் கொள்கையும் அந்த அரசாங்கத்தின் தொழில் கொள்கையையே அடிப்படையில் சார்ந் திருக்கும் என்பதை அனைவரும் ஏற்றுக் கொள்வார்கள் என்று

1

நம்புகிறேன். ஒரு நாட்டின் தொழில் வளர்ச்சியில் கனிம வளங்கள் மிக முக்கிய பங்காற்றுகின்றன; இந்நிலையில் அந்நாட்டுக்குத் தொழில் கொள்கை என்று ஒன்று இல்லை என்றால் கனிமவளக் கொள்கையும் இருக்க முடியாது என்பது தெள்ளத் தெளிவு. யுத்தப் பிற்காலத்தில் இந்த நாட்டின் பொருளாதார மற்றும் தொழில்துறை வாழ்க்கையை மறுசீரமைக்கும் பணியை தனது குறிக்கோளாக, இலட்சியமாகக் கொள்வதென இந்திய அரசாங்கம் தீர்மானிக்கும் வரை இந்த நாட்டு அரசாங்கம் நாட்டின் தொழில் வளர்ச்சியில் மிகச் சிறிய பங்கையே ஆற்றி வந்திருக்கிறது என்பதை அவை நன்கறியும்.

டாக்டர் பி.என். பானர்ஜி: எவ்வளவு பரிதாபகரமானது!

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இந்த விஷயம் பரிதாபத்துக்குரியதானாலும் சீற்றத்துக்குரியதானாலும் இப்போது அது எனக்கு முக்கியமானதல்ல. இதுவரை ஒரு கனிமவளக் கொள்கை இல்லாதிருக்கிறது என்றால் அது இந்திய மண்ணியல் ஆய்வுத் துறை யின் தவறல்ல என்பதை எடுத்துக்காட்ட இங்கு விரும்புகிறேன். இந்தத் தவறு அன்றைய அரசாங்கத்தின் தவறாகும்; சட்டமன்றத் திற்கும், நாட்டின் பொருளாதார மற்றும் தொழில்துறை வாழ்க்கை யில் அக்கறை கொண்ட ஏனைய அமைப்புகளுக்கும் இதில் பங்குண்டு.

உலகின் இதர பகுதிகளில் மண்ணியல் ஆய்வுத்துறையினர் ஆற்றிவரும் பங்கை இங்கு மண்ணியல் ஆய்வுத்துறை ஆற்றாததற்கு எப்போதுமே போதிய எண்ணிக்கையில் ஊழியர்கள் இல்லாத இலா காக்களில் ஒன்றாக இது இருந்து வருவதே பிரதானமாக இரண் டாவது காரணமாகும். இந்திய மண்ணியல் ஆய்வுத்துறையின் அலு வலர்கள் மற்றும் தொழில்நுட்ப ஊழியர்கள் சம்பந்தமான ஒரு வர லாற்றை இங்கு கூறுவது உசிதமாக இருக்கும். மண்ணியல் ஆய்வுத் துறையின் உயர் அதிகாரிகளின் எண்ணிக்கையை அதிகரிப்பதற்கு 1920 ஆம் ஆண்டில் அனுமதி பெறப்பட்டது. ஆனால் துரதிர்ஷ்ட வசமாக, நன்கு பயிற்சி பெற்ற ஊழியர்கள் கிடைப்பது மிகவும் சிரம மாக இருந்தது; இதனால் தேவையான ஊழியர்களின் எண்ணிக் கையை நிரப்புவதற்கு ஏறத்தாழ ஒன்பது ஆண்டுக் காலம் பிடித்தது. இதில் வருந்தத்தக்க விஷயம் என்னவென்றால், இந்த எண்ணிக்கை நிரப்பப்பட்டதும் 1931ல் சட்டமன்றம் பொருளாதாரத்தில் சிக்க னத்தைக் கடைப்பிடிக்க வேண்டும் என்பதை வலியுறுத்தும் தீர் மானத்தை நிறைவேற்றிற்று. பயிற்சி பெற்ற இந்த ஊழியர்கள் அனை வரையும் இதன் காரணமாக வீட்டிற்கு அனுப்ப வேண்டியதாயிற்று.

எனவே, இந்திய அரசாங்கத்தின் கனிமவளக் கொள்கையில் மண் ணியல் ஆய்வுத்துறை தனக்குரிய பங்கை ஆற்றவில்லை என்றால் இதில் சட்டமன்றத்திற்கும் ஓரளவு பொறுப்பு உண்டு என்பதை இங்கு சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

எனக்கு ஒதுக்கப்பட்டிருக்கும் இந்தக் குறுகிய அவகாசத்தில் கடந்த காலத்தைப் பற்றி மேலும் விவரித்துக் கொண்டிருக்க நான் விரும்பவில்லை. எதிர்காலத்தைப் பற்றி பேச விரும்புகிறேன். ஒரு திட்டவட்டமான கனிமவளக் கொள்கை இருக்க வேண்டிய அவ சியத்தை இந்திய அரசாங்கம் இப்போது ஏற்றுக்கொண்டுள்ளது என்பதைக் கூற மகிழ்ச்சி அடைகிறேன். நாட்டின் தொழில் வளர்ச் சிக்கு தீவிரமாக முயற்சிக்க வேண்டும் என இந்திய அரசாங்கம் முடிவு செய்திருப்பதே இதற்கு பிரதான காரணம். இந்திய அரசாங் கத்தின் கனிமவளக் கொள்கை மறுசீரமைப்பு மற்றும் திட்டமிடுதல் குறித்த இரண்டாவது அறிக்கையின் 14 ஆவது பிரிவில் வகுத்துரைக் கப்பட்டிருக்கிறது. அந்த 14ஆவது பிரிவை இங்கு வாசித்துக்.காட்டு வதற்கோ அல்லது பத்தியின் சுருக்கத்தையேனும் இங்கு தருவதற்கோ கூட எனக்கு நேரமில்லை. இந்த விஷயத்தில் ஆர்வமும் அக்கறை யும் கொண்ட சட்டமன்ற உறுப்பினர்கள் அந்த 14ஆவது பிரிவைப் படித்து, அரசாங்கத்தின் கனிமவளக் கொள்கை என்ன என்பதைத் துல்லியமாக, தெள்ளத் தெளிவாகத் தெரிந்து கொள்வார்கள் என்று நம்புகிறேன்.

இரத்தினச் சுருக்கமாகக் கூறுவதானால், இந்திய அரசாங் கத்தின் கனிமவளக் கொள்கையும், அந்தக் கொள்கையைச் செயல் படுத்த அது மேற்கொள்ள உத்தேசித்துள்ள நடவடிக்கையும் இரண்டு பகுதிகளைக் கொண்டது. முதலாவதாக அரசாங்கத்தின் கொள்கை யைச் செயல்படுத்துவதற்காக இந்திய மண்ணியல் ஆய்வுத் துறையை முன்னிலும் ஆற்றல்மிக்க சாதனமாக மாற்றுவதற்கு அதனை மறு சீரமைக்க உத்தேசித்துள்ளோம். இதன்படி, ஆய்வை விரிவுபடுத்த பரந்த அளவிலான ஒரு திட்டம் தயாரிக்கப்பட்டு, நிர்வாக ரீதியில் அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது. நாங்கள் அமைக்க உத்தேசித்திருக் கும் மண்ணியல் ஆய்வின் புதிய கிளைகள் பொறியியல் சார்ந்த மண் ணியல், கனிம வளங்களைத் தொழில் துறைகளுக்குப் பயன்படுத் துதல், மத்திய கனிமவள வளர்ச்சி, இயற்பியல் பணி, எண்ணெய் அபிவிருத்தி போன்றவற்றில் கவனம் செலுத்தும். இவ்வகையில் என்ன செய்யப்படுகிறது என்பதைப் பொதுமக்கள் அறியும் பொருட்டு ஓர்

இயற்கை வரலாற்று அருங்காட்சியகத்தையும், தகவல் நிறுவனத்தையும் அமைப்பதும் இதில் அடங்கும்.

எங்கள் கனிமவளக் கொள்கையின் இரண்டாவது பகுதியில் கனிம வளங்கள் மீது கட்டுப்பாடு செலுத்தும் நோக்கத்தோடு இந்திய அரசாங்கம் இயற்ற உத்தேசித்திருக்கும் சட்டங்கள் இடம் பெறும். கனிமவளங்கள் மீது சட்டரீதியான கட்டுப்பாட்டின் வரையறைகளை நிர்ணயிப்பதில் பின்கண்ட அம்சங்கள் கணக்கிலெடுத்துக் கொள்ளப்படும்: ஒன்று, அகில இந்திய கனிமவளத்தின் முக்கியத்துவம்; இரண்டு, கனிமவளத்தின் தொழில்நுட்ப இயல்பு; மூன்று, கனிமவளம் பயன்படுத்தப்படும் நோக்கம்; நான்கு, கனிமவளத்தின் அல்லது கனிம வளத்தைக் கொண்டு தயாரிக்கப்படும் பொருள்களின் மதிப்பு. எங்கள் சட்ட விதிகள் இரண்டு பிரிவுகளில் அடங்கும் அல்லது கனிமவளங்கள் இரண்டு வகைகளாகப் பிரிக்கப்படும்; இவற்றில் ஒரு வகை கனிமவளங்கள் பொதுக்கட்டுப்பாட்டுக்கு உட்படுத்தப்படும்; இந்தப் பொதுக்கட்டுப்பாட்டின்படி, கனிம வளங்களைக் கண்டுபிடித்தலும், அவற்றைத் தோண்டியெடுத்தலும் சில விதிமுறைகளுக்கும் நிபந்தனைகளுக்கும் உட்பட்டுக் குத்தகைக்கு விடப்படும். மற்றவகை கனிமவளங்கள் விரிவான கட்டுப்பாட்டின் கீழ் கொண்டு வரப்படும். இவ்வாறு விரிவான கட்டுப்பாட்டின் கீழ் கொண்டு வருவதற்குப் பரிந்துரைக்கப்பட்டுள்ள கனிமவளங்களின் எண்ணிக்கை சுமார் 28 ஆகும். இவற்றின் முழுப்பட்டியலையும் இங்கு வெளியிடும் உத்தேசம் ஏதும் எனக்கு இல்லை. விரிவான கட்டுப்பாடு என்பதில் உரிமங்கள் வழங்கும் அதிகாரம், கனிம வளங்களை ஆய்வு செய்தல், வெட்டியெடுத்தல், வகை பிரித்தல், தரப்படுத்துதல் போன்றவற்றிற்குப் பயன்படுத்தப்படும் முறையைக் கண்காணிக்கும் அதிகாரம், இத்தகைய முறையை மேம்படுத்தும்படி வலியுறுத்தும் அதிகாரம், கனிம வளங்களைச் சிறந்த முறையில் பயன்படுத்திக் கொள்வதற்கு மேலும் ஆராய்ச்சி மேற்கொள்ளும்படிக் கூறும் அதிகாரம் முதலியனவும் அடங்கும்.

கனிம வளங்கள் சம்பந்தமாக இந்திய அரசாங்கம் கடைப்பிடிக்கவிருக்கும் கொள்கை குறித்து எனக்குத் தரப்பட்டிருக்கும் அவகாசத்திற்குள் எவ்வளவு முடியுமோ அவ்வளவு சுருக்கமாக கூறியுள்ளேன்.

திரு. நியோகி எழுப்பியிருக்கும் சில குறிப்பிட்ட பிரச்சினைகளுக்கு இப்போது வருகிறேன். அவர் குறிப்பிட்டிருக்கும் முதல் விஷயம் கனிமப் பொருள்கள் ஏற்றுமதி பற்றியதாகும். நாங்கள் இயற்ற உத்தேசித்திருக்கும் சட்டங்களில் இந்தியாவுக்கு வெளியே கனிமப் பொருள்கள் ஏற்றுமதி சம்பந்தமான விதிகள் நிச்சயம் இடம் பெற்றிருக்கும் என்று அவைக்கு உறுதிகூற விரும்புகிறேன். உண்மையில், நமது கனிமப் பொருள்களின் ஏற்றுமதியை நம்மால் முற்றிலுமாக நிறுத்த முடியுமா என்பதே இங்கு எழும் கேள்வி. இந்தக் கேள்விக்கான பதில் மற்றொரு கேள்வியைப் பொறுத்தே அமைந்துள்ளது. அந்தக் கேள்வி இதுதான்: நமது சொந்த கனிமப் பொருள்களின் ஏற்றுமதியை அறவே நிறுத்தினால், நமக்குப் பற்றாக் குறையாக உள்ள கனிமங்களை நம்மால் இறக்குமதி செய்வது சாத்தியமா? எண்ணெய், தாமிரம், ஈயம், துத்தநாகம், வெள்ளீயம், கந்தகம் போன்ற முக்கிய கனிமங்களில் இந்தியா பற்றாக்குறை நாடாகவே இருந்துவருகிறது. எனவே, நமது தாதுப் பொருள்களை ஏற்றுமதி செய்யும் விஷயத்தை நமக்குப் பற்றாக்குறையாக இருக்கும் தாதுப் பொருள்களை இறக்குமதி செய்வதற்கு நமக்குள்ள வாய்ப்பு வசதிகளைக் கருத்திற் கொண்டுதான் பரிசீலிக்க வேண்டும். இந் நிலைமையில், முதலாவதாக, நமக்குப் பற்றாக்குறை நிலவுகின்ற, நாட்டின் தொழில் வளர்ச்சிக்கு அத்தியாவசியமாகத் தேவைப்படு கின்ற கனிமப் பொருள்களின் ஏற்றுமதியை நாம் முறைப்படுத்த வேண்டும். இரண்டாவதாக, நமது கனிமங்கள் மூலப் பொருள்களாக ஏற்றுமதி செய்யப்படாதபடியும், பிற நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப் படுவதற்கு முன்னர் அவை நமது தொழிற்சாலைகளில் பதனம் செய்யப்படும்படியாகவும் நாம் பார்த்துக் கொள்ள வேண்டும். இதுவே இந்திய அரசாங்கத்துக்குப் பாதுகாப்பான மார்க்கமாக இருக்குமெனத் தோன்றுகிறது. திரு. நியோகி என் கவனத்திற்குக் கொண்டு வந்திருக் கும் மற்றொரு விஷயம் எண்ணெய்ச் சலுகைகள் சம்பந்தப்பட்டது. எண்ணெய்ச் சலுகைகள் விஷயத்தில் தற்போது ஓர் இடைக்காலத் தடை இருந்து வருவது திரு. நியோகிக்குத் தெரியும்; அவையின் மற்ற உறுப்பினர்களுக்கும் இது தெரியும் என்று நம்புகிறேன். எண்ணெய்க் கிணறுகள் துறப்பணமிடப்படுவதற்கும் எண்ணெய் உற்பத்திக்கும் உரிமங்கள் வழங்கும் விஷயத்தில் இந்த இடைக்கால தடை இருந்து வருகிறது. இந்த நாட்டில் தொழில்நுட்ப நிபுணர்கள் குறைந்த எண்ணிக்கையிலேயே இருந்து வருகிறார்கள்; அப்படியிருக்கும்போது பல்வேறு எண்ணெய் நிறுவனங்கள் இவர்களது உழைப்பை வீணடிக் கவும் அல்லது தமது சொந்த கனிமவள ஆய்வுப் பணிகளுக்குப் பயன் படுத்திக் கொள்ளவும் முயன்று வருகின்றனர்; இதனைத் தடுப்பதற்

காகவே இந்திய அரசாங்கம் இந்த இடைக்காலத் தடையை நடைமுறைக்குக் கொண்டு வந்தது. யுத்தம் முடியும் வரையிலும் அதற்குப் பின்னர் சிறிது காலம் வரையிலும் இந்தத் தடை நீடிக்கும். உரிமங்கள் வழங்கும் பிரச்சினையைப் பொறுத்தவரையில், இந்திய அரசாங்கச் சட்டம் இயற்றப்பட்டதிலிருந்து, இந்த விஷயம் மாகாண அரசாங்கங்களின் பொறுப்பில் இருந்து வருகிறது; எனினும் 1919 ஆம் வருடச் சட்டத்தின்படி இந்திய அரசாங்கம் வகுத்துத் தந்த விதிமுறைகளையே மாகாண அரசாங்கங்கள் இன்றுவரை பின்பற்றி வருகின்றன; பிரிட்டிஷ் குடிமக்கள் அல்லாதவர்களுக்கு எதிராகக் ''கதவை மூடும்'' கொள்கையை இந்த விதிமுறைகள் வலியுறுத்துகின்றன. எந்த ஒரு நிறுவனமும் எண்ணெய் உற்பத்திக்கு உரிமம் பெறுவதற்கு முன்னர் அந்த நிறுவனம் இந்திய ஊழியர்களைக் கொண்டிருப்பதாகவோ அல்லது அதன் குழுமத்திலுள்ள பெரும்பாலான உறுப்பினர்கள் பிரிட்டிஷ் குடிமக்கள் என்றோ நிரூபித்தாக வேண்டும் என்று இவ்விதிமுறைகள் கூறுகின்றன. இந்தியக் குடிமக்களுக்கும் பிரிட்டிஷ் குடிமக்களுக்குமுள்ள வேறுபாட்டுப் பிரச்சினையை திரு. நியோகி தம் மனத்தில் கொண்டிருக்கிறாரோ என்னவோ நான் அறியேன். இதைப் பற்றி எல்லாம் பேசுவதற்கு எனக்கு நேரம் இல்லை. இப்போது நான் சொல்லக்கூடியதெல்லாம் இந்த விஷயம் மற்றொரு முக்கிய விஷயத்துடன் அதாவது இந்திய அரசாங்கச் சட்டம் 118-ன் III ஆவது பிரிவில் அடங்கியுள்ள விதிமுறைகளுடன் நெருங்கிய சம்பந்தமுடையது என்பதேயாகும்; ஒரு தனித் தீர்மானத்தின் பேரில் இதுபற்றி அவையில் விவாதம் நடைபெற்று வருகிறது. நிலக்கரியைப் பொறுத்தவரையில் எங்களது புதிய சட்டத்தில் அதுவும் இடம் பெற்றிருக்கும். இது ஒரு கடினமான பிரச்சினை என்பதை என் நண்பர் புரிந்து கொண்டிருப்பார் என்று நம்புகிறேன். நிலக்கரியை வெட்டியெடுத்தல், தரம் பிரித்தல், விற்பனை செய்தல், தரம் குறைந்த நிலக்கரியைப் பயன்படுத்துதல் போன்ற பல்வேறு விஷயங்கள் இதில் அடங்கியுள்ளன. நமது சட்டம் பயனளிக்க வேண்டுமென்றால் நிலக்கரிச் சுரங்கங்களின் உரிமையாளர்களுக்கும் நிலக்கரி வாணிகத்தில் ஈடுபட்டிருப்பவர்களுக்கும் இடையே பெருமளவுக்கு ஒத்துழைப்பு நிலவுவது அவசியம். இந்த விஷயத்தை எங்களது யுத்தப் பிற்காலக் கொள்கையின் ஒரு பகுதியாக எடுத்துக் கொள்ள நாங்கள் எண்ணியுள்ளோம் என்பதை அவைக்கு உறுதி கூற விரும்புகிறேன்.

இந்திய அரசாங்கத்தின் கொள்கை என்னவென்பதை பேசுவதற்கு எனக்குக் கிடைத்த குறுகிய காலத்தில் பொதுப்படையான

முறையில் எடுத்துரைத்தேன். முடிவாக நான் கூறக்கூடியதெல் லாம் இதுதான்: அனைத்தையும் உள்ளடக்கியதும் இயக்காற்றல் மிக்கதுமான கனிமவள கொள்கை மூன்று சூழ்நிலைகளைச் சார்ந் திருக்கும். நாட்டின் தொழில் வளர்ச்சியை அது சார்ந்திருக்கும். தொழில்கள் வளர்ச்சியுற வேண்டுமானால், கடந்த காலத்தைவிட அதிக உத்வேகமிக்க கனிம வளக் கொள்கையை இந்த நாடு பின்பற்ற வேண்டும் என்பதில் எள்ளவும் ஐயமில்லை. நமது கனிமவளக் கொள்கை வெற்றிபெறுமா, மிகப் பலரின் நலனுக்காக, நன்மைக் காக அது பயன்படுத்தப்படுமா என்பது இரண்டு அம்சங்களை அதாவது அரசியல் சட்ட நிலையையும், மாகாணங்களும் மத்திய அரசும் அதிகாரத்தைப் பகிர்ந்து கொள்வதையும், இதுவிஷயத்தில் அரசு ஆற்ற அனுமதிக்கப்படும் பங்கையும் பொறுத்திருக்கும். இந்த நாட்டின் கனிம வளக் கொள்கை சம்பந்தமாக இந்திய அரசு என்ன செய்ய உத்தேசித்துள்ளது என்பதை அவைக்குப் போதிய அளவு விளக்கிவிட்டதாகக் கருதுகிறேன்.

**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர்:** தீர்மானத்தை அவையின் முடிவுக்கு முன்வைக்கலாம் என்று முன்மொழிகிறேன்.

**திரு. துணைத் தலைவர்** (திரு. அகில் சந்திர தத்தா): தீர்மானம் இப்போது அவையின் முடிவுக்கு முன்வைக்கப்படுகிறது.

(பல உறுப்பினர்கள்: இல்லை, வேண்டாம், வேண்டாம்)

இந்த தீர்மானத்தை அவையின் முடிவுக்கு முன்வைக்கக் கூடாது என்பது அவையின் பொதுவான கருத்தாக இருப்பதாக எடுத்துக் கொள்கிறேன்.

**திரு. எச்.ஏ. சத்தார் எச். எஸ்ஸாக் சேட்** (மேற்குக் கடற்கரை மற்றும் நீலகிரி: முகமதியர்): ஏற்கெனவே எடுக்கப்பட்ட முடிவின் படி தேசியக் கட்சிக்கு ஒதுக்கப்பட்ட நேரம் முடிந்துவிட்டது. இது ஒரு கண்டிப்பான நடைமுறையாகும். இப்போது, அடுத்த கட்சி தனது அபிப்பிராயத்தைக் கூற முன்வரலாம். இதுகுறித்து அவை தனது முடிவை தற்போது தெரிவிக்க வேண்டிய அவசியம் இல்லை.

**திரு. துணைத் தலைவர்** (திரு. அகில் சந்திர தத்தா): இந்த வெட்டுத் தீர்மானத்தை அவையின் முன்வைக்க முடியாது என்பதே இப்போதுள்ள நிலை.



# 42

## [1]தொழிலாளர் சம்பந்தமாக இந்திய அரசாங்கத்தின் கொள்கை

திரு. துணைத் தலைவர் (திரு. அகில் சந்திர தத்தா): திரு. ஜோஷி நேற்று கொண்டுவந்த வெட்டுத் தீர்மானத்தின் மீது இப்போது விவாதம் தொடரும்.

பேராசிரியர் என்.ஜி. ரங்கா: ஐயா, திரு. ஜோஷி கொண்டு வந்துள்ள வெட்டுத் தீர்மானத்தை நானும் என்னுடைய கட்சியினரும் முழு மனத்துடன் ஆதரிக்கிறோம்.

மதிப்பிற்குரிய சில உறுப்பினர்கள்: இப்போது இந்த வெட்டுத் தீர்மானம் வாக்கெடுப்புக்கு விடப்பட வேண்டும்.

திரு. துணைத் தலைவர் (திரு. அகில் சந்திரகுப்தா): இந்தத் தீர்மானம்.....

திரு. எச்.ஏ. சத்தார் எச். எஸ்ஸாக் சேட் (மேற்குக் கடற்கரை மற்றும் நீலகிரி: முகமதியர்): இதற்கு அரசாங்கத்தின் பதில் என்ன?

திரு. துணைத் தலைவர் (திரு. அகில் சந்திர தத்தா): அரசு தரப்பில் எவரேனும் பதிலளிப்பார்களா என்று காத்திருந்தேன். ஆனால் எவரும் முன்வரக் காணோம்.

(இந்தக் கட்டத்தில் மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர் தமது இருக்கையிலிருந்து எழுந்திருக்கிறார்).

திரு. துணைத்தலைவர் (திரு. அகில் சந்திர தத்தா): மாண்புமிகு உறுப்பினர் பேச விரும்புகிறாரா?

---

1. தொழிலாளர் இலாகாவின் 23 ஆம் எண் கோரிக்கையின் மீது மத்திய சட்டமன்றத்தில் நடைபெற்ற விவாதங்கள், தொகுதி II, 13 மார்ச், 1945, பக்கங்கள் 1456-62.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): ஆம்.

**திரு. துணைத் தலைவர்:** (திரு. அகில் சந்திர தத்தா): அவை பொறுமை இழந்து விட்டது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நான் பொறுமை இழக்க மாட்டேன் என்று உறுதி கூறுகிறேன்.

திரு. ஜோஷி தமது வெட்டுத் தீர்மானத்தை ஆதரித்து நேற்று பேசும்போது தொழிலாளர் இலாகாவுக்கு எதிராக சில குற்றச்சாட்டு களைக் கூறினார். அவர் தமது முடிவுரையில் தொழிலாளர்களின் நலன்களைப் பேணிக்காப்பது சம்பந்தமாக தனக்குள்ள கடமை களைப் போதிய அளவு நிறைவேற்ற தொழிலாளர் இலாகா தவறி விட்டது என்று சாடினார். அதுமட்டுமன்றி, தொழிலாளர்களிடம் தொழிலாளர் இலாகாவுக்கு துளிகூட அனுதாபமில்லை என்று கூறு மளவுக்குச் சென்றுள்ளார்; இதை வரம்புமீறிய கூற்றாகக் கருது கிறேன். ஐயா, முன்னிடைச் சொல், இடைச்சொல், சந்திகள், பிரிநிலை இடைச் சொல் முதலியவற்றையெல்லாம் விட்டுவிட்டு மதிப்பிற்குரிய என்னுடைய நண்பர் ஏறத்தாழ தந்தி மொழியில் பேசினார் என்றே சொல்ல வேண்டும்; அவர் தமது தீர்மானத் துக்கு ஆதரவாக எத்தகைய விரிவான வாதங்களையும் முன்வைக்க வில்லை; எனவே அவரது வெட்டுத் தீர்மானத்தைக் கையாள்வது சம்பந்தமாக எனக்கு ஓரளவு சிரமம் இருப்பதை உணர்கிறேன். எனினும் அவரது குற்றச்சாட்டுகளுக்குத் தக்கபடி பதிலளிக்கத் தீர் மானித்துள்ளேன்.

ஐயா, தொழிலாளர் இலாகாவுக்கு எதிராக அவர் கூறியுள்ள முதல் குற்றச்சாட்டு அகவிலைப்படி சம்பந்தப்பட்டது. முதலாவ தாக, இந்திய அரசாங்கம் வழங்கியுள்ள அகவிலைப்படி போதுமான தல்ல என்று அவர் குற்றப்பத்திரிகை வாசிக்கிறார். இரண்டாவதாக, இந்திய அரசாங்கம் அங்கீகரித்துள்ள அகவிலைப்படித் திட்டம் ஒரே சீரானதாக இல்லை என்று அவர் குற்றம் சுமத்துகிறார். இவற் றில் முதல் குற்றச்சாட்டை எடுத்துக் கொள்வோம். ''போதிய அளவு'' என்று கூறும்போது இதுகுறித்த கண்ணோட்டங்கள் பெருமளவுக்கு மாறுபடும் என்பதை திரு. ஜோஷி ஒப்புக்கொள்வார் என்று நம்பு கிறேன். போதிய அகவிலைப்படி என்பது துல்லியமாக எதைக் குறிக்கிறது என்பதில் ஒத்துப்போகக் கூடிய இருவரை காண்பது

கடினம். எனவே, பிரச்சினையின் இந்த அம்சத்தைப் பற்றி இங்கு நான் எதுவும் கூறப்போவதில்லை. ஆனால் அகவிலைப்படி விஷயத்தில் இந்திய அரசாங்கம் எப்போதுமே பெருமளவுக்கு அக்கறை காட்டி வந்திருக்கிறது என்பதையும், நிலைமையை உன்னிப்பாகக் கவனித்து, அகவிலைப்படியை உயர்த்துவதற்கு அது அவ்வப்போது நடவடிக்கை எடுத்து வந்துள்ளது என்பதில் ஐயமேதும் இல்லை என்பதையும் அவையின் கவனத்துக்குக் கொண்டுவர விரும்புகிறேன். இது சம்பந்தமாக சில புள்ளி விவரங்கள் அவையின் முன் வைக்கிறேன். முதலாவது அகவிலைப்படி 1942 ஆகஸ்டில் அளிக்கப் பட்டது. இதன்பின்னர் அது 1943 ஜனவரியில் அதிகரிக்கப்பட்டது. 1943 ஜூனில் அது மேலும் உயர்த்தப்பட்டது. (மதிப்புமிக்க ஓர் உறுப்பினர்: ''1942ல் அகவிலைப்படி எவ்வளவு வழங்கப்பட்டது?''). இந்த விவரங்களை எல்லாம் இப்போது கூறிக் கொண்டிருக்க உண்மையில் எனக்கு நேரமில்லை. நான் மேற்கொண்டு பேசுவதற்கு மதிப்பிற்குரிய உறுப்பினர் அனுமதிப்பார் என்று நம்புகிறேன். அகவிலைப்படி 1944 மார்ச்சில் மேற்கொண்டும் அதிகரிக்கப்பட்டது. இவ்வாறு அகவிலைப்படியை நாங்கள் உயர்த்தி வந்தது மட்டுமல்லாமல், அகவிலைப்படி பெறுவதற்குத் தொழிலாளர்களுக்குள்ள தகுதிவரம்பையும் அவ்வப்போது மேம்படுத்தி வந்திருக்கிறோம். அகவிலைப்படி வழங்கப்பட்ட முதல் சந்தர்ப்பத்தில் அதிகபட்ச வரம்பு 100 முதல் 120 ஆக நிர்ணயிக்கப்பட்டது. மூன்றாவது சந்தர்ப் பத்தில் அது 150 ஆக உயர்த்தப்பட்டது. நான்காவது சந்தர்ப்பத்தில் மேலும் ஒரு படி சென்று அது 250 ஆக அதிகரிக்கப்பட்டது. அக விலைப்படியை மேலும் உயர்த்தும் விஷயத்தை இந்திய அரசாங்கம் மிகத் தீவிரமாகப் பரிசீலித்து வருகிறது என்பதை அவையில் கூறிக் கொள்ள விரும்புகிறேன். இதுகுறித்து இந்திய அரசாங்கம் விரை விலேயே முடிவெடுக்கும் என்றும் நம்புகிறேன்.

அகவிலைப்படி வழங்குவதில் ஒரே சீரான போக்கு கடைப் பிடிக்கப்படவில்லை என்ற குற்றச்சாட்டைப் பொறுத்தவரையில் அதை நான் ஒப்புக் கொள்கிறேன்; இந்திய அரசாங்கத்தின் வெவ் வேறு வகையைச் சேர்ந்த ஊழியர்களுக்கு வெவ்வேறு வீதாசாரங் களில் அகவிலைப்படி வழங்கப்படுகிறது என்பதும் உண்மையே. ஆனால், ஐயா, இங்கு ஒரு கேள்வி கேட்க விரும்புகிறேன் - ஒரே சீரான தன்மை இல்லாததற்கு யார் பொறுப்பு? அகவிலைப்படி அளிப்பதில் ஒரே சீரான போக்குக் கடைப்பிடிக்கப்படாததற்கு யாரேனும் பொறுப்பாளி இருப்பாரேயானால் அவர் திரு. ஜோஷியே தான் என்று கூறுவதில் எனக்கு எந்தத் தயக்கமும் இல்லை.

*திரு. என்.எம். ஜோஷி: ஏன்? நான் அரசாங்கம் இல்லையே?*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *'திரு. ஜோஷிதான்' என்று நான் கூறியது அவரை தனிப்பட்ட முறையில் அல்ல, மாறாக தொழிலாளர் அமைப்பு முழுவதையுமே குறிப்பிடுவதற்கே அவ் வாறு கூறினேன். இந்த ஒரேசீரான தன்மை இல்லாததற்கு அவர்கள் தான் காரணம். அகவிலைப்படி வழங்கும் விஷயத்தில் நடந்தது இதுதான். தொழிலாளர் உலகில் பல்வேறு பிரிவினர் இருக்கின் றனர். அவர்களுக்கென தனித்தனிச் சங்கங்கள் உள்ளன. ரயில்வே தொழிலாளர் சம்மேளனம், தபால், தந்தி ஊழியர் சங்கம், பஞ்சாலைத் தொழிலாளர் சங்கம் என எத்தனை எத்தனையோ சங்கங்கள் இருக் கின்றன. இந்த சங்கங்கள் எவற்றிலும் சேராத ஏராளமான தொழி லாளர்களும் இருக்கிறார்கள். இந்தத் தொழிற்சங்கங்களில் பெரும் பாலானவை பின்பற்றும் கொள்கை ஒரு திட்டமிட்ட கொள்ளையே தவிர வேறல்ல, இந்திய அரசாங்கத்திடமிருந்து சலுகைகள் பெறு வதில் சிலர் முந்திக் கொண்டு மற்றவர்களை நிர்க்கதியாக விட்டு விடுகிறார்கள் என்பதை திரு. ஜோஷி ஒப்புக் கொள்வார் என்று நம்புகிறேன். உதாரணமாக ரயில்வே தொழிலாளர்கள் சம்மேள னத்தை எடுத்துக் கொள்ளுங்கள். அது என்ன செய்கிறது? அது ரயில்வே வாரியத்தைச் சந்திக்கிறது; தனது அரசியல் செல்வாக்கைப் பயன்படுத்தி, ரயில்வே தொழிலாளர்களுக்கு மிக அதிகமான அக விலைப்படியை வழங்கும்படி நிர்ப்பந்திக்கிறது. அடுத்து தபால், தந்தி ஊழியர் சங்கத்தினரை எடுத்துக் கொள்வோம். இந்தத் துறைக்குப் பொறுப்பாக உள்ள மதிப்பிற்குரிய என் நண்பரை அவர் கள் சந்திக்கிறார்கள். தங்கள் கோரிக்கையை ஏற்காவிட்டால் வேலை நிறுத்தம் செய்வோம் என்று அவரை அச்சுறுத்துகிறார்கள். நாட்டுக் குத் தாங்கள் மிக அத்தியாவசிய சேவை செய்பவர்கள் என்று கூறி அவரிடமிருந்து முடிந்தளவு சலுகைகளைக் கறந்து விடுகிறார்கள். மற்றவர்கள் தங்கள் நலன்களைப் பாதுகாப்பதற்கு எந்த நாதியு மின்றி அவதிப்படுகிறார்கள். அனைத்து உழைக்கும் வர்க்கங்களுக் கும் அரசு ஊழியர்களுக்கும் ஒரேசீராக செயல்படுத்தப்படக்கூடிய ஒரு கொள்கையை உருவாக்குவதற்கு அகில இந்திய தொழிற் சங்க காங்கிரசோ அல்லது அகில இந்திய உழைப்பாளர் சம்மேள னமோ ஒன்றுபட்டு நடவடிக்கை எடுத்துக் கொள்ள எந்த முயற்சி யும் மேற்கொள்வதாக எனக்குத் தெரியவில்லை.*

***திரு. என்.எம். ஜோஷி:*** *ஒருங்கிணைந்த ஒரே சீரான கொள்கையை வகுப்பது இந்திய அரசாங்கத்தின் கடமை இல்லையா?*

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஆம், இவ்வாறு செய்வதற்கு நாங்கள் அனுமதிக்கப்பட்டால் இது நிச்சயமாக எங்கள் கடமைதான். ஆனால் ஒவ்வொரு முறையும் தொழிலாளர் உலகின் ஒரு பிரிவினர் எங்களிடம் வந்து, ''எங்களுக்கு இதைச் செய்யுங்கள் அல்லது அதைச் செய்யுங்கள், இல்லையென்றால் வேலை நிறுத் தத்தில் குதிப்போம்'' என்று அச்சுறுத்துகிறார்கள். இந்நிலைமையில் அரசாங்கம் செய்வதறியாது திகைக்க வேண்டியிருக்கிறது. (ஓர் உறுப்பினர்: ''நீங்கள் ஏன் சந்தித்துப் பேசி பிரச்சினைக்குத் தீர்வு காணக்கூடாது?'') அடுத்து எதிர்பாராத சூழ்நிலைகளால் தொழி லாளர்கள் வேலையின்றி இருக்கும் பிரச்சினை பற்றி திரு. ஜோஷி குறிப்பிட்டார். மாகாணங்களுக்கும் தொழிலதிபர்களுக்கும் மத்திய அரசாங்கம் அனுப்பியுள்ள சுற்றறிக்கையை திரு. ஜோஷி இகழ்ச்சி யோடு குறிப்பிட்டிருக்கிறார். ஆனால் உண்மையில் அந்தச் சுற்றறிக் கையில் கூறப்பட்டிருப்பது என்ன? நிலக்கரி பற்றாக்குறையாலோ அல்லது வேறு மூலப்பொருள்களின் பற்றாக்குறையாலோ தொழிற் சாலைகள் மூடப்பட்டு தொழிலாளர்கள் வேலையின்றி இருக்கும் சந்தர்ப்பங்களில் எல்லாம் தொழிலதிபர்கள் தங்களது ஊழியர் களுக்கு ஓரளவு நட்டஈடு வழங்க வேண்டும் என்பது இந்திய அர சாங்கத்தின் கருத்தாகும் என்று அந்தச் சுற்றறிக்கையில் கூறப்பட் டிருக்கிறது. தொழிலாளர்கள் வேலையின்றி இருக்கும்போது அவர் களுக்கு ஓரளவு ஊதியம் வழங்க மத்திய அரசாங்கம் தயாராக இருக் கிறது என்று மாகாணங்களுக்கு நாங்கள் அனுப்பிய கடிதத்தில் குறிப்பிட்டிருக்கிறோம். முதல் இரண்டு வாரங்களுக்கு 75 சதவீத ஊதியமும், இரண்டாவது இரண்டு வாரங்களுக்கு 50 சதவீத ஊதி யமும் தொழிலாளர்களுக்கு வழங்கப்பட வேண்டும் என்றும், இந்த உதவித் தொகை அளிக்கப்படும் காலம் ஒரு மாதமாக இருக்க வேண்டும் என்றும், காத்திருக்க வேண்டிய காலம் ஏழு மாதமாக இருக்க வேண்டும் என்றும் தெரிவித்திருக்கிறோம். இந்த உதவித் தொகைகள் உண்மையில் தரப்படுகின்றனவா என்பதைக் கண் காணிப்பதற்கு இந்திய அரசாங்கம் மேற்கொண்டு நடவடிக்கை எதுவும் எடுத்துக் கொள்ளவில்லை என்று திரு. ஜோஷி தமது உரையின் முடிவில் குறிப்பிட்டிருந்தார். ஐயா, மாகாணங்களுக்கும் தொழில் அதிபர்களுக்கும் நாங்கள் அனுப்பியுள்ள சுற்றறிக்கையை திரு. ஜோஷி படித்திருப்பாரேயானால், எதிர்பாராத சூழ்நிலை யால் வேலையின்றி இருக்கும் தொழிலாளர்களுக்கு அளிக்கப்பட வேண்டிய உதவித் தொகைக்கு ஆகும் செலவை ஈடுசெய்வதற்கு சில திட்டவட்டமான யோசனைகளை நாங்கள் தெரிவித்திருப்பதை அவர் தெரிந்து கொண்டிருப்பார். வேலையின்றித் தவிப்பவர்களுக்கு அளிக்கப்படும் உதவித் தொகைகளுக்கு ஆகும் செலவு வருமான

வரி மற்றும் இ.பி.டி. சம்பந்தப்பட்ட விஷயங்களில் வருவாய் தரும் செலவினமாக அனுமதிக்கப்படும் என்பதையும் சுற்றறிக்கையில் கூறியிருக்கிறோம். இதனை இந்தச் சுற்றறிக்கையிலுள்ள ஒரு முக்கிய மான அம்சம் என்று கூறலாம் என்பது தெள்ளத் தெளிவு. இது தவிர, இந்தியப் பாதுகாப்பு விதிகளில் 81-ஏ விதியும் இவ்வகையில் தொழி லாளர்களுக்குத் துணை நிற்கிறது; இந்தச் சந்தர்ப்ப சூழ்நிலைமை கள் காரணமாக வேலை செய்ய இயலாதிருக்கும் தொழிலாளர்கள் பிரச்சினையை மத்தியஸ்துக்கு விடும்படி மாகாண அரசாங்கங் களிடம் விண்ணப்பித்துக் கொள்ள இந்த விதி அனுமதிக்கிறது. இவ்விஷயம் இத்திசை வழியில் இப்போது கையாளப்பட்டு வரு கிறது என்பதை மகிழ்ச்சியோடு தெரிவித்துக் கொள்கிறேன். இப் பிரச்சினை குறித்து ஆமதாபாத்தில் தொழிலதிபர்களுக்கும் அங்குள்ள தொழிலாளர்களுக்கும் இடையே தற்போது மத்தியஸ்த முயற்சி நடைபெற்று வருவதை மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் அறிவார்கள்.

திரு. ஜோஷி எழுப்பியுள்ள மூன்றாவது பிரச்சினை தொழி லாளர் நஷ்ட ஈடு சம்பந்தப்பட்டதாகும். இது விஷயத்தில் அவரது குற்றச்சாட்டின் சாரம் என்ன என்பதையும், தொழிலாளர் நஷ்டஈடு சம்பந்தமாக தற்போது என்ன குறைபாடு நிலவுகிறது என்பதையும், நான் என்ன செய்ய வேண்டுமென அவர் விரும்புகிறார் என்பதையும் என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. தற்போது வழங்கப்பட்டு வரும் நஷ்டஈடு போதுமானது அல்ல என்று அவர் கருதுகிறார் என்று தோன்றுகிறது. ஊதியங்கள் என்பதற்கு தொழிலாளர் நஷ்டஈடு சட்டத்தில் நாம் தந்துள்ள விளக்கம் மிகவும் விரிவானது. பண ஊதியங்கள் மட்டுமன்றி, பண அடிப்படையில் மதிப்பிடப்படக் கூடிய யாவுமே இதில் அடங்கும். எனவே, தொழிலாளி நஷ்டஈடு கோர அவனுக்கு உரிமை உண்டு என்பது தெளிவு. இது சம்பந்த மான சட்டம் பிரிட்டனில் திருத்தப்பட்டிருக்கும்போது இதுபோன்ற எதையும் இந்த நாட்டில் நாம் செய்யவில்லை என்று திரு. ஜோஷி குறைபட்டுக் கொண்டார். யுத்தத்தின்போது இங்கிலாந்தில் தொழி லாளர் நஷ்டஈடு சட்டத்தின்படி தொழிலாளர்களுக்கு அளிக்கப்படும் உதவித் தொகைகள் அதிகரிக்கப்பட்டன என்றும் அவர் கூறினார். இந்த விஷயத்தை நான் ஆராய்ந்து பார்த்தேன், உண்மை நிலை இதுதான். இதிலுள்ள வேறுபாடு என்ன என்பதை திரு. ஜோஷி புரிந்து கொள்ளவில்லை என்பதற்காக வருந்துகிறேன். தொழிலாளர்களின் நஷ்டஈட்டை குறிப்பிட்ட காலம் வரை வழங்க பிரிட்டிஷ் சட்டம் வகை செய்கிறது என்பதையும், ஆனால் இந்தியாவிலோ இதை நாம் பெரும்பாலும் மொத்தத் தொகையாகக் கொடுத்து விடுகிறோம்

என்பதையும் மதிப்பிற்குரிய அவை உறுப்பினர்கள் அறிவார்கள். இது ஒரு முக்கியமான விளைவை ஏற்படுத்துகிறது. மொத்தமாக நஷ்டஈடு வழங்கும் முறையில் ஒரு தொழிலாளி தனக்குரிய நஷ்ட ஈட்டைப் பெற்றதும் அவன் களத்திலிருந்து மறைந்துவிடுகிறான்; அவன் சம்பந்தமாக தொழிலதிபருக்கோ, அரசாங்கத்துக்கோ தொடர்ச்சியான பொறுப்பு ஏதும் இருப்பதற்கில்லை. ஆனால் அதேசமயம் இழப்பீட்டுத் தொகை அளிப்பது குறிப்பிட்ட காலத்துக்கு நீடிக்கும் காரணத்தால், இவ்வாறு பணம் வழங்கும் பொறுப்பு ஒரு நீடித்த, தொடர்ச்சியான பொறுப்பாக தொழிலதிபருக்கு அமைந்துவிடுகிறது. இதனால், வேலையில் இருக்கும் ஒரு தொழிலாளிக்கு தொழிலதிபர் உடனடியாக அகவிலைப்படி வழங்க எவ்வாறு கடமைப்பட்டிருக்கிறாரோ அவ்வாறே பிரிட்டிஷ் சட்டத்தின்படியும் ஒரு தொழிலதிபர் கூடுதல் இழப்பீடு அளிக்கக் கடமைப்பட்டிருக்கிறார்; அங்கு கால அடிப்படையில் பணம் வழங்கப்படுவதால் அவ்வாறு பணம் வழங்கும் பொறுப்பும் தொடர்வதே இதற்குக் காரணம். நாம் கடைப்பிடித்துவரும் தொழிலாளர் இழப்பீட்டு முறை மாற்றப்பட வேண்டும், தொழிலாளிக்கு மொத்தத் தொகையாக அளிக்காமல் அவனது ஆயுட்காலம் வரையிலோ அல்லது அவனுடைய குழந்தைகள் வயதுக்கு வரும் வரையிலோ கால அடிப்படையில் இழப்பீட்டுத் தொகை அளிக்கப்பட வேண்டும் என்பது அவையின் விருப்பமாக இருந்ததால் இங்கிலாந்தில் பின்பற்றப்பட்டுவரும் நடைமுறை நம் நாட்டிலும் பின்பற்றப்படும் என்று உறுதிகூறுகிறேன்.

**திரு. துணைத் தலைவர்** (திரு. அகில் சந்திர தத்தா) : நீங்கள் உங்கள் உரையைச் சுருக்கிக் கொள்ள வேண்டும் என்பது - எனது ஆணையல்ல - அவையின் விருப்பம். அடுத்தத் தீர்மானம் கொண்டு வர வாய்ப்பளிக்க வேண்டும் என்பதும் அவையின் விருப்பம். இனி நீங்கள்தான் முடிவு செய்ய வேண்டும்.

**சர் கவாஸ்ஜி ஜெஹாங்கீர்:** இல்லை, ஐயா, இது அவையின் விருப்பம் அல்ல. அவர் மேலும் பேசுவதைக் கேட்கவே விரும்புகிறேன்.

**திரு. துணைத்தலைவர்** (திரு. அகில் சந்திர தத்தா): அமைதி, அமைதி.

**சர் கவாஸ்ஜி ஜெஹாங்கீர்:** இது அவையின் விருப்பமல்ல, ஐயா. அவையின் பெயரைப் பயன்படுத்தி நீங்கள் பேசுகிறீர்கள்,

ஐயா. இந்த அவையின் இப்பகுதியைப் பொறுத்தவரையில் அவர் பேச வேண்டுமென்றே நாங்கள் விரும்புகிறோம்.

**டாக்டர் பி.என். பானர்ஜி:** அவர் தமது உரையை முடித்துக் கொள்ள வேண்டும் என்று விரும்பும் மதிப்பிற்குரிய உறுப்பினர் களும் இருக்கிறார்கள்.

**சர் கவாஸ்ஜீ ஜெஹாங்கீர்:** இல்லை, அவர் பேசுவதை நாங்கள் கேட்கவே விரும்புகிறோம்.

**திரு. துணைத் தலைவர்** (திரு. அகில் சந்திர தத்தா): நீங்களே முழு அவையும் அல்ல.

**திரு. அப்துல் கையூம்:** நீங்கள் கூறியது முற்றிலும் சரி.

**மாண்புமிகு சர் சுல்தான் அகமது:** என்னவாயினும் சபையின் இந்தப் பகுதி அவர் பேசுவதைக் கேட்கவே விரும்புகிறது.

**திரு. துணைத் தலைவர்** (திரு. அகில் சந்திர தத்தா): இந்தக் குழப்பம் எதற்கு? இது அவைத் தலைவரின் கட்டளை அல்ல என்று நான் திரும்பத் திரும்பக் கூறிக் கொண்டிருக்கிறேன். மாண்புமிகு உறுப்பினருக்கு அவைத் தலைவர் விடுக்கும் ஒரு வேண்டுகோள் தான் இது. இந்த வேண்டுகோளை ஏற்பதா, இல்லையா என்பதை அவர்தான் முடிவு செய்ய வேண்டும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, திரு. ஜோஷி அடுத்தபடியாக எழுப்பிய பிரச்சினை தொழில்நுட்ப ஊழியர் அவசரச் சட்டம் பற்றியது. இந்தத் தொழில்நுட்ப ஊழியர் அவசரச் சட்டம் முதலாளிக்கும் தொழிலாளிக்கும் இடையே ''பாரபட்சம் காட்டும் கோட்பாட்டை தன்னுள் கொண்டுள்ளது'' என்று அவர் குற்றம் சாட்டுகிறார்; அதாவது இந்த அவசரச் சட்டத்தின்படி ஒரு தொழிலாளி தன் இஷ்டம்போல் தனது வேலையிலிருந்து விலக முடியாது; அதேசமயம் இதே அவசரச் சட்டத்தின் பிரகாரம் ஒரு முதலாளி தனது தொழிலாளியை தன் இஷ்டம்போல் வேலையி லிருந்து நீக்கலாம் என்பது திரு. ஜோஷியின் வாதம். இந்த அவசரச் சட்டத்தைப் படித்துப் பார்க்கும்போது நாம் காணும் உண்மை நிலை என்ன? உண்மை நிலை இதுதான்: ஒரு தொழிலாளி வேலையிலிருந்து

விலக விரும்பினால் அதற்கு தனது முதலாளியின் அனுமதியைப் பெற வேண்டியதில்லை. மாறாக, தொழிலாளி தனது வேலையை விட்டுவிட விரும்பினால் முறை மன்றத்தின் அனுமதியை நாட வேண்டும் என்று அவசரச் சட்டம் கூறுகிறது. இந்த விஷயத்தை திரு. ஜோஷி ஓரளவு தவறாகப் புரிந்து கொண்டிருக்கிறார் என்றே தோன்று கிறது. அடுத்து, தொழிலாளியை வேலையை விட்டு நீக்குவதற்கு முதலாளிக்குள்ள அதிகாரத்தைப் பொறுத்தவரையில் உண்மை நிலைமை இதுதான்: முறைமன்றத்தின் அனுமதியைப் பெற்றா லொழிய ஒரு தொழிலாளியை வேலையிலிருந்து நீக்குவதற்கு பொதுவாக முதலாளி அனுமதிக்கப்படுவதில்லை. ஆனால் இதற்கு ஒரு விதிவிலக்கு உண்டு; அதாவது கீழ்ப்படியாமை, தவறான நடத்தை காரணமாக ஒழுங்கு நடவடிக்கை எடுக்க வேண்டிய நிலைமை ஏற்படும்போது முறை மன்றத்தின் அனுமதி பெறாம லேயே ஒரு முதலாளி தனது தொழிலாளியை வேலையிலிருந்து நீக்கலாம். தவறாக நடந்து கொள்ளும் அல்லது கீழ்ப்படியாது நடந்து கொள்ளும் ஒரு தொழிலாளியை அவனது முதலாளி வேலை நீக்கம் செய்ய அனுமதிக்கும் இந்தக் குறிப்பிட்ட விதியை குறை கூற முடியாது என்றே கருதுகிறேன்.

என்.எம். ஜோஷி: இதை யார் தீர்மானிப்பது?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: முறை மன்றம் செயல்படாத சந்தர்ப்பங்களில் பொதுவாக யார் தீர்மானிக்கிறார் கள் என்பதை திரு. ஜோஷியிடமே கேட்க விரும்புகிறேன். நமது தொழில்துறை அமைந்துள்ள நிலையைக் கொண்டு பார்க்கும்போது, ஒரு குறிப்பிட்ட தொழிலாளியின் பணியில் தனக்குத் திருப்தி இல்லை என ஒரு முதலாளி கருதும்போது அந்தத் தொழிலாளியை வேலை நீக்கம் செய்ய சரியாகவோ, தவறாகவோ அவருக்கு உரிமை இருக் கிறது. இதுதான் தற்போதுள்ள நிலைமை. இந்த உரிமை துஷ்பிர யோகம் செய்யப்படாதிருக்கும் பொருட்டு அவசர சட்டத்தில் இரண்டு முக்கியமான திருத்தங்களைச் செய்திருக்கிறோம் என்பதை அவைக்கு அதிலும் குறிப்பாக திரு. ஜோஷிக்குத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். முதலாவதாக முறைமன்றத்துக்கு உதவி செய்ய ஆலோசனைக் குழுக்களை அமைத்திருக்கிறோம்; இத்தகைய குழுக்களை அமைக்க வேண்டும் என்பதே திரு. ஜோஷியின் விருப்ப மாகும். இக்குழுக்களில் தொழிலாளர்களின் பிரதிநிதிகள் இடம் பெறுவார்கள். இக்குழுக்கள் இவ்வாறு அமைக்கப்படுவதால், தொழி லாளிகள் பழிவாங்கப்பட்டால் இவ்விஷயத்தை முறை மன்றத்தின்

கவனத்துக்கு இவற்றால் கொண்டு வர முடியும் என்பதில் எனக்கு எத்தகைய ஐயமும் இல்லை.

இரண்டாவதாக மற்றுமொரு மிக முக்கியமான நடவடிக்கையையும் நாங்கள் எடுத்திருக்கிறோம். ஒரு தொழிலாளி தனது வேலையை இராஜிநாமா செய்வற்கோ அல்லது வேலையைத் துறப்பதற்கோ அனுமதிக்காததற்கான காரணங்களை எழுத்துப்பூர்வமாகத் தெரிவிக்க வேண்டுமென்று முறைமன்றத் தலைவரைக் கேட்டுக்கொள்ளும் உத்தரவு ஒன்றை இப்போது பிறப்பித்திருக்கிறோம். இந்த சட்டப்பிரிவை குற்ற நடைமுறை சட்டத் தொகுப்பிலிருந்து நாங்கள் இரவல் பெற்றிருக்கிறோம். ஒரு தொழிலாளி தனது வேலையை இராஜிநாமா செய்ய முறைமன்றத் தலைவர் அனுமதிக்காததற்கு சட்டரீதியான, முறையான காரணங்கள் இருக்கின்றனவா என்பதை மத்திய அரசாங்கத்திலுள்ள நாங்கள் தெரிந்து கொள்வதை இது சாத்தியமாக்கும்.

ஐயா, நிலக்கரிச் சுரங்கங்களில் உள்ள நிலைமைகள் மிகவும் மோசமாக, திருப்திகரமற்றவையாக இருக்கின்றன என்று திரு. ஜோஷி சுட்டிக்காட்டினார். இதை நான் மறுக்கவில்லை; அங்கு நிலைமைகள் போற்றத்தக்கவையாக உள்ளன என்றும் நான் உரிமை கொண்டாடவில்லை. ஆனால் அதே சமயம் நிலக்கரிச் சுரங்கங்களில் மேம்பட்ட நிலைமைகளைத் தோற்றுவிப்பதற்கு தொழிலாளர் நலத்துறை பல விரிவான, திட்டவட்டமான நடவடிக்கைகள் எடுத்து வருகிறது என்பதை உங்கள் கவனத்திற்குக் கொண்டு வருகிறேன். இரண்டு வகையான தொழிலாளர்களைக் கொண்டு இப்போது நிலக்கரிச் சுரங்கங்களை இயக்கி வருகிறோம் - ஒரு பிரிவினர் ஸ்தல தொழிலாளர்கள், மற்றொரு பிரிவினர் வெளியிலிருந்து அதிலும் குறிப்பாக ஐக்கிய மாகாணங்களைச் சேர்ந்த கோரக்பூர் மாவட்டத்திலிருந்து வரவழைக்கப்பட்ட தொழிலாளர்கள். தொழிலாளர்களுக்கு தரப்படும் ஊதியங்கள் சம்பந்தமான சில புள்ளி விவரங்களை அவைக்குத் தெரிவிக்க விரும்புகிறேன். கோரக்பூர் தொழிலாளி நாள் ஒன்றுக்கு 12 அணா அடிப்படை ஊதியமாகப் பெறுகிறான்; இதுவன்றி உற்பத்திப் போனசாக 4 அணா பெறுகிறான்; மேலும் நிலத்துக்கு அடியில் வேலை செய்வதற்காக நான்கணா கூடுதல் படியாக அவனுக்குக் கிடைக்கிறது. தவிரவும், அவனுக்கு இலவசமாக உணவும் வழங்குகிறோம். இதற்கு நபருக்கு ஒரு நாளைக்கு 14 அணா ஆகிறது.

*திருமதி ரேணுகா ரே (அதிகார சார்பற்ற நியமன உறுப்பினர்): ஐயா, ஓர் ஒழுங்குப் பிரச்சினை. மாண்புமிகு உறுப்பினர் ஏற்கெனவே 25 நிமிடங்கள் எடுத்துக் கொண்டு விட்டார்.*

***திரு. துணைத்தலைவர்: (திரு. அகில் சந்திர தத்தா):*** *தொழிலாளர் நலத்துறைக்குப் பொறுப்பாக உள்ள மாண்புமிகு உறுப்பினருக்கு 20 நிமிடங்களுக்கு அதிகமாகப் பேச வாய்ப்பளிக்கலாம்.*

***திரு. என்.எம். ஜோஷி:*** *20 நிமிடங்கள்தான் என்பது விதிமுறை.*

***திரு. துணைத் தலைவர்*** *(திரு. அகில் சந்திர தத்தா): இல்லையில்லை; 20 நிமிடங்களோ அவசியமானால் அதற்கும் அதிகமாகவோ பேசலாம்.*

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** *ஐயா, ஏற்கெனவே நான் கூறியதுபோன்று கோரக்பூர் தொழிலாளிக்கு இந்த ஊதியங்கள் வழங்கப்படுவதோடு, அவனது உணவுக்காக நாள் ஒன்றுக்கு 14 அணா அளிக்கப்படுகிறது. மேலும் இலவசமாக வீட்டு வசதியும், மருத்துவ உதவியும் தரப்படுகின்றன.*

*ஏனைய நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர்களை எடுத்துக் கொண்டால், அவர்களது ஊதியம் பின்வருமாறு அமைந்திருக்கிறது. யுத்தத்திற்கு முன்னர் மேற்பரப்பில் வேலை செய்தால் 8 அணாவும், பூமிக்கு அடியில் வேலை செய்தால் 14 அணாவும் தரப்பட்டு வந்தது; இப்போது இந்த ஊதியம் 50 சதவீதம் அதிகரிக்கப் பட்டுள்ளது. மேலும், தொழிலாளி ஆணாக இருந்தாலும், பெண்ணாக இருந்தாலும் சில பங்கீட்டுப் பொருள்கள் அளிக்கப்படுகின்றன. உள்ளூர் நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளி ஆணாக இருந்தாலும் பெண்ணாக இருந்தாலும் தலைக்கு 4 சேர் வீதமும், தன்னைச் சார்ந்துள்ள வயது வந்த ஒவ்வொருவருக்கும் 4 சேர் வீதமும், இரண்டு வயதுக்கும் பன்னிரண்டு வயதுக்கும் உட்பட்ட ஒவ்வொரு குழந்தைக்கும் 2 சேர் வீதமும் கட்டுப்படுத்தப்பட்ட விலையில் உணவு தானியங்களைப் பெறுகின்றனர். இதல்லாமல், ஆண் பெண் என்ற பாகுபாடின்றி ஒவ்வொரு தொழிலாளிக்கும் பருப்பு போன்ற அடிப்படைப் பங்கீட்டுப் பொருள்களில் நான்கில் ஒரு பங்கு சலுகை விலையில் வழங்கப்படுகிறது. இவற்றை ரூபாய்க்கு ஆறு சேர் என்ற சலுகை விலையில் அவர்கள் பெறுகின்றனர். வேலைக்கு வரும்*

ஒவ்வொரு தினத்துக்கும் ஒரு சேர் அரிசி இலவசமாகவும் தரப்படு கிறது. அதுமட்டுமல்ல, வேலைக்கு வரும் ஒவ்வொரு தினத்துக்கும் சார்ந்து இருப்பவர் எவரும் இல்லாத தொழிலாளி இரண்டு அணா வீதமும், சார்ந்து இருப்பவர் ஒருவரை கொண்ட தொழிலாளி மூன்று அணா வீதமும், வயதுவந்த சார்ந்திருப்பவரையும் ஒன்று அல்லது அதற்கும் அதிகமான குழந்தைகளையும் கொண்ட தொழிலாளி ஐந்து அணா வீதமும் பெறுகிறார்.

**திரு. ஸ்ரீ பிரகாசா:** ஐயா, ஓர் ஒழுங்குப் பிரச்சினை. அரசாங்க உறுப்பினர் ஒருவர் 20 நிமிடங்களுக்கும் அதிகமாகப் பேசலாம் என்று நீங்கள் கூறியது சம்பந்தப்பட்ட துறைக்குப் பொறுப்பாக உள்ளவருக்குப் பொருந்துமே தவிர எந்த அரசாங்க உறுப்பினர் வேண்டுமானாலும் திடீரென்று முன்வந்து பேச முடியாது. இப் போதைய விஷயத்துடன் சம்பந்தப்பட்டவர் நிதித்துறை உறுப்பினர். அவரது தீர்மானம்தான் அவையின் முன் உள்ளது. இது தொழிலாளர் நலத்துறை உறுப்பினரின் தீர்மானம் அல்ல.

**திரு. சாமி வெங்கடாசலம் செட்டி** (சென்னை, இந்திய வாணிகம்): ஐயா, தீர்மானத்தை இப்போது அவையின் முடிவுக்கு விடலாம் என்று பிரரேபிக்கிறேன்.

**மதிப்புக்குரிய பல உறுப்பினர்கள்:** அவ்வாறே அவையின் முடிவுக்கு விடலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, இம்மாதிரி எல்லாம் எனக்கு இடைஞ்சல் தரக்கூடாது.

**திரு. துணைத்தலைவர்** (திரு. அகில் சந்திர தத்தா): அமைதி, அமைதி. உரை முடிந்த பிறகுதான் தீர்மானத்தை அவையின் முடிவுக்கு விடமுடியும். அடுத்த தீர்மானம் சம்பந்தமாக எதிர்க்கட்சி யினருக்கு என்னால் முடிந்த உதவியைச் செய்துவிட்டேன். ஆனால் இப்போது எனக்கு வேறு வழியில்லை.

**திரு. அப்துல் கையூம்:** ஐயா, ஓர் ஒழுங்குப் பிரச்சினை. அர சாங்க உறுப்பினர் 20 நிமிடங்களோ அல்லது அதற்கும் அதிக மாகவே பேசலாம். ஆனால் இங்கு பிரச்சினை என்னவென்றால், அரசாங்க உறுப்பினர் வரைமுறையின்றித் தம் பேச்சை தம் விருப்பம் போல் மணிக்கணக்கில் நீடித்துச் செல்ல அனுமதிக்கலாமா? அல்லது

மாண்புமிகு அரசாங்க உறுப்பினர் பேசுவதற்கு போதிய நேரம் இருக்கிறதா, இல்லையா என்பதை அவைத் தலைவர் முடிவு செய் வதா? இந்த அதிகாரம் முற்றிலும் அவைத் தலைவருக்குத்தான் உண்டு, அரசாங்க உறுப்பினர் தம் இஷ்டம்போல் பேச்சை நீட்டித்துக் கொண்டு போக முடியாது என்பது என் கருத்து. அவர் போதிய நேரம் பேசிவிட்டார் என்பதே என் வாதம்.

திரு. துணைத் தலைவர் (திரு. அகில் சந்திர தத்தா): பேசு வதற்கு அவர் போதிய நேரம் எடுத்துக் கொண்டு விட்டாரா அல்லது வேண்டுமென்றே பேச்சை நீட்டித்துக் கொண்டு போகிறாரா என்பதை என்னால் கூற முடியவில்லை; அந்த அளவுக்கு அது மிகவும் சிக்க லானதாக இருக்கிறது.

மதிப்பிற்குரிய பல உறுப்பினர்கள்: இப்போது தீர்மானத்தை அவையின் முடிவுக்கு விடலாம்.

திரு. சாமி வெங்கடாசலம் செட்டி: ஒரு ஒழுங்கு பிரச் சினையை எழுப்ப விரும்புகிறேன். தீர்மானத்தை முடிவுக்குக் கொண்டுவரும் பிரேரணையை நான் கொண்டுவர முடியாது என்று அவைத் தலைவர் நினைப்பது போல் தோன்றுகிறது. ஆனால் மாண்புமிகு உறுப்பினர் தமது இருக்கையில் அமர்ந்து விட்டதால் இப்போது தீர்மானத்தை அவையின் முடிவுக்கு விடலாம் என்று நினைக்கிறேன்.

திரு. துணைத் தலைவர் (திரு. அகில் சந்திர தத்தா): ஓர் உறுப்பினர் உரை நிகழ்த்திக் கொண்டிருக்கும்போது, தீர்மானத்தை அவையின் முடிவுக்கு விடும் பிரேரணையை கொண்டு வர முடியாது என்பது மரபு. மேலும், மாண்புமிகு உறுப்பினர் தம் உரையை முடித்து விட்டதால் இருக்கையில் அமரவில்லை, மாறாக குறுக்கீடுகள் காரண மாகத்தான் அவர் தமது இருக்கையில் அமர்ந்துவிட்டார்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அடுத்து, தொழி லாளர் நலத்துறையில் போதிய எண்ணிக்கையில் அலுவலர்கள் இல்லை என்று திரு. ஜோஷி கூறினார். இத்தகைய முடிவுக்கு அவர் எவ்வாறு வந்தார் என்பது எனக்கு வியப்பாக இருக்கிறது. இந்த அலுவலர்களைப் பற்றிக் கூறுவதானால் அவர்கள் அண்மையில்தான் தொழிலாளர் நலத்துறையினால் வேலைக்கு அமர்த்திக் கொள்ளப் பட்டவர்கள். நிலக்கரிச் சுரங்கங்களைப் பொறுத்தவரையில், நிலக்கரிச்

சுரங்க சேமநலக் குழுவுக்கு தலைமை நிர்வாக அதிகாரியை நிய மித்திருக்கிறோம். தலைமை சேம நல அதிகாரி அவருக்கு உதவி யாக இருக்கிறார். அவருக்குக் கீழ் இரண்டு ஆய்வாளர்கள் இருக் கிறார்கள் - அவர்களில் ஒருவர் பெண் சேமநல ஆய்வாளர். தேர்ச்சி பெறாத தொழிலாளர்களைத் திரட்டித் தருவதற்காக ஓர் இயக்குநர் இருக்கிறார். அவருக்குக் கீழ் மூன்று துணை இயக்குநர்களும் இரண்டு உதவி இயக்குநர்களும் உள்ளனர்.

(இந்தக் கட்டத்தில் எதிர்க்கட்சித் தரப்பினரிடமிருந்து பலத்த கூச்சலும், தங்கள் மேசைகளைத் தட்டும் ஒலியும் வருகின்றன).

**திரு. அப்துல் கையூம்:** உங்கள் கோரிக்கை அறவே மறுக்கப் படும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** பிரதம சுரங்க ஆய்வாளரின் கீழ் 20 அதிகாரிகள் பணியாற்றுகின்றனர். இதல்லா மல், மத்தியில் ஒரு தலைமை தொழிலாளர் நல ஆணையரை நிய மித்திருக்கிறோம். அவருக்குக் கீழ் மூன்று துணை ஆணையர்கள் பணியாற்றுகின்றனர்; எல்லா சேமநல நடவடிக்கைகளுக்கும் அவர் கள் பொறுப்பாக இருப்பார்கள்.

அடுத்தபடியாக, ஐயா, தொழிலாளர் நலத்துறை நடவடிக்கை எடுப்பதில் எப்போதும் பெரிதும் காலதாமதம் செய்வதாக திரு. ஜோஷி குற்றம் சாட்டினார்; ஆமைபோல் இயங்குவதே அவர் களுக்கு வழக்கமாகிவிட்டது என்றும் கூறினார். இதுகுறித்து ஒன்று கூற விரும்புகிறேன்: தொழிலாளர் நலத்துறையின் நடவடிக்கை களைச் செயல்படுத்தும் இன்றைய சந்தர்ப்ப சூழ்நிலைகளில் தாமதம் தவிர்க்க முடியாதது. நாங்கள் மாகாண அரசாங்கங்களைக் கலந் தாலோசிக்க வேண்டியிருக்கிறது; தொழிலாளர் நலத்துறை அமைப் பாளர்களை கலந்தாலோசிக்க வேண்டியிருக்கிறது; ஊழியர்களை யும் கலந்தாலோசிக்க வேண்டியிருக்கிறது. இவற்றிற்கெல்லாம் நிச்சயம் எவ்வளவோ நேரம் செலவிட வேண்டியிருக்கும். எனவே, நாங்கள் எங்கள் செயல்பாடுகளில் தாமதம் செய்வதாக திரு. ஜோஷி கூறுவதில் அர்த்தம் இருப்பதாக நான் கருதவில்லை.

**திரு. என்.எம். ஜோஷி:** திரு. துணைத் தலைவர் அவர்களே, நான் ஒரு ஒழுங்கு பிரச்சினையை எழுப்ப விரும்புகிறேன். ஓர் அரசாங்க உறுப்பினர் எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் பேசிக்

கொண்டிருக்கலாம் என்பது உங்கள் தீர்ப்பா? இதுசம்பந்தமாக அவைத் தலைவரிடமிருந்து ஒரு திட்டவட்டமான முடிவை எதிர்ப் பார்க்கிறேன்...

**திரு. துணைத் தலைவர் (திரு. அகில் சந்திர தத்தா):** மாண்புமிகு உறுப்பினர் தமது உரையை முடித்து விட்டார் என்று தெரிகிறது.

**திரு. என்.எம். ஜோஷி:** ஐயா, அவையின் நேரத்தை மிச்சப் படுத்த விரும்புகிறேன். எனவே, எனது வெட்டுத் தீர்மானத்தைத் திரும்பப் பெற்றுக் கொள்ள அவையின் அனுமதியை வேண்டு கிறேன்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஒரு விஷயத்தை இங்கு கூற விரும்புகிறேன். மதிப்பிற்குரிய என்னுடைய நண்பர் திரு. ஜோஷி தமது வெட்டுத் தீர்மானத்தைத் திரும்பப் பெற்றுக் கொள்ளப் போவதாக என்னிடம் தெரிவித்திருந்தால், இவ்வளவு நீண்ட நேரம் நான் பேசியிருக்க மாட்டேன்.

**திரு. துணைத் தலைவர் (திரு. அகில் சந்திர தத்தா):** தமது வெட்டுத் தீர்மானத்தைத் திரும்பப் பெற்றுக் கொள்ளப் போவதாக மாண்புமிகு உறுப்பினருக்கு முன்கூட்டியே தெரிவிக்க திரு. ஜோஷி எவ்வகையிலும் கட்டுப்பட்டிருக்கவில்லை.

அவையின் அனுமதியோடு வெட்டுத் தீர்மானம் திரும்பப் பெற்றுக் கொள்ளப்படுகிறது.



43

# [1]சுரங்கங்களில் நிலத்தடியில் பெண்கள் வேலை செய்வதற்கு மீண்டும் உடனடியாகத் தடை விதிப்பது அவசியம்

*திருமதி ரேணுகா ரே: ஐயா, நான் பின்வருமாறு முன்மொழி கிறேன்:*

> ''தொழிலாளர் நலத்துறை' என்னும் தலைப்பில் கோரப்படும் மானியம் நூறு ரூபாயாகக் குறைக்கப்பட வேண்டும்''

ஐயா, சுரங்கங்களில் நிலத்தடியில் பெண்கள் வேலை செய் வதற்கு 1943 ஆகஸ்டு முதல் அதே ஆண்டு டிசம்பர் வரை இருந்து வந்த தடை முதலில் விலக்கிக் கொள்ளப்பட்டதிலிருந்து இந்த விரும்பத்தகாத நடவடிக்கைக்கு எதிராக நாடு முழுவதும் தொடர்ந்து உறுதியான கண்டனம் தெரிவிக்கப்பட்டு வருகிறது. தாங்கள் சர்வ தேச வாக்குறுதியை மீறிவிட்டது மட்டுமன்றி, உலக அபிப்பிராயத் தையும் பெருமளவுக்கு அதிர்ச்சிக்கும் அவமதிப்புக்கும் உள்ளாக்கி விட்டோம் என்பதை இந்திய அரசாங்கம் முற்றிலுமாக உணர்ந் திருக்கிறது.

ஓராண்டுக்கு முன்னர் அகில இந்திய மாதர் மாநாட்டின் வேண்டுகோளுக்கு இணங்க நான் ஓர் ஒத்திவைப்புத் தீர்மானத்தைக் கொண்டுவந்து இந்தத் தடையை மீண்டும் உடனடியாக நடை முறைக்குக் கொண்டுவரும்படிக் கேட்டுக் கொண்டேன். பட்ஜெட் கூட்டத் தொடரின்போது தொழிலாளர் மானியக் கோரிக்கை சம்பந்த மாக கொண்டுவரப்பட்ட ஒத்திவைப்புத் தீர்மானத்தின்மீது பேசுகை யில் மதிப்பிற்குரிய என் நண்பர் திருமதி சுப்பராயன் இதே பிரச் சினையை எழுப்பினார். ஆனால் இது அடுத்த அறுவடை காலம் வரை நீடிக்கக்கூடிய ஒரு தாற்காலிக நடவடிக்கைதான் என்றும், யுத்த காலம் முழுவதற்குமான நடவடிக்கை அல்லவென்றும்,

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி II, 1945 மார்ச் 13, பக்கங்கள் 1463-66.

தொழிலாளர் பற்றாக்குறை பிரச்சினைக்குத் தீர்வுகாண ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது என்றும், இந்த ஏற்பாடுகள் முடிவடைந்ததும் நிலத்தடியில் பெண்கள் வேலை செய்வதற்கு மீண்டும் தடை விதிக்கப்படுமென்றும் மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் அச்சமயம் உறுதி கூறினார். ஆனால் இது வெறும் கண்ணாமூச்சி விளையாட்டாகவே இருக்கிறது. ஒரு வருடம் கழிந்து விட்டது. எனினும் இன்னும்கூட அரசாங்கத்தின் போக்கு மிகவும் பிடிவாதமானதாகவே உள்ளது. தடையை மீண்டும் விதிக்கும் நோக்கும் தமக்கு இல்லை என்பதை மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தெளிவாக்கி விட்டார். இந்த அவையின் மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் இப்போதைய சந்தர்ப்ப சூழ்நிலைகள் அனைத்தையும் நன்கு அறிவார்கள்; ஈவு இரக்கமற்ற, நெஞ்சீரமற்ற ஒரு முதலாளியிடமிருந்து இத்தகைய வாதங்கள் வந்திருந்தால் அவற்றை அவர்கள் புரிந்து கொண்டிருப்பார்கள்.

*(இச்சமயம் அவைத் தலைவர் மாண்புமிகு சர் அப்துல் ரகீம் தம் இருக்கையில் அமர்ந்தார்.)*

ஆனால் பொதுமக்களின் நலன்களைப் பாதுகாப்பதற்கு முக்கிய பொறுப்பு வகிப்பவர்கள் எவ்வாறு இத்தகைய நடவடிக்கையை உறுதி செய்து, அதனை முன்கொண்டு செல்லுகிறார்கள் என்பது நமக்கு அச்சத்தை உண்டு பண்ணுகிறது.

ஐயா, இந்த அவையிலுள்ள அனைத்து உறுப்பினர்களதும், அனைத்துக் கட்சிகளையும் சேர்ந்த உறுப்பினர்களதும், அரசாங்கத்தினதும் ஆதரவை வேண்டுகிறேன். ஏனென்றால் இது நியாயமான, நேர்மையான ஒரு கோரிக்கை; இதனை ஏற்க மறுப்பது பண்பு நலத்தின் தூய கோட்பாடுகளையே மறுப்பதாகும்.

ஐயா, இப்போது என் தீர்மானத்தைப் பிரரேபிக்கிறேன்.

திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரஹீம்): பின்கண்ட வெட்டுத் தீர்மானம் முன்மொழியப்படுகிறது:

"தொழிலாளர் நலத்துறை' என்னும் தலைப்பில் கோரப்படும் மானியம் நூறு ரூபாயாகக் குறைக்கப்பட வேண்டும்.

மதிப்பிற்குரிய சில உறுப்பினர்கள்: தீர்மானத்தை அவையின் முடிவுக்கு விடலாம்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இந்த வெட்டுத் தீர்மானத்தைப் பொறுத்தவரையில், எனக்கு அளிக்கப்பட்டுள்ள குறுகியகால அவகாசத்தில் அதைப் பற்றிப் போதிய அளவு பேசுவது கடினம். இந்தப் பிரச்சினை குறித்து சென்ற முறை கொண்டுவரப் பட்ட ஓர் ஒத்திவைப்புத் தீர்மானத்தின்மீது நான் பேசும்போது இந்திய அரசாங்கம் இந்த முடிவை மேற்கொள்ள நேர்ந்தது பற்றி நான் மிகுந்த வருத்தமடைந்தேன். இப்போதும் இது குறித்து வருந்து கிறேன். ஆனால் தற்போது நாங்கள் எடுத்துள்ள முடிவைத் தவிர வேறு எந்த முடிவையும் மேற்கொள்ள இயலாதவாறு சந்தர்ப்பச் சூழ்நிலைமைகள் அமைந்துள்ளன. இது சம்பந்தமாக நான் ஒரு சில நிமிடங்கள் பேசுவதை அவை பொறுத்துக் கொள்ளும் என்று நம்புகிறேன்...

மதிப்பிற்குரிய சில உறுப்பினர்கள்: இல்லை, இல்லை.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ..... இந்த விஷயத்தில் எங்களை நிர்ப்பந்தித்த சந்தர்ப்ப சூழ்நிலைகளைக் கூறுகிறேன்.

நிலக்கரி சம்பந்தமான நிலைமை எவ்வாறு இருந்தது என்பதை அவைக்கு எடுத்துரைப்பதோடு என் பேச்சைத் தொடங்குகிறேன். 1941ஆம் ஆண்டில் மொத்த நிலக்கரி உற்பத்தி 2,93,81,000 டன்னாக இருந்தது. 1942ல் அது 2,92,70,000 டன்னாக வீழ்ச்சியடைந்தது. 1943 ஆம் ஆண்டு மிக நெருக்கடியான ஆண்டு. அந்த ஆண்டில் மொத்த நிலக்கரி உற்பத்தி 2,37,53,000 டன்னாக வெகுவாக சரிந்தது. இதன் காரணமாகத்தான் இந்தத் தடையை நீக்க வேண்டிய நிர்ப் பந்தத்துக்கு உள்ளானோம். ஓராண்டுக்குள்ளாக நிலக்கரி உற்பத்தி ஏறத்தாழ 66,28,000 டன் அளவுக்குக் குறைந்துவிட்டது என்பதை இதிலிருந்து அவை உணர்ந்து கொள்ளும் என்று நம்புகிறேன். தொழில் துறைக்கும் சரி, யுத்த முயற்சிகளுக்கும் சரி நிலக்கரி எவ் வளவு முக்கியத்துவம் வாய்ந்த மூலப்பொருள் என்பதை இங்கு நான் விரித்துரைக்க வேண்டிய அவசியம் இல்லை. இவ்வளவு முக்கியத் துவம் வாய்ந்த மூலப்பொருளான நிலக்கரி உற்பத்தி மிகப் பெரு மளவுக்கு வீழ்ச்சியடைந்து விட்டதை கைகளைக் கட்டிக் கொண்டுப்

பேசாது உட்கார்ந்திருப்பது என்பது எந்த அரசாங்கத்துக்கும் சாத்திய மல்ல.

அவையின் கவனத்துக்கு அடுத்தபடியாக நான் கொண்டுவர விரும்பும் விஷயம் இந்த ஆண்டுகளில் புதிதாக ஆரம்பிக்கப்பட்ட நிலக்கரிச் சுரங்கங்களின் எண்ணிக்கையாகும். 1941ல் மொத்தம் செயல்பட்டு வந்த நிலக்கரிச் சுரங்கங்கள் 440. 1942-இல் இந்த எண் ணிக்கை 670 ஆகவும், 1943-இல் 706 ஆகவும் அதிகரித்து விட்டது. சாதாரண சூழ்நிலைமைகளில், 1943ல் நிலக்கரிச் சுரங்கங்களின் எண்ணிக்கை வெகுவாக அதிகரித்துவிட்டதைக் கொண்டு பார்க்கும் போது உண்மையில் நமக்குக் கிடைத்ததைவிட அதிக நிலக்கரி நமக்குக் கிடைத்திருக்க வேண்டும். ஆனால் மிகவும் விந்தையான ஒரு நிலைமையை நாங்கள் எதிர்கொள்ள நேரிட்டது; அதாவது ஒருபுறம் 366 நிலக்கரிச் சுரங்கங்கள் அதிகரித்திருக்கும்போது இன் னொருபுறம் நிலக்கரி உற்பத்தி 66,28,000 டன் வீழ்ச்சியடைந்தது.

அடுத்து தொழிலாளர்கள் விஷயத்துக்கு வருவோம். 1941 ஆம் ஆண்டில் நிலக்கரிச் சுரங்கங்களில் வேலை செய்த தொழிலாளர் களின் எண்ணிக்கை 2,11,601 ஆக இருந்தது. 1942ல் இது 2,08,742 ஆக குறைந்தது. 1943 ஆம் ஆண்டிலோ இது மேலும் குறைந்து 2,05,822 ஆக இருந்தது. இக்காலப் பகுதியில் புதிதாகத் தொடங்கப் பட்ட நிலக்கரிச். சுரங்கங்களின் எண்ணிக்கையோடு ஒப்பிடும் போது இங்கும் ஒரு விந்தையான நிலை உருவாகி இருப்பதைக் காண்கிறோம்; அதாவது சுரங்கங்கள் அதிகரித்திருந்த போதிலும் தொழிலாளர்களின் எண்ணிக்கைப் பெருமளவுக்குக் குறைந்துவிட் டதைப் பார்க்கிறோம். இவ்வகையில் மொத்தத்தில் குறைவு 4,879 பேர்களாகும். ஆனால் இத்துடன் கதை முடிந்து விடவில்லை. உண்மையைச் சொன்னால் இது எவ்வளவு கடுமையான சிக்கல் என்பதைப் பலர் உணரவில்லை என்றே கூற வேண்டும். நிலக்கரி வெட்டுபவர்கள் பற்றிய புள்ளிவிவரங்களைக் கூறினால் அவை இதனை நன்கு உணரும் என்று நம்புகிறேன். நிலக்கரியை வெட்டி யெடுப்பவர்கள் 1942க்கு முன்னர் 55,691 பேர் இருந்தனர். இந்த எண்ணிக்கை 1942ல் 51,438 ஆகவும், 1943ல் 45,306 ஆகவும் குறைந் தது; அதாவது 10,385 பேர் குறைந்தனர். நிலக்கரி உற்பத்தித் துறை யில் நிலக்கரி வெட்டுபவர் எவ்வளவு பிரதானமானவர் என்பதை அவையினருக்கு நான் சொல்ல வேண்டியதில்லை. நிலக்கரிச் சுரங் கங்களில் எத்தனை ஆயிரம் பேர் பணியாற்றினாலும் நிலக்கரி வெட்டுபவர்கள் போதிய எண்ணிக்கையில் இல்லையென்றால்

பயனில்லை. இத்துறையில், நிலக்கரி வெட்டுவதுதான் மிக அடிப் படையான, ஆதார சுருதியான நடவடிக்கையாகும். இங்குதான் பிரதான சிக்கலே இருக்கிறது. அதாவது இந்த முக்கியமான தொழி லாளர்களின் எண்ணிக்கை 10,385 அளவுக்குக் குறைந்துவிட்டது.

நிலக்கரி வெட்டும் தொழிலாளர்களின் எண்ணிக்கை இவ் வாறு வீழ்ச்சியடைந்ததற்கான காரணங்களை அவை நன்கு அறியும். நிலக்கரிச் சுரங்கங்கள் அமைந்துள்ள இடங்களில் பல்வேறு தொழில் நிலையங்களைத் தொடங்குவதற்கும், பலதரப்பட்ட ராணுவப் பணி களுக்கும், மாற்று வேலை வாய்ப்புகளுக்கும் மிகச் சாதகமான சூழ் நிலைகள் இருந்தன. மேலும், நிலக்கரித் தொழிலை விட இத் தொழில் நிலையங்களில் வழங்கப்பட்ட ஊதியங்கள் கணிசமான அளவுக்கு அதிகமாக இருந்தன. தவிரவும், மாற்று வேலை வாய்ப் புக்கு இன்னொரு அனுகூலமும் இருந்தது; அதாவது மேற்பரப்பில் வேலை செய்வது சமத்துவ சலுகைகளை உத்தரவாதம் செய்த தோடு, நிலத்துக்கு அடியில் பணியாற்றுவதைவிடப் பலரைக் கவரக் கூடியதாகவும் இருந்தது. நிலக்கரி வெட்டுபவர்கள் சுரங்கங்களைக் கைவிட விரும்பியதற்கு மூன்றாவது ஒரு காரணமும் இருந்தது; அதாவது நிலக்கரி வெட்டும் தொழிலாளிக்கு நிலப்பரப்பில் வேறு வேலை கிடைத்தால் அவன் தன்னுடைய மனைவியையும் தன் னுடன் அழைத்துச் சென்று, அவளையும் ஏதேனும் வேலையில் ஈடுபடச் செய்யலாம்; இதன் மூலம் அவனது குடும்ப வருவாய் பெருகும். இதற்கு மாறாக அவன் நிலக்கரிச் சுரங்கத்தில் வேலை செய்தால், பூமிக்கு அடியில் பெண்கள் பணியாற்றுவதற்குத் தடை யிருப்பதால் அவள் மூலம் கூடுதல் வருவாய் கிடைக்கும் வாய்ப்பு இல்லாது போய்விடும். இதுதான் நிலக்கரிச் சுரங்க வேலையை விட்டு விட்டு மாற்று வேலையைத் தேடும்படி நிலக்கரி வெட்டு பவர்களைப் பெருமளவில் தூண்டியது எனலாம்.

இத்தகைய நிலைமையில், சுரங்கம் வெட்டும் தொழிலாளி யின் மனைவிக்கும் வேலையும் ஊதியமும் கிடைக்க ஏற்பாடு செய்வோமேயானால் அந்தத் தொழிலாளி திரும்பவும் சுரங்கத் துக்கே வந்துவிடுவான் என்பதில் ஐயமில்லை. நிலைமையைச் சமாளிப்பதற்கும் சுரங்கம் வெட்டும் தொழிலாளியை சுரங்கத் துக்குத் திரும்பச் செய்வதற்கும் இதைத் தவிர வேறு வழியில்லை என்பது என் கருத்து. ஊதியங்களை உயர்த்தினால் சுரங்கம் வெட்டும் தொழிலாளிகள் திரும்பவும் வந்துவிடுவார்கள் என்று சிலர் கூற லாம். இது வாதத்துக்குப் பொருந்துமே தவிர நடைமுறையில் உரிய

பலனை அளிக்காது. இங்கிலாந்தில் சுரங்கத் தொழிலாளர்களுக்கு ஏராளமாக ஊதியம் வழங்கப்படுகிறது. இது அங்கு தாராளமாக ஊதியத்தை அள்ளி வாரித்தரும் மிகச் சிறந்த தொழில்துறையாக விளங்குகிறது என்று என்னுடைய நண்பர் திரு. ஜோஷி நேற்று கூறினார். ஆனால் சுரங்கத் தொழிலாளர்களுக்கு அபரிமிதமாக ஊதியம் அளிக்கும் இங்கிலாந்தில்கூட நிலக்கரிச் சுரங்கங்களில் ஆள் பற்றாக்குறை மிகப் பெருமளவில் நிலவுகிறது என்கிற உண்மையை திரு. ஜோஷி மறந்துவிட்டார். ஆதலால் சிலர் கூறுவதுபோல் ஊதிய உயர்வு மட்டுமே இந்தச் சிக்கலைத் தீர்த்துவிடாது, இதற்கு உகந்த பரிகாரமாக இருக்காது என்பது தெள்ளத் தெளிவு. எனவே, இந்த மிக இக்கட்டான, கடுமையான நிலையிலிருந்து மீள்வதற்கு ஒரே வழி நாங்கள் எடுத்துள்ள முடிவேயாகும் என்பது எங்களது துணிபு.

அரசாங்கம் எடுத்துள்ள முடிவுக்கு எதிராக மற்றொரு வாதமும் முன்வைக்கப்படுகிறது. இந்த வாதத்தைப் புறக்கணிக்காமல் அதனை எதிர்கொள்ளவே விரும்புகிறேன்; ஏனென்றால் இந்த வாதத்தில் ஓரளவு வலு இருக்கிறது என்பதை ஒப்புக்கொள்கிறேன். இங்கிலாந்திலும் ஏனைய நாடுகளிலும் நிலக்கரிப் பற்றாக்குறை நிலவினாலும் அங்கு பெண்கள் பூமிக்கு அடியில் வேலை செய்ய அனுமதிக்கப் படுவதில்லை. அப்படியிருக்கும்போது இந்தியாவில் மட்டும் பெண்களைப் பூமிக்கு அடியில் வேலை செய்ய நாம் ஏன் அனுமதிக்க வேண்டும் என்று கேட்கப்படுகிறது. இந்தக் கேள்விக்கான பதில் இரண்டு அம்சங்களைக் கொண்டது. முதலாவதாக, பூமிக்கடியில் பணியாற்ற பெண்கள் அனுமதிக்கப்படாத இங்கிலாந்து போன்ற நாட்டில் சிக்கலுக்குப் பரிகாரம் காண அவர்களுக்கு வேறொரு வழி இருக்கிறது; அதுதான் கட்டாய ஆள்சேர்ப்பு. அங்கெல்லாம் நிலக்கரிச் சுரங்கங்களில் போய் வேலை செய்யும்படி மக்களை அவர்கள் கட்டாயப்படுத்த முடியும், அவ்வாறே கட்டாயப்படுத்தவும் செய்கிறார்கள். அண்மையில் பத்திரிகைகளில் ஒரு செய்தி படித்தேன்; அதாவது 1941ல் ராணுவத்துக்கு ஆளெடுக்கப்பட்டவர்கள் பெல்ஜியம் அரசாங்கத்தால் நிலக்கரிச் சுரங்கங்களுக்கு அனுப்பப்பட்டதாக அந்தச் செய்தி தெரிவித்தது. இத்தகைய அதிகாரம் நமக்கு இல்லையென்பதை இந்த அவை அறியும். எனவே இந்த வழியை நம்மால் பின்பற்ற முடியவில்லை.

ஐயா, இது சம்பந்தமாக நான் அளிக்கும் மற்றொரு பதில் இதுதான்: பிரிட்டனிலும் தென்னாப்பிரிக்காவிலும் ஏனைய நாடுகளிலும் நிலத்துக்கு அடியில் பெண்கள் வேலை செய்யும் பழக்கம்

கடைப்பிடிக்கப்படுவதில்லை. இந்நாடுகளின் பெண்கள் ஒரு சமயம் அநேகமாக 60 அல்லது 70 ஆண்டுகளுக்கு முன்னர் பூமிக்கு அடியில் வேலை செய்தனர். எனவே, இந்த விஷயத்தை எதார்த்தங்கள் கொண்டு பார்க்குமாறு அவையைக் கேட்டுக் கொள்கிறேன். நமது நாட்டில் 1937 வரை பெண்கள் நிலக்கரிச் சுரங்கங்களில் பணியாற்றி வந்திருக்கிறார்கள் என்பது உண்மை இல்லையா? இந்த நாட்டில் எட்டு ஆண்டுகளுக்கு முன்னர் வரை கூட பெண்கள் நிலக்கரிச் சுரங்கங்களில் வேலை செய்து வந்திருக்கிறார்கள் என்பது உண்மை இல்லையா? எங்கள் பெண்கள் நிலத்துக்கடியில் வேலை செய்வதை நூறு ஆண்டுக் காலமாகவே நிறுத்திவிட்டார்கள் என்று பிரிட்டிஷ் மக்கள் கூறுவதைப் போன்று இந்தியாவில் எவரேனும் சொல்ல முடியுமா?

இது சம்பந்தமாக 1934ல் அகில இந்திய மாதர் மாநாட்டின் கருத்து என்னவாக இருந்தது என்பதை இந்த வெட்டுத் தீர்மானத்தைக் கொண்டு வந்திருக்கும் மதிப்பிற்குரிய பெண்மணி மறந்துவிட்டார் என்று நினைக்கிறேன். இந்த விஷயத்தை அவைக்கு விளக்கிக் கூற விரும்புகிறேன். பெண்கள் நிலத்துக்கடியில் வேலை செய்வதை நிறுத்தும் பொருட்டு 1929 ஆம் ஆண்டு முதலே சில நடவடிக்கைகளை அரசு மேற்கொண்டு வந்துள்ளது; இதனைப் படிப்படியாக செய்வதற்கான ஒரு திட்டத்தையும் வகுத்தது; இதன்படி 1937ல் நிலத்துக்கு அடியில் பெண்கள் எவரும் வேலை செய்ய மாட்டார்கள். இத்தகைய ஒரு மரபைக் கடைப்பிடிக்க வேண்டும் என்ற பேச்சு எழுவதற்கு முன்பே இது நடைபெற்றது என்பது இங்கு குறிப்பிடத்தக்கதாகும். இது சம்பந்தமாக அகில இந்திய மாதர் மாநாட்டின் நிலை எத்தகையதாக இருந்தது? 1934 டிசம்பர் 26 ஆம் தேதி நடைபெற்ற அகில இந்திய மாதர் மாநாட்டின் கூட்டத் தொடரில் இந்த விஷயம் பரிசீலிக்கப்பட்டது என்று அறிகிறேன். என்னிடமுள்ள அறிக்கையின்படி..... (திருமதி ரேணுகா ரே குறிக்கிடுகிறார்). தயவுசெய்து என் பேச்சில் குறுக்கிடாதீர்கள். இந்தப் பிரச்சினையை ஆராய்வதற்காக அச்சமயம் அகில இந்திய மாதர் மாநாடு ஒரு குழுவை அமைத்தது. இந்திய அரசாங்கத்தின் நடவடிக்கை குறித்து அகில இந்திய மாதர் மாநாடு என்ன கருத்து கொண்டிருந்தது என்பதைக் கூறும் இரண்டு சுருக்கமான வாக்கியங்களை மட்டும் இங்கு வாசிக்கிறேன். 53 ஆம் பக்கத்திலிருந்து மேற்கோள் காட்டுகிறேன். அரசாங்கத்தின் முடிவின் அனுகூலங்களை அறிக்கை

முதலில் கூறுகிறது, பின்னர் அதன் பிரதிகூலங்களை எடுத்துரைக்கிறது. இப்போது இங்கு இந்த வெட்டுத் தீர்மானத்தைக் கொண்டிருக்கும் பெண்மணி அகில இந்திய மாதர் மாநாடு நியமித்த குழுவில் ஓர் உறுப்பினராக இருந்தார் என்பதை அவையின் கவனத்துக்குக் கொண்டுவர விரும்புகிறேன். அந்த அறிக்கை பின்வருமாறு தொடங்குகிறது:

> ''நிலத்துக்கடியிலான பணியிலிருந்து பெண்களை விலக்குவது சுரங்கத் தொழிலாளர்களின் இன்றைய வாழ்க்கை நிலைமைகளுக்கு மொத்தத்தில் ஏற்புடையதல்ல என்பதே எங்கள் கருத்து.''

பின்னர் அறிக்கை பின்வருமாறு முடிகிறது:

> ''நிலத்துக்கடியில் பெண்கள் வேலை செய்வதிலிருந்து இப்போதைய நிலைமையில் விலக்கப்பட்டால் அவர்களை நிலத்துக்கடியில் பணியாற்ற அனுமதிக்கும் தீமைகளைவிட சுரங்கத் தொழிலாளர்களது குடும்பங்களின் துயரம் மிக அதிகமாக இருக்கும்.''

(திருமதி ரேணுகா ரே குறுக்கீடு.)

**திரு. தலைவர் (திரு. மாண்புமிகு சர் அப்துல் ரஹீம்):** மதிப்பிற்குரிய உறுப்பினர் விட்டுக் கொடுக்க மாட்டார் போல் தெரிகிறது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** 1935ல் நடைபெற்ற கூட்டத்தொடரில் அகில இந்திய மாதர் மாநாட்டால் இந்த விஷயம் பரிசீலிக்கப்பட்டபோது, அச்சமயம் ஏற்கப்பட்ட சர்வதேச நடைமுறை மரபை ஆதரிப்பது என்று அவர்கள் முடிவுக்கு வந்தனர்; இந்திய அரசாங்கம் கடைப்பிடித்துவரும் போக்கு தங்களுக்கு உடன்பாடில்லாத போதிலும் இந்த முடிவை அவர்கள் மேற்கொண்டனர். 1935ல் அகில இந்திய மாதர் மாநாடு எடுத்த இந்த நிலை 1934-ல் அவர்கள் கடைப்பிடித்த நிலையிலிருந்து மாறுபட்டிருந்ததற்கு சர்வதேச நடைமுறை மரபு அங்கீகரிக்கப்பட்டதே காரணமாகும். 1935 ஆம் வருட இந்த சர்வதேச நடைமுறை மரபு ஏற்கப்பட்டிருக்கவில்லை என்றால் நிலக்கரிச் சுரங்கங்களில் பெண்கள் வேலை செய்வதைத் தடுக்கும் இந்திய அரசாங்கத்தின் முடிவுக்கு எதிராக அகில இந்திய மாதர் மாநாடு தொடர்ந்து கிளர்ச்சி செய்திருக்கும் என்பதில் ஐயமில்லை. இந்த விஷயத்தில் அகில இந்திய

மாதர் மாநாடு தனது நிலையை மாற்றிக் கொண்டதற்கு ஏதோ தீய உள்நோக்கம் இருக்கக்கூடும் என்று நான் கூறவில்லை. ஆனால் அதேசமயம் நெருக்கடி நிலைமை மறைந்ததும் ரத்து செய்யப்படக் கூடிய ஒரு நடவடிக்கையைச் சகித்துக் கொள்ள முடியாத அளவுக்கு பத்தாண்டுக் காலத்துக்குள் இந்த நாட்டு மக்களின் தார்மீக, அரசியல் உணர்வுகளில் இத்தகைய ஒரு புரட்சி ஏற்பட முடியும் என்பதை நான் நம்பத் தயாராக இல்லை என்பதைக் கூறிக் கொள்ள விரும்புகிறேன்.

ஐயா, நிலக்கரிச் சுரங்கங்களில் பணிபுரியும் பெண்களின் எண்ணிக்கை அதிகம் போனால் 15,000 தான், அவர்களாலும் கூடுதலாக நிலக்கரியை உற்பத்தி செய்ய முடியவில்லை; அப்படியிருக்கும்போது இந்த 15,000 பெண்களும் பூமிக்கு அடியில் வேலை செய்துதான் ஆக வேண்டும் என்று இந்திய அரசாங்கம் ஏன் பிடிவாதம் பிடிக்கிறது என்று என்னிடம் சிலர் கேட்கிறார்கள். இந்தக் கேள்விக்குப் பதிலளிப்பது அப்படி ஒன்றும் சிரமம் அல்ல. முதலாவதாக...

**திரு. சாமி வெங்கடாசலம் செட்டி:** பொதுமக்களின் கருத்து எத்தகையதாயிருப்பினும் பெண்கள் தொடர்ந்து சுரங்கங்களில் வேலைகளில் ஈடுபடுத்தப்படுவதில் மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் உடும்புப் பிடிவாதமாக இருக்கிறாரா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** மதிப்பிற்குரிய என்னுடைய நண்பர் என்னைப் பற்றி இத்தகைய தவறான, கொடியதான கருத்தைக் கொண்டிருந்தால் அதற்கு நான் என்ன செய்ய முடியும். என்னைப் பற்றி எத்தகைய அபிப்பிராயம் கொண்டிருக்கவும் அவருக்கு உரிமை உண்டு. அதேபோன்று அவரைப் பற்றி நான் என் சொந்த அபிப்பிராயம் கொண்டிருக்க எனக்கும் உரிமை இருக்கிறது.

பெண்களை நாங்கள் ஏன் நிலத்துக்கடியில் வேலை செய்வதில் ஈடுபடுத்துகிறோம் என்று கேட்கப்படுகிறது. இதற்கு மூன்று காரணங்கள் உண்டு. முதலாவதாக, நாங்கள் இப்போதுள்ள நிலைமையில், நிலத்துக்கடியில் வேலை செய்யும் ஒரு பெண்ணை தனித்த முறையில் பிரித்துப் பார்க்க முடியாது. அவள் மேற்கொள்ளும் முடிவால் பல விபரீத விளைவுகள் ஏற்படக்கூடும். அவள் வேலையிலிருந்து நின்று கொண்டால்...

**திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரஹீம்):** மாண்புமிகு உறுப்பினருக்கு ஒதுக்கப்பட்ட நேரம் முடியப் போகிறது.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* நான் 20 நிமிடத்திற்கு மேல் பேசவில்லை.

அவள் நிலக்கரிச் சுரங்கத்தில் வேலை செய்வதிலிருந்து நின்று கொண்டால், நிலக்கரி வெட்டும் தொழிலாளியும் வேலையிலிருந்து நின்று கொள்வான், இதனால் நிலைமை மேலும் மோசமாகும். இது முதல் விளைவாகும். அவள் வேலையிலிருந்து நின்று கொண்டால் நிலக்கரிச் சுரங்கங்களில் வேலைக்கு வராதவர்களின் எண்ணிக்கை அதிகரிக்கும். இது இரண்டாவது விளைவாகும். அடுத்து மூன்றாவது விளைவு என்னவென்றால், தற்போது பெண்கள் செய்துவரும் நிலக்கரியைச் சுமந்து செல்லும் வேலையை நிலக்கரி வெட்டும் தொழிலாளர்களில் சிலர் செய்ய வேண்டிவரும்; இதனால் நிலக்கரி வெட்டும் தொழிலாளர்களின் எண்ணிக்கை மேலும் குறையும். பெண்களால் நிலக்கரியை அதிகம் உற்பத்தி செய்ய முடிவதில்லை என்ற வாதம் சரியல்ல. நான் அவையின் கவனத்துக்குக் கொண்டு வர விரும்புவது...

*மதிப்பிற்குரிய பல உறுப்பினர்கள்:* மாண்புமிகு உறுப்பினருக்கு ஒதுக்கப்பட்ட நேரம் முடிந்துவிட்டது.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* நான் ஏற்கெனவே கூறியது போன்று, முற்றிலும் அவசியமானதற்கும் அதிகமாக ஒரு நிமிடம் கூடப் பெண்களை நிலக்கரிச் சுரங்கங்களில் வேலையில் ஈடுபடுத்தும் உத்தேசம் ஏதும் எங்களுக்கு இல்லை. நிலைமையைச் சமாளிப்பதற்கு நாங்கள் பல்வேறு நடவடிக்கைகள் எடுத்து வருவதை அவை அறியும். நாங்கள் கோரக்பூரிலிருந்து தொழிலாளர்களைத் வரவழைத்திருக்கிறோம்; பல்வேறு எந்திர சாதனங்களை இறக்குமதி செய்திருக்கிறோம்; இதர பல நடவடிக்கைகளையும் எடுத்திருக்கிறோம்.

(இப்போது மணி ஐந்தாகிறது).

*திரு. தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரஹீம்):* வெட்டுத் தீர்மானம் வருமாறு:

> ''தொழிலாளர் நலத்துறை'' என்னும் தலைப்பில் கோரப்பட்டும் மான்யம் நூறு ரூபாயாகக் குறைக்கப்பட வேண்டும்.''

தீர்மானம் ஏற்கப்பட்டது.



# 44

## [1]தொழிலாளர் நலத்துறை

## (துணை மானியக் கோரிக்கை குறித்து)

*மாண்புமிகு சர் ஜெரமி ரெய்ஸ்மான்:*

> *ஐயா ''1945, மார்ச்சு 31 ஆம் நாளில் முடிவடையும் நிதியாண்டில், தொழிலாளர் நலத் துறையில், ஊதியம் வழங்கும் வகையிலான கூடுதல் செலவுகளுக்கான ரூ. 2,40,000க்கு மிகாமல் செலவு செய்ய கவர்னர்-ஜெனரல் தலைமையிலுள்ள நிர்வாக சபைக்குத் துணை மானியம் அனுமதிக்கப்படலாம்''*

*எனும் தீர்மானத்தை அவை முன் வைக்கிறேன்.*

*அவைத் தலைவர் (சையது குலாம் பீக் நைரங்): தீர்மானம் அவைமுன் வைக்கப்படுகிறது.*

★ ★ ★

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்):*

*கடந்த ஆண்டில், இந்திய அரசு நிலக்கரியின் மீது, ''நிலக்கரிச் சுரங்க நலவரி''யாக ஒரு டன் நிலக்கரிக்கு 4 அணா வீதம் வரி விதித்தது என்பதை எனது நண்பர் பேராசிரியர் ரங்கா அறிந்திருப்பார். இதன் மூலம் கிடைக்கும் 'நிலக்கரி நிதி'யை நிருவாகம் செய்வதன் பொருட்டே ''நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர் நல அலுவலர்'' பணியமர்த்தப்பட்டுள்ளார். நிலக்கரிச் சுரங்க நலநிதியின் நிருவாகம் ஒரு குழுவினால் நடத்தப்பட்டு வருகிறது. இக்குழுவில் முதலாளிகளின் சார்பாளர்களும் (நிலக்கரிச் சுரங்கத்) தொழிலாளர்களின் சார்பாளர்களும் பீகார், வங்காளம் ஆகிய மாநில அரசுகளின் சார்பாளர்களும் சம அளவில் இடம்பெற்றுள்ளனர்; தொழிலாளர் நலத் துறை செயலர் குழுவின் தலைமைப் பொறுப்பை வகிக்கிறார்.*

---

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, 27, மார்ச்சு 1945, பக்கங்கள் 2138-41.

குழுவுக்கு ஏறத்தாழத் தன்னாட்சிப் பொறுப்பு தரப்பட்டுள்ளது. அதற்கென, 'நிலக்கரி ஆணையர்' தயாரித்து குழுமுன் வைக்கப் படும் தனியான நிதி ஒதுக்கீடு உண்டு. இந்நிதியைச் செலவிடுவதன் செயற்பொறுப்பும் நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர் நல ஆணைய ரிடமே தரப்பட்டுள்ளது. மலேரியா, நீர் வழங்கல், மருத்துவம் போன்ற சுரங்கத் தொழிலாளர் நலப்பிரச்சினைகள் அனைத்தை யும் இக்குழு கவனித்து வருகிறது.

பண்டித லட்சுமி காந்த மைத்ரா: இக்குழுவின் மீது தாங்கள் ஏதேனும் கட்டுப்பாடு செலுத்தி வருகிறீர்களா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஆம், தொழி லாளர் துறைச் செயலரே குழுவின் தலைவர் என்பதால் குழு என் கட்டுப்பாட்டில் வருகிறது. அதன் நிதிநிலையும் எமது பரிசீலனைக்கு வருகிறது. அது நிறைவேற்றியனுப்பப்பட்ட பின்னரும், திருத்தங் கள் தேவையெனில் மறு பரிசீலனைக் குழுவிடமே அனுப்பி வைக்கப் படுகிறது.

ஒவ்வொரு மாநில அரசிலும் தொழிலாளர் நல ஆணையர் கள் உள்ளனர் என்பதையும் எனது நண்பர் பேராசிரியர் ரங்கா அறிவார். அவர்களின் கீழ் நல்லிணக்க அலுவலர்களும் மேலும் பிற அலுவலர்களும் பணியாற்றுகின்றனர். மாநில அரசுகளன்றி மைய அரசின் கீழும் சில நிறுவனங்கள் இயங்கி வருவதால், அங்கு பணி யாற்றும் சுரங்கத் தொழிலாளர்களின் நலனைப் பேணும் பொறுப்பை இந்திய அரசு ஏற்க வேண்டுமென்று கருதியதால் அண்மையில் இக்குழு நிறுவப்பட்டுள்ளது. இந்நிறுவனம் முதன்மைத் தொழிலாளர் நல ஆணையர் எனப்படும் இந்திய அரசு அலுவலரின் தலைமை யில் இயங்கி வருகிறது. இந்தியாவின் பிற மாநிலங்கள் மூன்று பகுதி களாகப் பிரிக்கப்பட்டு ஒவ்வொரு பகுதிக்கும் துணைத் தொழி லாளர் நல ஆணையர் ஒருவர் நியமிக்கப்பட்டுள்ளார். மைய (நிலக்கரி) நிறுவனங்களுடன், இருப்புப் பாதைத் துறை நல்லிணக்க அலுவலர், இருப்புப்பாதைத் தொழிலாளர் நல மேற்பார்வையாளர் ஆகியோரின் பணிகள் ஒருங்கிணைக்கப்பட்டு மையமயமாக்கப் பட்டுள்ளன என்பதையும் பேராசிரியர் ரங்காவுக்குத் தெரிவிக்க விரும்புகிறேன். இந்திய அரசின் கீழ் நேரடியாகப் பணியாற்றி வந்த தொழிலாளர் நல அலுவலர்கள், இனி, அந்தந்தப் பகுதிகளுக்கான தொழிலாளர் நல ஆணையர்களின் கீழ் பணியாற்றுவர். அவ்வாறே, இருப்புப்பாதைத் துறையில், ஊதியச் சட்டம், வேலைநேர சட்டம்

ஆகியவற்றின் செயல்பாட்டைக் கண்காணித்து வந்த ஆய்வாளர்களும், இருப்புப்பாதை நல்லிணக்க அலுவலர் கீழ் தனியே செயல்படும் நிலைக்கு மாறாகப் புதிய திட்டத்தின் கீழ் கொண்டு வரப்பட்டு, நிறுவன அமைப்பு வலுவாக்கப்பட்டுள்ளது.

தொழிலாளர் நல ஆய்வுக்குழுவைப் பொறுத்தமட்டில், கடந்த 1943 ஆம் ஆண்டில் நடைபெற்ற தொழிலாளர் நல முத்தரப்பு மாநாட்டில், ''இந்திய அரசு, பெவரிட்ஜ் அறிக்கையின் அடிப்படையில், தொழிலாளர்களுக்கான சமுதாயப் பாதுகாப்பு நடவடிக்கைகளை எடுக்க வேண்டும்'' என்ற தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. இத்தகு நடவடிக்கைகளை யெடுக்குமுன்னர், தொழிலாளர்களின் நலன் சார்ந்த குடியிருப்பு, ஊதியம், சுற்றுப்புறத் தூய்மை முதலானவற்றின் தற்போதைய நிலைமைகளை ஆய்வு செய்ய, உண்மையறி குழு ஒன்று நிறுவப்பட்டு, குழு கண்டறியும் உண்மை நிலைகளின் அடிப்படையில் தொழிலாளர் நல மேம்பாட்டுத் திட்டங்களை வகுப்பதற்கான மற்றொரு குழுவை நியமித்தல் உகந்ததென்றும் முடிவு செய்யப்பட்டது. இவ்வாய்வுக்குழு கடந்த ஆறேழு மாதங்களாகச் செயல்பட்டு வருகிறது; குழுவின் அறிக்கை அடுத்த ஜூன்/ஜூலைக்குள் கிடைக்குமென்று எதிர்பார்க்கப்படுகிறது. அறிக்கை கிடைத்தவுடன், முத்தரப்பு மாநாட்டின் முடிவுப்படி, இரண்டாவது கட்ட ஆய்வுக்குழுவின் முன் அறிக்கை வைக்கப்படும். இரண்டாம் கட்ட ஆய்வுக்குழுவில், தொழிலாளர்கள், தொழிலதிபர்கள், மாகாண அரசுகள் ஆகிய தரப்பினரின் சார்பாளர்கள் இடம்பெறுவர்.

பயிற்சி பெறாத தொழிலாளர்களைப் பொறுத்தமட்டில், பற்றாக்குறை காரணமாக ஒப்பந்தக்காரர்களே ஒருவரோடொருவர் போட்டி போட்டுக் கொண்டு, நிர்ணயித்த ஊதியத்தை விடக் கூடுதலாகவே அளித்து ஈர்க்கும் போட்டிநிலைதான் நிலவுகிறது. இதன் விளைவாகச் சில துறைகளில் கூலித் தொழிலாளர்கள் கிடைக்கும் நிலையும் பிற பகுதிகளில் தொழிலாளர் பற்றாக்குறையும் நிலவிவரக் காண்கிறோம். குறிப்பாகப் போர்ப்படைப் பணிகளுக்குக் கூலியாட்கள் கிடைப்பது மிக அரிதாகவேயிருக்கிறது. எனவே பயிற்சி பெற்ற சாதாரண கூலியாட்களின் பணி பல்வேறு துறைகளுக்கும் பங்கீடு செய்யப்படுதல் அவசியமென இந்திய அரசு முடிவு செய்து, முதல் கட்டமாக ''பயிற்சி பெறாத கூலியாட்கள் வழங்கல் குழு'' எனும் குழுவினை நியமித்துள்ளது. ஒப்பந்தக்காரர்கள் ஒவ்வொருவரும், தமது பணிகள் நடைபெறும் இடம் தவிரப் பிற பகுதிகளிலிருந்து தமக்கு எவ்வளவு கூலியாட்கள் தேவையென்பதைக் குறித்து

''வழங்கல் குழு''விடம் விண்ணப்பிக்க வேண்டும்; வழங்கல் குழுவின் சான்றிதழ் பெற்றே பிற பகுதிகளிலிருந்து கூலியாட்களை வேலையமர்த்த இயலும். பல்வேறு இடங்களில் கூலியாள் வழங்கு நிலையங்கள் நிறுவப்பட்டுள்ளன. இந்நிலையங்கள் ஒவ்வொன்றின் பணிகளையும் நிருவகிக்கும் தலைமைப் பொறுப்பு ஒரு ஒப்பந்தக்காரருக்குத் தரப்பட்டுள்ளது. தற்போதைக்கு, எனது நண்பருக்கு இத்திட்டத்தைப் பற்றிய விவரங்கள் இவ்வளவே தர இயலுகிறது. அவருக்கு இதில் மேலும் தெரிந்து கொள்ள ஆர்வமிருப்பின், குறுகிய கால அறிவிப்பினை ஒன்றை எழுப்புவாரெனில், கூடுதல் விபரங்களைத் திரட்டியனுப்பத் தயாராக உள்ளேன்.

திருமதி கே. இராதா பாய் சுப்பராயன் (மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி மாவட்டங்களின், முகமதியரல்லாக் கிராமிய மக்கள் சார்பாளர்):

ஐயா, பேராசிரியர் ரங்காவும், அவரது கட்சியினரும், கேட்ட வினாக்களுக்கு நீண்ட அறிக்கையாக விடையளித்த நமது மாண்புமிகு நண்பருக்கு முதலில் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். ஆனால், அவரது அறிக்கையில் மிக முக்கியமான வினாவொன்றுக்கான விடை இடம்பெறவில்லை; அஃதாவது, நிலத்தடிச் சுரங்கப் பணிகளில் பெண் தொழிலாளர்களை ஈடுபடுத்தல் மீதான தடையை, நிலக்கரி ஆணையர் மீண்டும் விதிப்பாரா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அஃது, அவரது பணியல்லவென்பது உறுதி.

திருமதி கே. இராதாபாய் சுப்பராயன்: நிலத்தடிச் சுரங்கங்களின் இன்றைய நிலையைக் கருத்தில் கொண்டு, இனியும் அத்தகைய பணிகளில் பெண்களை ஈடுபடுத்தலாமா என்பது குறித்தும், சுரங்க நிலைமைகள் பெண்களின் உடல் நலத்துக்கு ஊறுவிளைவிக்குமா என்பதையும், ஆணையரோ, குழுவோ ஆய்ந்து நோக்குவார்களா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இஃது அவர்களது பணியில் தொடர்புடைய பொருள் அன்று.

திரு. அப்துல் கையூம்: அவ்வாறாயின், அவர்களால் என்ன பயன்?

*திரு. என்.எம். ஜோஷி (அலுவல்சாரா நியமன உறுப்பினர்):* என் கருத்தில் தோன்றுவதென்னவென்றால், குழு நியமிக்கப் பட்டுச் செயல்படத் தொடங்கியபின், நிலத்தடித் சுரங்கங்களில் பெண்களைப் பணியமர்த்தல் குறித்த சிக்கல்களைப் பற்றிய விவ ரங்களைத் திரட்டி ஆய்வு செய்யும்...

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* திருமதி இராதாபாய் சுப்பராயன் அவர்கள் நிலக்கரி ஆணையர் பணி களைப் பற்றியே குறிப்பிட்டாரென நினைக்கிறேன்.

*திருமதி கே. இராதாபாய் சுப்பராயன்:* நண்பர் குறிப்பிட்ட வாறு, குழுவைப் பற்றி தான் எனது வினாவை எழுப்பினேன்.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* ஆம், அவர் களும் (குழுவும்) இப்பணியில் ஈடுபடலாம்.

*திரு. என்.எம். ஜோஷி:* எல்லாச் சிக்கல்களையும் குறித்து குழு ஆய்வு செய்ய வேண்டுமென்பதே எனது கருத்து.

*மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர்:* நிலக்கரி ஆணையாளரைப் பற்றி மட்டுமே அம்மையார் குறிப்பிட்டாரெனக் கருதினேன்.

*திரு. என்.எம். ஜோஷி:* நிலத்தடிச் சுரங்கங்களில் பெண் களைப் பணியமர்த்தல் மீதான தடையை நீக்குதல் உள்ளிட்ட, சுரங்கத் தொழிலாளர் சிக்கல்கள் அனைத்தும் கருதப்பட வேண்டும். எனவே, தேவையான நிதிக் கோரிக்கையை அனுமதித்துத் தீர்மானம் நிறைவேற்றலாம்.

*அவைத்தலைவர் (சையது குலாம் பீக் நைரங்):*

(அவை முன்வைக்கப்படும்) தீர்மானமாவது:

''1945, மார்ச்சு 31இல் முடியும் நிதியாண்டில், ஊதியம் வழங்குதற் பொருட்டுத் தேவைப்படும் செலவுகளுக்காக, தொழிலாளர் நலத்துறைக்கு ரூ. 2,40,000க்கு மிகாமல் துணை மானியமாக அனுமதிக்கலாம்.''

அவை தீர்மானத்தை நிறைவேற்றியது.



# 45

## [1]சுரங்கத் தொழிலாளர் மகப்பேறு நல உதவி (திருத்த) மசோதா

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்):

துணைத் தலைவர் அவர்களே,

''1941 ஆம் ஆண்டின் சுரங்கத் தொழிலாளர் மகப்பேறு நல உதவிச் சட்டத்தில் மேற்கொள்ளப்பட வேண்டிய திருத்தங்கள் குறித்து ஆய்வு செய்ய, திரு. எம். அனந்தசயனம் ஐயங்கார், பேராசிரியர் என்.ஜி. ரங்கா, திரு. கே.பி. ஜீனராஜ ஹெக்டே, மௌலானா ஜாபர் அலி கான், சர் சையது ராசா அலி, திரு. அமரேந்திர நாத் சடோபாத்தியாயா, திரு. என்.எம். ஜோஷி, ராவ்பகதூர் என். சிவராஜ், திரு. எச்.ஜி. ஸ்டோக்ஸ், திரு. எஸ்.சி. ஜோஷி ஆகியோருடன் என்னையும் சேர்த்த தெரிவுக்குழு அமைக்கப்படலாம் என்றும், குழு 1945, ஏப்ரல் 2, திங்கள் கிழமை யன்று அறிக்கை தரவேண்டுமென்று கோரப்படலா மென்றும், குழுவின் கூட்டச் செயல்பாடுகளுக்குக் குறைந்தது ஐந்து உறுப்பினர்கள் தேவையென்றும்''

தீர்மானத்தை முன்வைக்கிறேன்.

திரு. பத்ரி தத் பாண்டே (ரோஹில்கண்டு, குமான் பகுதி களுக்கான, முகமதியரல்லா கிராமப்புறச் சார்பாளர்): (தெரிவுக் குழுவில்) பெண் உறுப்பினர் சேர்க்கப்படாதது ஏன்?

திரு. டி.எஸ். அவினாசிலிங்கம் செட்டியார் (சேலம், கோவை, வடஆற்காடு மாவட்டங்களின் முகமதியரல்லா கிராமப்புறச் சார் பாளர்):

திருமதி சுப்பராயன் சேர்க்கப்படலாம்.

---

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, 1945, மார்ச்சு 29, அ.ப. 2265-66.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* தீர்மானம் எடுத்துக் கொள்ளப்பட்டபின், பிந்தையதோர் கட்டத்தில் திருத்தங்களை மதிப்பிற்குரிய என் நண்பர் முன்மொழியலாம். திருத்தத்தை அப்போது பரிசீலிக்கிறேன். சுரங்கத் தொழிலாளர் மகப்பேறு நல உதவிச் சட்டம் 1941 ஆம் ஆண்டிலேயே நிறைவேற்றப்பட்டுள்ள தென்பதை அவையோர் அறிவர். இச்சட்டத்தைத் திருத்துவதற் காகவே இந்த மசோதா தாக்கல் செய்யப்படுகிறது. திருத்தத்தின் தேவை குறித்துச் சுருக்கமாக எடுத்துரைக்க முனைகிறேன்.

1941 ஆம் ஆண்டில் இச்சட்டம் இயற்றப்பட்டபோது நிலத் தின் மேற்பரப்பில் பணியாற்றும் பெண் தொழிலாளர்களின் மகப் பேறு நலம் பேணும் நோக்கமே கருத்தில் இருந்தது. ஆனால், நான் இவ் அவையில் ஏற்கெனவே பலமுறை விளக்கியுள்ளவாறு, நிலத் தடிச் சுரங்கங்களிலும் பெண் தொழிலாளர்களைப் பணியமர்த்த வேண்டிய, நெருக்கடியான சூழல் உருவாகியுள்ளது. இந்த நிலைமை தற்காலிகமானதேயென்றும், நிலத்தடிச் சுரங்கங்களில் பெண் தொழி லாளர்களைப் பணியமர்த்தல் மீண்டும் விரைவில் தடை செய்யப் படுமென்றும் நம்புகிறேன். தடை மீண்டும் விதிக்கப்பட வேண்டு மென்று அவையிலும், வெளியிலும் வன்மையான கருத்துகள் தெரி விக்கப்பட்டு வருகின்றன. இருப்பினும், தடைவிதிக்கப்படும் வரை யிலான இடைக்காலத்தில், நிலத்தடிச் சுரங்கப் பெண் தொழிலாளர் கள் கருவுற்றால் அவர்களுக்கும் நல உதவிச் சலுகைகள் தருவ தற்கு வழிகோலவே சட்டத்திருத்தம் தேவைப்படுகிறது.

இம்மசோதாவின் முக்கியக் கூறுகள் இரண்டு. தற்போதுள்ள சட்டத்தில், பெண் தொழிலாளர்கள், பிரசவத்திற்குப் பின்னர் 4 வாரங் கள் பணிக்கு வருதல் தடை செய்யப்பட்டுள்ளது. பிரசவத்திற்கு முன்னரும் 10 வாரங்களுக்கு நிலத்தடிச் சுரங்கங்களில் பணியாற்று வதை இத்திருத்தத்தின் மூலம் தடைசெய்ய முனைகிறோம். இரண் டாவதாக, தடை செய்யப்படும் காலத்தில் அதாவது பிரசவத்திற்கு முன்னர் 10 வாரமும் பின்னர் 4 வாரமுமாகப் 14 வாரங்களுக்கு, நாள் ஒன்றுக்கு 12 அணா (ரூ. 0.75) வீதம் உதவித் தொகை வழங்கவும் சட்டத்திருத்தம் முன்மொழிகிறது. முந்தைய 6 மாத காலத்தில், குறைந்தது 90 நாட்கள் நிலத்தடிச் சுரங்கங்களில் பணிபுரிந்திருக்க வேண்டும் என்பதே இச்சலுகைகளைப் பெறுதற்கான தகுதியாகும். இவையே சட்டத்திருத்த மசோதாவின் முக்கியக் கூறுகள்.

ஐயா, மசோதாவுக்குத் திருத்தங்கள் சில தரப்பட்டுள்ளன

என்பதை நோக்குகிறேன். அரசின் சார்பில் நானும் சில திருத்தங்களை முன்மொழிய விரும்புகிறேன். ஆனால், சட்டத்திருத்தம் விரைந்து நிறைவேற்றப்பட வேண்டுமென்னும் அவசரத் தேவையையும், அதற்குக் குறுகிய கால அவகாசமேயுள்ளது எனும் நிலைமையையும் கருத்தில் கொண்டால், இத்திருத்தங்களை உடனடியாகத் தெரிவுக் குழுவுக்கு அனுப்புவதே அனைவர் நலன்களுக்கும் உகந்ததென்று கருதுகிறேன். நான் முன்மொழியவிருக்கும் திருத்தங்களுடன் ஏனைய திருத்தங்கள் அனைத்தையும் விரிவாக ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுக்கும் முறையில் கலந்துபேசி நல்லிணக்க முடிவுக்கு வர இயலும். மசோதா தெரிவிக்குழுவுக்கு அனுப்பப்படவுள்ளது என்பதாலேயே (அனுப்ப வேண்டுமென்று நான் முதலில் கருதவில்லை) இதைப்பற்றி மேலும் விளக்கமாக உரைப்பதை நான் தற்போது தவிர்த்து விட்டேன். எனவே இத்துடன் இம் மசோதாவை நான் தாக்கல் செய்கிறேன்.

★ ★ ★

[1]மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஐயா, விவாதத்தில் கலந்து கொண்ட மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் தெரிவித்த கருத்துக்களுக்கு, நான் விரிவாகப் பதிலளிக்க வேண்டியதில்லையென்று கருதுகிறேன். குறிப்பாக ஒன்றை மட்டும் தெரிவிக்க விரும்புகிறேன்; பேசிய உறுப்பினர்கள் அனைவருமே, பெண் தொழிலாளர்களை நிலத்தடிச் சுரங்கங்களில் பணிபுரிய அனுமதிக்கலாமா என்ற சிக்கலையும் அவ்வாறு பணிபுரியும் பெண்களுக்கு இச்சட்டத் திருத்தத்தின் மூலம் அரசு அளிக்க விரும்பும் சலுகைகளையும் ஒன்றோடொன்று கலந்து குழப்பாமல் தனித்தனிச் சிக்கல்களாக உணர்ந்து பேசிய நல்லுணர்வுக்கு எனது பாராட்டையும் நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறேன்; விவாதத்தின் போக்கு குறித்து மகிழ்ச்சியையும் அடைகிறேன். நிலத்தடிச் சுரங்கங்களில் பெண் தொழிலாளர்கள் பணிபுரிய அனுமதிக்கலாமா என்பது பற்றிய தத்தம் கருத்துக்களையும் பேசிய உறுப்பினர்கள் தெளிவாகவே எடுத்துரைத்தனர். இது பற்றிய அரசின் கருத்தும் ஏற்கெனவே தெரிவிக்கப்பட்டுள்ளது. அரசின் கருத்திலிருந்து மாறுபடுபவர்களுடன் எனக்கு எவ்விதப் பூசலும் கிடையாது; ஆனால் திருத்த மசோதாவின் தேவையை அனைவருமே உணர்ந்து பேசினார்கள் என்பதில் மனநிறைவு கொள்வதுடன், அவை தொடர்ந்து இதே போன்ற ஒத்துழைப்பை வருங்காலத்

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, 1945, மார்ச்சு 29, அ.ப. 2270.

திலும் நல்கும் என்ற எனது நம்பிக்கையையும் தெரிவித்துக் கொள் கிறேன்.

*அவை துணைத் தலைவர்* (திரு. அகில் சந்திர தத்தா): அவை முன் பின்வரும் தீர்மானம் வைக்கப்படுகிறது:

''1941 ஆம் ஆண்டின் சுரங்கத் தொழிலாளர் பேறுகால நல உதவிச் சட்டத்தின் மீதான திருத்த மசோதாவை, திரு. அனந்த சயனம் ஐயங்கார், பேராசிரியர் என்.ஜி. ரங்கா, திரு. கே.பி. ஜீனராஜ ஹெக்டே, மௌலானா ஜாபர் அலி கான், சர் சையது ராசா அலி, திரு. அமரேந்திரநாத் சட்டோபாத்தியாயா, திரு. என்.எம். ஜோஷி, இராவ்பகதூர் என். சிவராஜ், திரு. எச்.ஜி. ஸ்டோக்ஸ், திரு. எஸ்.சி. ஜோஷி மற்றும் தீர்மானம் தாக்கல் செய்யுநர் (அம்பேத்கர்) ஆகியோர் கொண்ட தெரிவிக்குழு வுக்கு அனுப்பி, குழுவின் முடிபு 1945, ஏப்ரல் 2 ஆம் நாளான திங்கட்கிழமையன்று அவைக்குத் தெரிவிக்குமாறு கோரு வதுடன், குழுவின் கூட்டம் நடைபெறக் குறைந்தது ஐந்து உறுப்பினர்கள் தேவை எனவும் தெரிவிக்கப்படுகிறது.''

அவை தீர்மானத்தை ஏற்று நிறைவேற்றியது.



# 46

## [1]தொழிற்சாலைகள் (இரண்டாவது திருத்த) மசோதா

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்):*

*ஐயா,*

*''1934 ஆம் ஆண்டின் தொழிற்சாலைகள் சட்டத்தின் மீதான திருத்தங்கள் குறித்த மசோதாவை, தெரிவுக்குழு பரிந்துரைத்துள்ள வடிவில் அவையின் ஒப்புதலுக்கு எடுத்துக் கொள்ளலாம்''*

*என முன்மொழிகிறேன்.*

தெரிவுக்குழுவின் அறிக்கை நீண்டகாலமாகவே பேரவையின் கவனத்திற்கு வைக்கப்பட்டுள்ளது. ஆர்வமுள்ள மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் தெரிவுக்குழு என்ன கூறுகிறது என்பதைப் படித்துத் தெளிந்து கொண்டிருப்பார்கள் என்பதில் ஐயமில்லை. எனவே, என்னால் தாக்கல் செய்யப்பட்ட திருத்த மசோதாவில் தெரிவுக்குழு செய்துள்ள மாற்றங்களைப் பற்றி மட்டும் சுட்டிக்காட்டி அமைய விரும்புகிறேன். தெரிவுக்குழு முக்கியமான ஐந்து அடிப்படை மாற்றங்களைச் செய்துள்ளது. முதலாவது திருத்தம், மூலச்சட்டத்தில் வரையறுக்கப்பட்டுள்ளவாறு தொழிலாளர்களின் 'ஊதியத்தோடு விடுப்பு' உரிமையைப் பாதுகாக்க முற்படுவதுடன், சட்டம் வரையறுத்ததற்கும் கூடுதலாக, வேறு சட்டங்கள், ஒப்பந்தங்கள் வாயிலாய்க் கிடைக்கும் விடுப்பு உரிமைகளையும் பாதுகாக்க முனைகிறது. மூலச்சட்டத்தில் இல்லாத இந்தப் புதிய உரிமை திருத்தத்தின்படி பிரிவு 49-அ-இன் இரண்டாவது துணை விதியாகத் தாக்கல் செய்யப்படுகிறது. தெரிவுக்குழு பரிந்துரைக்கும் இரண்டாவது திருத்தம் இவ்விடுமுறை உரிமைகள் குழந்தைத் தொழிலாளர்

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, 1945, மார்ச்சு 29, பக்கங்கள் 2270-71.

களுக்கும் வழங்கப்பட வேண்டும் என்பதேயாகும். அவையில் தாக்கல் செய்யப்பட்ட மூல மசோதாவில் இக்கருத்து இடம்பெற வில்லை. குழந்தைகளுக்கு விடுமுறைச் சலுகைகளை நீட்டித்தல் மட்டுமன்றி, மொத்த விடுமுறை நாட்களின் எண்ணிக்கையையே கூடுதலாக்கவும் குழு பரிந்துரைத்துள்ளது. தொழிலாளர்களுக்கான விடுமுறை நாட்களின் எண்ணிக்கை 7தான்; ஆனால் குழந்தைத் தொழி லாளர்களுக்கான விடுமுறை நாட்களின் எண்ணிக்கை 14 ஆகப் பரிந் துரைக்கப்பட்டுள்ளது. இத்திருத்தத்தை மதிப்பிற்குரிய உறுப்பினர் கள் மசோதா பிரிவு 49-ஆ-இல் காணலாம். ஐயன்மீர், மசோதா தாக்கல் செய்யப்பட்ட போழ்தில், விடுமுறை உரிமை ஏதும் ஈட்டு தற்கு முன்னதாகவே, பணிநீக்கம் செய்யப்பட்ட, பணியினின்று விலகிய தொழிலாளர்களுக்கான விடுப்பு உரிமைகள் பற்றிய விதி கள் ஏதும் இடம்பெறவில்லையென்பதை அவையோர் நினைவு கூர வேண்டுகிறேன். இதுகுறித்து நல்லதென நாம் அனைவரும் கருதும் முடிவினைப் பின்னர் பார்த்துக் கொள்ளலாமெனவும் கூறி யிருந்தேன். தெரிவுக்குழுவோ, முக்கியமான இந்த விவகாரம் குறித்து இப்போதே விதிமுறை உருவாக்க வேண்டுமென்று கருதியதால், அதற்கான புதிய விதிமுறையும் மசோதாவில் சேர்க்கப்பட்டுள்ளது.

மசோதாவில் சேர்க்கப்படும் மற்றொரு முக்கியமான திருத்தம், தனக்கு உரித்தான விடுமுறையைப் பெறவோ, அவ்விடுமுறை நாளுக் கெனத் தனக்கு உரித்தான ஊதியத்தைப் பெறவோ இயலாத தொழி லாளர்களின் சார்பில், தொழிற்சாலை ஆய்வாளரே செயல்படுவ தற்கு வழிவகை செய்கிறது. தொழிலாளர்களுக்குச் சட்டம் வழங்கும் உரிமைகளைத் தர மறுக்கும் முதலாளிகளிடம், தொழிலாளியே உரிமையியல், குற்றவியல் வழக்குகள் வழித் தன்னால் இயன்ற வரை போராடி நிலைநாட்டிக் கொள்ளட்டுமென விட்டுவிடுதல் முறையாகாது எனத் தெரிவுக்குழு உணர்ந்துள்ளது. எனவே, இவ் வுரிமைகளைத் தொழிலாளர்களுக்குக் கிடைக்கச் செய்யும் பொறுப் பினை நிறைவேற்றுவது அரசின் கடமையாகிறது. தொழிலாளர் சார்பில் செயல்படத் தொழிற்சாலை ஆய்வாளருக்கு அதிகாரம் வழங்குவதன் மூலம், இவ்வுரிமைகள் தொழிலாளர்களுக்குக் கிடைப் பதனை உறுதி செய்யலாம்.

தெரிவுக்குழு பரிந்துரைத்துள்ள ஐந்தாவது முக்கியத் திருத்தம், விதிமுறைகளின் உருவாக்கம் பற்றியதாகும். இச்சட்டத்தின்கீழ்

தேவையான கிளை விதிகளை உருவாக்கும் அதிகாரம், மூல மசோதா வில், மாநில அரசுகளுக்கு விடப்பட்டிருந்தது என்பதை மதிப்பிற் குரிய உறுப்பினர்கள் நினைவு கூர வேண்டுகிறேன். ஆனால் தெரிவுக் குழுவோ, இந்த அதிகாரம் மாநில அரசுகளுக்கு வழங்கப்பட்டால் ஒரே சட்டத்தின்கீழ் வெவ்வேறு மாகாணங்களில் வெவ்வேறு விதி முறைகள் இயற்றப்படும் குழப்ப நிலை தோன்றலாமென்று கருது கிறது. போட்டி போட்டுக் கொண்டு தொழிற்சாலைகள் முன்னேறி வரும் சூழலில், ஒரே தொழில் துறையில் வெவ்வேறு மாநிலங் களில் வெவ்வேறு மாறுபட்ட விதிமுறைகள் வகுக்கப்படும் விரும்பத் தகாத நிலை உருவாகுமெனில் நாட்டின் ஒட்டுமொத்த வளர்ச் சிக்கு ஊறுவிளையும் என்பது உறுதி. எனவே, இச்சட்டத்தின் கீழ் விதிமுறைகளை உருவாக்கும் அதிகாரம் மைய அரசிடம் இருந்தால் தான் நாடு முழுவதும் சீரான விதிமுறைகளை உருவாக்க ஏதுவாகு மெனத் தெரிவுக்குழு கருதுகின்றது. தெரிவுக்குழுவின் விரிவான விவாதங்களுக்குப் பின்னர் முடிவு செய்யப்பட்ட அடிப்படையான திருத்தங்கள் இவையே. மசோதாவின் ஏனைய பகுதிகள் தொடக்கத் தில் தாக்கல் செய்யப்பட்டவாறே விடப்பட்டுள்ளனவென்பதால் அவை பற்றி ஏதும் கூற வேண்டுவதில்லை எனத் தெரிவித்துக் கொண்டு, மசோதாவைத் தாக்கல் செய்கிறேன்.

*அவைத் துணைத் தலைவர் (திரு. அகில் சந்திர தத்தா):*

''1934 ஆம் ஆண்டின் தொழிற்சாலைச் சட்டத்தில், தெரிவுக் குழுவின் அறிக்கையின்படி மேலும் திருத்தம் செய்யலாம்'' எனும் மசோதா அவை யில் தாக்கல் செய்யப்படுகிறது.

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தீர்மானத்தின்மீது பேசிய மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் தெரிவித்த கருத்துக்கள் ஒவ் வொன்றுக்கும் நான் தனித்தனியே பதில் கூறவேண்டியது அவசிய மென்று கருதவில்லை; ஏனெனில் மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் தெரிவித்த கருத்துக்கள் அனைத்தையும் உள்ளடக்கியதாகத் திருத்த மசோதா அமைந்துள்ளது. எனவே, இவற்றிற்கு நான் பதில் கூற முற்பட்டால், முழு விவாதத்தையும் நானே மீண்டும் நடத்தியது

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, 1945, மார்ச்சு 29, பக்கம் 2276.

போன்று அமைந்துவிடும். எனவே, எனது கருத்துக்களை ஒவ்வொரு திருத்தமும் முன்மொழியும்போது எடுத்துரைப்பேன்.

★ ★ ★

[1]*மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர்:* ஐயா, பேராசிரியர் ரங்காவோ, திரு. ஜோஷியோ முன்மொழியும் திருத்தங்கள் எதனையும் என்னால் ஏற்றுக் கொள்ள இயலாதென அஞ்சுகிறேன். ஒரு தொழிலாளி அவரது விடுமுறை உரிமைகளைப் பெறுவதற்கான தகுதி அவர் குறிப்பிட்ட அளவு காலம் பணியாற்றியுள்ளாரா என்பதேயன்றி, அப்பணியை அவர் ஒரு முதலாளியிடம் ஆற்றினாரா?, அல்லது பல முதலாளிகளிடம் ஆற்றினாரா என்பதல்ல என்பதை நான் ஏற்றுக் கொள்கிறேன். ஆனால் செயல்பாட்டில் இரண்டு கூறுகளை நாம் கருத்தில் கொள்ள வேண்டியுள்ளது. முதலாவது நிருவாகச் சிக்கல். முதலாளிகளின் நிதிப் பங்களிப்புடன் இணைந்ததொரு காப்பீட்டுத் திட்டம் நடைமுறைக்கு வந்தாலன்றி விதிகளை நடைமுறையில் செயல்படுத்தல் இயலாதென நன்குணர்கிறேன். எடுத்துக்காட்டாக, உடல்நலக் காப்பீட்டுத் திட்டமொன்று நடைமுறையில் இருந்து, அடையாள அட்டைகளும், முத்திரை வில்லைகள் போன்ற காப் பீட்டு நிருவாகக் கருவிகளும் பயன்பாட்டுக்குக் கொண்டு வரப் பட்டால், நண்பர்கள் சுட்டியது போன்ற திருத்தங்களை எளிதில் செய லாக்க முடியும். ஆனால் இன்றைய நடைமுறை நிலைமையில் இத் திருத்தத்தை ஏற்கவியலாமைக்கு வருந்துகிறேன்.

இந்த மசோதா அமலுக்கு வருவதற்கு உறுதியான தேதி யொன்றை நாம் முடிவு செய்ய வேண்டுமென்பது பேரவையின், தெரிவுக்குழுவின் அவா என்பதையும் ஈண்டு தெரிவித்துக் கொள் கிறேன். மூல மசோதாவில், திருத்தங்கள் அமலுக்கு வரவேண்டிய தேதி, மாநில அரசுகளின் முடிவுக்கு விடப்பட்டிருந்தது என்பதை மதிப்பிற்குரிய நண்பர்களுக்கு நினைவூட்ட விரும்புகிறேன். ஆனால் பின்னர் நாம் அந்த நிலைப்பாட்டிலிருந்து மாறி, திருத்தம் செயல் பாட்டுக்கு வரவேண்டிய தேதியையும் இந்த அவையிலேயே முடிவு செய்ய வேண்டும் என்ற கருத்துக்கு வந்து, 1946 ஆம் ஆண்டு, ஜனவரி முதல் தேதியையே திருத்தம் அமலுக்கு வரும் நாளாகவும் முடிவு செய்துள்ளோம். எனவே, இத்திருத்தங்களைச் செயல்படுத்துதற்குத் தேவையான நிருவாகக் கூறுகளை 1946, ஜனவரி முதல் தேதிக்குள் உருவாக்குதல் இன்றியமையாத் தேவையாகிறது. ஆனால், நமது

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, 1945, ஏப்ரல் 2, அ.ப. 2315-16.

நண்பர்கள் விழையும் இரு திருத்தங்களையும் செயல்படுத்துதற் கான நிருவாக அமைப்புகளை இந்தக் குறுகிய கால இடைவெளி யில் உருவாக்குதல், மைய அரசினாலோ, மாநில அரசுகளாலோ இயலாதென்றே நான் அஞ்சுகிறேன். எனவே, திருத்தங்களின்பால் நான் பரிவான நோக்கே கொண்டிருப்பினும் நிருவாகச் சிக்கல் களின் கடுமையைக் கருதியே தற்போது அவற்றை எதிர்க்க வேண்டி யுள்ளேன்.

**பேராசிரியர் என்.ஜி. ரங்கா :** கருத்தளவில் அரசுக்கு உடன்பாடு இருக்குமெனில், எனது திருத்தத்தில், ''அல்லது வெவ்வேறு மேலாண் மைகளின் கீழ்'' எனும் தொடருக்கு மாற்றாக, ''ஒரே மேலாண்மை யின் கீழ்வரும் தொழிற்சாலைகளில்'' என்ற தொடரைப் பயன்படுத் தினால், திருத்தத்தை ஏற்க அரசு உடன்படுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இதுகுறித்து நான் ஆழ்ந்த கவனம் செலுத்தியுள்ளேன். தொடரை மாற்றினாலும் சிக்கல் தீராதென்றே கருதுகிறேன்.

* * *

[1]மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): அவைத்தலைவர் அவர்களே, இத்திருத் தத்தை முன் மொழிந்தவர்களோ, ஆதரித்தவர்களோ, தங்கள் பக்க நியாயத்தைச் சரியாக நிலைநாட்டவில்லை என்பது தெளிவு.

இது தொடர்பாகப் பன்னாட்டு, தொழிலாளர் மாநாடுகளில் நிறைவேற்றப்படும் தீர்மானங்களையே நமது தர அளவீடுகளாக ஏற்றுக் கொள்கிறோம் என்பதை அவை அறியும். 1936 ஆம் ஆண்டில் நடைபெற்ற பன்னாட்டு, தொழிலாளர்கள் மாநாட்டில், ஊதியத் தோடு கூடிய விடுமுறை நாட்களின் எண்ணிக்கை 6க்குக் குறையா மலிருக்க வேண்டுமென்று நிர்ணயிக்கப்பட்டது. இக்கண்ணோட்டத் தில் நோக்கும்போது, நாம் தாக்கல் செய்த மசோதா பன்னாட்டுத் தர அளவீட்டிலிருந்து தாழ்வடைகிறது என்று எவரும் கூறவியலாது. எனது தரப்பில் மேலுமொரு இடர்ப்பாட்டையும் நான் குறிப் பிட்டாக வேண்டும். தொழிலாளர் நலன் குறித்துச் சட்டமியற்றும் அதிகாரம் பொதுப்பட்டியலில் இருப்பதை அவை உறுப்பினர்கள்

---

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV 1945, ஏப்ரல் 2, அ.ப. 2315-16.

நன்கறிவர். இயற்றப்பட்ட சட்டங்களை நடைமுறைப்படுத்தும் நிருவாகப் பொறுப்போ, முழுமையாக மாநில அரசுகளுக்கே உரியது, என்பதை நாட்டின் அரசியல் சட்டம் தெளிவாக வரையறுத்துள் ளது. இதுகுறித்த சட்டமன்ற மரபுகளை நோக்கில், பொதுப்பட்டியல் துறைகள் தொடர்பாக மைய அரசு சட்டமியற்றும்போது, இயற்றப் படும் சட்டம் மாநில அரசுகளின் இசைவையும் பெற்றாக வேண்டு மென்பது தெளிவாக நிலைநாட்டப்பட்டுள்ள மரபாகும். மேலும், மசோதாவில் குறிப்பிடப்பட்டுள்ள கால அளவு மாநில அரசுகளின் இசைவு பெற்றே முடிவு செய்யப்பட்டது என்பதையும் இங்கு குறிப் பிட்டாக வேண்டும். இருப்பினும், இத்திருத்தத்தை நான் ஏற்கத் தயாராக இருக்கிறேன் என்பதையும், அத்னை ஏற்குமாறு என்னை உந்திய காரணங்கள் எவை என்பதையும் தெளிவுறுத்த விரும்பு கிறேன். என்னை உந்திய முக்கிய காரணி புவியியல் கூறு என்பேன்; தொழிற்சாலை அமைவிடங்களும் மக்கள் குடியிருப்பு மையங் களும் வெவ்வேறாய்ப் பிரிந்து வெகுதொலைவுகளில் அமைந்திருப் பதை நன்கு உணர்கிறேன். பம்பாய் நகரில் அமைந்திருக்கும் தொழிற் சாலைக்கு, ஐக்கிய மாகாணம், மத்திய மாகாணம் போன்ற தொலை தூரப் பகுதிகளிலிருந்து தொழிலாளர்கள் இடம்பெயர்ந்து பணியில் சேர்ந்தால்தான் வேலைவாய்ப்பு என்ற நிலைமை நிலவுகிறது. இத்தொழிலாளர்கள் நீண்டதூரம் பயணம் மேற்கொள்ள வேண்டி யுள்ளது என்பதைக் கருத்தில் கொண்டு, மசோதாவில் அதற்கேற்பச் சிறு திருத்தம் செய்யத் தயாராகவுள்ளேன். எனவே, இக்காரணத்தை முன்னிட்டு, இக்குறிப்பிட்ட திருத்தத்தை ஏற்க உடன்படுகிறேன். அதேசமயம் நான் ஒரு நிபந்தனையையும் விதிக்க வேண்டியுள் ளது. பேராசிரியர் ரங்கா, திருமதி சுப்பராயன் ஆகியோர் பெயரில் உள்ள மற்றொரு திருத்த முன்மொழிவு, தெரிவுக்குழுவால் ஒதுக்கப் பட்ட, ''குறைந்த அளவில்'' என்ற தொடர் சேர்க்கப்படக் கோரு கிறது. இதையேற்றால் ஒருங்கமைவு குலைந்துவிடும். இதுபோன்ற முக்கிய மான சட்டங்களை இயற்றும்போது ஒருங்கமைவுக்கு ஊறு நேராமல் பார்த்துக் கொள்ள வேண்டுமென்னும் அடிப்படைக் கோட்பாட்டை உறுதியாகப் பின்பற்ற வேண்டுமென்பதால், இத் திருத்தத்தை முன்மொழிந்தவர்களே விலக்கிக் கொண்டால் பத்து நாட்கள் என்ற காலவரையை நிர்ணயிக்கும் திருத்தத்தை ஏற்க உடன்படுகிறேன்.

**பேராசிரியர் என்.ஜி. ரங்கா** (குண்டூர் நெல்லூர் மாவட் டங்களின் முகமதியரல்லாதார் சார்பாளர்): மற்றைய திருத்தத்தைத் தற்போதைக்கு விலக்கிக் கொள்ள இசைகிறோம்.

*அவைத் தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்):* தங்கள் தீர்மானத்தை நீங்கள் வலியுறுத்தப் போவதில்லையா?

*பேராசிரியர் என்.ஜி. ரங்கா:* ஒரு திருத்தத்தை மட்டுமே விலக்கிக் கொள்கிறோம்.

*அவைத்தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்):*

> ''மசோதாவின் பிரிவு 49 Bயில் துணைப்பிரிவுகள் (1), (2) ஆகியவற்றிலுள்ள விதி 3இல் ஏழு என்ற சொல்லுக்கு மாற்றாக, ''பத்து'' என்ற சொல் இடம்பெறலாம்''

என்பதற்கு அவையின் முடிவு கோரப்படுகிறது.

அவை தீர்மானத்தை ஏற்றுக்கொள்கிறது.

*மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர்:* துணைப் பிரிவு 2இல், ''ஏழு'' என்பதற்குப் பதிலாக, ''பத்து'' எனும் சொல் இடம் பெற வேண்டுமென்றொரு துணைத் திருத்தமும் நிறைவேற்றப்பட வேண்டும்.

*அவைத்தலைவர் (மாண்புமிகு அப்துல் ரகீம்):* மாண்புமிகு உறுப்பினர் அவர்கள் தக்கதொரு திருத்த முன்மொழிவைப் பின்னர் தாக்கல் செய்யலாமெனக் கருதுகிறேன்.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* துணைப்பிரிவு-2 இன் கடைசி வரியில் 'ஏழு' எனும் சொல்லுக்கு பதிலாக 'பத்து' எனும் சொல் இடம்பெறலாம்.

*அவைத்தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்):* முறையான திருத்த முன்மொழிவு தேவையென்றே கருதுகிறேன்.

* * *

[1]*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* ஐயா, இத்திருத்தத்தினை என்னால் ஏற்க இயலவில்லையென மிகுந்த வருத்தத்

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, 1945, ஏப்ரல் 2, அ.ப. 2318.

துடன் தெரிவித்துக் கொள்கிறேன். எனது மதிப்பிற்குரிய நண்பர் திரு. இன்ஸ்கிப் ''உடல் நலக்குறைவு'' என்பதற்கு வரையறை கிடையாதென்றார். அதனை வரையறை செய்தல் இயலுமெனின் நன்றென்பேன்; நானும் உடல் நலக் காப்பீட்டுச் சட்டத்தில் அச் சொல்லுக்கு வரையறையைத் தேடியதில் அது வரையறுக்கப் படாத சொல் என்பதையுணர்ந்தேன்; எனவே அதனை வரையறுக்க முனைதல் இயலாச் செயல். உடல் நலக்குறைவு என்பது சான் றளிக்கப்பட வேண்டிய விவகாரமே. ஒரு மனிதர்க்கு உடல் நலக் குறைவு என்று மருத்துவர் ஒருவர் சான்றளித்தால் மற்றையோர் அனைவரும் அதனை ஏற்றுக்கொள்ள வேண்டியோரே. சான்றிதழ் முறையான வகையில் அளிக்கப்பட வேண்டும் என்பதில் மதிப்பிற் குரிய நண்பர் அக்கறை கொண்டுள்ளார் எனில், அவரது அக்கறை யைப் போற்றுவதுடன், சான்றிதழ் தகுதியானதாய் அமைவதை உறுதிசெய்யும் வகையில் விதிமுறைகள் வகுக்கக் கருதியுள்ளோம் எனத் தெரிவித்துக் கொள்கிறேன்; சான்றிதழ் தரத் தக்கவர் யார்? அவரது (கல்வித்) தகுதிகள் என்ன என்பவை தெளிவாக வரை யறுக்கப்படும். தக்க வருவாயில்லாமல் போலிச் சான்றிதழ் தரலே வருவாய்க்கு வழியாகக் கொள்ளும் மருத்துவர்களுக்கு இடங்கொடாத வகையில் முற்றிலும் குறைகளற்ற விதிமுறைகள் வகுக்கப்படும். ஆனால் மருத்துவர் தரும் சான்றிதழ் முதலாளியின் மதிப்பீட்டிற்குப் பின்னரே ஏற்கப்படலாமென்று மதிப்பிற்குரிய நண்பரின் திருத்தம் முன்மொழிவதால் அதனையேற்பதில் இடர்ப்பாடு காண்கிறேன். தகுதியுள்ள மருத்துவரின் சான்றிதழ் இருந்தாலும் முதலாளி விரும் பினால்தான் விடுமுறை என்ற நிலையை உருவாக்க அரசு ஒரு போதும் அனுமதிக்காது. இஃது முதலாளிகளின் வசம் அளவுக்கு மீறிய அதிகாரத்தை ஒப்படைப்பதாகும். எனவே, இத்திருத்தத்தை ஏற்பதில் எனக்குச் சற்றும் உடன்பாடில்லை.

பணியாளர் இச்சலுகையைத் தவறாகப் பயன்படுத்த இட முண்டு என்பது மதிப்பிற்குரிய நண்பரின் மற்றொரு வாதம். உடல் நலக்குறைவு, விபத்து, அனுமதிக்கப்பட்ட இயல் விடுமுறை ஆகிய மூன்று கூறுகளுக்குமாய் மொத்தம் 90 நாட்களே என நாம் வரம்பு விதித்துள்ளமையால் தொழிலாளர் எவரும் வரம்பு கடந்து விடு முறை எடுத்துவிட இயலாது; விடுப்புக்காலம் 90 நாட்களைத் தாண்டு மெனில், சட்டம் தரும் சலுகையைத் தொழிலாளி இழந்து விடுகிறா ராதலின் தவறாகப் பயன்படுத்த வாய்ப்பில்லையென்பதால் இத் திருத்தத்தை நான் எதிர்க்கிறேன்.

*அவைத்தலைவர் (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்):*

*''முன்மொழியப்படும் பிரிவு 49 ஆ, விதி 3இன் இறுதிப் பகுதியிலுள்ள விளக்கத்தில், ''உடல்நலக் குறைவு, விபத்து அல்லது அனுமதிக்கப்பட்ட விடுமுறை'' என்பதற்கு பதிலாக, ''உடல்நலக்குறைவு, விபத்து பரிவு ஆகியவற்றுக்காக அனு மதித்து ஏற்கப்படும் விடுமுறை'' எனும் தொடர் இடம்பெறலாம்''*

*என்ற திருத்தத் தீர்மானம் முன்வைக்கப்படுகிறது.*

*தீர்மானத்தை அவை தள்ளுபடி செய்தது.*



# 47

## [1]சுரங்கத் தொழிலாளர் மகப்பேறுநல (திருத்த) மசோதா

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்):*

ஐயா;

''1941 ஆம் ஆண்டின் சுரங்கத் தொழிலாளர் மகப்பேறு நலச் சட்டத்திற்கான திருத்த மசோதா, தெரிவுக்குழு அறிக்கை யின்படி எடுத்துக் கொள்ளலாம்'' எனத் தீர்மானம் தாக்கல் செய்கிறேன்.

ஐயா, சட்டத்திருத்த மசோதா, தெரிவுக்குழுவால் வெகுவாகத் திருத்தியமைக்கப்பட்டுள்ளது என்பதை ஒப்புக் கொள்கிறேன். ஆகவே, தெரிவுக் குழு செய்த திருத்தங்களில் முக்கியமான சிலவற்றை அவையின் பரிசீலனைக்குக் கொண்டுவரல் முறையென்று கருதுகிறேன்.

*(இக்கட்டத்தில் அவைத்தலைவர், மாண்புமிகு சர் அப்துல் ரகீம் வந்து அவைத் தலைமையை ஏற்கிறார்.)*

தெரிவுக்குழு செய்த முதல் திருத்தம் கருவுற்ற மகளிர், நிலத்தடிச் சுரங்கங்களில் பணிசெய்யத் தடை விதிக்கப்படும் காலம் குறித்த தாகும். மூல மசோதாவில், நிலத்தடிச் சுரங்கங்களில் பணிபுரியும் கருவுற்ற பெண்கள் பிரசவத்திற்கு முன்னர் பத்து வாரங்களும், பின்னர் நான்கு வாரங்களும் தடைவிதிக்கலாமென்று மொழியப்பட்டிருந்தது. தெரிவுக்குழு பிரசவத்திற்கு முந்தைய காலத்தடையில் மாற்றம் ஏதும் செய்யவில்லை. ஆனால், பிந்தைய காலம் குறித்து விரிவான மாறுதல்களைச் செய்துள்ளது. முதலாவதாக 4 வார காலத்தடை என்பது முப்பத்தாறு வாரங்களாக நீட்டிக்கப்படுகிறது. இந்த 36 வாரமும் இரண்டு பகுதிகளாய்ப் பிரிக்கப்படும். முதல் பகுதியாக, இருபத்தாறு வார காலத்திற்கு முழுமையான தடையும், அடுத்த பத்து வார காலத்திற்குப் பகுதித் தடையும் விதிக்கத் தெரிவுக்குழு

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, 1945, ஏப்ரல் 11, அ.ப. 2788-89.

முன்மொழிந்துள்ளது. பகுதித்தடை விதிப்பு, நிறுவனத்தில் குழந்தைகள் காப்பகம் உள்ளதா இல்லையா என்பதையொட்டி இரண்டு வகையாகக் கருதப்படும். குழந்தைகள் காப்பகம் இல்லாவிடங்களில் 4 மணி நேரத்துக்கு மேல் நிலத்தடிச் சுரங்கங்களில் பெண்கள் வேலை செய்யத் தடை விதிக்கப்படும். அடுத்தகட்டமாக குழந்தைகள் காப்பகம் இல்லாவிடங்களில் 4 மணி நேரத்துக்கு மேல் நிலத்தடிச் சுரங்கங்களில் பெண்கள் வேலைசெய்யத் தடை விதிக்கப்படும். அடுத்தகட்டமாக குழந்தைகள் காப்பகம் இருக்கும் இடங்களில் கூட, எச்சமயத்திலும் பெண்கள் 4 மணி நேரத்திற்கு மேல் நிலத்தடிச் சுரங்கங்களில் பெண்கள் வேலை செய்யத் தடை செய்யப்படும். இவையே தடைக்காலம் குறித்து தெரிவுக்குழு செய்த மாற்றங்களாகும்.

நிலத்தடிச் சுரங்கங்களில் பணிபுரியும் பெண் தொழிலாளர்களுக்கான சலுகை குறித்து தெரிவுக்குழு செய்துள்ள மாற்றங்கள் வருமாறு: மூல மசோதாவில், நிலத்தடிச் சுரங்கங்களில் பணிபுரியும் பெண்கள் பேறுகாலச் சலுகைகள் பெறுவதற்கு, இரண்டு தகுதிகள் விதிக்கப்பட்டிருந்தன. முதலாவதாக, பேறுகாலத்திற்கு முன்னர் ஆறு மாதங்கள் சுரங்கப் பணியில் ஈடுபட்டிருக்க வேண்டுமென்பதும், இரண்டாவதாக அவ்வாறுமாத காலத்தில் 90 நாட்களுக்குக் குறையாமல் நிலத்தடிச் சுரங்கங்களில் பணி புரிந்திருக்க வேண்டும் என்பதுமே அவ்விரு தகுதிகள். தெரிவுக்குழு, ஆறு மாதங்கள் சுரங்கப் பணியில் ஈடுபட்டிருக்க வேண்டுமென்னும் முதலாவது தகுதியைத் தளர்த்தி, மகப்பேறுக்கு முந்தைய ஆறு மாதங்களில், 90 நாட்களுக்குக் குறையாமல் நிலத்தடிச் சுரங்கங்களில் பணிபுரிந்திருத்தலே இச்சலுகை பெறப் போதுமான தகுதி என மாற்றம் செய்துள்ளது.

சலுகை பெறும் காலம் குறித்தும் தெரிவுக்குழு சில திருத்தங்களைச் செய்துள்ளது. மூலமசோதாவில் பிரசவத்திற்கு முந்தைய பத்து வாரங்களும், பிந்தைய நான்கு வாரங்களும் சலுகைக் காலமாக மொழியப்பட்டிருந்தன. தெரிவுக்குழு பிரசவத்திற்குப் பிந்தைய நான்கு வாரங்களை, ஆறுவார காலமாகத் திருத்தம் செய்துள்ளது. சலுகைத் தொகை குறித்தும் தெரிவுக்குழு மாற்றம் செய்துள்ளது. மூல மசோதாவில் சலுகை விடுப்பு ஊதியம் நாள் ஒன்றுக்கு எட்டணா (ரூ. 0.50) என இருந்ததை, வாரத்திற்கு ரூ. 6.00 ஆகவும் உயர்த்திப் பரிந்துரைத்துள்ளது (இது நாள் ஒன்றுக்குப் பதினான்கு அணா (ரூ. 0.87)ஐ விடச் சற்று குறைவானது). மேலும் சலுகை

விடுப்புக் காலம் முழுவதையும் அனுமதிக்கப்பட்ட விடுமுறைக் காலமாக அறிவிப்பதன் வாயிலாக, இச்சட்டத்தின்கீழ் வரும் பெண் தொழிலாளர்களைச் சலுகை விடுமுறைக் காலத்தில் முதலாளிகள் பணிநீக்கம் செய்ய இயலாது என்னும் உரிமையும் உறுதி செய்யப் படுகிறது.

தெரிவுக்குழு செய்துள்ள திருத்தங்களில் முக்கியமான மற் றொன்று, சலுகை உரிமைக்குத் தகுதியுள்ள பெண்கள் கோரினால், அவர்களது மருத்துவப் பரிசோதனை பெண் மருத்துவர்களைக் கொண்டே நடத்தப்பட வேண்டும் என்பதாகும்; இஃதும் மூல மசோதாவில் இல்லாத புதிய சலுகையாகும். மேலும், பிரசவத்திற்குப் பிந்தைய 36 வார காலத்தில், முதல் 4 வாரங்களைத் தவிர எஞ்சிய 32 வாரங்களில், நிலத்தடிச் சுரங்கப்பணி தவிர்த்த பிற பணிகளில் ஈடுபட்டுக் கூடுதல் வருவாய்க்கு வழிசெய்து கொள்ளப் பெண் தொழி லாளர்களுக்கு அனுமதி வழங்கும் திருத்தத்தையும் தெரிவுக்குழு செய்துள்ளது என்பதையும் அவையின் கவனத்திற்குக் கொண்டு வர விழைகிறேன். (இச்சலுகையும் மூல மசோதாவில் இடம் பெற வில்லை). பிரசவத்தையடுத்த 4 வார காலத்தில் மட்டுமே அவர் கள் எப்பணிக்கும் செல்லக் கூடாதெனத் தடைவிதிக்கப்படுகிறது. எனவே, திருத்தப்படும் மசோதாவின்படி தரைப் பரப்பில் பணிபுரியும் பெண்களுக்கான மகப்பேறு சலுகைத் தொகை நாள் ஒன்றுக்கு எட்டணா (ரூ. 0.50)விலிருந்து, பன்னிரண்டனாவாக (ரூ. 0.75), அதாவது முந்தைய சட்டம் அனுமதித்ததை விட கூடுதலாக சலுகைத் தொகை உயர்த்தப்படுகிறது.

இவை தெரிவுக்குழு செய்துள்ள முக்கியமான திருத்தங்களுள் சிலவாம். முன்னரே நான் குறிப்பிட்டது போன்று, தெரிவுக்குழு மசோதாவில் கணிசமான மாற்றங்களைச் செய்துள்ளது. இருப்பினும் இத்திருத்தங்கள் தேவைப்படுகின்ற அளவில் விந்தையான நிலைமை கள் இருத்தலைக் கணக்கில் கொண்டு, அரசு தடையேதும் முன் வைக்காமல் தெரிவுக்குழுவின் பரிந்துரைகளை ஏற்க முடிவு செய் துள்ளதால், இம்மசோதாவை அவையில் தாக்கல் செய்கிறேன்.

**திரு. அவைத்தலைவர்** (மாண்புமிகு சர் அப்துல் ரகீம்):

"1941 ஆம் ஆண்டின் சுரங்கத் தொழிலாளர் மகப்பேறு நல உதவிச் சட்டம், தெரிவுக்குழுவின் அறிக்கைப்படி ஏற்கப்படலாம்" எனத் தீர்மானம் தாக்கலாகிறது.



# 48

## [1]தொழிற்சாலைப் பணியாளர் நலக் காப்பீடு

*(அதர்கார் அறிக்கை மீது தொழிலாளர் நல நிலைக்குழு விவாதத்திலிருந்து)*

மார்ச்சு 17 ஆம் தேதி முடிவடைந்த தொழிலாளர் நல நிலைக் குழுவின் ஆறாவது கூட்டத்தில் இந்தியத் தொழிற்சாலைப் பணியாளர்களுக்கான உடல்நலக் காப்பீட்டுத் திட்டம் குறித்த பேராசிரியர் அதர்காரின் அறிக்கை விவாதிக்கப்பட்டது. இந்திய அரசின் தொழிலாளர் நலத்துறை உறுப்பினர், மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் கூட்டத்திற்குத் தலைமை வகித்தார். சர்வதேச தொழிலாளர் நிறுவனத்தைச் சார்ந்த திரு. ஸ்டெக், திரு. ராவ் ஆகியோரும் கூட்டத்தில் பார்வையாளர்களாகப் பங்கேற்றனர்; அவ்விருவரின் திட்டம் குறித்த கருத்துரைகள் சில கூட்டத்தில் சுற்றுக்கு அனுப்பப் பட்டன.

தொழிலாளர்கள், முதலாளிகளின் சார்பாளர்கள் உட்பட கலந்து கொண்டவர்கள் அனைவரும், பேராசிரியர் அதர்கரின் அறிக்கையை உவந்து வரவேற்றதுடன், மருத்துவ, பணச் சலுகைகள், தகுதிக்காலம் அல்லது காத்திருக்கும் காலம், மருத்துவ சிகிச்சை, அரசின் பங்களிப்பு முதலான பல்வேறு கூறுகளைப் பற்றிய தங்கள் கருத்துக்களையும் எடுத்துரைத்தனர். திட்டம் உடனடியாகச் செயல்பாட்டுக்கு வரவேண்டிய தேவையை வலியுறுத்திப் பல உறுப்பினர்கள் பேசினர். திட்டத்தின் செயல்பாட்டினைப் பரவலாக்கும் முயற்சி யாக எல்லா நிறுவன அமைப்புகளும், தொடர்ந்தியங்கும் தொழிற்சாலைகள் அனைத்தும் இத்திட்டத்தின்கீழ் கொண்டு வரப்பட வேண்டுமென்னும் பொதுக்கருத்து நிலவியது.

### மகப்பேறு நலச் சலுகைகள்

மத்திய அரசு இத்திட்டத்தைச் செயலாக்க முனையும்போது

1. இந்தியத் தகவல் ஏடு, 1945, ஏப்ரல் 15, பக். 505.

ஆகியவையும் சேர்க்கப்பட வேண்டுமென வலியுறுத்தப்பட்டது. திட்டம் தயாரிக்கப்பட்ட பின், மத்திய அரசு மாகாண அரசுகளுட னும், தொழிலாளர், முதலாளிகள் அமைப்புகளுடனும் கலந்து கொண்டு, அவர்களது பதில்களின் அடிப்படையில் சட்டப் பேரவை யில் இதுகுறித்த மசோதா ஒன்றைத் தாக்கல் செய்ய வேண்டுமென வும் வலியுறுத்தப்பட்டது.

கூட்டத்தின் நிகழ்ச்சி நிரலில் இடம்பெற்றிருந்த பிரிதொரு கூறு, தொழிலாளர் நல முத்தரப்பு மாநாடு, தொழிலாளர் நல நிலைக் குழு ஆகியவற்றின் அமைப்பு, செயல்பாடுகளை மாற்றியமைத்த லாகும். இந்நோக்கில் செயல்பாடுகள் இரண்டு வகையாகப் பகுக்கப் படும். பணியமர்த்த விதிமுறைகள், நிபந்தனைகள், தொழிலாளர் நலச் சட்டமியற்றல், சமுதாயப் பாதுகாப்பு ஆகியவை முதல் பகுப் பிலும், தொழிலாளர் நலம், தொழிலாளர் நலச் சட்டங்களின் நிரு வாகம் போன்றவை இரண்டாம் பகுப்பிலும் அடங்கும்.

இரண்டாம் பகுப்பில் இடம்பெறும் செயல்பாடுகளை நிறை வேற்ற உடனடியாக தொழிலாளர் நலக்குழு ஒன்று நிறுவப்பட்டுப் பல்வேறு தொழிற்சாலைகளில் எழும் தொழிலாளர் நலச் சட்டங் கள் தொடர்பான செயல்பாடுகளை கவனிக்கவும், சிக்கல் எழுந்தால் எளிதில் தீர்வையெய்தும் வகையில் முக்கியத் தொழிலகங்களின் சார்பாளர்கள் குழுவில் இடம் பெறவேண்டுமென்றும் குழுவின் முன் வைக்கப்பட்ட நினைவூட்டறிக்கையில் கருத்து தெரிவிக்கப் பட்டிருந்தது. இந்த முன்மொழிவை ஆய்வு செய்வதற்கெனத் துணைக்குழு ஒன்று அமைப்பதாக ஏற்றுக் கொள்ளப்பட்டது.



# 49

## [1]தேசிய பணித் தொழிலாளர் நடுவர் மன்றங்களின் போர்க்காலப் பணிகள்

### டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் பாராட்டுரை

''போரில் நமக்குப் பின்னடைவான நிலை தோன்றி, இந்தியா மீது படையெடுப்பு நிகழலாமென்ற அச்சுறுத்தும் சூழ்நிலை நிலவிய காலகட்டத்தில், நமது போர்முனைகளிலும், போர்த் தளவாடத் தொழிற்சாலைகளிலும் தொழில்நுட்பப் பணியாளர் பற்றாக் குறையினால் பெரும் இக்கட்டான சூழல் உருவாகி அவசரப் பணி களில் முடக்க நிலை தோன்றியது. விரைந்து செயலாற்றப்பட வேண்டிய பணிகளுக்குத் தகுந்த திறமும் அனுபவமும் கொண்ட தொழில்நுட்ப பணியாளர்கள் கிடைப்பதை உறுதிசெய்ய இய லாமல் அல்லல்பட்டோம். இந்த நெருக்கடியான அவசரக் கட்டத் தில்தான் தேசியப் பணித் தொழிலாளர் நடுவர் மன்றங்கள் நிறுவப்பட்டன. தொழில்நுட்பப் பணியாளர்களைத் திரட்டும் பணியை மிக விரைந்து செயலாற்றுவதில், அனுபவக்குறைவால், நமது திட்டங்களில் பல குறைபாடுகள் இருந்தன. இத்துணை அரிய பணி அக்கால கட்டத்தில் நன்கு நிறை வேற்றப்பட்டமையே உங்கள் முயற்சிகளின் பெருமைக்கு விளக்கமாய்த் திகழ்கிறது.''

இவ்வாறு (1945) ஏப்ரல் 19 ஆம் தேதி, தேசியப் பணி (தொழில் நுட்ப ஊழியர்கள்) அவசரச் சட்டம், வேலைவாய்ப்பு நிறுவனங் கள் ஆகியன குறித்த சிக்கல்களை விவாதிப்பதற்காக சிம்லாவில் கூடிய தேசியப் பணித் தொழிலாளர் நடுவர் மன்றங்களின் தலைமை நடுவர்கள் கூட்டத்தில் தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் பாராட்டினார்.

அவர் தமது உரையில் மேலும் குறிப்பிட்டதாவது:

''நடுவர் மன்றங்கள், 15,000 தொழில்நுட்ப ஊழியர்களைத் தேசியப் பணிக்கு அனுப்பியுள்ளன. மேலும் அவை தொழில்நுட்பப்

---

1. இந்தியத் தகவல் ஏடு, 1945 மே 15, அ.ப. 639-40.

பணியாளர்களின் இடப்பெயர்வுகளிலும் தகுந்த கட்டுப்பாட்டைச் செலுத்தி வந்துள்ளன. தொழிலாளர்களை அவசியமான பணிகளை முன்னிட்டு அவர்களது இல்லங்களிலிருந்து வெகுதொலைவில் பணியில் ஈடுபடுத்துவதுடன், அவர்கள் ஊதிய நோக்கில் பிற பணி களை நாடிச் சென்றுவிடாமல் தடுப்பதும், அவசியத் தேவைகளாய் இருந்தன. தொழிலாளர்களின் வேலை நிலைமை, ஊதியம் ஆகியன ஏறத்தாழ நாடு முழுதும் சீராயிருந்த இங்கிலாந்தில் இத்தகைய பணி எளிதானதே; மேலும் அங்கு தொழிலாளர் அமைச்சகத்தின் தேசியப் பணித்துறையுடன், விரிவான நலத்துறை நிறுவனங்கள் இணைக்கப் பட்டுத் தொழிலாளர் நலன்களை அக்கறையோடு பேணிவந்தன. இதற்கு நேர்மாறான நிலைமைகள் நிலவிய இந்திய நாட்டில், தொழிலாளர் நலன்களுக்கு ஊறு இல்லாமலும், தேசியப் பணி களுக்குப் பாதிப்பு இல்லாமலும் நடுவர் மன்றங்கள் இப்பொறுப்பை மிகச் சாதுரியமாகவும், பொறுப்புணர்வுடனும் செம்மையாக நிறை வேற்றியுள்ளன.

நடுவர் மன்றங்கள் தொழிலாளர்பால் அளவுக்கு மேல் பரிவு காட்டியதாக முதலாளிகள் குறை கூறுவதையும், அவை தொழிலாளர் மீது தேவைக்கு மேல் கடுமையாய் நடந்து கொண்டதாய் மறுசாரர் குறைகூறுவதையும் கண்டோம். எவரது குற்றச்சாட்டையும் அரசு ஒதுக்கித் தள்ளிவிடவில்லை; மாறாகக் குற்றச்சாட்டுகளைத் தீர ஆய்ந்து சரியான தீர்வு காணலே அரசின் அணுகுமுறையாய் விளங்கி வந்தது. எனவே, தொழிலாளர்களின் பணிப் பெயர்ச்சி குறித்த கட்டுப் பாடுகளை உண்மையாக்குதலையே அரசு ஆதரித்தது. இதுகுறித்து கல்கத்தாப் பகுதியில் கடும் புகார்கள் எழுந்ததையும் அறிவீர்கள். அதேசமயத்தில் தேசியப் பணித் தொழிலாளர்களைப் பிற பணிகள் ஈர்க்காவண்ணம் பணி நிலைகளையும் ஊதியத்தையும் மேம்படுத்து வதிலும் நடுவர் மன்றங்களுக்கு அரசு மிகுந்த ஊக்கமளித்தது.

## நீதியோடியைந்த கட்டுப்பாடு

நமது அடுத்த கூட்டத்தில் கருதப்படுதற்குரிய கருத்துரை களைப் பற்றி இப்போது எதுவும் கூறுதற்கு நான் விரும்பவில்லை; அதே சமயம் போரினால் ஏற்பட்டுள்ள கடும் சுமைகள் காரணமாகத் தொழிலாளர்கள் முன்வந்து செய்ய வேண்டிய தியாகங்கள் பல உண்டு என்பதை வலியுறுத்த விரும்புகிறேன். இதை நாம் நேர்மை யாகவும் சீர்மையாகவும் செய்ய வேண்டும். முதலாளிகளிடமிருந்து எவ்வித நிர்ப்பந்தங்கள் வந்தாலும் அவசர நிலையின் பெயரால்

தொழிலாளரின் பணி நிலைக்கோ கண்ணியத்திற்கோ ஊறுநேர அனுமதிக்க மாட்டோம்.

பிரிட்டனில் தொழிலாளர் நலத்துறை அமைச்சகத்திடமும் தேசிய பணி நிறுவனத்திடமும் ஏராளமான அதிகாரங்கள் தரப் பட்டுள்ளன. ஆனால் அவை தொழிலாளிகள் மீதும் முதலாளிகள் மீதும் சம வலிமையோடு செலுத்தப்படக் கூடியவையேயாகும். இந்த அதிகாரங்கள் முதலாளிகளுக்கும் தொழிலாளிகளுக்கும் இடையே கூடுதல் ஒத்துழைப்பைத் தோற்றுவிப்பதற்கே பயன் படுத்தப்பட்டுள்ளன. இந்தியாவிலும் இத்தகைய ஒத்துழைப்பு உணர்வு பெருக வேண்டும்; அதற்காகவே இக்கட்டுப்பாடுகள் உறுதி யுடனும் நீதியுடனும் செலுத்தப்பட வேண்டும் என்பதை வலியுறுத்து கிறேன்.

தேசிய பணித்தொழிலாளர் நடுவர் மன்றங்களின் பணியில் நாம் பாராட்டத்தக்க சிறப்புக்கூறு மற்றொன்றும் உண்டு. இந்தியா விலும், இங்கிலாந்திலும் நமது பயிற்சித் திட்டங்களுக்கு ஆள் சேர்த்தல் போன்ற பொறுப்புகளையும் ஏற்றுக்கொண்டு இந்நிறு வனம் சிறப்பாகவும் கவனமாகவும் நிறைவேற்றியுள்ளதையும் நான் மனமாரப் பாராட்ட விரும்புகிறேன். உங்களுடைய இந்த நல் லுழைப்பு இல்லையென்றால் பயிற்சித் திட்டத்தின் வெற்றியை பெற்றிருக்க முடியாது.

குறிப்பாக, பெவின் பயிற்சித் திட்டத்தின் கீழ் இங்கிலாந் துக்கு அனுப்புவதற்கு பயிற்சியாளர்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட நேர்த்தி தொழிலாளர் அமைச்சகத்தையும் தேசியப் பணி நிறுவனத்தையும் வெகுவாகக் கவர்ந்துள்ளது. பெவின் திட்டப் பயிற்சியாளர்களில் கருங்காலிகள் சிலரும் இருந்தனர் என்பது மெய்யே; ஆனால் சிறப் பாகப் பணியாற்றியோர் எண்ணிக்கையோடு ஒப்பிடுங்கால் இது மிகச்சொற்ப எண்ணிக்கையே என்பதைக் கருதி நாம் மனநிறைவு கொள்ளலாம்; பயிற்சிக்காகச் செலவிடப்பட்ட பணமோ காலமோ வீணல்ல என்பதை உறுதியாய் உரைக்கலாம். மாறாக, பணியாற்றித் திரும்பியுள்ள பெவின் பயிற்சியாளர்கள் நமது நாட்டில் தொழில் நுட்பத் தொழிலாளர்களின் பணித்தரத்தை உயர்த்துவதற்கு மிக உதவியாக இருப்பார்கள். மேலும் அவர்கள் ஒட்டுமொத்தப் போரில் ஒரு நாடே தன்னை முழுமையாக ஈடுபடுத்திக் கொள்ளும் அனு பவத்தை நேரடியாகப் பெற்றுத் திரும்பியுள்ளார்கள். ஒரு நாடே முழுமையாக ஒருங்கு திரண்டெழும்போது எதையும் சாதிக்க

இயலும் என்னும் உண்மை போர்ப் பணிகளுக்கு மட்டுமன்றி அமைதிப் பணிகளுக்கும் பொருந்துமென்பதை நிலைநாட்டுவதில் நமக்கு இப்பணியாளர்கள் உதவுவர்; இந்த நம்பிக்கை விரைவில் நனவாகக் காண்போம் என்று உறுதியாய் நம்பலாம்.

## மறுகுடியமர்வு ஏற்பாடு

போர்காலச் சிக்கல்களை விடவும், போர்ப் பிற்காலச் சிக்கல்கள் எவ்வளவு கடுமையாய் விளங்குகின்றன என்பதையும் நாம் எதிர்கொள்ள வேண்டியுள்ளது. அத்தகு சிக்கல்களில் முதன்மையானது போர்க்காலத்தில் பெரும் எண்ணிக்கையில் இடம்பெயர்ந்த போர்ப் பணியாளர்கள், தளவாட உற்பத்தித் தொழிலாளர்கள் ஆகியோரின் மறுகுடியமர்வு எனலாம். போர் முடிந்து அமைதி திரும்பும் காலகட்டத்தில், போர்க்காலத்தில் இடம்பெயர்ந்த படைஞர், தொழிலாளர் ஆகியோர் எப்படியோ போகட்டும் என்று எந்த அரசும் விட்டுவிட முடியாது. மறுகுடியமர்வு என்பது அரசின் குடிமைப் பொறுப்பு என்பதுடன், அதைத் தொழிலாளர் நலத்துறையே ஏற்க வேண்டுமென்பதையும் அரசு ஏற்றுக் கொண்டுள்ளது. எமது மறுகுடியமர்வுத் திட்டங்கள் உங்களோடு கலந்தாலோசிக்கப்படும். இதற்காக நிறுவப்படவுள்ள அமைப்பில் தேசியப் பணித் தொழிலாளர் நடுவர் மன்றங்களின் தலைவருக்கு முக்கியப் பொறுப்பு தரப்பட்டுள்ளது.

மறுகுடியமர்வு என்பது மத்திய அரசும் மாகாண அரசுகளும் நெருங்கி ஒத்துழைத்துத் தீர்வு காணவேண்டிய சிக்கல் ஆகும். மாகாண அமைப்புகளின் தலைமைப் பொறுப்பு நடுவர் மன்றத் தலைவருக்கு அளிக்கப்படும். உங்கள் கடமைப் பொறுப்புகளை நிறைவேற்ற நிறைந்த சாதுரியமும், ஆற்றலும், முன்முயற்சியும் தேவைப்படும். இத்தகைய கடமைகளை நிறைவேற்றுவதில் போர்க் காலப் பொறுப்புகளை நிறைவேற்றியதில் நீங்கள் காட்டிய ஈடுபாடுகளுக்குச் சற்றும் குறையாத ஆர்வத்தைக் காட்டுவீர்களெனப் பெரிதும் நம்புகிறேன்.

## திறமையான வேலை வாய்ப்புப் பணி

மறுகுடியமர்வு நிறுவனம் பற்றிய விரிவான விவரங்களை நான் எடுத்துரைத்தல் தேவையில்லை. ஆனால் முன்னாள் பணியாளர் நலன்களுக்கு இன்றியமையாத் தேவையான இப்பணியுடன், அவர்களுக்கேற்ற வேலை வாய்ப்புகளை உருவாக்கித் தரும் பணி

களுக்கு ஒரு திறமையான அடித்தளம் அமைப்பதும் திட்டத்தின் நோக்கமாகும். இத்தகைய பணியின் முக்கியக்கூறு நாடு தழுவிய ஒருங்கிணைவு பெற்ற வேலைவாய்ப்பு நிறுவனங்கள் அமைத்தலே. நாம் ஏற்கெனவே சிறு எண்ணிக்கையில் அமைத்துள்ள வேலை வாய்ப்பு நிறுவனங்கள் திறம்படச் செயல்பட்டு வருகின்றன; எனினும் இத்திட்டத்தை மேலும் பரவலான முறையில் விரிவுபடுத்தல் தேவையென்பது தெளிவு. எல்லாவற்றுக்கும் மேலாக வேலை வாய்ப்பு நிறுவனங்களைத் திறம்பட நடத்துவதற்கேற்ற பயிற்சி பெற்ற அலுவலர்களும், தொழிலாளர்களும், முதலாளியரும் அலுவலகத்துடன் தக்கவாறு தொடர்பு கொண்டு பயன்பெறத் தக்கவாறு வசதிகள் கொண்ட அலுவலகக் கட்டடங்களும் தேவையென்பதை உணர்கிறோம். இவ்விரண்டு கூறுகளைப் பொருத்தமட்டில் தற்போது இயங்கிவரும் வேலை வாய்ப்பு அலுவலகங்கள் குறைபாடுள்ளவை என்பதை மறுப்பதற்கில்லை. அலுவலர்களைப் பொறுத்தமட்டில் மேலாளர்கள், துணை மேலாளர்கள் ஆகியோருக்கான பயிற்சித் திட்டத்தை மிக விரைவில் தொடங்கக் கருதியுள்ளோம்: புதிய வேலைவாய்ப்பு நிலையங்கள் சரியான பாதையில் செயல்பட இப்பயிற்சித் திட்டம் உதவுமென நம்புகிறோம்.

மறுகுடியமர்வுத் திட்டத்தில் இடம்பெயர்ந்த பணியாளர்களைப் புதிய பணிகளில் ஈடுபடுத்துதற்குத் தேவையான பயிற்சித் திட்டங்களுடன், புதிய தொழில்களில் அவர்களது நலன்களைத் தொடர்ந்து பேணுதற்குரிய கண்காணிப்பு குறித்தும் கவனம் செலுத்த வேண்டும். புதிய நிலையங்களின் அமைப்பு விவரங்கள் உங்களுடைய ஆலோசனை வேண்டி முன்வைக்கப்படும் என்பதுடன், மாகாண அரசுகளின் ஆலோசனை கோரியும் அனுப்பி வைக்கப்படும்.

## மலைக்க வைக்கும் பெரும்பணி

இந்தக் கட்டத்தில் முக்கியமாக உங்களிடம் வேண்டப்படுவதென்ன வென்றால், நீங்கள் மாகாணங்களுக்குத் திரும்பியதும், திட்ட விவரங்களை மாகாண அரசுச் சார்பாளர்களுடன் விரிவான கலந்தாலோசனை நிகழ்த்தி, நமது திட்டங்களில் மாகாண அரசுகளுக்கு நல்ல ஆர்வத்தைத் தூண்ட வேண்டும் என்பதே. திட்டத்தின் நோக்கம் குறித்துத் தவறான கருத்துக்கள் தோன்றுவதைத் தவிர்த்தல் அவசியம். உங்களால் தீர்வு காணவியலாச் சிக்கல்களை மத்திய அரசின் கவனத்திற்குக் கொண்டு வருவதுடன் சிக்கலைத் தீர்ப்பதற்கான உங்கள் ஆலோசனைகளையும் பரிமாறிக் கொள்வீர்களென

நம்புகிறோம். நாம் மேற்கொள்ளவிருப்பது மலைப்பூட்டக் கூடிய தோர் பெரும்பணி என்பதையெண்ணி அதனைச் செம்மையாக நிறைவேற்றுதற் பொருட்டு அனைவரும் நெருங்கி ஒத்துழைக்க வேண்டிய தேவையையும் கருத்தில் கொள்ள வேண்டும்.

நான் உங்கள் நேரத்தை மிகுதியாக எடுத்துக் கொண்டு விட்டேன். உங்கள் பணிகளில் உங்களை ஈடுபடவிடுக்கு முன்னர், விரைந்து செம்மையாய் உங்களை பணிகளை நிறைவேற்ற வாழ்த்தி விடைபெறுகிறேன்.

★ ★ ★

## [1]பிராந்திய தொழிலாளர் நல ஆணையர்கள் நியமனம்

மத்திய அரசின் தொழிற்சாலைகளில் தொழிலக உறவுகளைக் கவனிப்பதற்கான புதிய திட்டத்தை நிருவாகம் செய்வதற்காக மத்திய அரசு, பிராந்திய தொழிலாளர் நல ஆணையர்கள் மூவரை நியமிக்கிறது. திரு. டி.ஜி. ஜாதவ், டாக்டர் சேத், திரு. அபுதாலிப் ஆகியோர் முறையே பம்பாய், கல்கத்தா, லாகூர் ஆகிய நகரங்களைத் தலைமையிடங்களாய்க் கொண்டு பிராந்திய தொழிலாளர் நல ஆணையர்களாகச் செயல்படுவர். இந்நிறுவனத்தின் தலைமை ஆணையராக திரு. எஸ்.சி. ஜோஷி தலைநகரிலிருந்து செயல்படுவார்.

புதிய அமைப்பில் புதுடில்லியில் செயல்படும் தொழிலாளர் நலத்துறை ஆணையர் ஒருவரும், சமரச அலுவலர்கள் 9 பேரும், தொழிலாளர் நல (மைய) ஆய்வாளர்கள் 24 பேரும் நியமிக்கப்பட்டு நாடு முழுதும் செயல்பட வழிசெய்யப்பட்டுள்ளது. அத்துடன் தொழிலகங்களின் உணவகக் கண்காணிப்புக்கான மத்திய ஆய்வாளர் ஒருவரும் நியமிக்கப்பட்டுள்ளார்.

இவ்வமைப்பின் கண்காணிப்பின் கீழ் (1) மத்திய அரசுத் தொழிற்சாலைகள் அல்லது அதன் கட்டுப்பாட்டிலுள்ள தொழிற்சாலைகள் அனைத்தும் வருவதுடன், (2) மத்திய இருப்புப்பாதைத் துறை, (3) சுரங்கங்கள், எண்ணெய் வயல்கள், (4) பெருந்துறைமுகங்கள் ஆகியனவும் செயல்படும்.

1. இந்திய தகவல் ஏடு, ஆகஸ்டு 15, 1945 பக். 152

# 50

## [1]தாமோதர் பள்ளத்தாக்கின் பன்னோக்கு வளர்ச்சி

### கல்கத்தா மாநாட்டில் தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் உரை

*(''தாமோதர் ஆற்றுநீரைப் பயன்படுத்த வகுக்கப்பட்டுள்ள) இத்திட்டத்தினை இந்திய அரசு வரவேற்கிறது. ஆற்றையும், ஆற்றுவெள்ளத்தையும் கட்டுப்படுத்துவதுடன், நிலையான பாசனப் பரப்பை உருவாக்கி பஞ்சத்துக்கெதிரான காப்பீடு அமைத்தும், அவசியத் தேவையான மின்னாற்றல் உற்பத்திக்கு வழிவகுத்தும் அருமையானதோர் திட்டமாகக் காட்சியளிக்கிறது இத்திட்டம். தமது மாகாண மக்களுக்குக் கிடைக்கப் பெறும் நலன்களை நன்கு உணர்ந்தால், வங்காள, பீகார் அரசுகளும் இத்திட்டத்தை உவகையுடன் வரவேற்கும் என்பது உறுதி.''*

*(1945) ஆகஸ்டு 23 ஆம் நாள் கல்கத்தாவில் நடைபெற்ற வங்காள, பீகார் அரசுகளின் சார்பாளர்களது மாநாட்டில் உரையாற்றிய, இந்திய அரசின் தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் இவ்வாறு குறிப்பிட்டார். தாமோதர் பள்ளத்தாக்குப் பன்னோக்குத் திட்டம் குறித்த தொடக்கக் கருத்துருவை விவாதிப்பதற்காக நடைபெற்ற இரண்டு நாள் மாநாடு தொழிலாளர் நலத்துறை உறுப்பினரின் தலைமையில் நடைபெற்றது.*

*டாக்டர் அம்பேத்கர் நிகழ்த்திய முழுமையான உரை வருமாறு:*

''தாமோதர் ஆற்று நீரைப் பயன்படுத்திக் கொள்வதற்கானத் திட்டத்தைப் பற்றி விவாதிப்பதற்காக நாம் இரண்டாவது முறையாக இங்கே கூடியுள்ளோம். இதுகுறித்த முதல் கூட்டம், 1945

---

1. இந்தியத் தகவல் ஏடு, அக்டோபர் 1, 1945, பக்கங்கள் 345-49.

ஆம் ஆண்டு ஜனவரி மூன்றாம் நாள் நடைபெற்றது என்பது உங்களுக்கு நினைவிருக்கும். 1944 ஆம் ஆண்டில் வங்காள அரசு நியமித்த தாமோதர் ஆற்று வெள்ள விசாரணை குழுவின் அறிக்கை குறித்து அப்போது ஆராய்ந்தோம்.

இத்திட்டத்தை ஆற்றில் அணைகட்டி வெள்ளச் சேதத்தை தடுக்கும் திட்டமாக உருவாக்குவதா அல்லது பாசனம், மின் உற்பத்தி ஆகிய நோக்கங்களையும் உள்ளடக்கிய, பல்நோக்கு திட்டமாக விரிவாக்குவதா என்பதே அன்று நம்முன் எழுந்த வினாவாகும். அம்மாநாட்டில் பரவலாக ஏற்றுக் கொள்ளப்பட்ட கருத்து பன்நோக்கு திட்டமே. அதற்கேற்றவாறு தேவையான தகவல்களைத் திரட்டி பன்நோக்கு திட்டத்தை வரைவதற்கு ஏற்பாடு செய்ய மாநாடு தீர்மானித்தது. இப்பணிக்குத் தேவையான தொழில்நுட்ப வல்லுநர்களின் உதவியை முழுமையாகத் தருவதென்று இந்திய அரசின் சார்பில் நான் கூறியிருக்கிறேன்.

வங்காளப் பொறியாளர்களின் ஒத்துழைப்புடன் வல்லுநர்களும் சேர்ந்து உருவாக்கிய திட்டம் ''தாமோதர் ஆற்றுப் பள்ளத்தாக்கின் ஒருங்கிணைந்த வளர்ச்சி குறித்த தொடக்க அறிக்கை''யாகக் கிடைத்துள்ளது. இவ்வறிக்கையின் படிகள் ஏற்கனவே வங்காள, பீகார் அரசுகளுக்கு கொடுக்கப்பட்டுள்ளன.

முதலாவதாக, இவ்வறிக்கையைத் தயாரித்த திரு. வூர்துயினுக்கும் அவரோடு முழுமையாக ஒத்துழைத்த வங்காள அரசின் பொறியாளர்களுக்கும் நாம் மிகவும் நன்றி செலுத்த கடமைப்பட்டிருக்கிறோம் என்பதை என் சார்பிலும் உங்கள் சார்பிலும் தெரிவித்துக் கொள்கிறேன். மத்திய மின்விசை தொழில்நுட்ப வாரியத்தின் தலைவர் திரு. மாத்யூசின் ஆலோசனையும் இத்திட்டத்தை வகுப்பதில் மிகவும் உதவியுள்ளது. வரும் காலகட்டத்தில் நீர்வழிப் போக்குவரத்து வாரியத் தலைவர் திரு. கோஸ்லாவின் உதவியையும் நாம் வேண்டிப் பெறுவோம் என்பதில் ஐயமில்லை.

தற்போது தெளிவானதும் முழுமையானதுமான அறிக்கை விவரமும், தாமோதர் ஆற்றுப் பள்ளத்தாக்கு திட்டத்தின் பல்வேறு மாற்று வடிவங்களும், நாம் அடுத்த செயல் திட்டத்தை வகுப்பதற்குத் தேவையான முழு விவரங்களும் நம் முன்னே வைக்கப்பட்டுள்ளன.

இவ்வறிக்கையின் பல்வேறு கூறுகளையும் குறித்து ஆலோசனை நடத்தவே நாம் இங்கு கூடியுள்ளோம். இக்கூறுகள் யாவும் கூட்டத்திற்கான நிகழ்ச்சி நிரலில் தெளிவுறுத்தப்பட்டுள்ளன. மேலும் நிகழ்ச்சி நிரலில் உடனடிக் கவனம் செலுத்த வேண்டிய கூறுகளும் வலியுறுத்திச் சொல்லப்பட்டுள்ளன. வங்காள, பீகார் அரசுகளுக்கு இவை ஏற்கனவே சுற்றறிக்கையாக அனுப்பப்பட்டுள்ளமையால் நான் அவற்றை மீண்டும் இங்கே விவரித்தல் தேவையில்லை. எனவே, நான் இங்கே இரண்டு கருத்துகளைப் பற்றி மட்டும் கருத்துக் கூறி அமைவேன். அவை கொள்கை விளக்கம் குறித்த கருத்தொன்றும், செயல்முறை நடைமுறை குறித்த கருத்தொன்றும் ஆகும்.

வெள்ளக் கட்டுப்பாடு என்பது அடிப்படைக் கொள்கை நிலையாகும். தாமோதர் ஆற்று வடிநிலத்தில் வெள்ளத்தால் பாதிப்பு ஏற்படக்கூடிய பகுதிகளுக்கு எவ்வளவு கடுமையான வெள்ள காலத்திலும் போதிய பாதுகாப்பு அளிக்கப்பட வேண்டும் என்பதைப் பொதுவாக அனைவரும் ஏற்றுக் கொள்வர் என்று உறுதியாக நம்புவோம். தொடக்க அறிக்கை தரும் திட்டத்தில் முழுமையான பாதுகாப்புக்கு வழிசெய்யப்பட்டுள்ளது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

கொள்கையின் இரண்டாவது கூறு இத்திட்டத்தை நிறைவேற்றுவதற்குத் தோள் கொடுத்தல் இங்கு கூடியுள்ள மூன்று அரசுகளின் கூட்டுப் பொறுப்பு என்பதாகும். தாமோதர் ஆற்றுப் பள்ளத்தாக்கின் வளர்ச்சி குறித்து மூன்று அரசுகளும் எந்த அளவில் பங்கு கொண்டு ஊக்கத்துடன் செயல்பட வேண்டுமென்பதை தொடக்க அறிக்கை விளக்கி இருக்கும் தன்மை அனைவருக்கும் ஏற்புடையதாயிருக்கும் என நம்புகிறேன்.

இத்திட்டத்தினால் அப்பகுதி மக்கள் பெறும் பயன்களைத் தொகுத்துரைப்பின், (1) 4,700,000 ஏக்கர்-அடி கொள்ளளவு கொண்ட கட்டுப்பாடுள்ள நீர்த்தேக்கம் (2) 7,60,000 ஏக்கர் நிலத்திற்குத் தொடர்ந்த பாசன வசதி அளிப்பதற்கும், நீர்வழிப் போக்குவரத்திற்கும் உதவத் தேவையான அளவு நீர் (3) 3,00,000 கிலோவாட் மின் திறன், (4) 50 லட்சம் மக்களுக்கு நேரடியாகவும் மேலும் பல லட்சம் மக்களுக்கு மறைமுகமாகவும் கிடைக்கக் கூடிய நல மேம்பாடு.

இப்போது நடைமுறை, செயல்திட்டங்கள் குறித்து கருதுவோ

மெனில், முன்னுரிமை அடிப்படையில் கீழ்வரும் கருத்துக்களை வரிசைப்படுத்தி உங்கள் முன் வைக்கிறேன்:

(1) அணை அமைவிடங்களைத் தேர்ந்தெடுத்தல்;

(2) தேர்ந்தெடுக்கப்பட்ட அமைவிடங்களில், கட்டுமானம் தொடங்குவதற்கு முந்தைய விரிவான கள ஆய்வுகள்;

(3) இத்தகைய தொடக்க ஆய்வுகளைத் தொடர்ந்து நடத்தும் அமைப்பு;

(4) அணைகளை வடிவமைப்பதற்கும் கட்டுவதற்குமான அமைப்பு;

(5) தேவையான பணிகளை ஒருங்கிணைத்தும், உந்தியும் தொழில் நுட்ப நிர்வாகக் கண்காணிப்பு நடத்தவும் தேவையான உயர் நிலை நிர்வாக அமைப்பை உருவாக்குதல்;

(6) கிடைக்கும் நீரையும் மின்திறனையும் தகுந்த முறையில் பயன்படுத்தி மேம்பாடுறும் பகுதிகளுக்கு தேவையான, விரிவான கள ஆய்வுகள்.

செயல்முறை, நடைமுறை விவரங்கள் குறித்து விரைந்து முடிவெடுக்க வேண்டிய தேவையை வலியுறுத்த விரும்புகிறேன். திட்டத்தின் முதன்மையான நோக்கங்கள் வெள்ளப் பாதுகாப்பும், பல்நோக்கு வளப்பெருக்கமும் என்பதில் ஐயமில்லை. அதேசமயத்தில் போர்ப் பிற்கால வேலைவாய்ப்புத் திட்டத்தையும் இதில் உள்ளடக்கலாம் என்பதை மறந்துவிட முடியாது. இப்போது எல்லா முனைகளிலும் போர் முடிந்துவிட்டது; எனவே சமாதானத்தினால் எழும் சிக்கல்களில் முக்கியமானதான வேலையில்லாத் திண்டாட்டத்தை எதிர்நோக்குகிறோம். போர்க்காலப் பணிகள் தற்போது நின்று விட்டமையாலும், செலவு மிக குறைக்கப்பட வேண்டியமையாலும் தோன்றும் மாபெரும் உள்நாட்டுப் பொருளாதார சிக்கலின் விளைவே இது.

### மத்திய அரசின் பங்கு

இந்த நோக்கில் தாமோதர் பள்ளத்தாக்கு திட்டம் மிக மிக அவசரமானதொன்றாகும். இதில் ஒவ்வொரு அரசும் தரும் பங்கு

என்ன என்பதை விரைவில் முடிவு செய்தால்தான் மேற்கொண்டு செயலாற்ற இயலும் என்பதால் விரைந்து முடிவெடுக்கத் தவறுதல் மதியீனமிக்க குற்றமெனலாம். எனவே, உங்கள் அனைவரின் ஒத் துழைப்போடு நாம் உறுதியானதும், முழுமையானதுமான தீர்மானங் களை எய்தலாம் என்று உறுதியாக நம்புகிறேன்.

எனது உரையை முடிக்குமுன் இத்திட்டத்தை நிறைவேற்று வதில் தனது முழுப் பங்கையும் அக்கறையோடு ஆற்றுவதற்கு இந்திய அரசு ஆர்வத்தோடு தயாராக இருக்கிறது என்பதைக் கூற விரும்பு கிறேன்.

(1) ஏற்கனவே அறிவிக்கப்பட்டவாறு, ஒப்புக்கொள்ளப்பட்ட நெறி யில், இத்திட்டத்தை விரைந்து செயல்படுத்த தேவையான தனது பங்கு அனைத்தையும் தவறாது நிறைவேற்றும் பொறுப்பு தனக்கு உண்டு என்பதை இந்திய அரசு ஏற்றுக் கொள்கிறது. இத்திட்டத்தை நிறைவேற்றுவதற்கான நிர்வாக அமைப்பு முறை எவ்வாறு இருக்க வேண்டுமென்பது இதுவரை வரை யறுக்கப்படவில்லை. எனினும், அமைப்பு முறையொன்று தேவை என்னும் முந்தைய கருத்தில் இந்திய அரசு உறுதியாக நிற்கிறது.

(2) இத்திட்டத்திற்கு தொடர்ந்து தேவைப்படும் கள ஆய்வுகளுக் கான நிறுவனத்தின் பணியாளர்களையும் அமர்த்தித் தரும் பொறுப்பை இந்திய அரசு முழுமையாக ஏற்றுக் கொள்வதுடன் இரண்டு மாநிலங்களிலும், போர் பிற்கால வளர்ச்சிப் பணி களுக்கு பாதகமில்லாத வகையில் கிடைக்கும் பணி உதவியை மட்டும் ஏற்றுக் கொண்டு, விரைந்த கட்டுமானத்திற்கு தேவை யான பணியாளர்களை அமர்த்தும் பொறுப்பையும் இந்திய அரசு ஏற்றுக்கொள்ளும். வங்காளத்தில் போதுமான பொறி யாளர்கள் இல்லை என்பதை இந்திய அரசு உணர்ந்துள்ளது. எனவே, கள ஆய்விற்கு மத்திய அரசு பணிகளிலிருந்தும், தேவைப் பட்டால் போர்ப்படை பணிகளிலிருந்தும் பொறியாளர்களை அமர்த்த வேண்டிய தேவையை மைய அரசு உணர்ந்துள்ளது. இதனால், மாநில அரசின் பொறியியல் பணிகளுக்குப் பெரு மளவில் ஊறு ஏதும் விளைவிக்காது தவிர்க்க உதவுவதுடன் தேவையான கருவிகளில் பெரும் பகுதியையும் மத்திய அரசே வழங்கிவிடும்.

3) திட்டத்தின் தொடக்க கள ஆய்வுகளுக்குத் தேவையான முழுச் செலவுகளையும் மத்திய அரசே ஏற்று முன் பணமாக தரத் தயாராக உள்ளது. திட்டம் உருப்பெற்று நிறைவேற்றப்படும் கட்டத்தில் அந்தந்த மாகாண அரசுகளின் பங்குகளைச் சரிபாதியாகப் பகிர்ந்து கொள்ள இசைகிறது.

மாகாண அரசுகளின் பங்காக இந்திய அரசு எதிர்பார்ப்பது ஒன்று மட்டுமே. திட்டத்தின் பயன்கள் தேவையான அடித்தள மக்களுக்குப் போய்ச் சேர வேண்டும் என்பதை அடிப்படையாக கொண்டே அனைத்துக்கட்ட செயல்பாடுகளும் அமைய வேண்டும் என்பதே அது. அதாவது பள்ளத்தாக்கு பகுதியிலும் அதன் அண்மை பகுதிகளிலும் வாழும் மக்களுக்கே இத்திட்டத்தினால் கிடைக்கப் பெறும் மேம்பாடுகளின் பலன்கள் கிடைக்க வேண்டும். இதுவே மிக முக்கியமான கூறு என்பது எனது கருத்து. ஆகவே, முறையான திட்டமிடுவதற்கு தேவையான அமைப்பு உடனடியாக நிறுவப் பட வேண்டும் என்று கருதுகிறேன். இதன் மூலமே திட்டத்தின் இறுதி நோக்கத்தைச் செம்மையாக எய்த முடியும்.''

## மாநாட்டு விவாதங்கள்

தாமோதர் பள்ளத்தாக்கு மேம்பாட்டுக்கான ஒருங்கிணைந்த பல்நோக்கு திட்டத்திற்கான கள ஆய்வுகளை விரைந்து செயல் படுத்த வேண்டும் என்று மாநாடு தீர்மானித்தது.

எத்தகைய வெள்ளத்திலிருந்தும் முழுமையான பாதுகாப்பு அளிக்கும் வகையில் திட்டம் வகுக்கப்பட வேண்டுமென்று அனைவரும் ஒப்புக்கொண்டனர். அணை கட்டுதற்கு முன் மாற்று அமைவிடங்களைக் கள ஆய்வு செய்து முடிவெடுப்பதற்காக மைத்தோன், ஐயார், சோனாலபூர் ஆகிய இடங்கள் தேர்ந்தெடுக்கப்பட்டன. மூன்று அமைவிடங்களின் தொழில்நுட்ப கூறுகளை ஆய்வு செய்த பின் முன்னுரிமை வரிசையில் மைத்தோன் முதலாவதாகவும், ஐயார் இரண்டாவதாகவும், சோனாலபூர் மூன்றாவதாகவும் எடுத்துக் கொள்ளப்படலாம் என்று முடிவு செய்யப்பட்டது. இம்மூன்று அமைவிடங்களுக்கும் மத்திய தொழில்நுட்ப மின்திறன் வாரியம் திட்ட அறிக்கை தயாரிக்க வேண்டுமென்று முடிவு செய்யப்பட்டது. சோனாலபூரைப் பொறுத்தவரை நிலக்கரி உற்பத்தி பாதிக்கப்படுமா என்பது பற்றியும் ஆய்வறிக்கை தயாரிக்கப்பட வேண்டுமென்று முடிவு செய்யப்பட்டது.

### தேவையான பணியாளர்கள்

விரிவான கள ஆய்வுகளை நடத்தி திட்ட அறிக்கை தயாரிப் பதற்கான பணியாளர்களை தேடி அமர்த்தும் பணியை மத்திய அரசு விரைந்து செயல்படுத்த வேண்டும் என்றும், அதுவரை, கிடைக் கும் பணியாளர்களைக் கொண்டே ஆய்வுப் பணிகள் உடனடியாக தொடங்க வேண்டும் என்றும் தீர்மானிக்கப்பட்டது.

கள ஆய்வு பணிகள் ஒருங்கிணைந்த கட்டுப்பாட்டுடன் நடை பெறுவதை உறுதி செய்வதற்கு ஏதுவாக, இப்பணியில் ஈடுபடும் ஆய்வாளர்கள் அனைவரும் மத்திய தொழில்நுட்ப மின்வாரியத்தின் தொழில்நுட்ப வழிகாட்டுதலின் படியே செயல்பட வேண்டுமென்று மாநாடு ஒப்புக்கொண்டது. ஒருங்கிணைந்த திட்டத்தின் கீழ் முன் மொழியப்படும் முதல் இரண்டு அணைகளையும் வடிவமைக்கவும், கட்டவும் ஆலோசனை கூற அமெரிக்க ஐக்கிய நாடுகளில் இருந்து நான்கு பொறியாளர்களை அழைப்பதென்றும் முடிவு செய்யப் பட்டது. இப்பொறியாளர்கள் தொழில்நுட்பக் குழுமமாக அமைவர். இவர்கள் அடுத்த ஆண்டின் தொடக்கத்தில் இந்தியாவிற்கு வரவேண் டும் என்றும், அவர்கள் வந்து சேர்வதற்குள் திட்டத்திற்கு தேவை யான விவரங்கள் அனைத்தும் திரட்டி முடிக்கப்படும் என்றும் மாநாடு நம்பிக்கை தெரிவித்தது.

திட்டத்தின் அறுதிக்கட்டத்தில் தாமோதர் பள்ளத்தாக்கு ஆணையம் நிறுவப்பட வேண்டுமென்பதே உத்தேசம் என்றாலும் அதுவரையிலான இடைக்கால நடவடிக்கையாக மத்திய அரசு உயர் நிலை நிர்வாக அலுவலர் ஒருவரை நியமித்து திட்டத்திற்கு தேவை யான கள ஆய்வுகளை ஒருங்கிணைக்கவும் விரைவுபடுத்தவும் வழி செய்யலாம் என்று மாநாடு முடிவு செய்தது.

இத்திட்டத்தோடு தொடர்பு கொண்ட பல்வேறு பிற சிக்கல் கள் குறித்தும் ஒருங்கே ஆய்வு மேற்கொள்ளப்பட வேண்டுமென்றும் ஏற்றுக்கொள்ளப்பட்டது. வங்காள, பீகார் அரசுகளின் நீர்ப்பாசனத் துறைகள் மத்திய அரசின் பாசன, நீர்வழிப் போக்குவரத்து ஆணை யத்துடன் கலந்தாலோசித்து, திட்டத்தின் வாயிலாய் கிடைக்கும் பாசன நீரை பயன்படுத்தற்குரிய மிகச் சிறந்த முறைகள் குறித்து ஆய்வு நடத்த வேண்டும்.

ஆய்வு செய்யப்பட வேண்டிய பிற கூறுகளாவன: மின்திறன் தேவையின் வளர்ச்சி, தோட்டக்கலை நிலையங்கள் நிறுவல், மண்

அரிப்பு தடுப்புப் பணிகள், படகுப் போக்குவரத்து, நிலவியல் கூறு கள், குடிநீர் வழங்கல், மின்னாற்றல் வழித்தட அமைப்பு ஆகியன வாகும்.

மாநாட்டில் அரசு சார்பாளர்களாக பங்கு பெற்றவர்களின் பட்டியல் வருமாறு:

**இந்திய அரசு சார்பாளர்கள் -**

திரு. எச்.சி. பிரியோர், தொழிலாளர் நலத்துறைச் செயலர்;
திரு. டி.எல். மஜூம்தார், தொழிலாளர் நலத்துறை துணைச் செயலர்;
திரு. எம். இக்கரமுல்லா, வழங்கல் துறை இணைச் செயலர்;
திரு. எச்.எம். மாத்யூஸ், மத்திய தொழில்நுட்ப மின்வாரிய தலைவர்;
திரு. டபிள்யூ.எல். ஊர்தின், மத்திய தொழில்நுட்ப மின்வாரியத்தின் நீர்மின் திட்ட உறுப்பினர்;
திரு. சி. கோட்ஸ், வழங்கல் துறை துணைச் செயலர்;
திரு. ஆர். ஹாரிசன், துணை நிலக்கரி ஆணையர்.

**வங்காள அரசின் சார்பாளர்கள் -**

திரு. ஓ.எம். மார்டின், ஆளுநரின் தொலைத்தொடர்பு, பொதுப்பணித் துறை ஆலோசகர்;
திரு. ஆர்.எல். வாக்கர், ஆளுநரின் நிதி, வணிகம், தொழிலாளர் நலம், தொழில்துறை ஆலோசகர்;
திரு. பி.பி. சர்க்கார், தகவல் தொடர்பு, பொதுப்பணித் துறைச் செயலர்;
ராய்பகதூர் எஸ்.கே. குப்தா, மேற்கு வங்க பாசனத்துறை தலைமைப் பொறியாளர்;
திரு. மான்சிங், தாமோதர் திட்ட சிறப்புப்பணி மேற்பார்வை பொறியாளர்;
மேஜர் எம். ஜபார், பொதுநலத்துறை இயக்குநர்;
திரு. அசீஸ் அகமது, போர் பிற்கால மறு கட்டுமானத் துறை இணைச் செயலர்

**பீகார் அரசுச் சார்பாளர்கள் -**

திரு. எஸ்.எம். தார், வளர்ச்சித்துறை ஆணையாளர்.
திரு. டபிள்யூ.ஜி. கெய்னே, தலைமை பொறியாளர், பாசனம் மற்றும் மின்னாற்றல்.



# 51

## [1]இந்திய தொழிற்சாலைப் பணியாளர்களுக்கான வீட்டு வசதித் திட்டம்

அண்மையில் புதுடில்லியில் நடைபெற்ற தொழிலாளர் நல நிலைக்குழுவின் ஏழாவது கூட்டத்தில், இந்திய தொழிற்சாலை பணியாளர்களுக்கான வீட்டு வசதி திட்டத்தை விரைந்து செயல் படுத்த வேண்டிய தேவை வலியுறுத்தப்பட்டது. இந்திய அரசின் தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் கூட்டத்திற்கு தலைமை வகித்தார்.

தொழிலாளர்களின் வீட்டு வசதி குறித்த பின்வரும் கூறுகளை ஆய்வு செய்வதற்காக துணைக்குழு ஒன்று நியமிக்கப்பட வேண்டு மென்று தீர்மானிக்கப்பட்டது:

அ) தொழிலாளரின் வீட்டு வசதிக்காக கட்டட நிதி தேவையா, தேவை எனில், அந்நிதி திரட்டுவதற்கான சிறந்த முறைகள், குறிப்பாக, ஏற்கனவே வீட்டு வசதி செய்து தந்துள்ள நிறுவனங் கள் நிதி திரட்டிய முறை ஆகியவற்றை ஆய்தல்;

ஆ) தொழிலாளர்களிடமிருந்து வீட்டு வாடகை வசூலிப்பதற்கான அடிப்படைகள்;

இ) தொழிலாளர் இல்லங்களுக்கான குறைந்தபட்ச தரங்கள்;

ஈ) கிடைக்கும் நிதியை தகுந்த முறையில் நிர்வகிப்பதற்கான முறை (அரசா?, முதலாளி அமைப்பா?, தொழிலாளர் அமைப்பா?);

உ) மத்திய, மாநில அரசுகள், உள்ளூராட்சிகள் ஆகியவை தொழி லாளர்களுக்கான வீட்டு வசதித் திட்டங்களுக்கு செய்து தர வேண்டிய வசதிகள்.

---

1. இந்தியத் தகவல் ஏடு, டிசம்பர் 15, 1945, பக். 464.

துணைக்குழுவில் மத்திய அரசின் சார்பாளர்கள் இருவர், மாநில அரசுகளின் சார்பாளர்கள் இருவர், சமஸ்தானங்களின் சார் பாளர்கள் இருவர், நகராட்சிகள், நகராட்சிப் பணியாளர்கள் உட்பட தொழிலாளர்கள், தொழில் அதிபர்களின் சார்பாளர்கள் மூவர் இடம் பெறுவர்.

## ஊதியத்தோடு விடுமுறை

1945 ஆம் ஆண்டில் மத்திய அரசு நிறைவேற்றிய தொழிற் சாலைகள் (திருத்தம்) சட்டத்தின் கீழ் தொழிலாளர்களுக்கு ஊதியத் தோடு கூடிய விடுமுறை அளிப்பது பற்றிய வரைவு விதிகளை, தொழி லாளர் நல நிலைக்குழு ஆராய்ந்தது.

தொழிலாளர் ஈட்டுறுதி சட்டத்தில், தொழிலாளரை வரை யறுக்கும் பகுதியில் திருத்தம் செய்து, மாதம் ரூ. 400 வரை சம்பளம் வாங்குவோரை தொழிலாளர் என வரையறுக்கலாம் என்பது குறித்து பொதுவான உடன்பாடு ஏற்பட்டது.

இக்கூட்டத்தில் மத்திய, மாகாண, இந்திய சமஸ்தான அரசு களின் சார்பாளர்களும், சிற்றரசர் பேரவை, தொழிற்சாலை முத லாளிகள் அமைப்பு, இந்திய தொழிலாளர் கூட்டமைப்பு, அனைத் திந்திய தொழிற்சங்க காங்கிரஸ், இந்தியத் தொழிலதிபர்கள் சம் மேளனம் முதலிய தொழிலாளர்கள், முதலாளிகள் சார்பாளர்கள் ஆகியோரும் கலந்து கொண்டனர்.



# 52

## [1]தொழிலாளர்களுக்கு அரசின் கடமைகள்

ஏழாவது தொழிலாளர் மாநாடு (இது இனி இந்திய தொழிலாளர் மாநாடு என அழைக்கப்படும்) நவம்பர் 26ல் புதுடில்லியில் நடைபெற்றது. மாநாட்டுக்குத் தலைமை வகித்த இந்திய அரசின் தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் தொழிலாளர்களுக்கு அரசின் கடமைகள் குறித்த பட்டியல் ஒன்றை சமர்ப்பித்து, இந்தியத் தொழிலாளர் தரத்தினைப் பன்னாட்டுத் தரத்திற்கு உயர்த்தும் வகையில் சட்டம் இயற்ற வேண்டிய தேவையை வலியுறுத்தினார்.

தொழிலாளர் நலம் குறித்த இராயல் கமிஷனின் பரிந்துரைகளைச் செயல்படுத்துவதிலும், சர்வதேச தொழிலாளர் நிறுவனத்தின் அமைப்பு நெறிகளுக்கு ஒப்பிசைவு அளித்தலிலும் இந்திய அரசின் செயல்பாடு பற்றிய மதிப்பீட்டை நிகழ்த்திய அம்பேத்கர் இராயல் கமிஷனின் பரிந்துரைகளில் அதுவரை நிறைவேற்றப்படாதிருப்பவை பத்து மட்டுமே என்பதையுரைத்ததுடன், நடைமுறை நெறிகள் 63இல் 19 நெறிகளுக்கு மட்டுமே இந்திய அரசு ஒப்பிசைவு தந்துள்ளது என்பதையும் சுட்டினார். அதேசமயத்தில், இந்திய அரசு ஒப்பிசைவு அளிக்காததற்குக் காரணம், அமைப்பு நெறிகள் எவ்வித மாற்றமுமின்றி ஏற்றுக் கொள்ளப்பட வேண்டுமென்ற கட்டுத்திட்டமேயன்றித் தொழிலாளர் நலத்தில் அரசுக்கு அக்கறையில்லையென்பதே காரணமென்று கருதலாகாதென உரைத்தார்.

அவையில் கலந்து கொண்டவர்களை வரவேற்று டாக்டர் அம்பேத்கர் பேசியதாவது:

''தற்போது சமாதானம் நிலவுதல் குறித்து நாம் அனைவரும் மகிழ்ச்சியடைகிறோம் என உறுதியாகக் கருதுகிறேன். இந்த வெற்றியை எய்துதற்கு நாம் கடந்த ஆறாண்டு காலத்தில் கணக்கிட

---

1. இந்தியத் தகவல் ஏடு, டிசம்பர் 15, 1945 அ.ப. 684-88.

வியலா அளவில் உயிர், உடைமைகளை இழந்து போராடியுள் ளோம் என்பதுடன் சொல்லவொண்ணாத் துன்பங்களையும், துய ரங்களையும் ஏற்றுள்ளோம். போரும், போர்க்காலச் சிக்கல்களும் முடிவுக்கு வந்துவிட்டன எனும் நிம்மதியைப் பெற்றுள்ளோம். பல தளவாடங்களைத் தயாரித்தாக வேண்டும்; அதுவும் உடனடியாகத் தயாரித்தாக வேண்டும் என்ற இறுக்க நிலையும் இப்போது இல்லை. நமது கவலைகளெல்லாம் கடுகி மறைந்தனவென்று இறைவனுக்கு நன்றி கூறுகிறோம். போர்க்காலச் சிக்கல்கள் மறைந்து விட்டன என்றாலும் மக்களின் சமுதாய, பொருளாதார வாழ்வைச் சீரமைத்து மீட்கும் பொறுப்பு நம்மை எதிர்நோக்கியுள்ளது. உலகின் பிற நாடுகளைப் போன்றே இந்தியாவுக்கும் இப்பொறுப்பு பாதிப்பு களை ஏற்படுத்துகின்றது.

## அரசின் கடப்பாடுகள்

''அரசின் சமூக, பொருளாதாரக் கடப்பாடுகளில் முக்கிய மானவையாகிய தொழிலாளர் நலம், முதலாளி-தொழிலாளி உறவு இவை குறித்த சிக்கல்களே இம்மாநாட்டின் முக்கியப் பொருள் எனலாம். இம்மாநாடு ஆற்ற வேண்டிய பணி என்னவெனக் குறிப் பாக நோக்கிடில், இத்துறையில் நாம் இதுவரை ஆற்றியுள்ள பணி கள் யாவை? இனி ஆற்றப்பட வேண்டிய பணிகள் யாவை என மதிப்பீடு செய்ய முனையின் அம்மதிப்பீடே மாநாட்டின் பணிகளை வரையறுக்கும் எனத் திட்டவட்டமாய்க் கூறலாம்.

இம்மதிப்பீட்டினைச் செய்யுமுகத்தான், முதலில் நமது கடப் பாடுகள் குறித்து ஒரு இருப்புக்கணக்கில் தொடங்கக் கருதுகிறேன். நமது கடப்பாடுகள் இருவேறு ஊற்றுகளிலிருந்து எழுகின்றன. முத லாவதாக, 1930 ஆம் ஆண்டில் தொழிலாளர் நலம் பற்றிய இராயல் கமிஷனின் அறிக்கையையும், அடுத்து சர்வதேசத் தொழிலாளர் நிறுவனத்தின் (ஐ.எல்.ஓ) அமைப்பு நெறிகளையும் சுட்டலாம். சர்வதேசத் தொழிலாளர் நிறுவனத்தின் தொடக்க காலத்திலிருந்தே இந்தியா அதில் உறுப்பு நாடாய்ச் சேர்ந்துள்ளது என்பதையும் நினைவுகூர வேண்டும்.

''தொழிலாளர் நலம் குறித்த இராயல் கமிஷன் 357 பரிந்துரை களைத் தந்துள்ளது; 1929 ஆம் ஆண்டில் மற்ற நாடுகளோடு ஒப்பிட, தொழிலாளர் நலச் சட்டமியற்றலில் இந்தியா எவ்வளவுக்குப் பின் தங்கியிருந்தது என்பதை இது காட்டுகிறது. பரிந்துரைகளில் 133

(மொத்தம் 357), முழுமையாகவோ பகுதியாகவோ, சட்டமியற்றல் தொடர்பானவை. இவற்றுள் 126 பரிந்துரைகளை அரசு ஏற்றுக் கொண்டுள்ளது. 106 பரிந்துரைகளுக்குச் செயல்வடிவமும் தரப்பட் டுள்ளது. நிலுவையில் உள்ள 20 பரிந் துரைகளில் தொழிற்பட்டறை கள் பற்றிச் சட்டமியற்றல் தொடர்பான 10 பரிந்துரைகள் குறித்துச் சட்டமியற்றும் அதிகாரம் தொழிற்சாலைச் சட்டத்தின் 5வது பிரிவின் கீழ் மாகாண அரசுகளுக்குத் தரப்பட்டுள்ளது. எனவே, மொத்தத்தில் 10 பரிந்துரைகளே எஞ்சி நிற்பதால் இத்துறையில் அரசின் கடப் பாடு மிகச் சிறிதே எனலாம்.

## ஐ.எல்.ஓ. நடைமுறை நெறிகள்

''அடுத்து நமது கடப்பாடுகளின் இரண்டாவது ஊற்றினை நோக்குவோம். 1919 ஆம் ஆண்டிலிருந்து 1943 வரையான ஆண்டு களில் ஐ.எல்.ஓ. தொழிலாளர் நலம் குறித்து மொத்தத்தில் 63 நடை முறை நெறிகளை உருவாக்கியுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது. இவற்றுள் இந்தியா இதுவரை 14 நெறிகளுக்கு மட்டுமே ஒப்பிசைவு தந்துள்ளது; எஞ்சிய 49 நெறிகள் நிலுவையாகவே உள்ளன.

''எனவே, இப்போதைய நிலவரம் தெளிவாக உங்கள் முன்னர் வைக்கப்பட்டுள்ளது. ஐ.எல்.ஓ. பரிந்துரைகளை விட இராயல் கமிஷ னின் பரிந்துரைகளைச் செயல்படுத்துவதில் முன்னிலை வகிக் கிறோம். இதற்குக் குறிப்பான காரணம், இராயல் கமிஷனின் பரிந் துரைகள் இந்திய நிலைமைகளைக் கருத்தில் கொண்டு உருவாக்கப் பட்டவை என்பதே. ஆனால் உலகத் தொழிலாளர் அமைப்பு (ஐ.எல்.ஓ.) நடைமுறை நெறிகள் பொதுத்தன்மையில் உருவாக்கப் பட்டவை.

''சுருங்கக் கூறில் ஆணையத்தின் பரிந்துரைகளைப் பெரும் பாலும் செயல்படுத்தி விட்டோம்; ஐ.எல்.ஓ. நடைமுறை நெறிமுறை களைச் செயல்படுத்துவதில் மிகவும் பின்தங்கியுள்ளோம். நாம் ஒப் பிசைவு தராத நடைமுறை நெறிகளில் சில முக்கியமானவை; எனவே நமது நாட்டு நிலைமைகளையும் ஒட்டி, நமது தொழிலாளர் நிலை யைப் பன்னாட்டுத் தரத்திற்கு உயர்த்தும் நோக்கில், கூர்மையான கவனத்துடன் ஆய்வு செய்ய வேண்டிய கட்டத்தில் இருக்கிறோம்.

''இந்தக் குறுகிய ஆய்வே, தொழிலாளர் நலச்சட்டமியற்றலில் நமது தேக்கநிலையினைச் சுட்டி, விரைவில் நமது கடமையைச் செய்ய வேண்டிய அவசியத்தை உணர்த்தும். இக்கடமையை அரசு

தவிர்க்க முயலவில்லை என்று நான் கூறுவதை அவை நம்ப வேண்டும்; அரசு இக்கடமையை நிறைவேற்றக் தவறாது; தவறுவதை உலக நாடுகளின் பொதுக்கருத்து ஏற்றுக் கொள்ளாது.

''அரசு தனது கடமையைச் செய்யத் தவறாது என்று இங்கு நான் வலியுறுத்திக் கூறுதற்குக் காரணம், தொழிலாளர் நலச் சட்டங்களை உடனடியாக விரைந்து நிறைவேற்றுதலின் தேவை குறித்து நாட்டில் பல்வேறு வகையான தவறான கருத்துக்கள் நிலவி வருதலே யாகும். பிரிட்டனின் எடுத்துக்காட்டை நாம் உடனடியாகப் பின்பற்ற வேண்டும் எனக் கூறுவோர் உண்டு; ஆனால் இப்போதைய தொழிலாளர் நலச் சட்டங்களை இயற்றுதற்குப் பிரிட்டானிய மக்கள் ஒரு நூற்றாண்டு காலம் காத்திருக்க வேண்டியிருந்ததெனச் சுட்டுவோரும் உண்டு; தொழிலாளர் நலச் சட்டங்களை இயற்றுவதன் மூலம் குழந்தை நிலையில் வளர்ந்துவரும் இந்தியத் தொழிற்சாலைகளின் செலவுச் சுமையைக் கூட்டுவது நீதியில்லை என்பாரும் உண்டு; தொழிற்சாலைகள் விரைந்து வளர வேண்டும் என்பதற்காகத் தாழ்வான வாழ்க்கைத் தரநிலை தொழிலாளர்கள் மீது சுமத்தப்படும் ருசிய நாட்டை எடுத்துக்காட்டி இவர்கள் வாதிடுகின்றனர். இயற்றப்படும் தொழிலாளர் நலச்சட்டங்களை ஒழுங்காக நடைமுறைப்படுத்தத் தேவையான சரியான நிருவாக அமைப்பு இங்கே இல்லாமையால், சட்டங்கள் இயற்றப்பட்டாலும் அவை ஏட்டுச் சுரைக்காயாகவே இருக்குமேயன்றிப் பயனேதுமிராது எனக் கூறுவோரும் பலருண்டு. ஏழைநாடான இந்தியாவுக்குத் தொழிலாளர் வாழ்க்கைத் தரத்தில் உயர்வு என்பது வேண்டாத ஆடம்பரம் என்றும் பரவலாகப் பேசுவோருண்டு.

## தொழிலாளர் நலச் சட்டமியற்றல்

''ஆனால் இத்தகைய வாதங்கள் எவற்றையும் உலகம் ஏற்றுக் கொள்ளாது. நெடுநாட்களாக நமது நாட்டில் ஒத்திப்போடப்பட்டு வரும் தொழிலாளர் நலத்திட்டங்களை மேலும் முடுக்கி வைப்பதற்கான சாக்குபோக்குகளாகவே இவற்றை உலகம் கருதும் என்பது திண்ணம்.

''சரியான தொழிலாளர் நலச் சட்டங்களை இயற்ற பிரிட்டிஷார் 100 ஆண்டுகள் எடுத்துக் கொண்டார்கள் என்பதற்காக, இன்னும் நூறாண்டுகள் நாங்கள் காத்திருக்கப் போவதில்லையென்று இந்தியத் தொழிலாளர்களே கூறுவர். நாம் வரலாற்றைப் படிப்பதன் நோக்கம்

பிற நாடுகள் செய்த தவறுகளை அப்படியே திருப்பிச் செய்வதற் காகவன்று; மாறாக அவர்கள் செய்த பிழைகளையறிந்து தவிர்ப் பதன் பொருட்டாகவேயாகும். வரலாறு பெரும்பாலும் எடுத்துக் காட்டுகளைத் தருவதில்லை; மாறாக எச்சரிக்கைகளையே விடுக் கின்றது.

''தனியார் நலன்களின் நோக்கில் தனியாரால் தொழிற்சாலை கள் நடத்தப்பெறும் இந்திய நாட்டின் தொழிலாளர் வாழ்க்கைத் தரம் பற்றி முடிவு செய்ய ருசியா ஓர் சரியான எடுத்துக்காட்டல்ல என இந்தியத் தொழிலாளர்கள் வாதிடுதல் தவறன்று. ருசியாவில் தொழிற் சாலைகள் யாவும் அரசின் உடைமையாகவே விளங்குதலால், அதில் கிடைக்கும் இலாபங்கள் தனியார் சொத்துக்களைக் கொழுக்க வைப்பதற்காகப் பயன்படுவதில்லை; அரசுக் கருவூலங்கள் வழிப் பொதுமக்களின் சொத்தாகவே சேருகின்றன. தொழிற்சாலைகளின் இலாபங்கள் நாட்டுக்கே உடைமையாகுமெனில், தொழிற்சாலை கள் காலூன்றி நிற்கத் தேவையான குறுகிய இடைக்காலத்தில் ஊதி யத்திலும் வாழ்க்கைத் தரத்திலும் குறைவான நிலையையேற்றுக் கொள்ள அந்நாட்டு மக்களைக் கோருதல் பிழையன்று; தமது தியா கங்களால் தொழிற்சாலைகள் காலூன்றி வளர்ந்து பின்னர் ஈட்டும் பெருஇலாபங்கள் தங்களையே வந்தடையும் என்பதையுணரும் தொழிலாளர் எவரும் இதற்கு மறுப்புத் தெரிவிக்க மாட்டார்கள். ஆனால் முதலாளிகளின் சொத்துக்களைக் கொழுக்க வைப்பதே தியா கங்களின் விளைவாகுமெனில் ஊதியக்குறைவுக்கும் தாழ்வான வாழ்க்கைத் தரத்திற்கும் எந்தத் தொழிலாளர்தான் ஒப்புவர்? எனவே, இந்தப் பான்மையிலான வாதங்கள் வலிவானவையென் பதை நீங்கள் மறுக்க மாட்டீர்கள்.

## தொழிலாளர் நல நிதிகள்

''தொழிலாளர் நலச் சட்டங்களை நடைமுறைப்படுத்துதற்குத் தேவையான நிருவாக அமைப்பு நம்மிடம் இல்லையென்பது ஒரு வலுவான வாதமன்று. இதைத் தொழிலாளர்கள் பல்வேறு கோணங்களில் தாக்கி வாதத்தின் ஓட்டைகளைத் தோலுரித்துக் காட்டுவர். சட்டம் ஒழுங்கை நிலைநாட்டக் காவல் படையை அரசி னால் அமைக்க முடிகிறது; வரிகளைத் திரட்ட வருவாய்த் துறை அலுவலர்களை நியமிக்க முடிகிறது; அவ்வாறே, தொழிலாளர் நலச் சட்டங்களை நடைமுறைப்படுத்த அரசினால் ஏன் இயலாது? வரிகளைத் திரட்டுவதும், சட்டம் ஒழுங்கு மீறுவோரைத் தண்டித்தல்

மட்டுமே அரசின் கடமையா? நாகரிக வாழ்வின் அடிப்படைகளில் ஒன்றான தொழிலாளர் பணிநிலைகளையும் ஒப்பந்தங்களையும் நிலைநிறுத்தல் அரசின் கடமையன்றோ? அஃது அரசின் கடமை யெனில், அக்கடமையை நிறைவேற்றுதற்குத் தேவையான நிருவாக அமைப்பை உருவாக்குதல் அரசின் முதன்மையான பணியன்றோ? நிருவாக அமைப்பு இல்லையென்பது மிகவும் சொத்தையான வாத மாகும்.

''தொழிலாளர் நலச் சட்டங்களை நடைமுறைப்படுத்துவதால் செலவுச் சுமை கூடும் என்கிற வாதம் தொழிலாளர்களின் கவனத் திற்குரியதொன்றாம். இக்கேள்வி எழுப்பப்படுவதன் அடிப்படை யையே நாம் கூர்ந்து நோக்க வேண்டும். இஃதொரு நியாயமான வாதம்தானா? அல்லது கடமையிலிருந்து விலகி ஒளிந்து கொள் வதற்கானதொரு போர்வையா? போருக்காகச் செலவிடப்பட்ட தொகையோடு ஒப்பிட்டால் தொழிலாளர் நலத் திட்டங்களுக்குத் தேவைப்படும் அற்பத் தொகையைச் சுமையெனல் வலிவான வாத மல்ல எனத் தொழிலாளர் கூறுவர். போர்க்காலத்தில் எவ்வளவு பெருமளவு நிதி திரட்டப்பட்டதென்பதையும் இதன் பொருட்டு செல்வந்தர்கள் எவ்வளவு பெரிய வரிச்சுமையை ஏற்றுக் கொண்டார் கள் என்பதையும் நாமனைவரும் நன்கறிவோம்.

''போருக்காகச் செலவிடப்பட்ட அளவிறந்த நிதிகளைப் பொது மக்கள் நலப் பணிகளில் செலவிட்டிருந்தால், வீடற்ற எளிய மக்கள் எத்தனை பேருக்கு வீட்டு வசதியளித்திருக்க முடியும்! தக்க ஆடை யின்றித் திரியும் எத்தனை பேருக்கு நல்லாடைகள் அளித்திருக்க முடியும்! பட்டினியால் தவிக்கும் மக்கள் எத்தனை பேருக்கு வயிறார உணவளித்திருக்க முடியும்! கல்வியறிவில்லா எத்தனை மக்களுக்குக் கல்வி வசதியளித்திருக்க முடியும்! நோயால் அவதியுறுவோர் எத்தனை பேருக்கு நல்ல சிகிச்சையளித்து நலமுறச் செய்திருக்க முடியும்! என்றெல்லாம் தொழிலாளர்கள் கேட்பது நியாயம் தானே? போர்ச் செலவுகளுக்காகக் கடுமையான வரிகளைத் தயங்காது செலுத்த முன்வரும் செல்வந்தர்கள், தொழிலாளர்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தும் திட்டங்களுக்காக நிதி திரட்டுவதை ஏன் எதிர்க்க வேண்டுமெனத் தொழிலாளர்கள் கேட்பதில் தவறில்லையன்றோ? இவை விடையளிக்க எளிதான வினாக்கள் அல்லவென்றே நான் கருதுகிறேன்.

''தொழிலாளர் நலச் சட்டங்கள் இயற்றுவதில் நாம் எவ்வளவு பின்தங்கியுள்ளோம் என்பதையும், இப்பணியை இனியும் நம்மால் தவிர்க்க இயலா நிலைமையையும் நான் உங்கள் முன்னர் எடுத்துரைத்தேன். எனவே, உங்கள் முன்னர் வைக்கப்பட்டுள்ள நீண்ட பணிப்பட்டியலின் உடனடித் தேவையை நான் மேலும் வலியுறுத்த வேண்டியதில்லை. பட்டியலில் எட்டு முக்கியப் பணிகள் காணப்படுகின்றன. அவற்றுள்ளும் வேலைநேரக் குறைப்பு குறித்த நிரல் II, குறைந்தபட்ச ஊதியச் சட்டம் குறித்த நிரல் III, தொழிற்சங்கங்களின் அங்கீகாரம் குறித்த நிரல் VIII ஆகியவை மிக முக்கியமானவை.

## சரிவுக்கெதிரான நடவடிக்கைகள்

''நான் இந்த நிரல்களை மட்டும் ஏன் குறிப்பாக வலியுறுத்துகிறேன் என்பதை நீங்கள் நன்கு உணர்வீர்கள். நாம் மகிழ்ச்சியோடு வரவேற்கின்ற சமாதானம் கூடவே பல சிக்கல்களையும் கொண்டு வருகிறதென்பதையும் அறிவோம். இவற்றுள் மிகக் கடுமையான சிக்கல் வேலையில்லாத் திண்டாட்டமே. இத்துன்பத்தை விரைந்து துடைப்பதிலும், இதனால் தொழிலாளர் வாழ்க்கைத் தரம் மேலும் தாழ்ந்து போகாமல் காப்பதிலும் நாம் உடனடியான சீரிய முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும். நிலைமையின் கடுமையைக் குறைக்க மூன்று முக்கிய நடவடிக்கைகள் தேவையென நம்புகிறேன். முதலாவதாகத் தொழிலாளர்களின் வேலை நேரத்தைக் குறைப்பதன் மூலம், கூடுதலான வேலை வாய்ப்புகளை உருவாக்க இயலும். இரண்டாவதாகக் குறைந்தபட்ச ஊதிய நிர்ணயிப்புக்கான வழிவகைகள். இதனை நாம் செம்மையாக நிறைவேற்றாவிட்டால் வேலையில்லாத் திண்டாட்டத்தின் விளைவாய்த் தொழிலாளர் வாழ்க்கைத் தரம் வெகுவாகக் குறைந்துவிடும்; இதனை நாம் எப்பாடுபட்டும் தடுத்தாக வேண்டும். மூன்றாவதாகத் தொழிலாளர்களும் முதலாளியரும் பொதுவான சிக்கல்களின் தீர்வுக்குக் கூட்டு பேரமுறை, சேர்ந்து உழைக்கும் பாங்கு ஆகியவற்றில் பயிற்சி பெறல் அவசியம். இதைச் சிறப்பாகச் செய்தற்குப் பொறுப்பும் வலிவும் கொண்ட தொழிற்சங்கங்களே சிறந்த வழி என்பதே எனது மதிப்பீடு.

''தொழிலாளர் நலத்துறை சரியாகச் செயல்படவில்லையென்று நான் வலியுறுத்த முனையவில்லை. நமது குறிக்கோளை நோக்கி முன்னேறுவதில் ஒரு பெரும் தடை எதிர்ப்படுகின்றது. ஐ.எல்.ஓ. நடைமுறை நெறிகள் பலவற்றுக்கு நாம் இதுவரை ஒப்பிசைவு

தராமலிருப்பதன் விளைவாகவே இத்தடை எழுகிறது. நெறிகளைச் செயல்படுத்துவதற்கு அரசுக்கு விருப்பமின்மை காரணமல்ல; நடைமுறை நெறிகளை மாற்றம் சிறிதுமின்றி ஏற்றுக் கொள்ள வேண்டுமென்பதாலேயே அவற்றுக்கு ஒப்பிசைவு அளிப்பதில் இடர்ப்பாடு தோன்றுகிறது. ஐ.எல்.ஓ. நடைமுறை நெறிகளை ஒன்று முழுமையாக ஏற்க வேண்டும்; அன்றேல் விட்டுவிட வேண்டும் என்ற நிலை, பல்வேறு கட்டங்களில் படிப்படியாக முன்னேறத் திட்டமிடும் இந்தியா போன்ற வளரும் நாடுகளுக்கு உதவிகரமாக இல்லையென்பதை இங்கு குறிப்பிடத்தான் வேண்டும்.

## படிப்படியான முன்னேற்றம்

''வளர்ச்சிப் பாதையில் மாறுபட்ட நீண்ட பயணங்கள் தேவைப் படும் ஆசிய நாடுகளின் நிலைமைக்கேற்றவாறு, ஐ.எல்.ஓ. விதி முறைகளில் உரிய மாற்றங்கள் தேவையென வலியுறுத்தக் கருதி யுள்ளேன். இப்போதைய விதிமுறைகளில் மாற்றம் செய்தல் அறவே இயலாதெனக் கூறுவதற்கில்லை. படிநிலை வளர்ச்சிக்கான அமைப்பு நெறியொன்றை உருவாக்குதல் ஐ.எல்.ஓ.க்கு இயலக் கூடியதே. அமைப்பு நெறிகளைப் படிப்படியாகச் செயல்ப்டுத்தி, குறிப்பிட்ட காலவரையறைக்குள் முழுமையாக நிறைவேற்ற வேண்டுமென்று ஐ.எல்.ஓ. விதிமுறை வகுக்கலாம். ஒரு பன்னாட்டு நெறிமுறை ஏட்டுச்சுரைக்காயாக முடங்கிக் கிடப்பதைவிடப் படிப் படியாகச் செயலாக்கம் பெறுதலே மேல் என்பதை நீங்கள் அனை வரும் ஏற்பீர்களென்பது உறுதி.

''நீங்கள் தவறான கருத்து கொள்ளாதிருக்கும் பொருட்டு, மற்றொரு தகவலையும் நான் கூறியாக வேண்டும். இம்மாநாட்டின் அமைப்பை மாற்றுவதற்கான முன்மொழிவுகள் சிலவற்றை ஆராயக் கடந்த ஆண்டு மாநாடு ஒரு குழுவை நியமித்தது உங்களுக்கு நினை விருக்கும். குழுவின் அறிக்கை குறித்து அரசு என்ன நடவடிக்கை எடுத்துள்ளது என்பதை அறிய உங்களுக்கு ஆவல் இருக்கும்.

''குழு பரிந்துரைத்துள்ளவாறு, மாநாட்டில் மாற்றம் ஏதும் செய்ய வேண்டியதில்லையென்று அரசு முடிவு செய்துள்ளது. குழு பரிந்துரைத்துள்ளபடி அமைப்பின் பெயரை மாற்றுவதற்கு மேல் வேறேதும் செய்ய அரசுக்கு இப்போது உத்தேசமில்லை. அமைச் சர்கள் மாநாடு, முத்தரப்பு மாநாடு, விரிவடைந்த மாநாடு என்ற பெயர்களில் இதுவரை நடந்து வந்த இம்மாநாடு இனி, தொழிலாளர்

நல மாநாடு என்றே அழைக்கப்படும் எனக் குழு செய்துள்ள பரிந்துரையை மகிழ்ச்சியுடன் வரவேற்கிறேன். பெயரில் என்ன இருக்கிறது என்ற ஷேக்ஸ்பியரின் கூற்றை நானும் அறிவேன்; எனினும் முத்தரப்பு, விரிவடைந்த என்ற சொற்களை விடத் தொழிலாளர் என்ற சொல்லில் கவர்ச்சி அதிகமில்லையென்றாலும், இந்தியத் தொழிலாளர் மாநாடு என்று மாற்றியமைப்பதன் மூலம் இக் குறையைப் போக்கிவிட முடியும். இதை நீங்களும் ஏற்றுக்கொள்வீர் களெனக் கருதுகிறேன்.

''குழு பரிந்துரைக்காத மற்றொரு நடவடிக்கையையும் அரசு மேற்கொள்ளவுள்ளது; அஃதாவது, மாநாட்டின் செயல்பாடுகளை விரிவாக்க அரசு முடிவு செய்துள்ளது.

''கடைசியாகப் பாரிசில் நடைபெற்ற ஐ.எல்.ஓ. மாநாட்டில், ஐ.எல்.ஓ. இதுவரை உருவாக்கிய நடைமுறை நெறிகள் அனைத்தையும் முழுமையாக இம்மாநாட்டில் முன்வைப்பதாக இந்திய அரசுச் சார்பாளர் உறுதி கூறியுள்ளார். அந்த உறுதியைக் காப்பாற்றுவதென்று இந்திய அரசு முடிவு செய்துள்ளது. உங்களுக்குக் கொடுக்கப் பட்டுள்ள இப்புதிய அதிகாரங்களையும், செயல்பாடுகளையும் வரவேற்பீர்கள் என்பதில் எனக்கு நம்பிக்கையுண்டு. ஐ.எல்.ஓ. அமர்வுகளில் நடைபெற்றவை யாதென மாகாண, சமஸ்தான அரசுகள் அறிந்து கொள்ள இது உதவும்; மேலும் இதுகுறித்து தொழிலாளர்கள், முதலாளிகள் கருத்துக்களை அறிதலும் பயனுள்ளதாய் அமையும்.''

## மாநாட்டின் செயல்முறைகள்

நவம்பர் 27இல் நடைபெற்ற, இந்தியத் தொழிலாளர் மாநாட்டில் மத்திய அரசு, மாகாண அரசுகளின் சார்பாளர்கள், சமஸ்தான அரசுகள் ஆகியவற்றின் தொழிலாளர் மற்றும் முதலாளிகளின் சார்பாளர் இடம்பெற்றிருந்தனர். இந்தியத் தொழிற்சாலைகளில் வேலை நேரம் வாரத்திற்கு 48 மணி நேரம் எனும் கொள்கையை அனைவரும் முழுமனதாய் ஏற்றுக்கொண்டனர். தொழிற்சாலைகளில் உணவகங்கள் நிறுவுதலைச் சட்டப்பூர்வ கடமையாக்குதற்கும், 1934 ஆம் ஆண்டின் தொழிலாளர் இழப்பீட்டுச் சட்டத்தில் சில திருத்தங்களைச் செய்வதற்குமான மத்திய அரசின் முன்மொழிவுகளும் மிகப் பெரும்பான்மையான சார்பாளர்களால் ஏற்றுக்கொள்ளப் பட்டன.

தொழிலாளர்கள் தங்கள் குடிமைப் பண்புகளை வளப் படுத்திக் கொள்ளுதற்கும், தங்கள் செயல்திறனை மேம்படுத்திக் கொள்ளவும், தொழிற்சாலைக்கு வெளியே அதிக நேரம் அவர் களுக்குக் கிடைக்க வேண்டுமென்பதற்காக, வேலைநேரம் குறைக்கப் படலாம் எனும் தொழிலாளர் நலத்துறையின் அறிக்கை சுட்டிக் காட்டியது. போர்க்காலப் பணிகளில் கடுமையாக உழைத்துத் திரும்பியுள்ள தொழிற்சாலை பணியாளர்களுக்கு பணியின் கடுமை குறைக்கப்பட வேண்டியதன் தேவையை அனைவரும் உணர்ந்துள்ள இத்தருணமே வேலை நேரக் குறைப்புத் திட்டத்தைக் கொண்டு வர உகந்தது என்றும் வலியுறுத்தப்பட்டுள்ளது. மேலும், வேலை நேரத்தைக் குறைப்பதன் மூலம் வேலை வாய்ப்புகள் அதிகரிக்கவும் வழி தோன்றுகிறது. வேலை நேரக் குறைவு காரணமாக அடிப்படை ஊதியத்தைக் குறைக்கக் கூடாதென்றும், விலைகளின் வீழ்ச்சி இருந்தா லன்றி பஞ்சப்படியையும் குறைக்கக் கூடாதென்றும் அறிக்கை வலியுறுத்தியுள்ளது. அளவுசார் கூலி பெறும் தொழிலாளர்கள் பெறும் ஊதியம் நேரம்சார் பணியாளர்களின் ஊதியத்திற்கு குறைவாக இருக்கக் கூடாதெனும் அடிப்படையில், அளவுசார் பணியாளர் களின் ஊதியம் நிர்ணயிக்கப்பட வேண்டும் என்றும் வலியுறுத்தப் பட்டது.

இடம்பெயர்ந்த போர்ப் பணியாளர்களுக்கும் படை வீரர் களுக்கும் மறுகுடியமர்வு, வேலைவாய்ப்பு ஆகியவற்றில் உதவு வதற்காக தொழிலாளர் நலத்துறை நிறுவிய வேலை வாய்ப்பு அலு வலர்களின் அமைப்பு, செயல்பாடுகள் ஆகியவை குறித்தும் மாநாடு விவாதித்தது.

இது குறித்துத் தொழிலாளர் நலத்துறையின் அறிக்கையில், வேலை வாய்ப்புகள் பற்றிய விரிவான விவரங்கள் கிடைத்தால் தான் வேலைவாய்ப்பு அலுவலகங்கள் பயனுள்ள வகையில் பணிபுரிய முடியும் என்பதும் குறிப்பிடத்தக்கது. வேலைவாய்ப்பு அலுவலகங்கள் தொடர்ந்து திறமையுடன் செயல்பட்டால் வேலை தேடுவோர், வேலை அளிப்போர் இருசாரார்க்குமே நன்மை பயப்ப தோடு உற்பத்தித் துறைகள் அனைத்திலும் போதிய பணியாளர்கள் விரவி அமைவதை உறுதி செய்ய இயலும். மேலும், தொழிலாளர் கள் தமது பணிகளையும் பணி இடங்களையும் தேவைக்கேற்ப மாற்றிக் கொள்ள உதவுவதுடன் பல்வேறு தொழில்களுக்கும் பணி யாளர்கள் கிடைப்பதை உறுதி செய்யலாம்.

வேலை நிறுத்தம், கதவடைப்பு போன்ற காலங்களிலும் பிற காரணங்களால் வேலை இல்லாமை நிகழும் சமயங்களிலும் தொழிலாளர்களுக்கு இழப்பீடு தருதல் குறித்து, வேலைவாய்ப்பு அலுவலகங்களின் அணுகுமுறை எவ்வாறு இருக்க வேண்டும் என்பது பற்றியும் அன்றைய அமர்வில் முடிவு செய்யப்பட்டது. முதலாவது பொருள் குறித்த விவாதம் மறுநாளைக்கு ஒத்திவைக்கப்பட்டது. இரண்டாவது பொருள் குறித்து எந்தவித முடிவுக்கும் வர இயலவில்லை.

## குறைந்தபட்ச ஊதியம்

ஏழாவது அமர்வை நிறைவு செய்வதற்காக மாநாடு நவம்பர் 28 ஆம் தேதி கூடியபோது மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் குறைந்தபட்ச ஊதியம் குறித்த சட்டம் பற்றி அரசுக்கு ஆலோசனை கூறுவதற்காக, **1926** ஆம் ஆண்டின் இந்திய தொழிற்சங்க சட்டத்தை திருத்துவதற்குப் பரிந்துரைக்க தொழிலாளர் சார்பாக இருவரும், முதலாளிகள் சார்பாக இருவரும் கொண்ட குழுவை அரசு நியமித்திருப்பதாகத் தெரிவித்தார்.

இவ்விரண்டு நடவடிக்கைகளும் கொள்கையளவில் மாநாட்டில் ஏற்றுக்கொள்ளப்பட்டாலும், மாநாட்டு விவாதங்களின் போது மாறுபட்ட கருத்துகள் பல தெரிவிக்கப்பட்டன. இவ்விரு நடவடிக்கைகள் குறித்தும் விரிவாக ஆய்வு செய்ய வேண்டுமென்று பலர் தெரிவித்ததை ஒட்டியே குழு நியமிக்கப்பட்டது.

வேலைவாய்ப்பு அலுவலகங்கள், வேலை நிறுத்தம், கதவடைப்பு காலங்களில் நடந்து கொள்ள வேண்டிய அணுகுமுறை குறித்த சட்டதிட்டங்களை வகுப்பது குறித்து மாநாட்டில் ஒருமித்த கருத்து தெரிவிக்கப்பட்டது. அதாவது, வேலைநிறுத்தம், கதவடைப்பு காலங்களில், வேலைவாய்ப்பு அலுவலகங்கள் காலியிடங்கள் பற்றிய தகவல்களை ஏற்றுக் கொண்டு, தகுதியான விண்ணப்பதாரர்களுக்கு, தொழில் தகராறு பற்றிய விவரங்களுடன் தகவல் தர வேண்டுமென்றும் ஒப்புக்கொள்ளப்பட்டது. அவர்கள் தொழிலாளர்களைப் பதிவு செய்துகொண்டு, தொழில் தகராறுகளால் வேலை இழந்தவர்கள் என்ற குறிப்புடன் வேறு நிறுவனங்களுக்கு பணிக்கு அனுப்பப்பட வேண்டுமென்றும் பரிந்துரைக்கப்பட்டது.



# 53

## [1]ஒரிஸ்ஸாவில் பாயும் ஆறுகளின் வளர்ச்சிக்கான பல்நோக்குத் திட்டம்

### டாக்டர் பி.ஆர். அம்பேத்கரின் கட்டாக் உரை

''வெள்ளக் கொடுமைகளில் இருந்து விடுபடுவதற்கு ஒரிஸ்ஸா விரும்புகிறது. மேலும் மலேரியா போன்ற (அமெரிக்க வருணனையில்) வருவாய் குறைந்தோர் நோய்கள் மக்களின் நலத்தைப் பாதித்து, அவர்களுடைய ஆற்றல் திறத்தையும் குறைத்துவிடும் கொடுமையிலிருந்து விடுபடுவதற்கும் ஒரிஸ்ஸா விரும்புகிறது. மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த பாசனம், நீர்வழிப் போக்குவரத்து, மலிவான மின்னாற்றல் ஆகியவற்றைப் பெருக்கி முன்னேற்றம் காணவும் ஒரிஸ்ஸா விரும்புகிறது. இந்த நோக்கங்கள் அனைத்தையும் ஆற்று வெள்ளத்தை அணைக்கட்டுகளில் தேக்கிச் சேமிக்கும் திட்டமொன்றின் மூலமாகவே நிறைவேற்றிட முடியும்.''

நவம்பர் 8 இல் கட்டாக்கில் நடைபெற்ற மத்திய அரசு, ஒரிஸ்ஸா, மத்திய மாகாணங்கள், கிழக்கு சமஸ்தானங்கள் ஆகிய அரசுகளின் மாநாட்டில் இந்திய அரசின் தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் மேற்கண்டவாறு குறிப்பிட்டார். இம்மாநாடு ஒரிஸ்ஸாவில் பாயும் ஆறுகளின் வளத்திட்டங்களை ஆராய கூட்டப்பட்டது.

### ஒரிஸ்ஸாவின் பிரச்சினைகள்

ஒரிஸ்ஸாவின் பிரச்சினைகள் குறித்து தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் குறிப்பிட்டதாவது: ''வெள்ளம்தான் பிரச்சினை என்று கூறுவது பிரச்சினையை மிகவும் சாதாரணத்தனமாக்கிக் கூறுவதாகும். ஆனால் இச்சிக்கலை, நான் வேறு கண்ணோட்டத்தோடு நோக்குகிறேன். ஒரிஸ்ஸாவைப் பற்றி எண்ணும்போது அவர்கள் படும் துயரம் ஒன்றல்ல மிகப்பல என்றே எனக்குத் தோன்றுகிறது.

---

1. இந்தியத் தகவல் ஏடு, டிசம்பர் 15, 1945 பக். 692-95.

''ஒரிஸ்ஸாவின் துன்பமாக அனைவரும் அறிந்துரைக்கிற ஒன்று அம்மக்கள் வெள்ளத்தால் அடையும் உயிர், உடைமை இழப்புகளும், பாதுகாப்பின்மை எனும் அச்சமுமே ஆகும். இத்துயரத்திற்கு வெள்ளம் மட்டுமே காரணமல்ல. வறட்சியும் பஞ்சமும் கூட அவர்களுக்குத் துன்பம் விளைவிக்கின்றன. வெள்ளம் விளைவிக்கின்ற துன்பங்களுக்குச் சற்றும் குறையாத அளவில் வறட்சியும் பஞ்சமும் அவர்களை வாட்டுகின்றன. 1866 ஆம் ஆண்டின் வறட்சியின்போது பூரி மாவட்ட மக்கள் தொகையில் 40 சதவீதம் அழிந்து விட்டதாக அறிகிறோம்.

''ஒரிஸ்ஸாவின் துயரங்களில் மற்றொன்று நலக்கேடாகும். ஒரிஸ்ஸா மாநிலத்தின் மொத்த மக்கள் தொகை 77½ இலட்சம். மாகாணத்தின் நலத்துறை அறிக்கையின்படி 1944 ஆம் ஆண்டில் இறந்தோர் எண்ணிக்கை 2,35,581. இதில் மலேரியா முதலிய காய்ச்சல்களால் (பெரும்பாலும் மலேரியாவால்) மட்டுமே 1,30,000 பேர் இறந்துள்ளனர். அதாவது, ஒரிஸ்ஸாவின் மக்கள் தொகையில் அவ்வாண்டில் 3% மக்கள் இறந்துள்ளனர். அதில் பாதிப்பேர் மலேரியாவால் இறந்துள்ளனர். இது மிக அதிகமெனலாம். 1944 ஆம் ஆண்டில் மாணவர் தொகையில் 19% உணவுப் பற்றாக்குறையால் பாதிக்கப்பட்டனர். குறிப்பாக 8.7% மாணவர்களிடம் வைட்டமின் பற்றாக் குறை காணப்பட்டது.

இந்தத் தகவல்கள் உண்மையெனில் ஒரிஸ்ஸாவை வறுமைக் கோட்டுக்கு மேலுள்ள மாநிலம் என்று கூறமுடியாது. ஒரிஸ்ஸாவின் மூன்றாவது துன்பம் (துன்பமெனக் கருதலாம் என்பது எனது கருத்து) போதிய தகவல் தொடர்பின்மையாகும். ஒரிஸ்ஸா ஒரு மூடப்பட்ட பிரதேசமாகும். கிழக்குக் கடற்கரையை ஒட்டி அமைந்துள்ள ரயில்பாதை ஒன்றைத் தவிர உள்நாட்டுப் பகுதிகளோடு தொடர்பு கொள்ளத் தகுந்த வசதிகளேதும் அங்கு இல்லை.''

டாக்டர் அம்பேத்கர் ''ஒரிஸ்ஸா தொடர்ந்து நிலைதாழ்ந்த மாநிலமாகவே விளங்க வேண்டுமா?'' என்ற வினாவை எழுப்பி, ''தேவையில்லை; ஏனென்றால் ஒரிஸ்ஸா மாநிலம் ஏராளமான இயற்கை வளங்களைப் பெற்றுள்ளது. நிலக்கரி, இரும்பு, குரோமியம், பாக்சைட், சுண்ணாம்புக்கல், கிராப்பைட், மைக்கா போன்ற கனிமவளங்களுடன் ஏராளமான மூங்கில் காடுகளையும் கொண்டுள்ளது.''

''இவை அனைத்துக்கும் மேலாக ஒரிஸ்ஸா மாநிலம் ஏராள மான நீர்வளம் கொண்டதாகும். ஒரிஸ்ஸாவின் ஆறுகளில் ஏராள மான அளவில் நீர் பாய்கிறது. கட்டாக், பூரி, பாலசோர் ஆகிய மாவட்டங்களை உள்ளடக்கிய 8000 சதுரமைல் டெல்டாப் பரப்பில், மகாநதி, பிரமானி, பைத்தராணி ஆகிய ஆறுகளும் அவற்றின் எண் ணற்ற கிளை ஆறுகளும் பாய்கின்றன.

''இந்த டெல்டாவில் புராபலாங், சப்ரமரேகா என்று (அவ் வளவு முக்கியமில்லாத) மேலும் இரண்டு நதிகள் பாய்கின்றன. மேலே குறிப்பிடப்பட்ட மூன்று முக்கிய நதிகளும் டெல்டாப் பகுதிக்கு முன்பாய் அமைந்துள்ள மத்திய மாகாணங்கள், பீகார், கிழக்கு சமஸ்தானங்கள் ஆகியவற்றில் 69,800 சதுரமைல் பரப்பி லிருந்து நீரை வடித்துக் கொண்டு வருகின்றன. இவற்றுள் மிகப் பெரியதான மகாநதி மட்டுமே 51,000 சதுரமைல் பரப்பிலிருந்து நீரை வடித்துக் கொண்டு வருகிறது. இம்மூன்று நதிகளும் சேர்ந்து, ஆண்டுதோறும் 9 கோடி ஏக்கர் அடி நீரைக் கடலுக்குள் செலுத்திக் கொண்டிருக்கின்றன.''

## நீர்ச் செல்வத்தின் பயன்பாடு

தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தொடர்ந்து கூறிய தாவது: ''இவ்வளவு வளங்களை வைத்துக் கொண்டு ஒரிஸ்ஸா ஏன் தொடர்ந்து பின்தங்கிய ஏழை மாநிலமாக விளங்க வேண்டும்? இதற்கு எனக்குத் தோன்றும் விடை என்னவெனில் ஒரிஸ்ஸா மாநிலம் தனது நீர்வளத்தைச் சிறந்த முறையில் பயன்படுத்தும் வழியை அறியவில்லை என்பதே. வெள்ளச்சேதத்தைக் குறித்துப் பலமுறை ஆய்வு செய்துள்ளனர் என்பதில் ஐயமேதுமில்லை. 1872 ஆம் ஆண்டிலேயே திரு. ரேனந்தைக் கொண்டு ஒரு பொது ஆய்வு நடத்தப்பட்டது. அவருடைய ஆய்வறிக்கை என்னவாயிற்று என்பது தெரியவில்லை. அதன் பின்னர் 1928 வரை வேறு முயற்சிகளேதும் நடைபெற்றதாகத் தெரியவில்லை. 1928இல் இருந்து 1945 வரை வெள்ளப் பிரச்சினையை ஆய்வதற்காகத் தொடர்ந்து பல குழுக்கள் அமைக்கப்பட்டன.

''1928 ஆம் ஆண்டில் புகழ்பெற்ற வங்காளத் தலைமைப் பொறியாளர் திரு. ஆடம்ஸ் வில்லியம்ஸ் தலைமையில் ஒரிஸ்ஸா வெள்ள ஆய்வுக்குழு அமைக்கப்பட்டது. 1937 ஆம் ஆண்டில் திறமை மிக்க திரு. எம். விசுவேசுவரய்யா பொறுப்பில் ஆய்வு நடத்தப்

பட்டது. அவர் 1937 ஆம் ஆண்டில் ஒன்றும், 1939 ஆம் ஆண்டில் ஒன்றுமாக இரண்டு ஆய்வறிக்கைகள் கொடுத்துள்ளார். இவரது பணி ஒரிஸ்ஸா வெள்ள ஆலோசனைக் குழுவால் தொடர்ந்து நிகழ்த்தப்பட்டது. இக்குழு 1938 ஆம் ஆண்டில் ஒரு தொடக்கநிலை அறிக்கையும், 1942 ஆம் ஆண்டுவரை தொடர்ந்த பணியில் மேலும் மூன்று இடைக்கால அறிக்கைகளும் கொடுத்தது. அண்மைக்கால முயற்சியாக, 1945 மார்ச் 15இல் ஒரிஸ்ஸா அரசாங்கம் கட்டாக்கில் கூட்டிய வெள்ள மாநாடு பற்றிக் குறிப்பிடலாம்.

''இக்குழுக்களில் மரியாதைக்குரிய உறுப்பினர்கள் பலர் பணி யாற்றி உள்ளனர் என்றாலும் அவர்கள் சரியான அணுகுமுறையில் செயல்படவில்லை என்பதை வருத்தத்துடன் கூறவேண்டியுள்ளது. அவர்கள் அனைவருமே மிகுதியாகப் பாயும் நீரை ஒரு தீமை என்றே கருதி சேதம் அதிகமில்லாமல் அதனை கடலுக்குள் அனுப்பிவிடும் வழிமுறைகளைப் பற்றியே சிந்தித்தனர். இவையனைத்தும் மிகவும் தவறான கருத்துக்கள் என்பதும், மக்களின் நலன்களுக்கு ஊறு விளை விக்கக் கூடிய கருத்துக்கள் என்பதும் இப்போது உணரப்படுகிறது.

## நீர்ச் சேமிப்பு

''மிகுதியாகக் கிடைக்கும் நீர் தீங்கு செய்யும் என்பது தவறான கருத்தாகும். தீமையாக முடியும் அளவுக்கு மிகுதியான நீர் ஒரு போதும் கிடைக்கப் போவதில்லை. மக்கள் மிகுந்த நீரில் துன்பப் படுவதை விட நீர்ப் பற்றாக்குறையாலேயே மிகவும் துன்பப்பட்டு வந்துள்ளனர். இயற்கை நமக்கு நீரைத் தருவதில் கஞ்சத்தனம் காட்டு கிறது என்பது மட்டுமே துன்பமன்று. அதை, சரியான நேரத்தில் தராமையாலும் புயலும் வறட்சியுமாய் மாறிமாறித் துன்பம் விளை கிறது. இருப்பினும் நீர் ஓர் அருஞ்செல்வமே என்பதை மறுப்பதற் கில்லை. நீர் என்பது மக்களின் சொத்து என்பதோடு அது சரியான வகையில் விநியோகிக்கப்படாததால், அதைப் பற்றிக் குறை கூறு வதை விடுத்து நீரைச் சேமிக்கும் முயற்சியே சரியான அணுகுமுறை யாகும்.

''மக்கள் நலநோக்கில் நீரைச் சேமிப்பதே தலையாய பணி யெனில், ஆற்றுக்குக் கரைகட்ட நினைப்பது தவறான திட்டமாகும். நீரை சேமிக்க விரும்பும் நமது குறிக்கோளுக்கு உதவாமல் நீரை வீணடிப்பதிலேயே இத்திட்டம் செயல்படுமென்பதால் அதனைக் கைவிட வேண்டும். ஒரிஸ்ஸா மாநில டெல்டாப் பகுதி நீர் நிறைந்த

பகுதி என்பதோடு, மிகை நீரால் வரும் தீமைகளும் நிறைந்த பகுதி என்பதே பொருத்தம். அமெரிக்காவிலும் மிசௌரி, மிசிசிபி, டென்னஸ்ஸி போன்ற ஆறுகளால் இத்தகைய சிக்கல்கள் தோன்றி யுள்ளன.

''எனவே, ஒரிஸ்ஸா மாகாணம் இச்சிக்கல்களைத் தீர்ப்பதற்கு அமெரிக்கா கடைப்பிடித்த வழியையே பின்பற்றலாம். அவ்வழி யானது, ஆறுகளின் குறுக்கே பல்வேறு இடங்களில் அணைகளைக் கட்டி நீரை நிலையாகச் சேமித்தலாகும். பாசனத்துக்கு மட்டுமன்றி மேலும் பல வழிகளில் இந்நீர்த் தேக்கங்கள் உதவும். மகாநதியின் நீரை மட்டுமே நாம் முழுமையாகத் தேக்கினால் பத்து லட்சம் ஏக்கர் பரப்பில் பாசனம் செய்ய உதவுமென்று கூறுகின்றனர். மேலும், தேக்கங்களில் சேமிக்கப்படும் நீரை மின்னுற்பத்திக்கும் பயன் படுத்தலாம்.

''ஏராளமான கனிம வளங்களைக் கொண்ட ஒரிஸ்ஸா மாநிலம் தொழிற்துறை வளர்ச்சியில் பின்தங்கியிருப்பதற்குக் காரணம் தொழிற்சாலைகளை நடத்துவதற்கு தேவையான மின் னாற்றல் பற்றாக்குறையே. அணை கட்டுவதன் மூலம் நீண்ட வருங்காலத்தில் ஒரிஸ்ஸா வின் தேவைக்கும் மிஞ்சியதாக ஏராள மான மின்னாற்றல் கிடைக்கப் பெறும். அத்துடன், நீர்வழிப் போக்கு வரத்துக்கும் இத்திட்டத்தைப் பயன்படுத்தலாம்.

''இந்தியாவில் நீர்வழிப் போக்குவரத்தின் வரலாறு தொடர்ச்சி யற்றுக் காணப்படுகிறது. கிழக்கிந்திய கம்பெனியின் ஆட்சிக் காலத் தில் பொதுப்பணித் துறையின் திட்டங்களில் நீர்வழிப்போக்கு வரத்து முதன்மையிடம் பெற்றிருந்தது. இன்று நாம் இந்தியாவில் காணும் போக்குவரத்துக் கால்வாய்கள் பலவும் (ஒரிஸ்ஸாவிலும் ஒரு கால்வாய் உண்டு) அக்காலக் கொள்கையின் விளைவே. ரயில் போக்குவரத்து பின்னர்தான் வந்தது. ரயில் போக்குவரத்து, கால்வாய் போக்குவரத்துகள் இரண்டையும் வளர்ச்சியுறச் செய்ய வேண்டு மென்ற கொள்கை சிறிது காலத்திற்கு தொடர்ந்தது.

''1875இல் ரயில்பாதை வளர்ச்சிக்கும் கால்வாய் வளர்ச்சிக் கும் இடையே பெரும் கருத்துப் பூசல் மூண்டது. பெரும் சிந்தனை யாளரான காலம் சென்ற சர். ஆர்தர் காட்டன், கால்வாய்களின் முன்னுரிமைக்காக தீவிரமாகப் போராடினார். ஆனால், ரயில்வே ஆதரவாளர்களே வெற்றி பெற்றனர்.

''கால்வாய்களைப் புறந்தள்ளி ரயில்பாதை வளர்ச்சி பெற்றது எனக்கு மகிழ்ச்சியளிக்கவில்லை. மேலும், கால்வாய்கள் போதிய வருவாய் அளிக்கவில்லையாதலால் அவை மூடப்பட வேண்டும் என்று ரயில்பாதை ஆதரவாளர்கள் வைத்த வாதமும் அறியாமை யின் விளைவே என்று கருதுகிறேன். கால்வாய்களில் இருந்து போதிய வருவாய் கிடைக்கப்பெறாமைக்குக் காரணம் அவற்றைச் சரியாக பூர்த்தி செய்யாமல் விட்டதுடன் பல பகுதிகளில் சிதைவுற விட்டுவிட்டமையாலும் தானேயன்றிப் பொருளாதார காரணத் தால் அன்று. கடந்த காலத்தில் புறக்கணித்ததைப் போன்று இனியும் நாம் நீர்வழிப் போக்குவரத்தை விட்டுவிட முடியாதென்று உறுதி யாகக் கருதுகிறேன். பழைய கால்வாய்களைச் சீரமைத்தும் புதிய கால்வாய்களைச் செம்மையுற அமைத்தும் ரயில் பாதைகளுக்கு குறையாத திறத்துடன் கால்வாய்ப் போக்குவரத்தை நடத்துவதற்கு நாம் ஜெர்மனியிடமிருந்தும், ருசியாவிடமிருந்தும் பாடம் கற்றுக் கொள்ள வேண்டும்.''

## சிறப்புக் கூறு

பாசனத்திற்கும் மின் உற்பத்திக்கும் பயன்படுவதுடன் நெடுந் தூர நீர்வழிப் போக்குவரத்துக்கும் வாய்ப்பாக அமைந்திருத்தலே ஒரிஸ்ஸா ஆறுகளின் சிறப்புக் கூறு என்பதை தொழிலாளர் நலத் துறை உறுப்பினர் மேலும் வலியுறுத்திக் கூறினார். ''சந்த்பாலியை சாம்பல்பூர் மற்றும் அதற்கப்பால் உள்ள பகுதிகளுக்கும் உள்நாட்டு நீர்வழி மூலம் இணைப்பதற்கு மூன்று அணைக்கட்டுக்களைக் கட்டி வழிவகுக்க முடியும். மலையிலிருந்து ஆறு தரையிறங்குமிடத் தில் (நராஜிலிருந்து ஏழுகல் தொலைவில்) ஓர் அணையும் திக்கிப் பாறையில் ஓர் அணையும் சாம்பல்பூருக்கு அப்பால் ஓர் அணையும் ஆக மூன்று அணைகள் கட்டினால் இவற்றை 350 மைல் நீள கால் வாய்கள் மூலம் இணைத்து, ஆண்டு முழுவதும் மலிவான பயணி மற்றும் சரக்குப் போக்குவரத்து வழியாகப் பயன்படுத்த இயலும். கடலில் இருந்துவரும் சிறு கப்பல்கள் கால்வாய்கள் வழியே உள்நாட்டுக்குள்ளும் பயணத்தைத் தொடர்ந்து கட்டாக், சாம்பல்பூர் ஆகிய நகரங்களின் வழியே மத்திய மாநிலம் வரைத் தொடர்பு கொள்ள முடியுமெனில் நாம் பெறும் நலன்களைக் கற்பனை செய்து பாருங்கள். தீமையாகக் கருதப்படும் ஒன்றை நன்மை தரும் ஆற்ற லாக மாற்றும் திறன் இத்திட்டத்தில் இருப்பதை உணரலாம்.

''வெள்ளக் கொடுமைகளில் இருந்து விடுபடுவதற்கு ஒரிஸ்ஸா விரும்புகிறது. மேலும் மலேரியா போன்ற (அமெரிக்க வருணனையில்) வருவாய் குறைந்தோர் நோய்கள் மக்களின் நலத்தைப் பாதித்து, அவர்களுடைய ஆற்றல் திறத்தையும் குறைத்துவிடும் கொடுமையிலிருந்து விடுபடுவதற்கும் ஒரிஸ்ஸா விரும்புகிறது. மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த பாசனம், நீர்வழிப் போக்குவரத்து, மலிவான மின்னாற்றல் ஆகியவற்றைப் பெருக்கி முன்னேற்றம் காணவும் ஒரிஸ்ஸா விரும்புகிறது. இந்த நோக்கங்கள் அனைத்தையும் ஆற்று வெள்ளத்தை அணைக்கட்டுகளில் தேக்கிச் சேமிக்கும் திட்டமொன்றின் மூலமாகவே நிறைவேற்றிட முடியும்.

## பல்நோக்கு நீர்த்தேக்கங்கள்

''எனவே 1945இல் நடைபெற்ற ஒரிஸ்ஸா மாகாண வெள்ளக் காப்புக் குழுவின் கூட்டத்தில், ஒரிஸ்ஸாவின் வெள்ளக்கேடுகளுக்கு சரியான இறுதித்தீர்வு பல்நோக்கு நீர்த்தேக்கங்களைக் கட்டுவதே என்று தீர்மானிக்கப்பட்டதைக் குறித்து நான் மிக மகிழ்ச்சியடைகிறேன். நானோ, இது ஒன்றே உரிய தீர்வாகக் கருதப்பட்டு, உடனடித் திட்டமாக ஏற்றுக்கொள்ளப்பட வேண்டுமென்று கருதுகிறேன். இத்திட்டத்தினால் பெறக்கூடிய வாய்ப்புகள் பலருக்கு இப்போது புலனாகாதிருக்கலாம். ஆனால், கிடைக்கும் நன்மையோ மிகப் பெரிது. எனவே, கிடைக்கக்கூடிய நன்மையின் தன்மை பற்றி ஒரிஸ்ஸா மாகாண அரசுக்கும், ஒரிஸ்ஸா மாகாண மக்களுக்கும் ஓரளவேனும் தெரிவித்து, இத்திட்டத்தில் அவர்களுக்கு ஆர்வத்தைத் தூண்ட வேண்டும்.

''ஒரு ஒப்புமையின் மூலம் இதனை ஒருவாறு உணர்த்த முடியும். அமெரிக்காவில் போல்டர் அணை கட்டப்பட்டதன் மூலம் உருவாக்கப்பட்ட நீர்த்தேக்கமே, உலகின் செயற்கை ஏரிகளில் மிகப் பெரியது. அதனோடு ஒப்பிடக்கூடிய அளவில் தமிழ்நாட்டில் மேட்டூர் அணையும், ஐதராபாத் சமஸ்தானத்தில் துங்கபத்திரை அணையும் கட்டப்படவிருப்பதாக அறிகிறோம். ஒரிஸ்ஸாவில் அணை கட்டப்பட்டால் மேட்டூர், துங்கபத்திரா அணை போல் மூன்று மடங்கு நீரைத் தேக்கக்கூடிய நீர்த்தேக்கம் உருவாகும். மகாநதி மட்டுமே ஆண்டுதோறும் 65 கோடி 50 லட்சம் ஏக்கர் அடி நீரைச் செலுத்துகிறது. அதாவது, மேட்டூர் அணையின் கொள்ளளவு போல் முப்பது மடங்கு நீர்-துங்கபத்திரா அணையின் கொள்ளளவு போல் இருபது மடங்கு. இந்நீரில் எவ்வளவு பகுதியைச் சேமிக்கும்

வகையில் நாம் அணைகட்ட இயலும் என்பது ஆய்வுக்குப் பிறகே தெரியும். ஒரிஸ்ஸா, அசாம் மக்களும் தங்களுக்கு நல்வாய்ப்பாகக் கிடைக்கும் இத்திட்டத்தை நடைமுறையில் செயலாக்கிப் பெருமிதம் கொள்ளலாம்.''

டாக்டர் அம்பேத்கர் தொடர்ந்து கூறியதாவது: ''இக்கூட்டத்தின் நிகழ்ச்சிநிரல் மிகவும் எளியது. அதன் கூறுகள் (1) ஒரிஸ்ஸாவில் ஓடும் ஆறுகளில் பல்நோக்கு திட்டங்களை வகுக்கும் நோக்கில் கள ஆய்வுகள் நடத்துதல் குறித்து ஆலோசித்தல். திட்டத்தின் நோக்கங்களாவன: (அ) வெள்ளக் கட்டுப்பாடு (ஆ) நீர்வழிப் போக்குவரத்து (இ) பாசனமும் வடிகாலும் (ஈ) மண் பாதுகாப்பு (உ) மின்னுற்பத்தி ஆகியன. (2) மகாநதியில் வெள்ளக்கட்டுப்பாடு மற்றும் வளர்ச்சித் திட்டங்களுக்கான கள ஆய்வுகளைத் தீவிரமாக நடத்துதல் குறித்து ஆராய்தல், (3) மத்திய நீர்வழிப் பாசனப் போக்குவரத்து ஆணையத்தின் வழிகாட்டுதலில் மாகாண அரசுகள் மதிப்பாய்வுகளையும், கள ஆய்வுகளையும் நிகழ்த்துதல் குறித்து ஆலோசித்தல்.

''இப்பகுதியின் வளர்ச்சிக்கு முழுமையான திட்டமொன்றைத் தயாரிக்கும் நோக்கில் இங்குள்ள இயற்கை வளங்களையும் இயற்கை அமைப்புகளையும் விரிவாகக் கள ஆய்வு செய்ய வேண்டியதன் தேவை குறித்து நமக்குள்ளே ஒருமித்த கருத்து உருவாக்க முடியுமா என்று காண்பதே இன்றைய கூட்டத்தின் முக்கிய நோக்கமாகும். இப்பகுதியில் பாசனம், நீர்வழிப் போக்குவரத்து, மின்னுற்பத்தி ஆகிய வசதிகளை டெல்டாப் பகுதி மட்டுமின்றி வடிநிலம் முழுமைக்கும் உருவாக்கக்கூடிய வாய்ப்புகள் குறித்து விரிவான மதிப்பாய்வுகளும் கள ஆய்வுகளும் நடத்தப்பட்டால்தான் உண்மை நிலை குறித்து தெளிவானதொரு கண்ணோட்டத்தைப் பெற இயலும். இதுவரை நடைபெற்ற ஆய்வுகள் பெரும்பாலும் டெல்டாப் பகுதியிலேயே விரிவாக நடத்தப்பட்டுள்ளன. 1862 ஆம் ஆண்டில் மட்டும் மகாநதியின் துணை ஆறுகளை தெல்கோமா, இப்கோமா, மாட்கோமா, ஹஸ்து, ஜோன்க் ஆகியவற்றில் உத்தேச சிற்றணை அமைவிடங்களில் மதிப்பாய்வு நடந்துள்ளது என்பது தவிர வேறு ஆய்வுகள் செய்யப்படவில்லை.

''புகழ்பெற்ற பாசனப் பொறியாளர் ராய் பகதூர் கோஸ்லா தலைமையில், இந்திய அரசு நியமித்த மத்திய நீர்வழிப் போக்குவரத்து, பாசன ஆணையம்'', தனது ஆய்வுத் திட்டங்களின் ஒரு

பகுதியாக, ஒரிஸ்ஸாவில் பாயும் நீர்வள ஆய்வுகளையும் பிற ஆய்வுகளையும் விரைவில் தொடங்கவிருக்கிறது. ஆணையத்தின் ஒத்துழைப்பையும் வழிகாட்டுதலையும் பெற்று, மாநில அரசுகளும் சமஸ்தான அரசுகளும் தமது பகுதிகளில் வளர்ச்சி நோக்கிய பிற ஆய்வுகளையும் மேற்கொள்ள வேண்டியது அவசியம்.''

## நிலப்பரப்புகள் மூழ்குதல்

அம்பேத்கர் தமது உரையின் இறுதிப் பகுதியாகத் தொடர்ந்து கூறியதாவது:

''இறுதியாக, இம்மாநாட்டில் கலந்து கொண்டுள்ள அனைத்துத் தரப்பினருக்கும் இரண்டு அம்சங்களைக் கவனப்படுத்த விரும்புகிறேன். அவை திட்டத்தின் வெற்றியோடு தொடர்பு கொண்டவை என்பதையும், அவை குறித்து விரைவில் ஒரு தீர்மானத்துக்கு வரவேண்டியது அவசியம் என்பதையும் குறிப்பிட்டாக வேண்டும். முதலாவதாக, நிலப்பரப்புகள் நீரில் மூழ்கும் விளைவு குறித்து ஆய்வு செய்ய நீங்கள் தயாராக வேண்டும். அணைகள் கட்டி நீர்த் தேக்கங்களை உருவாக்கும்போது, ஒரிஸ்ஸாவிலும், கிழக்கு சமஸ்தானங்களிலும் பெரும் நிலப்பரப்புகள் நீரில் மூழ்க நேரிடும். துணை ஆறு களிலும் சில அணைகள் கட்டுவதாயிருப்பின், மத்திய மாகாணங்களிலும் சில பகுதிகள் நீரில் மூழ்க நேரிடும். ஒருங்கிணைந்த திட்டத்தின் ஒட்டுமொத்த நலன்களின் பின்னணியில் இச்சிக்கல் குறித்து விரிவாக ஆலோசிக்க வேண்டும்.

''தன் வழியே ஓடி வழியில் சேதங்களையும் விளைவித்துக் கொண்டு வீணே கடலில் கலக்கும் ஆற்றுநீரைத் தடுத்து அணை கட்டுவோமெனில் சில நீர்ப் பரப்புகள் நீரில் மூழ்குவதைத் தவிர்க்க முடியாது. அவ்வாறு நீரில் மூழ்கும் நிலப்பரப்பின் விளைவாய் நாம் அடையும் இழப்பை விட, ஒருங்கிணைந்த பல்நோக்குத் திட்டம் தரும் நன்மைகள் பலமடங்கு மிகுதியானவை என்பதை எண்ணிப் பார்க்க வேண்டும். இது பிரதேசம் முழுதுக்குமான நலத்திட்டம் என்ற நோக்கில்தான் வெற்றித் திட்டமாய் அமைய முடியுமேயன்றி ஒரு குறுகிய பகுதியின் திட்டமாக ஒருபோதும் வெற்றிபெற இயலாது. இதை ஒரிஸ்ஸா மாகாணத்தின் திட்டமாகவோ, ஒரிஸ்ஸாவில் ஒரு சமஸ்தானத்தின் திட்டமாகவோ வெற்றிகரமாய்ச் செயல் படுத்த முடியாது.

"இத்திட்டம் பிராந்திய அளவிலேயே கருதப்பட வேண்டிய ஒன்றாதலின், மாகாண, சமஸ்தான அரசுகள் தங்கள் இறையாண்மையைத் தேவையான அளவுக்கு விட்டுத்தர வேண்டியிருக்கும். நான் கூற முனையும் இரண்டாவது அம்சமாவது, ஒரிஸ்ஸா மாகாணமும் ஒரிஸ்ஸாவைச் சேர்ந்த சமஸ்தான அரசுகளும் தமது பகுதியில் பாயும் ஆற்றுப் பகுதிகளின் மீதான இறையாண்மையை விட்டுத் தர வேண்டியிருக்கும் என்பதே. அப்போதுதான் இத்திட்டத்தை ஒரே ஆணையத்தின் கீழ் மாகாண மற்றும் சமஸ்தான அரசுகளின் குறுக்கீடுகளின்றி ஆய்ந்து, வடிவமைத்து நிறைவேற்ற முடியும். ஒரிஸ்ஸா மாகாண அரசுக்காகட்டும், இந்திய சமஸ்தான அரசுகளுக்காகட்டும் தமது இறையாண்மையில் சிறிது இழப்பதை விடப் பொது மக்களின் நலன் பேணலே முக்கியமானதென்பதை நான் சொல்லத் தேவையில்லை. அவர்களது இறையாண்மை மக்கள் நல மேம்பாட்டுக்கு உதவப் பயன்பட வேண்டுமேயன்றி, அத்திட்டங்களுக்குத் தடையாக முட்டுக்கட்டையாய் நிலவக்கூடாது. மத்திய அரசுடன் மாகாண மற்றும் சமஸ்தான அரசுகளும் ஒருங்கிணைந்த ஒத்துழைப்புடன் நெருங்கிப் பணியாற்றினால், இன்றைய சூழலில் வீணாகக் கடலுக்குள் பாய்ந்து, ஒரிஸ்ஸாவுக்குப் பெருந்துன்பம் விளைவித்து வரும் ஆற்றுநீராம் அருஞ்செல்வத்தை மக்களுக்குப் பெரும் பயன் தரும் வற்றாத செல்வ ஊற்றாக மாற்றிவிட முடியும்.

## ஒரிஸ்ஸாவில் பாயும் ஆறுகளின் மதிப்பாய்வு குறித்து மாநாட்டின் தீர்மானங்கள்

ஒருங்கிணைந்த பல்நோக்கு வளர்ச்சித் திட்டங்களை வகுப்பதற்கு உதவும் வகையில் ஒரிஸ்ஸாவில் பாயும் ஆறுகளைக் குறித்த தொடக்க நில மதிப்பாய்வுகளை நடத்தலாம் என்று மாநாடு முடிவு செய்தது. தொடக்க மதிப்பாய்வுகளைத் தொடர்ந்து வகுக்கப்படும் திட்டத்தில் வெள்ளக் கட்டுப்பாடு, நீர்வழிப் போக்குவரத்து, நீர்ப்பாசனம், வடிகால் அமைப்பு, மண்காப்பு, மின்னுற்பத்தி ஆகிய கூறுகள் அடங்கும்.

முதல் கட்டமாக, மகாநதியின் வெள்ளத்தைக் கட்டுப்படுத்தி வளர்ச்சித் திட்டங்களை வகுப்பதற்கான நில மதிப்பாய்வுகள் நடத்தப்பட வேண்டுமென மாநாடு ஒப்புக்கொண்டது. மேலும், மத்திய நீர்வழிப் போக்குவரத்து, பாசன ஆணையத்தின் வழிகாட்டுதல் மற்றும் மேற்பார்வையின்கீழ் மாநில அரசுகள் இந்த நில மதிப்பாய்வுகளை நடத்த வேண்டுமென்றும் ஒப்புக்கொள்ளப்பட்டது.

தொடக்கத்தில், ஆணையம் மகாநதியின் நீள முழுவதிலும் மேலோட்டமான மதிப்பாய்வு ஒன்றை நடத்தி, மாகாணத்திற்கும் சமஸ்தானங்களுக்கும் நலம் தரும் திட்டம் அமைவதற்கு வாய்ப் புண்டா என்று கண்டறிந்த பின்னர், அவ்வாறு உண்டெனில், விரி வான நில மதிப்பாய்வுகள் நடத்தப்படுமென விளக்கப்பட்டது. இந்தக் கட்டத்தில்தான் நிருவாகம், நிதித் தரப்புகளைச் சார்ந்தோரின் முழுமையான பங்கேற்பு தேவைப்படும். அதுவரை, அண்மை யில் உருவாக்கப்பட்ட மாகாண அரசின் ஒரிஸ்ஸா ஆறுகள் பிரிவின் உதவியை மட்டும் கொண்டு மத்திய நீர்வழிப்போக்குவரத்து, பாசன ஆணையம் தொடக்க, மதிப்பாய்வுகளை நடத்திவரும். மேலும், மத்திய மாகாணங்கள் அரசும், கிழக்கு சமஸ்தான அரசுகளும், தங்க ளிடம் ஏற்கெனவே கிடைத்துள்ள தகவல் விவரங்களை மத்திய நீர்வழிப் போக்குவரத்து, பாசன ஆணையத்திற்குத் தந்து, மகாநதி யின் வளர்ச்சித் திட்ட வாய்ப்புகளை ஆராய்வதில் முழுமையான ஒத்துழைப்பு தருவர் என்றும் ஒப்புக்கொள்ளப்பட்டது.

## திரு. கோகலேயின் உரை

டாக்டர் அம்பேத்கர் முன்வைத்த திட்டத்தை வரவேற்று, ஒரிஸ்ஸா மாகாண ஆளுநரின் ஆலோசகர் திரு. பி.கே. கோகலே ''ஒரிசா மாகாணமே தற்போது இந்தியாவின் மிகப் பிற்பட்ட பகுதியாய் உள்ளது. வேறெந்தவொரு திட்டத்தையும் விட, நாம் இப்போது உத்தேசித்துவரும் பல்நோக்கு வளர்ச்சித் திட்டமே, ஒரிஸ்ஸாவின் நிலைமைகளை மேம்படுத்துவதற்கு உகந்த திட்ட மாகும்'' என்று கூறியதுடன், அண்மைக்காலம் வரையிலான ஒரிஸ்ஸாவின் வரலாற்றைச் சுருக்கமாக எடுத்துரைத்து, பிராந்திய வளர்ச்சித் திட்டத்தை உருவாக்கிக் கொண்டிருக்கும் நமது புதிய சிந்தனை, வளமும் மகிழ்ச்சியும் நிறைந்த வருங்கால ஒரிஸ்ஸாவை படைக்க உதவுமென்று கூறினார்.

* * *

## போர்ப் பிற்காலப் பாசன, நீர்மின் திட்டங்கள்

''பாசனத் துறையில், இந்தியா, உலகின் முன்னணி நாடாகத் திகழ்கிறதென்பதில் ஐயமில்லை. வேகமாகப் பெருகிவரும் நமது மக்கள் தொகை வளமாய் வாழப் பாசன வளர்ச்சித் திட்டங்களே உயிர் நாடியாய் விளங்கும்'' என மாட்சிமைமிகு வைசிராய், நவம்பர் 26 ஆம் நாள் தமது இல்லத்தில் அமைந்துள்ள ஆலோசனை அறையில்,

மத்தியப் பாசன வாரியத்தின் 16வது கூட்டத்தின் தொடக்கவுரையில் கூறினார். இக்கூட்டத்திற்கு இந்திய அரசின் வல்லுநர்களுடன், மாகாண மற்றும் சமஸ்தானப் பொறியாளர்களும், மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் டாக்டர் பி.ஆர். அம்பேத்கரும், தொழிலாளர் நலத்துறை செயலர் மாண்புமிகு எச்.சி. பிரியோர் ஆகியோரும் வந்திருந்தனர்.

வைசிராய் மேலும் பேசுகையில்,

''மத்திய பாசனவாரியத்தின் 16வது கூட்டத்தைத் தொடங்கி வைப்பதில் நான் பெரிதும் மகிழ்ச்சியடைகிறேன். பொறியியல் துறைகளின் தொன்மையும் மதிப்பும் வாய்ந்த முதன்மையான துறை நீர்ப்பாசனத்துறையே. பாசனப் பொறியாளர்களே உலகின் பழமையான வல்லுநர்கள். (பைபிளில்) தோற்றவியல் இரண்டாம் அதிகாரத்தில் ''ஈடனிலிருந்து, தோட்டத்திற்கு நீர் பாய்ச்சுதற்காக ஓர் ஆறு புறப்பட்டுச் சென்றது'' என்று கூறப்பட்டுள்ளது. இதுவே, நாமறிந்த முதல் பாசன எடுத்துக்காட்டாகும். எகிப்து, மொசபடோமியா ஆகிய இரு நாகரிகங்களும் முற்றிலும் பாசனத்தின் அடிப்படையில் உருவாகியவையே. பாசனத்துறையில் உங்கள் முன்னோடிகளாய் விளங்கிய பாசனப் பொறியாளர்களே, அக்கால நாகரிகங்களில் தலைசிறந்த பெருமக்களாய் மதிக்கப்பட்டிருக்க வேண்டும்.

''பண்டைய பாசன வல்லுநர்களில் முதன்மையான வல்லுநராய் விளங்குபவர் மோசஸ் எனலாம். ஆரைப்பில் பாறையை உடைத்து நீர் வரவழைத்து நீரையருந்தி உயிர் வாழுங்கள் என்று அங்கிருந்த கூட்டத்தார்க்கு அளித்ததையும், மாராவில், கெட்ட நீர் வரத்தைத் தடுக்க அணைகட்டி, கசந்த குடிநீரை இன்னறு நீராக்கியதையும் அவரது இருபெரும் சாதனைகள் எனலாம்.

## இந்தியாவின் சாதனைகள்

வைசிராய் மேலும் தொடர்ந்து, ''பிறநாட்டுப் பொறியாளர்கள் விரைந்த பயணத்திற்கான வாகனங்களையும், குடியிருக்க வசதியான வீடுகளையும் படைத்திருக்கலாம்; ஆனால் உங்கள் சாதனைகளோ உயிரையே கொடுப்பதற்கு ஒப்பானவை. உங்கள் சாதனைகளின் சிறப்பைப் புகழ்ந்துரைக்கச் சொற்களைத் தேடினோம் எனில், ''எனது மக்கள் அருந்தும் பொருட்டாகக் காடுகளில் நீரையும், பாலைவனத்தில் ஆறுகளையும் அளிக்கிறேன்'' என்ற இசையாவின் கவிதை வரியைக் காணலாம்.



# 54

## [1]ரயில்வேத் தொழிலாளர் சம்மேளனத்தின் கோரிக்கைகள் மறுப்பு: ஆட்குறைப்பு

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): தலைவர் அவர்களே, இன்று காலையில் ஒத்திவைப்புத் தீர்மானம் அனுமதிக்கப்பட்டபோது, தொழிலாளர் நலத்துறையும் இவ்விவாதத்தில் கலந்து கொண்டு தனது நிலையை விளக்க வேண்டிய தேவை ஏற்படாதென்று கருதினேன். ஆனால், விவாதத்தின்போது பேசிய இரண்டு உறுப்பினர்கள் தொழிலாளர் நலத் துறையைக் கடுமையாகத் தாக்கிப் பேசியதைக் கவனித்தேன். பூசல் நெடுங்காலமாகவே நிலவி வந்துள்ளது என்ற போதிலும், இதில் தலையிட்டுத் தான் ஆற்ற வேண்டிய பணியைத் தொழிலாளர் நலத்துறை ஆற்றத் தவறிவிட்டது என்பதே அவர்களது குற்றச்சாட்டு. இந்த விவகாரத்தில் தொழிலாளர் நலத்துறைக்குப் பெருமளவில் பொறுப்பு உண்டு என்பதை நான் ஏற்றுக்கொள்கிறேன். தொழிலாளர் வர்க்கம் உரிமைகளை அடைவதற்கு உதவும் பொருட்டாகவே நிறுவப்பட்ட தொழிலாளர் நலத்துறை அதன் கடமையிலிருந்து தவறியிருப்பின், உறுதியாக அது கண்டனத்திற்குரியதேயாகும். ஆனால் தீர்மானத்தின் மீது பேசும்போது தொழிலாளர் நலத்துறையின் பொறுப்பு பற்றிக் குறிப்பிட முனைந்த மதிப்பிற்குரிய நண்பர் சர்தார் மங்கள் சிங், தொழிலாளர் நல அமைச்சர் என்ன தூங்கிக் கொண்டிருக்கிறாரா? இல்லை வயலின் வாசித்துக் கொண்டிருக்கிறாரா? என்று பழித்துப் பேசுமுன்னர், இவ்விவகாரம் தொடர்பாகத் தொழிலாளர் நலத்துறை என்னென்ன செய்துள்ளது என்பதைச் சற்றும் அறிந்து கொள்ளாமல் பேசிவிட்டார் என்பது மிக வருத்தமளிக்கிறது. எனவே, இவ்விவகாரம் தொடர்பான மெய்த்தகவல்களை அவையின் முன்வைப்பது தேவை என்று கருதுகிறேன்.

ரயில்வேத் தொழிலாளர் சம்மேளனத்தின் அமர்வில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்கள் அடங்கிய கடிதம் ஒன்றைச் சம்மேளனத்

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, 1946 ஜனவரி, 22, பக்கங்கள் 106-108.

தின் உறுப்பினர் ஒருவர் 1945, அக்டோபர் 5இல் அனுப்பியபோது தான் ரயில்வேத் தொழிலாளர் சம்மேளனத்துக்கும் ரயில்வே வாரியத் துக்குமிடையே நிலவும் பூசல்கள் குறித்து, முதன் முதலாக தொழி லாளர் நலத்துறைக்குத் தகவல் கிடைத்தது. தொடர்ந்து 1945 அக் டோபர் 10 ஆம் நாள் வந்த இரண்டாவது கடிதத்தில், தீர்மானத் தில் குறிப்பிடப்பட்டுள்ள பூசல்களை விசாரிக்க நடுவர் ஒருவரை நியமிக்க வேண்டுமென்று, தொழிலாளர் நலத்துறைக்கு வேண்டு கோள் விடப்பட்டிருந்தது. அப்படியொரு நடுவர் எவரையும் நிய மிக்குமுன், பூசலிடும் இருதரப்பாரையும் முறைப்படி நேரடியாகச் சந்திக்க வைத்து, இருசாரார்க்குமிடையே நிலவும் பூசல் குறித்த முக்கியமான கூறுகள் பற்றிய கலந்துரையாடல் மூலம் ஒருசாரார் கோரிக்கைகளை மறுசாரார், ஒருவருக்கொருவர் புரிந்து, விட்டுக் கொடுக்கும் முறையில் வேறுபாடுகளைக் குறைத்துக் கொள்ள வழிவகை செயயத் தூண்டுவதே, தொழிலாளர் நலத்துறையின் தலை யாய கடமையாகுமென்று உறுதியாக நம்பினேன். இக்கடமையைத் தொழிலாளர் நலத்துறை உடனடியாக மேற்கொண்டு ரயில்வேத் தொழிலாளர் கூட்டமைப்பும், ரயில்வே வாரியமும் உடனடியாகச் சந்தித்து அவற்றுக்கிடையே நிலவும் மாறுபாடுகளை குறைத்துக் கொள்ள வழிவகுத்தது என்பதை மிக மகிழ்ச்சியுடன் கூறிக்கொள்ள முனைகிறேன். ரயில்வேத் தொழிலாளர் சம்மேளனத்துக்கும், ரயில்வே வாரியத்துக்கும் இடையே நிலவும் பூசல்களைப் பற்றி இருசாராரும் கூடிப் பேசினர் என்பதை ரயில்வே வாரியத்தின் அறிக்கையிலிருந்து மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் அறிவீர்கள். இக் கூட்டம் டிசம்பர் 5 ஆம் நாள் நடைபெற்று அறிக்கையும் அன்றே வெளியிடப்பட்டது. டிசம்பர் 5இலிருந்து இன்றுவரை நீண்ட கால இடைவெளியோ தாமதமோ ஆகிவிட்டதாகக் கூறிவிட முடியாது; தொழிலாளர் நலத்துறை இவ்விவகாரத்தில் தான் ஆற்றவேண்டிய கடமையில் புறக்கணிப்போ, தாமதமோ ஏதும் செய்துவிட்ட தாகவும் கூறமுடியாது.

ஒரேயொரு முக்கிய செய்தியையும் அவையின் கவனத் திற்குக் கொணர விரும்புகிறேன். பேச்சுவார்த்தைகள் முடிவடைந்து விட்டதென எவரும் கூறமுடியாது; இதுகுறித்த தகவல் திரு. குரு சாமிக்கு தெரிந்திருக்குமென்று கருதுகிறேன். ரயில்வே துறையும், ரயில்வேத் தொழிலாளர் சம்மேளனமும் மேற்கொண்டு பேச்சு வார்த்தைகளை நடத்தும் பொருட்டு, ரயில்வேத் தொழிலாளர் சம்மேளனத்தின் துணைக்குழுவொன்று நியமிக்கப்பட வேண்டு மென்று உடன்பாடு செய்து கொண்டு, இத்துணைக்குழுவும், ரயில்வே

துறையும் 1946, ஜனவரி இறுதிக்குள் கூடிப் பேச வேண்டுமென்றும் முடிவு செய்துள்ளனர். 1946 ஜனவரித் திங்கள் இன்னும் முடிந்து விடவில்லை. பேச்சுவார்த்தை நடத்த இன்னமும் காலம் உள்ளது...

*ஸ்ரீபிரகாசா:* மாத இறுதி நெருங்கிவிட்டது.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* மெய்தான்! ஆனால் அது என்னால் ஏற்றுக்கொள்ள இயலாத கருத்து.

*திவான் சமன்லால் (மேற்கு பஞ்சாப்-முகமதியரல்லாதார் சார்பாளர்):* ஒரு நிமிடம் குறுக்கிட்டு நண்பரிடம் கேள்வியொன்று எழுப்ப விரும்புகிறேன். நடுவர் ஒருவரை நியமிக்க வேண்டும் என்ற கோரிக்கையை அரசு தள்ளுபடி செய்துவிட்டதென்பது மெய்தானா?

*மாண்புமிகு டாக்டர் அம்பேத்கர்:* அதைப் பற்றித்தான் குறிப்பிட முனைந்தேன். பேச்சுவார்த்தைகள் வாயிலாய் இருதரப்பும் மனமொத்த ஒப்பந்தத்திற்கு வரும் முயற்சிகள் முழுமையாகத் தோல்வி யடைந்து விட்டாலன்றி, நடுவர் எவரையும் நியமிக்கும் கருத்து அரசுக்குக் கிடையாது. எனது நண்பருக்குச் சுட்டிக்காட்ட விரும்புவ தென்னவென்றால், பேச்சுவார்த்தை மூலம் தீர்வு காண்பதற்கு வாய்ப்புகள் ஏற்படுத்திக் கொடுக்கப்பட்டன. அவ்வாய்ப்பு இன்னும் மறைந்து விடவில்லை என்பதே. ரயில்வேத் துறையை எப்போது சந்திக்கப் போகிறார்கள் என்ற சரியான தேதியை அவர்களுக்கு அறிவிக்கும் பொறுப்பு ரயில்வேத் தொழிலாளர் சம்மேளனத்திடமே தற்போது உள்ளது.....

*திவான் சமன் லால்:* எனதருமை நண்பரை மீண்டும் கேட்க விரும்புகிறேன். ஆட்குறைப்புத் திட்டத்தினால் எத்தனை பேர் வேலை இழப்பார்கள் என்ற தகவலை ரயில்வேத் தொழிலாளர் கூட்டமைப்புக்குத் தெரிவிக்க அரசு மறுத்துவிட்டது என்பது உண்மையா? அடுத்து, நடுவர் ஒருவரை அரசு நியமிக்க மறுத்து விட்டது என்பதும், ஆட்குறைப்புத் திட்டம் மேலும் தொடரும் என்பதும் உண்மையா? ஏற்கெனவே 10,000 பேர் வேலையிழந்துள் ளனர் எனக் கருதுகிறேன். இதைப் பற்றி அரசு ஏதும் கண்டுகொள் ளாமல் நடந்து கொள்கிறது எனும் நிலையில், மேலும் பேச்சு வார்த்தைகள் நடத்தலாம் என்பதில் பொருளுண்டா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* விவாதத்தில் நான் குறுக்கிட்டுப் பேசியபோது, நடுவர் நியமனம் பற்றித் தெளிவுறுத் தவே எழுந்தேன் என்பதை மதிப்பிற்குரிய நண்பர் மறந்து விட்டார். அதற்குமேல், ஆட்குறைப்பு நடக்குமா? நடந்தால் எத்தனை பேர் வேலையிழப்பார்கள், வேலையிழக்கும் தொழிலாளர்களின் வருங் காலம் பற்றி அரசு என்ன செய்யவுள்ளது? என்பன போன்ற வினாக் களுக்கெல்லாம், எனது உரைக்குப் பின் மாண்புமிகு ரயில்வேத் துறை அமைச்சர் விடையிறுப்பார். தொழிலாளர் நலத்துறையின் வரம்புக்குள் வரும் பொறுப்புகளை மட்டுமே என்னால் நிறை வேற்ற முடியும் என்பதை முன்னரே தெரிவித்துள்ளேன். ஒப்பந்தங் கள் வாயிலாகப் பிரச்சினைக்குத் தீர்வுகாணும் வழிகள் அனைத்தும் அடைப்பட்டு விட்டன என்ற அறுதியான நிலை தோன்றினாலன்றித் தொழிலாளர் நலத்துறை தலையிட்டு நடுவர் ஒருவரை நியமிக்கும் நடைமுறைக்கு இடமேதும் இல்லை என்னும் சட்ட நிலையை நான் வலியுறுத்த முயன்றேன். விவாதத்தில் நான் குறுக்கிட்டதன் நோக்கம், தொழிலாளர் நலத்துறை தக்க தருணத்தில் தலையிட்டுத் தன் கடமை யைச் செய்யவில்லை என்ற எனதருமை நண்பரின் குற்றச்சாட்டுக்கு விளக்கம் தருவதற்காகவே; எனவே, நண்பர் தாமாகவே முன்வந்து தொழிலாளர் நலத்துறை அமைச்சர் வயலின் வாசித்துக் கொண் டிருந்தார்'' என்ற நையாண்டியைத் திரும்பப் பெற்றுக் கொள்வார் என நம்புகிறேன்; ஏனெனில், அது சற்றும் உண்மையன்று.

அடுத்து, இந்தச் சிக்கலின் மற்றொரு பக்கத்தையும் குறித்துத் தெளிவுபடுத்த விரும்புகிறேன். அதாவது, இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தின் 81ஆம் பிரிவின் கீழ் நடுவர் ஒருவரை நியமிக்கும் அதிகாரம் இந்திய அரசுக்கு உண்டென்பது உண்மையா எனக் காண்போம். நாம் இயற்றுவது அவசரச் சட்டம் எனும் வகைக்குள் வருவதாயினும் கூட, சட்டத்தின் பிரிவு 81 இன் கீழ் பெற்றுள்ள அதிகாரங்களைப் பயன்படுத்தும் சூழ்நிலையிலும், சட்டவியல் கோட்பாடுகளை முழுமையாகக் கைவிட்டுச் செயல்பட முடியாது எனல், நடுவர் தீர்ப்பாயத்திற்கும் பொருந்தும். பூசல் என ஒன்று இருந்தால்தான் நடுவர் தீர்ப்பு என்ற பேச்சே எழமுடியும். நான் முன்னர் தெளிவுறுத்தியவாறு சிக்கல் பேச்சுவார்த்தை மூலம் உடன் படிக்கை காணும் நிலையை இன்றும் மீறவில்லையென்பதால், இத்தருணத்தில் பூசல் எதுவும் கிடையாது. இரண்டாவதாக, ஒரு சிக்கல் நடுவர் தீர்ப்புக்கு விடப்பட வேண்டுமெனில், வேலையின் சட்ட திட்டங்கள் குறித்து பூசல் எழுவதாயிருக்க வேண்டும்; வேலை நேரம், ஊதியம் போன்ற விவகாரங்களை எடுத்துக்காட்டாய்க்

குறிப்பிடலாம். ரயில்வேத் துறைக்கும், ரயில்வேத் தொழிலாளர் சம்மேளனத்துக்குமிடையே எது குறித்துப் பூசல் நிலவுகிறது எனக் கூற முடியுமா? ரயில்வேத் தொழிலாளர் சம்மேளனம் இப்போதைய விவகாரங்களை நடத்திச் செல்ல வேண்டிய முறையில் நடத்திச் செல்லவில்லையென்பதை வருத்தத்துடன் தெரிவித்துக் கொள் கிறேன். அவர்கள் தற்போதைய நடைமுறைகளினால் தங்களுக்குத் தீங்கையே வரவழைத்துக் கொண்டுள்ளனர். இந்தக் கட்டத்தில் நான் எழுப்ப முனையும் கேள்வி இதுவே. ரயில்வேத் தொழிலாளர் கள் கூட்டமைப்பு எதுபற்றிய கோரிக்கையை முன்னிறுத்திப் போராடு கிறது? வேலை நேரத்தைப் பற்றியா? இல்லை, ஊதியத்தைப் பற்றியா? கோரிக்கை இவ்விரண்டில் எதையும் சார்ந்தனவல்ல என்பதை நான் உறுதியாய்க் கூறமுடியும். வேலை நேரம் குறித்தும், ஊதியம் குறித்தும் ரயில்வேத் தொழிலாளர்கள் சம்மேளனம் பற்பல தீர்மானங்களை நிறைவேற்றியுள்ளது என்பது உண்மையே. ஆனால் பூசலின் அடிப்படைக் கோரிக்கைகளுக்கும், கூடுதல் கோரிக்கை களுக்கும் இடையே நாம் வேறுபடுத்திப் பார்க்க வேண்டும். சம் மேளனம் நிறைவேற்றியுள்ள பல்வேறு தீர்மானங்களையும் கூர்ந்து நோக்கினால், ரயில்வேத் தொழிலாளர்களில் ஒருவரைக் கூட வேலை நீக்கம் செய்யக்கூடாது என்பதே அவர்களின் முதன்மையான (ஒரே) கோரிக்கை என்பது தெளிவாகும். வேலைநேரம், ஊதியம் போன்ற கோரிக்கை கூடுதலாக மேலோட்டமாகவே சேர்க்கப்பட்டுள்ளன; அவை கருத்து வேறுபாடு தோற்றுவிக்கும் சிக்கல்களுமல்ல. நான் கூறவதன் சுருக்கக் கருத்து என்னவென்றால், ரயில்வேத் துறைக்கும், தொழிலாளர் சம்மேளனத்துக்கும் இடையில் எழுந்துள்ள பூசல் ஆட்குறைப்பு பற்றியதொன்றே; அதாவது, எவ்வளவு பேர் வேலை யில் நீடிப்பார்கள்? எவ்வளவு பேர் வேலையிழப்பார்கள்? என்பதே. இது தொடர்பான இரண்டொரு சூழ்நிலைகளையும் சுட்ட விரும்பு கிறேன். முதலாவதாக, நான் முன்னர் குறிப்பிட்ட 1945, டிசம்பர் 5ம் நாள் கடிதத்தில் (பதினான்கு) பதினைந்து கோரிக்கைகள் காணப் படுகின்றன. அவற்றுள், அடிப்படையான கோரிக்கைகள் யாவை யென விவாதிக்க தொழிலாளர் நலத்துறையும், ரயில்வேத் தொழி லாளர் சம்மேளனத்தின் தலைவர் திரு. கிரியும் பங்குபெறும் மாநாடு ஒன்று ஏற்பாடு செய்யப்பட்டது. 15 தீர்மானங்கள் மொத்தமிருப் பினும் அவற்றுள் மூன்று மட்டுமே தொழிலாளர் நலத்துறையின் ஆய்வுக்கு வைக்கப்பட்டன. எஞ்சியவற்றை முக்கியமல்லவென்று தொழிலாளர் சம்மேளனம் வாளா விட்டுவிட்டது. மீண்டும் தொழி லாளர் சம்மேளனத்துக்கும் ரயில்வேத் துறைக்குமிடையே முறை யான பேச்சுவார்த்தை ஏற்பாடு செய்யப்பட்டபோது, அம்மூன்று

கோரிக்கைகளும் கூடப் பின்தள்ளப்பட்டு, ஆட்குறைப்புப் பிரச்சினையொன்றே முன்வைக்கப்பட்டது. சம்மேளனத் தலைவர், மற்றும் பேச்சுவார்த்தைகளில் கலந்து கொண்ட பலரும் எனது மதிப்புக்குரியவர்களே; எனினும், ஒரு துறையின் பணிகளுக்கு எத்தனை பணியாளர்கள் தேவையென்பது எப்படிப்பட்ட சட்டப்பூர்வப் பூசலாக முடியுமென எனக்கு விளங்கவில்லை. ரயில்வேத் தொழிலாளர் சம்மேளனத்தின் தலைவர் ரயில்வே வாரியத்தோடு சட்டப்பூர்வப் பூசலாக எந்தக் கோரிக்கை எழுகிறது என்பதைத் தெளிவுறுத்துவா ரெனில், பூசலில் தலையிட்டு, நடுவர் ஒருவரை நியமிக்கத் தொழி லாளர் நலத்துறை காத்துக் கொண்டிருக்கிறது என்று தெளிவாக அறிவிக்கிறேன். எனவே, இங்கு எழுப்பப்பட்டுள்ள கண்டனத் தீர் மானம் தேவையற்றதென்றே கருதுகிறேன்.



# 55

## [1]தாமோதர் பள்ளத்தாக்குத் திட்டத்திற்காகக் கிராமங்களைக் காலி செய்யும் திட்டம்

*அவைத்தலைவர்:* அடுத்து, தாமோதர் பள்ளத்தாக்குத் திட்டத்தின் செயல்பாட்டுக்காக பீகார் மாநிலத்தின் ஹசாரிபாக், மண்பூம், சொன்தால் பர்கானா ஆகிய மாவட்டங்களைச் சேர்ந்த பல கிராமங்களிலிருந்து ஆயிரக்கணக்கான மக்களை வெளியேற்று தலைப் பற்றி திரு. இராம் நாராயண் சிங் தீர்மானம் வருகிறது. இத் தீர்மானத்தின் வாயிலாய் மதிப்பிற்குரிய உறுப்பினர் கூற முனைவது என்னவென்று அறிய விரும்புகிறேன்.

*பாபு இராம் நாராயண்சிங்* (சோடா நாகபுரி பிரிவின் முகமதியரல்லாதார் சார்பாளர்): தலைவர் அவர்களே, சில மாவட்டங்களில் நிலம் கையகப்படுத்தும் செயல்பாடுகள் நடந்து கொண்டிருக்கின்றன. தாமோதர் பள்ளத்தாக்குத் திட்டத்தின் நிறைவேற்றத் திற்காகப் பல கிராமங்களிலிருந்து மக்களை வெளியேற்றி நிலத்தை அரசு கையகப்படுத்திக் கொள்ளும் நிலை உருவாகி வருகிறது.

*அவைத்தலைவர்:* திட்டம் எப்போது தொடங்கியது? எவ்வளவு தூரம் முன்னேறியுள்ளது? என்பதை அறிய விரும்புகிறேன்.

*டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்* (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): திட்டத்தின் இன்றைய கட்டத்தில் விவாதிப்பதற்குரிய சிக்கல் ஏதுமில்லை என்பதைத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். பீகார், வங்காள மாநிலங்களின் வழியே பாயும் தாமோதர் ஆற்றின் குறுக்கே சில அணைகளைக் கட்டும் திட்டம் அரசின் கருத்தில் இருந்து வருகின்றதென்பதில் ஐயமில்லை. ஆனால் ஒத்திவைப்புத் தீர்மானத்தில் குறிப்பிட்டிருத்தல் போன்று மக்களின் கட்டாய வெளியேற்றம் என்ற சிக்கல் ஏதும் இப்போது எழவில்லை. இப்போது நடந்து கொண்டிருப்பதெல்லாம், நீர்த்தேக்கப் பகுதியில்

---

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, எண் 12, 1946, பிப்ரவரி 7, பக். 606.

எவ்வளவு நிலம் மூழ்கும்? நீர்த்தேக்கத்தினால் மேலும் எவ்வளவு நிலம் பாதிக்கப்படும் என்பன போன்ற தகவல்களைத் திரட்டும் கள ஆய்வுப் பணிகளே. அப்பகுதிகளிலிருந்து எவ்வளவு மக்களை வெளியேற்ற நேரிடும்? அவர்களது உடைமைகள், உரிமைகளின் மதிப்பென்ன? என்பன போன்ற விவரங்களையும் திரட்டிக் கொண்டுள்ளோம். இவற்றில் குறிப்பிடத்தக்க செயல்பாடுகள் ஏதுமில்லை; அவையின் விவாதப் பொருளாகக் கூடிய எந்தவொரு செயலையும் அரசு செய்துவிடவில்லை. இதுகுறித்து அரசு தெளிவானதொரு முடிவுக்கு வரும் கட்டத்தில், அரசின் முடிவுகள் அவை உறுப்பினர்கள் அனைவருக்கும் சுற்றறிக்கையாய் அனுப்பப்படும் என்பதைத் தெரிவித்துக் கொள்வதுடன், அந்தக் கட்டத்தில் உறுப்பினர்கள் தாங்கள் விரும்பும் வகையில் விவாதத்தை எழுப்பலாம் என்பதையும் சுட்டியமைகிறேன்.

பாபு இராம் நாராயண் சிங்: ஹசாரிபாக் மாவட்டத்தில் நிலம் கையகப்படுத்தும் செயல்கள் நடைபெற்று வருகின்றன என்றும், ஊரைவிட்டு வெளியேறுமாறு மக்கள் வற்புறுத்தப்படுகின்றனரென்றும் எனக்குத் தகவல் கிடைத்துள்ளது.

அவைத் தலைவர்: உறுப்பினர் குறிப்பிடும் நிகழ்ச்சி, இத்திட்டப் பகுதியில்தான் நடைபெறுகிறதா?

பாபு இராம் நாராயண் சிங்: ஆமாம்.

அவைத் தலைவர்: ஆனால், அரசு இதுவரை ஏதும் செய்ததாகத் தெரியவில்லையே.

டாக்டர் அம்பேத்கர்: சாலைகள் அமைப்பதற்காக மட்டும், அரசு சிறிதளவு நிலத்தைக் கையகப்படுத்தியுள்ளது.

அவைத் தலைவர்: இந்தத் திட்டத்திற்காகவா?

டாக்டர் அம்பேத்கர்: ஆம். இந்தத் திட்டத்திற்காகத்தான். அணுகு சாலைகளுக்காக நிலம் காலி செய்ய வேண்டியிருக்கும் என்று முன்னறிக்கைகள்தான் கொடுக்கப்பட்டுள்ளன. காலி செய்யும் பிரச்சினை ஏதும் இதுவரை எழவில்லை...

*அவைத்தலைவர்:* தகவல் திரட்டும் கள ஆய்வுப் பணிகளுக்காக, இந்தக் கையகப்படுத்தல் என்று கொள்ளலாமா?

*டாக்டர் அம்பேத்கர்:* இந்தக் கட்டத்தில் கையகப்படுத்தல் என்ற பேச்சே இல்லை. தாமோதர் ஆற்றின் குறுக்கே சில அணைகளைக் கட்ட அரசு முடிவு செய்துள்ளதென்பதில் ஐயமில்லை; அதற்கான ஆய்வுகள் நடத்தத் தேவைப்படும் அணுகுச்சாலைகளுக்குச் சில துண்டு நிலங்கள் தேவையாதலின், அந்த நிலங்களிலிருந்து வெளியேற நேரலாம் என்ற முன்னறிவிப்பு மட்டுமே தற்போது கொடுக்கப்பட்டுள்ளது. ஒத்திவைப்புத் தீர்மானத்தில் கூறப்பட்டுள்ளவாறு ஹசாரிபாக் மாவட்டத்திலும், மண்பூம், சொனதால் பர்கானாக்களிலிருந்தும் நூற்றுக்கணக்கான ஊர்களிலிருந்த பல்லாயிரக்கணக்கான மக்கள் கட்டாய வெளியேற்றம் என்பது போன்ற நிலையேதும் இப்போது கிடையாதென உறுதியாய்க் கூறலாம்; இந்தக் கட்டத்தில் இனி என்ன செய்யலாமென்ற திட்டம் ஏதும் இப்போது அரசின் கவனத்தில் இல்லை; யாவும் தொடக்க நிலையிலேயே உள்ளன.

*அவைத்தலைவர்:* அணைகள் கட்டப்பட வேண்டும் என்று அரசு முடிவெடுத்திருந்தால், தற்போது சாலைகள் அமைப்பதற்காகச் சிறிது நிலம் மட்டுமே கையகப்படுத்தப்படுவதாயிருப்பினும், அணைகள் கட்டப்படும்போது பெரும்பகுதி நிலங்கள் நீரில் மூழ்குமென்பதும் மக்கள் பலர் இடம்பெயர நேரிடுமென்பதும், என்றைக்கிருந்தாலும் எதிர்கொள்ள வேண்டிய நிலைதானே என்பதே இப்போதைய சிக்கல் என உணருகிறேன்.

*டாக்டர் அம்பேத்கர்:* இப்போதைய நிலை அதுவன்று; திட்டம் பற்றிச் சரியான முடிவு எடுப்பதில் வெளிநாட்டு வல்லுநர்களின் ஆலோசனையையும் இன்னும் நாடிக் கொண்டிருக்கிறோம். திட்டம் மிகவும் தொடக்க நிலையிலேயே இருப்பதால், அது குறித்து அவையில் அறிக்கையேதும் தர இயலா நிலைமைக்கு வருந்துகிறேன்.

*அவைத்தலைவர்:* அணைகள் கட்டப்பட வேண்டுமென அரசு முடிவெடுத்துள்ளதா வென்பதை அறிய விரும்புகிறேன்.

*டாக்டர் அம்பேத்கர்:* இது அம்மாநில மக்களின் திட்டம்; திட்டம் குறித்து இறுதி முடிவு ஏதும் எய்தப்படவில்லை.

*திரு. மோகன்லால் சாக்சேனா (லக்னோ முகமதியரல்லா கிராமியச் சார்பாளர்): திட்டம் அவையின் முன் வைக்கப்படுமா என்பதை அறிய விரும்புகிறேன்.*

*டாக்டர் அம்பேத்கர்: திட்டம் ஆய்விலேயே உள்ளது. திட்டத்திற்கான நிதி வழங்காணையேதும் இதுவரை பெறப்படவில்லை.*



# 56

## [1]தொழிலாளர் இழப்பீடு (திருத்த) மசோதா

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்):*

தலைவர் அவர்களே,

> ''1923 ஆம் ஆண்டின் தொழிலாளர் இழப்பீட்டுச் சட்டத்தை மேலும் திருத்துவதான மசோதா அவையின் பார்வைக்கு எடுத்துக் கொள்ளப் படலாம்''

எனும் தீர்மானத்தை முன்மொழிகிறேன்.

இஃது ஓர் எளிய மசோதாவே; இதன் நோக்கம், இப்போதைய சட்டத்தால், இன்றைய சூழ்நிலையில் ரூ. 300க்கு மேல் மாத வருவாய் பெறும் தொழிலாளர்களுக்கு நேரிடும் அநீதியொன்றுக்கு மாற்றுத் தீர்வு காண்பதேயாகும். இப்போதைய தொழிலாளர் இழப்பீட்டுச் சட்டத்தில் 'தொழிலாளர்' என்பதன் வரையரைப்படி, மாதம் 300 ரூபாய்க்குக் குறைவாக வருவாய் பெறுபவர்களே, இழப்பீடு பெறத் தகுதியுடையோராவர் என்பதை அவையுறுப்பினர்கள் அறிவர். போருக்கு முந்தைய காலத்தில் ரூ. 300க்குக் கீழ் மாத ஊதியம் பெற்றுவந்த பெரும்பாலான தொழிலாளர்கள், இழப்பீட்டுக்குத் தகுதி பெற்றிருந்தார்கள். ஆனால், போர்க்காலப்படி, பஞ்சப் படி, வீட்டு வசதி, நன்னடத்தைப் படி முதலான பல வகையான வருவாய்ப் பெருக்கத்திற்கு போர்க்காலத்தையடுத்து வாய்ப்பு பெற்றிருப்பதன் விளைவாய், மாத மொத்த வருவாய் பலருக்கு ரூ. 300ஐத் தாண்டி விடுவதால், பல தொழிலாளர்கள், தொழிலாளர் இழப்பீட்டுச் சட்டத்தின் பலனைப் பெறும் தகுதியை இழந்துவிடுகின்றனர். இதற்குக் காரணம், இப்போதைய, தொழிலாளர் இழப்பீட்டுச்

---

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, எண் 12, 1946, பிப்ரவரி 8, பக். 714.

சட்டத்தில் 'ஊதியம்' என்பதன் வரையறையில் இழப்பீட்டின் மதிப்பைக் கணக்கிடும் நோக்கில் கூடுதல் வருவாய் அனைத்தும் அடிப்படை ஊதியத்துடன் சேர்த்துக் கொள்ளப்படுகின்றன. இதன் விளைவாக, முன்னர் இழப்பீட்டுக்குத் தகுதிபெற்றிருந்த தொழிலாளர்களில் பலர், தற்போது அத்தகுதியை இழந்துவிட்டனர். இந்த இழப்பிலிருந்து தொழிலாளர்களைப் பாதுகாப்பதற்காக, இழப்பீட்டுத் தகுதி பெறுதற்கான மாத ஊதிய வரம்பு ரூ. 300இல் இருந்து ரூ. 400 ஆகத் திருத்தியமைக்கச் சட்டத்திருத்தம் முன்மொழிகிறது. இம்மசோதா இரண்டு திருத்தங்களை முன்மொழிகிறது. முதலாவதாகத் தகுதி ஊதிய வரம்பு ரூ. 300இலிருந்து ரூ. 400 ஆக உயர்த்தப்படுதல், இரண்டாவதாகத் தொழிலாளர்கள் இறப்பு, தற்காலிக ஊனம், வாழ்நாள் ஊனம் ஆகியவற்றுக்காகப் பெறும் இழப்பீட்டின் மதிப்பை வரையறுக்கும் பட்டியல் IV இல் திருத்தம் செய்யவும் மசோதா முன்மொழிகிறது.

நான் ஏற்கெனவே குறிப்பிட்டவாறு, இம்மசோதா ஓர் எளிய நடவடிக்கையே; இது பிரிட்டனில் மேற்கொண்ட நடவடிக்கையை அப்படியே பின்பற்றுகிறது. அங்கும் இழப்பீடு பெறத் தகுதி பெற்ற தொழிலாளர்களின் உரிமையைப் பாதுகாக்கும் நோக்கில் தகுதி ஊதிய வரம்பு 350 பவுண்டில் இருந்து 425 பவுண்டாக உயர்த்தப்பட்டது. இது எளிய நடவடிக்கை மட்டுமன்று; எவரும் பிழை சுட்டவியலாத நடவடிக்கையும் ஆகும். இம்மசோதாவின் கூறுகள் குறித்து மாநிலங் களின் கருத்தையும் அறிய முற்பட்டதில், மசோதா முன்மொழியும் திருத்தங்களுக்கு குழு உறுப்பினர் அனைவரின் ஒருமித்த ஆதரவு கிடைத்துள்ளதென அறியலாம். இதற்கு மேலும் மசோதா குறித்து விரிவாகப் பேச வேண்டிய தேவையிராது என்பதால், மசோதாவை நான் அவையில் தாக்கல் செய்கிறேன்.

★ ★ ★

[1]**அவைத்தலைவர்:**

''1923 ஆம் ஆண்டின் தொழிலாளர் இழப்பீட்டுச்

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, எண் 12, 1946, பிப்ரவரி 8, பக். 715.

சட்டத்தில் திருத்தம் செய்வதற்கான மசோதாவுக்கு அவையின் ஒப்புதல் வேண்டப்படுகிறது.''

அவை தீர்மானத்துக்கு ஒப்புதல் அளித்தது.

மசோதாவில் பிரிவுகள் 2, 3 சேர்க்கப்படுகின்றன.

மசோதாவில் பிரிவு I சேர்க்கப்படுகிறது.

மசோதாவுக்கு தலைப்பும் முன்னுரையும் சேர்க்கப்படுகின்றன.

டாக்டர் அம்பேத்கர்: ''மசோதாவை அவை ஏற்கலாம்''

எனும் தீர்மானத்தை முன்மொழிகிறேன்.

அவைத்தலைவர்: தீர்மானம் தாக்கலாகிறது.

''தீர்மானத்திற்கு அவை ஒப்புதல் அளிக்கிறது.''

★ ★ ★

[1]அவைத்தலைவர்: மாண்புமிகு உறுப்பினர் மேலும் ஏதாவது கூற விரும்புகிறாரா?

டாக்டர் அம்பேத்கர்: நான் முன்னரே குறிப்பிட்டவாறு தொழிலாளர் வர்க்கத்தின் ஒரு பகுதியினருக்கு நேர்ந்த அநீதியை நீக்கும் நோக்கத்துடனேயே இத்திருத்த மசோதா கொண்டுவரப்பட்டது. இதற்கு மேல் மசோதாவுக்கு நோக்கம் வேறில்லை. இந்தக் கட்டத்தில் என்னால் கூற முடிவதெல்லாம், தீர்மானத்தின் மீது பேசிய மதிப்பிற்குரிய நண்பர்கள் பலரது ஆலோசனைகளைக் கருத்தில் கொண்டு அவற்றுக்குச் செயல்வடிவம் தருவது பற்றிக் கருதப்படும் என்பதே. தொழிலாளர் இழப்பீட்டுடன், நோய்க் காப்பீடு, மகப்பேறுகாலச் சலுகைகள் முதலான பல்வேறு ஆலோசனைகளையும் உள்ளடக்கிய, அரசுக் காப்பீட்டுத் திட்டம் ஒன்று (இங்கிலாந்து நாட்டில் செயல்படுத்தப்பட்டதைப் போன்றது)

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, எண் 12, 1946, பிப்ரவரி 8, பக். 715.

அரசின் கூர்ந்த கவனத்தில் உள்ளது என்பதையும் தெரிவித்துக் கொள்கிறேன். அந்தத் திட்டத்தில் நண்பர் ஆலோசனை கூறியது போன்று ஒட்டுமொத்தத் தொகைக்கு மாற்றாக, தொடர்ந்து தொகை வழங்கவும் அத்திட்டத்தில் வகை செய்யப்படும்.

*அவைத்தலைவர்:* ''மசோதாவுக்கு அவையின் ஒப்புதல் கோரப்படுகிறது.''

அவை ஒப்புதல் தீர்மானத்தை நிறைவேற்றியது.



## 57

# [1]இந்தியச் சுரங்கங்கள் (திருத்த) மசோதா

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்):

தலைவர் அவர்களே,

''1923 ஆம் ஆண்டின் இந்தியச் சுரங்கங்கள் சட்டத்தை மேலும் திருத்துவதற்கான மசோதாவை'' முன்மொழிகிறேன்.

இம்மசோதா ஓர் எளிய நடவடிக்கையே.

(இக்கட்டத்தில் அவைத் தலைவர், தலைமைப் பொறுப்பைத் துணைத் தலைவர் (சர் முகமது யாமின் கான்)பால் விடுத்து, நீங்குகிறார்.)

சுரங்க முகப்புகளில், சுரங்க உரிமையாளர்கள், பூட்டக் கூடிய நிலையடுக்குகளுடனும், தாரைக் குழாய்களுடனும் குளிய லறைகள் அமைத்துத் தருவதைக் கட்டாயக் கடமையாக்குவதே இம் மசோதாவின் நோக்கம். குளியல் அறைகளின் எண்ணிக்கை வரை யறுப்பு பொதுப்படையாகவோ, அல்லது சுரங்கத்தில் அன்றாடம் பணியாற்றும் ஆண், பெண் தொழிலாளர்களின் எண்ணிக்கையின் அடிப்படையிலோ செய்யப்படலாம். குளியலறையின் அளவு, இருக்க வேண்டிய வசதிகள் ஆகியவையும் அவ்வாறே வரையறுக்கப் படலாம். சுரங்க முகப்புகளில் குளியல் அறைகள் அமைப்பதன் அவசியத்தை யாரும் மறுக்க மாட்டார்கள்; இதனால் சுரங்கத் தொழி லாளர்களின் தன்மதிப்பு வெகுவாக உயரும். அவர்கள் தூய உட லுடனும் உடைகளுடனும் இல்லம் திரும்புதல் மிகவும் விரும்பத் தக்கதல்லவா? நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர் நலநிதியை நிருவகிப் பதற்காக, இந்திய அரசு நியமித்த, 'நிலக்கரிச் சுரங்க ஆலோசனைக் குழு'வின் பரிந்துரையின்பேரில் இந்நடவடிக்கை உருவாகியுள்ளது.

---

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, எண் 13, 1946, பிப்ரவரி 8, பக். 716

நிலக்கரிச் சுரங்க முகப்புகளில் குளியலறைகள் கட்டுதல் சுரங்க உரிமையாளர்களின் கடமையென்பதே குழுவின் ஒருமித்த கருத்தாகும். இக்கருத்துக்குச் செயல்வடிவம் கொடுக்கும் பொருட்டாக, சுரங்கச் சட்டத்தின் 30வது பிரிவின் கீழ் இந்திய அரசுக்குக் கொடுக்கப்பட்டுள்ள விதிமுறை வகுக்கும் அதிகாரங்களைப் பயன்படுத்தி, சுரங்க முகப்புக் குளியலறைகளைக் கட்டாயமாக்கும் அதிகாரம் இந்திய அரசுக்குக் கிடைக்க இம்மசோதா முற்படுகிறது. இதுவே மசோதாவின் நோக்கமாகும்.

இந்தியச் சுரங்கச் சட்டத்தின் 31ஆவது பிரிவில் வரையறுக்கப்பட்டிருக்கும் விதிமுறை உருவாக்க நடைமுறையிலிருந்து இந்திய அரசுக்கு விலக்கு அளிப்பதே, மசோதாவின் இரண்டாம் பகுதியின் நோக்கம். சட்டத்தின் 31ஆம் பிரிவின்படி, விதிமுறைகள் வெளியிடப்பட்ட பின்னரே நிறைவேற்றப்படலாம். நாம் இப்போது உருவாக்கவிருக்கும் விதிமுறைகளுக்குச் சட்டத்தின் 31ஆம் பிரிவிலிருந்து விதிவிலக்கு பெற முனைகிறோம். கடமை விதிக்கப்படுவது மட்டுமன்றித் தாமதமின்றி நடைமுறைக்குக் கொண்டு வரப்பட வேண்டும் என்பதுமே விதிவிலக்கு கோருதற்குக் காரணங்களாகும்; நாம் தாமதத்தைத் தவிர்க்கவே விரும்புகிறோம். சுரங்க முகப்புக் குளியலறைகள் எல்லாச் சுரங்கங்களிலும் உடனடியாகக் கட்டப்பட வேண்டும் என்பதில் இந்திய அரசு கொண்டிருக்கும் அக்கறைக்கு அடையாளமாக, குளியலறைகளை ஓராண்டு காலத்திற்குள் கட்டி முடிக்கும் சுரங்க உரிமையாளர்களுக்குச் செலவுத் தொகையில் 10% மானியமாக இந்திய அரசு வழங்கும் எனவும் மசோதாவில் கூறப்பட்டுள்ளது. இதனை நிறைவேற்றுதல் பொருட்டாகவும், இந்த விதிமுறைகளுக்குச் சட்டப்பிரிவு 31இல் இருந்து விதிவிலக்கு கோரப்படுகிறது. இந்த மசோதா மிக எளியது; மிக முக்கியமானது; மாறுபட்ட கருத்துக்கிடமில்லாதது; ஆதலின் அதிகத் தடைகளின்றி அவை இதனை ஏற்கும் என்ற கருத்தில் மசோதாவை அவை முன் வைக்கிறேன்.

**துணைத்தலைவர்:**

1923 ஆம் ஆண்டின் இந்தியச் சுரங்கச் சட்டத்தில் திருத்தங்கள் கோரும் இம்மசோதா அவைமுன் வைக்கப்படுகிறது.

★ ★ ★

*டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இந்த நடவடிக்கை விரைந்து செயல்படுத்தப்பட வேண்டுமென்று இந்திய அரசு விரும்புவதாலேயே, குறிப்பிட்ட நாளிலிருந்து 12 மாதங்களுக்குள் குளியலறைகள் கட்டும் சுரங்க உரிமையாளர்களுக்கு இச்சலுகையை (10% மானியம்) அரசு வழங்குகிறது. இல்லையேல், முழுக் கட்டுமானச் செலவையும் சுரங்க உரிமையாளரே ஏற்க வேண்டும்.

*பண்டித கோவிந்த மாளவியா:* சுரங்க உரிமையாளர்கள் 12 மாதங்களுக்குள் குளியலறைகள் கட்டியாக வேண்டும் என விதிமுறை இயற்றினால் அந்நோக்கம் நிறைவேறாதா?

*டாக்டர் அம்பேத்கர்:* சிறிது அவகாசம் கொடுத்தல் அவசியம்.

★ ★ ★

[1]*டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* எனது மதிப்பிற்குரிய நண்பர் திரு. சித்திக் (தற்சமயம் அவர் அவையில் இல்லை) தாரைக் குளியல் குழாய்கள் குறித்து இவ்வளவு ஆவேசமடைவார் என நான் சற்றும் எதிர்பார்க்கவில்லை. குளியலறையில் தூவல் குழாய்கள் இருக்க வேண்டுமென்பது, இந்திய அரசு ஏதோ தன்னிச்சையாக எடுத்த முடிவல்ல என்பதை அவைக்குத் தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளேன். ஏற்கெனவே நான் அவையில் அறிவித்துள்ளவாறு, இத்திட்டத்திற்காக, சுரங்கத் தொழிலாளர்கள், சுரங்க உரிமையாளர்கள், வங்காள, பீகார் மாகாண அரசுகள் ஆகிய அமைப்புகளின் சார்பாளர்களைக் கொண்ட ஆலோசனைக் குழு ஒன்று இயங்கி வருகிறது. இக்குழுவே, சுரங்கத் தொழிலாளர் நலநிதியை நிருவகிக்கும் பொறுப்பில் இந்திய அரசுக்கு ஆலோசனை வழங்கிவருகிறது. இக்குழுவில் தொழிற்சங்கச் சார்பாளர்கள் மட்டுமன்றி ஆண் தொழிலாளர்கள் பெண் தொழிலாளர்களுக்கெனத் தனித்தனிச் சார்பாளர்களும் இடம் பெற்றுள்ளனர். எந்தவகையான குளியலறை அமைக்கப்பட வேண்டுமென்ற வினா குழுவின் ஆலோசனைக்கு விடப்பட்டு, குழுவின் ஒருமனதான ஒப்புதலுடனேதான், தாரைக் குழாய்க் குளியலறைகள் அமைக்கப்படலாமென முடிவு செய்யப்பட்டது.

எனது தனிப்பட்ட கருத்தின்படியும் கூட, ஒருவரது உடலை மிகத் தூய்மையாய் ஆக்குவதற்கு, குளியல் தொட்டிகளையோ,

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, எண் 13, 1946, பிப்ரவரி 8, பக்கங்கள் 719-20.

கொட்டு குழாய்களையோ விடத் தாரைக் குழாய்களே மிகத் திறம் படத் துணைபுரியும். டாடா இரும்பு எஃகு நிறுவனத்தினர் திக்பாயில் அமைந்துள்ள சுரங்கங்களில் கட்டியுள்ள தாரைக்குழாய்க் குளிய லறைகளின் உதாரணம் எனது கருத்துக்கு வலிமை கூட்டுவதாக அமைவதை இங்கு சுட்டிக்காட்ட விரும்புகிறேன். இங்கு நீண்ட காலமாக நிலவிவரும் தாரைக் குழாய்க் குளியலறைகளைத் தொழி லாளர்கள் மிக நன்றாகப் பயன்படுத்தி வருகிறார்கள் என்பதும், இத்தகைய குளியலறைகளுக்குத் தொழிலாளர் எவரும் மறுப்பு தெரிவித்ததில்லை என்பதும் நமக்கு மனநிறைவு அளிக்கும் செய்தி கள். சோப்பு பற்றியும் வினா எழுப்பபப்பட்டது; ஒவ்வொரு சுரங்கத் தொழிலாளிக்கும் (விதிமுறை வகுத்து) விதிமுறைகளுக்கேற்ப சோப்பு வழங்கவே உத்தேசித்துள்ளோம் என்றும் அவைக்கு உறுதி யளிக்கிறேன்; இதைப் பற்றி அவை உறுப்பினர்கள் ஐயமோ, கவலையோ கொள்ளத் தேவையில்லை.

எனது விளக்கம் மதிப்பிற்குரிய உறுப்பினர்களுக்கு மன நிறைவு தருமென்று நம்புகிறேன். மதிப்பிற்குரிய உறுப்பினர்களில் ஒருவர், உத்தேச மசோதா ஒரு அறிவிப்பாக அமையுமேயன்றித் (தாரைக்குழாய்களைக் கட்டாதவர்களுக்கு) தண்டனை ஏதும் விதிக்க வழிசெய்யவில்லையே எனக்கூறினார். அந்த உறுப்பினர் மசோதாவின் 39 ஆம் பிரிவை நோக்கினால், அப்பிரிவு முழுதுமே, தண்டம் விதிப்பு வழிமுறைகளைப் பற்றியதென்று உணருவார்.

**பேராசிரியர் என்.ஜி. ரங்கா:** பெண் தொழிலாளர்களைப் பொறுத்தமட்டில் ஒரேயொரு சிக்கல் உண்டு. அவர்களது தலைக் குளிப்புக்கு வெறும் நீர் மட்டும் போதாது. எண்ணெய் அல்லது அது போன்ற பொருள் தேவைப்படலாம்.

**டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவர்களுக்குத் தொப்பிகள் வழங்கப்படலாம்.

**துணைத்தலைவர்:**

''1923 ஆம் ஆண்டின் இந்தியச் சுரங்கங்கள் சட்டத்தைத் திருத்துவதற் கான மசோதா அவையின் ஒப்புதலுக்காக முன் வைக்கப்படுகிறது.''

தீர்மானத்துக்கு அவை ஒப்புதல் அளித்தது.

*மசோதாவில் பிரிவுகள் 2, 3 சேர்க்கப்பட்டன.*

*மசோதாவில் பிரிவு 1 சேர்க்கப்பட்டது.*

*மசோதாவுக்குத் தலைப்பும், முகப்புரையும் சேர்க்கப்பட்டன.*

**டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:**

''மசோதாவுக்கு அவை ஒப்புதல் அளிக்கலாம்'' என முன்மொழிகிறேன்.

*மசோதா அவையில் நிறைவேற்றப்பட்டது.*



# 58

## [1]தொழிற்சாலைகள் (திருத்த) மசோதா

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத் துறை உறுப்பினர்): தலைவர் அவர்களே!*

> *''1934 ஆம் ஆண்டின் தொழிற்சாலைகள் சட்டத்தில் திருத்தங்களைச் செய்வதற்கான மசோதாவை, அவையின் பரி சீலனைக்கு எடுத்துக் கொள்ளலாம்''*

*என முன்மொழிகிறேன்.*

*மசோதாவில் மொத்தம் ஏழு பிரிவுகள் உள்ளன. இவற்றில் பிரிவு 2, பிரிவு 7 ஆகிய இரண்டு மட்டுமே அடிப்படையானவை. இவையிரண்டும் வெவ்வேறு கருத்துக்கள் குறித்தவை. பிரிவு 2 வேலை நேரக் குறைப்பு பற்றியது; பிரிவு 7 மிகை நேர உழைப்பூதியம் பற்றியது.*

*இவற்றுள் முதலாவதான, வேலைநேரக் குறைப்பு பற்றிக் கருதுமுகத்தான் இப்போதைய நிலைமை என்னவென்பதை அவையின் முன் எடுத்துரைக்க விரும்புகிறேன். தொழிற்சாலைகள் சட்டத்தின் 34ஆம் பிரிவின்படி, தற்போது, ஆண்டு முழுதும் பணி தொடரும் தொழிற்சாலைகளில் வேலைநேரம், வாரத்துக்கு 54 மணி நேரமாகவும், குறிப்பிட்ட பருவ காலங்களில் மட்டும் பணி நிகழும் தொழிற்சாலைகளுக்கு உச்ச வேலைநேரம், வாரத்துக்கு 60 மணி நேரமாகவும் வரம்பு விதிக்கப்பட்டுள்ளது. இந்த விதிக்கு திருத்தம் தேவை என ஏன் அரசு விரும்புகிறது என்பதை அவைக்கு அறிவித்தல் உகந்தது எனக் கருதுகிறேன்.*

*அவை உறுப்பினர்களில் ஒருவர் குறிப்பிட்டவாறு, தொழிற்சாலைகளில் வேலை நேரத்திற்கு வரம்பு என்ற கருத்தே 1919 ஆம் ஆண்டு வாஷிங்டனில் நடந்த மாநாட்டில்தான் முதலாவதாக உருவானதென்பது அவை உறுப்பினர்களுக்கு நினைவிருக்கலாம்.*

---

*1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, எண். 7, 1946, பிப்ரவரி 21, பக். 1304-6.*

வாஷிங்டன் மாநாடு, தொழிற்சாலை ஊழியர்களின் வேலை நேரத் திற்கான உச்சவரம்பு வாரத்துக்கு 40 மணி நேரம் என நிர்ணயித்தது. எனினும் இந்தியாவின் அப்போதைய நிலைமைகளைக் கருத்தில் கொண்டு, இந்தியாவில் அப்போது நிலவிய, வாரத்துக்கு 60 மணி நேர வேலை என்பதையே உச்ச வரம்பாக வைத்துக் கொள்ள மாநாடு ஒப்புதல் அளித்தது. அதன் விளைவாக, வார வேலைநேரத் தின் உச்ச வரம்பு 60 மணி நேரமாகவே தொடர இந்திய அரசு அனுமதி அளித்தது. தொழிலாளர் நல இராயல் கமிஷன் இது குறித்து மீண்டும் ஆய்வு செய்தபோது, ''இந்தியாவின் தொழிற் சாலைச் சட்டம், பன்னாட்டு அமைப்பு நெறிகளுடன் ஒத்திசைவ தாய் அமைய வேண்டுமென்று, வாஷிங்டன் மாநாடு வற்புறுத்த வில்லையென்ற போதிலும், இந்தியத் தொழிற்சாலைகளில் வேலை நேர உச்சவரம்பு, வாரத்துக்கு 54 மணி நேரமாகக் குறைக்கப்பட லாம்'' என்று பரிந்துரைத்தது. ஆணையத்தின் பரிந்துரையை இந்திய அரசு ஏற்று, 1934 ஆம் ஆண்டில் சட்டத்திருத்த மசோதா ஒன்றைக் கொண்டு வந்து நிறைவேற்றியது. இப்போது நிலவும் வேலை நேர உச்சவரம்புகள் அம்மசோதாவின் 34 ஆம் பிரிவில் வரையறுக்கப் பட்டவையே. வாஷிங்டன் மாநாட்டில் நிர்ணயிக்கப்பட்டவாறு வேலைநேர உச்சவரம்பு எனும் நலனை இந்தியத் தொழிலாளர் களும் பெற்றுப் பயனடைவதற்கான காலமும் சூழ்நிலைமையும் தற்போது கணித்துள்ளதாக இந்திய அரசு கருதுகிறது; அதன் விளை வாக இந்த மசோதா இப்போது கொண்டுவரப்பட்டுள்ளது.

இம்மசோதாவை அவசியமானது மட்டுமன்றி அவசரமானது மாக இந்திய அரசு கருதுவதற்கான காரணங்களை நான் ஈண்டு விவரிக்கத் தேவையில்லை. இந்த நடவடிக்கையை அரசு தற்போது எடுப்பதற்கான காரணங்களைச் சுருங்கக் கூற முற்படுகிறேன். மற்ற வேறு பல காரணங்கள் இருந்தாலும் கூட, இந்தியாவில் நிலவும் கடினமான தட்பவெப்பநிலை ஒன்றே, பிற நாடுகளை விட இந்தியா வில் வேலை நேரத்தை மிகக் குறைவாக நிர்ணயிப்பதற்குப் போதுமான காரணம் என்பதை அனைவரும் ஏற்றுக் கொள்வீர்கள் என நம்புகிறேன். எனினும், இதற்கு மற்றொரு முக்கிய காரணமும் உண்டு. போர்க்காலத்தில், அவசரச் சட்டப் பிரிவு 8இன் கீழ், தொழிற் சாலை வேலை நேரங்களைக் குறித்த தொழிலாளர் நலச் சட்டங் களுக்கு விலக்களிக்கப்பட்டு, வேலை நேரம் மிகுதியாக்கப்பட்ட தால் கடுமையாக உழைத்து அலுத்துச் சோர்ந்துள்ள தொழிலாளர் கள் உடல்நலம், மனநலம் பேணுதற்பொருட்டும் இந்த நடவடிக்கை அவசியமாகிறது. மூன்றாவதாக, நாட்டில் நிலவும் கடுமையான

வேலையில்லாத் திண்டாட்டத்தைக் கணிசமாகக் குறைக்கவும், ஆட்குறைப்புத் திட்டத்தினால் வேலையிழப்போர்க்கு மாற்று வாய்ப்பு அளிக்கவும் இந்நடவடிக்கை மிக உதவும். எனவே, இம் மசோதாவில் முன்மொழியப்பட்டிருப்பது போன்று, முழு ஆண்டுத் தொழிற்சாலைகளுக்கு 48 மணிநேரம் எனவும், பருவகாலத் தொழிற் சாலைகளுக்கு 54 மணி நேரம் எனவும்...

*சார்ஜெண்ட் என்.வி. காட்கில் (பம்பாய் மத்தியப் பிரிவு: முகமதியரல்லாத கிராமப்புற சார்பாளர்): 40 மணி நேரமாக ஆக்குங்கள்.*

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* ... சீரான உச்ச வரம்பை விதித்தால், இப்போதைய நிலையை விட மிகுதியான தொழிலாளர்களுக்கு வேலைவாய்ப்பு தருவதன் வழி, போர்ப் பிற் காலச் சிக்கல்களை ஓரளவுக்குக் குறைக்கவும் உதவும். சில உறுப் பினர்கள் இதை மிகவும் புரட்சிகரமான நடவடிக்கையாய்க் கருத லாம். இது அவ்வாறு அல்லவென்பதை அவர்களுக்கு விளக்கவும் விரும்புகிறேன். ஆண்டு முழுவதும் இயங்கும் தொழிற்சாலைகளுக்கு 48 மணி நேரம், பருவகாலங்களில் மட்டும் இயங்கும் தொழிற் சாலைகளுக்கு 54 மணி நேரம் எனும் உச்ச வரம்புகள் இருந்துள்ளன. 1939 ஆம் ஆண்டில் நிலவிய முழு ஆண்டுத் தொழிற்சாலைகள் 8644. இவற்றுள் 2315 தொழிற்சாலைகளில் 48 மணி நேர வேலை வரம்பு நிலவியது. இது மொத்தத்தில் 27 சதவீதம் ஆகும். 1940 ஆம் ஆண்டில் மொத்தம் 8115 தொழிற்சாலைகளில், 2,525இல், அதாவது 28 சதவீதத் தொழிற்சாலைகளில் வேலைநேர வரம்பு 48 மணி யாக இருந்தது. 1941இல் இருந்த 10,261 தொழிற்சாலைகளில் 48 மணி நேர வேலை வரம்பு நிலவியவை 2,921; இது 29 சதவீதம் ஆகும். 1942 ஆம் ஆண்டில் மொத்தத் தொழிற்சாலைகளின் எண் ணிக்கை 10,483; இதில் 48 மணிநேர வேலை வரம்பு நிலவிய தொழிற் சாலைகள் 2,687; அஃதாவது, 26 சதவீதம். 1943இல், மொத்த தொழிற் சாலைகள் 11239இல், 48 மணி நேர வேலை வரம்பு நிலவியவை 2761; அதாவது 25 சதவீதம். 1944இல், மொத்தத் தொழிற்சாலைகள் 11,835இல், 48 மணி நேர வேலை வரம்பு நிலவியவை 3,191; அதாவது, 27 சதவீதம். இனிக் குறிப்பிட்ட பருவங்களில் மட்டும் இயங்கும் தொழிற்சாலைகள் குறித்த விவரங்களையும் நோக்கு வோம். 1939இல் தொழிற்சாலைகளின் எண்ணிக்கை 6,252; இதில் 54 மணிநேர வேலை வரம்பு கொண்டவை 2,409. அதாவது 30 சத வீதம். 1940இல், மொத்தத் தொழிற்சாலைகள் 6,239; 54 மணிநேர வேலை வரம்பு கொண்டவை 2,440; அதாவது 39 சதவீதம். 1941இல்

மொத்தத் தொழிற்சாலைகள் 6,265; இதில் 54 மணிநேர வேலை வரம்பு நிலவியவை 2,439; அதாவது 39 சதவீதம். 1942இல் மொத்தத் தொழிற்சாலைகள் 5,925; இதில் 54 மணி நேர வேலைவரம்பு நிலவியவை 2,358; அதாவது 40 சதவீதம். 1943இல், மொத்தத் தொழிற்சாலைகள் 6,255; இதில் 54 மணி நேர வேலை வரம்பு நிலவியவை 2,398; அதாவது 40 சதவீதம். 1944இல் மொத்தத் தொழிற்சாலைகள் 5,950; இதில் 54 மணிநேர வேலை வரம்பு நிலவியவை, 2,368; அதாவது 40 சதவீதம். பிற தொழிற்சாலைகளிலும் ஏறத்தாழ இதே வரம்பு, சற்று கூடுதலாக நிலவியது.

திரு. ஸ்ரீபிரகாசா (காசி, கோரக்பூர் பிரிவுகளின் முகமதியரல்லாதார் சார்பாளர்): இவற்றில் பணிபுரிந்த தொழிலாளர் எண்ணிக்கை எவ்வளவு?

டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அடுத்து அதைத்தான் உரைக்க வருகிறேன். தொழிலாளர் எண்ணிக்கை பற்றிய நேரடித் தகவல் இல்லை. ஆனால் அரசு நியமித்த குழு அறிக்கைகள் தரும் விவரங்கள் வருமாறு: 1945 நிலவரப்படி, மொத்தத் தொழிலாளர்கள் (இருவகைத் தொழிற்சாலைகளிலுமாக) 25,20,251. இதில் 48-54 மணி நேர வேலை வரம்புத் தொழிற்சாலைகளில் பணியாற்றியோர் 9,47,000; அதாவது 37%. எனவே, மசோதா வரையறுக்க முனையும் வரம்பு முன்னரே பல தொழிற்சாலைகளில் நிலவியதுதான் என்பதையும், மசோதா பெரும் புரட்சிகர மாறுதல்கள் எதையும் கொண்டு வந்திடாது என்பதையும் காணலாம்.

இம்மசோதா பற்றிக் கூறப்படும் குறைகளில் பிறிதொன்றுக்கும் இங்கு விளக்கமளிக்க விரும்புகிறேன். இதன் விளைவாக உற்பத்தி, குறிப்பாக பஞ்சாலைகளில், பாதிக்கப்படும் என்று வன்மையாகக் கூறப்படுகிறது. தங்கள் நோக்கிலும், நாட்டு நலநோக்கிலும் இம்முடிவு மிகத் தீங்கானது என அவர்கள் கூறுகின்றனர். நாட்டில் கடுமையான துணிப் பஞ்சம் நிலவுவது உண்மையே. எனவே, இத்தகைய சூழலில், பஞ்சாலைகளில் வேலை நேர வரம்புச் சட்டத்துக்கு விலக்கு அளித்தல் உட்பட, துணி உற்பத்தியைப் பெருக்கும் நோக்கிலான அனைத்து நடவடிக்கைகளையும் மேற்கொள்ள வேண்டும்; அப்போதுதான் துணிப் பற்றாக்குறையை ஈடுகட்டும் வகையில் உற்பத்தியைப் பெருக்க முடியும். தொழிலாளர் நலத்துறை, வேலைநேரக் குறைப்பால் உற்பத்தி மீது தாக்கம் என்ன என்பது பற்றியதோர் ஆய்வினை, குறிப்பாக பஞ்சாலைகளைக்

கருத்தில் கொண்டு, மிக விரிவாக நடத்தியுள்ளது. இதில் பல சுவை யான விவரங்கள் தெரியவந்துள்ளன. அவற்றை முழுமையாய்த் தரின் அவை அலுப்படையும்; எனவே, பருத்தி நுகர்வு, தறிகள், நூற்புக் கதிர்களின் அதிகரிப்பு ஆகியன பற்றிய விவரங்களை மட்டும் தர முனைகிறேன். வேலை நேரத்தில் கடைசியாக மாற்றம் செய்யப் பட்டது 1934இல்தான். எனவே, அவ்வாண்டின் விவரங்களை நோக்குவோம். 1934இல் வேலை நேர வரம்பு வாரத்துக்கு 60 மணியிலிருந்து 54 மணியாகக் குறைக்கப்பட்டது. அவ்வாண்டில் மொத்தம் 352 ஆலைகளில், 9,613,1734 நூற்புக்கதிர்களும், 194,388 தறிகளும் இருந்தன; 384, 938 தொழிலாளர்கள் பணிபுரிந்து வந்தனர்; பருத்தி நுகர்வு 2,703,994 பொதிகள். வேலைநேரக் குறைப்புச் சட்டம் நடைமுறைக்கு வந்தது 1935 ஆம் ஆண்டில்; அவ்வாண்டில் பஞ்சாலை களின் எண்ணிக்கை 365 ஆக உயர்ந்தது. அவ்வாறே நூற்புக் கதிர்கள் எண்ணிக்கை 9,685,175 ஆகவும், தறிகளின் எண்ணிக்கை 1,98,867 ஆகவும், தொழிலாளர் எண்ணிக்கை 4,14,884 ஆகவும், பருத்தி நுகர்வு 3,123,418 பொதிகளாகவும் உயர்ந்தன. கடைசியாக விவரங்கள் திரட்டப்பட்ட 1938 ஆம் ஆண்டை நோக்குவோம். அவ்வாண்டில் பஞ்சாலைகளின் எண்ணிக்கை 380, நூற்புக் கதிர்கள் 10,020,275.

*திரு. ஸ்ரீபிரகாசா:* மாண்புமிகு அமைச்சர் எண்ணிக்கைகளை இலட்சக்கணக்கில் கூறுவாரா?

*டாக்டர் அம்பேத்கர்:* விவரங்கள் (கிடைத்துள்ளவாறு) மில்லி யன்களில் தரப்பட்டுள்ளன; இதுவே பரவலாகப் பயன்படுத்தப் பட்டு வருகிறது; இக்கணக்கினை எதிர்க்கட்சி உறுப்பினரும் நன்கறி வார் (அந்த அளவுக்கு அவர் விவரமறியாதவரல்லர்).

தறிகளின் எண்ணிக்கை 200,648; தொழிலாளர் எண்ணிக்கை 437,690; பருத்தி நுகர்வு 3,662,648 பொதிகள். எனவே, வேலைநேரக் குறைப்பினால் உற்பத்தி குறைந்து போகுமென்பது தேவையற்ற அச்சமென்று அவைக்குத் தெரிவித்துக் கொள்கிறேன்.[1] எனினும், தற்போது நிலவும் துணிப் பற்றாக்குறையை (துணிப் பஞ்சம் எனலும் தகும்) அரசு உணர்ந்துள்ளது. எனவே, தேவைப்பட்டால் பஞ்சாலை களுக்கும், தொடர்பான தொழிற்சாலைகளுக்கும் வேலைநேர வரம்புச் சட்டத்திலிருந்து விலக்களிக்கவும் அரசு தயாராகவுள்ளது. அதற்கேற்ப, மசோதாவின் 5வது பிரிவில், சட்டத்தின் 44வது

பகுதிக்குத் திருத்தம் முன்மொழியப்படுகிறது. அதன்படி, சட்டத்தின் செயல்பாட்டை (ஒரு சமயத்தில்) ஆறு மாதங்களுக்கு நீடிக்கும் அதிகாரம் மாநில அரசுகளுக்குத் தரப்படுகிறது. பொதுமக்களின் நலன்களும் அவசர நிலைக்குமான தனி நிலைகளும் தெளிவுறுத்தப் படுகின்றன. அவசர நிலையில் தொழிற்சாலைச் சட்டத்தின் செயல் பாட்டை நிறுத்திவைக்கும் அதிகாரம் ஏற்கெனவே இடம்பெற்றுள் ளது. துணிப் பஞ்சம் என்பது ஒரு அவசர நிலை என்று ஏற்கப்படா விடின், மாநில அரசுகள் இந்த அதிகாரத்தைப் பயன்படுத்த இயலா நிலை தோன்றும். எனவே, மேலும் முன்னெச்சரிக்கையாக, இம் மசோதாவில் பொதுமக்களின் நலனை முன்னிட்டும் தொழிற்சாலைச் சட்டத்தின் செயற்பாட்டை நிறுத்தி வைக்க மாநில அரசுகளுக்கு அதிகாரம் வழங்கப்படுகிறது. எனவே, சட்டத் திருத்தத்தின் விளை வாகத் துணி உற்பத்தி பாதிக்கப்படுமென்று பஞ்சாலை முதலாளிகள் அஞ்சத் தேவையில்லை.

எஞ்சிய 3, 4, 6 ஆகிய பிரிவுகள் இதன் தொடர் விளைவு களே. பிரிவு 3, ஒரு நாளைய வேலைநேரத்தைத் தொடர் ஆலை களுக்கு 11 இலிருந்து 9 மணியாகவும், பருவகாலத் தொழிற்சாலை களுக்கு 11 இலிருந்து 10 மணியாகவும் திருத்துகிறது. இஃது, வார வேலைநேரத்தில் செய்யப்படும் மாற்றங்களுக்கேற்ப அமைவதே யாகும். 4, 6 ஆகிய பிரிவுகள் வேலை நேர விரிவை 13 மணியி லிருந்து 12 மணியாகக் குறைக்க முற்படுகின்றன; இதுபற்றி நான் மேலும் விளக்கத் தேவையில்லை. மசோதாவின் இரண்டாவது முக்கியக்கூறு, மிகைநேர உழைப்புக்கான கூடுதல் ஊதியம் பற்றிய தாகும். தற்போதைய தொழிற்சாலைச் சட்டத்தில் மிகைநேர உழைப் பூதியம் குறித்த சீரான விதி ஏதும் காணப்படவில்லை என்பதை உறுப்பினர்கள் நோக்கலாம். தொடர் தொழிற்சாலைகளுக்கு ஒன்றாக வும், பருவகாலத் தொழிற்சாலைகளுக்கு வேறொன்றுமாக இரு வேறு விதிகள் காணப்படுகின்றன. வார வேலை நேர வரம்பு 60 மணிக்கு மேல் இருக்கும் பருவகாலத் தொழிற்சாலைகளுக்கு மிகை நேர உழைப்பூதியம் 11/2 மடங்காகவும், தொடர் தொழிற்சாலை களில், வார வேலை நேர வரம்பு 54 முதல் 60 மணி வரையுள்ள தொழிற்சாலைகளுக்கு மிகைநேர உழைப்பூதியம் 11/4 மடங்காக வும், 60 மணிக்கு மேல் வார வேலை நேரம் நிலவும் தொடர் தொழிற் சாலைகளுக்கு மிகைநேர உழைப்பூதியம் 11/2 மடங்காகவும் வரை யறுக்கப்பட்டுள்ளது. இத்தகைய வேறுபாடு நியாயமற்றது என்று அரசு கருதுவதால், எல்லாவிதமான தொழிற்சாலைகளுக்கும் மிகை நேர உழைப்பூதியம் சீராக வரையறுக்க அரசு கருதுகிறது. எனவே,

இம்மசோதா, எல்லாவிதமான தொழிற்சாலைகளிலும் மிகைநேர உழைப்பூதியத்தை ஒன்றரை மடங்காக வரையறுக்கிறது. இஃது, ஓர் எளிய நடவடிக்கையே என்பதையும், நெடுங்காலத்திற்கு முன்னரே எடுக்கப்பட்டிருக்க வேண்டிய நடவடிக்கையைத் தாமதமாகவேனும் எடுக்க முனைந்துள்ளோம் என்பதையும், அவை உறுப்பினர்கள் உணர்ந்து, பன்னாட்டு நெறிமுறைகளையொட்டிய இத்திருத்தத் திற்கு ஆதரவு தருவர் என நம்புகிறேன். எனவே இத்தீர்மானத்தை அவையின் முன்மொழிகிறேன்.

## தொழிற்சாலைகள் (சட்டத்திருத்த) மசோதா

[1]டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: மசோதாவிற்குத் திருத்தம் முன்மொழிந்துள்ள உறுப்பினர், தமது திருத்தத்திற்கு ஆதரவாக ஆற்றிய உரையொன்று மட்டுமே அத்திருத்தத்திற்கு ஆதரவு எனில், அவரது திருத்தத்தை நான் எதிர்த்திருக்க மாட்டேன்; ஏனெனில், மசோதாவைக் கொண்டு வருமுன், இந்திய அரசு தொடர்பு கொண்ட அனைத்துத் தரப்பினரையும் கலந்தாலோசித்துள்ளதா என்பதை எனது உரையில் ர் தெளிவுபடுத்தாமையால்தான் திருத்தம் முன் மொழிவதாக அ ுப்பினர் கூறினார். இதைப் பற்றி நான் எனது உரையில் குறிப்ட ல்லையென்பது மெய்தான் என்றாலும், கடந்த பல ண்டுகளாகத் தொழிலாளர் நல மாநாடு ஆண்டுதோறும் நடை ற்று வருவதையும், மாநாட்டின் நிலைக்குழு மூன்று மாதங் களுக்கொருமுறை கூடுவதையும், நிலைக்குழுவில் தொழிலாளர், முதலாளிகள், மாநில அரசுகள் ஆகிய மூன்று தரப்பிலும் சார்பாளர் கள் இடம்பெற்றுள்ளனர் என்பதையும் அவ்வுறுப்பினர் நன்கு அறிவார். இந்திய அரசு, எந்தவொரு நடவடிக்கையையும் எடுக்கு முன்னர், இயன்றவரை அதனைத் தொழிலாளர் நல மாநாட்டில் வைத்து அனைத்துத் தரப்பாரின் கருத்தினையும் அறியும் முயற்சியை மேற்கொண்டே வந்துள்ளது. இப்போதைய திருத்த மசோதாவைப் பொறுத்தமட்டிலும் கூட அந்த நடைமுறையே பின்பற்றப்பட்டுள் ளது. இதுபற்றித் தொழிலாளர் நல மாநாட்டிலும், தொழிலாளர் நல நிலைக்குழுவிலும் எத்தனை முறை விவாதிக்கப்பட்டுள்ளது என்பதை இப்போது சரியாகக் கூற இயலவில்லை; ஆனால் இதைப் பற்றி மிக விரிவாகவும் முழுமையாகவும் விவாதிக்கப்பட்டுள்ள

---

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி I, எண். 7, பிப்ரவரி 21, 1946, பக்கங்கள் 1312-13.

தென்பதை அறுதியிட்டுக் கூற இயலும். பஞ்சாலை அதிபர்கள் தாங்கள் எதிர்கொள்ளும் இடர்ப்பாடுகளைச் சுட்டி தாங்கள் எதிர்ப்பைத் தெரிவித்ததையடுத்து அவர்களது கருத்தையொட்டிய மாற்றமொன்றும் செய்யப்பட்டுள்ளது. எனவே, இதைப் பொருத்த மட்டில் திருத்தம் முன்மொழிந்த உறுப்பினரது கருத்தில் வரவில்லை யென்றே கருதுகிறேன். நான் முன்னரே குறிப்பிட்டவாறு, இது வொன்றே காரணமென்றால் நான் எதிர்ப்பு தெரிவித்தேன். ஆனால், எதிர்பாராவிதமாக, விவாதம் விந்தையான திசையில் திரும்பி விட்டது.

*பேரா. என்.ஜி. ரங்கா (குண்டூர்-நெல்லூர் முகமதியரல்லா கிராமப்புறச் சார்பாளர்): மிக வரவேற்கத்தக்க திருப்பம்தான்.*

*டாக்டர் அம்பேத்கர்: அது வரவேற்கத்தக்க திருப்பமாய் இருக்கலாம். அவையில் பல்வேறு தரப்பு உறுப்பினர்களும் பேசும் போது போட்டி போட்டுக்கொண்டு தொழிலாளர் நலத்தில் அக்கறை காட்டியதை நோக்கும்போது, ஒருவரையொருவர் விஞ்சும் வகை யில் பரிந்துரைகளைப் பொழிவது, ஏதோ ஏலம் நடப்பது போன்ற நிலையை உணர்த்தியது.*

*மதிப்பிற்குரிய உறுப்பினர் ஒருவர்: நீங்கள் ஏலத்தைக் கூட்டலாமே!*

*டாக்டர் அம்பேத்கர்: இராயல் ஆணையத்தில் உறுப்பினர் களாக இருந்தவர்களும் இவ்வவையின் உறுப்பினர்களாய் இருக் கின்றனர். இவர்களெல்லாம் தாங்கள் முன்னர் பரிந்துரைத்த நட வடிக்கைகளுக்கு ஆதரவாய் விளக்கிக் கருத்தை நிலைநாட்ட முற் படாமல், டோரிகளிலும் பிற்பட்ட டோரிகளாக என்னைச் சித்தரிக்க முனைந்தது எனக்கு மிக வருத்தமளிக்கிறது. அவர்களுடைய குற்றச் சாட்டுகளை நான் ஏற்றுக்கொள்ளவில்லை; எனினும் திருத்த மசோதா தெரிவுக்குழுவுக்கு அனுப்பப்பட வேண்டுமென்று கருது கிறேன். அப்போதுதான் இங்கு நிகழ்த்தப்பட்ட பல்வேறு உறுப்பினர் களின் உரைகள் வெறும் உணர்ச்சிப் பொழிவுகளா, அல்லது உறுதி யான கருத்து வெளிப்பாடுகளா என்பதை நாம் வாக்கெடுப்பு எனும் நம்பகமான சோதிப்பு முறை மூலம் தெளிவாகப் புரிந்து கொள்ள முடியும். இதை நான் செய்யத் தவறினால், நான் ஒரு பிற்போக்கு டோரி என்ற எதிர்க்கட்சி உறுப்பினர்களின் குற்றச்சாட்டு வலிவு*

பெறும். எனவே, சட்டத் திருத்தத்தை ஒரு குறுகிய வரம்புக்குள் நிறுத்திக் கொள்ள முயல்வதாலேயே உறுப்பினர் திருத்தத்தை ஏற்காது தவிக்கிறேன் என்ற குற்றச்சாட்டு என்மீது எழாதிருக்க வேண்டி, தீர்மானத்தை ஏற்றுக் கொள்கிறேன்.

(இக்கட்டத்தில் அவை உறுப்பினர்கள் தமது இருக்கையி னின்று எழுகின்றனர்).

★ ★ ★

[1]**திரு. ஆர். வேங்கடசுப்பாரெட்டியார்:** தெரிவுக்குழுவுக்கு நான் ஏற்கெனவே பரிந்துரைத்த பெயர்களுடன், திரு. டி.ஏ. இராம லிங்கம் செட்டியார், ராய்பகதூர் பட்டாச்சாரியா ஆகிய இருவரது பெயர்களையும் சேர்க்க விரும்புகிறேன்.

**டாக்டர் அம்பேத்கர்:** தங்கள் பரிந்துரையை ஏற்றுக் கொள் கிறேன்.

**அவை துணைத்தலைவர்:** ''மாண்புமிகு அசோகராய், மாண்பு மிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர், பேரா. என்.ஜி. ரங்கா, திரு. என்.வி. காட்கில், திரு. வாதிலால் லல்லுபாய், திவான் சாமன் லால், பண்டிட் பாலகிருஷ்ண சர்மா, திரு. முகமது நௌமான், திரு. முகமது எம். கில்லேதார், சர் ஹசன் அக்ரவர்த்தி, திரு. எஸ்.ஜி. ஜோஷி, திரு. ஏ.சி. இன்ஸ்கிப், செல்வி மானிபென் காரா, திரு. எஸ். குருசாமி, சௌத்திரி திரு. சந்த், திரு. டி.ஏ. இராமலிங்கம் செட்டியார், ராய் பகதூர் டி.எம். பட்டாச்சாரியாவுடன் திருத்த முன்மொழி வாளரும் கொண்ட தெரிவுக்குழுவுக்கு மசோதாவை அனுப்பி 1946, மார்ச்சு 7க்குள் கருத்து கோரலாமெனவும், குழுக்கூட்டங்களுக்கு 5 உறுப்பினர் கோரம் இருக்கலாமெனவும் தீர்மானம் வாக்குக்கு விடப்படுகிறது.''

தீர்மானம் அவையால் நிறைவேற்றப்பட்டது.



1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், பகுதி I, எண் 7, 1946, பிப்ரவரி 21, பக். 1318.

# 59

## [1]மறுவாழ்வுத் திட்டம்

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): அவைத் தலைவர் அவர்களே, ஐரோப் பியக் குழுவின் தலைவர் தமது கருத்துக்களைத் தொகுத்துரைக்கும் போது, இந்திய அரசின் மறுகுடியமர்வு, மறுவாழ்வுத் திட்டங்கள், தற்போது நடைபெற்றுவரும் படைக் கலைப்பினால் திரும்பும் வீரர்களின் எண்ணிக்கைக்கேற்ற அளவில் அமையவில்லையோ என்ற தமது ஐயப்பாட்டைத் தெரிவித்தார். இதைக் குறித்துத் தெளிவு படுத்தும் பொருட்டு, தேவையான விவரங்களை அவைக்கு அளிக்கவே நான் முன்வந்துள்ளேன். மறுவாழ்வளித்தல் என்பதில் இரண்டு பகுதிகள் உண்டு. ஒன்று நிலத்தில் குடியமர்த்தல்; மற்றொன்று தொழிலில் அமர்த்தல். நிலத்தில் குடியமர்த்தல் திட்டம் முழுமையாக மாநில அரசுகளின் பொறுப்பில் விடப்படுகிறது. இதற்கான காரணத்தை அவை நன்கறியும். அரசியலமைப்புச் சட்டத் தின்படி, நிலம் மாநில அரசின் பொறுப்பைச் சார்ந்தது. எனவே, படைவீரர் மறுவாழ்வு என்பது மத்திய அரசின் முழுமை யான பொறுப்பு என்பதை நாம் ஏற்றுக்கொண்டாலும், அதன் பொருட்டாகக் கூட, நிலம் என்பது மாநில அரசின் உரிமை வரம்புக் குட்பட்டதென்பதை மறுத்துவிட முடியாது. எனவே, மாநில அரசு களின் இசைவைப் பெற்று, படைவீரர் மறுகுடியமர்த்துத் திட்டம் மாநில அரசுகளின் முழுப் பொறுப் பாக விடப்பட்டுள்ளது; மத்திய அரசின் பொறுப்பு தொழிலமர்த்தல் மட்டுமே என்பதைத் தெரி வித்துக் கொண்டு, அதுகுறித்த விவரங்கள் சிலவற்றை அவை முன் வைக்க விழைகிறேன்.

மறுவேலையமர்த்துத் திட்டம் என்பது மறுகுடியமர்த்தல், வேலைவாய்ப்புக்கான தலைமை இயக்ககத்தின் பொறுப்பில் விடப்பட்டுள்ளது. இத்துறையின் பொறுப்புகளை ஏழு வகையாகப்

---

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, எண். 4, 1946, மார்ச்சு 5. பக்கங்கள் 1898-1900.

பிரிக்கலாம். அவை: (1) வேலைவாய்ப்புப் பணி (2) தொழில்நுட்பப் பயிற்சி (3) தொழில் பயிற்சி, (4) ஊனமுற்ற படைவீரர் மறுவாழ்வு (5) முன்னாள் படைவீரர்களுக்கும், ஊனமுற்ற படை பணியாளர் களுக்கும் வேலைவாய்ப்புகள் பரிந்துரைத்தல், (6) பின் தொடர் சேவை, (7) பணிநீக்கம், விடுவிப்பு குறித்த புள்ளிவிவரம் திரட்டல் என்பனவாம்.

முன்னாள் படை வீரர்களுக்கும் ஊனமுற்ற படைஞர்களுக் கும் வேலைவாய்ப்புகளைப் பரிந்துரைத்தல் என்பதும், அதன் சார்பான பின்தொடர் சேவை, படைஞர் பணிநீக்கம், விடுவிப்பு குறித்த புள்ளிவிவரங்கள் திரட்டல் என்பனவும் எவ்வளவு அவசிய மான பணிகள் என்பன அவையோர் தெளிவாக உணரக் கூடியவை என்பதால், இவற்றைப் பற்றி நான் மேலும் விளக்கம் தரத் தேவை யில்லை. இவை பற்றிய மேல் விவரங்கள் தேவைப்படும் உறுப் பினர்கள், இந்திய அரசின் தொழிலாளர் நலத்துறை வெளியிட்டுள்ள நூலில் படித்தறியலாம். நூலின் படியொன்று நூலகத்தில் வைக்கப் பட்டுள்ளது. மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் எவரேனும், தமது பயன் பாட்டுக்கு நூலின் படியொன்று தேவை என விரும்பினால், மகிழ் வோடு சுற்றுக்கு அனுப்ப ஏற்பாடு செய்வேன்.

திரு. எம். அனந்தசயனம் ஐயங்கார்: துறையின் பெயர் என்ன?

டாக்டர் அம்பேத்கர்: ''மறுகுடியமர்த்தல், வேலை வாய்ப் புக்கான தலைமை இயக்ககம்'' என்பதே துறையின் பெயர்.

பாபு ராம் நாராயண சிங்: நூலைச் சுற்றுக்கு அனுப்ப வேண்டு கிறேன்.

டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: தொழிலாளர் நல ஆலோ சனைக்குழு கடைசியாக கூடியபோது, நூலின் படிகள் உறுப்பினர் களுக்குக் கொடுக்கப்பட்டன. வேலைவாய்ப்பு நிறுவனங்கள், தொழில்நுட்பப் பயிற்சி, தொழில் பயிற்சி, மறுவாழ்வுத் திட்டங் கள் குறித்து அவைக்கு விரிவாக விளக்கம் தேவையென்பதால் அவற்றைப் பற்றி ஒன்றன்பின் ஒன்றாக விளக்க முனைகிறேன்.

முதலில் தொழில்நுட்பப் பயிற்சித் திட்டம் குறித்து நோக்கு வோம். மத்திய அரசின் பொறுப்பில் சில தொழில்நுட்பப் பயிற்சி மையங்கள் இயங்கி வருகின்றன. படைக்குறைப்பால் பணி விடுவிப்பு பெறுவோர்களுக்காக இம்மையங்களில் 14,000 இடங்கள் ஒதுக்கப் பட்டுள்ளன. தொழிற்பயிற்சி ஓராண்டு அல்லது அதற்குக் குறை வான கால அளவில் அளிக்கப்படும். 48 வகையான தொழில்களில் பயிற்சிகள் அளிக்கப்படும். தொழில்களின் பட்டியல் அரசு வெளி யிட்டுள்ள கையேட்டின் 55 ஆம் பக்கத்தில் பிற்சேர்க்கை VII எனத் தரப்பட்டுள்ளது. அடுத்து, தொழில் பயிற்சி குறித்த விவரங்களை நோக்குவோம். இவை, வேளாண்மை, பால் பண்ணை, குடிசைத் தொழில்கள், எழுத்தர், வணிகவியல் தொழில்கள் முதலியனவாம். இதற்கான திட்டம் வகுக்கப்பட்டு மாநில அரசுகளின் ஒப்பிசைவுக் காக அனுப்பி வைக்கப்பட்டுள்ளது. இத்திட்டத்தின்படி, தொழிற் பயிற்சி மையங்களில், வேளாண்மை சார்ந்த தொழில்களில் 20,000 இடங்களும், பிற தொழில்களில் 50,000 இடங்களும் ஒதுக்கப்படும்.

அடுத்து, மறுவாழ்வுத் திட்டம் குறித்து நோக்குவோம். இத் திட்டம் போர்த்துறை, தொழிலாளர் நலத்துறை ஆகிய இரண்டின் கூட்டுப் பொறுப்பில் விடப்பட்டுள்ளது. கூட்டுப் பொறுப்பில் விடப் படுதற்கான காரணம் வெளிப்படையானதே. போரில் காயமுற்ற படைவீரரின் மறுவாழ்வுத் திட்டம் இரண்டு கட்டமாகச் செயல் படுத்தப்படும். காயத்துக்குச் சிகிச்சையளித்துக் குணப்படுத்தல் முதல் கட்டம். குணமடைந்த பின்னர் மறுவாழ்வு இரண்டாவது கட்டம். முதலாவது கட்டமான மருத்துவச் சிகிச்சை பொறுப்பைப் போர்த் துறை ஏற்றுக்கொள்கிறது; குணமடைந்தபின் படைவீரரின் மறு வாழ்வுப் பொறுப்பைத் தொழிலாளர் நலத்துறை ஏற்றுக் கொள்கிறது. படைவீரர் மறுவாழ்வுத் திட்டத்திற்காகத் தொழிலாளர் நலத்துறை நாட்டில் பல்வேறு இடங்களில் இரண்டு வகையான பயிற்சி மையங் களைத் தொடங்கியுள்ளது. முதல் வகையான அடிப்படைப் பயிற்சி மையங்களில் 5,000 பேருக்குப் பயிற்சியளிக்க வசதி செய்யப்பட் டுள்ளது. அடுத்து, சிறப்புப் பயிற்சி மையங்களில் 3000 பேருக்குப் பயிற்சியளிக்க வசதி செய்யப்பட்டுள்ளது. தொடக்கப் பயிற்சி மையங்களில் படைவீரரின் தொழில் ஈடுபாடு கண்டறியப்பட்டு, அவருக்குற்ற ஊனத்திற்கேற்ப எவ்வகையான சிறப்புப் பயிற்சிக்கு அவர் ஏற்றவர் என்பதை முடிவு செய்து அதற்கேற்ப ஆயத்தப் பயிற்சி யளிக்கப்படும். மறுவாழ்வு தேவைப்படும் படைவீரர்களுக்காகத்

தொழிலாளர் நலத்துறை ஆறு பயிற்சி மையங்களைத் தொடங்க திட்டமிட்டுள்ளது. முதலாவது மையம் பெங்களுக்கு அருகே ஜலதி என்னுமிடத்தில் அமைக்கப்பட்டுள்ளது. அடுத்த மையம் புனாவுக் கருகே, அவுந்து என்னுமிடத்தில் விரைவில் தொடங்கப்படவுள்ளது.

மறுவாழ்வுத் திட்டத்தின் மிக முக்கியமான கூறாகிய வேலை வாய்ப்பு நிலையங்கள் குறித்து அடுத்து விளக்குவேன். தற்போதைக்கு நாடெங்கும் 71 வேலை வாய்ப்பு நிலையங்கள் இருந்தால் போதும் என்று தொழிலாளர் நலத்துறை முடிவு செய்துள்ளது. ஏற்கெனவே 38 வேலை வாய்ப்பு நிலையங்கள் செயல்பட்டு வருகின்றன. தேவைப்படும் எஞ்சிய நிலையங்களையும் விரைவில் தொடங்கி விட முடியும் என்று தொழிலாளர் நலத்துறை நம்புகிறது.

வேலை வாய்ப்பு நிலையங்களை நிறுவுவதில் போதிய அக்கறைக் காட்டாமையால் அப்பணி மிகுந்த மெத்தனமாக நடந்து வருகிறது என அவை உறுப்பினர்கள் மட்டுமின்றிப் பொதுமக்களும் கூடப் பரவலாகக் குற்றம் சாட்டுவதை நன்கறிவேன். எனவே, வேலைவாய்ப்பு நிறுவனங்களைத் தொடங்குவதில், தொழிலாளர் நலத்துறையால் ஏன் விரைந்து செயல்பட இயலவில்லை என்பதை விளக்கும் சில மெய்த் தகவல்களை அவைமுன் வைக்க விரும்பு கிறேன். முதலாவதாக, வேலைவாய்ப்பு நிறுவனங்கள், போதிய பயிற்சி பெறாத அலுவலர்களின் பொறுப்பில் விடப்பட்டால், அவை தம் நோக்கத்தில் தோல்வி எய்துதல் உறுதி. வேலை வாய்ப்பு தேடித் தரும் பணி மிகுந்த தேர்ச்சியும் திறமையும் தேவைப்படும் சிக்கலான பணியாகும். இதற்கெனத் தனிப் பயிற்சி பெறாதோர் பொறுப்பில் வேலைத் தேடித்தரும் அலுவலகங்கள் விடப்பட்டால் அவற்றின் நோக்கம் முழுமையான தோல்வியையே அடையும். எனவே, வேலைவாய்ப்பு அலுவலகம் ஒன்றை நிறுவுவதற்கு முன்னர் அதன் நிருவாகப் பொறுப்பை ஏற்கவிருக்கும் நபருக்குத் தேவை யான அளவில் பயிற்சி தரப்பட வேண்டும். இக்காரணத்தினால் வேலைவாய்ப்பு அலுவலகங்களை நிறுவும் பணியில் அதிவிரைவு காட்ட முடியவில்லை என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**திரு. பி.ஜே. கிரிபித்ஸ்:** இப்பயிற்சி எங்கே அளிக்கப்படு கிறது?

டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அதைப் பற்றித்தான் கூற முற்படுகிறேன். இந்நோக்கத்தின் பொருட்டு பயிற்சிமையம் ஒன்றை டில்லியில் நிறுவியுள்ளோம். இங்கிலாந்து அரசின் தொழிலாளர் நலத்துறையிலிருந்து அனுப்பப்பட்ட திரு. ஜோன்ஸின் பொறுப்பில் இப்பயிற்சிமையம் இயங்கி வருகிறது. அவர்தான் நிலையத்தை நடத்தி வருகிறார். வேலை வாய்ப்பு நிறுவனங்களின் அனைத்து வகைப் பணிகளுக்கும் இங்கே பயிற்சி அளிக்கப்படுகிறது.

பேரா. என்.ஜி. ரங்கா: ஒரு சமயத்தில் எத்தனை பேருக்குப் பயிற்சியளிக்கிறீர்கள்?

டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: சரியான எண்ணிக்கை தர இயலாமைக்கு வருந்துகிறேன். 35 பேருக்குப் பயிற்சியளிக்கப்படுகிற தென்று நினைக்கிறேன். சரியான எண்ணிக்கை தகவல் வெளியீட்டில் காணப்படும்.

பேரா. என்.ஜி. ரங்கா: அவர்களைத் தேர்ந்தெடுக்க எவ்வளவு காலம் ஆகிறது?

டாக்டர் அம்பேத்கர்: இப்பதவிக்கான இடங்கள் கூட்டரசின் பொதுப்பணிச் சேவை தேர்வு ஆணையத்தின் பரிந்துரைப்படியே நிரப்பப்பட வேண்டுமென்பதால், இங்கும் ஒரு தாமதக்கூறு இடம் பெறுகிறது. கூட்டரசின் பொதுப்பணிச் சேவைத் தேர்வு ஆணையம் தகுதியான அலுவலர்களைத் தெரிவு செய்ய மூன்று மாத காலத்திற்குக் குறையாமல் எடுத்துக் கொள்கிறது. ஆணையம் எடுத்துக் கொள்ளும் காலம் தேவைக்கு மேல் அதிகமானதா என்பதை என்னால் கூற இயலவில்லை. (பேரா. ரங்காவின் குறுக்கீடு). ஆனால் வேலை வாய்ப்பு அலுவலகங்களை விரைந்து நிறுவ இயலா நிலைக்கு அதுவும் ஒரு காரணமென்பதையே சுட்டிக்காட்ட விரும்புகிறேன். முதலாவதாக, வேலைவாய்ப்பு அலுவலர் பணிக்குக் கூட்டரசின் பொதுப்பணிச் சேவை தேர்வு ஆணையத்தின் வாயிலாகத் தேர்ந்தெடுப்பதற்கு நீண்ட காலமாகிறது. அடுத்து அவருக்குத் தக்க பயிற்சி அளிப்பதற்கான கால அவகாசமும் தேவைப்படுகின்றது. இவற்றாலெல்லாம் பணியில் தாமதம் விளைகிறதெனினும் இதற்காகச் செலவிடப்படும் காலம் வீணல்ல என உறுதி கூறலாம்.

வேலை வாய்ப்பு அலுவலகங்களை எல்லாம் நிறுவி முடிக்காதது பற்றிக் கூறப்படும் குறைகளில் மற்றொன்று, தொழிலாளர் நலத்துறை, இந்த அலுவலகங்களையெல்லாம் வெளிப்படையாக நிறுவவில்லை என்பதாகும். அதற்காகத் தேவைப்படும் பணிகளை நிறைவேற்றுவதற்கான அலுவலகங்கள் இல்லையென்று கூறிவிட முடியாது. போர்த்துறையிலேயே வேலை சேர்ப்பு, வேலை வாய்ப்புப் பிரிவு ஒன்று இயங்கி வருவது தெரிந்திருக்கலாம்; தேவையான பணிகளை அது செய்து வருகிறது. கூடியவிரைவில் இப்பணிகள் அனைத்தும் போர்த்துறையிலிருந்து தொழிலாளர் நலத்துறைக்கு மாற்றப்பட வேண்டும் என்பதே அரசின் கொள்கை. வேலைவாய்ப்பு அலுவலகங்களின் எண்ணிக்கை கூடக் கூட, தொழிலாளர் நலத் துறை, போர்த்துறை ஆற்றிவரும் வேலை தேடித்தரும் பொறுப்பு களை கொஞ்சங் கொஞ்சமாகத் தனது பொறுப்பில் ஏற்றுக் கொண்டு வருகிறது. எனவே, இரண்டு துறைகள் முழுமையான ஈடுபாட்டுடன் ஒத்துழைத்து, இப்பணியைச் செவ்வனே நிறைவேற்றி வருகின்றன என்பதே தற்போதைய உண்மை நிலவரமாகும். காலப்போக்கில் இப்பணிகள் அனைத்தும் வேலைவாய்ப்பு அலுவலகங்களின் முழுப் பொறுப்பில் விடப்பட்டு, அது போர்ப்படைஞர் மறுவாழ்வுப் பணி களைத் திறம்பட நிறைவேற்றும் பொறுப்பு வாய்ந்த நிறுவனமாக உருப்பெறும்.

தொழிலாளர் நலத்துறை, அதன் சூழ்நிலை வரம்புகளுக்கு உட்பட்டுத் தன்னால் இயன்ற பணிகள் அனைத்தையும் நன்கு நிறைவேற்றி வருகிறதென்பதில் அவை நிறைவு அடையுமென நம்ப லாம். மேலும் ஒரு கருத்தை மட்டும் கூறிக்கொள்ள விரும்புகிறேன். நாம் எதிர்பார்த்ததற்கு மிகவும் முன்னதாகவே போர் முடிவடைந்து விட்டதால், திடீரென்று எதிர்பாராத வகையில் மறுவாழ்வுப் பிரச் சினை நமது பொறுப்பில் வந்ததென்பதை அனைவரும் உணர வேண்டுமென விழைகிறேன். இருப்பினும் இந்தக் குறுகிய கால அவகாசத்தில் என்னவெல்லாம் தேவையோ அவற்றை நிறைவேற்றி, போர்ப் படையிலிருந்து விடுவிக்கப்படும் வீரர்களை எதிர்நோக்கும் இடர்ப்பாடுகளைக் களைவதில் மிகப் பயன் வாய்ந்த பாங்கில் தொழிலாளர் நலத்துறை விளங்கி வருகிறது.



# 60

## [1]தொழிலாளர் நலமும் சமூகப் பாதுகாப்பும்

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): அவைத்தலைவர் அவர்களே, இந்த வெட்டுத் தீர்மானத்தை முன்மொழியும் மதிப்பிற்குரிய உறுப்பின ருடைய முன்னறிக்கையிலிருந்தே, தீர்மானத்தின் நோக்கம் மிகத் தெளிவாக விளங்குகிறது. அவர் மொழிந்துள்ள வேலையில்லாமைப் படி, போதிய பஞ்சப்படி, சமூகப் பாதுகாப்புச் சலுகைகள் ஆகிய வற்றை உறுதிசெய்ய நிர்வாகக் கவுன்சில் தவறிவிட்டமை குறித்து விவாதிக்கப்பட வேண்டுமென அவர் கோருகிறார். இந்த வெட்டுத் தீர்மானத்தைப் பற்றிய எனது முதலாவது கருத்தைத் தெளிவாக்கி விடுகிறேன். வெட்டுத் தீர்மானம் பொதுப்படையாக (தொழிலாளர் கள் அனைவரையும் பற்றியதாக) இருந்திருந்தால், அதன் தகை நிலையே வேறு என்பதில் ஐயமில்லை; ஆனால் இத்தீர்மானம் மத்திய அரசு ஊழியர்களை மட்டுமே பற்றியது என்பதை அவை நன்கறியும். இதுவே, இந்த வெட்டுத் தீர்மானத்தின் பெருங்குறை என்பதைச் சுட்டிக்காட்டுதல் எனது கடமை. இந்த வெட்டுத் தீர் மானத்தைக் கொண்டு வந்துள்ள மதிப்பிற்குரிய உறுப்பினர் மத்திய அரசு ஊழியர்கள் என்ற ஒரே தகுதிக்காக மட்டும், பணியாளர்களில் ஓர் பிரிவினரை மட்டும் தனித்ததோர் உயர் வகுப்பினராய்க் கருதி அவர்களுக்கு மட்டும், தீர்மானம் குறிப்பிடும் மூன்று வகையான நலன்களை, சிறப்புச் சலுகைகளாக வழங்கும் வகையில் இந்திய அரசின் கொள்கை உருவாக வேண்டுமென விரும்புகிறாரா என்று தெரியவில்லை.*

*இந்த நாட்டில் அரசுத் துறையில் மட்டுமே தொழிலாளர் கள் பணிபுரியவில்லை. தனியார் துறையில் ஏராளமான தொழி லாளர்கள் பணிபுரிந்து வருகின்றனர். இந்திய அரசு தொழிலாளர் நல மேம்பாட்டுக்கெனக் கொள்கை வகுக்கும்போது, தனித்த சிறப்புச் சலுகை பெறுதற்குரியர் என உயர் வகுப்பினராக ஒரு சாராரையும்,*

---

*1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், பகுதி III, பிரிவு 7, 1946, மார்ச்சு 11, அ.ப. 2138-40.*

தாழ்வகுப்பினராகப் பிற சாராரையும் பாகுபாடு செய்து விடக் கூடாதென்பதை அவையுறுப்பினர்கள் அனைவருமே ஏற்றுக் கொள்வீர்களென நம்புகிறேன். இந்திய அரசு தொழிலாளர்களுக்கு வேலையளிக்கும் வெறும் முதலாளிய நிறுவனம் அன்று; அது ஆட்சிப் பொறுப்புள்ள அரசு; தனது பணியில் உள்ள தொழிலாளர் களின் நலன்களைப் பேணுவ்துடன் மட்டுமே அதன் பொறுப்புகள் முடிந்துவிடாது. பொதுவாக, நாட்டுத் தொழிலாளர்கள் அனைவரின் நலன்களையும் பேணும் பொறுப்பு அரசுக்கு உண்டு. எனவே, மதிப்பிற்குரிய உறுப்பினர் தமது தீர்மானத்தில் கொண்டுவரும் மூன்று சலுகைகள் குறித்து இந்திய அரசு கொள்கை வகுப்பதென் றால், அக்கொள்கை, இந்நாட்டின் தொழிலாளர்கள் அனைவரது நலன்களையும் தழுவியதாக அமைய வேண்டுமேயன்றிக் குறிப் பிட்ட தனியொரு பிரிவினர் நலன்களை மட்டும் கருத்தில் கொண்ட தாக அமையலாகாதென்பது திண்ணம்.

இந்திய அரசு, தனது பணியாளர்களிலேயே, வெவ்வேறு பிரி வினருக்கு வெவ்வேறு வகையான ஊதியங்களும், படிகளும் அளித்து வருகிறதேயென்று தீர்மானத்தை முன்மொழியும் மதிப்பிற்குரிய உறுப்பினர் குறிப்பிட்டார். இந்த வேதனைக்குரிய வேறுபாடுகளை நான் நன்கறிவேன் என்பதை வருத்தத்துடன் ஒப்புக் கொள்கிறேன் என்பதோடன்றி, மத்திய அரசுப் பணியாளர்கள் பெறும் ஊதிய விகிதங்கள், பஞ்சப்படி, ஓய்வு உதவித் தொகை, இன்னும் பிற சலுகை ஊதியங்களில் இத்தனை வேறுபட்ட வகைகள் இருப்பதற்கு யார் பொறுப்பு என்பதையும் கேட்க விரும்புகிறேன். இந்தக் குறைகளுக்கு முழுமையான பொறுப்பாளிகள் தொழிலாளர் தலைவர்களே என்பதைச் சற்றும் தயக்கமின்றிக் கூறுவேன். ரயில்வே தொழிலாளர் சம்மேளனத்தைப் பாருங்களேன். அவர்களுடைய கொள்கைகளை ஆயும் எவரும் அவர்களுடைய குறுகிய, தன்னல மேட்டுக்குடி மனப் பான்மையை வெட்டவெளிச்சமாய்க் காணமுடியும். சமூக வாழ்க்கை யின் இன்றியமையாக் கூறுகளுக்கு மிகவும் தேவையானதொரு அரசுத் துறையைத் தங்களால் ஆட்டிப்படைக்க முடியும் என்ற நிலையைப் பயன்படுத்திப் பிறர் எவர்க்கும் கிட்டாத சிறப்புச் சலுகைகள் பல தங்களுக்கு வேண்டுமென்று போராடிப் பெறுகிறார் கள். இப்பேரவை உறுப்பினர்களில் சிலரையும் அவர்கள் தங்கள் பால் ஈர்த்துக் கொண்டு பிற தொழிலாளர் யாரும் எந்நிலையிலிருந் தாலும் அக்கறையில்லை, ரயில்வேத் தொழிலாளர்கள் மட்டும் அனைத்துச் சிறப்புச் சலுகைகளையும் பெற்றுவிட வேண்டுமென்ற குறுகிய நோக்கில் செயல்பட வைக்கின்றனர். மத்திய அரசு தொழி

லாளர்கள் எவரையும் விட ஊதியம், சலுகைகள் யாவற்றிலும் ரயில்வேத் தொழிலாளர்கள் மட்டும்தான் முன்னிலை வகிக்க வேண்டுமென்பது அவர்களது எழுதப்படாத கொள்கையறிக்கை யாய் விளங்குகிறது. தாங்கள் நல்ல ஊதியம் பெற்று வந்தாலும், அஞ்சல் துறை ஊழியர்களது ஊதியம் உயர்த்தப்பட்டு, அதே நிலையில் உள்ள ரயில்வேத் தொழிலாளர் ஊதியத்திற்கு இணை யாக அவர்களது ஊதியம் அமைய நேரிட்டால் போதும்; உடனே அவர்களுக்கு அதிருப்தி வந்துவிடும்; அஞ்சல் துறைத் தொழிலாளர் களை விட மிகுதியாக ஊதியம் தந்து தங்களை மற்றவரினும் மேல் மட்ட நிலைக்கு உடனடியாக உயர்த்த வேண்டுமென்று போர்க் கொடி தூக்குவார்கள். இத்தகைய நிகழ்வுகள் தொடர்ந்து நடந்து கொண்டிருப்பதால் தொழிலாளர் நலத்துறையின் பாடு திண்டாட்ட மாக இருக்கிறது. இந்திய அரசு மத்தியஸ்த வாரியங்களை நியமித் திருக்க வேண்டும்; ஆனால் தவறிவிட்டது என்றும் பொருள்பட மதிப்பிற்குரிய என் நண்பர் பேசினார். ஒவ்வொரு தனிக் கோரிக் கைக்கும் (போராட்டத்திற்கும்) பிற நிலவரங்களை மறந்துவிட்டுத் தனித்தனியே மத்தியஸ்த வாரியங்கள் அமைப்பதால் என்ன பயன்? இதன் விளைவாக, தற்காலிக வாரியங்கள், தற்காலிக அறிக்கை கள், தற்காலிக முடிவுகளே எஞ்சும்; அவற்றின் மீது தற்காலிக நடவடிக்கைகள் எடுக்கப்படும். இதனால் வேறுபாடுகள் பரந்த அளவில் தொடர்ந்து நீடித்துக் கொண்டிருக்கும். எனவே, இந்த நாட்டி லுள்ள தொழிலாளர் நிறுவனங்களின், குறிப்பாக மத்திய அரசுத் தொழிலாளர் நிறுவனங்களின் அமைப்பு முறையே இப்போது நிலவும் தவறான நிலைமைக்குக் காரணமாகும். எனவே, மத்திய அரசுப் பணிகளுக்காக ஊதிய ஆணையம் ஒன்றை நியமித்து மத்திய அரசு மேற்கொண்ட நடவடிக்கை விவேகமானது என்று அனை வராலும் போற்றி வரவேற்கப்பட வேண்டியதொன்றாகும். இவ் வாணையம் மத்திய அரசின் பல்வேறு தரப்பு ஊழியர்களின் ஊதி யங்களையும் பணிநிலைகளையும் ஒப்பிட்டு ஆய்வதோடு தனியார் துறைத் தொழிலாளர்களின் ஊதியங்களுடனும் ஒப்பிட்டு உகந்த முடிவெடுக்குமென்பதால் இது வரவேற்கத்தக்க முயற்சியே. ஆணையம் தரும் பரிந்துரைகளின் அடிப்படையில் நாடெங்கிலும் ஊதிய முறையைச் சீராக்க முடியும் என்பதுடன், வெவ்வேறு பணி களுக்கும் எந்தக் கோட்பாடுகளின் அடிப்படையில் ஊதியங்கள் நிர்ணயிக்கப்படுகின்றன என்று அனைவருக்கும் தெளிவாகப் புலப் படும் என்றும் நம்புகிறேன்.

இது தொடர்பாக நாம் எதிர்கொள்கின்ற மற்றொரு சிக்கலைக்

குறித்தும் நோக்குவோம். மத்திய அரசுத் துறைகளில், வருவாய் ஈட்டும் துறையில் பணியாற்றும் தொழிலாளர்களில் மிகப் பெரும் பான்மையோர் அத்துறையின் வருவாய் தங்கள் வருவாயே என்ற போக்கில், தங்களுக்குப் போக எஞ்சியதே அரசின் பங்கென்று கருதுகிறார்கள். ரயில்வேத் துறை இலாபம் ஈட்டினால் அதில் பெரும் பங்கு தங்களுக்கே சேர வேண்டுமென்று ரயில்வேத் தொழிலாளர் கள் கோருவர். அஞ்சல் துறையில் இலாபம் வருவதாகத் தோன்றி னால், அதில் தங்களுக்குப் போக எஞ்சியதே அரசுக்கு என்று அஞ்சல் துறைப் பணியாளர்கள் கோருவர். வரிவிதிப்பு மூலம் வரும் வருவாய், வணிகவழி அரசுத் துறைகள் ஈட்டும் வருவாய் ஆகியவை இந்திய அரசின் வருவாயே அன்றித் தனித்த எத்துறையின் வருவாயும் அல்ல வென்பது முதலில் உணரப்பட வேண்டும். இவையனைத்திலும் இந்திய மக்கள் அனைவருக்கும் பொதுவான உரிமை உண்டு. நான் தொழிலாளர் நலத்துறையின் பொறுப்பை ஏற்றுக் கொண்டிருக் கின்ற காலம் முழுவதிலும், ஒரு துறை ஈட்டும் வருவாயின் முதல் உரிமை அத்துறையின் ஊழியர்களுக்கே என்று எந்தப் பிரிவைச் சேர்ந்த தொழிலாளர்கள் கோரினாலும் அதனைக் கடுமையாக எதிர்ப் பேன். இதனால் பெரும் குழப்பமே விளையும்; எக்காரணத்தைக் கொண்டும் அக்குழப்பத்திற்குப் பொறுப்பாளிகளில் ஒருவனாக இருக்க நான் உடன்பட மாட்டேன்.

அடுத்து, வெட்டுத் தீர்மானத்தைத் தாக்கல் செய்துள்ள என தருமை நண்பர், வேலையில்லாத் திண்டாட்டம் பற்றிய சிக்கலை யும் எழுப்பியுள்ளார். அவர் எழுப்பியுள்ள குறிப்பான சிக்கல் களில் நாட்டம் செலுத்தப் போவதில்லை; மாறாகப் பொதுவான நிலையில் வேலையில்லாமைக்கான சலுகைப்படி என்பதைப் பற்றி எடுத்துக் கொள்கிறேன். இவ்விவகாரத்தில் நண்பர் வைத்துள்ள வாதங்கள் பிழையானவை என்பதில் ஐயமில்லை. வேலையில்லாத் திண்டாட்டத்திற்குத் தீர்வு வேலைவாய்ப்புதானேயன்றி வேலை யில்லாமைப் படியன்று. வேலையில்லாமை என்பது, ஒரு வாலைப் போன்று, சிறிய அளவினதாக இருந்தால் ஒருவேளை வேலை யில்லாமைக்கான சலுகைப்படி தீர்வாக இருக்கலாம். ஆனால், வேலையில்லாமையே, உடலைப் போன்று, பெரிய அளவினதாக இருப்பின் அது நடைமுறைக்கியலாத திட்டமாகும். இந்த நாட்டில் 50 சதவீதம் முதல் 60 சதவீதம் வரையிலான மக்கள் வேலையின்றி இருக்கின்றனர் என்பதை அனைவருமே அறிவோம்; அவர்களுக் கெல்லாம் வேலைவாய்ப்பு உருவாக்குதல் நமது கடமை. மாறாக, இவர்கள் அனைவருக்கும் வேலையின்மைப்படி கொடுப்பதுதான்

தீர்வென்று எவராவது கூற முன்வருவீர்களாயின், இதனால் நாட்டின் பொருளாதாரம் சீர்குலைந்து போய்விடும் என்பதைச் சிறிதும் தயக்கமின்றிக் கூறுவேன். எனவே, வேலையில்லாத் திண்டாட்டம் குறித்து மிகுந்த அக்கறை காட்டும் நண்பருக்கு, நாட்டை மேலும் தொழில்மயமாக்குவதே நாம் நாட்டம் காண வேண்டிய தீர்வு என்பதை சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். விரைந்த, விரிந்த அளவிலான தொழில்மயமாக்கல் மூலமே வேலையில்லாத் திண்டாட்டத்திற்கு உரிய தீர்வு காணமுடியும். இந்திய அரசு தொழில்மயமாக்குதற்கான திட்டத்தைத் தீட்டியுள்ளதுடன், இதுகுறித்த முடிவையும் ஏற்கெனவே உறுதியாக அறிவித்துள்ளது என்பதை அவை நன்கு அறியும். எனவே, நான் இதைப் பற்றி மேலும் பேசுவதை விட்டு விட்டு, தொழிலாளர்களின் நல மேம்பாடு, சமூகப் பாதுகாப்பு ஆகியவை குறித்து இந்திய அரசு என்ன நடவடிக்கைகள் எடுத்துள்ளது என்பதைப் பற்றி விளக்க முனைகிறேன்.

இந்திய அரசு, தனது தொழிலாளர் நலக் கொள்கையை ஏற்கெனவே அறிவித்துள்ளது என்பதை அவை நன்கு அறியும். இச்சிக்கல் குறித்த பகுதிகளை அறிக்கையிலிருந்து படித்துக் காட்ட எனக்கு நேரமில்லை. விரிவான தகவல்களை, அமைச்சரவை தயாரித்துள்ள மறுவாழ்வுக் குழுவின் அறிக்கையின் பகுதி XXV, பக்கங்கள் 55, 56 இல் காணலாம். எனவே இந்திய அரசுக்கு இதைக் குறித்துக் குறிக்கோள் ஏதும் கிடையாதென்று எவரும் கூறமுடியாது. அரசுக்குக் குறிக்கோள் உண்டு என்பதுடன் அக்குறிக்கோள் தெளிவுறுத்தப்பட்டுள்ளது. மேலும் ஒருபடிபோய், குறிக்கோள் தெளிவுறுத்தப்பட்டுள்ளது மட்டுமின்றி அதற்கான செயல்திட்டத்தையும் அரசு தயாரித்துள்ளதென்பதை உறுதிப்படக் கூறுவேன். செயல்திட்டத்தைப் பொறுத்தமட்டில், நாடு முழுவதிலுமுள்ள தொழிலாளர்களின் நிலைமைகளை ஆய்ந்தறிய, இரண்டு ஆண்டுகளுக்கு முன்னரே அரசு, உண்மை நிலையறி குழுவொன்றை நியமித்துள்ளது. இதுவரை அக்குழு 34 தொழிற்சாலைகளில் ஆய்வு நடத்தி, 34 தனி அறிக்கைகளையும், பொது அறிக்கை ஒன்றையும் அளித்துள்ளது. பொது அறிக்கையில் 34 தனி அறிக்கைகளின் அடிப்படையிலான பரந்த கண்ணோட்டம் காணப்படுகிறது. இவற்றுள் 18 அறிக்கைகள் அச்சிடப்பட்டு விட்டன. எஞ்சியவை அச்சில் உள்ளன. தொழிற்சாலைப் பணியாளர்கள் பொதுவான நிலைமைகள் குறித்து அறிக்கை பெற்றதுடன் நின்றுவிடவில்லை அரசு. தொழிலாளர்களின் உடல் நலக்காப்பீடு குறித்து ஆய்ந்து அறிக்கை ஒன்று தருமாறு, பேராசிரியர் அதர்காரை தனி அலுவலராகவும் இந்திய அரசு நியமித்துள்ளது.

அரசுக்குக் குறிக்கோளுடன், கூடவே செயல்திட்டமும் உண்டென முன்னரே கூறியுள்ளேன்; இப்போது சமுதாயப் பாதுகாப்பைத் திட்டமிடுதற்குத் தேவையான தகவல்களும் அரசின் வசம் கிடைத்துள்ளன. இனி, தொழிலாளர்களின் சமூகப் பாதுகாப்புக்கான திட்டம் தீட்டுதலே அடுத்த செயல் கட்டமாகும். அவை ஏற்கெனவே அறிந்துள்ளவாறு சமுதாயப் பாதுகாப்பு குறித்து இரண்டு கண்ணோட்டங்கள் நிலவுகின்றன. தொழில் வளர்ச்சி பெற்ற பிற நாடுகளைப் போன்று, நாம் பாதுகாப்பின்மைக் காரணிகளை ஒவ்வொன்றாக ஆய்ந்து, அவ்வவ் காரணிகளுக்கான பாதுகாப்பு முறைகளையும் அதற்கான நிருவாக அமைப்புகளையும் வகுப்பதன் மூலம் படிப் படியாக முன்னேற வேண்டும் என்பது ஒரு கண்ணோட்டம். மற்றொரு கண்ணோட்டம் ஏறத்தாழ பெவரிட்ஜ் திட்டத்தினால் ஈர்க்கப்பட்டு உருவாகியது. அதன்படி, எல்லாவகையான காப்பீட்டு முறைகளையும் உள்ளடக்கியதான முழுமையான பாதுகாப்புக் கொள்கை உருவாக்கப்பட வேண்டும். இவ்விரண்டில் எது சிறந்த திட்டம் எனக் கூறும் அணுகுமுறையை நான் மேற்கொள்ள விரும்பவில்லை. மாறாக, கிடைத்துள்ள அறிக்கைகளை ஆய்வு செய்து, படிப்படியான முன்னேற்றத்திற்குத் திட்டமிடுவதா அல்லது பெவரிட்ஜ் அறிக்கையைப் பின்பற்றி முழுமையான காப்பு முறைக்குத் திட்டமிடுவதா என்று அரசுக்கு ஆலோசனைக் கூறக் குழு ஒன்றை நியமிக்க அரசு கருதியுள்ளது. என்னால் மேலும் விரித்தோ, விளக்கியோ கூற நேரமில்லையென்பதால் சுருக்கமாகத் தரப்பட்டுள்ள இந்த நிலவர அறிக்கை வெட்டுத் தீர்மானம் கொண்டு வந்த மதிப்பிற்குரிய உறுப்பினர் கூறிய இந்த அமைச்சரவை அக்கறையின்றியும் மெத்தனமாகவும் இருந்து தொழிலாளர் நலம், சமுதாயப் பாதுகாப்பு குறித்து நடவடிக்கை ஏதும் எடுக்காமலிருந்து வருகிறது எனும் குற்றச்சாட்டில், சிறிதும் ஆதாரமில்லையென்பதை அவைக்கு உணர்த்தும். எனவே, அவரது வெட்டுத் தீர்மானத்தை இந்த அவை ஏற்காது என்று நம்பிக்கை தெரிவித்துக் கொள்கிறேன்.



# 61

## [1]தொழிலாளர் நலத்துறையில் முகமதியர்களின் சிறப்பான நிலை

*அவைத்தலைவர்:* திரு. ஜாபரின் வெட்டு தீர்மானத்தின் மீது இப்பொழுது விவாதம் தொடங்குகிறது.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்):* மரியாதைக்குரிய அவைத் தலைவர் அவர்களே! தொழிலாளர் நல அமைச்சகத்தின் மீது எத்தனையோ வித மான கற்கள் எறியப்பட்டு இருக்கிறது என்பது இந்த அவையில் இருக்கும் பல உறுப்பினர்களின் நினைவுக்கு வரக்கூடிய ஒன்றுதான்...

*நவாப்ஜாடா லியாகத் அலி கான்: (மீரட் பிரிவு - முகமதியர் - கிராமியம்):* - செங்கற்கள், கற்கள் அல்ல...

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* கடந்த வாரம் இந்த வெட்டுத் தீர்மானத்திற்கு முன்பாக கற்களோ, செங்கற்களோ ஏதோ எறியப்பட்டன. என்னுடைய துறையில் முஸ்லீம்களின் நிலை யினைப் பற்றி எடுத்துரைப்பது முற்றிலும் நியாயம் எனக் கருது கிறேன். நேற்று இந்த வெட்டுத் தீர்மான விவாதத்தின்போது, இந்திய அரசின் பல்வேறு துறைகளில் பணியாற்றும் முகமதியத் தொழி லாளர்களின் நிலையினைப் பற்றி ஒரு சில புள்ளிவிவரங்களை, இரண்டு உறுப்பினர்கள் தொடர் வர்ணனை போன்று தெரிவித்ததை யும் நான் கேட்டுக் கொண்டு இருந்தேன். அந்த உறுப்பினர்கள் வர்ணனை போன்று தெரிவித்த கருத்துக்களை வைத்தும், என் னிடம் இருக்கும் புள்ளி விவரங்களை வைத்தும் பார்க்கும்போது இந்திய அரசின் மற்ற துறைகளில் பணியாற்றும் முகமதியத் தொழி லாளர்களின் நிலையினை விட என்னுடைய துறையில் பணியாற்றும் முகமதியத் தொழிலாளர்களின் நிலை சிறப்பாகவே இருக்கிறது என்பதை மகிழ்வோடு தெரிவித்துக் கொள்கிறேன்.

நான் உங்கள் முன்னிலையில் எடுத்துக் கொள்ளும் ஒரு சில நிமிடங்களில் என்னிடம் இருக்கும் புள்ளி விவரங்களை அடிப்படை யாக வைக்க விரும்புகிறேனேயொழிய, இது வீணாகத் தற்பெருமை

---

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி III, எண். 10, மார்ச் 14, 1945, பக். 2406

பட்டுக்கொள்ளும் முயற்சியல்ல. இந்திய அரசாங்கத்தின் தொழிலாளர் நலத்துறையிலும், பொதுப்பணித் துறையிலும் இவைகளைச் சார்ந்து செயல்படுகின்ற அலுவலகங்களிலும் பணிபுரிகின்ற தொழிலாளர்களின் சதவிகித அடிப்படையிலான புள்ளி விவரங்களை சேகரிக்க நான் பெருமுயற்சி எடுத்துக் கொண்டேன். இந்தப் புள்ளி விவரங்களில் இருந்து எல்லா சமூகத்தவரின் நிலையைப் போன்றே முகமதிய சமூகத்தவரின் நிலையும் மற்ற சிறுபான்மையினர் நிலையும் அமைந்துள்ளது என்பதைத் தெரிந்து கொள்ளலாம். ஆனால் எனக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் இந்த குறுகிய காலத்திற்குள் பல பிரிவுகளை சார்ந்த எல்லா சமூக அமைப்பினரின் ஒட்டுமொத்த நிலைகளை தனித்தனியாக, விரிவாக எடுத்துரைக்க முடியாது என்பதை உணர்கிறேன். ஆகவே, முஸ்லீம் லீக் கட்சியினைச் சார்ந்த உறுப்பினர்கள் தெளிவாகத் தெரிந்து கொள்ளும் வகையில் முகமதிய சமுதாயத்தைச் சார்ந்த தொழிலாளர்களின் நிலை குறித்த ஒட்டு மொத்த புள்ளிவிவரங்களை மட்டுமன்றி சதவிகித அடிப்படையிலும் அமைந்த புள்ளிவிவரங்களையும் கொடுக்க விரும்புகிறேன்.

எனவே நான் முதலில் தொழிலாளர் நலத்துறையின் செயலகத்தினைச் சார்ந்தவர்களின் வகுப்பு இயைபைப் பற்றிக் கூறுவதுடன் தொடங்குகிறேன். இவ்வாறு செய்யும்போது ஒட்டுமொத்த புள்ளிவிவரங்களைத் தருவதோடு நில்லாமல் ஒப்பீட்டின் அடிப்படையிலும் புள்ளிவிவரங்களை தொகுத்துக் கொடுக்க விரும்புகிறேன். நான் ஒப்பீட்டு அடிப்படையில் கொடுக்கும் விவரங்கள் மிகுந்த பயனுள்ளவையாகவும், மிகவும் அவசியமானவையாகவும் இருக்கும் என்று எண்ணுகிறேன். நான் இந்த விதியினைப் புரிந்து கொண்டது ஒரு இலக்கினை குறிபார்த்துச் சுடுவதற்குச் சமமானது. இலக்கு என்பது ஒரு கண் போன்ற அமைப்புடையது. அதனைச் சுற்றி ஒரு உள் வளையமும் ஒரு வெளி வளையமும் இருக்கும். இதில் சதவிகிதம் என்பது ஐயத்திற்கு இடமில்லாமல் இலக்கு மையமாகும். இந்திய அரசின் எந்தத் துறையைச் சார்ந்த அதிகாரியாலும், தன் கட்டுப்பாட்டில் இருக்கும் பணித்துறையை இந்த இலக்கினை நோக்கி செலுத்த முடியும் என்பது நடவாத காரியம் ஆகும். ஆகவே, எந்த ஒரு சமூகத்தை சார்ந்தவர்களும், இந்த மைய இலக்கிலிருந்து வெளியில் தள்ளப்பட்டு விடக்கூடாது என்பதை ஒவ்வொரு உறுப்பினரும் உணர்ந்து செயல்பட வேண்டும் என்ற கருத்தினை உங்கள் முன் வைக்கிறேன். ஆகவே நம் கண்முன் இருக்கும் கேள்விக்கு இறுதி முடிவினைக் கூறும் முன்பாக, இந்திய அரசின் எந்த ஒரு துறையாக இருப்பினும், அதில் பணியாற்றும் தொழிலாளர்களின்

தற்போதைய நிலை மேம்பட்டு இருக்கிறதா அல்லது சிதைவுப் பட்டு இருக்கிறதா என்பதை உணர்ந்து செயல்பட வேண்டும் என்று எண்ணுகிறேன். ஆக, இந்த வழியில் பார்க்கும்போது ஒப் பீட்டு முறையில் புள்ளி விவரங்களை ஆராய்வது என்பது சிறந்த முறையாக இருக்கும்.

நான் 1939 ஆம் வருடத்திற்கும், 1946 ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் வரையிலான புள்ளி விவரங்களை சேகரித்துள்ளேன். முதலில் தொழிலாளர் நலத்துறைச் செயலகத்தின் புள்ளிவிவரங்களை உங்கள் முன் வைக்கிறேன். 1939 ஆம் ஆண்டு அரசு பதிவு பெற்ற பணியிடங்களின் எண்ணிக்கை 12, இதில் முகமதியர்களின் சதவிகிதம் 8. 1946 ஆம் ஆண்டு, அரசு பதிவு பெற்ற பணியிடங்களின் எண் ணிக்கை 80, இதில் முகமதியர்கள் 20 சதவிகிதத்தினர்.

அரசு பதிவு பெறாத பணியிடங்களை பார்க்கும்போது 1939 ஆம் ஆண்டில் மொத்த எண்ணிக்கை 75 ஆகவும், அதில் முகமதி யர்கள் 23 சதவிகிதமும் பெற்று இருக்கின்றனர். 1946 ஆம் வருடம் மொத்தப் பணியிடங்களின் எண்ணிக்கை 457; அதில் முகமதியர்கள் 24 சதவிகித இடங்கள் பெற்று இருக்கிறார்கள்.

இப்போது மிக அதிகமாக பேசப்பட்ட ''மத்திய பொதுப்பணித் துறை''யின் புள்ளிவிவரங்களைப் பார்ப்போம். 1939ல் மொத்தம் அரசு பதிவு பெற்ற பணியிடங்கள் 43, இதில் முகமதியர்கள் 21 சத விகிதத்தினர். 1946 ஆம் ஆண்டு, பணியிடங்களின் எண்ணிக்கை 181, போர், அவசர கால கட்டத்தில் இப்படி வகுப்புவாரியான இட ஒதுக் கீட்டை செயல்படுத்துவதில் ஏற்பட்ட இடர்பாடுகளையும் என் நண்பர் - மாண்புமிகு உள்துறை உறுப்பினர் தெரிவித்த கருத்துக்களை யும் வைத்துக் கொண்டு பார்க்கும்பொழுது, முகமதிய சமூகத்தினர் 21.1 சதவிகித இடத்தினை பெற்று இருக்கின்றனர் என்பது நோக்கற் குரியது.

மேற்சொன்ன புள்ளிவிவரங்கள், இந்த வெட்டுத் தீர்மானத்தை கொண்டு வந்த உறுப்பினருக்கு மன ஆறுதலை அளிக்காது என்ப தால், 1946 ஆம் ஆண்டு 'மத்திய பொதுப்பணித் துறையின்' அரசு பதிவு பெற்ற பணியிடங்களின் மொத்தத் தொகுப்பிலிருந்து, பணி யிடங்களை, பதவித் தரவாரியாகப் பிரித்து ஆய்வு செய்து சதவிகித அடிப்படையில் புள்ளி விவரங்களைக் கொடுக்கிறேன்.

கண்காணிப்புப் பொறியாளர் பதவியின் எண்ணிக்கை 14 ஆகும். இதில் முகமதிய சமூகத்தை சேர்ந்தவர் ஒருவர் ஆவார். அதாவது 7 சதவிகித இடத்தை பெறுகிறார். அடுத்து நிர்வாக பொறி யாளர்களின் மொத்த எண்ணிக்கையான 64 இடங்களில் முகமதியர் கள் 18 சதவிகித இடத்தையும், மின் பொறியாளர்களின் மொத்தம் 12 இடங்களில் 6 2/3 சதவிகிதத்தையும், துணை நிர்வாக பொறியாளர் களின் மொத்த இடங்களில் 14 சதவிகிதத்தையும் முகமதிய இனத்தை சேர்ந்தவர்கள் பெற்று இருக்கிறார்கள். மத்திய பொதுப்பணித் துறை யினைப் பற்றி விவாதித்துக் கொண்டு இருக்கும்பொழுது, என் மதிப்பிற்குரிய நண்பர்களில் யாரோ ஒருவர், லோதி சாலையின் பணி ஒப்பந்தத்தைப் பற்றிக் கேள்வி எழுப்பினார்...

திரு. அகமது இ.எச். ஜாபர் (பம்பாய் தென் மண்டலம் - முகமதியர் கிராமப்புறம்): அது நான்தான்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: நீங்கள்தான் என்று எண்ணுகிறேன். மரியாதைக்குரிய உறுப்பினர் தெரிவித்த ஒப்பந்த மதிப்பீட்டுத் தொகையின் அளவு என் நினைவில் இல்லை.

திரு. அகமது இ.எச். ஜாபர்: 5 கோடி ரூபாய்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: என் நண்பர், லோதி சாலை ஒப்பந்தப் பணி ஒதுக்கீட்டில் முகமதிய ஒப்பந்தக் காரர்களுக்கு மிக குறைந்த சதவிகித அடிப்படையிலேயே ஒதுக்கப் பட்டு இருப்பதாக புகார் கூறினார். இது சம்பந்தமான மிகச் சரியான புள்ளி விவரங்கள் என் நினைவில் இல்லை.

திரு. அகமது இ.எச். ஜாபர்: பொதுவாக இன்னும் நிறைய விஷயங்கள் இருந்தபோதிலும் குறிப்பாக லோதி சாலை ஒப்பந்த பணியில் ஏற்பட்டிருக்கும் குறையை உங்களின் கவனத்திற்கு கொண்டு வந்தேன்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: மதிப்பிற்குரிய உறுப்பினர், அவை முடிவடையும் வேளையில் தன்னுடைய கருத் துக்களை எடுத்து வைத்தமையால், என்னால் இன்னும் தேவையான, விளக்கமான விவரங்களைப் பெற்றுத் தர முடியாத நிலையில் இருக்கிறேன். இருப்பினும் மேற்சொன்ன உண்மையான விவரங் களை இங்கே தெரிவித்து இருக்கிறேன்.

***டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது:*** *(ஐக்கிய மாகாணங்களின் தென் மண்டலம் - முகமதியர் கிராமப்புறம்)*

உறுப்பினர் தன் கருத்துக்களை முழுமையாக கூறி முடிப்பதற்குள் உங்களின் தற்போதைய குறுக்கீடு தேவையில்லாதது என்று எண்ணுகிறேன். இன்னும் சிறிது நேரம் தாங்கள் பொறுத்திருக்க வேண்டும்.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** மதிப்பிற்குரிய உறுப்பினரின் அறிவுரையை ஏற்றுக் கொள்ளக் கடமைப்பட்டிருக்கிறேன். இருப்பினும், முஸ்லீம் லீக் உறுப்பினர்கள் கொண்டு வந்திருக்கும் மற்ற வெட்டுத் தீர்மானங்களைப் பற்றிய விவாதத்திற்கும் போதிய காலம் தேவைப்படும் என்ற நல்ல எண்ணத்தின் அடிப்படையில், என்னுடைய குறுக்கீடு அவசியம் என்று எண்ணினேன். இல்லையெனில், இது, வெட்டுத் தீர்மானம் போல் அல்லாமல் பொதுத் தீர்மானம் போல் அமைந்துவிடும். உண்மையில் இடைமறிப்பதற்கான அவசியமே இல்லை. நான் பொறுப்பு வகிக்கும் தொழிலாளர் நலத்துறை விவாதம் என்பதால், சில உறுப்பினர்களுக்கு அந்த துறையின் மீது இருக்கும் ஒருவித அச்சத்தை அகற்றும் நோக்கத்துடன்தான் குறுக்கிட்டேன்.

***திரு. அகமது இ.எச். ஜாபர்:*** உங்கள் அன்புக்கு, நன்றி! பாராட்டுகிறேன்.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** தலைமைப் பொறியாளர், லோதி சாலை ஒப்பந்தப் பணியின் ஒதுக்கீடு சம்மந்தமாக என்னிடம் சமர்ப்பித்த விவரங்களின் அடிப்படையில் முகமதியர்கள் 10.5 லட்சம் ரூபாய்க்கான ஒப்பந்தப் பணியினை பெற்று இருக்கிறார்கள். இது, மரியாதைக்குரிய என் நண்பர் தெரிவித்த தொகையினை விட மிக அதிகமானது.

***திரு. அகமது இ.எச். ஜாபர்:*** எவ்வளவு ஒதுக்கீட்டிலிருந்து?...

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** 3 கோடி ரூபாய் ஒதுக்கீட்டிலிருந்து. இந்த ஒப்பந்தத்தை செயல்படுத்துவதை மேற்பார்வையிடும் பொறுப்பினை ஏற்றிருக்கும் நிர்வாக பொறியாளரும் ஒரு முகமதியர் என்பதை மரியாதைக்குரிய என் நண்பர் கவனத்தில் எடுத்துக் கொள்ள வேண்டும்.

திரு. அகமது இ.எச். ஜாபர்: முகமதிய சமூகத்தை சார்ந்த அந்த பொறியாளருக்கு அப்பொறுப்பினை வழங்கக் கூடாது என்ற அரசாங்கத் தரப்பு வற்புறுத்தலைப் பற்றி தங்களின் விளக்கம்?...

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: எல்லாவிதமான குற்றச் சாட்டுகளையும் முன்வைக்கும் என் நண்பரிடம் அதற்குரிய போதுமான ஆதாரங்களும் இருக்குமென்று நம்புகிறேன். இன்று வரை என் கவனத்திற்கு கொண்டுவரப்படவில்லை யென்பதால், மரியாதைக்குரிய நண்பர் விவரங்களை அளிப்பாரேயானால், நான் சரியான விசாரணையை மேற்கொள்ள ஏதுவாக இருக்கும்.

திரு. அகமது இ.எச். ஜாபர்: நிச்சயமாக, அவையில் அந்த விவரங்களை தங்களுக்கு தருகிறேன்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: எனினும் அந்த ஒப்பந்த வேலைக்குப் பொறுப்பு ஏற்றிருக்கும் நிர்வாகப் பொறி யாளர் ஒரு முகமதியர் என்பது உண்மை. அடுத்து மத்தியப் பொதுப் பணித் துறையின் செயல்பாடுகளுக்குப் பொறுப்பேற்கும் அலுவலர், முகமதியராகவோ அல்லது இந்துவாகவோ இருப்பினும், அவர் எந்த வகுப்பைச் சேர்ந்தவராயிருப்பினும் மத்தியப் பொதுப்பணித் துறையின் நியதிகளுக்கு கட்டுப்பட்டவர் ஆவார். மத்தியப் பொதுப் பணித் துறையின் நியதியின்படி, ஒப்பந்தப் படிவத்தில், யார், மிக குறைந்த தொகையினைக் குறிப்பிட்டிருக்கிறார்களோ, அவர்களுக்கு காக, அந்த வேலையின் ஒப்பந்தப் பணியினை வழங்க வேண்டும் என்பது விதி. நான் கடந்த ஓர் இரவுக்குள், தலைமைப் பொறி யாளரிடமிருந்து விசாரித்தறிந்த தகவல்களின்படி, எந்த ஒரு முகமதி யரும் மிகக் குறைந்த மதிப்பீட்டில் ஒப்பந்தப் புள்ளி சமர்ப்பிக்க வில்லையாதலால், அவர்களுக்கு வேலை ஒதுக்கப்படவில்லை என்று தெரிகிறது.

திரு. அகமது இ.எச். ஜாபர்: ஓர் ஒழுங்குப் பிரச்சினை.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: மத்தியப் பொதுப் பணித் துறையின் நியதிப்படி மிகக் குறைந்த மதிப்பீடு கோரி ஒப்பந்தப் பணியினை பெற்று செயல்படுத்துபவரை, இருவழிகளில் தலைமை கணக்காயரும், பொதுக் கணக்கு நிர்வாகக் குழுவினரும் ஆய்வு செய்யலாம். இந்த நியதிக்குக் கட்டுப்படாமல் செயல்படும் எந்த துறையை சார்ந்த அதிகாரியாக இருப்பினும், அவரிடம் அந்த

நியதிக்கு உட்படாமல் செயல்பட்டதற்கான காரணத்தினை இந்த இரு அமைப்பினரும் விளக்கம் கேட்டுப் பெறுவார்கள்.

**திரு. சையத்குலாம் பீய்க் நைராங்:** அது சவப் பரிசோதனை போன்று இருக்கும்.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** அந்த நியதிகள் கடைப்பிடிக்கப்பட்டனவா இல்லையா என்பதுதான் கேள்வி.

***டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது:*** நியதிகள் மாற்றப் படலாம்?

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** அலிகார் பல்கலைக் கழகத்தில் நிறைய ஆய்வுகள் செய்திருப்பதால் மாண்பு மிகு உறுப்பினர் அவர்களுக்கு, இதைப் பற்றி மிக நன்றாகவே தெரிந்திருக்கும். மத்தியப் பொதுப்பணித் துறையினைப் பற்றியும், இதுபோன்ற செயல்பாடுகள் பற்றியும் உறுப்பினர் இன்னும் தெரிந்து கொள்ள வேண்டும்.

எஸ்டேட் அலுவலகத்தை எடுத்துக் கொண்டால் அங்கு 8 பதிவு பெற்ற பதவியிடங்கள் உண்டு. அதில் ஒரு இடம் நிரப்பப் படாமல் இருக்கிறது. 6 பதவிகள் இந்து சமூகத்தை சார்ந்தவர்களுக் கும் 1 பதவி தாழ்த்தப்பட்ட இனத்தவருக்கும் ஒதுக்கப்பட்டு இருக் கின்றன. முகமதிய சமுதாயத்தை சேர்ந்த ஒருவர் மிக சமீப காலத் திற்கு முன்பு தனது சொந்த மாகாணத்திற்கு பதவி மாற்றம் செய்யப் பட்டார். மற்றும் 235 அரசு பதிவு பெறாத பணியிடங்களில் 18.2 சத விகிதம் முகமதிய மதத்தவருக்கு ஒதுக்கப்பட்டு பணியாற்றுகிறார் கள். அடுத்து மத்தியப் பொதுப்பணித் துறையின் சார்பு அலுவலகங் களை எடுத்துக் கொண்டு பார்க்கும்போது, புள்ளிவிவரங்களைத் தனித்தனியாக அளிக்க காலதாமதமாகும் என்பதால் ஒட்டு மொத்தப் புள்ளி விவரங்களைச் சமர்ப்பிக்கிறேன். 1939 ஆம் ஆண்டில், சார்பு அலுவலகங்களில் 64 பதிவு பெற்ற பணியிடங்களில் 1.5 சதவிகிதமே முகமதியர்களுக்கு ஒதுக்கப்பட்டிருந்தது. 1946 ஆம் ஆண்டில் மொத்த பணியிடங்கள் 155. இதில் முகமதியர்களுக்கான பணியிடங்கள் 1.5 சதவிகிதத்திலிருந்து 11.5 சதவிகிதமாக உயர்ந்தது. 1936 ஆம் ஆண்டில் சார்பு அலுவலகங்களில் பதிவு பெறாத இடங்கள் 2,238. இந்த மொத்த பணியிடங்களில் முகமதியர்கள் 34 சதவிகிதம் பெற்று இருந்தார்கள். 1946 ஆம் ஆண்டு அரசு பதிவு பெறாத

மொத்தப் பணியிடங்கள் 3,929 ஆக உயர்த்தப் பட்டதில் அவற்றில் முகமதியர்களின் பங்கு 30 சதவிகிதமாக உள்ளது.

தற்போது புவியியல் நில அளவைத் துறையை எடுத்துக் கொண்டால், அத்துறை இன்னும் முழுவடிவம் பெறாமல் தொடக்க நிலையிலேயே இருக்கிறது. போர் நடந்தபோதும், போருக்கு பின் புனர்நிர்மாண அமலாக்கத் திட்டங்களின்போதும், இத்துறையினை விரிவுபடுத்த நடவடிக்கை எடுக்கப்பட்டது. முதலில் 13 உதவி புவி யியல் வல்லுநர்கள் பணியில் அமர்த்தப்பட்டார்கள். இந்த பணி யிடங்களின் தற்போதைய நிலையினைப் பற்றி தெளிவுபடுத்த விரும்புகிறேன். மத்திய தேர்வாணையத்தின் பரிந்துரையின் பேரில் மட்டுமே பணி ஒதுக்கீடு செய்யும் நிலையிருப்பதால், அக்குழு தேர்வு செய்து 40 பெயர்களை தகுதியின் அடிப்படையில் சிபாரிசு செய்தது. எனினும் அதிலிருந்து 13 நபர்களை மட்டுமே நாங்கள் தேர்வு செய்ய வேண்டியிருந்தது. அந்த 13 நபர்களில் ஒரே ஒருவர் முகமதிய சமுதா யத்தை சேர்ந்தவர்.

திரு. நவாப்ஜாடா லியாகத் அலிகான்: 40 நபர்களில் இருந்தா?...

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ஆம். தகுதியின் அடிப்படையில் 40 பெயர்கள் பரிந்துரை செய்யப்பட்டிருப்பினும், அரசின் மொத்தப் பணியிடங்கள் 13 என்று நிர்ணயிக்கப்பட வேண்டிய தாயிற்று. அந்த எண்ணிக்கையோடு நிறுத்தி கொண்டிருந்தால் முகமதிய சமூகத்தை சார்ந்த ஒருவர் மட்டுமே அதில் இடம் பெற் றிருப்பார். மேலும் மேற்குறிப்பிட்ட பணியிடங்கள் தொழில் நுணுக்கப் பிரிவை சார்ந்தது என்பதால், கல்வித் தகுதியினை உறுதிப் படுத்த வேண்டியதாயிற்று. தொழிலாளர் நலத்துறை, மத்திய தேர் வாணையத்தின் பரிந்துரையின்படி சிறப்பு தகுதியின் அடிப்படை யிலேயே பணி ஒதுக்கீடு செய்வது என்ற நிலைப்பாட்டினை எடுத் திருக்குமேயானால், அதில் ஒரே ஒருவர் மட்டுமே முகமதிய சமூ கத்தை சார்ந்தவராக இருந்திருப்பார். ஆனால் முகமதிய சமூகத்த வருக்கு அதிக பிரதிநிதித்துவம் வழங்கும் வகையில் முதல் 13 நபர் களின் சிறப்புத் தகுதிக்கு குறைவான தகுதியினைப் பெற்றிருந்தும், பரிந்துரைக்கப்பட்ட 40 நபர்களின் அட்டவணையில் இருந்த 4 நபர் கள் தேர்வு செய்யப்பட்டு முகமதிய சமூகத்தின் அதிகாரபூர்வ ஒதுக் கீடு அளவு நிறைவு செய்யப்பட்டது.

இன்னொரு உண்மையை நான் எடுத்துரைத்தால், எங்கள் நிலைப்பாடு சரியானதாக இல்லை என்று ஒருசிலர் நினைக்கக்கூடும். அதாவது மண்ணியல் மதிப்பாய்வு தலைமை இயக்குநர் அலுவலகத்தில் முகமதிய சமூகத்தை சார்ந்த ஓர் அதிகாரி கூட இல்லையென்பதை கண்டோம். அப்போது நாங்கள் ஒரு காரியத்தைச் செய்தோம். மதிப்பிற்குரிய உறுப்பினர் சர் ஜியாவுத்தீன் அகமது சார்ந்திருக்கும் பல்கலைக்கழகத்தில் இருந்து நாங்கள் 2 முகமதிய சமூகத்தை சார்ந்த மாணவர்களைத் தேர்வு செய்தோம்...

**டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது:** அதற்கான பெருமை உங்களைச் சார முடியாது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அவர்கள் மண்ணியலில் பயிற்சி பெற்றவர்கள் அல்ல. அவர்கள் பூகோளத்தை முதன்மைப் பாடமாக கற்று பட்டம் பெற்றவர்களாக இருந்தும் அவர்களுக்குச் சிறப்பு பயிற்சியளித்து புவியியல் நில அளவை அலுவலகத்தில், அவர்களை பொறுப்பில் அமர்த்த முடியும் என்ற நல்ல எண்ணத்தில் தேர்வு செய்யப்பட்டார்கள்.

தலைவர் அவர்களே! கடந்த சட்டப்பேரவை கூட்டத் தொடரிலேயே கேள்வி எழுப்பப்பட்ட சுரங்கவியல் கல்லூரியினைப் பற்றி பதில் அளிக்க இருக்கிறேன்.

பதிலளிக்க இன்னும் எவ்வளவு நேரம் அளிக்கப்படும் என்று நான் தெரிந்து கொள்ளலாமா?

**அவைத் தலைவர்:** மாண்புமிகு உறுப்பினர் இன்னும் 20 நிமிடங்கள் எடுத்துக் கொள்ளலாம். அதற்கு மேலும் தேவைப் படுமாயின் மதியம் 1 மணி 15 நிமிடம் வரை பதிலளிக்க அனுமதிக் கிறேன்.

**திரு. ஸ்ரீபிரகாசா:** (காசி மற்றும் கோரக்பூர் மண்டலம் - முகமதியர் அல்லாதோர்): நீங்கள் 25 சதவிகித நேரத்தை எடுத்துக் கொள்ளலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** என்னுடைய மரியாதைக்குரிய நண்பரைப் போல் பாதி இரக்க சிந்தனையோடும்

பாதி ஏனோதானோ என்ற நிலையிலும் இந்த பிரச்சினையை அணுக நான் விரும்பவில்லை.

**திரு. ஸ்ரீபிரகாசா:** நான் ஒருபோதும் ஏனோதானோ என்ற போக்கில் செயல்படுவதில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** சுரங்கவியல் கல்லூரியில் ஆரம்ப காலத்தில் ஆண்டுக்கு 50 மாணவர்கள் என்ற நிலைமாறி, 1937ல் இருந்து ஆண்டுக்கு 24 மாணவர்கள் மட்டுமே சேர்த்துக் கொள்ளப்படுவார்கள் என்ற கட்டுப்பாடு பின்பற்றப் பட்டதின் காரணம், அவ்வளவு அதிகப்படியான மாணவர்களுக்கு உண்டான வசதிகள் அங்கில்லை என்பதுதான். தற்போது மாகாண அடிப்படையில் மிகுந்த முக்கியத்துவம் கொடுத்து மாணவர்கள் தேர்வு செய்யப்படுகிறார்களேயொழிய வகுப்புவாரி அடிப்படை யில் அல்ல என்பதை கருத்தில் கொள்ள வேண்டும். இதில் 16 இடங்கள் மாகாணங்களுக்கும் 2 இடங்கள் இந்திய சமஸ்தானங் களுக்கும் ஒதுக்கப்பட்டன. 1937 ஆம் ஆண்டு வரையில், மாணவர் சேர்க்கையினை ஆய்வு செய்ததில், தொடர்ந்து ஒவ்வொரு ஆண்டும் 2 முகமதிய சமூகத்தை சார்ந்த மாணவர்கள் சுரங்கவியல் கல்லூரி யில் சேர்க்கப்பட்டிருக்கிறார்கள் என்று தெரிகிறது. ஆகவே, முகமதி யர்களின் நலன் பாதுகாக்கப்படத் தனியான இட ஒதுக்கீடு தேவை என்று நான் கருதவில்லை.

எனினும், இதற்கு முந்தைய சட்டமன்றத்தில் இருந்த முஸ்லீம் லீக் கட்சியின் உறுப்பினர்களின் வற்புறுத்தலுக்கு இணங்கி இந்திய சுரங்கவியல் கல்லூரியில் ஒவ்வொரு ஆண்டும் முகமதிய சமூகத்தை சார்ந்த 2 மாணவர்கள் சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும் என்று அரசாணை பிறப்பித்தேன்.

**சர் முகமது யாமின் கான்:** மொத்தம் எத்தனை இடங்களுக்கு இரு மாணவர்கள் என்று கூற இயலுமா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** மொத்தம் 24 இடங்களுக்கு இருவர். இப்பொழுதுகூட, முகமதிய சமூகத்தவருக் கான இடஒதுக்கீடு முழுமையாகக் கடைபிடிக்கப்பட வேண்டும் என்பதற்காக தொழிலாளர் நலத்துறை எத்தகைய நடவடிக்கை களை எடுத்திருக்கிறது என்பதை இந்த அவைக்குத் தெரிவிக்கக் கடமைப்பட்டிருக்கிறேன். இந்த ஆண்டு, நிர்வாகக் குழுவின் பரிந்துரை

யின்படி 48 மாணவர்கள் சேர்க்கப்பட்டிருப்பினும் அதில் ஒரே ஒரு முகமதிய மாணவர் மட்டுமே தகுதித் தேர்வில் வெற்றி பெற்று இடம் பெற்றிருக்கிறார்.

திரு. முகமது நவுமான் (பாட்னா-சோட்டா நாக்பூர் மற்றும் ஒரிஸ்ஸா-முகமதியர்): அதைத் தான் நானும் குறிப்பிட்டேன்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அதனால்தான், முகமதியர்களுக்கு, அதிகாரபூர்வமாக செய்யப்பட்ட இட ஒதுக்கீடு கட்டாயமாக அமல்படுத்தப்பட வேண்டும் என்பதற்காக மொத்தம் 48 இடங்கள் போக, தகுதி அடிப்படையில், மற்றும் 11 மாணவர்கள் உரிமை கோரியிருந்தும், அவர்களையெல்லாம் தள்ளிவைத்துவிட்டு, தகுதி அடிப்படையில் 59 ஆவது இடத்தைப் பெற்ற முகமதிய மாணவர் தேர்வு செய்யப்பட்டு, சேர்த்துக் கொள்ளப்பட்டார்.

அவைத்தலைவர் அவர்களே! இப்பொழுது தொழிலாளர் நலத்துறையினால் ஏற்பாடு செய்யப்படும் உள்நாட்டு மற்றும் வெளி நாட்டுப் பயிற்சித் திட்டங்கள் எந்த அளவுக்கு சரியாகவும் முன் யோசனையோடும் செயல்படுத்தப்பட்டு இருக்கின்றன என்பதனைச் சுருக்கமாகக் கூற விழைகிறேன்.

1946 ஆம் ஆண்டு இந்திய மண்ணியல் மதிப்பாய்வுத் துறை யினை, நவீன முறையில் சீர்திருத்தம் செய்யும் பொருட்டு, ஆஸ் திரேலிய நாட்டின் மெல்பர்ன் பல்கலைக்கழகத்திற்கு இந்திய தொழிலாளர் நலத்துறையின் சார்பாக, துணைநிலை மண்ணியல் வல்லுநர்கள் சிறப்புப் பயிற்சிக்காக அனுப்பப்பட்டார்கள். பயிற்சிக் காக நிர்ணயிக்கப்பட்ட 9 இடங்களில் இந்து சமுதாயத்தைச் சார்ந்த 5 நபர்களும், முகமதிய சமூகத்தை சார்ந்த 3 நபர்களும் மற்றும் இதர சிறுபான்மை இனத்தை சார்ந்த ஒருவரும் அடங்குவர். இந்த தேர்வில்கூட முகமதிய சமுதாயம் 33 1/2 விழுக்காடு இடங்களை பெற்று இருக்கிறது.

இரண்டாவதாக, இந்தியத் திருநாட்டின் பொருளாதார மற்றும் சமூக நிலையினை, புதிய பரிமாணத்திற்குக் கொண்டு செல்லும் வலிமையுடைய மின்சாரத் துறையின் வாணிக மற்றும் நிர்வாகப் பிரிவுகளைச் சார்ந்தவர்களுக்கு வெளிநாட்டில் சிறப்புப் பயிற்சி அளிக்கும் திட்டத்தினைத் தொழிலாளர் நலத்துறை பொறுப்பேற்றுப் பரிந்துரைத்தது. ஏற்கனவே, நம் நாட்டிலேயே இந்த துறைகளில்

பயிற்சி பெற்றவர்கள் இருப்பினும், வளர்ச்சியடைந்த வெளிநாடு களுக்கு அனுப்பி சிறப்பான முறையில் நவீன பயிற்சி அளிக்க திட்டம் வகுக்கப்பட்டது. இச்சிறப்புப் பயிற்சிக்குக் கல்லூரிப் படிப் பினை தற்பொழுது முடித்த மின்துறை மாணவர்களை விட அரசு மின்துறையில் தற்பொழுது பணியில் இருக்கும், அனுபவமுள்ள அதிகாரிகளே தகுதியானவர்களாக இருப்பார்கள் என்று கருதப் பட்டது.

இந்நிலையில் இந்திய அரசாங்கமோ, மத்தியத் தொழிலாளர் நலத்துறையோ நேரிடையாக யாரையும் தேர்வு செய்ய முடியாத நிலையில், மின்விசைத் துறையில் வாணிக மற்றும் நிர்வாகப் பிரிவு களில், மேல்நாட்டு சிறப்புப் பயிற்சி பெற மாகாண அரசில் பணி புரியும் அனுபவமுள்ள ஒருசிலரை தேர்வு செய்து பரிந்துரைக்கும் படி, மாகாண அரசுகள் கேட்டுக் கொள்ளப்பட்டன. இத்தகைய தேர்வானது மாகாண அரசுகளின் பொறுப்புக்கும், அதிகார வரம்புக் கும் உட்பட்டதாகும். இப்படி 10 நபர்கள் தேர்வு செய்யப்பட்டதில், ஒரே ஒரு முகமதியர் ஹைதராபாத் சமஸ்தானத்திலிருந்து பரிந் துரைக்கப்பட்டு அனுப்பப்பட்டார். மற்ற மாகாண அரசுகள் முகமதிய சமூகத்தை சார்ந்த எவர் ஒருவரையும் பரிந்துரைக்கவில்லை. அங்கு மின்துறையில் முகமதியர்கள் யாரும் இல்லாமலும் இருந்திருக்கக் கூடும்.

**திரு. கான் அப்துல் கனி கான்** (வடமேற்கு எல்லைப்புற மாகாணம் - பொது): வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தின் மின் துறையில் பணியாற்றுபவர்களில் 90 விழுக்காடு முகமதிய சமூகத்தை சார்ந்தவர்கள்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** உங்களின் எல்லைப்புற மாகாண அரசு எந்த ஒரு முகமதிய சமூகத்தை சார்ந் தவரையும் பரிந்துரைக்கவில்லை என்பதை வருத்தத்தோடு தெரி வித்துக் கொள்கிறேன்.

அடுத்து தொழிலாளர் நலத்துறை சார்பாக அறிவிக்கப்பட்ட 3 வெளிநாட்டு பயிற்சித் திட்டங்களைப் பற்றி கூற விழைகிறேன். ''பெவின் பயற்சித் திட்டம்'' என்பது முதலாவது. இதற்காக தேர்வு செய்யப்பட்ட 787 மாணவர்களில் 154 பேர் அதாவது, 19 விழுக் காடு முகமதிய சமூகத்தை சார்ந்தவர்கள். அடுத்ததாக தொழிலாளர் களின் நலனுக்கு சேவை செய்ய இந்திய அரசாங்கம் ஏற்பாடு செய்த

தொழிலாளர் நல அதிகாரிகளுக்கான பயிற்சியை எடுத்துக் கொள் வோம். இந்த அதிகாரிகள், தொழிலாளர் நலத்துறையால் தேர்ந் தெடுக்கப்படாமல், அந்தந்தத் துறையினரால் தேர்வு செய்யப் பட்டவர்கள். இவ்வாறு, இதுவரை அனுப்பப்பட்ட 23 நபர்களில் 18 நபர்கள், அதாவது 79 சதவிகிதம் பேர் முகமதியர்கள்.

அடுத்து, தனியார் நிறுவனங்களில் பணிபுரியும் தொழிலாளர் களுக்கு ''உயர் தொழில் நுணுக்கப் பயிற்சி'' அளிக்கும் திட்டம். இதற்காக இந்திய அரசு, தனியார் நிறுவனங்களுக்கு ஒரு சுற்றறிக்கை அனுப்பியது. தனியார் நிறுவனங்கள் தங்களிடம் பணியாற்றும் தொழிலாளர்களை வெளிநாடுகளுக்கு அனுப்பி, இந்தியர்களின் தொழில் நுணுக்கத் திறனை மேம்படுத்த விரும்பினால் இந்திய அரசின் தொழிலாளர் நலத்துறை அதற்குண்டான, உரிய வாய்ப்பு களைப் பெற்றுத்தறும் என்று சுற்றறிக்கையில் கூறப்பட்டு இருந்தது. இதனடிப்படையில், அனுப்பப்பட்ட 6 நபர்களில் ஒருவர் கூட முகமதியர் இல்லை. இது தொழிலாளர் நலத்துறையின் தவறு அல்ல.

அடுத்ததாக, மத்தியப் பொதுத் தேர்வாணையத்தால் நியமனம் செய்யப்பட வேண்டிய 8 ''திட்ட அதிகாரிகள்'', மற்றும் ''திட்ட அமலாக்க அதிகாரிகள்'', தொடர்பான செய்தி. இவ்வாறு 9 இடங் களுக்கு பணி நியமனம் செய்யப்பட்ட போதிலும், அதில் ஒருவர் கூட முகமதிய சமூகத்தை சார்ந்தவர் இல்லை. இது தொடர்பாக, மத்தியத் தொழிலாளர் நலத்துறைக்கும் மத்தியப் பொது தேர்வாணை யத்துக்கும் இடையே கடிதப் போக்குவரத்து நடந்தது என்பதனை, இந்த வெட்டுத் தீர்மானத்தைக் கொண்டு வந்த மதிப்பிற்குரிய உறுப் பினரின் கவனத்துக்கு கொண்டு வர விழைகிறேன்.

அறிவிக்கப்பட்ட நியமனங்களில், முகமதிய சமுதாயத்தை சார்ந்தவர் யாரும் இல்லை என அறிந்தவுடன், மத்தியப் பொதுத் தேர்வாணையத்திடம் உரிய வினா எழுப்பி, விளக்கம் என்னுடைய மத்தியத் தொழிலாளர் நலத்துறை செயலகத்திற்கு ஆணை பிறப் பித்தேன். இதன் பேரில், மத்தியப் பொதுத் தேர்வாணையம் அளித்த விளக்கம் மிக வித்தியாசமானதாகவும் கவனத்தை கவரக் கூடிய தாகவும் இருந்தது.

மத்தியப் பொது தேர்வாணையத்தின் விளம்பரத்தினை யடுத்து, வந்து சேர்ந்த 240 விண்ணப்பங்களில் 8 விண்ணப்பங் களே முகமதியர்களின் விண்ணப்பங்கள். அவர்களில் தகுதியின்

அடிப்படையில் 3 நபர்கள் நேர்முகத் தேர்வுக்கு அழைக்கப்பட்டும், அவர்களில் ஒருவர்கூட தேர்ச்சி பெறவில்லை என்று விளக்கம் கூறி யிருந்தார்கள். எனவே, வகுப்புவாரி அடிப்படையிலான பிரதிநிதித் துவம் பற்றி மைய தொழிலாளர் நலத்துறையின் வசம் இருக்கும் விவரங்களின் சுருக்கம் இவ்வளவே என்பதனை அங்கத்தினர்களுக்கு தெரியப்படுத்திக் கொள்கிறேன். நான் தொழிலாளர் நலத்துறையின் பொறுப்பேற்றுச் செயல்பட்டுக் கொண்டிருக்கும் காலகட்டத்தில், சீர்கெட்ட நிலையில் இருந்த முகமதிய சமூகத்தினரின் பிரதிநிதித் துவம் உயர்ந்த நிலைக்கு கொண்டு வரப்பட்டது என்பதை மகிழ் வுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

அவைத் தலைவர் அவர்களே, இரண்டே இரண்டு கருத்துக் களை மட்டும் அவையின் முன் எடுத்து வைத்து இந்த விவாதத் தினை முடிவுக்கு கொண்டு வர விழைகிறேன். முதலாவதாக, இந்த வகுப்புவாரி விகிதாசார அடிப்படையிலான தீர்மானத்தில் என் பங்கு என்ன என்பதை, முஸ்லீம் லீக் கட்சியைச் சேர்ந்த எத்தனை உறுப்பினர்கள் அறிவார்கள் என்று தெரியவில்லை. லண்டன் மாநக ரத்தில் நடைபெற்ற வட்டமேசை மாநாட்டில், முஸ்லீம் லீக் கட்சி யின் உறுப்பினர் யாரேனும் இருந்திருப்பாரேயானால் மாநாட்டில் கலந்து கொண்டவர்களில் யார் சிறுபான்மை வகுப்பினரின் இந்த அடிப்படை உரிமைகளை போராடி பெற்றுத் தந்தார்கள் என்பதை தெளிவாகப் புரிந்து கொண்டிருப்பார். வட்டமேசை மாநாட்டில் என் பங்கு மிகவும் கணிசமானது என்பதை தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆகவே, முகமதியர் அல்லது எந்த ஒரு சிறுபான்மை இனத் தவரின் அடிப்படை உரிமைகளிலும் எனக்கு அனுதாபம் இல்லை என்ற கூற்றினை மறுக்கிறேன். இவர்களின் அடிப்படை உரிமை களைப் பற்றி விவாதிக்கும் இத்தருணத்தில், நான் கூறிக்கொள்ள விரும்புவதெல்லாம், இவற்றுக்காகவே, நான் போராடினேன், போராடிக் கொண்டு இருக்கிறேன், இன்னும் போராடுவேன் என்பதே யாகும்.

நம்மோடு இணைந்து பணியாற்றும் மாண்புமிகு உள்துறை உறுப்பினர் அனுமதிப்பாரேயானால், இன்னொரு கருத்தினை தெரி விக்க விரும்புகிறேன். சிறுபான்மை இனத்தவரின் உரிமைகள் பாதுகாக்கப்பட வேண்டியதில், இந்திய அரசின் எந்தத் துறையில் தவறு நடந்தாலும், தவறு செய்பவர்களைப் பாதுகாக்கும் முயற்சி யில் ஈடுபடாமல், எப்பொழுது பணியிடங்கள் நிரப்பப்பட்டாலும்,

உன்னிப்பாகக் கண்காணித்து தக்க நேரத்தில் நடவடிக்கை எடுக்கப் படும் என்று மாண்புமிகு உள்துறை உறுப்பினர் உறுதி கூறியிருக் கிறார். அவ்வாறு அவர் அளித்த உறுதிமொழிக்கான பொறுப்பு என்னையே சாரும், ஏனெனில், இப்படிப்பட்ட குறைபாடுகள் இருப்பதைச் சுட்டிக்காட்டி, அவைகள் இனி நிகழாவண்ணம், குறை கள் களையப்பட வேண்டும் என்று நான்தான் அவருக்கு கடிதம் மூலம் தெரியப்படுத்தினேன். இதற்குமேல் நான் எதையும் கூற விரும்பவில்லை.

*திரு. அகமது இ.எச். ஜாபர்:* மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் தந்துள்ள புள்ளிவிவரங்களில் மறுசீரமைப்பு செயல்பாட்டுத்துறையின் பணியிடங்கள் பற்றிய புள்ளிவிவரங்களும் அடங்குமா என்பதை தெரிந்து கொள்ள விரும்புகிறேன்.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** ஆம், அவை தொழி லாளர் நல செயலகத்தின் உறுப்புகளே என்பதால், அவைகளும் இதில் அடங்கும்.

*திரு. அகமது இ.எச். ஜாபர்:* புனர் நிர்மாணச் சீரமைப்பும் உள்ளடங்குமா?

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** என்னிடம் நிறைய புள்ளி விவரங்கள் இருக்கின்றன. என் மதிப்பிற்குரிய நண்பர் விரும்பினால், அவர் இன்னும் பயனுள்ள அதிக விவரங்களை தெரிந்து கொள்ள அந்த ஆவணங்களை அவரிடம் கொடுக்க தயா ராக இருக்கிறேன்.



# 62

## [1]இந்திய நிதி மசோதா

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்):* இந்திய நிதி மசோதாவின் மீது நடை பெறும் விவா தத்தின்போது இடையில், எனக்கு விளக்கமளிக்க அனுமதி வழங்கிய அவைத் தலைவருக்கு, முதலில் என் நன்றி யினை உரித்தாக்கிக் கொள்ளுகிறேன். நான் எடுத்துரைக்கும் கருத் துக்கள், தொழி லாளர் நலத்துறையினைச் சார்ந்தவைகள் அல்ல எனினும், ஒரு சில முக்கியமான விஷயங்களை உங்கள் முன் எடுத்து வைக்க விழைகிறேன்.

இதுவரையில், நான் சார்ந்த தொழிலாளர் நலத்துறைக்கு எதிராக எந்தவித விமர்சனமும் எழவில்லை என்பதில் மிகுந்த மகிழ்ச்சியடைகிறேன். நிதிநிலை மசோதாவின் மீது, நேற்று நடை பெற்ற விவாதத்தின்போது, என் அருமை நண்பர் மதிப்பிற்குரிய பண்டித கோவிந்த மாளவியா தாழ்த்தப்பட்ட இனத்தைச் சார்ந்தவர் களுக்காக நிறுவப்பட இருக்கும், ஒரு கல்லூரியின் செயல்திட்ட வடிவினைப் பற்றிய குறிப்புகள் சிலவற்றை, இந்த அவையின் முன்வைத்ததால் அவைகளுக்கு விளக்கம் அளிக்கும் நிர்ப்பந்தம் காரணமாக, நான் குறுக்கிட நேர்ந்திருக்கிறது.

இந்த திட்டமானது, கல்வித் துறையின் சார்பாளர்களுடன் ஆலோசிக்கப்பட்டு, நிதித்துறையின் ஒப்புதலையும் பெற்று இருப் பதால், சாதாரணமாக, இந்த விஷயத்தினை தற்காத்துக் கொள்ளும் பொறுப்பைக் கல்வித் துறையின் சார்பாளரிடமே விட்டு இருக்க முடியும். எனினும், இப்படி ஒரு திட்டத்தினை செயல்முறைப் படுத்த நான் முன்மொழிந்தமையாலும், என் அருமை நண்பர், இதற்கு அரசியல் வண்ணம் பூச முற்பட்டிருப்பதாலும், நான் குறுக் கிட்டு விளக்கம் அளிக்கும் நிலை ஏற்பட்டு இருக்கிறது.

அவர், எடுத்து வைத்த கருத்துகளை, உன்னிப்பாக கவனித் ததில் இருந்து, இந்த செயல்திட்ட முன் வடிவு, அவருக்கு மிகுந்த வியப்பளித்ததாகவும் இந்தியக் கல்வித் துறையில் இனப்பற்று பிரிவினை மனப்பாங்கைப் புகுத்த முயற்சிப்பது போன்று இருப்ப தாகவும் கூறியிருக்கிறார். கண்ணாடி மாளிகையில் குடியிருப்போர்,

---

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி IV, எண். 7, மார்ச் 26, 1946, பக். 2926-31.

கல் எறிய முயற்சிக்கக் கூடாது என்ற எல்லோரும் நன்றாக அறிந்த முதுமொழி என் நினைவுக்கு வருகிறது. இந்த முதுமொழியின் உட்கருத்தினை, என் நண்பர் பண்டித மாளவியா ஒப்புக்கொள் வாரா எனும் சந்தேகம் வந்திருக்கிறது.

மாறாக, எனக்கும், இந்த அவையின் மற்ற உறுப்பினர்களுக் கும், திரு. மாளவியா நாட்டுப் பற்றைப் பற்றிக் கற்பிக்க முன்வந்து இருக்கிறார் என்பது, எனக்கு மிகுந்த வியப்பினை அளிக்கிறது. அவருடைய தனிப்பட்ட பழக்க வழக்கங்கள் நமக்கொன்றும் புதிய தல்ல. சாதாரண இந்து சமுதாயத்தைச் சார்ந்தவரிடம் மட்டுமல்ல, மற்ற பிரிவுகளைச் சார்ந்த பிராமணரின் இல்லத்தில் கூட இவர் தண்ணீர் பெற்று அருந்த மாட்டார்.

திரு. எம். அனந்தசயனம் அய்யங்கார் (ஒதுக்கீட்டு மதராஸ் மாவட்டங்கள் மற்றும் சித்தூர், முகமதியரல்லாதவர், கிராமப்புறம்): அவர் பாரபட்சமற்று நீதி நெறியோடு செயல்படுகிறார்!

திரு. ஸ்ரீபிரகாசா: பிராமணர்களில் கூட புத்தி பேதமையுள்ள வர்கள் இருக்கலாம்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அவருடைய உயர்ந்த கொள்கைகள் என்பவை தன்னுடைய தனித்தன்மையை, தூய்மையைப் பாதுகாப்பதாக எண்ணி, மனிதர்களோடு எவ்வித தொடர்பும் வைத்துக் கொள்ளாமல், தனி வலையில் வசிக்க விரும் பும் எலியின் கொள்கையைப் போன்றதுதான். இப்படிப்பட்ட வித்தி யாசமான சித்தாந்தங்களைக் கடைபிடிக்கும் ஒருநபர், மக்கள் முன் சென்று, நாட்டுப் பற்று பற்றியும், இனப்பற்று பிரிவினை மனப் பாங்கு கூடாது என்றும் பேசுமுன், நன்கு சிந்தித்துப் பேச வேண்டும். அது மட்டுமல்லாமல் இவர், காசி இந்து பல்கலைக் கழகத்தின் செயல்பாடுகளில் மிகுந்த அக்கறை கொண்டவர் என்பதையும் நாம் நன்கு உணர வேண்டும். காசி இந்துப் பல்கலைக் கழகம் குறுகிய இனப்பற்றை அடிப் படையாகக் கொண்ட பல்கலைக் கழகம் இல்லை என்றால் குறுகிய இனப்பற்று கொண்ட நிறுவனம் என்பதுதான் என்ன என்று அறிய விரும்புகிறேன். முதலில், இதை இந்துக்களின் பல்கலைக் கழகம் என்பதையே நான் ஒப்புக்கொள்ளவில்லை. ஒரு குறிப்பிட்ட சமூகத்தின் காலசார நலன்களைப் பாதுகாக்கும் குறுகிய நோக்கோடு செயல்படும் பல்கலைக்கழகம் என்பது மட்டுமே உண்மை. காசி இந்து பல்கலைக்கழகத்தில், மேலிருந்து அடிமட்ட

நிலை வரையில், பிராமணர் அல்லாதோர் யாருமே இல்லை என்பது உண்மையா இல்லையா என்ற வினாவினை என் அருமை நண்பர் முன் வைக்க விரும்புகிறேன்.

ஓர் உறுப்பினர்: இருக்கிறார்கள்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: பிராமணர் அல்லாத ஒரு இந்து சமூகத்தை சார்ந்தவர் இந்து தர்மத்தில் (சட்டத்தில்) எவ்வளவு சிறப்பான கல்வித் தகுதியினைப் பெற்றிருந்தாலும் இந்து மதத்துறையின் பேராசிரியராகப் பணியாற்ற அவர் தகுதியற்றவராவர் என்று 1916 ஆம் ஆண்டு, இந்து பல்கலைக் கழக நிர்வாக சபையில், நிரந்தர தீர்மானம் நிறைவேற்றப்பட்டு இருக்கிறதா இல்லையா என்ற வினாவினைக் கேட்க ஆசைப்படுகிறேன். சில மாதங்களுக்கு முன்பாக இந்துமத ''காயஸ்தா'' வகுப்பினை சார்ந்த ஒரு பெண்மணி, காசி இந்து பல்கலைக் கழகத்தில், இறை இயல் ஆய்வுத் துறையில் பயில சேர்த்துக் கொள்ள அனுமதி மறுக்கப் பட்டதால், உண்ணாவிரதம் மேற்கொண்ட நிகழ்ச்சியும் என் நண்பருக்கு மறந்துவிட்டதா என்பதையும் வினவ ஆசைப்படுகிறேன். இப்படிப்பட்ட நிகழ்வுகள் குறுகிய இனப்பற்று இல்லையெனில், அது வேறு என்ன என்ற வினாவினையும் முன்வைக்க விரும்புகிறேன். நேற்று நடைபெற்ற விவாதங்களைப் படிக்கும்போது; தாழ்த்தப்பட்டோருக்கான தனிக்கல்லூரி பற்றிப் பிரஸ்தாபிக்கப் பட்டபோது என் நண்பர் திரு. அய்யங்கார் மிகுந்த ஆச்சரியப்பட்டார் என்று பதிவாகியுள்ள குறிப்பினை கவனிக்க முடிந்தது. சிறிது காலத்திற்கு முன், சேலம் நகரத்தில் என்ன நடந்தது என்பதைப் பற்றி அவர் அறிந்திருக்கவில்லையோ என வியப்பாக இருக்கிறது. ஒருவேளை அவர் மறந்து போயிருக்கலாம்...

திரு. எம். அனந்தசயனம் அய்யங்கார்: எனக்கு நினைவில்லை.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ...... அல்லது, அவரது ஏராளமான அரசியல் பணிகள் காரணமாக, தான் சார்ந்திருக்கும் சமூகத்தின் அங்கத்தினர்கள் என்ன செய்து கொண்டு இருக்கிறார்கள் என்று அறியவில்லையோ என்னவோ. எனினும் இந்த மாதம் 12 ஆம் தேதியிட்ட ''இந்து'' பத்திரிகையின் சென்னைப் பதிப்பில் வெளிவந்திருக்கும் செய்தியினை அவர் கவனத்துடன் பரிசீலிக்க வேண்டும் என்று விரும்புகிறேன்.

அந்த செய்தியின்படி, பிராமணர்களின் நல்வாழ்வை மட்டும் மேம்படுத்தும் எண்ணத்துடன், பிராமணர்களுக்கென்று ஒரு சங்கம் அமைப்பதற்கான பூர்வாங்க ஏற்பாடுகளைச் செய்வதென சேலம் பிராமணர்களின் கூட்டத்தில் முடிவு செய்யப்பட்டு இருக்கிறது. பிராமணர்களின் வாழ்க்கைத் தரத்தை மேம்படுத்துவது, அவர்களது உரிமைகளைப் பாதுகாப்பது, பிராமணர்களுக்கு மட்டுமான ஒரு சங்கத்தினை ஏற்படுத்துவது, பிராமண சமுதாயத்தவர் மாத்திரம் கல்வி கற்க ஒரு தனிக் கல்லூரி நிறுவுவது மற்றும் பிராமண சமூகத் தவர்கள் மட்டும் பங்கேற்கும், பணியாற்றும் விதமான தொழிற்சாலை கள் அமைப்பது போன்ற முடிவுகள் அந்தக் கூட்டத்தில் எடுக்கப்பட் டிருக்கின்றன. இவ்வாறு நடைபெற்ற கூட்டத்துக்கு தலைவர் யார் தெரியுமா? வேறு யாரும் அல்ல, மாமேதை என்று போற்றப்படும் சச்சிவோத்ம சர். சி.பி. இராமசாமி ஐயர்தான் அக்கூட்டத்திற்கு தலைமை தாங்கியவர்.

**திரு. எம். அனந்தசயனம் அய்யங்கார்:** உங்களுடைய முன்னாள் உத்தியோக சகாதானே.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** எனக்குத் தெரி யாது. இந்த நாட்டில் பலர் நாட்டுப்பற்று பற்றிப் பேசிக் கொண்டே, நடைமுறையில் குறுகிய இனப்பற்றுப் போக்கைக் கடைப்பிடிக் கிறார்கள்.

**திரு. எம். அனந்தசயனம் அய்யங்கார்:** இரண்டு விஷயங்களுக் காகவும் நான் வருந்துகிறேன்.

**மாண்புமிகு பி.ஆர். அம்பேத்கர்:** சமூகத்தின் அடித்தளத் தில், அதலபாதாளத்தில் தள்ளப்பட்டு, போராடிக் கொண்டிருக்கும் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் போன்ற ஒரு சமூகத்தினர் தங்கள் வாழ் வில் முதல் முறையாக தங்களது இயலாமைகளை, இக்கட்டுகளை, இடர்ப்பாடுகளை உணர்ந்து, தாங்கள் மேற்படிப்புப் படிப்பதற்குத் துணைபுரியும் கல்லூரிகளை அமைக்க முயன்று வருகின்றனர். இத் தகைய மக்களுக்காக குரல் கொடுக்க இங்கு வந்திருப்பதாகக் கூறிக் கொள்ளும் உறுப்பினர்கள் இந்த மக்கள் குறுகிய இனப்பற்றுடன் நடந்து கொள்கிறார்கள் என்று குற்றம் சாட்டுவது விவேகமின்மையே தவிர, பேதைமையே தவிர வேறல்ல என்பது என் கருத்து. இந்தக் கல்லூரி தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களுக்கான தனிக் கல்லூரி என்று கூறுவது முற்றிலும் தவறான கூற்றாகும் என்று இந்த அவைக்குச்

சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். இந்த கல்லூரி, வழக்கமான மற்ற கல்லூரிகளைப் போலவே, எல்லா சமூகத்தை சார்ந்தவர்களும் சேர்ந்து பயன்பெற அமைக்கப்படுவதுதான். அதில், எவ்வித பாரபட்சத்திற்கும் இடமில்லை. யார் பயன் பெறுவதற்கும் தடையில்லை.

**பண்டித கோவிந்த மாளவியா** (அலகாபாத் மற்றும் ஜான்சி மண்டலங்கள் முகமதியர் அல்லாதோர் கிராமப்புறம்): நிதிநிலை அறிக்கையில் சொல்லப்பட்டிருப்பது என்ன?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இப்பொழுது, இப்படி உங்கள் எதிர்ப்பினை தெரிவிக்கும் முன்பாக, உங்கள் முன்னிலையில் ஒருமாத காலமாக இருக்கும் நிதிநிலை அறிக்கையினை முழுவதுமாக ஆய்ந்து பார்த்து, இதற்கு விளக்கம் பெறும் விதமாக, குறுகிய கால அவகாசத்தில் கேள்வியினை எழுப்பி, முழு விவரங்களையும் பெற்று இருக்கலாம். நான் முன்பே கூறியதுபோல், இது எல்லோருக்கும் பொதுவான கல்லூரிதான். அதுமட்டுமன்றி, கல்லூரியில் பணியாற்ற சாதி, மத, இன, மொழி பேதங்கள் இல்லாமல் சமூகத்தின் பல பிரிவினரும், ஒருமுகமாக தேர்வு செய்யப்பட்டு இருக்கிறார்கள். இவர்களில், இந்துக்கள், பிராமணர்கள், பிராமணர் அல்லாதோர், மற்றும் பார்சி, கிருத்துவர், முகமதியர் என அனைத்து வகுப்புகளைச் சார்ந்தவர்களும் இடம் பெற்று இருக்கிறார்கள்.

அதுமட்டுமல்லாமல், பம்பாய் பல்கலைக்கழகத்தோடு, இக்கல்லூரியினை இணைப்பதற்காக, விண்ணப்பித்தபோது, எந்த விதத் தயக்கமும் இன்றி, பல்கலைக்கழகத்தினரால் இணைப்புச் சான்றிதழ் வழங்கப்பட்டது. இவ்வளவு நேர்ததியாக சிந்திக்கப்பட்ட ஒரு திட்டத்துடன் இணைப்புச் சான்று பெற இன்றுவரை பம்பாய் பல்கலைக்கழகத்திடம் யாருமே அணுகவில்லை என்ற பாராட்டினையும் பெற்று இருக்கிறது. முதன்முதலாக கல்லூரி ஒன்றினைத் தொடங்கும்போதே, தேவையான எல்லா கூறுகளையும் ஒருங்கே கொண்டும், செயல்முறைக்குக் கொண்டு வரப்பட்டும், மன நிறைவோடு அங்கீகாரம் அளிக்கப்பட்டது என்பது, பம்பாய்ப் பல்கலைக் கழக வரலாற்றில் இதுவே முதன்முறை என்பது குறிப்பிடத்தக்கது. அது மட்டுமன்றி, கல்லூரியின் நிர்வாகமும், அதன் அங்கத்தினர்களும், பணியாற்றுபவர்களும், அவர்களின் செயல்முறை முன் ஏற்பாடுகளும் மிகுந்த பாராட்டுகளுக்கு உரித்தானவையாக இருந்தன. எனவே, அறிவுப்பூர்வமாக எவ்வித கோணத்தில் பார்க்கினும், இக்

கல்லூரி ''தாழ்த்தப்பட்ட இனத்தினருக்கு மட்டுமான கல்லூரி என்பதை யாராலும் ஏற்க முடியாது.

தாழ்த்தப்பட்ட வகுப்பினரைப் பொறுத்த வரையில் இக் கல்லூரி செய்யவிருக்கும் ஒரே காரியம் கல்லூரியில் அனுமதிப்பதிலும், உபகாரச் சம்பளங்கள் வழங்குவதிலும், தங்கும் விடுதியில் இட ஒதுக்கீடு செய்வதிலும் அவர்களுக்கு முன்னுரிமை அளிப்பதே யாகும்.

இப்படிப்பட்ட ஒரு கல்லூரியினை ஏன் நிறுவ வேண்டியிருந்தது என்பதற்கான காரணத்தினை அவையின் முன்பு தெரிவித்துக் கொள்ள ஆசைப்படுகிறேன். பம்பாய் மாகாணத்தில், மாணவர் சமுதாயத்தின் பெருக்கம் என்பது அளவுக்கு மிஞ்சிய நிலையில் இருக்கிறது என்பது உறுப்பினர்கள் அனைவரும் அறிந்திருக்க வாய்ப்பில்லை. கடந்த ஆண்டு 19 புதிய கல்லூரிகளைத் திறக்க பம்பாய் பல்கலைக்கழகம் அனுமதியளித்ததை எனக்கு எதிரில் அமர்ந்திருக்கும் மரியாதைக் குரிய என் நண்பர் திரு. காட்கில் அறிவார். இதிலிருந்து மாணவர் கள் கல்லூரிகளில் இடம்பெறுவதற்கு படும் சிரமங்களை நன்கு உணரமுடியும். அது மட்டுமல்லாமல், மிக முக்கியமாக கவனிக்க வேண்டிய செய்தி என்னவெனில், இந்த இட நெருக்கடியில் தாழ்த்தப் பட்ட இனத்தைச் சார்ந்தவர்கள் பள்ளிக் கல்வி முடிந்து கல்லூரி யில் சேரும் நிலையினைப் பெறும்போது, இடம் கிடைக்காமல் மற்ற வர்களைவிட மிகுந்த சிரமத்திற்கு உள்ளானார்கள்.

நான், இப்படிப்பட்ட நெருக்கடியான நிலையினை நன்கு உணர்ந்ததால் தாழ்த்தப்பட்ட சமூக மேம்பாட்டிற்கு மட்டும், முன் னுரிமை வழங்கும் விதமாக செயல்படும் ஒரு கல்லூரி செயல் வடி வினை இந்திய அரசாங்கத்திடம் முன் மொழிந்தேன். இதைத் தவிர இன வேறுபாடு அல்லது பிரிவினைக்கு வழிவகுப்பது போன்ற எந்த ஒரு கூறும், இந்த திட்ட முன்மொழிதலில் இல்லை என்பதைக் கவ னத்தில் கொள்ள வேண்டும்.

அவைத்தலைவர் அவர்களே, என் மரியாதைக்குரிய நண்பர் இந்த அவையில் எழுப்பிய மற்றொரு விஷயத்துக்கு வருகிறேன். இப்படிப்பட்ட ஒரு விஷயத்தை ஏன் இங்கு புகுத்துகிறார் என்பதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. இங்கு அரசியலைப் புகுத்தி தேர்தல்கள் என்ற நிலைப்பாட்டில் நான் முற்றிலும் துடைத்தெறியப் பட்டவன் என்ற கருத்தினைக் கூறியிருக்கிறார். இதன் மூலம், யாருக்கு

என்ன செய்தியினைக் கூற விரும்புகிறார் என்று தெரியவில்லை. அதாவது, நான் இந்திய அரசாங்கப் பணிக்கு தேர்ந்தெடுக்கப்பட்டு இருக்கக் கூடாது அல்லது அதைப் போன்ற வேறு ஏதாவது நிலைக்கு தேர்வு செய்திருக்கக் கூடாது என்பது போன்ற குறிப்பினை வழங்க அவர் எண்ணுகிறாரா என்பது தெரியவில்லை.

பண்டித கோவிந்த மாளவியா: நீங்கள் அரசியல் வாழ்வில் முற்றிலும் தோற்றுப் போனவர் இல்லையா?

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: தேர்தல்களின் அடிப்படையில் கூறும்போது, நான் வாடிப்போன செடியின் நிலையில் இருக்கிறேன் என்று சொல்லலாம். எனினும், நான் வேரோடு சாய்ந்து போன நிலையில் இல்லையென்பதைத் திட்டவட்டமாக, என் எதிரில் இருக்கும் நண்பர்களுக்குத் தெரியப்படுத்திக் கொள்ளுகிறேன். மதிப்பிற்குரிய என்னுடைய நண்பர் தேர்தல் முடிவுகளைப் பற்றிக் கூறி, அதில் தாழ்த்தப்பட்டவர்களுக்கான இடங்களைக் காங்கிரஸ் கட்சி பெற்றிருக்கிறது என்பதைத் தெரிவித்தார். ஆனால் காங்கிரஸ் கட்சியினர் எந்தெந்த வழிகளில் இந்த வெற்றிகளைப் பெற்றார்கள் என்பதை ஆராய அவர் தயாராக இருக்கிறாரா என்பதை அறிய விரும்புகிறேன்.

பேராசிரியர் என்.ஜி. ரங்கா: நாங்கள் தயாராக இருக்கிறோம்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: காங்கிரஸ் கட்சியினர், எந்தெந்த வழி வகைகளில் வெற்றி பெற்றார்கள் என்பதைத் தெளிவுபடுத்த விரும்புகிறேன்.

திரு. எம். அனந்தசயனம் அய்யங்கார்: அதே வழக்கமான குற்றச்சாட்டுகள்தான்!

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: அதே வழக்கமான குற்றச்சாட்டுகள் அல்ல. இவைகளை, அதிகாரப்பூர்வமாக ஆய்வுக்கும் எடுத்துக் கொள்ளும் வகையில், உண்மையான ஆதாரங்களை சபையின் முன் வைக்கிறேன்.

பேராசிரியர் என்.ஜி. ரங்கா: ஆழம் தெரியாமல் காலை வைக்காதீர்கள்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** தீண்டத்தகாத இன வாக்காளர்கள் யாருமே வாக்குகளைப் பதிவு செய்ய, வாக்குச் சாவடிகளில் அனுமதிக்கப்படவில்லை என்பதை மதிப்பிற்குரிய உறுப்பினர் முதலில் தெரிந்துகொள்ள வேண்டும். சத்தாரா மாவட்டத்தில் நடைபெறும் நிகழ்வு ஒன்றினைப் பற்றி நன்றாக தெரிந்து கொள்வது மிகவும் பயனுள்ளதாக இருக்கும். அந்த மாவட்டத்தில் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசாங்கத்திற்கு இணையாக ஓர் அரசாங்கமே நடந்து வந்தது.

361 கிராமங்களில் இருந்து, தாழ்த்தப்பட்ட சமூகத்தைச் சார்ந்த வாக்காளர்கள் அனைவரும், உயர்சாதி இந்துக்களால், கிராம சாவடிக்கு அழைத்துச் செல்லப்பட்டார்கள். அவர்கள் அனைவரும் காங்கிரஸ் கட்சிக்கு வாக்களிக்க தயாராக இருக்கிறார்களா என்று கேட்கப்பட்டது. அவர்கள் மறுத்தபோது அனைவரும் கிராம சாவடியில் பாதுகாவலில் வைக்கப்பட்டு எங்கும் நகர முடியாத நிலைக்குத் தள்ளப்பட்டார்கள். இன்னும் இதைப் போன்ற நிறைய நிகழ்வுகளை நான் ஆதாரமாகக் கொடுக்க முடியும்.

**பண்டித கோவிந்த மாளவியா:** அப்படியானால், தயவு செய்து கொடுங்கள்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** காங்கிரஸ் கட்சியினரை எதிர்த்து போட்டியிட்ட தாழ்த்தப்பட்ட சமூகத்தைச் சார்ந்த வேட்பாளர்கள் கூடத் தாக்கப்பட்டிருக்கிறார்கள். மிக அண்மைக் காலத்தில் ஆக்ரா நகரில் நடைபெற்ற சம்பவத்தினை எடுத்துக் கொள்ளுங்கள். வாக்குப்பதிவு தினத்தன்று தாழ்த்தப்பட்ட இனத்தவரின் 50 வீடுகள் தீக்கிரையாக்கப்பட்டன. வாக்குச்சாவடிக்குச் சென்றிருந்த அந்த இனத்தவரின் வீடுகள் சூறையாடப்பட்டன. கான்பூர் நகரில் ஏழு நபர்கள் கொலை செய்யப்பட்டனர்.

**திரு. திவான் சமன்லால்:** (மேற்கு பஞ்சாப்: முகமதியர் அல்லாதோர்): சூறையாடியவர்கள் யார்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்துக்கள் இப்படிப்பட்ட வழிமுறைகளில்தான் இந்த தேர்தலில் வெற்றி வாகை சூடினார்கள். (இடைமறிக்கப்படுகிறது). என் மரியாதைக்குரிய நண்பருக்கு, நான் சொல்லிக் கொள்ள விரும்புவதெல்லாம், இறுதித் தேர்தலை வைத்து, காங்கிரஸ் கட்சி வெற்றி பெற்றதா

அல்லது, நான் சார்ந்திருக்கும், தாழ்த்தப்பட்ட வகுப்பினர் சம்மேளனம் வெற்றி பெற்றதா என்று நிர்ணயிப்பது அறிவுடைய செயலாகாது. ஏனெனில் இறுதித் தேர்தல்களில் 95 சதவீத பெரும்பான்மையினராக உள்ள உயர்சாதி இந்துக்களோடு ஒப்பிடும் போது தீண்டப்படாதவர்கள் பூதக் கண்ணாடியில் பார்க்கும் அளவுக்கு 5 சதவீத மிகச் சிறிய பங்கினையே பெறுகிறார்கள். இப்படிப் பட்ட இறுதிநிலை தேர்வுகளின் அடிப்படையில் யாருக்குப் பலம் இருக்கிறது, யாருக்கு யார் பிரதிநிதிகளாக இருப்பது என்பதைத் தேர்வு செய்வது அறிவீனமான செயலாகவே இருக்கும். உண்மையான பலப்பரீட்சையை முதற்கட்ட தேர்தல்களை வைத்தே பரிசோதிக்க முடியும். முதற்கட்ட தேர்தல் என்பது அனைத்து தாழ்த்தப் பட்ட இனத்தவர்களும், பங்கேற்கும் தனி வாக்காளர் பட்டியல் மூலம் நடைபெறுகிறது. முதற்கட்ட தேர்தல்களில் என்ன நடந்தது, அதன் முடிவுகள் எப்படி இருந்தது என்பதைப் பற்றிய சில கருத்துக் களை உங்கள் முன் வைக்க ஆசைப்படுகிறேன். பஞ்சாப்பிலும், பம்பாயிலும் தலா மூன்று தொகுதிகளில் முதற்கட்ட தேர்தல்கள் நடைபெற்றன.

*திரு. மோகன்லால் சக்சேனா:* மொத்தம் எத்தனை இடங்களில் 3 இடங்கள்?....

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* நான் சொல்லி முடித்துவிடுகிறேன்.

*அவைத்தலைவர்:* அவர் தொடர்ந்து பேச அனுமதிக்க வேண்டும்.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* மத்திய மாகாணங்களில் 3 இடங்களுக்கும், சென்னை மாகாணத்தில் 10 இடங்களுக்கும், ஐக்கிய மாகாணங்களில் 2 இடங்களுக்கும் முதற்கட்ட தேர்தல்கள் நடைபெற்றன. (குறுக்கீடுகள்). என் மரியாதைக்குரிய நண்பர் உண்மையை அறிந்து கொள்ள வேண்டுமெனில், முதற் கட்ட தேர்தல் என்பதே கட்டாயமாக நடைபெற்றாக வேண்டு மென்பதல்ல என்பதை முதலில் தெரிந்து கொள்ள வேண்டும். குறைந்தபட்சம் 5 நபர்கள் போட்டியிட்டாலொழிய, பூர்வாங்கத் தேர்தலை நடத்த முடியாது எனும் நிலையில், தாழ்த்தப்பட்டச் சமூகத்தைச் சார்ந்த மக்கள், இம்மாதிரியான பூர்வாங்கத் தேர்தலில்

போட்டியிடுவதைக் கூட விரும்புவதில்லை. காரணம், இந்த தேர்தல் களுக்குக் கூட அதிகப்படியான தொகை செலவாகும் என்பதாலும், எங்களிடம் செலவு செய்ய கணக்கில் வராத கருப்பு-கள்ளச் சந்தைப் பணம் இல்லையென்பதுமேயாகும். (அதிகமான குறுக்கீடுகள்). இந்த 3 மாகாணங்களிலும், மொத்தம் 22 இடங்களுக்குப் பூர் வாங்கத் தேர்தல் நடைபெற்றது. அனைத்து இடங்களிலும் காங் கிரஸ் கட்சி போட்டியிட்டது. போட்டியிட்ட மொத்த இடங்களில் 19 இடங்களில் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் சம்மேளனம் வெற்றி வாகை சூடியிருக்கிறது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**திவான் சமன்லால்:** பஞ்சாப் மாகாணத்தில் எத்தனை இடங் களில்?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஒரு நிமிடம் பொறுங்கள். பம்பாய் மாகாணத்தில்.... - எனக்கு நேரம் குறைவாக இருப்பதால் முழு விவரங்களை கொடுக்க இயலவில்லை.

**பண்டித கோவிந்த் மாளவியா:** அது உங்களுக்கு எதிராகவே போகும்!

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** பம்பாய் நகரின் இரண்டு தொகுதிகளில் பூர்வாங்க தேர்தல் நடைபெற்றதில், பைகுலா தொகுதியும் ஒன்று. இங்கு தாழ்த்தப்பட்ட வகுப்பினர் சம்மேளன வேட்பாளர் 11,334 வாக்குகளையும் காங்கிரஸ் கட்சி வேட்பாளர் 2,096 வாக்குகளையும் பெற்றனர். பம்பாய் நகரத்தின், புறநகர் தொகுதியில் நடைபெற்ற தேர்தலில், தாழ்த்தப்பட்ட வகுப்பினர் சம்மேளன வேட்பாளர் 12,899 வாக்குகளையும், காங்கிரஸ் வேட் பாளர் 2,088 வாக்குகளையும் பெற்றனர். மற்றும் உதாரணத்திற்கு மத்திய மாகாணங்களின் இரு தொகுதிகளை எடுத்துக் கொள்கிறேன்...

**திரு. எம். அனந்த சயனம் அய்யங்கார்:** அங்கு கள்ளச்சந்தை நடைமுறையில் இல்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** நாக்பூர் தொகுதி யில் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் சம்மேளன வேட்பாளர் 1933 வாக்கு களையும் காங்கிரஸ் வேட்பாளர் 270 வாக்குகளும் பெற்றனர்.

பந்த்ரா மாவட்டத்தில் சம்மேளன வேட்பாளர் 3,187 வாக்குகளும் சுயேச்சை வேட்பாளர் மற்றும் காங்கிரஸ் வேட்பாளர் உட்பட அனைவரும் சேர்ந்து 976 வாக்குகள் மட்டுமே பெற்றனர். ஐக்கிய மாகாணங்களின் ஆக்ரா தொகுதியில் சம்மேளன வேட்பாளர் 2,248 வாக்குகளையும், காங்கிரஸ் உள்ளிட்ட மற்ற அனைவரும் சேர்ந்து 840 வாக்குகள் மட்டுமே பெற்றனர். பஞ்சாப் மாகாணத்தில் லூதியானா: ஃபெரோஸ்பூர் தொகுதியை மற்றுமோர் உதாரணத் திற்கு எடுத்துக் கொள்ளப்படுமாயின், அங்கு சம்மேளனம் 1,900 வாக்குகளையும் காங்கிரஸ் 500 வாக்குகளையும் பெற்றது.

திவான் சமன்லால்: பஞ்சாப் மாகாணத்தில், ஷெட்யூல்டு வகுப்பு வேட்பாளர் யாரும் இல்லை.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: தொடர்ந்து விவ ரங்களை சொல்ல என் நண்பர் அனுமதிப்பாரா? இந்த விஷயமாக, அவருக்குத் தெரிந்திருப்பவைகளைவிட, எனக்கு அதிகம் தெரியும் என்று எண்ணுகிறேன்.

திவான் சமன்லால்: மாண்புமிகு நண்பருக்கு, தாழ்த்தப்பட்ட வகுப்பு சம்மேளன வேட்பாளர் ஒருவர் கூட இல்லை என்பது தெரியும்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: தாழ்த்தப்பட்ட வகுப்பு சம்மேளனத்தின்......

திவான் சமன்லால்: இது முழு பொய்.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: என்னுடைய மாண்புமிகு நண்பர் அவர் கூறிய வார்த்தைகளைத் திரும்பப் பெற வேண்டும். அதற்காக, அவைத் தலைவரின் பாதுகாவலை வேண்டு கிறேன்.

திவான் சமன்லால்: பஞ்சாப் மாகாணத்தில், ஒரே ஒரு தாழ்த்தப் பட்ட வகுப்பு சம்மேளன வேட்பாளர் கூட இல்லை எனும் என் கூற்றை மறுதலிக்குமாறு அறைகூவல் விடுக்கிறேன்.

அவைத் தலைவர்: ஒழுங்கு, ஒழுங்கு. மாண்புமிகு உறுப் பினர், விவாதத்தில் பல்வேறு புள்ளிவிபரங்கள் எடுத்து வைக்கும்

போது, காரசாரமான நிலை உருவாவதைத் தவிர்க்க வேண்டும். கேட்கப்பட்ட குறிப்பிட்ட வினாவுக்குத் தக்க பதில் கோரப்பட்டு இருக்கும்போது, அவர் என்ன சொல்ல வந்தாலும், அதனைக் கண் ணியத்தோடு, அமைதியாகக் கேட்க வேண்டும். கேட்கப்பட்ட கேள்விக்கு உறுப்பினர் கூறிய பதிலானது, உண்மையான தகவல்கள் தானா இல்லையா என்பதைப் பற்றி நான் கருத்து கூற விரும்ப வில்லை. எனினும், இந்த அவையின் மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் யார் ஒருவருக்கும் மற்ற மாண்புமிகு உறுப்பினரைப் பார்த்து, அவர் கூறுவது முழு பொய் என்று கருத்துக் கூறும் நிலையோ, உரிமையோ இல்லை என்பதைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

*திவான் சமன்லால்:* ஐயா.... நான் கூறிய வார்த்தைகளை திரும்பப் பெற்றுக் கொள்கிறேன். எனினும், நான் கூறிய வார்த்தை களுக்குப் பதிலாக "அவர் கூறுவது உண்மையல்ல" என்று கூற விழை கிறேன்.

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:*** சென்னை மாகா ணத்திலிருந்து ஒரு எடுத்துக்காட்டு அதாவது, அமலாபுரம் தொகுதி யில் சம்மேளனத்தின் வேட்பாளர் 10,540 வாக்குகளையும், காங் கிரஸ் வேட்பாளர் 2,683 வாக்குகளையும் பெற்றனர். இவைகள் தான் பூர்வாங்கத் தேர்தல்களின் முடிவுகள், ஆகவே நேர்மையான முறையில் ஒவ்வொருவரின் பலம் அறிய வேண்டுமெனில், பூர் வாங்கத் தேர்தல்கள் நடைபெற்றே ஆகவேண்டும் என்பதை அனை வரும் தெரிந்து கொள்ள வேண்டும். என் எதிரே அமர்ந்திருக்கும், மதிப்பிற்குரிய நண்பர்களுக்கு சொல்லிக் கொள்வதெல்லாம், கடந்த தேர்தலில் வெற்றிபெறக் கையாளப்பட்ட வழிமுறைகளுக்கு உண்மையாகவே மதிப்பு இருக்கிறது எனில்.... என் மனதுக்குட் பட்டதைச் சொல்ல விரும்புகிறேன். இத்தகைய "தேர்தல் முறை" என்பதே, பொது மக்களை, வஞ்சித்து, ஏமாற்றும் போலித்தன மானது என்பதை தக்க ஆதாரங்களோடு, சந்தேகத்திற்கிடமின்றி நிரூபிக்க முடியும். எனவே, ஷெட்யூல்டு வகுப்பினரின் சார்பாளர் களைத் தேர்ந்தெடுக்க, அவர்களுக்கென்று, தனி வாக்காளர் தொகுதி கள் இருக்க வேண்டும்.

என் மரியாதைக்குரிய நண்பர், பண்டித மாளவியா இன்னொரு கருத்தினைக் கூற முயற்சித்தார். தாழ்த்தப்பட்ட சமூக மக்களின் முன் னேற்றத்திற்காக, இந்து சமுதாயத்தினர் நீண்டகாலமாக பாடுபடுவ

தாகவும் அவர்கள் சுயமரியாதை மற்றும் - பொருளாதார முன்னேற்றம் பெறுவதற்காக, அதிக அளவு நன்கொடை பெற்றுத் தர முடியும் என்றும் கூறினார்.

*பண்டித கோவிந்த மாளவியா:* அவைத் தலைவர் அவர்களே! ஓர் ஒழுங்குப் பிரச்சினை எழுப்ப விரும்புகிறேன். இந்த அவையில், முன்னதாகவே, தன் கருத்துக்களை எடுத் துரைத்து, மீண்டும் விளக்கம் அளிக்க வாய்ப்பு கிடைக்காத நிலையில் இருக்கும் ஒரு மதிப்பிற்குரிய உறுப்பினரைச் சுட்டிக்காட்டி மற்றொரு மாண்புமிகு உறுப்பினர், மிகத் தவறாக மேற்கோள் காட்டி, அவரால் கூறப்பட்டதாக, உண்மைக்குப் புறம்பான பல கருத்துக்களை அறிவிக்கும் பட்சத்தில், அந்த உறுப்பினர் தன்னைத் தற்காத்துக் கொள்ள இருக்கும் வழிதான் என்ன?

*அவைத்தலைவர்:* அனுமானத்தின் அடிப்படையில் கேட்கப்படும் கேள்விகளுக்குப் பதில் சொல்ல, நான் அதிக சிரமம் எடுத்துக் கொள்ள விரும்பவில்லை. அதிகாரபூர்வமான தகவல்களைத் தருவது என்பது ஒரு விஷயம். ஒரு நிகழ்ச்சியினை, தான் புரிந்து கொண்ட விதத்தில் ஒரு கருத்தினைக் கூறுவது என்பது வேறொரு விஷயம். ஆகவே மதிப்பிற்குரிய உறுப்பினர் இவை இரண்டையும் சேர்த்துக் குழப்ப வேண்டாம் என்று கேட்டுக் கொள்கிறேன்.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* என்னுடைய மதிப்பிற்குரிய நண்பர், தன் உரையினிடையில் கூறிய, அதாவது: ''தாழ்த்தப்பட்ட சமுதாய மக்களின் சமூக நலம், மற்றும் பொருளாதார நிலையின் மேம்பாட்டிற்காக இந்து சமுதாயத்தைச் சார்ந்தவர்கள், தன்னலம் பாராது மிகுந்த அக்கறையோடு, தொடர்ந்து தீவிரமாக செயலாற்றி வருகிறார்கள்'' என்ற கருத்தினைப் பற்றி விவாதித்துக் கொண்டு இருந்தேன். இந்த அவையின் நான்கு சுவர்களுக்கு மத்தியில் நடந்து கொண்டு இருப்பதை வைத்து, ஒருவர் முடிவுக்கு வரவேண்டிய நிலையிருப்பின் என்னுடைய மதிப்பிற்குரிய நண்பர் கூறியது போன்ற ''வாக்குமூலங்களை'' நேர்மையான மனிதர்கள் யாராலும் ஒப்புக்கொள்ள முடியாது.

நான் இந்த சபையில் மிகக் குறைந்த காலமாகத்தான் உறுப்பினராக இருக்கிறேன் என்றபோதிலும் முன்பே, இங்கு நடந்த விவாதங்கள், மற்றும் எல்லாவித செய்திகளையும், அதிகாரப்பூர்வ

சபைக் குறிப்பேடுகளில் தொடர்ந்து படித்து வருகிறேன். அப்படி எந்த ஒரு செய்தியினையும் ஒதுக்கித் தள்ளாமல், எல்லா விஷயங்களை யும் முழுமையாக படித்தறிந்திருக்கிறேன். எனவே, அவைத்தலைவர் அவர்களே! கடந்த காலச் செயல்பாடுகளின் மீது எனக்கு மிகுந்த மதிப்பு உண்டு என்றபோதிலும், நான் அறிந்துகொண்ட செய்தி களின் அடிப்படையில், இதற்கு முன்பு எப்போதும், எதிர்க்கட்சி வரிசையில் இருந்த எவரும், தாழ்த்தப்பட்ட சமூக மக்களுக்கு, அன்றாடம் இழைக்கப்படும் கொடுமைகள், கொடூரமான செயல் கள், மற்றும் அவர்கள் அநியாயமாக ஒடுக்கப்படுவது போன்ற பிரச்சினைகளைப் பற்றி அரசுத் தரப்பிடம் அபூர்வமாகக் கூட எந்த ஒரு கேள்வியையும் கேட்டதில்லை என்பதைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். இது தொடர்பான எந்தவிதமான குறிப்போ, தீர் மானங்களோ எங்கும் காணப்படவில்லை.

**திரு. எம். அனந்தசயனம் அய்யங்கார்:** நீங்கள், இதை மாகாண வரம்புகளுக்குட்பட்ட விஷயங்கள் என்று சொல்லலாம்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ...ஒருசில முக்கிய மான செயல்கள், அந்த சமூகத்தினரின் முன்னேற்றத்திற்காக செய்யப் பட்டிருக்கலாம். ஒரே ஒருமுறை மட்டும், அதாவது 1932 அல்லது 1934 ஆம் ஆண்டிலோ, எதிர் வரிசையில் இருந்த மதிப்பிற்குரிய உறுப்பினர்கள், தீண்டாமையை அடியோடு ஒழிக்க வேண்டும் என்று தீவிரமாக முயற்சித்திருக்கிறார்கள் என்று நினைக்கிறேன். என் நினைவில், சரியாக எந்த.....

**மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர்:** 1933 ஆம் ஆண்டு.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ... ஆலயப் பிரவேச மசோதா கொண்டு வரப்பட்டு வைசிராய் அதற்கு அனுமதி வழங்க மறுத்தபோது, எப்படிப்பட்ட ஆர்ப்பாட்டம் நடந்திருக்கிறது! இந்த மசோதாவினைக் கொண்டு வர அனுமதி மறுக்கப்பட்டதால், மதிப் பிற்குரிய உறுப்பினர்கள் பலர் உண்ணாவிரதப் போராட்டங்களில் ஈடுபட்டதோடல்லாமல், தற்கொலை செய்து கொள்வோம் என்றும் மிரட்டல் விடுத்திருக்கிறார்கள். ஆனால் அனுமதி வழங்கப்பட்ட பின் நடந்தது என்ன? அந்த மசோதாவைக் கொண்டுவர ஆதரவு தந்த பெரிய மனிதர்களே, அதைத் தூக்கி எறிந்ததோடல்லாமல், அதை ஏற்க மறுத்துப் புறக்கணித்தார்கள். அந்த மசோதாவைக் கொண்டு வந்த திரு. ரங்க ஐயர் தனித்து விடப்பட்டார். அவர் தமக்கு

நம்பிக்கைத் துரோகம் செய்தவர்களை வெகுவாக சாடியிருக்கிறார். இரண்டு சந்தர்ப்பங்களில்தான் அந்தப் பிரச்சினை...

மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர்: நீங்கள் நடந்த விவாதங் களை முழுமையாக படிக்கவில்லை.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: எல்லா விவா தங்களையும் முழுமையாக படித்திருக்கிறேன். இரண்டே இரண்டு சந்தர்ப்பங்களில் மட்டும் தாழ்த்தப்பட்ட இன மக்களின் பிரச்சினை களைப் பற்றி விவாதித்திருக்கிறார்கள். தற்போது, இன்னொரு சபை யின் தலைவராக பணியாற்றும் திரு. மனக்ஜி தாதாபாய், 1916 ஆம் ஆண்டு, தாழ்த்தப்பட்ட இன மக்களின் பிரச்சினைகளைப் பற்றி ஆராய ஒரு குழு அமைக்க வேண்டும் என்ற தீர்மானத்தினை முன் மொழிந்தார்.

இந்த விவாதத்தினைத் தொடங்கிவைத்த மதிப்பிற்குரிய என் னுடைய நண்பர், அந்த தீர்மானத்தின் விவாதங்களை நுணுக்கமாக ஆராய்ந்து பார்த்தாரானால், அந்த தீர்மானத்தினை மிகக் கடுமை யாக எதிர்த்தவர் வேறு யாருமல்ல, அவருடைய தகப்பனார்தான் என்பது புரியும். இரண்டாவதாக, 1927 ஆம் ஆண்டு பிர்க்கென் ஹெட் பிரபு ஷெட்யூல்டு வகுப்பினரை, சிறுபான்மையினர் என்று கூறி, அரசியலமைப்புச் சட்டத்தின் மூலம் அவர்கள் பாதுகாக்கப்பட வேண்டியவர்கள் என்று கருத்துத் தெரிவித்துள்ளார். அரசியல் ரீதி யான பிரச்சினைகளைப் பற்றி பேசும்போது மட்டும்தான், நான் இருப்பதே, எதிர்கட்சி நண்பர்களுக்குத் தெரிகிறது. அதாவது: தனி வாக்காளர்கள் தொகுதிகள் வேண்டும், பணியிடங்களில் இட ஒதுக் கீடு வேண்டும், கல்வித் துறையில் மானியம் அளிக்கப்பட வேண்டும் என்பவை போன்ற விஷயங்களைப் பற்றி பிரச்சினை எழுப்பும் போது மட்டுமே நான் இருப்பது இவர்களுக்கு தெரிகிறது. இல்லை யென்றால், அவர்களைப் பொறுத்தவரை, நான் இறந்து போனவன்...

மதிப்பிற்குரிய ஓர் உறுப்பினர்: அப்படி ஒன்றும் இல்லை.

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: ....ஆக, எனக்கு சமூக மற்றும் அரசியல் உரிமைகள் மறுக்கப்படுகிறது. அதற்குக் காரணம், நான் ஓர் ''இந்து'' என்று அவர்கள் சொல்கிறார்கள். சமு தாயம் இந்த கண்ணோட்டத்தில் பார்க்குமானால், அவர்கள் சொல் வதுபோல், நான் அவர்களின் உடன்பிறந்த சகோதரனாக இருக்க

முடியாது... அவர்களின் ஒன்றுவிட்டச் சகோதரனாகத்தான் இருக்க முடியும்.

அடுத்து, இவர்களுக்கு உறுதியாக ஒன்றைச் சொல்லிக் கொள்ள ஆசைப்படுகிறேன். இவர்களது ஈகையால் நான் வாழ வேண்டிய அவசியம் இல்லை என்று திட்டவட்டமாக, எதிர் வரிசை நண்பர்களுக்கு தெரிவித்துக் கொள்கிறேன். நான் இந்த நாட்டின் குடிமகன். மற்ற எந்த ஒரு சமுதாயத்தினரும் தங்களின் முன்னேற்றத்திற்காகக் கோரிப் பெறுவது போல், இந்த அரசிடம், தேவையான எதையும் கோரிப் பெறும் உரிமை எனக்கும் உண்டு. யாருடைய தயவும் எனக்குத் தேவையில்லை. ஈகை என்று கூறும் சொல்லின் நோக்கமே, என்னையும், நான் சார்ந்திருக்கும் சமுதாயத்தினரையும் அடிமைப்படுத்த நினைப்பதும், நிலைகுலையச் செய்வதும் தான். தாழ்த்தப்பட்ட சமுதாய மக்கள் அவர்களின் உரிமைகளைப் பெற விரும்புகிறார்கள். இந்த வாய்ப்பினைப் பயன்படுத்திக் கொண்டு இந்த அவைக்கு நான் திட்டவட்டமாக தெரிவிக்க விரும்புவதெல்லாம் அவர்கள் கோரும் உரிமைகள் எதிர்க்கப்படுமானால் அவைகளைப் பெற அவர்கள் இரத்தம் சிந்தவும் தயங்க மாட்டார்கள் என்பதுதான்.



# 63

## [1]இந்திய அரசாங்க அச்சகத் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம், கல்கத்தா

*திரு. அவைத் தலைவர்:* பொதுஜன முக்கியத்துவம் வாய்ந்த ஓர் அவசரமான விஷயத்தைப் பற்றி விவாதிக்கும் பொருட்டு சட்ட மன்றத்தின் இதர நடவடிக்கைகளை ஒத்திவைக்கக் கோரும் பின் கண்ட தீர்மானத்தை ஸ்ரீ சத்தியப்பிரியா பானர்ஜி எனக்கு அனுப்பி யுள்ளார்:

> ''தங்களது குறைகளைத் தீர்ப்பதற்கு அரசாங்கம் தவறிவிட்ட காரணத் தினால் கல்கத்தாவில் இந்திய அரசுக்குச் சொந்தமான அச்சகங்களைச் சேர்ந்த தொழிலாளர்கள் வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டுள்ளனர்.''

மதிப்பிற்குரிய உறுப்பினர் இரண்டு அல்லது மூன்று தினங் களுக்கு முன்னர் இந்த விஷயம் குறித்து குறுகிய கால முன்னறி விப்பு கொண்ட கேள்வி ஒன்றை அனுப்பியிருந்தார், இதற்குப் பதி லளிக்க வேண்டும் என்றும் கோரியிருந்தார். ஆனால் குறுகிய கால முன்னறிவிப்பு கொண்ட இந்தக் கேள்வியை மாண்புமிகு தொழி லாளர் நலத்துறை உறுப்பினர் ஏற்க மறுத்து விட்டார். உண்மையில் அந்த நேரத்தில் வேலை நிறுத்தம் எதுவும் நடைபெற்றுக் கொண் டிருக்கவில்லை. இந்த ஒத்திவைப்புத் தீர்மானமோ வேலை நிறுத் தத்தைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறது. ஒருக்கால் எக்கணமும் நிகழக் கூடிய ஒரு வேலை நிறுத்தத்தைப் பற்றிய விஷயமாக அது இருக்கக் கூடும். இவ்வாறு அங்கு ஏதேனும் வேலை நிறுத்தம் நடைபெற்றுக் கொண்டிருக்கிறதா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்):* இந்த விஷயம் குறித்து எனக்கு எந்தத் தக வலும் இல்லை.

---

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, எண். 4, ஏப்ரல் 4, 1946, பக்கங்கள் 3522-24.

**ஸ்ரீ சத்யப் பிரியா பானர்ஜி:** (சிட்டஹாங் மற்றும் ராஜ்சாஹி பிராந்தியங்கள்: முகமதியர் அல்லாத கிராமப்பகுதி): அங்கு வேலை நிறுத்தம் நடைபெற்றுக் கொண்டிருப்பதாக எனக்குத் திட்டவட்ட மான தகவல் வந்திருக்கிறது; நேற்றைய ஃப்ரீ பிரஸ் ஜர்னல் பத்தி ரிகையிலும் இந்தச் செய்தி வெளியாகி இருந்தது.

**திரு. அவைத் தலைவர்:** அப்படியானால் இந்தத் தகவலுக்கு மூல ஆதாரம் ஃப்ரீ பிரஸ் ஜர்னல் பத்திரிகைதானா?

**ஸ்ரீசத்யப்பிரியா பானர்ஜி:** இது சம்பந்தமாக எதிர்க்கட்சித் தலைவருக்கும் ஒரு தந்தி வந்திருக்கிறது.

**திரு. தலைவர்:** வேலை நிறுத்தத்திற்கான காரணங்களைத் தெரிவிக்கும் நிலையில் மதிப்பிற்குரிய உறுப்பினர் இருக்கிறாரா? அச்சகத்துறை முழுவதுமே வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டிருக்கிறதா?

**ஸ்ரீ சத்யப்பிரியா பானர்ஜி:** ஆம், ஐயா, ஏறத்தாழ 1200 தொழி லாளர்கள் வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டிருக்கிறார்கள்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** அங்குள்ள நிலைமை இதுதான். கல்கத்தா அச்சகத்தைச் சேர்ந்த அச்சுத் தொழி லாளர்கள் மார்ச் 13 ஆம் தேதியன்று வேலை நிறுத்த அறிவிப்பைத் தந்தனர். இதர பல இடங்களில் இந்திய அரசாங்கத்துக்குச் சொந்த மாக உள்ள அச்சகங்களைச் சேர்ந்த தொழிலாளர்களும் வேலை நிறுத்த அறிவிப்பைத் தந்துள்ளனர். கல்கத்தா அச்சகத் தொழிலாளர் கள் 13 கோரிக்கைகள் அடங்கிய பட்டியல் ஒன்றைச் சமர்ப்பித் தனர்; இந்தக் கோரிக்கைகள் அனைத்தையும் அரசாங்கம் பரிசீலித்து, அச்சுத் தொழிலாளர்களுக்குப் பின்கண்ட சலுகைகளை வழங்கி யுள்ளது: அச்சகம் மூடப்படும் அரசு விடுமுறை நாட்களில் வேலைக்கு வருபவர்களுக்கு ஈட்டு விடுப்பு வழங்கப்படும்; தினக்கூலி தொழி லாளர்கள் போதிய திறன் வரம்புக்கு மேம்பட்ட பிரிவுகளுக்குப் பதவி உயர்வு பெறுவது விரைவுபடுத்தப்படும்; அதிகரிக்கப்பட்ட அகவிலைப்படி விகிதங்கள் 1945 ஜனவரி 1 ஆம் தேதிக்குப் பதில் 1944 ஜூலை 1 ஆம் தேதி முதல் கணக்கிட்டுத் தரப்படும்; ஓய்வூதி யத்தை நிர்ணயிக்கும்போது அகவிலைப்படியில் பாதி சம்பளமாகக் கணக்கிடப்படும்; கீழ்மட்டத்திலுள்ள தொழிலாளர்கள் சராசரி சம்ப ளத்தில் பாதிவரை ஓய்வூதியமாகப் பெறுவார்கள்; முழு வேலை நிறுத்த காலமும் சராசரி ஊதியத்துடன் கூடிய விடுப்பாகக் கருதப்

படும்; அதேசமயம் நிச்சயமற்ற சந்தர்ப்பங்களில் வேலை நிறுத்த காலம் விடுப்பு கணக்கிலிருந்து கழித்துக் கொள்ளப்படும்; அச்சுத் தொழிலாளர்களின் சம்பள விகிதங்களிலும் வேலை நிலைமை களிலும் நிலவும் முறைகேடுகளைக் கண்டறிந்து அறிக்கை சமர்ப் பிப்பதற்கு ஒரு தனி அதிகாரி நியமிக்கப்படுவார்; பகல் நேரப் பணி களுக்கான வேலை நேரம் 44 மணியிலிருந்து 40 மணியாகவும், இரவு நேரப் பணிகளுக்கான வேலை நேரம் 44 மணியிலிருந்து 38 மணியாகவும் குறைக்கப்படும்; நிரந்தர ஊதியம் பெறுபவர்களைப் போன்றே கூலித் தொழிலாளர்களுக்கும் ஊதியத்துடன் 23 நாள் விடுமுறை அளிக்கப்படும்.

சம்பள விகிதங்களை மாற்றியமைத்தல் உதவித் தொகை களை அதிகரித்தல் போன்ற இதர கோரிக்கைகளைப் பொறுத்தவரை சம்பளக் கமிஷன் அறிக்கை வரும்வரை காத்திருக்க வேண்டும் என்றும், எனவே, இந்தக் கோரிக்கைகள் குறித்து தற்போது எத் தகைய அறிவிப்பையும் வெளியிடும் நிலையில் அரசாங்கம் இல்லை என்றும் அரசுக்குச் சொந்தமான அச்சகங்களில் பணியாற்றும் அனைத்துத் தொழிலாளர்களுக்கும் அரசாங்கம் தெரிவித்து விட்டது.

டில்லி அச்சக ஊழியர்களின் வேலை நிறுத்தத்தைப் பொறுத்த வரையில் அவர்கள் இந்த சலுகைகள் அனைத்தையும் ஏற்றுக் கொண்டு வேலைக்குத் திரும்பி விட்டார்கள் என்பதை அவைக்குத் தெரிவித்துக் கொள்கிறேன். கல்கத்தா அச்சகங்களில் பணிபுரியும் அச்சுத் தொழிலாளர்களும் இதே உதாரணத்தை ஏன் பின்பற்றக் கூடாது என்பதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. வேலை நேரத்தை 44 மணியிலிருந்து 40 மணியாக குறைக்க வேண்டும் என்ற கோரிக்கையை அவர்கள் உடனடியாக வலியுறுத்துகிறார்கள் என்று அலுவலகத்திலிருந்து சற்று முன்னர்தான் எனக்குத் தகவல் வந்தது. எனினும் இதுகுறித்து உடனடியாக என்னால் எதுவும் திட்டவட்ட மாகக் கூற இயலாது. ஆயினும் இந்த விஷயத்தைப் பரிசீலிக்க நான் தயாராக இருக்கிறேன். இவ்வாறிருக்கும்போது ஒத்திவைப்புத் தீர் மானத்தின் அடிப்படையில் இந்த விஷயத்தை விவாதிப்பதில் பய னேதும் இருக்கும் என்று நான் நினைக்கவில்லை.

**ஸ்ரீசத்யப்பிரியா பானர்ஜி:** ஐயா, மாண்புமிகு உறுப்பினரது துறையைச் சேர்ந்த பிராந்திய ஆணையர் 48 மணி வேலை நேரத்தைப் பரிந்துரைத்தார் என்றும், அந்தப் பரிந்துரையை மாண்புமிகு உறுப் பினர் ஏற்றுக் கொள்ளாமல், 44 மணி நேரத்தை வலியுறுத்தினார்

என்றும் கூறப்படுகிறது. மேலும், ஐயா, வங்க அரசின் அச்சுத் துறைத் தொழிலாளர்கள் வாரத்திற்கு 40 மணி நேரமே வேலை செய் கின்றனர் என்பதையும் தங்கள் கவனத்திற்குக் கொண்டுவர விரும்பு கிறேன்.

*திரு. தலைவர்:* இது ஏதோ குறுக்கு விசாரணை செய்வது போல் இருக்கிறது. மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப் பினர் பதில் அளித்துள்ள நிலைமையில் இது எந்த அளவுக்கு அவசர மானதும் பொதுஜன முக்கியத்துவம் வாய்ந்ததும் என்பதை அறிய விரும்புகிறேன்.

*ஸ்ரீசத்யப்பிரியா பானர்ஜி:* ஐயா, எண்ணற்ற தொழிலாளர் கள் இந்த வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டுள்ளனர். ஏராளமான தொழி லாளர்களதும் அவர்களுடைய குடும்பத்தினரதும் வாழ்க்கை பெரிதும் பாதிக்கப்பட்டுள்ளது; அவர்கள் பசி பட்டினியால் வாடி வதங்கி வருகின்றனர். ஐயா, இது அவசரமானதும் பொதுஜன முக்கியத் துவம் வாய்ந்ததும் அல்ல என்றால் வேறு எதைத்தான் அவசரமான தும் பொதுஜன முக்கியத்துவமுடையதாகக் கருதுவது என்று எனக்குத் தெரியவில்லை.

*பேராசிரியர் என்.ஜி. ரங்கா (குண்டூர் மற்றும் நெல்லூர்: முகமதியரல்லாத கிராமப் பகுதி):* ஐயா, நான் ஒன்று கூற விரும்பு கிறேன். தொழிலாளர் நலத்துறையைச் சேர்ந்த ஒரு தனி அதிகாரி யைத் தொழிலாளர்களிடம் அனுப்பி, தொழிலாளர் நலத்துறை அறிவித்துள்ள சலுகைகளை அவர்களுக்கு எடுத்துக்கூறி, அவர்களைச் சமாதானப்படுத்தினால் இந்த வேலை நிறுத்தம் தொடர்ந்து நடப் பதைத் தடுக்க முடியும் என்று கருதுகிறேன். அரசாங்கக் கண்ணோட் டத்திலிருந்து பார்த்தால்கூட 1300 தொழிலாளர்கள் வேலை நிறுத் தத்தில் ஈடுபட்டு மொத்த அச்சகப் பணியும் தடைப்பட்டிருப்பது மிகுந்த கவலை அளிக்கக் கூடியது என்பதில் ஐயமில்லை.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* தொழிலாளர் களுடன் தொடர்பு கொண்டு மேற்கொண்டு என்ன செய்யலாம் என்பதைப் பரிசீலிக்கும்படி கல்கத்தாவிலுள்ள பிராந்திய தொழி லாளர் நல ஆணையருக்கு தொழிலாளர் நலத் துறை பணித்திருப்ப தாக அறிகிறேன்.

சேத் கோவிந்த தாஸ் (மத்திய மாகாணங்கள் இந்தி பேசும் பகுதிகள், முகமதியரல்லாதவர்): வேலை நிறுத்தம் குறித்து பல்வேறு அச்சகங்களிலிருந்து அறிவிப்பு வந்திருப்பதாக மாண்புமிகு உறுப்பினர் கூறினார். கல்கத்தா தவிர வேறு எந்த இடத்திலாவது வேலை நிறுத்தமோ அல்லது வேலைநிறுத்த அபாயமோ இருந்து வருகிறதா?

திரு. தலைவர்: இப்போதைய விஷயத்துக்கு இது சம்பந்தமுடையது என்று நான் கருதவில்லை. தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் கூறியுள்ள விவரங்களின் கண்ணோட்டத்தில் பார்க்கும்போது ஒத்திவைப்புத் தீர்மானத்தை ஏற்குமளவுக்கு இந்த விஷயம் அத்தனை முக்கியத்துவமுடையது என்று நான் நினைக்கவில்லை.



# 64

## [1]தொழிற்சாலைகள் (திருத்த) மசோதா

**திரு. தலைவர்:** தொழிற்சாலைகள் மசோதாவை அவை இப்போது பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளும்.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்த விஷயம் குறித்து நான் பேசலாம் என்று நினைக்கிறேன். இது பற்றிப் பேசும் படி மாண்புமிகு என்னுடைய சகாக்களும் என்னைக் கேட்டுக் கொண் டுள்ளனர். இதற்கு நான் முற்றிலும் தகுதியுடையவன் என்றே கருது கிறேன். ஏனென்றால் மொத்தத்தில் இந்திய அரசாங்கத்தின் சார்பில் பேசுவதற்கு அரசு உறுப்பினர் ஒவ்வொருவருக்கும் உரிமை இருக் கிறது.

**திவான் சமன்வால்:** (மேற்கு பஞ்சாப், முகமதியர் அல்லா தவர்): ஐயா, நான் பின்னால் பேசுவதற்கு மாண்புமிகு உறுப்பினர் ஒப்புக்கொள்ளவில்லை என்றால் இவ்விஷயம் குறித்து இப்போது சிறிது பேச விரும்புகிறேன்.

**திரு. அவைத் தலைவர்:** பொது விவாதத்திற்கு மாண்புமிகு உறுப்பினர் பதிலளித்த பிறகு, அவர் ஏற்றுக் கொண்டால் கூட இதற்கு அவை விதிகளின்படி அனுமதி அளிக்க முடியும் என்று நான் நினைக்கவில்லை.

**மாண்புமிகு தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்:** இது குறித்து ஏற்கெனவே எவ்வளவோ கூறப்பட்டு விட்டதால் மேற் கொண்டு பேசுவதற்கு அவசியம் ஏதுமில்லை.

திரு. தலைவர் அவர்களே, இதுவரை நடைபெற்று வந்துள்ள விவாதத்திற்குப் பிறகு உண்மையில் நான் அதிகம் பேச வேண்டிய தில்லை. ஏனென்றால் இம்மசோதாவிற்கு எதிராக ஒரு தரப்பினர்

---

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, எண். 4, ஏப்ரல் 4, 1946, பக்கங்கள் 3522-26.

கூறியதற்கு மற்றொரு தரப்பினர் தக்க முறையில் பதிலளித்துள்ளனர். ஆகவே, இந்நிலைமையில், ஏற்கெனவே கூறப்பட்டதற்கும் அதிகமாக இக்கட்டத்தில் நான் கூறுவதற்கு எதுவுமில்லை. நான் ஏதேனும் கூற வேண்டுமென்றால் எனது மதிப்பிற்குரிய நண்பர் திரு. வதிலால் லல்லுபாய் தெரிவித்துள்ள கருத்துகளுக்குப் பதிலளிக்கும் முறையிலேயே அது இருக்கும். அவர் பேசியதை நான் செவிமடுத்துக் கேட்டேன். இந்த மசோதா சம்பந்தமாக அவரது குற்றச்சாட்டு என்ன என்பதை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. இன்று கடுமையான துணிப் பஞ்சம் நிலவி வருவதை நானும் ஏனைய அனைவரும் முற்றிலும் உணர்ந்துள்ளோம். வேலை நேரம் சம்பந்தப்பட்ட விதிகளைப் பாதிக்கக்கூடிய விதத்தில் தொழிற்சாலைகள் சட்டத்தைத் திருத்த முற்படும்போது, அதன் காரணமாக ஜவுளி நிலைமை மேலும் மோசமாகாதபடி நாம் கவனமாகப் பார்த்துக் கொள்ள வேண்டும். என்னுடைய நண்பரின் விமர்சனத்துக்கு நான் அளிக்கும் பதில் இதுதான்: துணிப் பஞ்சத்தால் ஏற்பட்டுள்ள நிலைமையைப் பரிசீலிப்பதோடு மட்டும் நாங்கள் நின்றுவிடவில்லை; மாறாக இதர நுகர்பொருள்கள் பற்றாக்குறையால் எழக்கூடிய நிலைமையையும் பரிசீலனை செய்தோம். மேலும், பருத்தித் தொழில் துறைக்கு நிவாரணம் அளிக்கக்கூடிய ஓர் சட்டத் திருத்தத்தை நாங்கள் கொண்டு வந்திருப்பது மட்டுமன்றி, பயனீட்டுப் பண்டங்களை உற்பத்தி செய்யும் ஏனைய தொழில்களுக்கு நிவாரணம் அளிக்கும் வகையிலும் அந்தத் திருத்த வாசகத்தை விரிவுப்படுத்தியுள்ளோம்.

அவர் மேலும் இரண்டு கருத்துகளைத் தெரிவித்தார். அவரது உரையின் வாசகம் என்னிடம் உள்ளது. அவர் எழுப்பிய இரண்டு விஷயங்களுக்கும் என்னிடமிருந்து பதில் பெறுவதற்கு அவருக்கு உரிமை உண்டு. இந்த விதிவிலக்கை இந்த சட்டத்திலேயே இந்திய அரசாங்கம் அளித்திருக்க வேண்டும், மாகாண அரசாங்கத்தின் உசிதமான முடிவுக்கு விட்டிருக்கக் கூடாது என்று அவர் வாதிட்டார். இந்த விமர்சனத்திற்கு எனது பதில் இருவகைப்பட்டது: முதலாவதாக, விதிவிலக்கு அளிப்பது என்பது தற்போது நடப்பிலுள்ள அரசியல் சட்டத்தின்படி நிர்வாக அதிகாரத்துக்கு உட்பட்டதாகக் கருதப்படுகிறது என்பதை மதிப்பிற்குரிய என் நண்பர் அறிவார். தொழிலாளர் நலத்துறை மத்திய அரசாங்கம், மாகாண அரசாங்கம் ஆகிய இரண்டுக்கும் பொதுவானதாகும். இதன் காரணமாக தொழிலாளர்கள் சம்பந்தப்பட்ட ஒரு சட்டத்தை இயற்றுவதற்கு மத்திய

*அரசாங்கம் அதிகாரம் பெற்றிருக்கிறது. ஆனால் அந்த சட்டத்தை நடைமுறைக்குக் கொண்டு வரும் அதிகாரத்தை அது பெற்றிருக்க வில்லை. இது சம்பந்தமான எல்லா அதிகாரமும் மாகாண அரசாங் கத்தின் கைகளிலேயே இருக்கிறது. எனவே, விதிவிலக்கை இந்த சட்டத்திலேயே நாங்கள் வழங்காததற்கு அது மத்திய சட்டமன்றத்தின் அதிகாரத்துக்கு அப்பாற்பட்டதாக இருப்பதே காரணம். அவரது கோரிக்கையை நாங்கள் நிறைவேற்ற இயலாதிருப்பதற்கு இரண் டாவது ஓர் இடர்ப்பாடும் இருக்கிறது. அது இதுதான்: இதுபோன்ற விதிவிலக்கைப் பெறுவதற்கு தகுதிபெற்ற இதர தொழில்களின் பட்டியலை இந்தச் சட்டத்தில் இடம்பெறச் செய்யாமல் பஞ்சாலைத் தொழில் போன்ற ஒரு குறிப்பிட்ட தொழிலுக்கு மட்டும் விதிவிலக்கு அளிப்பதற்கு சட்டத்தில் வகை செய்வது என்பது இந்திய அரசாங் கத்தால் இயலாத காரியமாகும். அதேபோல் இதர தொழில்களின் தேவைகளை தொழிலாளர் நலத்துறையிலுள்ள எவரும் முன்கூட் டியே உணர்ந்து இத்தகைய விதிவிலக்குகளை அளிப்பதற்கு ஏற்பாடு செய்வதும் சாத்தியமல்ல. இத்தகைய விதிவிலக்கை அளிக்க மாகாண அரசாங்கங்களுக்கு அதிகாரம் இருந்தாலும் இதை அந்த அரசாங் கங்கள் செய்ய மாட்டா என்ற தமது அச்சத்தையும் மதிப்பிற்குரிய என்னுடைய நண்பர் வெளியிட்டார். இப்படிப்பட்ட விதிவிலக்கு களை மாகாண அரசாங்கங்கள் அளித்தால் அந்தந்த மாகாணங் களிலுள்ள தொழிலாளர்கள் பலவகைகளிலும் இடையூறு செய் வார்கள் என்றும் அவர் கூறினார். என்னுடைய நண்பர் கொண் டுள்ள இத்தகைய அச்சத்துக்கு ஆதாரம் இருப்பதாக நான் நினைக்க வில்லை; இந்தக் கருத்து எனக்கு உடன்பாடும் இல்லை. ஏனென் றால், விதிவிலக்குகள் வழங்குவதற்கு எதிராக தொழிலாளர்கள் தரப்பில் முன்வைக்கப்படும் வாதங்களை மாகாண அரசாங்கங்கள் உரிய முறையில் கணக்கிலெடுத்துக் கொள்ளும், ஆனால் அதே சமயம் மக்களின் அவசரத் தேவைகளையும் பொது நலன்களையும் கருத் திற் கொண்டு அப்போதைய சந்தர்ப்ப சூழ்நிலைகளுக்கு ஏற்புடைய நடவடிக்கைகளை அவை எடுத்துக் கொள்ளும் என்பதில் எனக்கு எள்ளளவும் ஐயமில்லை. எனவே, என்னுடைய நண்பர் எழுப்பிய முதல் விஷயத்தைப் பொறுத்தவரையில் அதனை என்னால் ஏற்க முடியும் என்று நான் நினைக்கவில்லை; ஏனென்றால் அவ்வாறு செய்ய சட்டம் என்னை அனுமதிக்காது. இரண்டாவதாக, பொதுவாக மக்களின் நலன்களுக்கு உகந்தவற்றை மாகாண அரசாங்கங்கள் செய்யும் என்று அவற்றின் மீது நாம் ஏன் நம்பிக்கை வைக்கக் கூடாது என்று எனக்குப் புரியவில்லை.*

இது விஷயத்தில் பொறுப்பேற்க தொழில் துறையும், சிவில் சப்ளை துறையும் முன்வருமா என்பது அவர் எழுப்பிய இரண்டாவது பிரச்சினை. இந்தப் பிரச்சினையை அவர் எழுப்பி இருக்கக் கூடாது என்பதே என் கருத்து. ஏனென்றால் இந்திய அரசாங்கம் எவ்வாறு செயல்படுகிறது என்பதை அவர் கருத்தில் கொண்டிருந்தால், தொழில் மற்றும் சிவில் சப்ளைத் துறையின் உறுப்பினர் அங்கம் வகிக்கும் நிர்வாகக் கவுன்சிலின் முன் அனுமதியின்றி எந்த ஒரு விஷயமும் இந்த அவையின் பரிசீலனைக்கு வராது என்பதையும், இந்த விஷயத்தில் தொழில் மற்றும் சிவில் சப்ளைத் துறை வலியுறுத்திய கருத்துகளை தொழிலாளர் நலத்துறை எவ்விதம் உரிய முறையில் கணக்கிலெடுத்துக் கொண்டது என்பதையும், அவர்களது தூண்டுதலின் பேரில்தான் விதி 5 இந்த மசோதாவில் சேர்க்கப்பட்டிருக்கிறது என்பதையும் அவர் தெரிந்து கொண்டிருப்பார். தொழிலாளர்களின் வேலை நேரத்தைக் கட்டுப்படுத்துவது சம்பந்தமான பொதுவிதிகள் அத்தியாவசியமானவை, தவிர்க்க முடியாதவை என்றாலும் சில பொருள்கள் விஷயத்தில் இந்த நாடு எதிர்நோக்கும் சந்தர்ப்ப சூழ்நிலைமைகளையும் மனத்திற் கொள்வது அவசியம் என்று அவர்கள் கருதினர்; இதனடிப்படையில் அவர்கள் தெரிவித்த திட்டவட்டமான யோசனைகளின் பேரில்தான் இந்த விதி அறிமுகப் படுத்தப்பட்டது. ஆக, இது விஷயத்தில் தொழில் மற்றும் சிவில் சப்ளை துறை எவ்வகையிலும் புறக்கணிக்கப்படவில்லை, மாறாக அவர்களது முழு ஆதரவையும் இந்த மசோதா பெற்றிருக்கிறது என்பதை அறிய மதிப்பிற்குரிய என் நண்பர் மகிழ்ச்சி அடைவார் என்று நம்புகிறேன். ஐயா, இப்போது இந்தத் தீர்மானத்தை முன் மொழிகிறேன்.

**திரு. தலைவர்:** தீர்மானம் வருமாறு:

''1934 ஆம் வருடத் தொழிற்சாலைகள் சட்டத்தை தெரிவுக் குழு பரிந்துரைத்தபடி மேலும் திருத்துவதற்கான இந்த மசோதாவை பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ள வேண்டும்.''

தீர்மானம் ஏற்கப்பட்டது.

**திரு. தலைவர்:** விதி 2ஐ முதலிலும் விதி 1ஐ இறுதியிலும் எடுத்துக் கொள்கிறேன். திருவாளர்கள் வதிலால் லல்லுபாயும் ராமலிங்கம் செட்டியாரும் விதி 2-க்கு ஒரு திருத்தத்தை முன்மொழிந் துள்ளனர்.

**திரு. வதிலால் லல்லுபாய்:** நான் ஒரு கருத்தைக் கூற விரும்பு கிறேன். விதிவிலக்குகள் அளிப்பதற்கு சட்டத்தில் இடமில்லை என்று டாக்டர் அம்பேத்கர் கூறுகிறார். ஆனால் நாங்கள் தந்துள்ள திருத்தம் ஏற்கப்பட்டால் விதிவிலக்குகள் சட்டப்படி செல்லுபடி யாகும் சாத்தியக்கூறு இருக்கிறது. விதி 2-க்கு நான் தந்துள்ள திருத்தம் சட்டப்படி செல்லுபடியாகுமா என்பதை அறிய விரும்புகிறேன்.

**திரு. தலைவர்:** மதிப்பிற்குரிய நண்பர் என்ன சொல்லுகிறார் என்று எனக்குப் புரியவில்லை.

**திரு. வதிலால் லல்லுபாய்:** விதிவிலக்குகளுக்கு சட்டத் தில் இடமில்லை என்று மாண்புமிகு உறுப்பினர் கூறினார். விதி 2-க்கு நான் தந்துள்ள திருத்தத்தை அவர் படித்தாரேயானால் சட்ட ரீதியாக இதற்குத் தடை ஏதும் இல்லை என்பதைக் காண்பார். சட்ட ரீதியான தடை இருப்பதால்தான் அவர் என் திருத்தத்தை எதிர்க் கிறாரா அல்லது வேறு ஏதேனும் காரணங்களுக்காக எதிர்க்கிறாரா என்பதை அறிய விரும்புகிறேன்.

**திரு. தலைவர்:** உள்ள நிலைமையை தமது உரையில் மாண்புமிகு உறுப்பினர் போதிய அளவு தெளிவாக விளக்கி விட்டார். இது விஷயத்தில் மேற்கொண்டு ஐயத்துக்கு இடமிருக்கும் என்று நான் கருதவில்லை. சட்டம் ஒரு தடையாக இருக்கிறது என்று அவர் வாதிட்டார். இன்னொரு வாதத்தையும் அவர் முன்வைத்தார். அதாவது என்ன செய்ய வேண்டுமோ அதை அரசாங்கம் செய்யும் என்று தாம் நம்புவதாகக் கூறினார். நான் கூறுவது சரிதானே?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆம், சரிதான்.

★ ★ ★

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இந்தத் திருத் தத்தை நான் எதிர்க்க வேண்டியிருப்பதற்காக வருந்துகிறேன். இதில் இரண்டு ஆட்சேபங்களை நான் காண்கிறேன். முதலாவது ஆட் சேபம் பொதுப்படையானது. ஒரு குறிப்பிட்ட தொழில் துறையைச் சேர்ந்த முதலாளிகள் தங்கள் தொழிற்சாலைகளில் தொழிலாளர் களை வேலைக்கமர்த்துவதற்கு ஒரு குறிப்பிட்ட திட்டத்தை வகுத் திருப்பார்களேயானால் அப்போது அன்றைய நடைமுறைக்கு ஏற்ற வகையில் சட்டம் வகுக்கப்பட வேண்டும் என்று இந்தத் திருத்தத்தைக்

கொண்டு வந்திருக்கும் மதிப்பிற்குரிய உறுப்பினர் கருதுவதாகத் தோன்றுகிறது. இத்தகைய ஒரு நிலைப்பாட்டை நான் ஏற்றுக் கொள்ளத் தயாராக இல்லை. பல முதலாளிகள் பிரதானமாக தங்களுக்குச் சாதகமான வழிமுறைகளைப் பின்பற்றக்கூடும். இந் நிலைமையில், நடைமுறைக்குகந்த முறையில் சட்டங்கள் இயற்றப் பட வேண்டும் என்று அவர்கள் கூறுவதையோ அல்லது நடை முறை மோசமாக இருந்தாலும் சட்டம் அதனை மாற்றக்கூடாது என்று அவர்கள் கோருவதையோ அரசு ஏற்கக் கடமைப்பட்டிருக்க வில்லை. இந்தத் திருத்தத்தை நான் ஏற்றுக் கொள்ள இயலாமல் இருப்பதற்கு நான் முன்வைக்கும் முதல் வாதம் இது.

இந்தத் திருத்தத்திற்கு எதிராக நான் முன்வைக்கும் இரண்டாவது வாதம் இந்த விஷயத்தை ஆழமாக, நேரடியாக, சுற்றி வளைக்காமல் பரிசீலிப்பதிலிருந்து தோன்றுகிறது. மதிப்பிற்குரிய என்னுடைய நண்பரை நான் சரியாகப் புரிந்து கொண்டிருந்தால், அவர் தம்முடைய தொழிலாளர்களை எந்த முறையில் பயன்படுத்திக் கொள்வார் என்பதை இரத்தினச் சுருக்கமாகக் கூறமுடியும். அவர் தம்முடைய தொழிலாளர்களை இரண்டு பிரிவுகளாகப் பிரிப்பார். இவர்களில் ஒரு பிரிவினரை 'ஏ' பிரிவினர் என்றும், இன்னொரு பிரிவினரை 'பி' பிரிவினர் என்றும் வைத்துக் கொள்வோம். இனி அவர்களை எந்த முறையில் வேலை வாங்குவார் என்று பார்ப்போம்: 'ஏ' பிரிவினர் காலை 8 மணிக்கு வேலை செய்யத் தொடங்கி பிற்பகல் 4 மணிக்கு வேலையை முடிப்பர். பின்னர் 'பி' பிரிவினர் பிற்பகல் 4 மணிக்கு வேலை செய்ய ஆரம்பிப்பர். 'ஏ' பிரிவினர் அவர்களை இரவு 8 மணிக்கு விடுவித்து, மீண்டும் வேலையில் ஈடுபடுவர். அடுத்து இரவு 8 மணிக்கு 'பி' பிரிவினர் அவர்கள் இடத்துக்கு வந்து நள்ளிரவு 12 மணி வரை வேலை செய்வர். நான் அவரை சரியாகப் புரிந்து கொண்டிருந்தால் இவ்வாறுதான் அவர் தம்முடைய தொழிலாளர்களிடம் வேலை வாங்குவார்...

*சர் டி.ஏ. ராமலிங்கம் செட்டியார்:* மிகச் சரியாகச் சொன்னீர்கள்.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இந்த ஏற்பாடு நேர ஏற்பமைவாக்கக் கோட்பாட்டுக்கு அடிப்படையிலேயே முரணானதாக இருப்பதாக எனக்குத் தோன்றுகிறது. இந்தக் கோட்பாடு

என்ன கூறுகிறது? சட்டப்படி நிர்ணயிக்கப்பட்டுள்ள வேலை நேரத்திற்கு அதிகமாக எந்தத் தொழிலாளியும் தொழிற்சாலை வளாகத்தில் தங்கியிருக்கும்படி நிர்ப்பந்திக்கக் கூடாது என்று இந்தக் கோட்பாடு கூறுகிறது. ஒருநாளில் வேலைநேரம் 9 மணியாக இருக்க வேண்டும் என்று இந்த மசோதாவில் நாங்கள் நிர்ணயித்திருக்கிறோம். இவ்வாறிருக்கும்போது இந்தத் திருத்தம் ஏற்றுக்கொள்ளப் படுமானால், தொழிலாளி கூடுதலாக மூன்று மணி நேரம் தொழிற்சாலையில் தங்க வேண்டியிருக்கும். நேர ஏற்பமைவாக்கக் கோட்பாட்டுக்கு இது இசைந்ததல்ல என்பதைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். தொழிற்சாலை என்பது ஒரு பூங்காவல்ல; அதிலும் ஒரு தொழிற்சாலை பெற்றிருக்க வேண்டிய அனைத்து வசதிகளையும் இன்றைய தொழிற்சாலை பெற்றிருக்கவில்லை. இத்தகைய நிலைமையில் ஒரு தொழிலாளி கூடிய மட்டும் எவ்வளவு விரைவில் தொழிற்சாலையிலிருந்து கிளம்பி வீடுபோய்ச் சேர முடியுமோ அவ்வளவுக்கு மிகவும் விரும்பத்தக்கது. அங்கு அவன் சுத்தமான காற்றைச் சுவாசிக்க முடியும்; முடிந்தளவு வசதிகளை அனுபவிக்க முடியும்; சட்டம் அனுமதிக்கும் ஓய்வு நேரத்தை மிகச் சிறந்த முறையில் பயன்படுத்திக் கொள்ள முடியும். எனவே, இந்தக் காரணங்களை எல்லாம் கருத்தில் கொண்டு பார்க்கும்போது, இந்தத் திருத்தம் ஒரு சரியான, சிறந்த திருத்தம் அல்ல என்று கருதுகிறேன். ஆதலால் இதனை ஏற்றுக் கொள்ளத் தயாராக இல்லை.

★ ★ ★

[1]மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்: இந்தத் தீர்மானத்தை ஏற்கச் செய்வதில் என்னுடன் ஒத்துழைத்த அவை உறுப்பினர்களுக்கும் தெரிவுக்குழு உறுப்பினர்களுக்கும் எனது நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்வதைத் தவிர இந்தக் கட்டத்தில் வேறு எதுவும் கூறத் தேவையில்லை என்றே நினைக்கிறேன். இந்தத் தீர்மானத்தின் மீது பேசிய பலர் அநேக யோசனைகளைக் கூறினர்; இதுபற்றி நான் கூறக்கூடியதெல்லாம் எந்த அரசாங்கம் அதிகாரத்தில் இருந்தாலும் இந்த யோசனைகளை மனத்திற் கொள்வது அவசியம் என்பதில் ஐயமில்லை என்பதேயாகும். மதிப்பிற்குரிய என்னுடைய நண்பர் திவான் சமன்லால் குறிப்பிட்டது போன்று, தொழிற்சாலைக் கமிஷன் அறிக்கை வெளியிடப்பட்டது போன்ற காலத்தில் நாம் இப்போது வாழவில்லை. உலகம் முன்னேறிவிட்டது. தற்

காலத்திய நாடுகள் போன்றே நாமும் நமது தொழில்துறை உறவு களுக்கு ஆதார அடிப்படையாக அமையும் தார்மிக நெறிகளை மதித்துப் போற்றுவோம் என்பதைக் காட்ட வேண்டும். உறுப்பினர் கள் கூறிய யோசனைகளை மனத்தில் இருத்துவோம் என்பதிலும், அவற்றைச் செயல்படுத்துவோம் என்பதிலும் எனக்கு எத்தகைய ஐயமும் இல்லை.

ஐயா, என்பால் காட்டிய அன்புக்கும் மரியாதைக்கும் அவைக்கு நான் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன்.

**திரு. தலைவர்:** தீர்மானம் வருமாறு:

"திருத்தத்தோடு மசோதா ஏற்கப்பட வேண்டும்".

தீர்மானம் நிறைவேறியது.



# 65

## [1]மைக்கா சுரங்கத் தொழிலாளர் சேமநலநிதி மசோதா

மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): ஐயா, பின்கண்ட தீர்மானத்தை முன்மொழி கிறேன்:

> ''மைக்கா சுரங்கத் தொழிலில் பணியிலமர்த்தப்பட்டிருக்கும் தொழி லாளர்களின் சேம நலனை மேம்படுத்தும் நட வடிக்கைகளுக்குப் பணம் கொடுத்து உதவும் ஒரு நிதியை அமைக்க வகை செய்யும் இந்த மசோதா பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்பட வேண்டும்.''

இந்த மசோதாவின் முக்கியமான வாசகம் விதி 3-இல் அடங்கியுள்ளது; மைக்கா சுரங்கத் தொழிலில் பணியிலீடுபடுத்தப் பட்டிருக்கும் தொழிலாளர்களின் சேமநலனை மேம்படுத்தும் பொருட்டு மைக்கா ஏற்றுமதி மீது ஒரு வரி விதிக்க உத்தேசிக்கப் பட்டிருக்கிறது. இந்த நிதி எத்தகைய சேமநல நடவடிக்கைகளை மேற்கொள்ளும் என்பது மசோதாவின் விதி 2-இல் விவரிக்கப்பட் டுள்ளது. இந்த விதிகளை எல்லாம் ஒன்றன்பின் ஒன்றாகக் கூறி அவற்றை அவையில் படிக்க வேண்டிய அவசியமில்லை என்று கருதுகிறேன். நான் மேலே செல்லுவதற்கு முன்னர் விதி 3-இல் குறிப்பிடப்பட்டிருப்பது போன்ற ஒரு நிதியைத் தொடங்குவது அவசியம் என்று இந்திய அரசாங்கம் ஏன் தீர்மானித்தது என்பதை அவைக்கு விளக்க விரும்புகிறேன். இவ்வகையில், மைக்கா சுரங்கத் தொழிலிலும், மைக்கா தயாரிப்புத் தொழிலிலும் ஈடுபடுத்தப்பட் டிருக்கும் தொழிலாளர்களின் நிலைமை குறித்த அறிக்கைகளிலிருந்து சில பகுதிகளை இங்கு படித்துக் காட்டினால் போதும் என்று நினைக் கிறேன். இந்த அறிக்கை பேராசிரியர் அதர்காரால் தயாரிக்கப்பட்ட தாகும். முத்தரப்பு தொழிலாளர் மாநாடு நியமித்த உண்மை நிலை

---

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, எண். 7, ஏப்ரல் 9, 1946, பக்கங்கள் 3745-47.

அறியும் குழுவில் ஓர் உறுப்பினர் இவர். ஐயா, உங்கள் அனுமதி யோடு இந்த அறிக்கையிலிருந்து ஒரு சில பகுதிகளைப் படித்துக் காட்டலாம் என்றிருக்கிறேன்.

இந்த அறிக்கையின் 27 ஆவது பக்கத்தில் பேராசிரியர் அதர்கார் கூறுவதாவது:

''எந்தச் சுரங்கத்திலும் சிறுநீர் கழிப்பிடம் அல்லது மலசலக் கழிப்பிடம் போன்ற வசதிகள் செய்து தரப்பட்டிருப் பதை நாங்கள் காணவில்லை. இவ்வாறு சுரங்கங்கள் சட்டம் மீறப்பட்டு வருகிறது. 500 அடிக்குக் கீழே தொழிலாளர்கள் பணியாற்றிக் கொண்டிருக்கும்போது இயற்கை உபாதைக்கு உள்ளாக நேர்ந்தால் அவர்கள் பாவம் என்ன செய்வார்கள்! நல்ல குடிநீருக்கு ஏற்பாடு செய்யப்படாதிருப்பது மைக்கா சுரங்கத் தொழிலில் நிலவும் மிகக் கொடிய சீர்கேடாகும். தொழிலாளர்களுக்கு வழங்கப்படும் தண்ணீரில் தீங்கு விளை விக்கக்கூடிய தாதுப் பொருள்கள் இருப்பதே வயிற்று மந்தம், உணவு செரியாமை, குடல் கோளாறுகள் போன்றவற்றுக்குக் காரணம் என்று மருத்துவர்கள் எங்களிடம் தெரிவித்தனர். நான் ஏற்கனவே குறிப்பிட்டது போன்று பெரிய நிறுவனங்கள் லாரிகள் மூலம் சுரங்கத்திற்குத் தண்ணீர் கொண்டு வருவதற்கு ஏற்பாடு செய்கின்றன. ஆனால் பொதுவாக, ஐந்து முதல் ஆறு மைல் தொலைவிலுள்ள சேறும் சகதியுமான அழுக்கடைந்த குட்டைகளிலிருந்து பெண்களைக் கொண்டு தண்ணீர் கொண்டு வரப்படுகிறது. இவ்வாறு கொண்டு வரப்படும் தண்ணீர் அரு வருப்பான, அழுக்குப்படிந்த பெரிய மண்மிடாக்களிலும், ஜாடிகளிலும் சேமித்து வைக்கப்படுகிறது. இத்தகைய தண்ணீர் கூடப் போதுமான அளவு கிடைப்பதில்லை. அதிலும் குறிப்பாக அலம்பும் பணிகளுக்குப் பொதுவாக தண்ணீர் கிடைப்பது அரிது. சுரங்கங்களில் குடிநீர் பிரச்சினை மிகக் கடுமையானது; இதில் உடனடியாக கவனம் செலுத்துவது அவசியம்.''

குடியிருப்பு வசதிகளைப் பற்றி அறிக்கை கூறுவதாவது:

''தொழிலாளர்கள் குடியிருக்கும் வீடுகளைப் பற்றி வரு ணிப்பதற்கு சரியான சொற்களே கிடைக்கவில்லை. இவற்றில்

பெரும்பாலானவை தற்காலிகமானவை. மூங்கிலையோ அல்லது மரத் தூளையோ ஆதாரமாகக் கொண்டு எழுப்பப் பட்டிருக்கும் கூடாரங்கள் போன்றவை இவை. நிரந்தரமான குடியிருப்புகளைப் பொறுத்தவரை அவை இருவகைப்பட் டவை. அவற்றைப் பற்றி இங்கு தனித் தனியாகக் கூறுகிறோம்:

(i) முதல் வகை குடியிருப்புகள் முற்றிலும் மூங்கிலையும் புல்லையும் கொண்டு வேய்ந்தவை. தொழிலாளர்களுக்காக சுரங்க உரிமையாளர் கட்டியிருந்த ஓர் வீட்டை நாங்கள் பார்த் தோம். அதன் கூரை பசும் இலைதழைகளால் ஆனது. அது பார்ப்பதற்குக் கால்நடைத் தொழுவம் போல் காட்சி அளித்தது! அதில் கதவுகளோ, சன்னல்களோ காணப்படவில்லை. பின்னர் சொல்ல வேண்டுமா காற்றோட்டத்துக்கு! நாலாப்புறமும் திறந்துவிடப்பட்ட ஒரு கூடாரம் போல் அது தோற்றமளித்தது. இந்தக் கொட்டிலில் ஒரு தொழிலாளி, அவனுடைய மனைவி, இரண்டு குழந்தைகள் மற்றும் இதர 10 தொழிலாளர்கள் வசித்து வந்தனர். குடும்பத்துக்கு தனி மறைவிடம் கிடையாது. தனித்தனி அடுப்புகள் அமைக்கப்பட்டிருந்தன. தரையில் புல் பரப்பப்பட்டிருந்தது. தொழிலாளர்கள் அதன்மீதுதான் இரவில் படுத்துறங்கி வந்தனர். குடியிருப்பவர்களிடமிருந்து வாடகை எதுவும் வசூலிக்கப்படவில்லை. அந்தக் குடிசையில் ஒரு தொழி லாளி குடும்பத்துடன் குடியேறிய பிறகு சுரங்க முதலாளி அதில் மேற்கொண்டும் 8 அல்லது 10 பேர்களைக் குடியமர்த் தினான் என்பது இங்கு குறிப்பிடத்தக்கது. ஏற்கெனவே குடும் பத்துடன் குடியேறிய தொழிலாளி வாடகை எதுவும் தருவதில் லையாதலால் இதை எதிர்த்து குறைபட்டுக் கொள்ளவோ, முணுமுணுக்கவோ அவனால் முடியவில்லை.

(ii) இனி, ஓரளவு மேம்பட்ட குடியிருப்புகளைப் பற்றிப் பார்ப்போம் - அவற்றின் எண்ணிக்கை மிகமிகக் குறைவு; பொதுவாக டர்பன்கள், கலாசிகள், தச்சர்கள் போன்றோரே அவற்றில் குடியிருந்தனர். அவை வரிசை வரிசையாகக் கட்டப் பட்ட ஓர் அறை குடியிருப்பு வீடுகள்; அவற்றிற்கு வாடகை ஏதும் கிடையாது. இந்த வீடுகளின் சுவர்கள் சுடப்படாத பச்சைக் கற்களைக் கொண்டு கட்டப்பட்டுள்ளன. அவற்றின் கூரைகள் மரப்பலகைகளால் ஆனவை. அவை கதவுகளுடன் கூடிய அடைக்கப்பட்ட அறைகள். காற்றோட்டம் மிகமிகக் குறைவு. இந்தக் குடியிருப்புகள் சாதாரண தொழிலாளர்களுக்கு உரியவை

அல்ல, மாறாக பெரிதும் தேர்ச்சி பெற்ற ஊழியர்களுக்கு உரியவை என்பது இங்கு குறிப்பிடத்தக்கது. இந்தக் குடியிருப்புகளில் வசிப்பவர்களுக்குக் கூட எத்தகைய கழிவிட வசதிகளும் செய்து தரப்படவில்லை. இதனால் அவர்கள் திறந்த வெளிகளில் சென்று தங்களது இயற்கை உபாதைகளைத் தீர்த்துக் கொள்ள வேண்டியிருக்கிறது என்பதை இங்கு முக்கியமாகக் கவனிக்க வேண்டும். ஏற்கெனவே நாங்கள் சுட்டிக் காட்டியதுபோல், இதனால் அவர்கள் மூட்டுவலி, இரத்தச் சோகை போன்ற நோய்களால் பீடிக்கப்படுகின்றனர். சுரங்க முதலாளிகள் என்னதான் நிர்ப்பந்தித்த போதிலும் இந்தக் குடியிருப்புகளில் வசிக்க தொழிலாளர்கள் விரும்புவதில்லை. தங்களுடைய குடிசைகளுக்குப் போய் வருவதற்கு 4 முதல் 6 மைல்கள் நடக்க வேண்டியிருந்தாலும் அதனை அவர்கள் பொருட்படுத்துவதில்லை. ஏனென்றால் சுரங்க முதலாளிகள் கட்டித்தந்துள்ள குடியிருப்புகளைவிட அவர்களது சொந்தக் குடிசைகள் எவ்வளவோ மேம்பட்டவையாக உள்ளன."

மைக்கா சுரங்கங்களில் பரவியுள்ள தொழில்சார்ந்த நோய்களையும் இதர நோய்களையும் பற்றிக் கூறும் பகுதிகளை இப்போது படித்துக் காட்டுகிறேன். இது விஷயமாக அறிக்கை கூறுவதாவது:

"மைக்கா சுரங்கத் தொழிலாளர்களைப் பீடிக்கும் நோய்களை (அ) சுரங்க நடவடிக்கைகளாலும் வேலை நிலைமைகளாலும் ஏற்படும் நோய்கள் என்றும், (ஆ) சுரங்கப் பிரதேசத்தில் நிலவும் இயற்கைச் சூழ்நிலைமைகளால் தோன்றும் நோய்கள் என்றும் வகை பிரிக்கலாம். இதுசம்பந்தமாக பீகார் பிரதேசத்திலிருந்து சில தகவல்களைச் சேகரிக்க முடியும். பிரதானமாக இந்தத் தகவல்களிலிருந்து பின்கண்ட பகுப்பாய்வுக்கு நாம் வரமுடியும்.

(அ) முதல் பிரிவில் கீழ்க்கண்ட நோய்கள் அடங்கும்:

(i) சிலிகோசிஸ் - இது நுரையீரலைப் பாதிக்கும் நோய்; தண்ணீர் ஊற்றாமல் படிகக் கல்லைத் துளையிடுவதுடன் இது சம்பந்தப்பட்டது. எண் கோணங்களைக் கொண்ட துரப்பணக் கருவி சுரங்கத்தின் அடியாழம் வரை சென்று இயங்கும்போது, படிகக்கல் தூசி துளை வழியாக மிகுந்த வேகத்துடன் வெளியேறி துரப்பணத் தொழிலாளியின்

முகத்தைத் தாக்குகிறது. ஒருசில விநாடிகளில் படிகக் கல் தூசிப் படலங்கள் துரப்பணத் தொழிலாளியைச் சூழ்ந்து கொள் கிறது. அப்போது அந்தத் தொழிலாளி தூசியைத் தொடர்ந்து சுவாசிக்க வேண்டியிருக்கிறது. சின்னஞ்சிறு படிகத் துகள் கள் அவனது உடலில் பிரவேசித்து நுரையீரல்களில் பெரும் பாதிப்பை ஏற்படுத்துகின்றன. ஆரம்பத்தில் மார்புச்சளி அறிகுறி கள் தோன்றுகின்றன. இது படிப்படியாகத் தீவிரமடைந்து சிலிகோசிஸ் நோயாக உருவெடுக்கிறது. இந்த நோயால் ஏராள மான தொழிலாளர்கள் பாதிக்கப்படுகின்றனர். எனினும் அவர் களது மட்டுமீறிய உழைப்பின் காரணமாக இந்த நோயை ஆரம்பத்திலேயே கண்டுபிடிக்க முடியவில்லை. இந்தத் தொழி லாளர்களில் பெரும்பாலோர் விரைவில் மரணமடைவதி லிருந்து காப்பாற்றுவது அவர்கள் அந்தந்தப் பருவ காலத்தில் வேளாண் துறைக்கு மாறுவதேயாகும். ஒரு துரப்பணத் தொழி லாளி தொடர்ந்து ஓராண்டு முழுவதும் பணியாற்றினால் இந்த நோயால் பீடிக்கப்படுவதிலிருந்து அவன் தப்ப முடியாது; சுமார் ஐந்தாண்டுகளுக்குள் அவன் இறக்கக்கூடும். தன்னுடைய மிகச் சிறந்த துரப்பணத் தொழிலாளிகளில் 16 பேரை கடந்த ஐந்தாண்டுகளுக்குள் தான் இழந்துவிட்டதாக ஒரு முதலாளி கூறினான். கிட்டத்தட்ட எல்லாச் சந்தர்ப்பங்களிலும் ஏராள மான உயிர்களைக் காவுகொள்ளும் இந்த நோயிலிருந்து துரப் பணத் தொழிலாளிகளைப் பாதுகாப்பதற்கு ஒரே வழிதான் உள்ளது; தண்ணீர் ஊற்றாமல் துரப்பணக் கருவிகளைக் கொண்டு துரப்பணம் செய்வதை இந்திய சுரங்கங்கள் சட் டத்தின்படி தடை செய்வதே அந்த வழி. செரஸ்டியன் சுரங்க நிறுவனம் ஒன்றுதான் தானாகவே முன்வந்து ஈர துரப்பண முறையைப் புகுத்தியுள்ளது. குறைந்தபட்சம் இந்த யுத்தத்தின் போதாவது இந்த முறையைப் பின்பற்ற வேறு எந்த நிறுவனமும் முன்வரவில்லை. எனினும் உலர்ந்த துரப்பண முறையை சட்டரீதியாக தடை செய்வதை அனைத்து தொழிலதிபர்களும் ஆதரித்திருப்பது இங்கு குறிப்பிடத்தக்கது.''

அடுத்து, இங்குள்ள தொழிலாளர்களிடையே பரவியுள்ள வயிற்று மந்தம், கீல்வாதம், மார்புச் சளி, முறைக் காய்ச்சல் போன்ற நோய்களைப் பற்றிய விவரங்கள் தரப்பட்டிருக்கின்றன. இந்தப் பட்டியல் முழுவதையும் இங்கு நான் விவரித்துக் கொண்டிருக்கப்

போவதில்லை. எனினும் அறிக்கையில் கண்டுள்ள பின்கண்ட பத்தியை மட்டும் அவையின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்பு கிறேன்:

''சேமநல நடவடிக்கைகள் எவற்றையும் இங்கே அறவே காணமுடியவில்லை. உணவகங்கள், குழந்தை பராமரிப்பு நிலையங்கள், பொழுதுபோக்கு வசதிகள், அலம்பீடு வசதிகள் என்பவை எல்லாம் இந்த மைக்கா சுரங்கப் பிரதேசத்தில் என்னவென்றே தெரியாது. செரஸ்டியன் சுரங்க நிறுவனம், சாட்டுராம் ஹோரில்ராம் நிறுவனம், இந்திய மைக்கா சப்ளை நிறுவனம் போன்றவை மருத்துவ உதவி ஏற்பாடுகளைச் செய் துள்ளன.''

அறிக்கை மேலும் கூறுவதாவது:

''மருத்துவ உதவி இலவசமாக அளிக்கப்படுகிறது. எனினும் குழந்தைகளும் வயது வந்தவர்களும் படிப்பதற்கு எந்த வசதி யும் செய்து தரப்படவில்லை.''

மைக்காச் சுரங்கங்களில் வேலை நிலைமைகள் உண்மை யிலேயே சகிக்கவொண்ணாதவையாக உள்ளன என்பதையும், இது விஷயத்தில் அரசாங்கம் தலையிட்டு, மைக்கா சுரங்கத் தொழிலாளர் களின் அவல நிலையைப் போக்குவதற்கு ஏதேனும் செய்ய வேண்டிய தருணம் வந்துவிட்டது என்பதையும் காட்டுவதற்கு அறிக்கையி லிருந்து பத்தி பத்தியாக நான் கூறிக் கொண்டே போகலாம்.

இனி, இந்தப் பிரச்சினையைச் சமாளிப்பதற்கு மிகச் சிறந்த மார்க்கம் என்ன என்ற விஷயத்துக்கு வருகிறேன். இந்தப் பிரச்சினை யைப் பொறுத்த வரையில் இதனைச் சமாளிப்பதற்கு இரண்டே வழிகள்தான் உள்ளன என எனக்குத் தோன்றுகிறது. ஒருவழி: தொழி லாளர்களுக்கான குறிப்பிட்ட சேமநல நடவடிக்கைகளை வகுத்துத் தந்து, அவற்றைச் செயல்படுத்தும் பொறுப்பை சுரங்க முதலாளி களிடம் ஒப்படைக்க வேண்டும்; இந்தப் பொறுப்பை அவர்கள் சரிவர நிறைவேற்றுகிறார்களா என்பதை அரசாங்கம் கண்காணிக்க வேண்டும். இரண்டாவது வழி: இந்த சேமநல நடவடிக்கைகளை மேற்கொள்ளும் பொறுப்பை அரசாங்கம் தானே வரித்துக் கொண்டு, அதற்காகும் செலவை சுரங்க முதலாளிகளை ஏற்கச் செய்ய வேண் டும். இவற்றில் முதல் வழி குறைபாடுடையதாக எனக்குத் தோன்று

கிறது. இதற்கு இரண்டு காரணங்கள் உண்டு. முதலாவதாக, சேமநல நடவடிக்கைகளுக்கான செலவை ஏற்றுக் கொள்ளும் விஷயத்தில் வெவ்வேறான சுரங்க முதலாளிகளும் வெவ்வேறான தகுதிகளைப் பெற்றுள்ள நிலைமையில் சட்டம் நிர்ணயிக்கும் தரத்தை சிறு சுரங்க முதலாளிகளால் நிலைநாட்டுவது சாத்தியமல்ல. இரண்டாவதாக அடிக்கடி சுரங்கங்களைச் சுற்றிப் பார்த்து தரங்கள் உரிய முறையில் பராமரிக்கப்படுகின்றனவா என்பதை மிகவும் விழிப்போடு கண்காணிக்க வேண்டுமானால் அதற்கு ஏராளமான ஆய்வாளர்கள் ஈடுபடுத்தப்பட வேண்டும்; அரசாங்கம் இதைச் செய்வது என்பது சாத்தியமல்ல. எனவே, பொறுப்பு முழுவதையும் தன் கைகளிலேயே எடுத்துக் கொண்டு, இந்த சேமநல நடவடிக்கைகளுக்கு ஆகும் செலவை சுரங்க முதலாளிகள் ஏற்கும்படி செய்வதே இதுபோன்ற விஷயங்களில் சிறந்த வழி என்று அரசாங்கம் முடிவு செய்துள்ளது. ஐயா, மைக்கா தொழில்களில் பணிபுரியும் தொழிலாளர்களின் சேம நலங்கள் சம்பந்தப்பட்ட இம்மசோதா இந்தக் கோட்பாட்டின் அடிப்படையிலேயே அமைந்திருக்கிறது. அரசாங்கத்தைப் பொறுத்தவரையில் இது அவர்கள் கைக்கொள்ளும் புதிய கோட்பாடு ஒன்றுமல்ல. சுரங்கத் தொழிலில் ஈடுபட்டிருப்போரின் சுபிட்ச நலனுக்கான அவசரச் சட்டம் ஒன்றை போரின் போது அரசாங்கம் பிறப்பித்ததை அவை அறியும். ஓர் அவசரச் சட்டத்தின் மூலம் இது மேற்கொள்ளப்பட்டது. ஆனால் இப்போதைய மசோதாவுக்கு அடிப்படையாக உள்ள கோட் பாடுகள் நான் முன்னர் தெரிவித்த அவரசச் சட்டத்திற்கு அடிப்படையாக இருந்த அதே கோட்பாடுகளே ஆகும். எனவே, இந்த மசோதாவுக்கு அடிப்படையாக அமைந்துள்ள கோட்பாட்டை மேற்கொண்டு விரிவுபடுத்த வேண்டிய அவசியமில்லை, அது உசிதமுமல்ல.

ஐயா, இங்கு நான் குறிப்பிட வேண்டிய மற்றொரு விஷயமும் இருக்கிறது. இந்தப் பணத்தை எவ்வாறு செலவிட வேண்டும் என்பது குறித்து, இந்நிதியை நிர்வகிக்கும் அதிகாரிகளுக்கு ஆலோசனை கூறுவதற்கு இந்த மசோதாவின்படி இரண்டு குழுக்கள் அமைக்க உத்தேசிக்கப்பட்டிருப்பதை மதிப்பிற்குரிய உறுப்பினர்கள் அறிவீர்கள். ஓர் ஆலோசனைக் குழு சென்னை மாகாணத்துக்கும், மற்றோர் ஆலோசனைக் குழு பீகார் மாகாணத்துக்கும் இருக்கும். மைக்கா உற்பத்தியாகும் மற்றொரு பிரதேசம் அல்லது ராஜபுதனம் இதிலிருந்து விலக்கப்பட்டிருப்பதற்கு இந்திய அரசாங்கம் எந்தக் காரணமும் கூறவில்லையே என்று சில உறுப்பினர்கள் எண்ணக்கூடும். ராஜபுதனத்துக்கு மூன்றாவதொரு குழுவை அமைக்க

வேண்டிய அவசியமில்லை என்று நாங்கள் ஏன் நினைத்தோம் என்பதை அவைக்கு விளக்க விரும்புகிறேன். மைக்கா தொழில் துறையில் ராஜபுதனம் இப்போதைக்கு மிகச் சிறிய இடத்தையே வகிக்கிறது. இதுகுறித்த சில புள்ளிவிவரங்களை அவைக்குத் தருவது உசிதமாக இருக்கும் என்று நினைக்கிறேன். இந்தியாவிலுள்ள மைக்கா சுரங்கங்களை எடுத்துக் கொள்வோம். இது சம்பந்தமாக 1941 ஆம் ஆண்டுக்கான புள்ளிவிவரங்கள் என்னிடம் இருக்கின்றன. 1941 ஆம் ஆண்டில் பீகாரில் மொத்தம் 623 சுரங்கங்கள் இருந்தன. இவற்றில் ஆண்டு முழுவதும் பணியாற்றிய சுரங்கங்கள் 297. இதே ஆண்டில் சென்னையில் இருந்த மொத்த சுரங்கங்கள் 108, இவற்றில் ஆண்டு முழுவதும் இயங்கியவை 47; ஆனால் அதேசமயம் ராஜபுதனத்தில் மொத்தம் 62 சுரங்கங்கள் இருந்தபோதிலும் ஆண்டு முழுவதும் செயல்பட்டவை 8 தான். தொழிலாளர்களின் எண்ணிக்கை விஷயத்தை எடுத்துக் கொண்டால், இதுகுறித்த 1943 ஆம் ஆண்டுக்கான புள்ளிவிவரங்கள் என்னிடம் உள்ளன. அந்தப் புள்ளி விவரங்கள் வருமாறு: பீகாரில் மைக்கா சுரங்கங்களில் பணியாற்றிய தொழிலாளர்களின் எண்ணிக்கை 81,431; இந்த எண்ணிக்கை சென்னையில் 18,379; ஆனால் ராஜபுதனத்திலோ வெறும் 15,000தான். ஆதலால் ராஜபுதனத்துக்கு ஒரு தனிக்குழு அமைக்க வேண்டிய அவசியமில்லை என்று கருதப்பட்டது. இதற்கான காரணம் தெள்ளத் தெளிவானது. இந்த ஆலோசனைக் குழுக்களைப் பராமரிப்பதற்கு ஏராளமாக நிர்வாகச் செலவு பிடிக்கிறது; வெறும் நிர்வாகக் காரியங்களுக்காக நிதியிலிருந்து இவ்வாறு பணம் செலவிடப்படுவதை நான் விரும்பவில்லை; நமது நோக்கத்துக்கு இது எவ்வகையிலும் உதவாது. எனவே, மேற்கொண்டு மற்றொரு குழுவை அமைக்காமல் சிக்கனத்தைக் கடைப்பிடிப்பதும், பிரச்சினையை வேறு ஏதேனும் வகையில் சமாளிப்பதும் உசிதம் என்று நாங்கள் முடிவு செய்தோம். ஐயா, எனது விளக்கம் தேவைப்படுகின்ற வேறு ஏதேனும் விதி மசோதாவில் உள்ளதா என்பதை நான் அறியேன். இந்த விஷயம் மிக அவசரமானது என்பதையும், இம்மசோதா சட்டப் புத்தகத்தில் இடம்பெற வேண்டும் என்பதில் மிகுந்த ஆர்வமாக இருக்கிறேன் என்பதையும் அவை உணரும் என்று நம்புகிறேன்.

மதிப்பிற்குரிய சில உறுப்பினர்கள் சார்பில் ஒரு திருத்தம் சமர்ப்பிக்கப்பட்டிருப்பதைப் பார்க்கிறேன்; இந்த மசோதாவை ஒரு தெரிவுக் குழுவுக்கு அனுப்ப வேண்டும் என்பதே அந்தத் திருத்தத்தின் நோக்கம். இந்த மசோதாவை ஒரு தெரிவுக் குழுவுக்கு அனுப்ப

நான் தயாராக இல்லை, இன்னும் சொல்லப்போனால் அதை எதிர்க்கிறேன்; ஏனென்றால் ஒரு தெரிவுக்குழு கவனம் செலுத்த வேண்டிய அளவுக்கு இந்த மசோதா சர்ச்சைக்கிடமானதோ அல்லது சிக்கலானதோ அல்ல. எனினும், இந்த மசோதா தெரிவுக் குழுவின் பரிசீலனைக்கு அனுப்ப வேண்டும் என்பதில் அவை உறுப்பினர்கள் ஆர்வமாக இருந்தால் ஒரு நிபந்தனையோடு இந்தத் திருத்தத்தை ஏற்றுக் கொள்ள எனக்கு ஆட்சேபனை ஏதும் இல்லை; அந்த நிபந்தனை இதுதான்: இம்மசோதாவின் இரண்டாவது வாசிப்பை நான் மேற்கொள்ளும் விதத்தில் இந்தக் கூட்டத் தொடர் முடிவதற்கு முன்னதாக தெரிவுக்குழு தனது பரிசீலனையை முடித்து அவைக்குத் திருப்பி அனுப்ப இணங்க வேண்டும். ஐயா, என் தீர்மானத்தை முன்மொழிகிறேன்.

திரு. தலைவர்: தீர்மானம் தாக்கல் செய்யப்படுகிறது:

''மைக்கா சுரங்கத் தொழிலில் ஈடுபட்டுள்ள தொழிலாளர்களின் நல்வாழ்வு நடவடிக்கைகளுக்கு பண உதவி செய்யக்கூடிய ஒரு நிதியை அமைக்கக் கோரும் இந்த மசோதா பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்பட வேண்டும்.''

திரு. அகமது இ.எச். ஜாபர் (பம்பாய் தென்பிராந்தியம்: முகம்மதியர் கிராமப் பகுதி): ஐயா, நான் பின்கண்ட திருத்தத்தை முன்மொழிகிறேன்:

''பின்கண்டவர்கள் அடங்கிய ஒரு தெரிவுக் குழுவின் பரிசீலனைக்கு மசோதா அனுப்பப்பட வேண்டும்: மாண்புமிகு திரு. அசோகா ராய், மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர், செல்வி மணிபென் காரா, திரு. எஸ்.சி. ஜோஷி, பாபுராம் நாராயண் சிங், திரு. ஆர். வெங்கடசுப்பா ரெட்டியார், திரு. கௌரி சங்கர் சரண்சிங், திரு. வ. கருணாகர மேனன், பேராசிரியர் என்.ஜி. ரங்கா, திரு. ஜியோபர்ரி டபிள்யூ டைசன், திரு. மஹாந்திரி சிங், டாக்டர் சர் ஜியா வுத்தீன் அகமது, கான் பகதூர் ஹபிக்ஸ் எம். கஜான்பருல்லா, திரு. முகமது நௌமான் மற்றும் திருத்தத்தை முன்மொழிபவர்; தெரிவுக்குழு பரிசீலனையை முடித்துத் தனது அறிக்கையை 1946 ஏப்ரல் 15 ஆம் தேதிக்குள் அனுப்ப வேண்டும்; குழுவின் கூட்டத்தில் குறைந்தபட்சம் ஐந்து உறுப்பினர்கள் பங்குகொள்வது அவசியம்.''

*திரு. தலைவர்:* 15ஆம் தேதி என்பது சரிதானா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இல்லை, இதனால் மிகவும் காலதாமதமாகும்.

★ ★ ★

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* ராஜபுதனத்தை நான் கைவிட்டு விடவில்லை. அதற்கு ஒரு தனிக் குழு அமைக்கப் படும்.

*திவான் சமன்லால்:* ஒரு தனிக்குழு அமைக்கப்படும் என்று மாண்புமிகு என்னுடைய நண்பர் கூறியதாகச் சொல்லுகிறார். அப்படி அவர் கூறியது எதுவும் என் காதுகளில் விழவில்லை. ''வேறு ஏதேனும் வழிகளில் இது செய்யப்படும்'' என்று அவர் கூறியதுதான் என் செவிகளில் விழுந்தது. ''ஏதேனும் ஒரு தனிக்குழு அமைக்கப் படும்'' என்று இப்போது கூறுகிறார். மிகவும் மகிழ்ச்சி. எது எப்படி இருப்பினும் இந்த மசோதாவைப் பொறுத்தவரையில் ராஜபுதனம் விடப்பட்டு உள்ளது.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இந்த நிதியின் உதவியோடு அங்கு சேமநல நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படும்.

*திவான் சமன்லால்:* சென்னையிலிருந்தும் பீகாரிலிருந்தும் பணம் எடுத்து வந்து ராஜபுதனத் தொழிலாளர்களுக்கு உதவப் போகிறீர்களா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* தொழிலாளர் களின் சேமநல நடவடிக்கைகள் சம்பந்தமாக வேறு ஏதேனும் அமைப்பைப் பயன்படுத்திக் கொள்ள உத்தேசித்திருக்கிறோம். இதற்காகும் செலவு இந்த நிதியிலிருந்து சரிக்கட்டப்படும்.

★ ★ ★

[1]*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இந்த மசோதா வுக்கு எதிராகத் தெரிவிக்கப்பட்ட கருத்துகளுக்கு நீண்ட பதில்

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, எண். 7, ஏப்ரல் 9, 1946, பக்கங்கள் 3757-59

எதுவும் அளிக்கும் உத்தேசம் எனக்கில்லை. மூன்று பேச்சாளர்கள் எழுப்பிய பிரச்சினைகளுக்கு மிகச் சுருக்கமாகவே பதிலளிக்க விரும்புகிறேன். என் நண்பர் திரு. டைசன் எழுப்பிய பிரச்சினைக்கு முதலில் வருகிறேன். என் மசோதாவை ஆதரித்து நான் நிகழ்த்திய உரையில் உபரி மைக்கா கையிருப்பு பற்றியோ, கூடுதல் வரிவிதிப்புப் பற்றியோ, திரு. நீதிபதி ரியூபன் அறிக்கை பற்றியோ எதுவும் குறிப்பிடவில்லை. வேண்டுமென்றேதான் இந்த விஷயங்களை என் உரையில் பிரஸ்தாபிக்கவில்லை; ஏனென்றால் இந்த விஷயங் களை என்னுடைய நண்பர் திரு. டைசன் எழுப்புவார் என்பதும், அவற்றுக்கு நான் பதிலளிக்க வேண்டியிருக்கும் என்பதும் எனக்குத் தெரியும். பெரும்பாலும் அவையின் நேரத்தை மிச்சப்படுத்துவதற் காகவே அவ்வாறு செய்தேன்.

ஐயா, இப்பொழுது நிலைமை இதுதான்: பேராசிரியர் அதர்கார் சமர்ப்பித்த அறிக்கையின் அடிப்படையில் சமூக சேமநல நடவடிக்கைகளை மேற்கொள்ள தொழிலாளர் நலத்துறையும் இந்திய அரசாங்கமும் முடிவு செய்துள்ள போதிலும் உண்மையில் பேராசிரியர் அதர்காரின் அறிக்கை சமர்ப்பிக்கப்படுவதற்கு நீண்ட நாட்களுக்கு முன்பே தொழிலாளர் இலாகா இந்த முடிவை எடுத்து விட்டது என்பதை இங்கு குறிப்பிடுவது உசிதமாக இருக்கும். மைக்கா தொழில்துறை குறித்து நீதிபதி ரியூபன் அளித்துள்ள தமது அறிக்கையில் தொழிலாளர் நலத் துறையின் இந்த முடிவை ஆதரித்து வரவேற்றிருக்கிறார் என்பது பற்றி நான் மிகுந்த மகிழ்ச்சி அடை கிறேன்.

உண்மையில், மைக்கா உற்பத்தி மீது அல்லது ஏற்றுமதி மீது பொதுவரி விதிக்கப்பட வேண்டும் என்றும், அந்த வரியில் 12-ல் 5 பங்கு மைக்கா தொழிலில் ஈடுபட்டுள்ள தொழிலாளர்களின் நலன் களுக்காக ஒதுக்கப்பட வேண்டும் என்றும் அவரே பரிந்துரைத்துள் ளார். எனவே, இந்த மசோதாவைக் கொண்டு வந்திருப்பதன் மூலம் நாங்கள் திரு. ரியூபன் அறிக்கையிலிருந்து விலகிச் செல்லவில்லை என்பது தெள்ளத் தெளிவு. நாங்கள் செய்திருப்பதெல்லாம் திரு. ரியூபன் பரிந்துரைத்திருப்பது போன்று ஒரே வரி விதித்து அதனைப் பல்வேறு காரியங்களுக்குப் பகிர்ந்தளிப்பதற்குப் பதில் சேமநலத் துறைக்கென்று ஒரு தனி நிதியும், தொழில் துறையின் சில குறிப் பிட்ட நிர்வாக நடவடிக்கைகளுக்காக ஒரு தனி நிதியும் ஏற்படுத்

துவது அவசியம் என்று நாங்கள் நினைத்ததுதான். சேமநல நிதி ஒரு தனி அமைப்பாலும் இதர நோக்கங்களுக்கான நிதி வேறொரு தனி அமைப்பாலும் நிர்வகிக்கப்பட வேண்டியிருக்கும் என்பதே நாங்கள் இந்த முடிவு எடுப்பதற்குக் காரணம். ஆக, இந்திய அரசாங்கத்தின் இந்த முடிவு திரு. ரியூபனின் அறிக்கைக்கு முற்றிலும் ஏற்புடைய தாக இருப்பதை திரு. டைசன் காணமுடியும்.

கூடுதல் வரிவிதிப்பைப் பொறுத்தவரையில், ஆரம்ப கட்டத் தில் இந்த வரியை மிகக் குறைந்த அளவிலேயே நாங்கள் நிர்ண யித்திருக்கிறோம் என்பதை மதிப்பிற்குரிய நண்பர் புரிந்து கொள் வார். ரியூபன் அறிக்கையின் மதிப்பீட்டின்படி இது 6 சதவீதமாக நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது...

*திரு. ஜியோபரே டபிள்யூ டைசன்:* தொழிலாளர் நலத் துறைக்கா அல்லது பொதுவாகவா?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* பொதுவாக. சேமநல நோக்கங்களையும் இதர நோக்கங்களையும் நிறைவேற்று வதற்குப் போதுமான வருவாய் இந்த வரியின் மூலம் கிட்டுமா என்பது பிந்தைய கட்டத்தில் பரிசீலிக்கப்பட வேண்டிய விஷயம்.

*திவான் சமன்லால்:* மாண்புமிகு நண்பர் எவ்வளவு எதிர் பார்க்கிறார்?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* சற்றுப் பொறுங்கள், இந்த விஷயத்துக்குப் பின்னால் வருகிறேன். உபரி கையிருப்பைப பொறுத்தவரையில், மன்னர்பிரான் அரசாங்கத்திட மும் அமெரிக்காவிடமும் தேங்கிக் கிடக்கும் மிகையான மைக்கா கையிருப்பைப் 'பைசல்'' செய்வது சம்பந்தமாக இந்திய அரசாங்கம் மன்னர்பிரான் சர்க்காருடன் நீண்டகாலமாகவே பேச்சுவார்த்தை கள் நடத்தி வருகிறது என்பதை அவைக்குத் தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். உபரி கையிருப்பை 'பைசல்' செய்வதால் மைக்கா தொழிலுக்கு எத்தகைய தீங்கும் ஏற்படாத ஓர் உடன்பாட்டுக்கு நாங்கள் வந்துள்ளோம் என்பதைத் தெரிவிப்பதில் மிகுந்த மகிழ்ச்சி அடைகிறேன். பேச்சுவார்த்தைகள் இறுதிக் கட்டத்தை அடைந் துள்ளன; மன்னர்பிரான் சர்க்காருக்கும் இந்திய அரசாங்கத்துக்

கும் இடையே செய்து கொள்ளப்பட்டிருக்கும் ஏற்பாடு குறித்து தொழில்துறைக்கும் பொதுமக்களுக்கும் தெரிவிக்கும் பத்திரிகைக் குறிப்பு ஒரு சில தினங்களில் வெளியிடப்படும். மைக்கா தொழில் துறையின் முழு ஆதரவையும் இது பெற்றுள்ளது என்று கூற முடியும்.

இந்த மசோதாவைப் பொறுத்தவரையில் மைக்காத் தொழில் துறையின் பரிபூரண இணக்கத்துடனேயே இது மேற்கொள்ளப்பட் டிருக்கிறது என்பதை அவைக்குத் தெரிவித்துக் கொள்ள விரும்பு கிறேன். 1944 ஏப்ரல் 29 ஆம் தேதி கொடர்மாவில் நடைபெற்ற ஒரு மாநாட்டில்தான் முதன் முறையாக இந்தப் பிரச்சினையை எழுப் பினேன்; அந்த மாநாட்டிற்கு நான்தான் தலைமை வகித்தேன்; மைக்காத் தொழில்துறையின் பிரதிநிதிகள் பலரும் அதில் பங்கெடுத் துக் கொண்டனர். ஒரு சேமநல நிதி அமைக்கும் என் யோசனைக்கு மொத்தத்தில் தொழில் துறையினரின் ஆதரவு இருப்பதைத் தெரிந்து கொண்டேன். சுரங்கத் தொழில் சேமநல ஆணையர் தலைமையில் 1945 நவம்பர் 9 ஆம் தேதி தான்பாத்தில் நடைபெற்ற மாநாட்டில் இந்த விஷயம் திரும்பவும் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப் பட்டது. அச்சமயத்திலும் மைக்கா உற்பத்தியாளர்கள் இந்த யோசனையை ஏற்றுக் கொண்டனர். இறுதியாக, தான்பாத்திலேயே 1945 டிசம்பர் 19 ஆம் தேதி தொழிலாளர் நலத்துறையின் செயலாளர் தலைமையில் மூன்றாவது மாநாடு நடைபெற்றது. அப்போது அர சாங்கத்துக்கும் மைக்கா சுரங்க அதிகாரிகளுக்கும் இடையே இறுதி உடன்பாடு ஏற்பட்டது. மைக்கா தொழில்துறையின் மீது ஒரு வரி விதிக்கும் எங்கள் யோசனை மைக்கா உற்பத்தியை மேலும் அதி கரிக்கும் விஷயத்தில் அந்தத் தொழில் துறையினரை எவ்வகை யிலும் தன்னம்பிக்கை இழக்கச் செய்துவிடவில்லை என்றே தோன்று கிறது என்பதையும் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். மாறாக, கடந்த சில மாதங்களில் மட்டும் எனக்குத் தெரிந்தவரை மூன்று புதிய மைக்கா உற்பத்தி நிறுவனங்கள் தோன்றியுள்ளன. ரூ. 5 லட் சத்தை அங்கீகாரம் பெற்ற மூலதனமாகக் கொண்ட சென்னையைச் சேர்ந்த மைகான்டிக் அண்டு மைக்கா புராடெக்ட்ஸ் லிமிடெட்டை இதற்கு உதாரணமாக கூறலாம். மற்றொன்று கல்கத்தாவைச் சேர்ந்த சரஸ்வதி மைக்கா இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட் என்பது; இது ரூ. 5 லட்சத்தை அங்கீகாரம் பெற்ற மூலதனமாகக் கொண்டது. இதுவன்றி, மைக்கா வெட்டியெடுப்பதற்கும், ஒரு மைக்கா தொழிற்சாலையை ஆரம்பிப்பதற்கும் கிறிஸ்டியன் மைனிங் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்

என்னும் நிறுவனம் உரிமம் கோரி விண்ணப்பித்திருப்பதையும் நான் அறிவேன். இதிலிருந்து வரிவிதிப்பை மைக்கா சுரங்கத் தொழில் துறையினர் ஒரு பாதகமான நடவடிக்கையாக எடுத்துக் கொள்ள வில்லை என்பதையும், இந்த வரிவிதிப்பின் சுமையை மைக்கா சுரங்கத் தொழிலால் தாங்கிக் கொள்ள முடியும் என்பதையும் அதில் ஈடுபட்டுள்ளவர்கள் கருதுகிறார்கள் என்பதையும் தெரிந்து கொள்ள லாம்.

என்னுடைய நண்பர் திவான் சமன்லால் எழுப்பியுள்ள பிரச் சினைகளைப் பொறுத்தவரையில், ஆரம்ப கட்டத்தில் அவர் கேட் டிருந்த அறிக்கையின் பிரதியை அவருக்கு வழங்க இயலாமற் போன தற்காக அவரிடம் மன்னிப்பு கேட்டுக் கொள்கிறேன். இதனை அறவே மறந்து விட்டேன் என்றுதான் சொல்ல வேண்டும். எனினும் இதனால் இந்த விஷயத்தைக் கையாள்வதில் அவருக்கு எத்தகைய சிரமமும் ஏற்படவில்லை என்றே கருதுகிறேன். ஒருக்கால் இந்த அறிக்கை அவருக்குக் கிடைத்திருந்தால் அவரது சொற்பொழிவு இரண்டு மடங்கு நீண்டிருக்கும், அவ்வளவுதான்.

இந்த வரியால் எவ்வளவு வருவாய் கிட்டும் என்று அவர் என்னிடம் கேட்டிருந்த கேள்வியைப் பொறுத்தவரையில், இது சம்பந்தமாக எத்தகைய திட்டவட்டமான புள்ளிவிவரத்தையும் தருவதற்கு எனக்குத் தயக்கமாக இருக்கிறது; இதற்கான காரணம் தெள்ளத் தெளிவானது. மைக்கா உற்பத்தி ஒரு நிலையான முறை யில் இருந்ததில்லை. எடுத்துக்காட்டாக, 1934 முதல் 1944 வரை யிலான புள்ளி விவரங்கள் என்னிடம் இருக்கின்றன. 1934ல் உற்பத்தி செய்யப்பட்ட மைக்காவின் மதிப்பு 6,30,525 ரூபாயாக இருந்தது; 1944ல் அது 2,73,01,458 ரூபாயை எட்டிற்று. இதற்கு இடைப்பட்ட காலத்தில் இந்தத் தொகை வெவ்வேறு ஆண்டு களுக்கு வெவ்வேறு விதமாக இருந்தது. எனவே, எந்த ஒரு குறிப் பிட்ட புள்ளிவிவரத்தையும் அவைக்கு அளிப்பதில் பயனில்லை. யுத்தப் பிற்காலத்தில் இந்தத் தொழில்துறை தன்னை நிலைப்படுத்திக் கொள்வதற்கு ஓரளவு அவகாசம் அளிப்பது அவசியம். எனினும் 1944 ஆம் ஆண்டுக்கான புள்ளி விவரத்தைக் கணக்கிலெடுத்துக் கொண்டு பார்க்கும்போது, வரிவிதிப்பு சற்றேறக்குறைய ரூ. 5 லட்ச மாக இருக்கக்கூடும் என்று மதிப்பிடலாம். இது ஒரு பெரிய தொகை அல்ல என்பது கண்கூடு. எனினும் தனிப்பட்ட முறையில் கூறுவது

என்றால் ஒரு கோட்பாட்டை நிலைநாட்டுவதற்காகப் போராடி வருகிறேன் என்றுதான் சொல்ல வேண்டும். நிதி போதுமானது அல்ல என்று தெரியவந்தால் இத்துறைக்குப் பொறுப்பாக இருக்கக்கூடிய எவரும் முன்வந்து வரி விகிதத்தை அதிகரிக்கலாம்; வேறு வகையில் சாத்தியமில்லாத சமூக நல நடவடிக்கைகளை இதன் மூலம் தொடர்ந்து மேற்கொள்ளலாம்.

என்னுடைய நண்பர் மைக்கா கொள்முதல் குழுவைப் பற்றிக் குறிப்பிட்டார். தற்போது நாம் பரிசீலித்துக் கொண்டிருக்கும் மசோதாவுடன் சம்பந்தப்பட்ட விஷயமல்ல இது. எனவே, மைக்கா கொள்முதல் குழுவின் நடவடிக்கைகளினால் எழக்கூடிய பிரச்சினைகளைப் பற்றி எதுவும் கூறும் உத்தேசம் எனக்கு இல்லை. எனினும் எனக்குத் தெரிந்தவரை ஒரு விஷயத்தை நான் நண்பருக்குத் தெரிவிக்க முடியும். அது இதுதான்: இந்த நாட்டில் மைக்காத் தொழிலில் ஈடுபட்டிருக்கும் தொழிலதிபர்கள் இது விஷயத்தில் எத்தகைய தீங்கும் விளைவிக்காதது மட்டுமல்ல, சராசரிக்கும் அதிகமான லாபங்களையும் ஈட்டியுள்ளனர் என்றே கூற வேண்டும்.

சுரங்கங்கள் சட்டம் சரிவர நடைமுறைப்படுத்தப்படாதது குறித்து என்னுடைய நண்பர் திவான் சமன்லால் நீண்டதொரு சொற்பொழிவாற்றினார். சுரங்கப் பணிகளில் குழந்தைகளும் பெண்களும் ஈடுபடுத்தப்படுவது பற்றி அவர் குறை கூறினார். ஏற்கெனவே நான் குறிப்பிட்டதுபோல், இந்த விவரங்களை எல்லாம் நான் நன்கறிவேன். மைக்கா சுரங்கங்களில் பணியாற்றும் தொழிலாளர்களின் நிலைமை சம்பந்தமாக திரு. அதர்கார் அளித்துள்ள அறிக்கையில் சுட்டிக்காட்டியிருக்கும் எல்லாக் குறைபாடுகளையும் நீக்குவதற்கு தொழிலாளர் நலத்துறை சட்டங்கள் இயற்ற ஏற்பாடு செய்து வருகிறது. அரசாங்கத்துக்கு அவகாசம் இருக்குமானால், இந்தத் தீங்குகளை எல்லாம் அகற்றுவதற்கு இந்தக் கூட்டத் தொடரிலேயே ஒரு மசோதாவைக் கொண்டு வருவது சாத்தியம் என்று கருதுகிறேன்.

என்னுடைய நண்பர் திரு. ராம் நாராயண் சிங் எழுப்பிய பிரச்சினைகளைப் பொறுத்தவரையில் இது மிகவும் தாமதமாக மேற்கொள்ளப்பட்டுள்ள நடவடிக்கை என்ற ஒரு முக்கியமான கருத்தை வெளியிட்டார். மைக்கா தொழில்துறை இருக்கிறது. அதில் புரையோடிப் போயுள்ள பல தீமைகளும் இருக்கின்றன, அரசாங்கமும் இருக்கிறது, ஆனால் இது சம்பந்தமாக எத்தகைய நடவடிக்கைகளும் எடுத்துக் கொள்ளப்படவில்லை என்று குறைபட்டுக்

கொண்டார். ஆனால் ஒரு விஷயத்தை அவர் சொல்ல மறந்து விட்டார். அதாவது இந்த அவையில் அவர் பல ஆண்டுகளாக இருந்து வருகிறார் என்பதைக் கூற மறந்துவிட்டார். இந்த விஷயத்தில் அவர் ஆரம்பத்திலேயே கவனம் செலுத்தி, அரசாங்கத்தினதும் தொழிலதிபர் களதும் உத்வேகத்தைக் கிளர்த்திவிட்டு, அவர்களைத் தூண்டி ஊக்கு வித்திருந்தால், அவர் சுட்டிக்காட்டிய தாமதம் நேர்ந்திருக்காது என்பதில் எனக்கு எள்ளளவும் ஐயமில்லை. எனினும் எதுவும் நடை பெறாதிருப்பதைவிடத் தாமதமானாலும் காரியம் நடைபெறுவது நல்லதே என்பதை அவர் ஒப்புக்கொள்வார் என்று நம்புகிறேன்.

நிதியை நிர்வகிக்கும் விஷயத்தைப் பொறுத்த வரையில், இந்தப் பொறுப்பை மாகாண அரசாங்கங்களிடம் விட்டுவிடலாம் என்று அவர் கூறினார் என நினைக்கிறேன். ஆனால் இந்தக் கோட் பாட்டை என்னால் ஏற்க இயலாது என்று கூறுவதற்கு வருந்து கிறேன். இது மத்திய அரசாங்கத்தின் சட்டம். இதற்கு மத்திய அர சாங்கம் பொறுப்பேற்பதே நியாயம். இந்த நிதி மத்திய சர்க்கார் சட் டத்தின் மூலம் திரட்டப்படுகிறது. அதுவும் ஒரு குறிப்பிட்ட நோக்கத் துக்காக இந்த நிதி திரட்டப்படுகிறது. இத்தகைய சந்தர்ப்ப சூழ் நிலைமைகளில் இந்திய அரசாங்கம் இந்த நிதி முழுவதையும் மாகாண அரசாங்கங்களிடம் ஒப்படைப்பது நியாயமென எனக்குத் தோன்றவில்லை. ஏனென்றால் மாகாண அரசாங்கங்கள் இந்த நிதியை மாகாணத்தின் பொதுவருவாய் இனத்தில் சேர்த்து மனம் போனபோக்கில் என்றில்லாவிட்டாலும் அவற்றின் விருப்பம் போல் செலவிடுவதற்கு வாய்ப்பிருக்கிறது. நிதிக்குப் பொறுப்பு மத்திய அரசாங்கமாதலால், நிதி ஒரு குறிப்பிட்ட நோக்கத்திற்காகத் திரட்டப் படுவதால், நிதி மத்திய அரசாங்கத்தின் அடைக்கலப் பொருளாத லால், அதனை நிர்வகிப்பது அதன் மறுக்க முடியாத கடமையாத லால், எந்த வகையில் பார்த்தாலும் ஆரம்பம் முதல் இறுதிவரை நிதியை நிர்வகிக்கும் பொறுப்பு மத்திய அரசாங்கத்திடம் இருப்பது உசிதமானது மட்டுமல்ல அவசியமானதும்கூட என்பது எனது அசைக்க, மறுக்க முடியாத கருத்து. இவ்வாறிருக்கும்போது, நிலக் கரிச் சுரங்கத் தொழிலாளர் சேமநலநிதி எவ்வாறு நிர்வகிக்கப்படு கிறது என்பதை அநேகமாக என் நண்பர் படித்திருக்க மாட்டார் என்று நினைக்கிறேன். எனவே, இந்த நிதியைப் பற்றி அவருக்கு சில விவரங்களைக் கூற ஆசைப்படுகிறேன்; ஏனென்றால் நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர்களின் சேமநல நிதியை முன்மாதிரியாக வைத்துத்தான் இந்த நிதி நிர்வகிக்கப்படவிருக்கிறது. நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர்களின் சேமநல நிதியைப் பொறுத்தவரையில், அதன்

நிர்வாகம் ஒரே ஆணையர் பொறுப்பில் விடப்பட்டிருக்கிறது; அவர் பொதுவாக மாகாண அரசாங்கம் ஒதுக்கித்தரும் ஒரு மாகாண அதிகாரி யாக இருப்பார். இன்னும் சொல்லப்போனால், நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர் சேமநல நிதியை தற்போது நிர்வகித்து வருபவர் பீகார் அரசாங்கம் ஒதுக்கித் தந்த ஓர் அதிகாரியே ஆவார்; இதேபோல் மைக்கா சுரங்கத் தொழிலாளர்களின் சேமநல நிதியை நிர்வகிப் பதற்கும் ஓர் அதிகாரியை ஒதுக்கித் தருமாறு பீகார் அரசாங்கத்தைக் கேட்டுக் கொள்வதாக இருக்கிறோம். நான் ஏற்கெனவே குறிப் பிட்டதுபோல், குழுவின் இயைபு பீகார் மற்றும் சென்னை மைக்காத் தொழிலைச் சேர்ந்த, ஸ்தல நிலைமை அறிந்த ஸ்தல பிரதிநிதி களைக் கொண்டதாக இருப்பதற்கு இந்த மசோதா வகை செய்கிறது. தவிரவும், நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர்களின் சேமநல நிதியைப் பொறுத்தவரையில் அதன் ஆலோசனைக் குழுவுக்கு தமது பிரதிநிதி களை அனுப்புமாறு மாகாண அரசாங்கங்கள் கேட்டுக்கொள்ளப் பட்டுள்ளன. மைக்கா ஆலோசனைக் குழு விஷயத்திலும் இதே நடைமுறையே பின்பற்றப்படும். நிதியின் விதிகளில் இதற்கு நாங்கள் வகை செய்வோம். இந்தக் குழுக்கள் மூன்று மாதங்களுக்கு ஒரு முறை கூடுகின்றன; குறிப்பிட்டதொரு நிகழ்ச்சிநிரல் தயாரிக்கப் பட்டு குழுவின் ஆலோசனை நாடப்படுகிறது. உற்பத்தியாளர்கள், சுரங்க உரிமையாளர்கள், தொழிலாளர்கள் போன்றோரின் பிரதிநிதி களும், மாகாண அரசாங்கங்களின் பிரதிநிதிகளும் இக்குழுவில் இடம்பெறுகின்றனர். வருடாந்தர வரவு செலவுத் திட்டம் ஆலோ சனைக் குழுவின் முன் வைக்கப்படுகிறது. அவர்களது ஆலோசனை பெறப்படுகிறது. அவர்களது ஆலோசனையை நாடிப் பெற்ற பிறகு தான் இந்த நிதிகளிலிருந்து பல்வேறு காரியங்களுக்குப் பணம் செல விடப்படுகிறது.

மத்திய அரசாங்கத்தின் எதேச்சாதிகாரம் எதையும் இந்த நிதி நிர்வாகத்தில் காணமுடியாது என்பதை திரு. ராம் நாராயண் சிங் தெரிந்து கொள்வார் என்று நம்புகிறேன். மிகப் பெருமளவுக்கு அதிகாரம் பரவலாக்கப்படுவதையும், நிதியின் நிர்வாகத்தில் உற்பத்தி யாளர்கள், தொழிலாளர்கள் மற்றும் மாகாண அரசாங்கத்துக் கிடையே மிகப் பரந்த அளவில் ஒத்துழைப்பு நிலவுவதையும் காண லாம். ஐயா, இந்த மசோதா குறித்து நடைபெற்ற விவாதங்களின் போது எழுப்பப்பட்ட விஷயங்களில் நான் பதிலளிக்காத விஷயம் எதுவும் இருக்கும் என்று நான் நினைக்கவில்லை. எனவே இதற்கு மேல் நான் எதுவும் கூற வேண்டியதில்லை என்று கருதுகிறேன்.

திரு. தலைவர்: ஆக, தீர்மானம் இதுதான்:

''பின்கண்டவர்கள் அடங்கிய ஒரு தெரிவுக்குழுவின் பரிசீலனைக்கு மசோதா அனுப்பப்பட வேண்டும்: மாண்புமிகு திரு. அசோக ராய், மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர், செல்வி மணிபென்காரா, திரு. எஸ்.சி. ஜோஷி, பாபுராம் நாராயண் சிங், திரு. ஆர். வெங்கடசுப்பா ரெட்டியார், திரு. கௌரி சங்கர் சரண்சிங், திரு. ஏ. கருணாகர மேனன், பேராசிரியர் என்.ஜி. ரங்கா, திரு. ஜியோபர்ரி டபிள்யூ டைசன், திரு. மதந்தாரி சிங், டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமது, கான் பகதூர் ஹபிக்ஸ் என். கஜான்பருல்லா, திரு. முகமது நௌமான் மற்றும் திருத்தத்தை முன்மொழிபவர்; தெரிவுக்குழு பரிசீலனையை முடித்துத் தனது அறிக்கையை 1946 ஏப்ரல் 12 ஆம் தேதிக்குள் அனுப்ப வேண்டும்; குழுவின் கூட்டத்தில் குறைந்தபட்சம் ஐந்து உறுப்பினர்கள் பங்கு கொள்வது அவசியம்.''

தீர்மானம் ஏற்கப்பட்டது.



# 66

## [1]தொழில்துறை வேலை வாய்ப்பு (நிலையாணைகள்) மசோதா

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் (தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): திரு. தலைவர் அவர்களே, பின்கண்ட தீர்மானத்தை முன்மொழிகிறேன்:*

> ''தொழில் நிலையங்களின் உரிமையாளர்கள் தங்கள் தொழில் நிலையங்களில் வேலைவாய்ப்புக்கான நிபந்தனைகளை வரையறுத்துக் கூற வேண்டும் என்று கோரும் இந்த மசோதா பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப் பட வேண்டும்.''

*ஐயா,*

இது மிகவும் எளிய மசோதா; எனக்குத் தெரிந்த வரை சர்ச்சைக்கு இடமற்ற மசோதா. எந்த ஒரு குறிப்பிட்ட தொழில் நிலையத்திலும் வேலைவாய்ப்புக்காக நிர்ணயிக்கப்படும் விதிமுறைகளும் நிபந்தனைகளும் இதற்கென நியமிக்கப்படும் தகுதிவாய்ந்த ஓர் அதிகாரியால் உறுதி செய்யப்பட வேண்டும், அத்தகைய அத்தாட்சி இது சம்பந்தமான ஒரு வகையான பதிவேடாக அமைய வேண்டும் என்பதே இந்த மசோதாவின் குறிக்கோள். வேலைவாய்ப்புக்கான விதிமுறைகளையும் நிபந்தனைகளையும் வெறுமனே பதிவு செய்வதையும் வேலைவாய்ப்பு சம்பந்தமாக விதிக்கப்படும் நிபந்தனைகள் மற்றும் விதிமுறைகளின் நியாயத்தன்மையை மதிப்பிடுவதையும் மசோதா வேறுபடுத்திக் காண்கிறது. வேலைவாய்ப்புக்கு விதிக்கப்படும் நிபந்தனைகளும் விதிமுறைகளும் எந்த அளவுக்கு நியாயமானவை என்ற பிரச்சினையில் இந்த மசோதா கவனம் செலுத்தவில்லை. இந்த மசோதாவின்படி, வேலைவாய்ப்புக்கான விதிமுறைகளையும் நிபந்தனைகளையும் ஒவ்வொரு முதலாளியும் தன் இஷ்டம்போல் நிர்ணயித்துக் கொள்ள உரிமை உண்டு. இந்த

---

1. *மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, எண். 9, ஏப்ரல் 12, 1946, பக்கங்கள் 3914.*

மசோதா வேண்டுவதெல்லாம் இதுதான்: ஒரு முதலாளி தனது தொழில் நிலையத்தில் வேலைக்கமர்த்திக் கொள்ளப்போகும் தொழிலாளர்களுக்கு விதிக்கவிருக்கும் நிபந்தனைகளையும் விதிமுறைகளையும் வகுத்துக் கொண்ட பிறகு, அவற்றை அரசாங்கத்தால் நியமிக்கப்படும் ஓர் அதிகாரியிடம் சமர்ப்பிக்க வேண்டும்; அந்த அதிகாரி இந்த நிபந்தனைகளையும் விதிமுறைகளையும் குறித்துக் கொண்டு அவற்றை ஒரு பதிவேட்டில் பதிவு செய்வார்; இந்த நிபந்தனைகளும் விதிமுறைகளும் உண்மையில் எத்தகையவை என்பதை நிர்ணயிப்பதற்கு இந்தப் பதிவேடுதான் அடிப்படையாக இருக்கும். வேறுவிதமாகச் சொன்னால், ஒருவிதமான சான்று விதிமுறையைத்தான் இந்த மசோதா உருவாக்குகிறது என்று கூற வேண்டும். இந்த மசோதா நிறைவேறிய பிறகு என்ன நடைபெறும் என்பதைப் பார்ப்போம். ஏதேனும் ஒரு குறிப்பிட்ட தொழில் நிலையத்தில் வேலைவாய்ப்பு சம்பந்தமான விதிமுறைகள் மற்றும் நிபந்தனைகள் குறித்து முதலாளிக்கும் தொழிலாளிக்கும் இடையே ஏதேனும் தகராறு ஏற்படுமானால் ஆவணச் சான்றைத்தான் சட்டம் அனுமதிக்கும்; அதாவது சான்றிதழ் அளிப்பதற்கு அதிகாரம் பெற்ற அதிகாரியால் முதலாளிக்கு வழங்கப்படும் உறுதிசெய்யப்பட்ட பிரதிதான் ஏற்றுக்கொள்ளப்படும்; வாய்மொழிச் சான்று ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது. இந்த மசோதாவின் 12ஆவது விதியை அவை நோக்கினால் இந்த விஷயம் மிகத் தெள்ளத் தெளிவாகக் கூறப்பட்டிருப்பதைக் காணலாம். அந்த விதி கூறுவதாவது:

> ''இந்த சட்டத்தின்படி இறுதியாக உறுதி செய்யப்பட்ட நிலையாணைகளை மாற்றுவது, கூடுதலாக சேர்ப்பது, அல்லது மறுதலிப்பது சம்பந்தமாக எத்தகைய வாய்மொழிச் சான்றும் எந்த நீதிமன்றத்திலும் ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது.''

இதுதான் இந்த மசோதாவின் உண்மையான நோக்கம். நான் ஏற்கெனவே குறிப்பிட்டது போன்று இதில் புதிய கோட்பாடு எதுவும் அடங்கியிருக்கவில்லை. இத்தகையதொரு சட்டம் ஏற்கெனவே பம்பாயில் நடைமுறையில் இருந்து வருகிறது. இந்த மசோதா செய்வதெல்லாம் அந்த சட்டத்தின் விதிகளை இந்தியாவில் இதர மாகாணங்களுக்கும் விஸ்தரிப்பதே ஆகும்.

இந்த மசோதாவில் இடம்பெற்றுள்ள பல விதிகள் செயல்முறை சம்பந்தப்பட்டவையே ஆகும்; வேலைவாய்ப்பு சம்பந்தமான விதிமுறைகளும் நிபந்தனைகளும் தொழிலதிபர்களிடமிருந்து

கிடைக்கப் பெறும்போது சான்றதிகாரி எவ்வாறு நடந்து கொள்ள வேண்டும் என்பதை இவை விரித்துரைக்கின்றன. அவர் சான்றிதழ் வழங்குவதற்கு முன்னர் அந்தத் தொழில் நிலையத்தில் பணிபுரியும் தொழிலாளர்களை அழைத்து அவர்களது கருத்துகளைத் தெரிந்து கொள்வது முக்கியம். தாம் தெரிவித்துள்ள நிபந்தனைகளும் விதி முறைகளும் இந்த சட்டத்திற்கு முற்றிலும் இசைந்தவையாக இருந்தும் சான்றதிகாரி சான்றிதழ் அளிக்கவில்லை என்றால் தொழிலதிபர் மேல்நீதிமன்றத்தில் முறையிட்டு, சான்றதிகாரியின் முடிவை தள்ளுபடிச் செய்யச் செய்வதற்கு உரிமை உண்டு.

நம்முன் குறுகிய நேரமே இருப்பதால், இந்த மசோதாவின் ஒவ்வொரு விதியையும் பற்றி விரிவாக எடுத்துக்கூறி, அவையின் நேரத்தை வீணாக்க நான் விரும்பவில்லை. எனினும் இந்த மசோதா அவசியமானது மட்டுமன்றி, மிக அவசரமானதும் கூட என்று அரசாங்கம் ஏன் கருதுகிறது என்பதை எடுத்துரைப்பது இன்றியமையாதது என்று நினைக்கிறேன். இந்த மசோதா அடுத்தக் கூட்டத் தொடரில் அரசாங்கம் கொண்டுவர உத்தேசித்திருக்கும் மற்றொரு மசோதாவுடன் மிக நெருக்கமாகப் பின்னி பிணைந்திருக்கும்; அதுதான் உடல்நலக் காப்பீட்டு மசோதாவாகும். இந்த உடல்நலக் காப்பீட்டு மசோதா சலுகைகள் சம்பந்தமாக சில உரிமைகளை தொழிலாளிக்கு வழங்குகிறது; அதேசமயம் உடல்நலக் காப்பீட்டு நிதிக்கு ஓரளவு பணம் செலுத்தும் கடமைப் பொறுப்பையும் விதிக்கிறது. இந்த உரிமைகளும் கடமைப் பொறுப்புகளும் பல்வேறு தொழில் நிலையங்களில் தொழிலாளிகள் பெறும் ஊதியங்களுடன் பிரிக்க முடியாதபடி இணைந்து பிணைந்துள்ளன. இந்நிலைமையில், நிதிக்கு ஒரு தொழிலாளி தர வேண்டிய பங்கு பற்றித் தகராறுகள் எழக்கூடும். காப்பீட்டு நிதியிலிருந்து ஒரு தொழிலாளி எவ்வளவு பணம் பெறுவதற்கு உரிமை பெற்றுள்ளார் என்பது குறித்துத் தகராறுகள் தோன்றக்கூடும். இத்தகைய தகராறுகளுக்கு இறுதியாகத் தீர்வு காணும் பொருட்டு, தொழிலாளிகள் வேலைக்குச் சேர்ந்த போது விதிக்கப்பட்ட நிபந்தனைகளும் விதிமுறைகளும் எழுத்து மூலமாக பதிவு செய்யப்படுவது அவசியம் என்று அரசாங்கம் கருதுகிறது; அப்போதுதான் தொழிலாளர்களின் ஊதியங்கள் மற்றும் வேலை நிலைமைகள் பற்றிய எத்தகைய குற்றச்சாட்டுகளுக்கும் அப்பாற்பட்ட சான்றை நாங்கள் பெறமுடியும். உண்மையைக் கூறுவதானால், தொழில் நிலையங்களில் பணிபுரியும் தொழிலாளர்களின்

வேலை நிலைமை குறித்த சில குறிப்பிட்ட விஷயங்களை எத் தகைய ஆட்சேபத்துக்கும், ஐயத்துக்கும், சிக்கலுக்கும் இடமின்றித் தெரிந்து கொண்டாலொழிய காப்பீட்டு நிதியை உருவாக்குவது மிகவும் கடினம் என்று நாங்கள் உணர்ந்தோம்.

இந்தக் கருத்துகளுடன் இந்த மசோதா பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்பட வேண்டும் என்று முன்மொழிகிறேன்.

★ ★ ★

[1]**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** திரு. தலைவர் அவர்களே, இந்த மசோதா நிறைவேற்றப்பட வேண்டும் என்ற எனது தீர்மானம் இப்போது நாம் செவிமடுத்த இத்தகைய விவா தத்தை எழுப்பும் என்று நான் எதிர்பார்க்கவில்லை. அதிலும் குறிப் பாக மதிப்பிற்குரிய என்னுடைய நண்பர் டாக்டர் சர் ஜியாவுத்தீன் அகமதின் உரையைக் கேட்டு என்னால் வியப்படையாமல் இருக்க முடியவில்லை. அவர் தமது நண்பகலுணவுக்கு சீரணிக்க முடியாத எதையோ சாப்பிட்டு விட்டதன் விளைவுதான் அவரது இந்த உரையோ என்று அஞ்சுகிறேன்; ஏனென்றால் தொழிலாளர்களுக் கான சட்டங்கள் இயற்றப்பட வேண்டுமென்பதில் அளவற்ற ஆர்வ மு[illegible]யவர் டாக்டர் ஜியாவுத்தீன் அகமது என்பதை நாம் அனை வரும் அறிவோம்; இன்னும் அதிக முக்கியத்துவம் வாய்ந்த தொழி லாளர் சட்டங்களை தாமதிக்காமல் கொண்டு வருவது அவசியம் என்று இந்த அவையில் பல சந்தர்ப்பங்களில் அவர் வலியுறுத்தி யிருக்கிறார். ஆனால் இன்றோ இதற்கு நேர்மாறான முறையில் பேசி யிருக்கிறார். எனினும் அவர் தெரிவித்த கருத்துகளுக்கு என்னுடைய நண்பர் திரு. சித்திக்கி மிகச் சரியான முறையில் பதிலளித்திருப்பது குறித்து மிகுந்த மகிழ்ச்சி அடைகிறேன்; இதற்குமேல் இந்த விஷயம் குறித்து அவையில் பேச வேண்டிய அவசியமில்லை என்று கருது கிறேன்.

அவர் தெரிவித்த கருத்துகளில் ஒன்றுக்கு மட்டும் பதிலளிக்க விரும்புகிறேன். இந்த மசோதா சம்பந்தமாக போதிய முன்னறிவிப்பு தரப்படவில்லை என்று அவர் கூறினார். இந்த விஷயம் குறித்த உண்மை நிலைமை இதுதான்: இந்த மசோதா இடம்பெற்ற நிகழ்ச்சி

1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, எண். 9, ஏப்ரல் 12, 1946, பக்கம் 3926.

நிரல் வெள்ளிக்கிழமை 6 ஆம் தேதியன்றே மதிப்பிற்குரிய உறுப் பினர்களுக்கு விநியோகிக்கப்பட்டது. அந்த நிகழ்ச்சி நிரலில் இந்த மசோதா சட்டமன்ற நடவடிக்கைகளில் முதல் இடத்தைப் பெற்றி ருந்தது. அதுமட்டுமன்றி 1946 ஏப்ரல் 12 ஆம் தேதி வெள்ளியன்று இது முதல் விஷயமாகப் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்படும் என்று நிகழ்ச்சி நிரலின் அடிக்குறிப்பிலும் குறிப்பிடப்பட்டிருந்தது. இந்த ஆறுநாள் முன்னறிவிப்பு போதுமானதல்ல என்று எவ்வாறு கருத முடியும் என்று எனக்குத் தெரியவில்லை.

இந்த மசோதாவைப் பொறுத்த வரையில், 15 நிமிடங்களுக் குள் இதற்கு அவையின் ஒப்புதலைப் பெற்றுவிட முடியும் என்று நம்பினேன். ஆனால் இந்த மசோதா சம்பந்தமாக இப்போது ஏறத் தாழ 1 மணி 5 நிமிடங்கள் செலவிட்டுள்ளோம். எனவே, இந்த மசோதாவை அவசரகதியாக அவையில் நிறைவேற்ற நான் முயற் சிப்பதாக எவரும் எப்படிக் கூற முடியும் என்று எனக்குத் தெரிய வில்லை.

என்னுடைய நண்பர் திரு. இன்ஸ்கிப்த் எழுப்பிய பிரச்சினை யைப் பொறுத்தவரையில், தங்களுடைய கட்சிக்காரர்களைக் கலந் தாலோசிக்க போதிய முன்னறிவிப்புத் தரப்படவில்லை என்று கூறினார்; இந்த மசோதாவின் முந்தைய வரலாற்றை அவர் முற்றிலு மாக தவறாகப் புரிந்து கொண்டுவிட்டார் அல்லது மறந்து விட்டார் என்றே தோன்றுகிறது. இந்த மசோதா 1944 ஆம் ஆண்டிலேயே நிரந்தரத் தொழிலாளர் குழு முன் வைக்கப்பட்டது. அந்தக் குழு இம்மசோதா மிக அவசியமானதென்றும், இது எத்தகைய சர்ச்சைக்கு இடமற்றதாதலால் அவசர சட்ட வடிவத்தில் அதனை அரசாங்கம் நிறைவேற்றலாம் என்றும் ஒருமனதாகப் பரிந்துரைத்தது. ஆனால் நாங்கள் அவ்வாறு செய்யவில்லை. இதன் பின்னர் இந்தியத் தொழி லாளர் மாநாட்டில் இவ்விஷயம் மீண்டும் விவாதிக்கப்பட்டது.

தற்போது அவை முன் வைக்கப்பட்டுள்ள இந்த மசோதா தொழிலாளர் மாநாட்டில் முன்வைக்கப்பட்ட வடிவத்தில் இல்லை என்று அவர் மற்றொரு பிரச்சினையை எழுப்பினார். இது முற்றிலும் தவறான கருத்து என்று அவருக்குக் கூற விரும்புகிறேன். முத்தரப்பு மாநாட்டில் இந்த மசோதா எந்த வடிவத்தில் முன்வைக்கப்பட்டதோ அதில் எத்தகைய மாற்றத்தையும் அரசாங்கம் செய்யவில்லை.

சிறு தொழிற்சாலைகளுக்கு இந்த மசோதா எந்த அளவுக்குப் பொருந்தும் என்று என்னுடைய நண்பர் பேராசிரியர் ரங்கா ஒரு பிரச்சினையை எழுப்பியிருந்தார். நண்பர் திரு. கிவில்டும் இதனையே வலியுறுத்தி இதற்கு நான் விளக்கம் அளிக்க வேண்டும் என்று கோரினார். இந்த மசோதாவிலுள்ள விதி 1-இன் 3ஆவது துணை விதியைப் படிக்கும் எவரும் இந்த மசோதா நூறும் அல்லது அதிகமான தொழிலாளர்களை வேலைக்கமர்த்திக் கொண்டுள்ள தொழில் நிலையங்களுக்கு மட்டுமே பொருந்தும் என்று தவறாகப் புரிந்து கொள்ள மாட்டார்கள்; ஏனென்றால் அந்தந்த அரசாங்கம் அவ்வப்போது அரசினர் செய்தி இதழில் வெளியிட்டு இதனை எவ்வகையான தொழில் நிலையத்துக்கும் விஸ்தரிக்க சர்க்காருக்கு அதிகாரம் இருக்கிறது என்று இந்தத் துணைவிதி கூறுவதைப் பார்க்கலாம். ஆக, நூறு பேருக்கும் குறைவான தொழில் நிலையங்களுக்கு இதனை பயன்படுத்தும் அதிகாரத்தை அரசாங்கம் தன் கைகளில் வைத்துக் கொண்டிருக்கிறது என்பது தெள்ளத் தெளிவு. எனவே, நூறுபேரும் அதற்கும் மேற்பட்டவர்களை பணியிலமர்த்திக் கொண்டுள்ள தொழில் நிலையங்களுக்குத்தான் இந்த மசோதா பிரதானமாகப் பொருந்தும்; இந்த எண்ணிக்கைக்கும் குறைவானவர்களை வேலைக் கமர்த்திக் கொண்டுள்ள தொழில் நிலையங்களுக்கு இது பொருந்தாது என்ற அச்சம் முற்றிலும் ஆதாரமற்றது என்பதை உறுதிப்படுத்த விரும்புகிறேன்.

திவான் சமன்லால்: நான் ஒரு நிமிடம் குறுக்கிடலாமா? பக்கம் 2, விதி 2 (இ) (ii)-இல் தொழில் நிலையம் என்பதற்கு சொற்பொருள் விளக்கம் கூறும்போது ''தொழிற்சாலைகள் சட்டம் பிரிவு 2-இன் (l) விதியின்படி வரையறுத்துக் கூறப்பட்டுள்ள தொழிற்சாலைகளையே இது குறிக்கும்'' என்று தெரிவிக்கப்பட்டுள்ளது. இங்கு வரையறுத்துக் கூறப்பட்டிருக்கும் தொழிற்சாலை என்பது தொழிற்சாலைகள் சட்டத்தில் பொருள் வரையறை செய்யப்பட்டிருக்கும் தொழிற்சாலையையே குறிக்கும் என்று நான் எடுத்துக் கொள்கிறேன். ஆனால் 20 பேர் பணிபுரியும் ஒரு தொழிற்சாலை இங்கு கூறப்பட்டிருக்கும் ''தொழில் நிலையத்துக்கு'' அளிக்கப்பட்டுள்ள பொருள் வரையறைக்குள் வராது.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஆனால் 20 பேர் பணிபுரியும் ஒரு தொழிற்சாலைக்குக் கூட அரசாங்கம் இதனைப் பயன்படுத்தலாம்.

*திவான் சமன்லால்:* பயன்படுத்தலாம்; ஆனால் பயன்படுத்த வேண்டும் என்பதை அது குறிக்காது.

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* நூறு பேர்களைக் கொண்ட தொழிற்சாலையுடன் நாங்கள் ஆரம்பிக்கிறோம்.

*திரு. லெஸ்லி கிவில்ட்:* இதற்கும் குறைவாக ஏன் ஆரம் பிக்கக் கூடாது?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இதற்கும் குறை வான எண்ணிக்கையிலிருந்து அரசாங்கம் தொடங்குவதை தடுக்கக் கூடியது எதுவும் இல்லை.

*திவான் சமன்லால்:* இந்தியத் தொழிற்சாலைகள் சட்டம் இருபது பேர் மட்டுமே பணிபுரியும் தொழிற்சாலைக்குப் பொருந்தும் என்றால், இந்த மசோதாவின்படி இதேபோன்ற ஒரு தொழில் நிலையத்துக்கும் ஏன் பொருந்தக் கூடாது?

*மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:* இருபது பேர் பணியாற்றும் தொழிற்சாலைகள் மீது கூட இந்தக் கடமைப் பொறுப்பை அரசாங்கம் சுமத்துவதைத் தடுக்கும் எதுவும் இந்த சட் டத்தில் இல்லை. இப்போதைக்கு ஒரு தொடக்கத்துக்கு அடிபோடு வோம் என்றுதான் நினைத்தோம். தவிரவும், ஒவ்வொரு தொழிற் சாலைக்கும் இதனை விஸ்தரிப்பது என்றால், நிர்வாக அமைப்பு மிகவும் பரந்ததாக இருக்க வேண்டும். சான்றதிகாரிகள் மற்றும் மேல் முறையீட்டமைப்புகள் போன்றவற்றின் எண்ணிக்கையும் மிக அதிக மாக இருக்க வேண்டும். இத்தகைய ஒரு நிர்வாக அமைப்பை தற்போது எந்த மாகாண அரசாங்கத்தாலும் வழங்க இயலாது. எனவே, மிதமான அளவில் இப்பணியைத் தொடங்க வேண்டிய அவசியத்தில் இருக்கிறோம்; இத்தகைய விஸ்தரிப்பு அவசியப்படும் போது அதனைச் செய்யும் அதிகாரத்தை எங்கள் கையில் வைத்திருக் கிறோம்.

இந்தத் தீர்மானம் குறித்து நிகழ்த்தப்பட்ட உரைகளின் போது எழுப்பப்பட்ட பிரச்சினைகளில் விளக்கம் தேவைப்படும் வேறு எந்த விஷயமும் இல்லை என்றே கருதுகிறேன்.

எனவே, ஐயா என் தீர்மானத்தை முன்மொழிகிறேன்:

திரு. தலைவர்: தீர்மானம் இதுதான்:

''திருத்தப்பட்ட இந்த மசோதா ஏற்கப்பட வேண்டும்''.

தீர்மானம் நிறைவேறியது.



# 67

## [1]மைக்கா சுரங்கத் தொழிலாளர் சேமநலநிதி மசோதா

***மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்*** *(தொழிலாளர் நலத்துறை உறுப்பினர்): ஐயா, பின்கண்ட தீர்மானத்தை முன்மொழி கிறேன்:*

> *''மைக்கா சுரங்கத் தொழிலில் பணியிலமர்த்தப்பட்டிருக்கும் தொழி லாளர்களின் சேம நலனை மேம்படுத்தும் நடவடிக்கைகளுக்குப் பணம் கொடுத்து உதவும் ஒரு நிதியை அமைக்க வகை செய்யும் இந்த மசோதா தெரிவுக்குழு பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்பட வேண்டும்.''*

*தெரிவுக்குழுவிலிருந்து திரும்பி வந்துள்ள மசோதா ஏறத்தாழ அதன் மூல வடிவத்திலேயே உள்ளது; அத்தனை முக்கியத்துவ மில்லாத ஒரு சில மாற்றங்களே செய்யப்பட்டுள்ளன. எனவே இதற்கு மேல் விரிவாகப் பேசுவது தவறு என்று கருதுகிறேன். ஆதலால் தீர்மானத்தை இங்கு முன்மொழிகிறேன்.*

***திரு. துணைத் தலைவர்:*** *தீர்மானம் வருமாறு:*

> *''மைக்கா சுரங்கத் தொழிலில் பணியிலமர்த்தப்பட்டிருக்கும் தொழிலாளர் களின் சேம நலனை மேம்படுத்தும் நடவடிக்கைகளுக்குப் பணம் கொடுத்து உதவும் ஒரு நிதியை அமைக்க வகை செய்யும் இந்த மசோதா தெரிவுக்குழு பரிந்துரைத்தபடி பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்பட வேண்டும்.''*

*தீர்மானம் ஏற்கப்பட்டது.*

***திரு. துணைத் தலைவர்:*** *தீர்மானம் வருமாறு:*

*விதி 2 மசோதாவின் பகுதியாக அமைகிறது.*

---

*1. மத்திய சட்டமன்ற விவாதங்கள், தொகுதி V, எண். 4, ஏப்ரல் 15, 1946, பக்கம் 4024.*

தீர்மானம் ஏற்கப்பட்டது.

விதி 2 மசோதாவில் சேர்க்கப்பட்டது.

விதிகள் 3 மற்றும் 4 மசோதாவில் சேர்க்கப்பட்டன.

**திரு. துணைத் தலைவர்:** விதி 5

**பண்டிட் முகுத் பீகாரிலால் பார்கவா (ஆஜ்மீர்-மேர்வரா: பொது):** ஐயா, பின்கண்ட திருத்தத்தை முன்மொழிகிறேன்.

> ''மசோதாவின் விதி 5-இன் உபவிதி 3(ஏ)யில் 'நிதி' என்ற சொல்லுக்குப் பின்வரும் 'மேலும்' என்ற சொல்லுக்கு முன்னரும் பின்கண்ட வாசகம் சேர்க்கப்பட வேண்டும்:
>
> 'சூரியாஸ்தமனத்துக்கும் சூரியோதயத்துக்கும் இடைப்பட்ட நேரத்தில் ஒரு தனியார் குடியிருப்பில் எந்த ஓர் அதிகாரியும் பிரவேசிப்பதற்குச் சட்ட இசைவு அளிக்கப்படக் கூடாது; அதிலும் இத்தகைய குடியிருப்பில் பெண்கள் வசிப்பார்களேயானால் அங்குள்ளவர்களுக்கு முறையாக முன்னறி விப்புத் தராமல் அதிகாரி எவரும் பிரவேசிக்கக் கூடாது.''

**திரு. துணைத் தலைவர்:** மதிப்பிற்குரிய உறுப்பினர் இந்தத் திருத்தத்துக்கு இப்போதுதான் அறிவிப்புத் தந்திருக்கிறார். இதனால் இந்தத் திருத்தம் அவையின் உறுப்பினர்களிடையே சுற்றுக்கு விடப் படவில்லை.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, இந்தத் திருத்தத்தை நான் எதிர்க்கிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** இந்தத் திருத்தம் மிகவும் தாமத மாகச் சமர்ப்பிக்கப்படுவதால் இந்தக் கட்டத்தில் அதனை அனுமதிப் பதற்கில்லை.

**பேராசிரியர் என்.ஜி. ரங்கா (குண்டூர்-நெல்லூர்: முகமதிய ரல்லாத ஊரகத் தொகுதி):** இந்தத் தீர்மானம் சம்பந்தமாக உங்க ளுக்கு ஆட்சேபம் ஏதும் உண்டா?

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** இதனை வன்மை யாக ஆட்சேபிக்கிறேன்.

**திரு. துணைத் தலைவர்:** விதி 5 பற்றி மதிப்பிற்குரிய உறுப்பினர் பேச விரும்புகிறாரா?

**பண்டிட் முகுத் பீகாரி லால் பார்கவா:** இல்லை, ஐயா.

**திரு. துணைத் தலைவர்:** தீர்மானம் வருமாறு:

''விதிகள் 5-ம், 6-ம் மசோதாவின் பகுதிகளாகின்றன.''

தீர்மானம் ஏற்கப்பட்டது.

விதிகள் 5-ம், 6-ம் மசோதாவில் சேர்க்கப்பட்டன.

விதி 1 மசோதாவில் சேர்க்கப்பட்டது.

தலைப்பும் பீடிகையும் மசோதாவில் சேர்க்கப்பட்டன.

**மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர்:** ஐயா, நான் பின்வருமாறு முன்மொழிகிறேன்:

''திருத்தப்பட்டபடி மசோதா நிறைவேறியது.''

**திரு. துணைத் தலைவர்:** தீர்மானம் பின்வருமாறு:

''திருத்தப்பட்டபடி மசோதா நிறைவேறியது.''



# 68

## கதம்பச் செய்திகள்

### [1]ஷெட்யூல்டு வகுப்பு மாணவர்களுக்கு உபகாரச் சம்பளங்கள்

ஷெட்யூல்டு வகுப்பினரது கல்வித் தகுதியையும் பொருளாதார நிலையையும் மேம்படுத்தும் பொருட்டு பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ள இவ்வகுப்புகளைச் சேர்ந்த மாணவர்களுக்கு 1946-47 ஆம் ஆண்டுக்கு உபகாரச் சம்பளங்கள் அளிப்பதென இந்திய அரசாங்கம் முடிவு செய்துள்ளது; மெட்ரிக்குலேஷன் கட்டத்திற்கு மேலே விஞ்ஞான, தொழில்நுட்பப் பாடங்களில் மேற்படிப்புப் படிக்க விரும்புவோருக்கு இந்த உபகாரச் சம்பளங்கள் வழங்கப்படும். இந்தியாவில் படிப்பை தொடர்பவர்களுக்கு மட்டுமே இந்த உபகாரச் சம்பளங்கள் அளிக்கப்படும்; வெளிநாடுகளில் சென்று படிக்க விரும்புபவர்களுக்கு இந்த ஆண்டு உபகாரச் சம்பளங்கள் வழங்கப்பட மாட்டா.

இவ்வாறு வழங்கப்படும் உபகாரச் சம்பளங்களில் போதனைக் கட்டணம் மற்றும் இதர பராமரிப்பு செலவுகள் உட்பட கல்விக்கான செலவு முழுதும் அடங்கும். சுருக்கெழுத்து, தட்டெழுத்துப் பயிற்சியைப் பொறுத்தவரையில் மாதம் 20 ரூபாய் வீதம் குறுகிய காலத்துக்கே உதவிச் சம்பளம் அளிக்கப்படும்.

பின்கண்ட படிப்புகளுக்கு உபகாரச் சம்பளங்கள் வழங்கப்படும்:

(1) விஞ்ஞான பாடத்துடன் கூடிய இண்டர்மீடியட் (2)பி.எஸ்ஸி (தேர்வு அல்லது ஹானர்ஸ்), (3) எம்.எஸ்ஸி., (4) பொறியியல், (5) தொழில்நுட்பம், (6) மருத்துவம், (7) வேளாண்மை, (8) ஆசிரியர் பயிற்சி, (9) குறுக்கெழுத்து மற்றும் தட்டச்சு.

---

1. இந்திய தகவல் ஏடு, மார்ச் 15, 1946, பக்கம் 310.

இண்டர்மீடியட்டிலும் பட்டப் படிப்பிலும் படிக்கும் மாணவிகள் தங்களது படிப்பு முடிந்ததும் ஆசிரியர் பயிற்சியை மேற்கொள்வோம் என உறுதிமொழி தந்தால் அவர்களுக்கு உபகாரச் சம்பளங்கள் வழங்கப்படும். இந்த உறுதிமொழியை நிறைவேற்றத் தவறினால் தங்களது உபகாரச் சம்பளத் தொகையை திருப்பித் தந்து விட வேண்டும்.

## [1]டி.வி.ஏ. நிபுணர்கள் தாமோதர் பள்ளத்தாக்குத் திட்டத்துக்கு ஆலோசனை கூறி உதவுவர்

டென்னஸ்ஸி பள்ளத்தாக்கு அமைப்பைச் சேர்ந்த (டி.வி.ஏ.) பிரபல பொறியாளர்களான திரு. ரோஸ் எம். ரீஜலும், திரு. பிரெட் சி. சிச்செலம்பர் ஆகியோர் இந்தியா வந்து சேர்ந்திருக்கின்றனர்; மைத்தோன், அலியார், பஞ்சத் குன்று திட்டங்கள் சம்பந்தமாக மத்திய தொழில்நுட்ப மின்விசை வாரியத்துக்கு ஆலோசனை கூறி உதவுவதற்காகவே அவர்கள் வந்துள்ளனர். இவை தாமோதர் திட்டத்தில் இடம்பெறும் முதல் மூன்று அணைக்கட்டு இடங்களாகும். இவற்றுக்கான உருவரைபடங்களும் விரிவான மதிப்பீடுகளும் தற்போது தயாரிக்கப்பட்டு வருகின்றன. மைத்தோன் திட்டத்துக்கான உருவரைபடத்தையும் மதிப்பீடுகளையும் தயாரிக்கும் பணி ஏறத்தாழ இறுதிக் கட்டத்தை அடைந்துள்ளது. இதர திட்டங்களைப் பொறுத்தவரையில் இடவியல்பு விளக்க விவரங்களும் ஏனைய தகவல்களும் இப்போது சேகரிக்கப்பட்டு வருகின்றன.

### நான்கு அறிக்கைகள்

திரு. ரீஜலும் திரு. சிச்செலம்பரும் இந்தியாவில் எட்டு வாரங்களுக்கு மேல் தங்கியிருக்க முடியும் என்று எதிர்பார்க்க முடியாது. அமெரிக்க வெளிவிவகாரத் துறையின் அங்கீகாரத்தின் பேரிலேயே அவர்களது சேவையை டென்னெஸ்ஸி பள்ளத்தாக்கு அமைப்பு இந்திய அரசாங்கத்துக்கு வழங்கியுள்ளது. இரண்டு பிரபல இந்திய சிவில் பொறியாளர்களும் இவர்களுடன் ஒத்துழைப்பர் என்று எதிர்பார்க்கப்பட்டது. ஆனால் ''உணவு உற்பத்தியைப் பெருக்கும்'' இயக்கத்தை ஒட்டி பல பாசனத் திட்டங்களில் கவனம்

1. இந்தியத் தகவல் ஏடு, ஏப்ரல் 1, 1946, பக்கம் 403.

செலுத்த வேண்டியிருப்பதால் இந்தியப் பொறியாளர்கள் இந்தப் பணியில் இன்னமும் ஈடுபட முடியாத நிலைமையில் இருக்கின்றனர்.

இந்தக் குழு நான்கு அறிக்கைகளைத் தயாரித்து அளிக்க வேண்டும். இவற்றில் இரண்டு அறிக்கைகள் மத்திய தொழில்நுட்ப மின்விசை வாரியத்திடம் சமர்ப்பிக்கப்பட வேண்டியவை. அணைக் கட்டுகளின் வடிவமைப்பு சம்பந்தமாகவும், அவற்றைக் கட்டுவதற்கான கால அட்டவணை சம்பந்தமாகவும் வாரியம் சமர்ப்பித்துள்ள யோசனைகள் குறித்த விமர்சன ரீதியான ஆய்வு இரண்டு அறிக்கைகளில் அடங்கும். ஏனைய இரண்டு அறிக்கைகள் இந்திய அரசாங்கத்திடம் வழங்கப்படும். விரிவான உருவரைகளைத் தயாரிக்கும் முறைகளையும், கட்டுமானப் பணியை மேற்கொள்ளும் வழிகளையும் பற்றிய பரிந்துரைகள் இவற்றில் இடம்பெற்றிருக்கும்.

## [1]தொழிலாளர்களின் நல்வாழ்வுக்கான பொறுப்பாண்மை நிதிகள்

தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் தலைமையில் புதுடில்லியில் மார்ச் 15, 16 தேதிகளில் நிரந்தரத் தொழிலாளர் குழுவின் எட்டாவது கூட்டத்தொடர் நடைபெற்றது. தொழிலாளர்களின் நல்வாழ்வுக்கான பொறுப்பாண்மை நிதிகள் அமைப்பது சம்பந்தமாக இக்கூட்டத் தொடரில் விவாதிக்கப்பட்டது. தொழிலதிபர்கள் தங்களது லாபத்தில் ஒரு குறிப்பிட்ட சதவிகிதத்தை இந்நிதிக்கு வழங்க வேண்டும், தொழிலாளர்கள் மற்றும் முதலாளிகளின் பிரதிநிதிகள் அடங்கிய ஒரு குழுவால் இந்த நிதி நிர்வகிக்கப்பட வேண்டும் என்னும் யோசனை கூட்டத்தில் பரிசீலிக்கப்பட்டது. தொழிலாளர்களின் சேமநல நிதிக்கு முதலாளிகளின் பங்கு சட்டரீதியாகக் கட்டாயப்படுத்தப்பட வேண்டுமா என்பதும் விவாதிக்கப்பட்டது.

ஒழுங்குப்படுத்தப்படாத தொழிற்சாலைகளுக்கு மத்திய சட்டங்கள் இயற்றுவது, தொழில் தகராறு சட்டத்தில் திருத்தங்கள் செய்வது, தொழிற்சாலைகளில் தொழிலாளர்கள் எந்த அளவுக்கு வேலைவாய்ப்பின்மையால் பாதிக்கப்படுவர். வேலை நிறுத்தங்கள் அல்லது கதவடைப்புகளின்போது வேலைவாய்ப்பு நிலையங்கள்

1. இந்திய தகவல் ஏடு, ஏப்ரல் 15, 1946, பக்கம் 442.

மேற்கொள்ளும் நிலைப்பாடு, ஐ.எல்.ஓ. வெளியிடவிருக்கும் சுரங்கத் தொழிலாளர்கள் பிரகடனம் முதலியவையும் குழுக் கூட்டத்தில் விவாதிக்கப்பட்ட ஏனைய விஷயங்களில் அடங்கும்.

மத்திய, மாகாண அரசாங்கங்கள், இந்திய சமஸ்தானங்கள், முதலாளிகள் மற்றும் தொழிலாளர்களின் அமைப்புகள் முதலிய வற்றின் பிரதிநிதிகள் கூட்டத்தில் பங்கு கொண்டனர். லாலா கிரிபா நாராயண், திரு. சாந்திலால் மங்கல்தாஸ், திரு. பகவான்தாஸ் சி. மேத்தா, மாண்புமிகு திரு. எச்.டி. டவுன்எண்ட், ராய் பகதூர் சியாமனந்தன் சகாய் ஆகியோர் முதலாளிகளின் சார்பிலும், திருவாளர் கள் என்.எம். ஜோஷி, என்.வி. பாத்கே, வி.எஸ். கார்னிக், ஏ.கே. முகர்ஜி, ஆர்.ஆர். போலே ஆகியோர் தொழிலாளர்களின் சார்பிலும் கலந்து கொண்டனர்.

## [1]தொழிலாளர்களின் சமூகப் பாதுகாப்பு

### ரெகி குழு அறிக்கை

திரு. டி.வி. ரெகி ஐ.சி.எஸ்ஸைத் தலைவராகவும், திரு. எஸ்.ஆர். தேஷ்பாண்டே, டாக்டர் அகமது முக்தார், பேராசிரியர் பி.பி. அதர்கார் ஆகியோரை உறுப்பினர்களாகவும் கொண்ட தொழி லாளர் விசாரணைக் குழுவை 1944 பிப்ரவரி 12 ஆம் தேதி இந்திய அரசாங்கம் அமைத்தது. தொழிலாளிகளின் நிலைமை குறித்த அனைத்து அம்சங்களையும் கொண்ட 35 அறிக்கைகளை இந்தக் குழு சமர்ப்பித்தது; இந்த அறிக்கைகள் ஏறத்தாழ 20 லட்சம் சொற்களைக் கொண்டவையாகும். இவற்றில் இருபது அறிக்கை கள் ஏப்ரல் 9 ஆம் தேதி மத்திய சட்டமன்றத்தில் தொழிலாளர் நலத் துறை உறுப்பினர் மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கரால் சமர்ப்பிக்கப்பட்டது.

குறிப்பிட்ட 38 தொழில்களில் தொழிலாளர்களின் ஊதி யங்கள், வருவாய்கள், வேலைவாய்ப்பு, குடியிருப்பு வசதி, சமூக நிலைமைகள் போன்றவை குறித்த தகவல்களை இந்தக் குழு சேக ரித்துத் தந்தது. இந்தத் தொழில்கள் வருமாறு: **சுரங்கத்தொழில்** - நிலக்கரி, மாங்கனீஸ், தங்கம், மைக்கா, இரும்புத் தாது, உப்பு; **தோட்டத்தொழில்** - தேயிலை, காபி, ரப்பர்; **தொழிற்சாலைகள்** - பஞ்சு,

1. இந்தியத் தகவல் ஏடு, ஏப்ரல் 15, 1946, பக்கம் 568.

சணல், பட்டு, கம்பளி, எண்ணெய், கப்பல் கட்டுதல் மற்றும் பழுது பார்த்தல், பொறியியல், சிமெண்டு, தீப்பெட்டிகள், காகிதம், கம்பளம் நெய்தல், கயிறு முறுக்குதல், தோல் பதனிடுதல், தோல் பொருள்கள் தயாரிப்பு, மட்பாண்டத் தொழில், அச்சகங்கள், கண்ணாடிப் பொருள்கள் தயாரிப்பு, மருந்துகள் தயாரிப்பு, அரக்குத் தொழில், பீடி தயாரிப்பு, மைக்கா தகடுகள் வெட்டுதல், சர்க்கரை, பருத்தி, பஞ்சினின்று பருத்திக் கொட்டைகளை அகற்றுதல், அரிசி மில்கள்; **போக்குவரத்து**-டிராம்கள், பேருந்துகள், அரசு பதிவு பெறாத ரயில்வே ஊழியர்கள்; **இதர துறைகளைச் சேர்ந்த ஊழியர்கள்** - துறைமுகத் தொழிலாளர்கள், நகரசபை ஊழியர்கள், மத்தியப் பொதுப்பணி ஊழியர்கள், ரிக்ஷா தொழிலாளிகள். தொழிலாளர்களின் சமூகப் பாதுகாப்புக்கு எதிர்காலத்தில் திட்டமிடுவதற்கும் அரசாங்கம் சட்டங்கள் இயற்றுவதற்கும் இந்தத் தகவல் சேகரிப்புப் பெரிதும் உதவிகரமாக இருக்கும்.

## மாதிரி முறை

தொழிலாளர்களின் பிரச்சினைகள் பிராந்திய ரீதியில் விட தொழில் ரீதியில் இருப்பதை உணர்ந்த குழு மாதிரி முறையை மேற்கொண்டது; இந்தியா முழுவதிலும் தொழில்ரீதியான ஆய்வை நடத்திற்று. குழுவின் இரண்டாண்டுக்கால பணியின்போது, அதன் தலைவரும் உறுப்பினர்களும் ஸ்ரீநகரிலிருந்து திருச்சிராப்பள்ளி வரையிலும், குவட்டாவிலிருந்து ஷில்லாங் வரையிலும் 65 தொழில் நிலையங்களைத் தனித்தனியாகப் பார்வையிட்டு ஆய்வுகள் நடத்தினர். தேயிலைத் தோட்டங்கள், சுரங்கங்கள் உட்பட 528 மையங்களில் நேரடி ஆய்வுகள் நடத்தப்பட்டன. பல்வேறு தொழில் துறைகளைச் சேர்ந்த 1631 தொழில் நிலையங்கள் ஆய்வு செய்யப்பட்டன. பல்வேறு தொழில்துறை அமைப்புக்கும், மாகாண, மத்திய அரசாங்கங்களுக்கும், தொழிலதிபர்கள் மற்றும் தொழிலாளர் அமைப்புகளுக்கும் நூற்றுக்கணக்கான கேள்விகள் அனுப்பப்பட்டன. ஊதிய விவரங்கள் சம்பந்தப்பட்ட வரை மட்டும் 34,080 படிவங்கள் கிடைக்கப் பெற்றன. இதிலிருந்து இந்தக் குழு எத்தகைய விரிவான பணியை மேற்கொண்டுள்ளது என்பதைத் தெரிந்து கொள்ளலாம். 16 மேற்பார்வையாளர்களையும், 45 விசாரணையாளர்களையும் கொண்ட பணியாளர் குழாமை இந்தக் குழு வேலைக்கமர்த்திக் கொண்டது; இந்தப் பரிவாரத்தினர் குறிப்பிட்ட ஆய்வுப் பணிகளுக்காக

ஆங்காங்கு அனுப்பி வைக்கப்பட்டனர். இவர்கள் பல்வேறு கேந்தி ரங்களுக்கு நேரில் சென்று அநேக அரிய தகவல்களைத் திரட்டிய தோடு, வேறு சில ஆதாரங்களிலிருந்தும் முக்கியத் தகவல்களைச் சேகரித்தனர். இவர்கள் தங்களது ஆய்வின்போது தொழிலதிபர்களை யும், தொழிலாளர்களையும் அதிகாரிகளையும் நேரில் சந்தித்துப் பேசினர்.

ஆய்வுக்காகப் பிராந்திய வாரியாக மையங்கள் தேர்ந் தெடுக்கப்பட்டன; நாட்டின் பல்வேறு பகுதிகளிலும் பரவியுள்ள ஒரே தொழிலில் தொழிலாளர்களின் நிலைமைகளில் காணப்படும் வேறுபாட்டைக் கண்டறியும் பொருட்டே இவ்வாறு செய்யப் பட்டது. ஒரு தொழில் நிலையத்தைத் தேர்ந்தெடுப்பது அதன் அளவு முதலிய அதன் முக்கியத்துவத்தையும் சட்டரீதியான ஒழுங்கு முறைகளுக்கு அது உட்பட்டதா என்பதையும் பொதுவாக அடிப் படையாக கொண்டிருந்தது. தற்போது நடைமுறையிலுள்ள சட்டங் களுக்கு அளிக்கப்படும் பாதுகாப்பு, தொழிலாளர்களின் ஊதியங் கள், வருவாய், அவர்களது வேலை நிலைமைகள், அவர்களுக் குள்ள கடன் சுமை, வயது, மரண விகிதம், சேமநல நடவடிக்கை கள், சமூகப் பாதுகாப்பு முதலிய பல்வேறு விஷயங்கள் குறித்து விசாரணைகள் மேற்கொள்ளப்பட்டன.

குழுவுக்கு அதன் பணியில் மாகாண அரசாங்கங்களும், சமஸ்தான அரசாங்கங்களும், ஸ்தல ஸ்தாபன அமைப்புகளும், துறைமுக அதிகாரிகளும், தொழிலதிபர்கள் மற்றும் தொழிலாளர் அமைப்புகளும் பெருமளவுக்கு உதவியும் ஒத்துழைப்பும் நல்கின.

## பொதுப்பணிகள், சுரங்கங்கள், மின்விசைத்துறை

பொதுப்பணிகள், சுரங்கங்கள், மின்விசைத்துறை என்னும் ஒரு புதிய துறை நிறுவப்பட்டதைத் தொடர்ந்து தொழிலாளர் இலாகாவின் பிரிவினை ஏப்ரல் 8 ஆம் தேதி முதல் நடைமுறைக்கு வந்தது.

மத்தியப் பொதுப்பணிகள், மத்தியத் திட்டங்களை நிறை வேற்றுதல், சிவில் பொறியியல், சுரங்கங்கள், கனிமங்கள், இந்தியா வின் மண்ணியல் ஆய்வு, மத்திய நீர்வளங்கள் உட்பட பிரதான

பாசன மற்றும் நீர்வழிப் போக்குவரத்து ஆணையம், மின்விசை, எழுது பொருள்கள் மற்றும் அச்சுத் தொழில் முதலியவை பொதுப் பணிகள், சுரங்கங்கள், மின்விசைத் துறையின் பொறுப்பிலிருக்கும்.

ஐ.எல்.ஓ., தொழிலாளர்களின் நலம், தொழில் உறவுகள், தொழிலாளர் பாதுகாப்பு நடவடிக்கைகள், தொழிலாளர் சட்டங்களை இயற்றுதல், அவற்றைச் செயல்படுத்துதல், முன்னாள் படை வீரர்கள் மற்றும் பெண்களுக்குப் புனர்வாழ்வளித்தல், தொழில் நுட்ப மற்றும் தொழில் பயிற்சித் திட்டங்கள், தொழிலாளர் சட்டங்கள், புள்ளிவிவரங்கள், ஆராய்ச்சி மற்றும் விசாரணை முதலியவற்றை தொழிலாளர் நலத்துறை தொடர்ந்து கவனித்துவரும்.

மேற்கண்ட இரு துறைகளுமே தொழிலாளர் நலத்துறை உறுப்பினரான மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் பொறுப்பில் இருக்கும். எனினும் நிலக்கரி உற்பத்தி, தொழில்கள் மற்றும் வழங்கீட்டுத் துறை உறுப்பினர் பொறுப்பில் தற்காலிகமாக இருந்து வரும்.

பொதுப்பணிகள், சுரங்கங்கள், மின்விசைத் துறையின் செயலாளராக மாண்புமிகு திரு. எச்.சி. பிரியோரும், தொழிலாளர் நலத் துறை செயலாளராக திரு. எஸ். லாலும் பணியாற்றுவர்.

## [1]தாமோதர் திட்டம்

மத்திய அரசாங்கம், வங்காள மற்றும் பீகார் மாகாண அரசாங்கங்கள் ஆகியவற்றின் பிரதிநிதிகள் பங்கு கொண்ட ஒரு மாநாடு புது டில்லியில் ஏப்ரல் 23, 24 தேதிகளில் இந்திய அரசாங்கத்தின் தொழிலாளர் நலத்துறை உறுப்பினர் மாண்புமிகு டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் தலைமையில் நடைபெற்றது. ரூ. 55 கோடி செலவு பிடிக்கக்கூடிய தாமோதர் நதித் திட்டத்தின் முதல் அணையை (திலயா அணை) உடனடியாகக் கட்டத் துவங்கும் சாத்தியக்கூறு பற்றி விரைவான ஆய்வை மேற்கொள்ள வேண்டுமென இம்மாநாட்டில் பரிந்துரைக்கப்பட்டது.

தாமோதர் நதி மற்றும் அதன் உபநதிகளது வெள்ளப் பெருக்கைக் கட்டுப்படுத்துவதையும், இந்தப் பள்ளத்தாக்கில் வசிக்கும் 40 லட்சம் மக்களுக்குப் பாசன வசதியும் மின்விசை வசதியும் செய்து தருவதையும், அத்துடன் நீர்வழிப் போக்குவரத்து வசதிகளை

செய்து தருவதையும் இந்தப் பலநோக்குத் திட்டம் நோக்கமாகக் கொண்டதாகும். இந்தத் திட்டம் எட்டு அணைகளையும் நீர்த்தேக் கங்களையும் கொண்டது; இவை கட்டி முடிக்கப்பட்டால் சுமார் 8 லட்சம் ஏக்கர் நிலத்துக்கு பாசன வசதி அளிக்கக்கூடிய ஏறத்தாழ 47 லட்சம் ஏக்கர்-அடிநீர் கிடைக்கும்; சுமார் 3.5 லட்சம் கிலோ வாட் மின்விசை உற்பத்தி செய்யப்படும்.

## மைத்தான் அணை

மத்திய தொழில்நுட்ப மின்விசை வாரியத்தின் அறிக்கைகள் பரிசீலனை செய்யப்பட்டதன் பேரிலும், டென்னஸ்ஸிப் பள்ளத்தாக்கு நிறுவனத்தைச் சேர்ந்த பொறியாளர்கள் ரோஸ் ரெய்கல், பிரெட் சி. ஷிலெம்மர் மற்றும் அவர்களுடைய சகாக்களான ராய் பகதூர் ஏ.என். கோஸ்லா, மைசூரின் பிரதம பொறியாளர் திரு. எம். நரசிம்மையா ஆகியோரின் ஆலோசனையின் பேரிலும் இந்தத் திட்டம் முழுவதை யும் கூடிய விரைவில் நடைமுறைப்படுத்துவது மிகவும் உசித மானது என்பதை மாநாடு உணர்ந்தது. தாமோதர் நதியின் உப நதி யான பரகரில் கட்டப்படும் அணை கொடர்மாவுக்கு அருகில் திலய்யாவில் அமைய வேண்டும், அதேபோன்று, மற்றொரு அணை பிரதான நதியுடன் இந்த உபநதி சங்கமிக்கும் இடத்திற்குச் சற்று மேலே மைத்தானில் அமைய வேண்டும் என்னும் யோசனை ஏற்றுக் கொள்ளப்பட்டது.

எனினும் பெரிய அணையான மைத்தானைக் கட்டும் பணியை 1947 அக்டோபர் வரை ஒத்திவைப்பது அவசியம் என்பதை யும் மாநாடு உணர்ந்தது. ஏனென்றால் 1946 அக்டோபர் வாக்கில் இந்தப் பணியைத் தொடங்க வேண்டுமென்றால் அதற்கு முன்ன தாக பீகார் மாகாண அரசாங்கமும், வங்க மாகாண அரசாங்கமும் சம்பந்தப்பட்ட பொறியாளர்களுடனும் ஒப்பந்தக்காரர்களுடனும் ஒப்பந்தங்கள் செய்துகொள்ள வேண்டும். இது சாத்தியமல்ல. எனவே, இப்பணியை 1947 அக்டோபருக்கு ஒத்திவைப்பதுதான் உசிதமான ஒரே வழி. தவிரவும், இந்த ஒத்திவைப்பின் மூலம் இன் னொரு அனுபவமும் கிட்டும்; அதாவது பரகர் பகுதியில் மற்றொரு அணையைக் கட்டுவதைவிட மைத்தான் அணையின் உயரத்தை அதிகரிக்கும் யோசனையை விரிவாக ஆராய்வதற்குப் போதிய அவ காசம் கிடைக்கும்.

திலய்யா அணைக்கட்டைப் பொறுத்த வரையில், அதைக் கட்டும் பணியைத் தொடங்குவதற்கு இடையூறுகள் அதிகமில்லை. அதனை விரைவிலேயே நிர்மாணிப்பதால் பாசனத்துக்குப் போதிய தண்ணீர் கிடைக்கும்; மறுசீரமைப்புப் பிரச்சினைகளுக்குத் தீர்வு காணுவதைச் சாத்தியமாக்கும்; அது மட்டுமன்றி, மைத்தான் அணையைக் கட்டுவதற்கும் மின் விசை கிடைப்பதற்கும் வழிவகை செய்யும். எனவே, ஏனைய திட்டங்களை நிறைவேற்றுவதற்கு முன்னதாக திலய்யா அணை கட்டும் பணியைத் தொடங்கும் சாத்தியக்கூறு பற்றி விரைவில் ஆராய வேண்டும் என்று மாநாடு பரிந்துரைத்தது.

இந்தத் திட்டத்தை தாங்கள் மட்டுமே தன்னந்தனியாக நிறைவேற்ற இயலாதென்றும் இதன் பொருட்டு ஒரு நிறுவனத்தை அமைக்கும்படியும் வங்காள மற்றும் பீகார் அரசாங்கங்களின் பிரதிநிதிகள் கூறினர். நிர்வாக விஷயங்களைக் கவனித்துக் கொள் வதற்காகவும், தாமோதர் பள்ளத்தாக்கு அமைப்புக்கு ஆறு மாதங் களுக்குள் ஒரு திட்டத்தைத் தயாரித்து அளிப்பதற்காகவும் ஒரிசா ஆளுநரின் முன்னாள் ஆலோசகரான திரு. பி.கே. கோகலேயை நியமிக்க தாங்கள் உத்தேசித்திருப்பதாக இந்திய அரசாங்கம் அறிவித்தது.

### நில ஆர்ஜிதத்துக்கு நட்டஈடு

நீர்த் தேக்கங்களைக் கட்டுவதற்குக் கையகப்படுத்திக் கொள்ளப் பட்டுள்ள நிலத்துக்கு முழு அளவிலும், நியாயமான முறையிலும் நட்டஈடு தருவது என்று முடிவு செய்யப்பட்டது. கூடிய மட்டும் நிலத்துக்கு நிலம் என்ற அடிப்படையில் இந்த நட்டஈடு அமைவது உசிதம் என்றும் கருதப்பட்டது. நிலங்களிலிருந்து அப்புறப்படுத்தப் பட்டவர்களைப் புதிய நிலங்களில் குடியமர்த்துவதற்கும், அவர் களது பழைய நிலங்களைப் போன்று புதிய நிலங்களிலும் அவர் களுக்கு வாழ்க்கைத் தொழிலை உத்தரவாதம் செய்வதற்கும் நிர்வாக அதிகாரி ஒரு விரிவான திட்டத்தைத் தயாரித்து அளிப்பதற்கும் ஏற்பாடு செய்வதெனத் தீர்மானிக்கப்பட்டது.

ஆய்வு பணிகளுக்கு ஆகும் செலவை மத்திய அரசாங்கமும் சம்பந்தப்பட்ட மாகாண அரசாங்கங்களும் பகிர்ந்து கொள்ள வேண் டும் என்றும், பொது மேற்பார்வை பொறுப்பு மத்திய தொழில் நுட்ப மின்விசை வாரியத்திடம் ஒப்படைக்கப்பட வேண்டும்

என்றும், பாசனம், நீர்வழிப் போக்குவரத்து போன்ற விஷயங்களை மத்திய நீர்வள, பாசன, போக்குவரத்து ஆணையம் கவனித்துக் கொள்ள வேண்டும் என்றும் மாநாடு முடிவு செய்தது.

## [1]ஷெட்யூல்டு வகுப்பினரும் மத்திய அரசுப் பணிகளும்

*மத்திய அரசுப் பணிகளுக்கான காலி இடங்களுக்கு நேரடியாக ஆள் எடுப்பதில் மக்கட் தொகை விகிதத்துக்கு இசைந்த முறையில் ஷெட்யூல்டு வகுப்பினருக்கான ஒதுக்கீட்டை 81/3 சதவிகிதத்திலிருந்து 121/2 சதவிகிதத்துக்கு உயர்த்துவது என இந்திய அரசாங்கம் முடிவு செய்து 1946 ஜூன் 15 ஆம் தேதிய இந்திய அரசாங்க செய்தி இதழில் அந்தத் தீர்மானத்தை வெளியிட்டது.*

*1943 ஆகஸ்டு 11 ஆம் தேதிய தீர்மானத்தில் 4 ஆம் பத்தியிலுள்ள விதிகள் (1)-ம், (2)-ம் பின்கண்டவாறு மாற்றப்பட்டன:*

*''(1) மத்திய அரசுப் பணிகளில் காலியாக உள்ள இடங்களுக்கு அகில இந்திய அடிப்படையில் நேரடியாக இந்தியர்கள் தேர்ந்தெடுக்கப்படும்போது அவற்றில் 12.5 சதவீத இடங்கள் ஷெட்யூல்டு வகுப்பினருக்கு ஒதுக்கப்பட வேண்டும்.''*

*''(2) அகில இந்திய அடிப்படையில் அல்லாமல் ஸ்தல அடிப்படையில் அல்லது வட்டார அடிப்படையில், ரயில்வே, தபால்-தந்தி, சுங்கத்துறை, வருமானவரித்துறை போன்றவற்றில் கீழ்நிலைப் பணிகளுக்கு ஆட்கள் எடுக்கும்போது, ஷெட்யூல்டு வகுப்பினருக்கு மொத்தத்தில் 12.5 சதவீத இடங்களை ஒதுக்க வேண்டும்; ஒவ்வொரு பிரதேசத்தில் அல்லது வட்டாரத்தில் உள்ள ஷெட்யூல்டு வகுப்பினரின் மக்கட் தொகையையும், சம்பந்தப்பட்ட பிரதேசம் அல்லது வட்டாரத்தில் மாகாண அரசாங்கம் ஆட்கள் எடுப்பில் கடைப்பிடிக்கும் விதிமுறைகளையும் கணக்கிலெடுத்துக் கொண்டு இதனைச் செய்ய வேண்டும்.''*



1. இந்தியத் தகவல் ஏடு, ஜூலை 15, 1946, பக்கம் 34.

*1946 ஆகஸ்டு 24 ஆம் தேதி வைசிராய் மாளிகையிலிருந்து ஓர் அறிக்கை வெளியிடப் பட்டது; கவர்னர் ஜெனரலின் நிர்வாக சபை உறுப்பினர்களது பதவி விலகலை மன்னர் பிரான் அரசு ஏற்றுக் கொண்டதாக அந்த அறிக்கையில் தெரிவிக்கப்பட்டிருந்தது. புதிய அமைச்சரவை யில் டாக்டர் பி.ஆர். அம்பேத்கர் இடம் பெற வில்லை.*

